# காதம்பரி

## மூலமும் வசனமும்

வாழவந்த பெருமாள்
பி.ஆர். கிருஷ்ணமாசாரியார் - குருசுப்பிரமணிய ஐயர்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

உ

வாழவந்தபெருமாள்

தமிழ்க்கவியாக மொழிபெயர்த்தருளிய

# காதம்பரி மூலமும்,

ஸ்ரீரெங்கத்திலிருக்கும்

வக்கீல்

ஜே. கிருஷ்ணய்யங்கார் அவர்கள்,

தமிழ்ப் பண்டிதர்

P. R. கிருஷ்ணமாசாரியாரையும்,

ஸ்ரீரெங்கம்

ஹை ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

குரு சுப்பிரமணிய ஐயரையும்

கொண்டு எழுதுவித்த

# காதம்பரி வசனமும்.






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the book | : காதம்பரி மூலமும் வசனமும் |
| Translators | : வாழவந்த பெருமாள்<br>பி.ஆர்.கிருஷ்ணமாசாரியார்<br>குரு சுப்பிரமணிய ஐயர் |
| Publisher & Copyright | : International Institute of Tamil Studies,<br>CIT Campus, Tharamani Post,<br>Chennai - 600 113. |
| Publication No. | : **266** |
| Language | : Tamil |
| Date of Publication | : August 1997 |
| Edition | : Reprint |
| Paper used | : 27.2 Tamil Nadu S.P./SS(M) |
| Size of the Book | : Royal Octova |
| Printing types used | : 10pt, 12pt, 18pt. |
| Number of pages | : i-viii + 8+ 158 + 20 + 190 : 384 |
| Number of Copies | : 1000 |
| Price | : **Rs.125/-** |
| Print Process | : Off-set Printing |
| Printer | : Udhayam Offset Printers<br>44, Singanna Street,<br>Chindadripet,<br>Chennai - 600 002 |
| Binding | : Paper Back |
| Subject | : காதம்பரி எனும் வடமொழி நூலின் தமிழாக்கம். |

# காதம்பரி

## பதிப்புரை

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

பெருங்காப்பியங்களில் காணும் கிளைக்கதைகளையும் துணைக் கதைகளையும் கருப்பொருளாகக் கொண்டு தனி ஒரு நூலாக வடமொழிக் கவிஞர்கள் மிகப் பழங்காலந் தொட்டு உருவாக்கி வந்துள்ளனர். இதனைக் "கண்டகாவியம்" என்றும் குறிப்பிடுவர். நளன் கதை, அரிச்சந்திரன் கதை, குசேலர் கதை, என்பவை எல்லாம் இவ்வாறு வெளிப்பட்டவைகளேயாகும்.

"காதம்பரி" என்னும் இந்நூலின் ஆசிரியர் பாணபட்டர் மாபாரதம், வாயுபுராணம் முதலியவற்றிலிருந்து கதைகளைத் தேர்ந்து எடுத்துக்கொண்டு எழுதிய தாகக் கூறுவார்கள்.

இவர், ஹர்ச சரித்திரம், காதம்பரி, சண்டி சதகம், முகுடதாடிதகம் என்னும் நூல்களை இயற்றினார். இறுதியில் கூறப்பட்ட இரண்டு நூல்களும் இப்போது கிடைக்கவில்லை.

முதல் இரண்டு நூல்களும் செய்யுளிடையிட்ட உரை நூல்களாக அமைந்திருக்கின்றன. முதன் முதலில் வட மொழியில் வெளிவந்த உரைநடை நூல்கள் இவையே எனலாம். ஹர்ச சரித்திரத்தின் தொடக்கத்தில் பாணர் தமது குடும்பத்தைப் பற்றி விரிவாகக் கூறுகிறார். முதலில் ஹர்சமன்னனுடைய சீற்றத்திற்கு இவர் ஆளாகியிருந்தார் எனவும் பிறகு அவனுடைய அன்புக்-குரியவராய் மாறினார் எனவும் பின்னரே இந்நூலை எழுதினார் எனவும் அறிஞர் கூறுவர். அந்த மன்னனுடைய பரம்பரை பற்றியும் குடும்ப நிகழ்ச்சிகள் பற்றியும் அரசனுடைய ஆட்சி, பெருமை, நாட்டுவளம், மக்கள் மகிழ்ச்சி முதலியன பற்றியும் இவர் விரிவாகக் கூறுகின்றார். என்றாலும் அவை வரலாற்றிற்குத் துணை புரிவனவாக இல்லை. இவர் ஹர்சர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர் என்றும் ஹர்சரைப் பற்றிய செய்திகளைப் பிறரிடம் இருந்து கேட்டறிந்து கூறுவதாக நூல் அமைந்துள்ளதால், இவர் ஹர்சனுக்குப் பின்னால் வாழ்ந்தவர் என்றும் இருவேறு கருத்துக்கள் உள்ளன. இவரது காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் நடுப்பகுதி என்பர்.

"காதம்பரி" கதை என்னும் இலக்கிய வகையைச் சேர்ந்தது. இதையொரு நீண்ட தொடர்கதை என்றும் சொல்லலாம். இக்கதையிடையே வேறு கதைகளும் சேர்ந்து தொடர்சங்கிலிபோல அமைந்துள்ளன.

"காதம்பரி" ஒரு கற்பனைக் கதை என்றாலும் புதிய வடிவிலே அமைந்துள்ளது. அன்பின் திறம், இறைவன் அருள், அன்புடையவர் இறப்பதால் நேரும் துயர், உறுதியான அன்பு தொடர்ந்து வரும் பிறவிகளிலும் காதலர்களை ஒன்று சேர்க்கும் என்பன போன்ற கருத்துக்கள் ஆங்காங்கே விளக்கப்படுகின்றன. கதை ஓட்டம், விறுவிறுப்பாகச் செல்கிறது. அக்கால இயல்புப்படி அரசியல் நீதிகளும், அறவுரைகளும் பாத்திரங்களின் வாயிலாக உரைக்கப்படுகின்றன. ஆழ்ந்த அனுபவத்தில் தோன்றிய நூல் இது என்பது தெளிவாகவே தெரிய வருகின்றது. இத்தகைய முதிர்ச்சி உறர்ச சரித்திரத்தில் காணப்படாமையால் காதம்பரியே காலத்தால் பிற்பட்டது என்று கொள்ளலாம்.

இந்த இரண்டு நூல்களுமே பாணப்பட்டரால் முற்றுவிக்கப்பெறாமல் இருந்தன வென்றும் இவற்றுள் காதம்பரியை அவருடைய மகனாராகிய பூஷ்ணபட்டர் நிறை வேற்றினார் என்றும் கூறுவர். பூஷ்ணபட்டரைப் பூஷ்ணபாணர் என்றும் குறிப்பிடுவோரும் உண்டு.

பாணப்பட்டர் தமக்கு முன் வாழ்ந்த கவிஞர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இதனால் இவருடைய ஆழ்ந்த இலக்கிய அறிவும் முன்னோர்களை மதிக்கும் போக்கும் புலனாகிறது. கவி காளிதாசரை மிகச் சிறப்பாக இவர் புகழ்கிறார். இவருடைய நடை, மிடுக்கும் அழகும் மிக்கது. அதனைப் "பாஞ்சாலி நடை" என்று குறிப்பிடுவார்கள்.

வீபர் என்னும் மேனாட்டு அறிஞர் பாணருடைய நடையைப் புதரும் செடியும் கொடியும் கொடிய மிருகங்களும் நிறைந்த அடர்ந்த காட்டிற்கு ஒப்பிடுகிறார். சிக்கலான உவமைகள், கடிமான் திரிசொற்கள், நீண்ட தொடர்கள், உரிச்சொல்லுக்கே உரிச் சொல்களை அடுக்கிச் சொல்வது, வினையெச்சங்கள் பலவற்றை அடுக்கிக் கொண்டே சென்று பிறகு முற்றுவிப்பது; இயல்பாக வழங்கப்படாத சொற்றொ-டர்களைப் பயன்படுத்துவது முதலியனவெல்லாம் நிறைந்து ஓர் அடர்ந்த, இருள் மண்டிய, பெருங் காடாக அவருடைய நடை அமைந்துள்ளது என்று அறிஞர்கள் குறிப்பிடுவர்.

பாணப்பட்டருடைய கவித்திறமையும் இலக்கியச் செறிவும் கதை நவிலும் பாங்கும் பின்னால் வந்தவர்களைப் பெரிதும் கவர்ந்துள்ளன. எடுத்துக்காட்டாக கி.பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தனபாலர் என்னும் கவிஞன் "திலகமஞ்சரி" என்னும் நூலை எழுதியுள்ளார். இது காதம்பரியின் அப்பட்டமான நகலாகும். பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த நரசிம்மன் என்ற கவிஞன் பாணப்பட்டரின் காதம்பரியை, எட்டு அங்கங்கள் கொண்ட நாடகமாக்கி அதனைக் "காதம்பரி கலியாணம்" எனப் பெயரிட்டு வெளியிட்டிருக்கிறார். மேலும் பிற்காலத்தில் கதாசரித்திரசாகரம் எழுதிய ஆசிரியர்களிடம் பாணர் கதை கூறும் மரபு செல்வாக்குப் பெற்றுள்ளது.

பாணப்பட்டரின் காதம்பரியை ஏறக்குறைய அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்துவந்த "பெருமாள்" என்பார் தமிழில் செய்யுள் வடிவில் மொழி பெயர்த்தார்.

எட்டுச் சுவடியில் அமைந்த இம்மொழிபெயர்ப்பை திரு. ஜே. கிருஷ்ண அய்யங்கார் என்பவர் பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார், குரு சுப்பிரமணிய அய்யர், ஆகியோரின் துணையுடன் 1912-இல் பதிப்பித்தார்.

இத்தகையதொரு சிறந்த இலக்கியத்தின் தமிழ் மொழிபெயர்ப்பை மீண்டும் மறுபதிப்புச் செய்வதில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பெருமைப்படுகிறது.

கிடைத்தற்கரிய இந்நூலைத் தந்தவர் மொழிபெயர்ப்புத்துறையின் முன்னோடியாக விளங்குகின்ற பெருந்தகை தஞ்சை டி.என். இராமச்சந்திரன் ஆவார். அவருக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவனத்தின் செயல்களுக்கு ஆக்கமும், ஊக்கமும் நல்கிவரும் நிறுவனத்தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி-பண்பாடு மற்றும் இந்து அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு.தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், இந்நிறுவன வளர்ச்சியில் பெரிதும் துணைநிற்கும் தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறைச் செயலாளர் திரு.வை. பழனிச்சாமி, இ.ஆ.ப. அவர்களுக்கும், சிறந்த மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியிடும் திட்டத்தில் இந்நூலினைத் தெரிவு செய்து நிதிநல்கிய தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

சிறந்த மொழிபெயர்ப்பு நூல்களுக்கு நிதியுதவி என்ற திட்டத்தின் கீழ் காதம்பரி எனும் வடமொழி நூலின் தமிழாக்கத்தின் மறுபதிப்பிற்கு நிதியுதவி செய்த **தமிழ் வளர்ச்சி இயக்ககத்துக்கும் தமிழ்நாடு அரசுக்கும்**

***நன்றிகள் பலப்பல***

# முகவுரை.

இக்காதம்பரி யென்னுங்கதை ஆதியில் வெகுகாலத்துக்கு முன் பாணன் என்னுஞ் சிறந்த கவியால் வடமொழியில் எழுதப்பட்டுள்ள ஒரு வசனகாவியம். இதன் பாஷையின் கௌரவமும் கதையின் பெருமையும் அம் முதனூலை ஒரு முறை யேனும் படித்தோர் நன்கு அறிவர் என்பதற் கையமேயில்லை. வடமொழி வல்லோர் மட்டுமே இதைப் படித்து ஆனந் தித்தலைக்கண்ட ஆசிரியர் வாழவந்த பெருமாள் என்பவர் தமிழ்ப் பயிற்சி யுடையோரும் இக்கதையி னின்பத்தை யனுபவிக்கவேண்டுமென்னுங் கரு ணையால் ஐந்நூறு வருடங்களுக்குமுன் தமிழில் விருத்தச்செய்யுள்களால் வடமொழிக் காதம்பரிக்கிணங்க மொழிபெயர்த் துதவினரெனத் தெரி கிறது. மேலும் இந்நூலில் ஆசிரியர்

"சொன்ன வாசகமேசொலுஞ் சுகங்கள்சா ரிகைக
ளென்ன வாணனி தியம்புமா றியம்புத லுற்றேன்"

என்று சொல்லி நூல் செய்யப்புகுந்தமையின், இது கதையின் பாகமுங் கருத்தின் நோக்கும் வடநூலுக்கு வித்தியாசப்பட்டிருக்குமென் றெண்ண இடமில்லை. இத்தனை காலத்துக்கு முன் இந்நூல் எழுதப் பட்டுள்ளதே யாயினும் இதுவரையில் வெளியானதாகத் தெரியவில்லை. ஆதலால் எமக்குக் கிடைத்த அருமையான ஏட்டுப் பிரதியைப் படித்துப் பார்க்க நேர்ந்து அதன் இன்பம் அதிகமாக இருந்ததுபற்றி யிதைக் காணின் தமிழறிவோர் மிக ஆனந்திப்பரென நினைத்து அதனையச்சிட்டு வெளியிடத் துணிந்தேன்.

அன்றியும் இதிலுள்ள அரிய பதங்களுக்கு ஒரு சிறிய பதவுரையும் அபிதான விளக்கமும் சேர்ப்பித்திருக்கிறேன். இக்கதையைக் கவியாகவே படித்தறியக்கூடாதவரும் இவ்வின்பம் இழக்காவண்ணம் இக்கவிகளை யநுசரித்து எளிய நடையில் ஒரு வசனமும் எழுதுவித்து அச்சிடுவித் தேன்.

இது முதற்பதிப்பாகையாலும் அநேக இடையூறுகளால் ஆனகால தாமதத்தைத் தவிர்க்கவெண்ணித் துரிதப்பட்டமையாலும் இதில் நேர்ந்தி ருக்கும் சொற்பிழை பொருட்பிழைகளை அறிஞர்கள் பொறுப்பரென்று நம்புகிறேன்.

1912-ஹு ஏப்பிரல்மீ ஜே. கி.



ஸ்ரீ:

# காதம்பரி.

## பாயிரம்.

### கடவுள்வணக்கம்.

#### திருமால்.

பொன்கொண்ட நேமிப் புயல்பூமகள் புல்லி வாழு
மின்கொண்ட மார்ப னெழுபார்சது வேத னோடு
முன்கண்ட நாபி முதன்மூவகை மூர்த்தி யான
வென்கண்ட கோமா னிருபாத மிறைஞ்ச லுற்றேன். (க)

#### சிவபெருமான்.

சொல்லும் பொருளுங் கனியுஞ் சுவையுஞ் சுடரு
மெல்லுஞ் சசியு நிசியு மியலு மிசையு
மொல்லு முடலு முயிரும்மென நாளு மொன்றிச்
செல்லும் பரசத்தி சிவன்றனைச் சிந்தை செய்வாம். (உ)

#### கலைமகள்.

முன்னான் முகனுவி லிருந்து மொழிந்த வேதந்
தன்னா லுலகந் தழைப்பித்தரு டைய றய்ய
நன்னாம மெந்நாளு நவின்று நவின்று வாழு
மென்னா வுளதாக வெனக்கரி தாய துண்டோ. (௩)

#### விநாயகர்.

செங்கோல மேனிச் சிவனார்திரு மைந்த னெங்கள்
பங்கோன் முராரி மருகன்கடம் பற்கு முன்னோன்
வெங்கோப வேழ முகவன்வினை வேர றுக்கு
மெங்கோனடி சேர்பவ ரிந்திர னென்ன வாழ்வோர். (ச)

#### சுப்பிரமணியர்.

மஞ்சுண்ட கோல மயிலுண்டயில் வேலு முண்டு
துஞ்சுண் டினிநான் மறலிக்குயிர் தோற்ப துண்டோ
நஞ்சுண்ட நாதர் மகனார்திரு நாம முண்டு
நெஞ்சுண்டு பாட நினைவுண்டதி நேய முண்டே. (ரு)

## நூல்செய்வித்தோன்.

மன்னுங் குறுமா முனிவண்டமி ழாய்ந்து வாழுந்
தென்னன் குலமுந் திருவேடெதிர் சென்ற வையை
யென்னு நதியு மியற்பாலெழிற் சங்க மூன்றும்
பன்னும் புகழும் பயிலுந்திருப் பாண்டி நாடன். (௬)

## வேறு.

மந்தரா சலமேல் வண்மை வைத்தரு ளமரர் கோமான்
சுந்தரா புரிவாழ் தேவன் றெடுத்தன பால னீதி
தந்தவா னவர்க டந்தோன் றமரைப் பாவை வீர
விந்தைசேர் கனகத் தோளான் வேந்தருக் குயிரே யன்னான். (எ)

மலிபுகழ் நிறுத்திக் கங்குல் வந்தெழு மதியே போலக்
கலியுக மதனிற் றோன்றுங் கடியதோ ரிருளே யோட்டிப்
பொலிவுடன் விளங்கு முன்னே யுகமெனப் புவியில் வேறோர்
நலிவற வினிது காத்து நாவலர்க் குறுதி யானோன். (அ)

காவலா யுலகங் காத்த கருணைய னமரர் கோமா
னாவலார் தீபந் தன்னி னற்கதை யீதா மென்று
பாவலார் பரவு காதம் பரிதனைத் தமிழாக் கென்னு
மேவலா லிசைந்து சற்று மிதற்கிடை யூறி லாமல். (௯)

## நூல்செய்தோர் பெயர் முதலியன.

அருங்கலி யுகத்து நாலா யிரத்தைஞ்ஞூற் றுறி ரண்டு
திருந்திய வருடந் தன்னிற் சிறந்தகா விரியார் கோமான்
றருந்தரு வனையா னுபத் தம்பசூத் திரத்து நல்லோர்
விரும்பிய பாரத் துவாச கோத்திரம் விளங்க வந்தோன். (௧௦)

## வேறு.

அருளாள னளித்தரு ளாதி வராக னீதிப்
பொருளா கரன்பின் னவன்பொன்னி நாட னென்றின்
மருளா மறையாழ் பொருளோர்ந்திவண் வாழ வந்தோன்
றெருளா கரனிக் கதைசெந்தமி ழாகச் செய்தான். (௧௧)

## அவையடக்கம்.—வேறு.

வாண னுமுயர் மறையவன் சொற்கரை யெல்லை
காண லாய்முடி வற்றகா தம்பரிக் கடலைப்
பேண லாமெனும் வாசகம் பித்தருஞ் சொல்லார்
நாணி லாதிது நான்முயல் கின்றது நகையே. (௧௨)

சொன்ன வாசக மேசொலுஞ் சுகங்கள்சா ரிகைக
ளென்ன வாணனி தியம்புமா றியம்புத லற்றே
னன்ன வாய்த்தெளி யாதன வாயவென் புன்சொ
றன்னை நாவல ரானவர் தாமிக மூரே. (கங)

வே.று.

பாற்கடற் சென்ற பூசை பாலின்மே லாசை வைத்து
மேற்கொள வரினு மெல்லா வெள்ளமுங் கொள்ள வற்றோ
பாற்கட லனைய காதம் பரிக்கடற் பரப்பி லாசை
மேற்கொளு மென்ற னெஞ்சும் வேண்டுவ கொள்ளு மன்றே. (கச)



வாழவந்த பெருமாள்
மொழிபெயர்த்த தமிழ்க்
காதம்பரியின்,

# அபிதானவிளக்கம்.

---

**சூத்திரகன்.**—இவன் மாளவ (Malwa) தேசத் தரசன். இவன் முன்னிலையில் வைசம்பாயனனென்கிற கிளி கொண்டுவந்து வைக்கப்பட்டது. இவனேதான் சந்திரனும் சந்திராபீடனுமாக இருந்தது.

**விதிசை.**—சூத்திரக மஹாராஜனுக்கு மாளவதேசத்துள்ள ராஜதானி.

**வைசம்பாயனன்.**—சூத்திரகன்முன் கொணர்ந்து வைக்கப்பட்ட சகல கலையுமறிந்த கிளி.

**குமாரபாலிதன்.**—சூத்திரகனுடைய மந்திரி.

**விந்தாடவி.**—ஆரிய பூமியின் மத்தியில் ஒரு வனம்.

**தண்டகாரணியம்.**—விந்தாடவியின் ஓர் பாகம்.

**பஞ்சவடி.**—தண்டகாரணியத்தில் ஒரு ஆச்சிரமம்.

**லோபாமுத்திரை.**—பொதியமலையிலுள்ள அகஸ்திய மஹரிஷியினுடைய பத்நி.

**பம்பை.**—பம்பாஸரஸு என்கிற தடாகம்.

**மாதங்ககன்.**—மாதங்கன் என்பது வேடனுக்கு ஸம்ஸ்கிருதப்பேர். மாதங்ககன் வனத்தில் வந்த வேடத்தலைவன்.

**ஜாபாலி.**—கிளியின் பூர்வஜந்ம வரலாற்றை தன் சீடர்கள் கேழ்க்க, அவர்களுக்குச் சொன்ன ஒரு ரிஷி.

**ஹாரிதன்.**—ஜாபாலி மஹரிஷியின் புத்திரன். கிளியைக்கண்டு பரிதபித்து நீருண்பித்து பிழைப்பித்தவன்.

**ஜாலபாதன்.**—ஜாபாலி மஹரிஷிக்கு மான்தோலால் விசிறிய சீடன்.

**அவந்தி.**—சிருப்பிரை நதியுள்ள ஒரு தேசம்.

**மாகாலன்.**—மஹாகாலன், பரமேசுவரன்.

**உச்சினி.**—அவந்தி ராஜ்யத்தின் தலைமை நகர்.

**தாராபீடன்.**—உச்சினி ராஜ்யத்துக்கு அரசன்.

**சுகநாதன்.**—தாராபீடனுக்கு மந்திரி. முதல் நூலில் சுக நாஸன் (கிளியின் மூக்குள்ளவன்) என்று பேர் எழுதியிருக்கிறது.

**மனோரமை.**—சுகநாதனுடைய பாரியை.

**விலாஸவதி.**—தாராபீடனுடைய பத்நி.

**மகரிகை.**—விலாசவதியின் அடைப்பைக்காரி.

**சந்திராபீடன்.**—தாராபீடனுடைய குமாரன்; சந்திரன் இவனாக அவதரித்து பின்பு சூத்திரகனானன்.

குலவர்த்தனை.—விலாஸவதிக்கு ஒரு சேடி. அவள் கர்ப்பவதியானுள் என்கிற சங்கதியை அரசனுக்கு வந்து சொன்னவள்.

வைசம்பாயனன்.—மந்திரி சுகநாதன் குமாரன். சந்திராபீடனுக்குத் தோழன். ஆதியில் புண்டரீக முனியாயிருந்து பின்பு கிளியானுன்.

வலாககன்.—இந்திராயுதம் என்னுங் குதிரையை முதலில் சந்திராபீடனுக்கு வித்தியா சாலைக்குக் கொண்டுவந்தவன்; குதிரைத்தலைவன்.

இந்த்ராயுதம்.—பாரசீக அரசன் கொடுத்த குதிரை. இது சமுத்திரத்திலிருந்து எழுந்து வந்தது. இது முன்பிறப்பில் முனி கபிஞ்சலன்.

கயிலாயன்.—தாராபீடனுடைய அந்தப்புரத்தில் ஒரு ஸேவகன்.

பத்ரலேகை.—குலூத ராஜன் மகள். கயிலாயன் கையில் சிறையாக அகப்பட்டவள்.

கந்தமாதனம்.—தாராபீட மஹாராஜனுக்கு பட்டத்து யானை.

ஹேமஜடர்.—ஒரு ஜாதி வேடர்.

அச்சோதம்.—கைலாஸ பர்வதத்துக்கு மேற்கிலுள்ள தெளிந்த நீருள்ள பெரிய தடாகம்.

தக்கன்.—தக்ஷப்பிரஜாபதி என்கிற ஒரு பிரமன்.

சித்ரஸேனன்.—முனியினிடத்திருந்து உண்டானவன். கந்தருவன்.

சித்ரரதன்.—சித்திரஸேனனுக்கு கடைசி தம்பி. இவன் கிம்புருடவருடத்துக்குத் தலைவன். இவனுக்கு ஹேமகூடம் இராஜதானி. இவனுக்குப் பத்தினி மதிரை. இவர்களுக்குப் பிறந்தது காதம்பரி. வள் ?

சைத்ரரதம்.—சித்ரரதனுல் ஏற்படுத்தப்பட்ட பூஞ்சோலை.

தும்புரு.—ஒரு ரிஷி. நாரதருடன் சேர்ந்தவர்.

அஞ்சன்.—ஹம்ஸன். அரிட்டை என்பவளுக்கு மூத்த குமாரன்; இவனும் கந்தருவன்; இவனுக்கு பாரியாள் மதிக்கதிரில் அமைந்த மரபில் பிறந்த கௌரி என்பவள்; இவர்களுக்குப் பெண் மகாச்சுவேதை.

மஹாசுவேதை.—அஞ்சன் என்றதைப் பார்க்க

சுவேதகேது.—இவர் தேவலோகத்தில் ஒரு இருஷி. இவரைக்கண்டு கமலாஸனியான இலக்ஷ்மி மோஹித்து புண்டரிகன் பிறந்தான்.

புண்டரிகன்.—சுவேதகேது என்றதைப் பார்க்க.

கபிஞ்சலன்.—புண்டரிகனுக்கு திருப்பளித்தாமம் எடுத்துச்சென்ற ரிஷி குமாரன். சுவேதகேதுவுக்கு சிஷியன். பிறகு இந்திராயுதமென்னும் குதிரையாய்ப் பிறந்து வந்தவன்.

மதிரை.—சித்திரதன் என்பதைப் பார்க்க.

காதம்பரி.—சித்திரதன் என்பதைப் பார்க்க.

தரளிகை.—மகாசுவேதைக்கு வெற்றிலை யிடுபவளாயிருந்து பிறகு அவளுடன் வனத்திலிருந்தவள்.

கிரோதனன்.—க்ஷீரோதனன். சித்திரதனுடைய ஸேவகன். சித்ரரதனுல் காதம்பரிவிஷயமாய் முதலில் மகாச்சுவேதையிடம் அனுப்பப்பட்டவன்.

ஹேமகூடம்.—சித்ரரதன் என்பதைப் பார்க்க.

**பிரதிஹாரிகன்.**—மஹாச் சுவேதைக்கும் சந்திராபீடனுக்கும் வழிகாட்டிக்கொண்டு முன்னே சென்றவன்.

**மதலேகை.**—காதம்பரியிடம் ஒரு வேலைக்காரி.

**காளிந்தி.**—காதம்பரியின் அரமனையிலுள்ள பரிஹாஸன் என்கிற கிளிக்குப் பெண்டாக விவாஹம் செய்து கொடுக்கப்பட்ட ஒரு நாகணவாய்ப்புள்.

**பரிஹாஸன்.**—காளிந்தி என்பதைப் பார்க்க.

**தமாலிகை.**—காதம்பரியின் அடைப்பைக்காரி.

**சேடன்.**—ஆதியில் சமுத்திர மதனமான காலத்தில் தேவர் கைப்படாது லிந்துவில் கிடந்து பின்பு சமுத்திராஜன் வருணனுக்கும் அவன் இந்திரனுக்கும் இப்படியே பலர் கைவழியே காதம்பரிகைக்கு வந்த முத்துமாலை.

**மத்தகமயூரம்.**—காதம்பரிக்காக நிர்மாணமான ஒரு செய்குன்று.

**மேகநாதன்.**—வலாககனுடைய மைந்தன். பத்ரலேகை கேயூரகனுடன் காதம்பரியிடமிருந்து திரும்பிவந்தால் கேயூரகனைத் திரும்பிப்போக விடுத்து பத்ரலேகையை அழைத்து வரும்படி சந்திராபீடனால் வழியில் நிறுத்திவைக்கப்பட்டவன்.

—மற்றுமுள்ளன விசேஷமான கதைக்குச் சம்பந்தமுள்ளவை யல்லவாதலின் இங்கு விவரிக்கப்படவில்லை.



ஸ்ரீ :

# காதம்பரி.

---

பொன்மேவுங் கனைகழற்காற் பொலன்கவிகைப் பொற்களிற்றுப் புண்டரீக
மின்மேவும் பெரும்பணைத்தோ ணரபதிகள் வெற்பெனுமவ் விசாலகோடித்
தென்மேவும் பரிமளத்தார் மகரந்தத் தெண்ணீராற் சிறந்து செய்ய
கன்மேவு மௌலியினா லனவரதஞ் சிவப்பூருங் கமலத் தாளான். (௧)

கைச்சங்கு சக்கரத்தா லரியாகிப் பிரியாத காமன் வெம்போ
ரச்சங்கை விடுதலினா லரனாகி யகிலதலம் படைத்த லாலே
நிச்சங்க னாயிருந்த நான்முகனாய்ச் சத்தியுட னிகழ்த லாலே
மெய்ச்சங்க வறுமுகனா யுலகனைத்துந் தாங்குதலான் மேரு வானோன். (௨)

ஆர்க்குமக ராலயமா மணிமேக லாபரண மணிந்த வல்குற்
பார்க்குரிய நாயகனாய்த் தோன்றினோ னரசர்பெரும் பரிவி னாலும்
போர்க்கரிய புரவலரை வணக்குவிக்கும் புகழோ னென்றும்
பேர்க்கரிய பெருங்குணங்க ளனைத்தினுக்கும் பிறந்தகமாய்ச் சிறந்த மேலோன். (௩)

நேயமனத் தாற்றரும தேவதையாய் நிதிகளினாற் குபேர னாகித்
தூயதொழிற் பாவகனாய்ச் சோதிதனி லாதவனாய்த் தொடருங் கோபத்
தாயதிறற் கொடுஞ்சமனாய்த் தண்ணளியிற் றண்மதியா யழகால் வேளாய்ப்
பாயமதிப் பீதகனாய்ப் பார்பரவும் பெருவலியாற் பவன னாகி. (௪)

கண்ணிணையிற் பூமகளுந் தோளிணையிற் பார்மகளுங் கலைதேர் நாவிற்
பண்ணிணைசொற் பாமகளும் பரிந்துபரிந் தனவரதம் பயின்று வாழ
விண்ணுலகிற் றேவரெலா மோருருவாந் திருநெடுமால் விசுவ ரூப
மண்ணுலகிற்பெருந்தவத்தால்வந்ததெனவந்துதித்தமன்னர்கோமான். (௫)

துங்கநெடுங் களியானைச் சுடர்நெடுந்தேர்ச் சூத்திரக னேத்து நீதித்
தங்கண்மதிக் குலவேந்த ரெல்லாரும் புரந்துதனித் தனியே யாண்ட
நங்கைகுலக் கங்கையையு நாணுவிக்கு நருமதைநன் னதிநீர் சூழ்ந்த
செங்கமலப் பைங்குவளைக் கரியவிழித் திருவளர்மா ளவதே சத்தில். (௬)

கடையான கலியுகமுங் கலியுகத்தின் கொடுமைகளுங் காணா வண்ண
மடைவான முன்னையுகத் தருணெறியு நீதியுட னறமும் யாவும்
படையாகக்கொண்டுதிரண்டோரிடத்தேயிருந்ததெனப்பார்மேலொன் றுக்
கிடையாதாய்விதிசையெனும்பெயருடைத்தாகியதுளதோரிராசதானி. (௭)

அந்நகரத் தாடககோ புரமாட மாளிகைக ளமைந்த வீதிப்
பொன்னகரத் திந்திரன்போ லினிதிருந்தெண் டிசைமுழுதும் பொதுமை நீக்கித்
தன்னகரிற் றன்கோயிற் செய்தியெனச் செய்துதனித் தனியே யாய்ந்து
நன்னயமுற் றெவ்வுயிருந் தன்னுயிர்போ லவன்புரந்த ஞாலந்தன்னில்.(அ)

கட்டுண்டு மடியுண்டுந் தளையுண்டும் படுவனசொற் கவியின் பாவே
மட்டுண்டு கரும்புறமாய் மயங்குவன மதுகரமே வழங்கா தாகி
முட்டுண்டு நேராக முடங்குவன பொய்ம்மொழியே முகங்கீ ழாக
வெட்டுண்டு வீழ்வதெலாங் குலைகொண்ட கதலிகளே வேறொன் றில்லை.(கூ)

பறந்துநடுங் குவனகொடி யாடைகளே பங்கமுறும் பழனந் தானே
குறைந்துவருங்கொடியனையார் துடியிடையேகோபமுறுங்கொண்டற்காரே
மறந்துவிடும் பெரியோர்கள் வெகுளிகளே மாசுபடுந் தீயே தாள்பூண்
டறைந்துகிடந் தலறுவன திருவனையார் பரிபுரமே யல்லா தில்லை. (க0)

வரம்புகடந் தோடாது மகளிர்மனக் கருங்கடலும் வருண மென்னுங்
குரம்புகடந் தோடாது மைந்தர்குணப் பெருங்கடலுங் கொற்ற வில்வேள்
பொரும்பொழுது மவர்தகுதி யறிந்தொழியப் போர்செய்யான் போர்செய் தாலு
மிரும்பிலுரந் தருஞான கவசமவன் பொரும்போருக் கிடங்கொ டாது. ()

இப்படியே யெப்படியுந் தனிபுரந்தோ னிளமைநல மெல்லாம் பெற்று
மைப்படியே ரயில்விழியால் வசிகரிக்கு மன்புடைய மடவார்ப் பெற்று
மெய்ப்படியே சந்தான விருப்பினரா யமைச்சரெலாம் வேண்டப் பெற்று
மப்படியே யின்பமெலாந் தருபோகந் தமிலொன்றி லாசை யின்றி. (கஉ)

பூதலமண் டலமுழுதும் பொதுவறவே வெல்லுதலாற் புந்திச் சிந்தை
யேதுமில னுணர்விற் பீதகனை யிகழ்பவரா யெல்லா நூலும்
வாதனைசெய் பவராகி மன்னவர்க்குப் பரம்பரையா மரபி னோரா
யாதிமனு நெறியடைவே யறிவதெலா மறிந்தமைந்த வமைச்ச ரோடும்.

பருவமெழி லலங்காரம் பலகலைநூற் பெருங்கல்வி பண்பு தேர்ச்சி
யுருவமொளி யிவைதன்னை யொப்பவராய் நிழல்போல வொருகா லத்தும்
பிரியவறி யாதவரா யிங்கிதங்கள் பயில்களெலாம் பேதிப் போராய்க்
குருமணிமா முடிவேந்தர் குமாரராந் தோழன்மார் குழாத்தி னோடும். (கச)

இயலாய்ந்து மிசையாய்ந்து நாடககா வியமுதலா வெல்லா நன்னூற்
செயலாய்ந்து நடங்கண்டுந் திண்களிறு பரியூர்ந்துஞ் சிரமஞ் செய்தும்
வியலார்ந்த வாரணப்போர் வேழப்போர் முதலகண்டும் வேட்டைசெய்தும்
புயலார்ந்த சடைமுடியா னடிதொழுது மிரவுபகற் பொழுது போக்கி.(கரு)

இருக்கின்ற வந்நாளி லொருநாளெண் டிசைபரந்த விருளை யோட்டி
யருக்கனெழுந் தஞ்சாறு நாழிகையி லழகெறித்த ரத்ன சாலந்
திருத்தகுமொன் பதுகோளுந் தேவர்களுந் திரண்டதெனத் தேசு வீசப்
பொருத்தமிகுஞ் சுரரவைபோன் மண்டபத்தி லிந்திரனைப் போலே யெய்தி.

மின்னனையா ரிருமருங்கும் வெண்கவரி பணிமாற வேதத் தோர்க
ளன்னகுல பதியெனநின் றருமறையா சிகள்கூற வடியி றைஞ்சி
யென்னதிவை யென்னதிவை யென்றென்று திறைகாட்டி யெங்கு மெங்கு
மன்னவரு மாகதரு மங்கலப்பா டகர்குழுவு மகிழ்ந்து வாழ்த்த. (கள)

சந்திரகாந் தச்சிலையாற் றயங்குமணி யாசனமேற் சந்த்ர விம்பத்
திந்திரைகோன் பன்னுக பத்தியினி லெழுந்தருளி யிருந்தாற் போலச்
சுந்தரமுந் தண்ணளியுஞ் சோதியுநீ தியுமுழுதுந் துலங்கித் தோன்ற
விந்தைதிரு மங்கைபுகழ் மங்கைகலை மங்கையுடன் வீற்றி ருந்தான். (கஅ)

வேறு.

அப்பொழு திடத்துற வணைத்தசுடர் வாளினொடு மங்கை மலர்மேன்
மெய்ப்படு பிரம்பினொடும் வேகவிட நாகமொடு மேவி வளருஞ்
செப்பரிய சந்தன மலர்ப்புதிய கொம்புநிகர் செவ்வி யுடனே
ரொப்பரிய வாயிலவள் வந்தடி வணங்கிவிட நின்று தொழுதே. (கக)

விண்புகு த்ரிசங்குவை மகத்தவன் முனிந்திடும் வெகுட்சி யின்வெரீஇத்
திண்புய மிருந்ததிரு வண்புவி குதித்துவரு செப்தி யெனவோ
ரொண்பறை மடைந்தையொரு பஞ்சர சுகத்தொடு கடைத்த லையடைந்
தெண்பொருள் களிற்புதிய ரத்னமிறை வர்க்கிது சிறப்பு டையதே. (உ0)

என்றுபணி தற்கற விரைந்துவிழை கின்றன ளெனக்கு ரிசிலுஞ்
சென்றுகொணர் கென்னவவள் சென்றவளை நீகடிது சென்மி னெனவோர்
துன்றிய நரைக்கிழவன் முன்புசெல வேபிறகு சோதி விடுசெம்
பொன்றழுவு பஞ்சர சுகத்தினொடு சிறுவனொரு வண்பு குதவே. (உக)

முன்னமமு தம்பகிர்வ தாகவரி கொண்டதொரு மோக வுருவ
மென்னவு நடந்துவரு நீலமணி கொண்டுபுனை பாவை யெனவுஞ்
செந்நிற மணித்துகி லுடுத்துமிசை மொய்ச்சிவரு சேய வொளியான்
மன்னுகதிர் ரத்னவெயில் சிந்தவொளிர் நீலமலர் வாவி யெனவும். (உஉ)

வெண்மைதரு தோடொரு குழைக்கணித லாலமுத விம்ப முடனே
திண்மைதரு கூரிருள் செறிந்துவளர் கங்குன்மயில் செல்வ தெனவுங்
கண்வளர்வ தென்னவொளிர் சிந்தூர நுதற்கணில குங்க வினினுற்
றண்மைதரு வேடுருவு கொண்டுவரு முக்கணிறை தைய லெனவும். (உங)

முத்துவட மிட்டதொழி லாலினிய பாங்கியெனு மோக மதனு
லெத்தியிறு கப்புதிய கங்கைதழு வும்பழைய யமுனை யெனவும்
பத்திபடு பஞ்சியொளி விஞ்சியெழு பங்கய பதத்த ழகினுற்
கத்துமயி டன்சிர மறுத்துற மிதித்துவரு கன்னி யெனவும். (உச)

எப்பொழுது மாயன்மணி மார்புறைத லாலவ னிருண்ட வழகா
லப்பரிசு மேனிகரி தாயதிரு மங்கையிவ ளாகு மெனவுந்
தப்பரிய காமதக னப்புகையு னின்றரதி தானெ னவுநற்
செப்பமிகு பார்வையள வேபயன் விளைத்தலிலொர் சித்ர மெனவும். (உரு)

பதங்களி லதிப்ரபை யெழுந்துமு னடிக்கடி பரந்து வரலா
லிதங்கெட மணித்தரை யறைந்தடி யுறைத்திடு மெனும்ப ரிவினற்
றிதம்பட மலர்ப்பொழில் விளங்குசெய லைப்புதிய செந்த ளிரெலாம்
விதம்பட முறித்திட நடந்தன விருப்பொடு நடந்து வருவாள். (உசு)

தன்னழகு கண்டற வியந்தரசர் கோனுமிவ டண்ணி யகுல
மென்னுமது கொண்டிரு கரங்கொடு தொடாமலித யத்தி னினைவா
லன்னதுவ சன்செயொரு கோலமிது வென்றதி சயப் படுமவன்
பொன்னடி பணிந்துவிட நிற்கவய துள்ளபடி புக்க முதியோன். (உஎ)

வேறு.

பொற்பஞ் சரக்கிளியைப் போற்றித்தன் கைவாங்கி
வெற்பஞ் சியதடந்தோள் வேந்தர்கோன் முன்வைத்துக்
கற்பஞ் செறிபுகழோய் காட்டிற் கிளிசொல்வ
தற்பஞ்சொல் லன்றேயெ னநீ யவமதியேல். (உஅ)

வேதமிதி யாசம் புராணம் வியாகரண
நாத மிசைகா வியநா டகமுதலா
வோதுமவற் றுண்மைப் பொருளு முரைசெய்யுஞ்
சோதிமிகு நாற்கவியுஞ் சோதிடம்யா வுஞ்சொல்லும். (உகூ)

எக்கா லமுமுணரு மென்கொல்பல சொல்வதினித்
திக்காம லெண்ணெண் கலைகளுக்குஞ் சேர்விடமாந்
தக்கார் விரும்பியவை சம்பா யனனிதன்பேர்
மிக்கா யுனக்கன்றி வேறொருவர்க் காகாதே. (௩0)

என்பதனு லெங்க ளிறைவன் றிருமகணீ
யின்புறவே காணிக்கை காட்டினு ளேழ்கடல்சூழ்
மன்பதைஞா லம்புரக்கு மன்னர்கோ வேயிதனை
யின்புறவே கொள்ளென் றவன்போய் விடநின்றான். (௩க)

நிற்கமணிப் பொற்கூட்டி னின்றும் புறப்பட்ட
சொற்கிளியு மச்சபையைச் சூழவே பார்த்ததற்பின்
பொற்கவிகை வேந்தன்முக நோக்கிப் புகழ்ந்தொருத
னற்கவிதை தன்னு னயந்தொருசா டப்புகலும். (௩உ)

வேறு.

பொறைக்கிறை யாய நின்னடி வணங்காப் புரவலர் பூவையர் கொங்கை
சிறைப்படு விழிநீர் மஞ்சன மாடிச் சிலைமதன் விகாரமுந் துறந்து
மறத்திறம் பயிலு மிதயகுண் டத்து வயங்குசோ கானல மருவி
நறைப்புகைச் சீரா காரமு நீத்து நற்றவ முயல்வன போலும். (௩௩)

ஏழ்கடன் முழுது மஞ்சன சாலை யெழுகிரி நின்பத பீடஞ்
சூழ்கிரி வலய நின்னகர்ப் புரிசை சோதிமுச் சுடருநின் றீபந்
தாழ்கழ லரசர் நின்பரி சனங்க டகுதிசேர் கோளநின் கவிகை
வாழ்கதிர்முடியாய்நின்பெரும்பெருமைவாக்கினுலுரைக்கரிதன்றே, (௩௪)

வேறு.

கிளியிது மொழியக் கேட்ட கிளர்முடி யரசர் கோனு
மளிபெரி துடைய னாகி யறவுமாச் சரிய மெய்திக்
குளிர்மதி யமைச்சர் கோமான் குமாரபா லிதனை நோக்கித்
தெளிபவர் போல வெல்லாந் தெளியுமோ கிளியு மென்றான். (௩௫)

அம்மொழி மொழியக் கேட்ட வமைச்சர்கோன் வியந்து கூறி
யிம்மொழிக் கிளியி னாலே யிராசகா ரியங்க டாழ்வாஞ்
செம்மொழிச் செங்கோல் வேந்தன் றிருவுளம் பற்றா வண்ண
மெய்ம்மொழிச் சதிரான் மீட்க வேண்டுநா மினியென் றெண்ணி. (௩௬)

முன்னம்வாக் குடைய வெல்லா முழங்கெரி சாபத் தாலே
பின்னைவாக் கிழந்த வற்பம் பேச்சுள கிள்ளை பூவை
சொன்னவாக் குடையோர் முன்னஞ் சொல்லுவித் தளவே சொல்லு
மென்னவாக் கிதற்குண் டான திவ்வள வன்றோ வென்றான். (௩௭)

இன்னன பிறவும் பேசி யிருந்தவே லையிலே சோதி
மன்னவன் வானி னுச்சி வந்தமை யறிவிப் பானோர்
பொன்னணி முரசுஞ் சங்கும் பொலிவுடன் முழக்க வேந்தன்
றன்னிக ரான வேந்தர் தமையெலாஞ் சூழ நோக்கி. (௩௮)

முடியொடு முடியு ரிஞ்சி மூண்டவோ சைகளுந் தோளிற்
றொடியொடு தொடிக ளுற்றித் தொடர்ந்தபே ரொலியுங் கோலக்
கடிமல ரலங்கற் செந்தேன் கலந்தவண் டிசையுஞ் செய்ய
வடிமுத லணிக ளெல்லா மசைந்தெழு மரவந் தானும். (௩௯)

பாவைமார் பாட லோசை பரிபுரத் தாளி னோசை
கோவைமே கலையி னோசை கோல்வளைக் குழாத்தி னோசை
சேவையா லரச ரெல்லாஞ் செயசெய வென்னு மோசை
யாவுமோ ரோசை யாக வெழுந்தன னிம்பர் கோமான். (௪௦)

வேந்தர்க ளமைச்சர்க் கெல்லாம் விடைகொடுத் தருளிக் கிள்ளை
தாந்தரு மவளை நீபோய்த் தணிந்துவா வென்று கூறிக்
கூர்ந்தபைங் கிளியை யுள்ளே கொண்டுபோ மென்று காதல்
சேர்ந்ததன் றோழன் மார்கள் சிலருடன் கோயில் புக்கான். (௪௧)

பூணெலாம் வாங்கி யோங்கிப் பொலியுமண் டலத்தின் சோலை
காணலா யந்தி நேரங் கதிரடங் கிரவி யென்னச்
சேணுலாஞ் சிரமக் கூடஞ் சென்றுபுக் கணியி லங்குந்
தூணுலாந் தோளு மார்பும் வதனமுந் துலங்க வேர்த்து. (௪௨)

வலம்புரி முழங்க மாதர் மங்கலம் பாட வந்த
நிலங்கடந் தொருபொற் றோணி நிறைந்தலை யெறிந்த தெண்ணீர்
பொலிந்தமா னதத டாகம் போன்றெழில் விளங்க வோர்பா
லிலங்குவெண் படிக பீட மிராசவே திமம்போன் மின்ன. (௪௩)

வியந்தபொற் குடங்க டோறும் வெள்ளிவான் கும்பந் தோறு
நயந்தெழிற் கிரணம் வீசு நறுமணிக் கலசந் தோறும்
பயின்றுகற் றவர்பூ ரித்த பரிமளத் தெண்ணீர் மாந்தித்
துயின்றுமொய்த் திருந்த வண்டு சூழ்கரும் பட்டு மான. (௪௪)

புறவடி தெரியா வண்ணம் பொருந்துகாற் சட்டை யிட்டுச்
சிறிதிடை தளரா வண்ணஞ் சிக்கெனச் சேலை சேர்த்து
நிறைதன மசையா வண்ண நெருக்குறக் கச்சை வீக்கி
முறைமுறை சரியா வண்ண மொய்குழ லெடுத்துக் கட்டி. (௪௫)

கைவளை கடுக்கித் தோளிற் கனவளை யிறுக்கிக் காதின்
மெய்வளை குழைமீ தேற்றி வேரிநீ ராட்டு மாறு
பைவளை யல்குன் மாதர் பரிந்தொருப் பட்டு நிற்கு
மைவளை தருணச் சோலை மஞ்சன சாலை புக்கான். (௪௬)

பொருந்திநற் புழுகு வார்த்துப் புதுவிரை நெல்லி சாத்தித்
திருந்துபொற் றோணி நீரிற் றிளைத்துமீ தேறி யன்னத்
திருந்தருள் வருண னென்ன வெழின்மணிப் பளிக்குப் பீடத்
தருந்திற லரசர் கோமா னமர்ந்தினி திருந்த காலை. (௪௭)

தெரிந்துபூ ரித்து வைத்த திவ்விய சலங்க ளாலே
பரிந்துநீ ராட்ட வாடிப் பாவைமா ரீர மாற்ற
விரிந்தபாம் புரிபோ லாடை யிரண்டுடுத் துச்சி நேரம்
பொருந்துவான் சடங்கு செய்து புராரிதா ளிணைபூ சித்தே. (௪௮)

அங்ககா ரியமு முற்றி யங்கரா கங்கள் பூசித்
தொங்கலு ளொன்று சூட்டித் தூசுகள் களைந்து சாத்தித்
தங்களோ டிணைய வேந்தர் தம்முட னருந்திப் பூசிக்
கொங்குசேர் தூப வத்தி கொண்டுதாம் பூலம் வாங்கி. (௪௯)

அங்குநின் றேகி மற்றோ ராயிழை செங்கை தாங்கத்
துங்கவெண் பட்டி னாலே சூழ்வெளி யடக்கி யாரங்
குங்குமம் பன்னீர் வெள்ளங் கொண்டுபோர் மெழுகிப் பல்பூ
வெங்கணுஞ் சிதறி நன்று யிருந்தமண் டபத்தி லெய்தி. (ருo)

வெள்ளைவே திகைமேல் வெள்ளை மேல்விரி விரித்த னேகந்
தெள்ளிய பட்டின் கொட்டை சேர்த்திய பைம்பொற் பீடத்
தொள்ளிழை யொருத்தி பாதம் வருடவங் குரிய ரான
வள்ளியோ ருடனே பேசி மகிழ்ந்தினி திருந்த காலை. (ருக)

சொன்னவா சகங்கள் கேட்கச் சொற்கிளி கொணர்மி னென்ன
மின்னனார் விரும்பி வாங்கி விடலைதன் முன்னே வைக்க
மன்னர்கோ னதனை நோக்கி மகிழ்ந்துநம் மனையில் வந்த
பின்னரா கார மாகப் பெற்றன வுண்டோ வென்றான். (ருஉ)

என்றிவன் மொழியக் கிள்ளை யிறைவகேள் கோகிலத்தின்
கன்றிய கண்கள் போலக் கருகியுட் சிவந்து தித்தித்
தன்றியுந் துவர்த்த நாவற் கனிகளு மரிமா மாவைக்
கொன்றசிந் தியமுத் தன்ன கோலமா துளையின் வித்தும். (ருரு)

மரகத மணைய கீழ்காய் நெல்லியு மற்று மெல்லா
மொருமுடி வில்லை கொண்ட வுன்பெருந் தேவி மார்தந்
திருமலர்க் கரங்க ளாலே திருத்திநின் றருத்த லாலே
யரகர நுகர்ந்த வெல்லா மமுதமா யிருந்த வென்ன. (ருச)

துதித்தவா றமையு மென்று சொல்லியீண் டதனை நீக்கி
மதித்தபே ரறிவின் மிக்கோய் வருகவென் மனத்தி னூடே
யுதித்ததோர் மிகுபே ராசை யுண்டது தீரு மாறு
விதித்துநான் கேட்டவெல்லாம் விளம்புகென் றிரந்துகொண்டு. (ருரு)

ஏதுநின் பிறப்பு வைசம் பாயன னென்னு நாமந்
தாதைதந் ததுவோ விந்தத் தலைமைசேர் கலைக ளெல்லா
மாதவர் வரமோ மேலை வாதனை தானோ வன்றி
யோதிய படியோ நீமுன் புறைந்துவா ழிடந்தா னேது. (ருசு)

வயதுமென் போது நீயிவ் வடிவிலே மறைந்து வாழு
முயர்தவ முனியோ யாரோ வொருகரும் புலையன் கைப்பட்
டியல்புட னென்பால் வந்த தென்னகா ரணந்தா னென்னப்
பயனறி கிளியு மந்தப் பார்த்திபன் றன்னை நோக்கி. (ருஎ)

பரவைசூ ழுலகுக் கெல்லாம் பரிந்துடன் புரந்த செங்கோ
லரசனே யுனக்கு நேரே யாதர முண்டே யானு
னுரைசெய்வே னுரைத்த வெல்லா முற்றுநீ யுவந்து கேளென்
றிரதவான் கதைகள் கூற வியல்பொடு தொடங்கிற் றன்றே. (ருஅ)

வேறு.

வருகழ லரசர் தொழுதெழச் சிவந்த மலரடி மன்னர்மன் னவனே
திருமகண் மருவி வளருமத் தியம தேசமா மாரிய பூமிக்
கொருதிக மணியாய் மேல்கடல் கீழ்பா லுவரிமட் டொருதொடர் பாகி
யிருநில வனிதை திருவுடை யாடை யிதுவெனும் படிபொலி வெய்தி. (௫௯)

சுரபுனை திலகம்[1] வகுள[2] மா துளைநற் சூத[3] நா கங்கவி[4] ரசோகு
திருமர மருது பாதிரி செருந்தி செண்பக நரந்தை[5] தக் கோலங்
குரவகில் பலவு குங்குமஞ் சாதி[6] கூவிளை[7] கைதை[8] கற் பூர
மரிதகி[9] கதலி தாழை[10]சம் பீர[11] மழிஞ்சிலா[12] ராசினி[13] வதரி.[14] (௬௦)

இனையன பிறவு மிடையிடைந் துலவு மானைமா மதங்களே புனலாய்
நினைவினு முயர நெடுகிமே ஞைக்கி நிறைதரு முடிக்கண மென்னத்
தனியற மலர மலரிவை யிவைவெண் டாரகா கணமென வறியா
முனிவர மகளி ருடனரம் பையர்கண் முழுதுமா டுவர்சில சூழல். (௬௧)

மாதவி தளவு மாலதி நாக வல்லிமல் லிகைகறி முதலாஞ்
சீதள லதைகள் பாதப முழுதுஞ் சென்றுசென் றிடமறப் படர்ந்து
மேதகு நிலவும் வெயிலுமா ருதமு மேவுதற் கறவரி தாகிச்
சோதியின் மிகுதி யாகிய மணியின் சூழலா லிராப்பகல் விளங்கி. (௬௨)

இயங்கினர் படுத்த பல்லவ சயன மெங்கணுங் காணலாய் மலரி
னயங்கெழு பிரச நீர்தெளித் தலரி னறுந்துக ளோர்மணல் பரப்பி
வயங்கிய மலர்கள் சிதறிவாழ் வனதே வதையிளை யாடுமண் டபமாய்
வியந்தரு கொடிமண் டபங்களி னெழுங்கால் விளங்குறுஞ் சிலசில சூழல்.

அரிபடு கரிகள் பிளிறிய முழக்கு மரிநக பந்தியி லழுந்துங்
கரிதகு தரள விலையையிச் சித்த கானவ ரடுமரிக் குரலும்
விரவிய வவர்தம்வேட் டையார்ப்பொலியுங்கேட்டறவெருவிமெய் முழுதுஞ்
செருமிய புளக மென்னமுட் படர்ந்து திகழ்தருஞ் சிலவன பூமி. (௬௪)

வானவர் முனிவர் தானவ ரியக்கர் மானிடர் சித்தர்காந் தருவ
ரானவர் பிறரு முறைந்துவாழ் தலினு லகிலலோ கமுமொரு வனமாய்த்
தானொரு தலமே யிருந்ததே நிகர்விந் தாடவி யென்பதோர் வனமுண்
டேனைய வனத்துட் டண்டகா ரணிய மென்பதோ ரிடமுமுண் டதனில்.

ராகவன் றனுந் தேவியு மிளையோ னிராப்பக லேவல்செய் தொழுகி
மோகமொன் றியவெந் துயிலையுந் துறந்து முடியவே தற்புறங் காப்ப
மாகரும் பரவ விருந்தருள் பஞ்ச வடியெனும் பெயருடைத் தாகி
வேகம்விஞ் சியகோ தாவிரிக் கரையில் விளங்குமாச் சிரமமொன் றுண்டு.

1 திலகம்-மஞ்சாடி. 2 வகுளம்-மகிழ். 3 சூதம்-தேமா. 4 கவிர்-முருக்கு. 5 நரந்தை-நாரத்தை. 6 சாதி-தேக்கு. 7 கூவிளை-வில்வம். 8 கைதை-தாழை. 9 அரிதகி-கடு. 10 தாழை-தெங்கு. 11 சம்பீரம்-எலுமிச்சை. 12 ஆர்-ஆத்தி. 13 ஆசினி-சரப்பலா. 14 வ்தரி-இலந்தை.

மற்றத னருகு நற்றமிழ் தெரியு மானுபா வன்குறு முனிவன்
முற்றுணர் தரும பத்தினி லோபா முத்திரை யுந்திரு மகனுஞ்
செற்றமின் முனிவர் மற்றுமுள் ளவருந் திருவுள மறிந்துசே விப்ப
வுற்றிறை வரிசை பெற்றவ்வாச் சிரம மொன்றுள ததனருகாக. (சுஎ)

அக்கடன் முழுது நக்கிய முனிவ னகந்தைகண் டகமிக வெள்கிச்
சிக்கென வருணன் வெகுண்டுசென் றிறைஞ்சச் செங்கம லாலய னந்த
மெய்க்குறு முனிவன் மிகுபகு மான மீளவே லைகளினும் பெருகத்
தக்கதாய் முன்னங் கைவகுத் தனைய தடம்பெருங் கடலெனத் தயங்கி. ()

முனிவர்வற் கலையின் றுவர்களாற் சிவந்து மொய்குழ லெயினமங் கையர்க
ளினியசந் தனத்தின் றுகள்களால் வெளிறி யிபமத சலங்களாற் கருகிப்
புனிதமென் கமலத் தேன்களா லெங்கும் பொன்னிற மாய்க்கரை சூழும்
பனியபைம் பொழிலாற் பச்சென விளங்கும் பலபல துறையுடைத் தாகி.

திருதிகு திகெனும் பேரலை முழக்குந் தேனுகர் தேனினங் களிக்கு
மொகுமொகுமொகெனு மரவமுங் கரிகண் முரண்கையால்வாங்கிநீர்கவரப்
புகுமுகு மொலியுஞ் சக்கர வாகப் புட்குல மோதிம முதலாங்
கககுல மிரியு மிரியலு முனிவர் கமண்டலக் களகளத் தொனியும். (எ0)

சேரவோ ரொலியாய்த் தேவர்வா ழுலகுஞ் செவிடுபட் டிடமுழங் குவதா
யாரநீள் வனதெய் வதைகளா டுதலா லதிபரி மளமுடைத் தாகிக்
காருலா வியகே தகைநறுஞ் சுண்ணங் கரைமணற் குவைகளா விளங்க
வேருலாம் பம்பையென்பதோர்வாவி யிலங்குமாங் கதற்குமே லுருகு.(எக)

இதமுடைக் கணையா விராமனெய் தருளு மெழுமரா மரங்களி னயலே
பதனமிட் டதுபோ லடியினை வந்தோர் பருப்பெரும் பாம்புதற் காப்ப
மதகரித் திரணின் றுரிஞலாற்றேய்த்த மதங்களின் வதிந்தவண்டொழுங்கு
சதவிருத் தனிதென் றதற்குர மாகத் தகட்டிரும் புடுத்தினு லொப்ப. (எஉ)

விருத்தனு கையினு னரம்பெழுந் ததுபோன் மெய்யெலாங் கொடியிடை மிடையச்
செரித்தகா லத்தி லெண்மறுப் போல முண்ணிறைந் துடலெலாஞ் செறியப்
பெருத்தவா யிரங்கை யுடலெலாம் பரப்பி ப்ரளயகா லத்திலெம் பெருமா
னிருத்தமாடியபோற்றிசையெலாம்பரந்துநெடும்பணையனேகநின் றிசைய.()

இந்திர னுடைய நந்தன வனத்தை யென்னெனும் படிவளர்ந் தேறி
யந்தர வுலகின் மங்கைய ரிழிதற் காகவு மல்லன தெய்வப்
பைந்தொடி மகளி ரெந்தவா னுலகும் பார்க்கவுஞ் செய்தமே னிலமாய்
வெந்திற லிரவி புரவிவாய் நுரைபோன் மீதெலாம் பஞ்சுகள் விரிய. (எச)

வாவிகண் முழுதுஞ் சென்றுநீர் பருகி வந்துறை புட்குலம் போல
மேவிய பரவை நீர்முகந் தெழுந்த மேகசா லங்கடங் குதலாற்
றீவிய சிகர விந்தமா வரையாய்ச் செறிந்தவிந் தாடவித் திருவை
தாவிய பணைமென் கரங்களா லணைக்குஞ் சான்மலித் தாருவொன் றுண்டு.

இத்தரு வொருவற் கேறவொண் ணாத தீடுப டாததென் றெண்ணித்
தத்தைக ளுலகத் துள்ளன வெல்லாந் தம்பெருங் கிளையொடும் புகுந்து
மொய்த்திலையுதிர்ந்த முதுமர மீள முறைமையாற்றளிர்த்தபைந்தழையின்
கொத்தெனநெருங்கிப்பணைதொறும் பயின்ற குடம்பையையடைந்திரா வடங்கி. (எசு)

காலையி லெங்குஞ் சென்றிரை கவர்ந்து கதிர்களுங் கனிகளுங் கொண்டு
மாலையில் வந்து பார்ப்பினுக் களித்து வைகுமாங் கதனிலோர் பொதும்பிற்
சாலவும் வயது புகுந்தொரு பெடையுந் தானுமாய் வாழ்வதோர் கிளிக்கு
மேலையின்வினையாற்பிள்ளையாய்ப் பிறந்தேன் வேந்தனே மேலுநீ கேண்மோ.

பாவியைப் பயந்த வேதனை யதனாற் பாவியே னன்னைதான் மரித்தா
டேவியைத் துறந்த துயரையுள் ளடக்கித் தீவினை செய்தவென் மீதே
யாவியிற் சிறந்து பெருகிய வன்பு மளிசெயுங் கருத்துமே வைத்துக்
கோவையற் றிளகியுதிர்ந்துதீ ராத கொடுஞ்சிறை யுடையனு மெந்தை. (எஅ)

உற்றவ னரையை யுதறுதல் போல வுடனடு நடுங்கியோர் பலமு
மற்றதா னடத்தல் பறத்தலென் றிவ்ற்றிற் கருகனல் லாமையா லயல்வாழ்
மற்றைவான் கிளிகள் கூட்டினின் றுதிர்ந்த வரிக்குர னெய்யெலாங் கொணர்ந்து
முற்றுநா னருந்தி யென்பசி தீர்த்தான் முடிவிலெஞ் சியதுதா னுகரும். ()

என்னையிப் பெரிய பரிவுடன் வளர்த்தங் கிருந்தநா ளதனிலே யொருநாட்
செந்நிறக் கமல மதுநுகர்ந் ததிலே திளைத்துடல் சிவந்ததோ ரன்ன
மன்னிறக் ககன நதியினின் றேகி யந்தவே லையையடைந் தென்ன
மின்னிறத் தமுத கதிரவன் சிவந்து மேலைவா ரிதியினின் வீழ. (அ0)

அந்தர தலமேற் சிந்திய விடுபூ வானதா ரகைகளை மிகவும்
பந்திசெய் கிரணக் கற்றையா கியசெம் பற்பரா கச்சலா கைகளான்
முந்துற வொதுக்கி யொருவெளி யாக்கி மொய்கதிர் வானவ னுதிப்ப
வந்தன னிறையோன் வணங்குமென் பனபோன் மயிலெலாந் திசையெலா மகவ. ()

முழைதொறுங் கிடந்து துயின்றகேசரிகண்மூரிபோய்நிமிர்ந்தெழவதுகண்
டுழைதொறும் பிடிகண் மதபர வசத்தா லுறுங்களி றதனைநின் றெழுப்ப
விழைவுடன் கலந்த வேடமங் கையர்கள் வேர்களும் விடாய்களு மாற்றித்
தழைமலர் விரியும் பரிமளம் பலவுந் தந்துகால் வந்துவந் தசைய. (அஉ)

அம்புய மலர வாம்பல்வாய் குவிய வப்படி யுதித்தவா னிரவி
வெம்பிய கதிர்கள் சிறிதுவந் துலவும் வேலையில் வேலைபோ லார்த்துப்
பைம்பொழில் பறந்து செல்வது போலப் பசுங்கிளி விசும்பெலாம் பரந்து
தம்பசி தணியத் தகுமிடந் தோறுஞ் சார்ந்தபின் முதையு நானும். (அங)

எங்கள்கோ டரத்தி லிருந்தன மாக யாளிமா னேனமா னைக்கிடா
சிங்கமா முதலா மிருகசா திகளுஞ் சிறையமென் பறவையின் றிரளும்
பொங்குவா ரிதிபோ லெங்கணுங் கதறப் புளிஞரா திபர்முத லான
வெங்கணு ளரெலா மெங்குநின் றதிரும் வேட்டையார்ப்பரவநான்கேட்டு.

வேறு.

குஞ்சி தந்தா நெஞ்ச மூீந்திது கொடிய தோரொலி யென்றுநா
ணஞ்சி யெந்தை யருஞ்சி றைக்கு ளழுந்த மேவி யலேந்துநா
மெஞ்சி ஞேமென வெண்ணி யங்ங னிருந்த போதது தன்னிலும்
விஞ்சி யேகொடி தான பூசல்கள் வேறு வேறு விளைந்தவே. (அரு)

மதம ணத்தது கரிக ளித்திசை வந்த தென்றதின் முந்துவா
ரிதுக டித்துமிழ் முத்த வாசமி தேன மென்றதி லோடுவா
ரதும யிற்குர லிதுகி ளிக்குர லாகு மென்றதி லேகுவா
ருதிரி லேப்படு சலச லப்பிதி னுண்டு மானென மண்டுவார். (அசு)

வலேயெ டுத்து முடுக்கு வார்பல வாவ ளைந்து நெருக்குவார்
சிலேயி னேச்சிறு நாணெ றிந்து சினத்து வாளி திருத்துவா
ரிலேக ளுக்கு ளொளித்த டங்கி யிருந்து பாய மியற்றுவார்
தலேது டைத்து முகந்து மீதெதிர் தாவு நாய்களை யேவுவார். (அஎ)

சிலேகு னித்தடு கணேதொ டுத்தெதிர் சீறி வேல்க ளெடுத்துவெங்
கொலேய டுத்தவர் கொலேசெ யச்சிறி தோடி யாருயிர் குறுகிவீழ்
பலமரு கத்திரள் பதைப தைத்துயிர் பறிய வாய்விடு மோசையான்
மலேக லேக்கிய கடலெ னும்படி மறுகி விட்டது கானமே. (அஅ)

அந்த வெங்கொலே யார வார மனேக நேர நடந்தபின்
வந்து வந்து தணிந்த தாக மனப்ப யஞ்சிறி தாறியே
யெந்தை தன்சிற கர்க்கு ணின்று மெழுந்தி ருந்து பொதும்பர்வா
யுந்தி யுந்தி நடுங்கி யஞ்சி யொடுங்கி நின்றன ளுகவே. (அகூ)

காள மேக வினந்த னித்தனி கப்பு விட்டு நடந்ததோ
மீளி ராகவன் மீதி ராவணன் வெய்ய சேனே நடந்ததோ
வாளி யூர்தி பிசாச பூத மடங்க வந்தது வோவெனக்
கோளி லேகொடி தாய வேடர் குழாமெ ழுந்து நடந்ததே. (கூ0)

அக்க டற்படை நடுவி ருப்பி லமைத்து வைத்ததி தென்னவே
சிக்கெ னக்கரி தாயு ருண்டு திரண்ட தோள்களி லானேயின்
ஞெக்க முத்தொடு தக்க குன்றி தொடுத்த ணிந்தது போலவே
மிக்க பச்சுதி ரத்து ளிக்குள் விளங்கு வேர்வு துளங்கவே. (கூக)

வேறு.

நேயஞ் சிறிதறி யாவஞ் சகயம னேர்கொண் டுலவிய வடிவோவெந்
தீயொன் றியகலி காலங் குறுகிய தேயங் கொடுவரு செயலோதிண்
காயங் கொடுமிகு பாவந் தரையவர் காணும் படிவரும் வரவோவன்
மாயங் களினுரு வோவென் றிடவொரு மாதங் ககனெனும் வல்வேடன்.()

உண்ணுங் குருதியை யுமிழா நின்றன வெனவே யொளிவிடு நாநீட்டி
யெண்ணும் பகலொளி யென்பற் களினிடை சீயத் துளைமயி ரதுநாலத்
திண்ணஞ் சிறிதுளை மூளையா தனசில சீயக் குருளைக ளெனவோடி
வண்ணம் பலபல திகழ்ஞா ளிகள்கண மருவிச் சூழ்வர வருவோனை. (௯௩)

முன்னே கண்டிவை சிலசாதிகளுடைமுறையோவெணிலொருநெறியோதா
னென்னே நரபலி தானே புண்ணிய மிகழுந் தசையொடு மதுவேயூண்
கொன்னே சுதறிய வோரிப் பலபல குரலே கேள்விகள் கோட்டானே
நன்னே யத்துட னிவைதீ யனவிவை நன்றென் றுரைசெயு நல்லோர்கள்.

என்றென் றெண்ணி யிருந்தே னுக வருஞ்சே னபதி யிலவின்கீழ்
நன்றென் றெண்ணி யிருஞ்சே னையினொடுநண்ணிச்சிலையினைநாண்மாற்றித்
துன்றும் புளினு ரிடுஞ்செந் தளிரொளி தோயத் தங்கின னுகத்தான்
சென்றங் கதிலொரு வில்வே டன்கடல் சிவணும் பம்பையி னகநண்ணி. ()

மேலிற் பாய்புனல் சாயத் தள்ளி விலக்கிப் பின்பு துலக்கியசெங்
கோலத் தாமரை நீலப் பாசடை குடமா கக்குளிர் புனல்கட்டி
மாலைத் தாமரை வளையஞ் சேறற மண்ணிக் கண்ணெதிர் வந்தெந்தாய்
சீலித் தாறென வாசத் தண்புனல் சேரக் கொண்டு விடாயாறி. (௯௬)

தண்சந் திரகலை யைததன் பசியொடு தாவிப் பருகு மிராகுப்போல்
வெண்செந் தாமரை வளையங் களைமிக வேதின் றந்த விளைப்பாறித்
திண்சங் கிலிமத ஞாளிக் குலமுடை சேனைத் திரளொடு சென்றானங்
கொண்செந் தசைகள் பெறுதே மற்றவ ருழைவந் தவனொரு கிழவேடன்.

தேனுந் தசைகளு மாதங் ககனொரு சிறிதுந் தந்தில னவன்முன்னே
நானுந் தனியுயிர் வாழ்வே னென்றா நவின்றத் தசைமிசை நசையாலே
மேனின் றடியுற வடிநின் றுயர்வுற மீளப் பலபடி நீளப்பார்த்
தானின் றவனதி லெங்ஙனே யேறின னறியே னத்தரு மிசைநின்றான். (௯௮)

நேருஞ் சிலசில போதா கியசில வில்வம் புதுமுகை நிகராயுஞ்
சாருஞ் சிறைமிக மூளையா விளையன சலசக் கருளிலை நிகராயு
மேருஞ் சிறைக ளரும்பா நின்றன வெருக்கங் காய்களை நிகராயுஞ்
சேருந் துண்ட மிராகம் பயில்வன செந்தா மரைமுகை நிகராயும். (௯௯)

இவ்வண் ணம்பல விதமாய் வளர்கிளி யிளமைத் தன்மைய விவையெல்லா
மெய்வண் ணங்கெட வாரிக் கடுகிட மென்னைத் திருகி நிலத்தின்கட்
பொய்வண் ணம்பயில் கொடியோ னுங்கிய புளினுன் போகட வுளமஞ்சிச்
செய்வண் ணஞ்சிறி தறியா தறிவு தியங்கிச் செயலறு மென்றந்தை. (௧00)

கண்ணீர் வார்விழி சுழலச் சுழறரு காலுஞ் சிரமு முடம்புந்தன்
னுண்ணீர் மையினு நடுங்கிப் பாவிமை யுய்விக் கும்படி யேதென்றென்
றெண்ணீர் மையையுடை யோனு யிறுக வணைத்துச் சிறகொ டெனைமூடித்
தண்ணீ ரறவுற னுவோ டன்பு தருந்தா பங்கொ டிருந்தானே. (௧0௧)

அப்பா தகனு மநேகங் கோடிக ளடைவே யுலவி யணைந்தெங்கள்
வைப்பாய் மருவு பொதும்பிற் சிறுபுழை வாயிற் கொழுவிய வேனத்தி
னெய்ப்பா கியநிண முடைநா றும்பனை நீளக் கருகிய பெரும்பாம்பை
யொப்பா மெனயம தண்டந் தானெனவேரரா துகைதனை யுறநீட்டி.(கoஉ)

கதறிச் சிறகு சிலுப்பிப் பலபடி கன்றிக் கொத்திய வதனைத்தான்
விதறித் திருகிய பொழுதுஞ் சிறகிடை வினையேன் மறையும தறியாதே
யுதறிப் போகட விருவே முஞ்சரு குதிர்குப் பையில்விழு மதனாலே
சிதறிற் றிலையுடல் வறிதே யுய்ந்தெழு சிறியே னெந்தையை யப்போது. ()

நேரா கக்கொடு கைவிட் டொன்றையு நினையா துய்யு நினைவேயா
யாராய் கைக்கொரு துணையற் றவ்விட மகலப் போயரு கேநிற்குங்
காரா கிக்குளிர் தழைசெற் றியகடி கமழும் பச்சிலை மரநீழற்
சேரா வுற்று மறைந்தே னிப்படி செய்தோ னப்படி கீழ்வந்து. (கoச)

குஞ்சித் தக்கிளி யெல்லாம் வாரியொர் குடலைக் கேயிறு கக்கட்டி
வஞ்சக் கானவ ரெல்லா மேகிய வழியே போனபி னெந்தாதை
துஞ்சிக் கைவிடு துயரா லும்மதி தூரத் தேவிழு சோர்வாலு
நெஞ்சத் துடனுயிர் சுடவும் வல்ல நெருப்பா யினதொரு நீர்வேட்கை. ()

அந்தத் தாப நெருக்கிக் கொல்லும தாறரு கந்த வரும்பாவி
யெந்தத் தூரமி நேரம் போமவன் வருமோ வின்னமு மென்றென்றே
சிந்தித் தப்பய மெய்திப் புனலுள திசையே சென்று தடாகத்தைச்
சந்தித் தினியுயிர் தன்னைப் பேணுகை தவறன் றென்று புறப்பட்டு. (கoசு)

வேறு.

நிலைபெறு விருதா ணடுநடு நடுங்க நின்றுபற் பலமுறை நட்டுந்
தலையைமுன் குத்தி மார்பினுற்றவழ்ந்துஞ் சரிந்தொருபுறத்திலேதாழ்ந்தும்
வலமிலாச்சிறகையூன்றிமுன்னூர்ந்துமசைந்துபோயுருண்டுருண்டெழுந்தும்
பெலமிலாமையினலிளைத்துமேனோக்கிப்பெரும்பெருமூச்சுவிட் டிருந்தும்.

அன்னைதான் மரிக்க வன்னையு நீயா யையனே யையனு மாகி
யென்னைநீ வளர்த்தா யிப்படித் தனியே யிருந்துநா னிருந்துய் குறவோ
வுன்னைநான் பிரிந்து பட்டதே யமையு நானுமுன் னுடன்வரு கின்றேன்
முன்னையே கியநீ யன்னையார் தமக்கு மொழிந்திடாய் வினையனேன் வரவே.

என்றுநின் றழிவுற் றிரங்குத லாலு மெந்தையா ரிட்டதீ யாலுங்
கன்றிநின் றிரவி கனலுத லாலுங் கண்களு மிருண்டுவாய் புலர்ந்து
துன்றுதண் குருகி னோசையால் வாவி தூரமென் றறிகையி னாலே
பொன்றுகின் றனநாமென்றுகொண்டநேபோக்கிலாதிருந்தவப்பொழுது.

அங்நிலத் தொருசா ரமைந்தவாச் சிரமத் தருணெறி தெரிந்தசா பாலி
யென்னுமெய்த தவமா முனிவரன் குமாரன் யாவரும் பரவுமா ரீதன்
செங்நிறத் தபன னனையபே ரொளியாற் றிசையெலா மிளவெயில் பரப்பி
மின்னிறக் கமல நூலின்முந் நூலும் வியன்கலை யுரியுமார் பிலங்க. (கக0)

திடக்கையிற் பிரம தண்டமு மதன்மேற் றிருப்பளித் தாமமு மொழிந்த
விடக்கையிற் பிடித்த வெண்கமண் டலமுமிருபுடையசைந்தசெஞ்சடையு
முடித்தவற் கலையு மிட்டபுண் டரமு மொருசெவித் தருசெப வடமு
மடுத்தமெய்ச் சுருதி யாரவா ரமுமா யாரிட குமாரருந் தானும். (ககக)

உச்சியி னியம முடிக்கும தாக வொண்புன லோடையை நாடி
யிச்சையில் வருவா னென்னையுங் கண்டென் னிடரையுங் கண்டற விரங்கிப்
பச்சென விறகு முளைத்தது மில்லை பசுங்கிளிப் பார்ப்பிது கெட்டேன்
மெய்ச்சிறை யுவணன் வீழ்த்ததோ வாயு வீழ்த்ததோ வீழ்ந்தவா றென்கொல். (ககஉ)

வாயையங் காந்து கண்களு மூடி மரிப்பது போலமூச் செறிந்து
தாயையுங் காணுத் துயரிணு லாவி தளர்ந்ததிப் பொழுதுநாங் கொடுபோய்த்
தோயமும் பருக்கி யிதனுயிர் புரப்போந் தோழன்மீ ரெடுமினென் றெடுப்பித்
தாயதண் புனல்சூழ் பம்பையை யணைந்தின் னருளிணு லொருகையி லேந்தி. (ககங)

தன்னகத் தலையாற் பயத்துளி யதனைத் தாபமா றும்படி புகட்டி
நன்னயத் துடனே முகத்திலுந் தெளித்து நறும்புன லுடம்பெலாந் தடவி
யின்னுயிர் வரவே யென்னையுங் கரைமே லிருத்தியோ ரிலையினுன் மூடிப்
பின்னைமற் றவருந் தானுமுள் ளிறங்கிப் பிறங்குநா லடைவினி லாடி. (ககச)

மறையிணு லிரவிக் கருக்கியங் கொடுத்து மரவுரி களைந்துமே லுடுத்து
நிறையும்வார் சடையை நீரற வுதறி நெறியிலே கமண்டல நிரப்பி
யறிவிலா வெனையு மங்கையி லேந்தி யாச்சிர மாலய நோக்கிச்
செறியுமா முனிவர் குமாரருந் தானுஞ் சேரவே சிறிதுசென் றளவில். (ககரு)

காய்க்குலை பலவு நிறைந்தபூங் கொத்துங் கற்றைமென் றளிர்களுஞ் செற்றி
மீக்கொளு மிளகு ஞாழன்முந் திரிகை வெற்றிலை குங்கும முதலாம்
பூக்கொடி பலவு மிடமறப் படர்ந்து பொலிதரு பலபொழி லுடனே
பாக்கிய முனிவ ராகுதிப் புகையும் படியொழுங் கெனவிசும் பணைவ. (கககூ)

சமிதைகள் குசங்க டருப்பைகள் விசுவ தானிகள் கந்தமூ லங்க
ளமுதினு மினிய கனிகள்சா கங்க ளருங்குள நெற்கள்கொண் டடைவே
தமதரு மறைக ளோதியே பிரம சாரிகள் பின்வர முன்னே
திமிதிமி யெனவே வந்துவந் தடையுந் தெய்வமா முனிகணந் திகழ. (ககஎ)

அந்தமா முனிவ ருருமறைக் குரல்கேட் டருகுறை சுகங்கள்சா ரிகைக
ளுந்துவார் பொழிலின் மிசையிருந் தவர்க ளோதுவே தங்களுச் சரிப்பத்
தந்தியா னவைநீர் புழைக்கையான் முகந்து தாவுமான் கன்றுகட் கருத்தச்
சிந்தியா தரவு மயினெடுந் தோகைத் திரளிலே புகுந்துகண் டுயில. (ககஅ)

அருமறை முனிவ ரோமவெங் கனல்க ளவிதலா லவையவி யாமல்
விரிதரு பெரிய கரியதோ கைகளான் மென்மயிற் குலமெலாம் வீச
வொருவரு மின்றி யருநெறி தெரியா துயங்கிமு னீங்கிய விருடிக்
குருடரை யணுகி யருளுட னயல்வாழ் குரங்குகள் பரிந்துகோல் காட்ட.

மானிளங் கன்று மரையிளங் கன்றும் வரியுளைக் குருளைக ளுடனே
யூனமொன் றின்றி யரிமுலை யூட்ட வுணர்வில்வா ரணவிளங் கன்று
தானணைந் தரியி னுளைமயி ரதனைத் தாமரை வளையமென் றீர்க்க
வானவன் புடனே யவையசை யாம லங்ஙனே கிடந்துகண் டுயில. (கஉ0)

மதத்திலே யறிவு மயங்குமா னைகளு மதங்களில் விழுந்தவண் டுகடம்
மிதத்திலே நுகரச் சிறிதசை யாம லிரங்கியே நிற்கவிப் படியே
விதத்திலே யிலங்கு விலங்குசா திகளு மெய்யரு ளுடையவாய் முனிவர்
பதத்திலே மருவு முறையினு லவைதம் பழையபவா சனைமறந் தொழுக. ()

வெங்கலி சிறிதுங் கண்டறி யாதாய் மெய்யலா தவைபுக வரிதா
யங்கமின் மதனு மறந்ததாய் நிலமே லயனுல கமைந்ததோ வென்னுஞ்
சங்கையை மிகவுந் தருவதா யரிய தருமமே மருவிவா ழிடமாய்ப்
பொங்கிய வுவகை யுதவுமாச் சிரமம் பொலிந்தற நிறைந்துதோன் றியது.

அத்தவ வனத்தி னடுவறச் சிறும லளவறப் பொராமலோ ரளவாய்
மெய்த்தவ முனிவர் கருணைவா ரிதிபோன் மிகவிடமுடையதாய் வணங்குஞ்
சத்திய முனிவர்க் கங்கியங் கடவுள் சந்நிதி செய்ததா மெனவே
சித்திர மலருஞ் செந்தளிர்த் திரளுஞ் சேயொளி பரந்துநின் றொளிர.(கஉங)

நற்கலை முனிவர் யாவரும் பிணித்து நாற்றிய குசங்கள்சீ வரங்கள்
வற்கலை நிரைகள் கமண்டலத் திரள்கண் மருவலங் காரமா யொளிரு
முற்கவி சினைக ளெங்கணு நிறைந்த முருகவிழ் செவ்வசோ கின்கீ
ழற்கனை நிகருஞ் செய்யசந் தனத்தா லழகுற மெழுகுபூந் தலத்து.(கஉச)

சுந்தரை நகர்வாழ் தேவர்க ளுயன் றாயதண் கருணையால் வாழு
மந்தணர் கிளைபோ லகமகிழ் வுடையோ ராகிவே றுசையொன் றின்றி
முந்திய மறையு நூல்களும் புராண முறைகளு நெறியிலே யுணர்ந்து
சிந்தையு முரையுஞ் செயலுமொன் றாகித் திகழுமா முனிகணஞ் சூழ.(கஉரு)

தான்செய்நல் வினைக டாண்முதற் கேசந் தன்னள வுந்தனைச் சூழ்ந்து
வான்செய்தா லொப்ப வாலிப நரையால் வாலிய வுயுற மூத்துத்
தேன்செய்தார் முனிவர் யாரையுந் தவத்தாற் செயித்துமுன் பெற்றமாக் கொடிபோ
லூன்செயா வாக விருபுடைமருங்கு மோங்குசெஞ் சடைபல தாழ.(கஉசா)

இருபிறை கவிழ்த்தா லொத்தவான் புருவ மிரண்டும்வீழ்ந் திமையைவந் தமுக்க
வருகிய நோக்கு மறக்குழிந் தாழ்ந்த கபோலமு மைம்புல னுகும்
புரவியை யணைக்குங் கயிறுபோ லெங்கும் புடைத்தெழு நரம்புமா டகமால்
வரைமிசைச் சிதறு நீலமா மணிபோல் வடிவெலா மிவர்ந்தவொண் மறுவும்.

உந்தியில் வீழ்ந்த தாடியுங் கருணைக் குறைவிட மானகண் மலருஞ்
சந்திர கிரண முப்புரி நூலுந் தரித்தவற் கலையுமுக் கோலுஞ்
சிந்தையின் வெளிய புண்டர நிரையுஞ் செபவட முங்கமண் டலமும்
வந்தடி பணிவோர் வெந்துயர் முழுது மாற்றிமுன் றேற்றிநின் றொளிர. ()

பவக்கடல் கடக்கும் பாலமா யாசை படர்கொடிக் காடெறி மழுவாய்த்
தவக்கட றனக்கோர் சந்திர னாகிச் சாந்ததை தங்கிவா ழிடமாய்க்
கவர்த்தள விடுதற் கருகியே பெருகுங் கலைகளுக் கொருகரை கல்லா
யெவர்க்குமா தபனாய்விளங்குசாபாலி யென்னுமாமுனிவன் வீற்றிருந்தான்.

வேறு.

அத்தவ முனிவா ரீத னந்நிழ லொருசா ரென்னை
வைத்தருண் முனிவன் பாதம் வணங்கியாங் ககல வேசி
மெத்தென விருந்த போது மேதகு முனிவ ரெல்லாந்
தத்தையீ தெங்கே கண்டாய் தந்தவா றென்கொ லென்றார். (கக0)

வாவியை நோக்கி யேகும் வழியிலே மணிலி லேவீழ்ந்
தாவியுங் குறைந்து வாடி யறவெயி லுறைப்ப வெம்பிப்
பாவிக ணரகில் வீழ்ந்து பதைத்தல்போற் பதைத்த தித்தை
மேவிய சிந்தைநொந்து விரைந்துபோ யெடுத்துக்கொண்டேன்.(ககக)

இதுபயின் மரத்தி லெங்கட் கேறவொண் ணாமை யாலே
கதுமென வாவிக் கேகிக் கடிதுதண் புனல்கொண் டாற்றிப்
புதியதண் சிறையு முண்டாய்ப் போமள வாகக் காக்கு
மதுநமக் கறமே யன்றோ வாதலாற் கொண்டு வந்தேன். (ககஉ)

என்றிவன் மொழிந்த பின்ன ரிருந்தவ முனிவர் கோமான்
குன்றிய பார்வை யாலே குனிந்துபற் பலகா னோக்கி
யொன்றினை மறந்து மீள வுணர்ந்தது போலப் போலத்
தன்றலை துளக்கி யீதோ தான்செய்தீ வினைக ளென்றான். (ககங)

என்னமா முனிவ ரெல்லா மெம்பிரா னிதயந் தன்னின்
மன்னுகா லங்கண் மூன்று மாசறத் தோன்ற லாலே
பொன்னுலோ கங்கள் பூமி பொருந்திவா ழுயிர்க ளெல்லாந்
தன்னிலே செய்த யாவுந் தடையறத் தெரியு மன்றே. (ககச)

ஆகையா லிதனை நோக்கி யடிகடா மருளிச் செய்த
பாகையாற் கிள்ளை யார்தம் பண்புதான் புதிய தொன்றே
போகையாம் பிறப்பி லீதார் புரிந்ததீ வினைதா னேதென்
றோகையா லெங்கட்கெல்லா முரைசெயென் றிரந்து கொள்ள.(ககரு)

இருந்தவ முனிவீர் கூறி யிக்கதை பெரிது சாலத்
தெரிந்தவை யடைவிற் பேசத் தேசகா லந்தா னில்லை
பொருந்திய தந்தி நேரம் போயினி நியம முற்றி
வருங்கனி மூலங் கொண்டு கங்குல்பிற் சாமம் வம்மின். (கஙசு)

அதற்குமு னிந்தக் கிள்ளை யானது மாகா ரங்கொண்
டிதத்துட னிளைப்பு மாறி யிருக்குநா னுரைக்கும் போது
விதித்தன கனவு கண்டு விழித்தபோ லடைய நெஞ்சிற்
பதித்துணர் வுடைய தாகும் பாருமி னதுவு மென்றான். (கஙஎ)

என்றுமா முனிவர் சூழ வெழுந்திருந் தருள வந்தத்
துன்றுமா முனிவர் செய்ய சந்தனந் துய்ய நீரா
லன்றுதா நின்று வீசு மருக்கிய மான வெல்லாஞ்
சென்றுதோய்ந் ததுபோன் மேனி சிவந்தன னிலங்கு பானு. (கஙஅ)

அருந்ததி யுதிக்கு மேலா லவடிரு மேனி மேனங்
கரம்பட லாகா தென்னுங் கருத்தினு லருக்க னுள்ளே
சுருங்கிய கரத்த னயத் தொடுகடற் றுயிலு மாயோன்
விரிந்தநா பியம்போ தென்ன மேலைவா ரிதியில் வீழ்ந்தான். (கஙகூ)

அக்கடற் பவளச் செங்கா டடங்கமே லெழுந்த வென்னத்
தொக்கது செக்கர் மாலை தூயதா மரைக ளெல்லா
மிக்கசீர் மகிழ்நன் போன விரகவே தனையி னுலே
தக்கதா தலைனை நாளைச் சாரலா மிதனு லென்று. (கசo)

முகைக்கமண் டலமு மெங்கு மொய்த்தவோ திமவெண் பட்டுந்
தகைத்ததம் வளைய மான தயங்குமுப் புரிமுந் நூலுந்
திகைத்தவண் டொழுங்கா கின்ற செபவட நிரையுங் கொண்டு
மிகுத்தசெங் கமல வாவி மெய்த்தவ முயன்ற தன்றே. (கசக)

வெய்யவன் குதித்த வந்த விசையினு லெழுந்த வேலைத்
துய்யதண் டிவலை யென்னத் துலங்கிய வுடுக்க ளெல்லா
மையர்செங் கையால் வீசு மருக்கியத் தெண்ணீ ரேறிப்
பையவிண் கழுவிற் றென்னப் பறிந்தது செக்கர் மாலை. (கசஉ)

முனிவரை யிகழ்ந்தார் பாவ மொய்த்தெழுந் ததுவே மான
கனியுற வளைந்த தெங்கு நள்ளிருட் படல மீசன்
பனியசெஞ் சடிலம் வீழ்ந்த பகிரதிப் பெருக்கே யென்ன
வினியவெண் ணிலவு வெள்ள மெங்கணும் பரந்த தன்றே. (கசங)

மலர்ந்தெழு குமுதத் தேனு மணங்களு முகந்து வீசிக்
கலந்தது வந்து வந்து கலைமுனி மலயத் தண்கா
லிலங்கவிப் படியே யந்த விரவின்முற் சாமப் பாதி
தொலைந்தபின் முனிவ ரெல்லாஞ் சொன்னவப் படியே செய்து. (கசச)

என்னையுங் கையி லேந்தி யெழுந்தரு ளியவா ரீதன்
றன்னுடன் சென்று புக்குத் தண்ணிலா வெறித்த முன்றிற்
பன்னிய தவத்தோன் சால பாதனோர் கலைத்தோ லாலே
மின்னுற விருந்து வீச வேத்திரா சனத்தின் மீது. (கசரு)

இருந்தரு ளியசா பாலி யிணையடி பணிந்து சூழப்
பொருந்துற விருந்த போது புனிதனு ரீத னெந்தாய்
வருந்திய கிளியு மாறி வந்தது முனிவோ ரிந்தத்
திருந்திய புதுமை கேட்குஞ் சிந்தையா தரத்தின் வந்தார். (கசசு)

இதுமுதற் பிறப்பி லார்தா னெவ்வினை செய்த திப்போ
ததுபெறக் கிளியாய் வந்த வடைவுதா னேது மேலாற்
பதிவதெப் பிறவி தன்னிற் பரப்புட னிவற்றை யெல்லாம்
விதியினிற் பகர்வா யென்ன மெய்த்தவ முனிவர் கோமான். (கசஎ)

அருந்தவர் குழுவை யெல்லா மடைவினிற் பார்த்து முன்னி
ரிருந்தவென் முகமு நோக்கி யிக்கதை கேட்கு மாறு
பொருந்திய வாசை யுங்கள் புந்தியி லுண்டே யாகில்
விரும்பின கேண்மி னென்னு விரித்துரை செய்ய லுற்றான். (கசஅ)

வேறு.

சிறந்தபுவித் திருமாதின் றிருமுகமண் டலம்போலச் சிறந்து தோன்றி
யறந்தழுவிப் பெருகுபதி யனைத்தினுக்கு மாலயமா மவந்தி நாட்டுப்
புறம்பொசிவற் றரன்சடையிற் புகுநதியைப்புருவநெரித் திகழ்ந்தாற்போல
நிறைந்தபுனற் றரங்கமெழுஞ் சிப்பிரைமாநதியெனுமந்நதியின் றென்பால்.

திருந்தியபூ தலமடந்தை திருவதனத் தழகுதருந் திலகம் போன்றும்
பொருந்தியசீர் முன்னையுகஞ் சிறந்தபிறந் தகம்போன்றும் புவன மெல்லாந்
தரும்பெருமான் மார்காலன் றனக்குறைய வேண்டுமெனத் தானே கற்பித்
திருந்ததொரு தலம்போன்று மெத்திருவு மொருதிருவா யிலங்கி யோங்கி.

திசையளந்த வீதிகளுந் திருவளந்த மாளிகையின் றிரளுந் தேவர்
மிசையளந்த கோபுரரா சிகளுமலர்த் திருவனைய விபுத மாதர்
நசையளந்து விளையாடு நவமணிச்செய் குன்றுகளு நறைதேர் வண்டி
னிசையளந்தசோலைகளு மெண்ணிறந்து திசைகளெலாமிலங்கித்தோன்றும்.

வானவர்தா னவருரகர் வல்லியக்கர் காந்தருவர் மற்று முள்ளோ
ரானவர்வா ழுலகமெலா மவையல்ல விவையேயென் றையந் தீர்க்கு
மூனமிலா வவர்வடிவத் தோவியமண் டபங்களினு லுயர்ந்த தேவர்
தானமெலா மந்நகர்நாற் சந்திதொறு நயங்குலவித் தயங்கித் தோன்றும்.()

கயிலையிலே யினிதிருந்த கண்ணுதலோன் மாகாலன் கருணைத் தோகை
மயிலுடனே கனகவட பூதரமே லிருந்தனைய வண்ணங் காட்டி
யியலுடனே யவனுறையுந் திருக்கோயி லப்பதியு ளிமையோர் போற்றுஞ்
செயலுடனே யிமவானின் செம்மகுடந் தனைப்போலச் சிறந்து தோன்றும்.

வெற்றிமக ரக்கொடியும் வீறுரைக்கும் பன்மணியும் விசும்பு தோயச்
செற்றியெழுந் துலவுகொடி யாடைகளுஞ் செஞ்சமரத் திரளு மெங்கும்
பற்றியசெம் பவளமணிக் கொடிக்கணமே வாயிறொறும் பயின்று காமற்
குற்றபெரும் பெரும்பூசைத் துழனிமிகும் பொதுமாதருறையும்வீதி. (கருச)

செழும்பவளந் தரளமர கதநீலஞ் செய்யமணி வயிரந் தேசுற்
றெழும்புருட ராகம்வயி டூரியங்கோ மேதகமென் றிவையும் பொன்னுங்
கொழுந்துவிட நெருங்குதலாற் குறுமுனிவ னுசமனங் கொண்ட வேலை
கழிந்துவிளங் கியதெனவே கதிர்வீசும் பலபலவங் காடி வீதி. (கருரு)

தேர்சூழ்ந்த புறத்தெருவுந்தெருவுடைத்தேர் வீதிகளுந்தெருவை விட்டா
லூர்சூழுந் தவளமணி வேதிகையுந் தொட்டிகளுந் துரவு மோரேழ்
கார்சூழ்ந்த சோலைகளுஞ் சோலையிடை வாவிகளுங் கலக மாரன்
றூர்சூழ்ந்த வவிடேகத் திருநாளுக் கணிந்ததுபோற் றயங்கித் தோன்றும்.

உள்ளுறையு மாகாலா வின்னமும்வந் தென்னகத்தே யுறைவா யென்று
வெள்ளிமலை வளர்ந்ததுபோல் விளங்குமதிட் பெருநேமி விமலா வெங்க
டெள்ளுபுனற் கங்கையைநீ சிறைவைத்தாய் விடுகவெனத் தெண்ணீரேழுந்
தள்ளிவளர்ந் ததுபோலும் புறவகழி பிறிதொன்று சாற்றொ ணாது. (கருஎ)

அத்தகைய சிறப்புடைத்தா யறநெறிக்கோர் தாபரமா யறத்தின் வேராய்ச்
சத்தியத்தின் சகோதரமாய்த் தானமே தொழிலாகித் தவத்தின் கண்ணாய்
மெய்த்திருவாழ் தாமரையாய் விண்ணுலகு மண்ணுலகா மேம்பா டொன்றி
யித்தகைய பொலிந்தோங்கு முச்சயினி யென்னுமதோ ரிராச தானி. ()

அந்தநெடும் பதிக்கிறையா யவதரித்தா னரவணையா னுகு மென்னக்
கந்தனிவன் மாகாலன் கழல்பேண வந்துதித்தான் காணு மென்ன
விந்திரனு மிவனென்ன விவன்றரும தேவதையே யென்ன வானிற்
சந்திரனார் குலம்வாழத் தாரணிமே லவதரித்தான் றாரா பீடன். (கருகூ)

தன்னிரண்டு புயவலியாற் றாரணிமன் னவர்களெலாந் தாளில் வீழ்ந்து
பின்னிரண்டு நினையாமற் பின்செல்ல முன்செல்லும் பெரியோ னுகி
மின்னிரண்டு கதிர்களும்போன் மேதினியை வினையகல விலக்கு மாயோன்
பன்னிரண்டு திருநாம மெனவேதீ வினைகளைவேர் பறிய வோட்டி. (கசூ0)

தசமுகனுல் வேர்பறிந்த கயிலாயந் தனையரனார் தாபித் தாற்போல்
வசைகளினுன் மிகவிருண்ட கலிவலியால் வேர்பறிந்து மடிந்து போன
நசைகளினு லுயர்ந்தோங்கு தருமமெலாந் தன்னுடைய நசையி னாலே
திசைகளெலாம் வேரூன்ற வொருசிறிதுஞ் சலியாமற் சேமஞ் செய்தான்.()

மங்கலத்தை விளையுமது போலேயு மந்திரத்தை மனத்தி னாலே
சங்கையற்று நினையுமது போலேயும் பலபலநூ றன்னை நாடி
யெங்குமொக்க முயலுமது போலேயு மியலியல்பே யெண்ணி யெண்ணிப்
பொங்குமுத்த விளைகடல்சூழ் புவியோருக் கெப்பொழுதும் பொழுது போகும்.(கசஉ)

உதயகிரி தென்மலைமந் தரசிகரி கந்தமா தனமென் றேங்குஞ்
சதுரவரை யளவாகத் தாரணியைத் தனிக்குடைக்கீழ்த் தானே யாண்ட
மதுரமொழி வேந்தனுக்கு வாலியமே முதலாக மருவு நேயத்
ததிகுணவான் சுகநாத னந்தணர்தங் குலத்தோன்ற லருக னாகி. (கசங)

வேறு.

சத்தி யத்தி னிருப்பிட மாய்வரு தப்பொ ணுவினை தப்புதற் காதியா
யுத்த மர்க்கு மொருவனு மாய்மிக வூக புத்திக் கொருவட மேருவாய்
மெய்த்த வத்தில் வசிட்டனு மாயற மேவு நூலுக்கு வேலையொரேழுமாய்ப்
பத்தி யுற்ற வொழுக்கமு நீதியும் பண்பு மேவிய பாலனு மாயினன்.(கசச)

அந்த மன்னவ னுக்கொ ரமைச்சனு யளவி லாத வமைச்சரு மன்னரும்
வந்து வந்து வணங்க விருந்துபூ வலய மீது விசேட மனைத்தையு
முந்த முந்த விடும்பல வொற்றரான் மூச்சு விட்டது முட்பட நாடொறுஞ்
சிந்தை கொண்டு விளங்கி யுயிர்க்கெலாந் தீது சற்றணுகாவகைசெய்தனன்.

அந்த மன்னனு மந்த வமைச்சன்மே லவனி பார மடங்கலும் வைத்துவே
றுந்து சிந்தனை யொன்று மிலாமையா லுவகை வாரி யுற்றுக் களிக்கவே
முந்து பாடல் விதங்களு மாடலு முறைமை யான புராணமு நீதியு
மெந்த நூலு முணர்ந்தவர் தங்களோ டினிதி ருந்தவ னின்புறு நாளிலே.()

ஈசன் வேணி தனக்கழ காகிவா ழிந்தி ரேகையு மிந்திரை நாயகன்
காசி லாமணி மார்பம் விளங்கவே கதிரெ றித்த கவுத்துவ காந்தியு
மாசி லாத வலாயுத மன்னவன் வண்ண மாவன மாலையு மென்னவே
தேசு லாவு விலாச வதிப்பெயர்த் திருவி வற்கணி யாகி விளங்கினள்.(கசஎ)

வேறு.

விரித்தமே தினியை யெல்லாம் வென்றன மென்று மன்னு
தருக்கினு யென்னை விட்டென் றானையை வென்று காணென்
றுருத்துவார் சிலையை வாங்கி யொருகுடை மதன ராசன்
றிருக்குழா மனைய காதற் சேனையை யேவி நின்றான். (கசஅ)

ஏவிய பொழுதி லந்த வெழின்முடி யரசர் கோனை
வாவிக டோறு நாறு மதுமலர்ப் பொழில்க டோறுந்
தீவிய முன்றி றோறுஞ் சிறந்தசெய் குன்று தோறும்
பூவையர் வளைந்து செய்த பூசலார் பேச வல்லார். (கசகூ)

பகலெலா மிங்ஙன் போக்கிப் பரந்தெழு கங்குல் யாம
மிகலும்வார் சிலைவேள் பூச லின்னுமேல் வருமென் றெண்ணி
யகருவா சத்தா மத்தா லதிமனோ கரமா யின்பந்
திகழுவே யலங்கா ரஞ்செய் திருப்பளி யறையிற் சேர்ந்தான். (கஎ0)

அதிமனோ கரமாம் வாச வமளியை யணைந்து காத
லுதவுமா ருயிரு நெஞ்சு மொருவரோ டொருவ ரொன்றிக்
குதலைவாய் மொழிவி லாச வதியிரு கொங்கை மார்பிற்
புதையவே குழையப் புல்லிப் போக்கினன் கங்குல் யாமம். (கஎக)

வேறு.

வியந்த வெண்குடை வேந்தனு மாதரு
மியைந்து தங்களி லிப்படி யெய்தியே
நயந்த காதலி னானெடு நாளெலாம்
பயந்த வின்பம் பயன்பட்ட தில்லையே. (கஎஉ)

எந்த வின்பமு மெய்திய மன்னவன்
மைந்த னன்முகங் கண்டு மகிழ்வுறு
மந்த வின்பம் பெறாமையி னாலுள
நைந்து நைந்து நெகிழ்ந்தா னலமெலாம். (கஎங)

என்ன செல்வ நமக்கென்ன வின்பமீ
தென்ன நல்லர சீதென்ன வாழ்வினே
மன்னன் யாவும் வறியோர்கள் போலவே
தன்னுள் வாடித் தனியே யிருந்தனன். (கஎச)

ஊழ்வி யாகுல முள்ளே யடக்கியத்
தாழ்வி லாதவன் றானொரு நாளிலே
வாழ்வி லாச வதிமனை நண்ணவே
யாழ்வி டாமொழி யிவ்வா றிருந்தனள். (கஎரு)

கையில் வீழ்ந்த கபோலமுங் கண்ணினீர்
பைய வீழ்ந்து நனைந்தபட் டாடையு
மெய்யில் வீழ்ந்த வியாகுல சோபையுந்
தொய்யில் வீழ்ந்த துணைமுலை தானுமாய். (கஎசு)

அணிந்த தொன்று மணியாம லன்னைமார்
பணிந்து தேற்றவுந் தேறாது பாங்கிமார்
துணிந்து சோகத்தி னாலொன்று சொல்லுறார்
தணிந்து சூழத் தனியே யிருந்தனள். (கஎஎ)

ஏந்தல் செல்வது கண்டெழுந் தாளே நா
லாய்ந்த வேந்தனு மங்கை பிடித்துமுன்
னேய்ந்த பீடத் திருத்தி யிருந்தபின்
சேர்ந்து தேவி திருமுக நோக்கியே. (௧௭௮)

அஞ்சி யேது மறியா தயர்ந்தவள்
கஞ்ச மாமலர்க் கண்ணீர் துடைத்துநீ
தஞ்ச மேது மிலாதவர் தாமென
விஞ்சு மாதுய ரெல்லாம் விளம்பென. (௧௭௯)

வேறு.

மாதி னணியடைப்பை மங்கை மகரிகைபார்த்
தேதுகுறை யுண்டெம் பிராட்டிதனக் கெம்பெருமா
னாதரவு தானிதுவே ரூர்தாங் *குறைசெய்வா
ரோதிலவை தாமல்ல வொன்றுண் டுரைசெய்வேன். (௧௮௦)

நங்கா தலர்கூட்ட நாடோறு நம்முடைய
பங்காயு மின்னும் பயன்பட்ட தில்லையெனுந்
தங்காத வெந்துயரந் தானெடுநா ளுண்டிவருக்
கிங்கா குலமா யிருக்கின்ற திப்பொழுதோ (௧௮௧)

இந்தத் துயரெம் பிரானறியி லெம்பிரான்
சிந்தைக் கிடர்விளையு மென்னுந் திருவுளத்தான்
முந்திப் புலப்படுத்தார் மூழ்கா ரமுதுசெய்யார்
பந்திக் கலனணியார் பாராட்டார் விளையாடார். (௧௮௨)

இவ்வா றெழுகுமவ ரின்று விடிவோரை
மைவார் குழற்பாகன் மாகால னைப்பணியச்
செவ்வா னுயர்கோயில் சென்றனரா லவ்விடத்தே
மெய்வாய்மை மாபா ரதமுரைக்கும் வேதியர்கள். (௧௮௩)

புத்தென் பதுநரகம் புத்திற் புகாதளிப்பான்
புத்திரனு மாகையினாற் புத்திரப்பே றில்லாதா
ருத்தமலோ கம்பெறு ரென்றங் குரைப்பதுகேட்
டெத்தனையு நெஞ்சமழிந் திங்கே யெழுந்தருளி. (௧௮௪)

இவ்வா றடியேங்க ளெல்லாருந் தேற்றிடவுங்
கைவாரா திப்படியே கண்ணீ ருடனிருந்தா
ரவ்வா றிதுநின் றிருவுளத்துக் கானதினிச்
செய்வா யெனவரசுஞ் சற்றே திகைத்திருந்து. (௧௮௫)

* 'தானிதுவே லார்தாம்' என்றும் பாடம்.

பேதுற் றறவே பெருமூச்சு விட்டருளி
மாதர்க் கரசேநாம் வாய்த்ததவஞ் செய்திலேங்
தீதற்ற தெய்வச் செயறனக்குச் செய்வதுதா
னேதிப் படியே யிருந்ததே நம்பாவம். (கஅசு)

சந்தப் புதல்வர்த் தழுவிவாழ் பேரின்ப
மந்தப் பிறப்பி லருந்தவங்கள் செய்யாதார்க்
கிந்தப் பிறவிதனி லெய்துமோ வென்செய்வேஞ்
சிந்தைத் துயரெனக்குஞ் செல்கின்ற திப்படிதான். (கஅஎ)

வேறு.

கெற்பபா ரத்தின் முன்வரு வயாவுங் கிளரொளி மழுங்கிய வழகு
மற்பமாய் மெல்ல வசைந்தநன் னடையு மவசமு மென்றுநான் காண்பேன்
பொற்பில்வாழ் புதல்வன் பிறந்தன னென்று புகுந்துநம் பரிசன மெல்லா
நிற்பதோ ரென்னைக் கலைபிடித் தீர்த்து நிதிமுகந் தென்றுதான்கொள்வார்.

மெல்லவே நோக்கிக் கண்வளர் புதல்வன் மேவிய நரிவெருட் டுகையாற்
பல்லிலா வெயிறு பையவே தோன்றப் பழுதற நகைக்குமந் நகைகண்
டல்லலா கியவெந் துயரெலா மாறி யங்ஙனே நீயரு கிருப்ப
மல்லுலாவியவென் றோள்கள்பூரித்துமனமகிழ்ந்தென் றுநான்வாழ்வேன். ()

புழுதியா ரழகு பொலிந்தபொன் மேனிப் புதல்வனென் னெஞ்சுமென் கண்ணுந்
தழுவியே பின்பு செல்லமுன் றிலிலே தவழுவ தென்றுநான் காண்பேன்
வழுவிலாப் பளிக்குச் சுவர்ப்புற நின்ற மாணிழ லுள்வர வதுகண்
டழுதுதான் பிடிக்க வதனுட னுழலு மவ்வழ கென்றுநான் காண்பேன்.

என்றுகொண் டிங்ஙனே யென்மனந் துயர்வ தெத்தனை காலமுண் டின்றே
யொன்றுமென் செலவு மரசுவாழ் வதுவு மொருபய னுகநான் கொள்ளேன்
மன்றலங்குழலாய்விதியினூர்செயற்கு மனிதர்தாஞ்செயுஞ்செயலுண்டோ
வன்றைநஞ் செயல்கா ணின்றுள வெல்லா மாகிலு மின்னுமொன் றுண்டு.

முனிவரே பரதெய் வதைகள்வே றில்லை முனிவரே யருள்செய்வா ராகு
லினியவா னவெலா மிம்மையே தருவ ரிவர்கடங் கருணையா லன்றே
தனியனுப் மூத்த தசரத னிராமன் றன்னுட னுல்வரைப் பயந்தா
னனிசரா சனனைப் *பயந்தனன் மகத நாடர்கோ னிப்படி யநேகம்.(கசுஉ)

ஆகையான் முனிவ ரடிகளே பணிக வாங்கவர்க் கானபூ சனையே
யோகையான் முயல்க குருசனங் களையு முவந்துபத் திகளினூற் றொழுக
வீகையாற் றருமம் யாவையுஞ் செய்க வெண்ணிய கோன்புக ளெல்லாம்
பாகையா மன்பாற் பலபடி நோற்க பாங்குறு மனத்திலே கொள்க. (கசுங)

* சராசனன்-ஜராஸந்தன்; 'சராசந்தற் பயந்தனன்' என்று பாடங்கொள்ளுதல் நேர்.

தருமமே செய்யு மனத்தினார்க் கின்பந் தாமெலாந் தடையற வருங்காண்
மருவிவாழ் திருவே வருந்தனீ யென்று மற்றுமிப் படிபல மொழியா
லுருவமே தேற்றி விழியினீர் மாற்றி யொண்புன லான்முகந் துடைத்தங்
கரசர்கோன் சிறிது பொழுதிருந் தருளி யவளுறை மனையினின் றகன்றான்.

எழுந்தரு ளியபி னிலங்கிழை யுளத்தி லிடரெலா நீங்கிநீ ராடல்
செழும்பணி யணித லருந்துதன் முதலாஞ் செய்கரு மங்களுந் தொடங்கி
யழுந்திய தவத்தோர் வானவர் குருக்க ளந்தணர் பூசையுஞ் செய்து
விழைந்தனர் சொன்ன சொன்னவை யெல்லா மெய்மிக வாசையான் முயன்றாள்.

வேறு.

நாக்கு வழித்துப் பல்லுரிஞ்சி நறுநீ ராடி வெள்ளையுடுத்
தாக்க முடனே யுபவதித்தெம் மம்மை கோட்டத் திரவேகிப்
பூக்கொ டூப தீபமுடன் பூசித் துலக்கைப் பலமீது
மீக்கொ டருப்பை படுத்ததன்மேல் வேண்டிக் கொண்டு விழிதுயின்றாம்.

எண்ணு நிமித்தம் பலபார்த்து மிங்ஙனே வருந்துங் காலத்து
நண்ணு மொருநாள் சிறிதொழிய நாட்காற் கங்குல் விடிந்தளவில்
விண்ணி லுயர்ந்த மேனிலமேன் மேவு விலாச வதிமுகத்திற்
றண்ணன் மதியம் வந்துபுக வரசர் கோமான் கனாக்கண்டான். (கசுஎ)

அப்போ தவனு முணர்ந்துமகிழ்ந் தருளிச் சுகநா தனையழைத்திங்
கிப்போ தமைந்த நற்கனவீ தென்ன வவனு மனங்களிகூர்ந்
தொப்போ தரிய விக்கனவா லுலகத் துள்ளோர் மனக்கருத்தும்
வைப்போ ரயிலாய் நம்முடைய மனோ ரதமுங் கைகூடும். (கசுஅ)

நானு மிரவு விடிபொழுதி னல்லோ ரருநான் மறையாளன்
றானென் மனையாண் மடிமீது தருபுண் டரிக மலர்வைக்கு
மான கனவு கண்டனனா லண்ணி தாக நன்மைகளுண்
டேனை யவைபோல் வைகறைவா யெய்துங் கனவு பொய்யாது. (கசுகூ)

அண்ணி தாக நின்றேவி யரிபோ லரிய மகவீன்று
திண்ணி தாக வுன்னுடைய சிந்தை மகிழுந் திறங்காண்பர்
மண்ணெ லாநின் சந்ததியால் வாழ்வ தாக வெனவாழ்த்த
வண்ண றானு மவனுடனே யந்தப் புரத்தி னிடைப்போகி. (உ00)

இருவர் கண்ட கனவானு மினிய விலாச வதிநெஞ்சிற்
பெருகு முவகை யுண்டாக்கிப் பெயர்ந்தா ரந்த நாள்வரையி
லுரிய கடவுட் டிருவுருளா லோடைப் புனலு ளொளிமதிய
மருவு மதுபோ லிவள்வயிற்றில் வந்து வயங்கி யதுகருப்பம். (உ0க)

பாரி சாதத் தாலிமையோர் பைங்கா விளங்கி யதுவெனவும்
வாரி சாதக் கவுத்துவத்தான் மான்மார் பிலங்கி யதுவெனவும்
வேரி சாரு மலரோதி மேய கருப்பத் தால்விளங்கி
மூரி சாருங் கொட்டாவி மூச்சுச் சோம்பு முகஞ்செய்து. (உ0உ)

வேலை டருகி மெய்கனத்த மேக மாலை யெனமெத்தென்
றூறு நடையை யுடையளா யசன மறந்து முகம்வெளிறிச்
சால முகங்கள் கருகுபயோ தரங்கள் விளங்கு மதனூற்கார்
கால மெனவே திகழ்வாளைக் கண்டு மகிழ்ந்தார் பரிசனங்கள். (உ0௩)

தைய லாயந் தமக்கெல்லாந் தலைமை யாகித் தார்வேய்ந்த
செய்ய பாத சேவையிலே திருந்தி யுரிமைத் திறம்பூண்ட
கொய்யு மாலைக் குழற்சேடி குலவத் தனையோர் நன்னாளிற்
றுய்ய மாலைப் பொழுதின்கட் டிலங்கு சபாமண் டபமெய்தி. (உ0௪)

உரக ராச பணமணியி னொளிர்ந்து சமூகத் துட்பொலியும்
வரத னான நாரணனை மான வனேக மணித்தீப
மருகு மேவ வதனடுவே யமைந்த வரசர் சிலர்சூழப்
பெருகு நீதி யமைச்சனுடன் பேசி யிருந்த பெருமானை. (உ0௫)

கண்டு வணங்கி மாதேவி கருப்ப வுவகை ரகசியமாக்
கொண்டு மொழிய வமுதத்தே குளித்தான் போல மெய்புளகித்
தண்ட ருலகும் பெற்றனன்போ லறவா னந்த பரவசனாய்
மண்டு முவகை மீதூர மார்புந் தோளும் பூரித்தான். (உ0௬)

மனப்பே ருவகை யடங்காது வழிந்து புறம்பு பாய்ந்ததுபோன்
மினற்பே ரொளிசேர் புன்முறுவல் வெள்ளை நிலவு மீதூரு
மினத்தேர் வேந்தன் றிருமுகமு மெழிலும் பரமா னந்தசல
நனைத்தே யொளிருங் கண்மலரு நடந்த தமைச்சன் முகமீது. (உ0௭)

மன்னர் பெருமான் றிருமுகத்தில் வளரு முவகைக் கடலாலு
மின்னை யனையாண் முகமலர விளங்கு முறுவற் குறிப்பாலு
மின்ன திதுவென் றறியாதே யிருந்து மிதுவா மெனநாடித்
தன்னுண் மகிழுஞ் சுகநாதன் மன்னா சனம்விட் டெழுந்தணுகி. (உ0௮)

அரச ரரசே நின்முகமு மன்ன மனையா டன்முகமு
முரைசெ யுவகை யொன்றுளதவ் வுவகை கேட்க வென்னுள்ளம்
விரைய விரைய விரைந்தறவே விரும்பா நின்ற தக்கனவின்
பரிசின் முடிவின் மெய்யாகிப் பயனா கியதோ பகரென்றான். (உ0௯)

என்ன விறைவ னகைமுகஞ்செய் திவள்சொன் னதுவே மெய்யாகி
லன்ன கனவு மெய்யேகா ணவ்வா றினிது மங்கலந்தா
னுன்னு மளவி லிங்கெமக்கு முண்டா குமதோ வுண்டாகி
லன்ன மனையா டன்மனைக்கே யணுகி யறிவே மெனவெழுந்தான். (உ௧0)

வேறு.

வேந்தர் வேந்தனும் வேந்தர்க்கு விடைகொடுத் தருளிச்
சேர்ந்து சுந்தரைத் தேவனை யடைந்தவர் போல
வாய்ந்து வாழ்குல வத்தனை வாழவப் பொழுதே
யேய்ந்த தானணிந் திருந்தபூண் யாவையு மீந்தான். (உகக)

ஓகை முன்குதித் தோடநெஞ் சமுமுட னோடச்
சோக முஞ்சலித் தோடிடத் துய்யதா ரகைசூழ்ந்
தேகு திங்களு மற்பம்வந் தெங்கணுஞ் சூழப்
போகி மந்திரி தன்னுடைந் தப்புரம் புகுந்தான். (உகஉ)

பக்க வாயிலிற் பூரண கும்பமும் பலவாஞ்
செக்கர் மாமணித் தீபமுந் திருவிளக் கினமு
மொக்க வேபொலி வெய்திய மங்கலோ வியங்க
டொக்க வார்சுதைச் சுவர்களாற் றுலங்குமா ளிகைகள். (உகங)

சேய நித்திரா கும்பமுஞ் சென்னிமாட் டிலங்கத்
தூய நீற்றினாற் றொழில்பல சூழவே யெழுதி
யாய வேல்பல நிரைத்தபி மந்திரித் தமைத்த
நேய மாச்செடி மூலிக ணிரைநிரை நாற்றி. (உகச)

இரும யிர்க்கயிற் றேறிடு மிரும்பர சிலையு
மருவு நிம்பமென் றளிர்களும் வளையவே நாற்றிச்
செரும வெண்கடு கெங்கணுஞ் சிதறியிப் படியே
யுரிய காவல்செய் தொளிபெற வுயர்ந்தபீ டத்து. (உகரு)

மகிழு நெஞ்சினன் மங்கையர் மங்கலங் கூற
நிகழு மாதரா லத்திக ணிரைநிரை யெடுப்பத்
திகழ வேயிருந் தருளிய தேவிசென் னியர்கள்
புகழ வேயெழுந் தருளிய புரவலற் கண்டு. (உகசு)

ஒருகை சேடிசெங் கைபிடித் தொருமுழந் தாளி
லொருகை யூன்றிமெத் தெனவெழ வுயர்குல விளக்கே
யரிது நீயெழுந் திருந்தமை யமையுமே யமையு
மிருமெ னுவவள் கைபிடித் திருத்தியங் கிருந்தான். (உகஎ)

இட்ட வாசனத் தமைச்சனு மிருந்தன னதற்பின்
கட்டு வார்கழற் காவலன் றேவியை நோக்கி
மட்டி லேகுல வத்தனை தன்னுடன் கூறி
விட்ட தேதது கேட்கநான் விரும்பினே னென்றான். (உகஅ)

ஆரி யன்சுக நாதனு மம்மொழி கேட்க
வேரி யங்குழ லாய்மிக விரும்பின னாக
நீரி யம்புமதெப்படி யென்னநே ரிழைதன்
காரி லங்கிய கூர்விழிக் கடையினு லெறிந்து. (உகக)

மூரல் வாணகை யானபட் டான்முக மூடிச்
சாரு நாணமு முவகையுந் தங்களிற் பிணங்கப்
பார மாமுலை யொன்றின்மேற் பங்கய வதனஞ்
சேர வேதலை சாய்த்தெழிற் றிருவனு ளிருந்தாள். (உஉ0)

மன்னர் கோன்பல காலிங்ஙன் வருடவு மதற்கு
மின்ன னுள்விளிந் தொன்றையும் விளம்பிடா திருப்ப
வன்ன மேயெனக் கொன்றுநீ ரருள்செயீ ராணுன்
முன்னி லாவெழு வெளிறிய முகமுரை யாதோ. (உஉக)

சேய செண்பக வொளிசிறு செண்பக வொளிபோ
லாய நுந்திரு மேனியே யருள்புரி யாதோ
மாய நுண்ணிடை வந்துவந் துதரபந் தனமும்
போய கன்றிட வகன்றது புகன்றரு ளாதோ. (உஉஉ)

என்னும் வாசகம் பலமொழிந் திவன்விளை யாட
மின்ன னுண்மிகக் கூசியே வெள்குதல் கண்டு
மன்னர் கோனையு மாதையும் வாழ்கென வாழ்த்தித்
தன்னை நேரிலா மந்திரி தன்மனை சார்ந்தான். (உஉ௩)

அரசர் கேசரி தானுமன் றம்மனைத் தங்க
விரசு காதலி னிவள்வயா வேட்கையா னவெலா
முரைசெ யாவகை யருள்கென வுரைத்தவ னேக
வரசு மாதுபெற் றையிரு திங்களும் புகுந்தாள். (உஉ௪)

நல்ல தோர்தினத் தடிக்கடி நாழிகை பார்க்குந்
தொல்லை நூன்முறைச் சோதிடர் சுபமெனக் கொள்ளு
மெல்லை சேர்முகுத் தந்தனி லேந்திழை யுலகோ
ரல்ல தீரநல் லரசிளங் குமரனைப் பயந்தாள். (உஉ௫)

வேறு.

ஓடுவார் மீதுபோ யொருவர்சென் றொருவரைத்
தேடுவார் சோபனஞ் செப்புவார் தழுவுவார்
பாடுவார் மகிழுவார் பரவுவார் பரவிநின்
றாடுவா ரானவந் தப்புரத் தவர்களே. (உஉ௬)

அரசரும் முனிவரு மங்நகர்த் திரள்களும்
பரிசனங் களுமுடன் பயிலநின் றண்டையும்
விரசுபொற் சிவிறியும் வீசிநீ ராடவே
யுரைசெயுந் தகையவோ வுற்றபே ருவகையே. (உஉஎ)

சங்கமும் படகமுந் தாரையுங் காளமு
மெங்குநின் றறைதலு மினியமா கதர்குழா
மங்கலம் பாடலு மறையினோ ரரவமுந்
துங்கவெண் டிரையிலுந் துழனிகொண் டசையுமே. (உஉஅ)

வேறு.

மருவி வளைப்பா ருவகை யுரைப்பார் மணியணி கலையெல்லாம்
பரிசில் பறிப்பார் பரிசில் கொடுப்பார் பலகுற ளினர்கூனோர்
முரிகிழ வர்க்கா நிதிய மளிப்பார் முகம னுரைப்பாராய்ப்
பெருகிய தச்சோ பனமவ னிக்கோர் பெருமக னப்போதில். (உஉகூ)

பாலன் முகத்தா மரைமலர் காணப் பதறிய நெஞ்சைத்தான்
சால வடக்கித் தணிய விருந்தே சதுமறை களுமோதிச்
சீல மிகுத்தோர் பரிவுட னருளிச் செய்ததோர் நன்னாளிற்
கோது முகுர்த்தத் திற்சுக நாதன் கூட வரச்சென்று. (உ௩0)

நெற்குவை தோறுங் கற்புடை மடவார் நிறைய விருந்தேத்தக்
குற்குலு வரவத் தோலொடு தகரின் கொம்பு புகைத்தெங்கும்
விற்கன லிடுநிம் பத்திலை லவணம் வெடுவெ டெனத்தீயப்
பொற்கல முழுது மங்கல தீபம் பலபல பொலிவெய்த. (உ௩க)

தடையற மறையோர் சதுமறை மொழியுஞ் சாந்திகள் பலவோதச்
சுடரெழ வுருவும் வாளுட னெங்குஞ் சூரர்க ணடமாடக்
கடனறி பெரியோ ரேயின செய்யுங் காவலி னுலோங்கித்
திடமொடு பொலியுஞ் சூதக மனையைச் சென்றணு கிக்கண்டு. (உ௩உ)

அற்புட னீரா லாசம னஞ்செய் தாரமு ளும்பேணிப்
பொற்புட னுட்போய் வெளிறி யிளைத்துப் பொலிதரு மடமாதின்
கற்பமர் மடிமே லிமையவர் மடவார் கைம்மிசை நழுவாவீழ்
விற்பயில் கடவுட் சேயென விறல்வேல் வேளென வளர்சேயை. (உ௩௩)

உருகிய பரமா னந்த சலத்தா லொளிதிகழ் விழியாலே
பருகுவ தெனவே பதமுடி யளவும் பலபல படிநோக்கிப்
பெருகிய வுவகைக் கடலிடை முழுகிப் பிறவியி னலாகுங்
கரும மனைத்தும் பெற்றன மென்றே கருதி யிருந்தானே. (உ௩௪)

மந்திரி தானு மனமகிழ் வுடனே மைந்தனை யுறநோக்கிச்
சிந்தனை செய்தே மன்னவர் பெருமான் றிருமுக மலர்பாரா
வந்தமில் புகழாய் நங்குல முதல்வ னவயவ நவரேகைப்
பந்திக டெரியா தாகிய விந்தப் பருவமு மிதுபாராய். (உநரு)

செங்கழு நீரி னேரிதழ் போலுஞ் செய்யிதழ் விரலங்கைச்
சங்கமு மிகவே யிலகிய கட்வுட் சக்கர மும்பாராய்
கொங்கலர் தளிர்போ லடிமிசை கொடிதேர் குடையிப மடல்வாசி
பங்கய மொளிரும் படியிவை பாராய் பழுதறு மெழில்பாராய். (உநசு)

இவனமு குரலுந் துந்துபி நாத மெனவதிர் வதுபாரா
யிவையிவை முதலாஞ் சக்கர வர்த்திச் சின்னமு மிவற்றாலே
யிவனுயர் பெரியோ னென்பது தானே யியல்வது பாராயென்
றிவையிவை மொழியா விருவரு மகிழு மெல்லையி லொருநல்லோன். (உநஎ)

விரைவுட னோடிச் சென்றிறை பாத மீது வணங்கியபின்
பொருகுடை நிழலிற் புவிமுழு தாளு முத்தம மேன்மேலும்
வருவன முழுதுஞ் சோபன மேநின் மந்திரி சுகநாதன்
பெருமனை யாளு மொருதிரு மகனைப் பெற்றன ளின்றென்றான். (உநஅ)

வேறு.

அந்தமொழி யமுதத்தா லானந்த வெள்ளத்தே யமிழ்ந்து நீந்திச்
சிந்தைமகிழ்ந் தெழுந்தாடிச் செய்யுமதொன் றறியாமற் செங்கோல் வேந்தன்
மந்திரியை மணிமார்ப முறத்தழுவி வரிசையுட னவன்மே லிட்ட
பைந்தொழில்சே ருத்தரியப் பட்டதனைப் பரிசிலாப் பறித்துக் கொண்டான். (உநக)

துக்கசுக மிருவர்க்குந் தோன்றிலுடன் றோன்றுமெனுந் தொல்லை நண்மை
மெய்க்கடவு ளறிவிப்ப திப்படியோ வென்றென்று மிகவே வாழ்ந்து
தக்கபெருஞ் சோபனமுன் சொன்னவர்க்கு வேண்டுவன தனங்கள் வீசி
யக்கணமே யெழுந்திருந்தந் தணரோடு மவனிதலத் தரச ரோடும். (உசo)

சிலம்பொலியுங் கலையொலியும் வளையொலியுஞ் செவிடுபடத் திசைக ளெல்லாங்
கலந்தெழநின் றாடுவார் பாடுவார் களிப்பாராய்க் கன்னி மார்க
ளலந்தலைகொண் டங்கொருவர்க் கொருவர்சோ பனங்கூறி யாடை பைம்பூண்
மலைந்துமலைந் தெதிர்பறித்து விளையாட வாச்சியங்கண் மழைபோ லார்ப்ப. (உசக)

சென்றருளி யமைச்சர்பிரான் மனைபுகுந்து தன்னுடைய சிறுவன் றோன்று
மன்றையினுஞ் சிறப்புடைத்தாய்க் கலியாணஞ் செய்ததற்பினரசர்கோமா
னன்றிமிகுங் கோயிலடைந் தரசர்குமா ரன்பிறந்த நாளுக் கேற்ப
நின்றதொரு நன்னாளி லந்தணர்க்குப் பலகோடி நிதிய மீந்து. (உசஉ)

தேவிதிரு முகமீது திங்கள்புகு மிக்கனவின் றிறத்துக் கேற்பத்
தாவிலுயர் குமாரனுக்குச் சந்திரா பீடனெனுந் தக்க நாம
மேவியளித் தனனதன்பின் வேந்தர்கோ னனுமதியால் வேதத் தோர்கட்
காவனாற் சடங்கனைத்து மருமறையின் படியேசெய் தமைச்சர் கோமான். (உசங)

தன்னுடைய மைந்தனுக்குச் சதுமறையோர் திருமரபின் றகுதிக் கேற்ப
மன்னுடைய சிறப்புடைத்தாம் வைசம்பா யனனென்னும் வாய்த்த நாம
மின்னருளி னுடனளித்தா னிப்படியே சவுளமுத லெல்லாஞ் செய்யத்
தென்னணித்தார்ச் சந்திரா பீடனுந்தன் பேதைமையிற் சிறிது தீர்ந்தான். (உசச)

வேந்தனுந்தன் மைந்தனுக்கு விளையாட்டிற் பராக்கொழிய வேண்டுமென்று
கூர்ந்தபெரும் படைவீட்டிற் கொருபாதிக் கூப்பீடு கொண்டு தூரத்
தார்ந்தபுனற் சிப்பிரையாற் றங்கரையி லறவகன்ற வகழும் வானிற்
றோய்ந்தநெடுஞ் சுதைமதிலும் வாயிலெறுந் தோரணமுந் துலங்கி யோங்க. (உசரு)

ஆங்கதனி லோரருகே செண்டுவெளி செய்ததனுக் கருகே யாகப்
பாங்குடைய தொருசிரமக் கூடமமைத் திப்படியே பழுதி லாதோ
ரோங்குகலை மாளிகைசெய் தோரொருவ ரோரொருவ ராக வோரோர்
தேங்குகலைச் சூரியரா மாசான்மா ரனைவரையுந் தேடிச் சேர்த்து. (உசசு)

மைந்தனையுஞ் சுகநாதன் மைந்தனையு மங்கவர்கள் வசமே யாக்கிப்
பந்தமிகுங் கலைதேரும் படிவகுத்த மாளிகையிற் பயிலு மாறுஞ்
சிந்தைவழி விளையாடா வகையுமிகப் பலகாவல் செய்து நூறு
சந்தமிகுஞ் சிறுவரையும் பரிசனமா யுடன்விடுத்த தாரா பீடன். (உசஎ)

சீதமலர்க் குழலியொடுஞ் சிறுகாலே யெப்பொழுதுஞ் சென்று கண்டு
போதவிவர்க் கிப்படியே சிலகாலஞ் சென்றளவிற் புதல்வன் றன்மே
லாதரமுற றவர்களெலா மதிகரிப்பித் தருளுதலா லமல மான
சோதிமனத் தெக்கலையுந் தொலையாத படியாகத் தோய்ந்த வன்றே. (உசஅ)

சொல்வேத மாகமநூல் சோதிடநூல் வாகடநூ றாக நன்னூல்
வில்வேதங் குஞ்சரநூன் மந்திரநூல் யந்திரநூல் விளங்கு சோதிக்
கல்வேதம் யமதமநூ றருமநூல் களவுநூல் காம ராச
னல்வேதஞ் சூதுநூல் கீதநூ ருடகநூ லிராச நீதி. (உசகூ)

தனுமுதலாந் தொண்ணூற்றெட் டாயுதங்கள் யாழ்முதலாந் தகைசேர் நாலெட்
டெனுமடைவாம் வாத்தியங்க டேர்புரவி களிறூர்த லிந்த்ர சாலம்
பனுவலிலா நாடகங்கள் காவியங்கள் புராணங்கள் பதினெண் பாடை
முனிவரிலாம் பலபயில்க ளிலைகிள்ளல் பூத்தொடுத்தன் முதலாஞ் சிற்பம். (உருഠ)

விடவித்தை மற்போர்நீந் துதல்கடத்தல் குதித்தலெழன் மீதே யேற
லுடன்மற்று மற்றுமெலாங் கற்றவற்றின் றுறைபோகி யோங்கல் போலுங்
கடமத்த யானைகளைக் கைதூக்கி விட்டெறிந்துங் கணைக ளாலே
வடவெற்பை விடவெய்தும் வாளபிமன் விசயனென வலிய ரானான். (உருக)

வலியொழிந்த கலைகளெலாம் வைசம்பா யனனுமிந்த மைந்தற் கொத்தான்
கலைதெரிந்த பயில்வானுங் குரவர்பெருந் தொடர்பாலுங் கலந்து கூடி
நலமிகுந்த வாலிபமே முதலாக விளையாடு நண்பி னாலும்
பொலிவமைந்த விருவோரு மோருயிரு மொருநெஞ்சும் போல வானார். ()

இத்தகைய னாகியவர் சந்திரா பீடனுக்கோ ரிளஞ்சோலைக்குத்
தொத்தகைய வந்தொளிரு மலர்போன்று மயிற்கெழுமைந் தோகை போன்றும்
புத்தழகு மீதூரும் யௌவனமும் பேரொளியும் புவன மூன்றி
னுத்தமர்க்கும் பேராசை யுண்டாக வுண்டாகி யுயர்ந்த வன்றே. (உ௫௩)

அக்காலத் தெக்கலையு மமைந்தமைவன வாசான்மா ரருளக் கேட்டுத்
திக்காளு முடிவேந்தன் றிருமகனைக் கொணர்மினெனச் சேனை யோடு
மிக்காளும் வலாகனை யொருநன்னாள் விடுப்பவவன் விடைகொண் டேகித்
தக்கான்மா ளிகைவாயி லடைந்தறிவித் துட்புகுந்து தாளில் வீழ்ந்து. ()

இருமினென வொருசிறிது பொழுதிருந்து மீண்டுமெழுந் திறைஞ்சி யெந்தாய்
மருவுமிரு மூன்றின்மிசைப் பதினான்கு வயதளவும் வாழ்ந்தி ரிங்கே
பொருவருநற் கலைமுழுதும் பூரணமா யினவென்று புகன்றார் நல்லோ
ரருளுடனே யரசர்பிரா னணிநகரத் துட்கொணர்கென் றருளிச் செய்து. (உ௫௫)

சாகரநின் றேறலிற்று ராபீடன் றனைத்தாங்கத் தக்க தென்று
பாகருங் களியானைப் பாரக்கர் கோன்விடுத்த பவன வேகத்
தேகுகடு விசையிந்த்ரா யுதமென்னும் பேருடைய விவுளி யொன்று
மாகுமுனக் கெனவிடுத்தா னதுவுநெடுந் தலைவாயி லடைந்த தன்றே. ()

கொற்றமுடிக் குலவேந்தர் குமாரரொரு கோடிப்பேர் குழாங்கொண் டேகித்
தெற்றெனநின் சீர்பாத சேவையினில் விருப்பினராய்ச் சேர்ந்தா ரென்ன
மற்றவனு மிந்திரா யுதத்தினையுட் கொணர்மினென வாசி வல்லோர்
சுற்றுநெடுங் கயிறுகளுஞ் சூத்திரியுந் தொட்டுவரத் தோன்றிற் றன்றே. ()

அறக்கடிய விசைக்கிகலிக் கருடனையு மழைப்பதுபோ லனுமா னித்துச்
சிறப்பறிவ மெனவுச்சைச் சிரமாவை நோக்கிமிசைச் செல்வ தேபோ
லுறைத்துறமுன் னெழுந்தெழுந்தங் கதிவிதமும் படைத்தலினா லும்பர் கோனும்
பெறற்கரிய திதுவெனலா மினன்பரியொன் றிழிந்ததெனப் பிறங்கி யோங்கி. (உ௫அ)

மாலடிபோன் மூவுலகும் வாவுகைக்கு முந்துவதாய் வண்ண மேவுங்
கோலுசுழி வெஞ்சினமற் றொன்றிலொரு குறையிலாக் குணத்த தாகிச்
சாலவுயர்ந் துறநீண்ட தனுவினதாய்க் கடைந்தனைய தாளுந் தட்டுஞ்
சீலமுட னீண்டுகுவிந் தறநெய்த்த முகமுநிமிர் செவியு மாகி. (உ௫௯)

ஒப்புரைக்க நிகரில்லா வொருதெய்வப் புரவியினை யுற்று நோக்கி
மெய்ப்புவிக்கு ளொன்றினையும் வியவாதான் மற்றிதனை வியந்து சால
விப்படிக்கு மொருபுரவி யுண்டோதா னுலகுதனி லெந்தை யெங்கோன்
செப்பமுற்ற பெருந்திருவிற் கொப்பன்றே தேவர்பிரான் செல்வந் தானும். (உ௬௦)

என்றென்று பலகாலும் வியந்துவியந் திப்புரவி யிந்நாட் டுள்ள
தொன்றன்று கேவலமன் றென்றதனை மேற்கொள்ள வுசாவு நெஞ்ச
னின்றங்கு மிகக்கூசிச் சங்கியா நின்றிதொரு நெடுஞ்சா பத்தாற்
சென்றிந்த வடிவான தேவனே யாகுமெனச் சிந்தை செய்து. (உசுக)

சென்றணுகி யெத்தகைய பெரியோனென் றுனையறியேன் சிறியேன் செய்யா
நின்றபிழை யனைத்தினையு நீபெரியோய் பொறுத்தியென நெஞ்சால் வேண்ட
வன்றிறல்வா சியும்புரிந்து பார்த்துவலக் காலாலே மண்ணை வெட்டி
யின்றெனைநீ மேற்கொளென வழைப்பதுபோ லெழில்பெறவே யனுமா னித்து. ()

தலைசாய்த்து நிற்கவத னினைவறிந்து மேற்கொண்ட சந்த்ரா பீட
னிலைவாய்த்த புவனமொரு மூன்றினையுஞ் சிறிதிடமா நினைந்து கொண்டு
மலைசாய்த்த தலைவாயில் கடந்தளவி னெடுந்தாளால் வயங்கு நீலக்
குலம்வாய்த்த தடமாகி விண்முழுதும் வல்லையத்தின் குழாங்கொண் டோங்க. (உசுங)

இந்திரசா பத்துடனே யியைந்தகரும் புயல்போல விலங்கி யோங்கிப்
பந்திதரு வனபீலி சத்திநிரை யெத்திசையும் பரந்து தோன்ற
வுந்திதரு புவனமெலாஞ் செவிடுபட வனுமானித் துகளும் வேலை
தந்தநெடுந் திரையெனவே நிரைநிரையாய் வருபுரவித் தானை கண்டான்.

இக்குதிரைப் படைக்கடலு மிவனுதயங் கண்டிந்து வுதயத் தாலே
மிக்குவப்புற் றெழுகடல்போன் மிகவுகளித் தெதிர்நடந்த வேலை யந்தத்
தக்கபடைக் குலவேந்தர் குமாரரெலாஞ் சந்திரசா மரங்க ணீத்துப்
புக்கொருவர்க் கொருவர்விரைந் துறநெருங்கிப் புறப்பட்டெப் புறமுஞ் சூழ்ந்தார். ()

மன்னுபெரும் படைத்தலைவன் வலாககனம் மன்னர்குல மைந்தர் தம்மை
யின்னவனின் னவனிவனென் றியாவரையுந் தனித்தனிபே ரியம்பிக் காட்ட
வன்னவனு மடைவடைவே யவர்பணியக் கண்டவர்க ளவர்கட் கேற்ப
வின்னமுத மொழியாலும் விழியாலு முகத்தாலு மின்பஞ் செய்தான். ()

ஓரருகு வலாககனு மோரருகு வைசம்பா யனனும் போதச்
சீருடைய பெருந்திருவாழ் செழுந்தவள மூளரியெனச் சிறந்து தோன்றுந்
தாருடைய தொருபெருவெண் குடைநிழற்றத் தானைகள்சா மரைகள் வீச
வேருடைய மங்கலபா டகர்முதலோர் செயசெயவென் றென்று வாழ்த்த.

வடிவுடைய மதனனையு மொருமுகனை முருகனையும் வயினதேயக்
கொடியுடைய வொருவனையுங் கொண்டாடா வகைசிறந்த கோலத் தோடும்
படியுடைய விறைபுதல்வன் படைவீடு புகுதவொரு பார்க்கு வேறற்
றடிதொழுது விழிபுரிந்த வருந்தவமென் னெனமகிழ்ந்த வவனி யெல்லாம்.

வேறு.

மாடமு மாளிகையுஞ் சூளிகையு மண்டபமுங்
கூடமு மாடரங்கும் கோபுரமுஞ் செய்குன்று
நீடிய மேனிலமு நீள்வீ தியுமற்று
மேடவிழ்கொம் பன்ன ரிடமறமொய்த் தீண்டினர். (உசுசு)

எந்நிலமுஞ் சாளரங்க ளெல்லாந் திறந்துதிறந்
தன்ன மனையா ரகமகிழ்ந்து பார்த்ததவன்
றன்னழகு காணத் தருமாசை யாலந்தப்
பொன்னகரி கண்விழித்துப் பார்த்ததனைப் போன்றதே. (உஎ0)

கண்ணு டியிலுங் கலங்காத வாவியிலு
முண்ணு டியநிழல்போ லோங்கியசந்த் ராபீடன்
விண்ணுடர் தாமும் வியக்குந் திருமேனி
புண்ணுடு சொல்லா ருளந்தோறும் பற்றியதே. (உஎக)

ஏவிய கண்க ளிமையா தசையாத
வோவிய மென்ன வுணர்விழந்து நிற்பார்த
மாவியு நெஞ்சு மறிவு மடநாணு
நீவியு மீந்து நெறியலா மால்கொள்வார் (உஎஉ)

பூமன் படைத்ததுவோ வன்றிப் புதுவுருவங்
காமன் படைத்ததுவோ காணுமெனக் கண்களிப்பார்
தாமம் படைத்தவிவன் சந்திரா பீடனென்னு
நாமம் படைத்துவரு நாரணனே காணென்பார். (உஎங)

கற்பென்னும் பேய்பிடித்த காரிகையார் கண்மலர்கண்
முற்பண்ணும் பாவ முடிவில்லை யென்றுரைப்பார்
விற்பன்ன னாகாமல் வெந்த மதன்மீண்டு
முற்பன்ன னான வுருவே யிதுவென்பார். (உஎச)

தன்னருக னாகியவை சம்பா யனன்முகம்பார்த்
தின்னமுதச் சொல்லொன் றியம்பி நகையாட
வென்னைமுகம் பார்த்தா னெனவிதுவே பாராட்டிப்
பொன்னனையார் கொங்கை புளகமெழப் பூரிப்பார். (உஎரு)

கருணை பொழியுங் கமல விழிபாரீ
ரருண மதிபோலு மானன மும்பாரீர்
வருண வரைபோன் மணிமார்பம் பாரீர்
தருண வழகின் சமுதாயம் பாரீர். (உஎசா)

சேலை யழகுந் திருமருங்கும் பாரீர்பொன்
மாலை யழகு மணித்தோள் களும்பாரீர்
வேலை யழகுபெற வீசும் பரிபாரீர்
சோலை யழகுபெறத் தோன்றுங் குடைபாரீர். (உஎஎ)

என்று மொழிவா ரிவன்மார் புடன்கூட
நின்று தவம்புரியு நேரிழைதா னூரென்பா
ரன்றி யிவற்பயந்த வன்னைதான் முன்செய்த
துன்றுதவ மெப்படியே சொல்லுவது நாமென்பார். (உஎஅ)

ஏத்தி மடவார்க ளெல்லாரு மிப்படியே
பார்த்து விழியாற் பருகுவார் போலேயு
மார்த்த மணியார் வடத்தா லழகுபெறப்
பேர்த்து மவனைப் பிணிக்குமவர் போலேயும். (உஎசு)

ஏவுங் கயல்விழியா ரிப்படியே மொய்த்தீண்டிப்
பூவும் பொரியும் பொழிந்து பொழிந்தேத்தத்
தேவன் றனபாலன் றிண்புயம்போன் மண்காக்குங்
கோவும் பெரிய கொடிவீ தியைக்கடந்தான். (உஅ0)

வேறு.

மருவி யாமமுறை யாக நின்றுலவு மழைய ருதகரு மேசுமு
மருவி பாய்கரிய கிரியு மேயனைய யானை யின்றிரளு மாயறத்
திரளும் வார்கவிகை நிரையும் வேறுபல தேச மன்னவர்க டிறைகளும்
விரவு தூதுவரும் வெற்றி வீரரு மிடைந்த வாயிலை யடைந்தனன். (உஅக)

துரக ராசனை யிறங்கி யன்புடைய தோழ னோரருகு கைகொடுத்
துரிமை யோடுவர வேல்வ லாககனும் வந்து முன்செல நடந்துபோய்
வெருவ வீசிய பிரம்பு கைகொடு வெளுத்த கஞ்சுக மணிந்திரண்
டருகு கோடிபல வாயில் காவல ரமைந்த வாயில்க ளனேகமும். (உஅஉ)

சுதைத ருந்தவள வொளிப ரந்தற வுயர்ந்த துய்யகயி லாயமே
யிதுவெ னும்படி சிறந்த மேனிலைக ளெண்ணி லாதகொடு முடிகணற்
புதிய கைபுடைகண் மண்ட பத்திரள்கள் பொன்மு கப்புநிரை யின்முகத்
ததிக மானநவ ரத்ன வேதிகைக ளாட ரங்குக ளடங்கலும். (உஅங)

கான வண்டின நெருங்க மேவுமத கந்த மாதனம் விளங்கமீ
தான பேரொளி விதான முருவுதிரை யழகு பெற்றவிப கூடமும்
பானி லங்களில் விசேடம் யாவுமொரு பழுதி லாதெழுதி யறிகையா
ளுன புந்திகொ ளிலேக சேகர ரமர்ந்த மண்டப மடங்கலும். (உஅச)

ஆக விப்படி யனேக மானபல வற்பு தங்கள்பொலி வெய்திமெய்ப்
போக முற்றபுவ னத்ர யங்களுமொர் பூமி யிற்றிரள்வ தென்னவே
யோகை பெற்றதிரு மிக்க கோயிலிலொ ரேழு கட்டினையு முட்புகுந்
தேகி யுட்புக விடம்பெ றுவரசர் யாரை யும்புற நிறுத்தியே. (உஅரு)

நேச முற்றவர்கள் போத விட்டற நெருங்கி முன்புநிரை கொண்டநீ
ராச னத்திரள்கள் கண்டு கண்டுதிரு மேனி காவலர்க ளாகியே
வீசு கொற்றவடி வாளு மெய்க்கவச முந்த ரித்தவிறல் வீரருந்
தூசு பொற்கவரி யால வட்டமிவை சூழ வீசுமட மாதரும். (உஅசு)

சூழ நிற்கவரி யாச னத்திலொரு தூய வட்டவணை மீதுயர்ந்
தாழி பெற்றவயி ராவ தம்புன லழிந்த கங்கையின் மணற்குவை
தாழ்வ தொத்துவளர் கின்ற நன்றிபுனை தந்தை தாண்மலர் கண்டுகண்
வாழி எங்குரிசி றார நின்றுபல கால்வ ணங்கிவர மன்னனும். (உஅஎ)

வருக வெந்தைவர வருக வென்றுள மகிழ்ந்து மெய்புளகம் வரவணைத்
திருகை கொண்டுநெடு நேர மாகமணி மார்பு றத்தழுவி யிருகணின்
றுருகு பேருவகை நீர்த துமபவொளி முகம லர்ந்தருளி யுச்சிமோந்
தருள லோகபதி பாத பீடமத னருகு தன்னுடை யடைப்பையோன். ()

வேறு.

உத்தரி யத்தினை யாசன மாக மடித்திட வுற்றவனைக்
கைத்த விழிக்கடை கொண்டு முனிந்தொரு கால்விர லின்னுனியா
லெத்தி யொதுக்கி நிலத்தி லிருந்தன னிப்படி மைந்தனிலும்
புத்தி பணத்தகு மந்திரி சேயுமொர் பொற்றவி சுற்றனனே. (உஅகூ)

இப்படி யேயொரு நாழிகை நேர மிருந்தபின் மன்னர்பிரான்
கைப்படி வேலநின் னன்னைய ரோகைகள் கண்டு நடத்தியெனப்
பைப்படி மண்புகழ் மந்திரி சேயொடு பார்முதல் வன்புதல்வ
னப்படி கோயி லடைந்து தனைப்பெறு மன்னை திருந்தடிமேல். (உகூ0)

தாழ வணங்கி யெழுந்தபி னன்னை தனங்க டதும்பியபால்
வீழ நனைந்து குளிர்ந்தவ னுச்சியை மீளவு மீளவுமோந்
தேழு நிலங்களை யுந்தையு நீயு மிருந்து புரந்துசிறி
தூழி நெடும்பகல் வாழி யெனப்பரி வுற்றிறு கத்தழுவி. (உகூக)

மடியி லணைத்திரு தோள்களு மார்பமும் வானுத லும்புறமு
நெடிதுரு கிப்பல கால்பல காலதி நேய மிருந்துதைவந்
தடைவுடை வித்தைக ளாலென தையநின் னரியபொன் மேனியெலாம்
படுதுய ருக்குரு காதவ னெஞ்சு படைத்தன னெப்படியே. (உகூஉ)

இத்தனை காலமெல் லாமுழு துங்குறை வின்றிநல் வித்தைதரு
மத்தனை பேரு நெருக்கிய தெப்படி யைய பொறுத்தனைநீ
புத்திரர் பாலக ராய்விளை யாடல் புரிந்தொழு கும்மவையொன்
றுய்த்திலை யேயுன தையர் மனத்தினு முரவிய துன்மனமே. (உகூங)

என்று மொழிந்தன னேநெடு நேர மிருந்தவ ளிப்படியே
மன்ற னெடுந்தொடை மந்திரி சேயையு மைந்தனில் வாசியறத்
துன்றிய வன்பு மிகுந்து தழீஇயிவை சொல்லி யிருந்தனள்பின்
னொன்றிய மற்றுள வன்னையர் தம்மையு முளமகிழ் வித்தருளி. (உகூச)

வாயி லணைந்திந்தி ராயுத மென்னும் வயப்புர வியைமேற்கொண்
டாய பெரும்படை யும்புவி ராசரு மப்படி பின்செல்லப்
போயுய ருஞ்சுக நாத னிருந்தருள் பொன்மனை புக்கங்னே
நேய முடன்றிகழ் தாதை யெனும்படி நீடிய வன்பினனே. (உ௯௫)

கண்டு வணங்கி வணங்கி வரும்படி சுண்டெதிர் கொண்டுதழீஇக்
கொண்டிரு மைந்தரை யும்மிரு கைகொடு கூட வணைத்துருகிப்
பண்டு முயன்ற தவப்பய னின்று பலித்த தெனக்களிகூர்ந்
தெண்டிசை யும்புகழ் மந்திரி யாசன மெய்தி யிருந்தனனே. (உ௯௬)

இட்ட மணிக்கதி ராசன மொன்றி லிராது தலந்தனிலே
வட்ட மதிக்குடை மன்னவன் மைந்த னமர்ந்தபின் மன்னரெலாங்
கிட்ட மலர்த்தொடை மந்திரி சேயொடு கிளர்தவி சானவெலாம்
விட்டு நிலத்தி லிருந்தனர் பின்பு விளங்கு மமைச்சர்பிரான். (உ௯௭)

புந்தியி லோகை புறம்பு பொசிந்த தெனப்புள கங்கள்வரச்
சிந்தை மகிழ்ந்து குமாரனை நோக்கி யிருந்த திருந்தவரு
மெந்த நெடுங்கலை யுந்தலை கூடிய யௌவன மும்முடனீ
வந்தது கண்டன மேயிது போதுநம் வாழ்வு தனக்கினியே. (உ௯அ)

வேறு.

இன்றன்றோ தாரா பீட னெண்ணமு மிந்த வாழ்வா
லொன்றிய பயனும் பெற்றா னுவரிசூ ழுலக மெல்லா
மின்றன்றோ துயரந் தீர்ந்த திப்படி பிதாவு நீயு
நின்றுமே தினியை நாளு நிலைபெறக் காத்து வாழி. (உ௯௯)

எனப்பல வுவகை யாசி யியம்பியா பரண மாடை
நனைப்புது மாலை சாந்த நானநீர் நாவி யென்னு
மனைத்தினு மணிந்து போக்க வவன்மனைப் புகுந்து தேவி
தனைத்தொழு திருந்து மீண்டு தன்பரி மேற்கொண் டேகி. (௩௦௦)

கொற்றவேல் வேந்தன் வாழுங் கோயில்போ லமைக்கப் பட்டுத்
தற்றபூ ரணகும் பங்க டோரணந் துவசம் யாவுஞ்
செற்றியே சிறந்து பல்பூச் சிதறிமங் கலங்க ளெங்கு
முற்றவாத் தியங்க ளார்ப்ப வோங்குபுண் ணியாகஞ் செய்து. (௩௦௧)

பழுதிலா துயர்கு மார பவனமுட் புகுந்து சித்ர
மெழுதுபொன் மண்ட பத்தி லிருந்துபின் பரச ரோடு
முழுகினன் னியம மெல்லா முற்றிமற் றமுது செய்து
பொழுதுபோ மடைவி லேயப் பகலெலாம் பொழுது போக்கி. (௩௦௨)

இறைப்பரி யாய விந்த்ரா யுதந்தனக் கிலகும் பள்ளி
யறைக்கரு காகப் பந்தி யமைத்தபி னருக்கன் வானி
னிறைப்பகற் றிருவின் செங்கை நிலைபெறு மணிக்கண் ணுடி
யுறைப்புகு வதுபோன் மேலை வேலையி னுட்பு குந்தான். (௩௦௩)

குவிதரு கமலத் துள்ளே குலவெயி லொளித்த விப்போ
திவைதமை யருந்தல் வேண்டு மென்றிருட் சகலஞ் செல்லு
மவையென வரிவண் டெல்லா மந்தமா மலருட் சேரத்
தவலருங் கங்குல் யாமந் தான்றலைப் பட்ட தன்றே. (௩௦௪)

ஆயபோ தொளிருஞ் சோதி யனேகதீ பங்கள் சூழ
நாயகன் சந்த்ரா பீட னயந்துகா னடையே சென்று
தூயதன் றாதை பாதந் தொழுதுபோய்ப் பின்னை யன்னை
சேயதாள் வணங்கி மீண்டு திருப்பளி யறையிற் சேர்ந்து. (௩௦௫)

பள்ளிகொண் டுணர்ந்து வேட்டை யாங்குடன் காண வேண்டித்
தெள்ளிய நன்னூல் வேந்தன் றிருமனை சென்று வேந்த
னுள்ளிய பதாதி வீர ருடன்விடை வாங்கி மீண்டு
வெள்ளிய குடையோ னிந்த்ரா யுதத்தைமேற்கொண்ட போது (௩௦௬)

பொலியதட் சட்டை யிட்டுப் பொருவருங் கச்சை வீக்கி
வலிபெறக் கரிய நூலான் மயிர்முடி யெடுத்துக் கட்டிச்
சிலையுட னயில்க ளேந்திச் செறிந்தசங் கிலிநாய் பற்றிக்
கொலையயில் வேடர் முற்கோ லாகலஞ் செய்தே யோட. (௩௦௭)

கானகஞ் சென்று புக்குக் கடியவெங் கணைக ளாலே
யேனமுஞ் சிங்க வேறு மெட்டடி மானு மானு
மானவெம் புலியும் புல்வா யானது மனேக கோடி
வானமுஞ் செவிடாம்வண்ணம் வாய்விடக் கொன்றுவீழ்த்து. (௩௦௮)

தன்வலி மிகுதி யாலே தந்திகண் முதலா யுள்ள
மன்மலி மிருக மெல்லாம் வளைந்துயி ருடனே பற்றி
மின்வரு விறல்வேல் வேந்தர் வியப்புற வேட்டை யாடிப்
பொன்வரு கதிரோ னுச்சி பொருந்திய போது மீண்டு. (௩௦௯)

பெரும்படை வீர ரெல்லாம் பிற்படப் பிற்ப டாமல்
வரும்பரி விசையி னாலே வந்துகூ டியவேல் வேந்தர்
திருந்திய குமார ரேனோர் சிலருடன் வேட்டை தன்னிற்
பொருந்திய புதுமை யெல்லாம் புலப்படப் பேசிப் பேசி. (௩௧௦)

சென்றுமா ளிகையை நண்ணித் திறற்பரி யிறங்கி யுள்ளே
நின்றுகஞ் சுகமும் வாங்கி நிரைந்திரு பாலும் வீசுந்
துன்றிய வால வட்டந் துரந்தமா ருதத்தி னாலே
யொன்றிய விளைப்பு மாறி யுத்தம நன்னீ ராடி. (௩௧௧)

ஈரமு மாற்றி யாடை யிரண்டுடுத் தடுத்த வங்கி
காரிய முற்றி யுச்சிக் கடன்கழித் தங்கு நின்று
ஏரிய வங்க ராக பூமியிற் செல்லத் தந்தை
வாரிய ருடனே கூட்டி வரவிடு மடந்தை மாரும். (௩௧௨)

மன்னிய திருவி லாச வதிவிடு சேடி மாரு
மன்னையர் பலரும் விட்ட வவர்களு மடைவே வந்து
பொன்னணி கலன்க ளாடை பூந்தொடை யங்க ராக
மென்னுமிவ் வனைய வெல்லா மிறைவன்முன் வைத்துநின்றார். (௩௧௩)

அண்ணலு மவற்றைத் தானு மணிந்துதன் கையி னாலே
நண்ணிய தோழ னுக்கு நலம்பெற வலங்கா ரஞ்செய்
தெண்ணிய குமரர்க் கெல்லா மீந்துநா லாய்ந்த நல்லோர்
நண்ணிய கடிகை கூற நகருமண் டபத்தை யெய்தி. (௩௧௪)

தன்பெருந் தோழ னோடுந் தகைமைசேர் குமர ரோடு
மன்புட னருந்தும் வேலை யவரவர்க் கருளி னாலே
யின்புறு முபசா ரத்தா லிதம்பெற மகிழ்வித் தார்ந்து
பின்புசெங் கையும் பூசிப் பெயர்ந்துதாம் பூலம் வாங்கி. (௩௧௫)

சற்றங்ங னின்று போந்திந் திராயுதந் தன்பால் வந்து
வெற்றியங் கரங்க ளாலே விரும்பிய புல்லு மீந்தங்
கற்றைநன் பகலும் போக்கி யரசன்மா ளிகையி லேகி
யுற்றடி பணிந்து மீண்டு விழிதுயின் றொழித்தான் கங்குல். (௩௧௬)

விரவுசெங் கதிரோன் றோன்ற மேதகு நியம முற்றித்
தரவியல் சந்த்ரா பீடன் றனினி திருந்த வெல்லை
புரவலர் கோமா னந்தப் புரந்தனக் குரிய னனை
வரமிகு கயிலா யன்பின் வருமொரு திருவே யென்ன. (௩௧௭)

தங்கிய பெதும்பை யான தன்மைபோய் மேன்மை யான
மங்கையம் பருவ மெய்தி வனசமா முகையே போலக்
கொங்கைக ளளவே தோன்றக் கொற்றவன் கோயி னீதி
யங்கது தன்னு லெல்லா மளவிட வறிவா ளோர்மின். (௩௧அ)

அரியமென் றென்றல் வீச வசைந்தசைந் தழகு செய்யு
மொருசெழுங் கொடிபோன் மெல்ல வொசிந்தொசிந் தொல்கி யொல்கி
வரவருந் திருவின் முன்னே வருங்கயி லாய னந்தப்
புரவலன் றன்னைக் கண்டு பொற்பதம் வணங்கி நின்று. (௩௧௯)

உரியபார் புரக்கு மெங்கோ னொருபெருந் தேவி யாகுந்
திருவிலா சவதி யொன்று திருவுள மாகு ரிவ்வா
றருளினு லதனைக் கேண்மி னரசர்கோன் றரா பீடன்
மருவலான் குலூத ராசன் வளநகர் கொண்ட நாளில். (௩௨0)

அகப்படு சிறைக ளந்தப் புரத்தவர்க் களிக்கும் போதென்
வகைப்படு சிறையு ளந்த மன்னவுன் மகளா மிந்தத்
தகைப்படு பத்ர லேகை தனிப்பது யான்கண் டேனென்.
மகப்பெரு வேட்கை யாலே வளர்த்தனன் மகளே யாக. (கூஉக)

இங்கிவ ளடையு மின்ப மியம்பரி தாகை யாலே
நங்குல மைந்தர்க் குள்ளாய் நம்புத லுக்குர் தக்கர்ள்
சங்கைக ளறவே தாம்பூ லந்தரத் தகுமென் றெண்ணி
யங்குற விடுத்தேன் ரூமு மவடிறத் தன்பு பூண்டு. (கூஉஉ)

சேவைகொள் ளுகவென் றின்ன செப்பினு ரென்ன வன்னே
யாவதொன் றருளிச் செய்தா ரன்னதே செய்வ னென்று
மேவுகஞ் சுகிக்கு நல்லோன் விடைகொடுத் தருள மின்னுந்
தாவிலன் புடனே சென்று தடையற வணங்கி நின்ருள். (கூஉகூ)

அப்பொழு தேதொ டங்கி யவளுமிவ் வரசன் சேவை
யெப்பகற் போது மல்லு மிதவிய சாயை போல
வொப்பருஞ் சேவை தன்னு லோரடி நீங்கா ளாகி
யெப்பொரு டனக்கு முள்ளா யிதயமு முயிரு மொத்தாள். (கூஉச)

இப்படி சிலநாட் சென்ற வெல்லையி லினிய சேய்க்குப்
பைப்படி யுலகங் காக்கும் படியுவ ராச னென்றே
யப்படி யபிடே கஞ்செய் தருளுதற் கமைச்ச னோடும்
வைப்படி வேலோ னெண்ணி வந்தநா ளிடையோர் நாளில்.. (கூஉரு)

வேறு.

தலையவிழ் மாலைச் சந்திரா பீட னமைச்சர்கோன் றன்மனைச் செல்ல
விளவர சரிமைக் குரியனு மிவனுக் கினியுப தேசநாஞ் செய்யு
மளவிதென் றெண்ணி யருட்சுக நாத னவன்முக நோக்கிவே லரவோ
யுளதுரை செய்வ தவ்வுரை யெலலா முவந்துநீ கேளென வுரைப்பான். ()

அறிவென வெல்லா மறிந்துநூ லனைத்து மாய்ந்தவற் றடைவிலே யொழுகிப்
பிறிதொரு நெறியி லேகலா வுனக்குப் பேசுவ தொன்றுநா னில்லை
சிறிதினி யொன்றுண் டாகிலு மின்பச் செவ்வியாம் யௌவனத் தெவர்க்கு
மறுவறு சுடர்க ளாலகற் றொண்ணு வலியதா மதவிருண் மூடும். (கூஉள)

திருவினு மதங்கண் மூப்பினுந் தணியா செல்வமா கியவிருட் படல
மொருவரான் மருந்தா லொன்றினுற் பதியா துக்கமா மதனினும் வெம்மை
விரவினர் செய்யுங் குளிர்ச்சியிற் சமியா விடயமா கியவிட மோகம்
வரமரு மூல மந்திரத் தகலா மரபினு லுரைசெய்வேன் வேண்டும். (கூஉஅ)

தோன்றுநா டொடங்கி யிடைவிடாக் கெற்ப சுகம்புதி தாகிய விளமை
பேன்றபே ரழகு நிகரிலா வலிமற் றிவையெலாஞ் சேரவோ ரிடத்தி
லூன்றமேற் றோன்று மொழுக்கருந் தீமை யுரைக்கவுந் தக்கதோ வவற்றி
லான்றவோ ரொன்றே போதுமே தினியி லாடவர்க் கனர்த்தகா ரணமே.

பளிங்கிலே வீழ்ந்த சந்திர கிரணம் பற்றுவ போலவே முற்றுங்
களிம்பிலா நெஞ்சிற் குருவுப தேசங் கடுகவே பற்றிநின் றொளிரு
மிளிர்ந்தபூண் மார்ப நின்னையே யன்ன மிகுதியோர் தகுதிநெஞ் சல்லா
விளிம்பரா னவர்கள் களங்கமா நெஞ்சிற் கேற்குமோ விந்தவாய் மைகளே.

நீயிதன் முன்னம் விடயமோ கத்தி னேர்ந்தனை யில்லையா கையினு
லேயிது கால முனக்குப தேச மியம்புதற் கிந்தமோ கத்தி
லாயவர்க் குரைக்கி லவ்வுப தேச மவர்மனத் தற்பமுந் தேஙகா
மாயமன் மதனற் சாயகந் துளைத்த வழிகளா லொழுகிவீழ்ந் துவிடும். ()

நல்லுப தேசஞ் செய்யுநல் லோரை நாடிலெங் கேனுமோ ரொருவ
ரல்லவ ரஞ்சி நின்றெதி ரொலிபோ லரசர்தா முரைத்ததே யுரைப்பர்
சொல்லிய பொழுதே யதனையுட் கொள்ளுந் தூயவ ருஞ்சிலர் கண்டாய்
மல்லுயர் தோளாய் மற்றுளார் கேளார் கேட்பினு மதத்தினுன் மறப்பர். ()

திருமக ளென்றென் றுலகுளோ ரெல்லாஞ் சிறப்புடன் வியந்துபா ராட்டும்
பரிசய மறியா தவள்குண வேற்றுப் பன்மைதா னெப்படிப் பகர்வே
னரிதவ ளணையப் பெறவுமப் படியே யரியன தவத்தினுற் பெறினுங்
கருமுகி லனையா யரிதுபோ காமற் காக்கவுங் காக்குமாறெளிதோ.(கூகூகூ)

பரிசய மறியாள் மரபினை யோராள் பழுதிலா வொழுக்கமும் பாராள்
வரிசையை நினையாள் கல்வியை நாடாண் மருவிய மானமுட் கொள்ளாள்
பெருகிய வண்மை தன்னையு மெண்ணுள் பெரியமா தவத்தையா தரியாள்
பொருவற விசும்பிற் றோன்றிடு மின்போற் புகலறக் கடிதுபோய் மறையும்.

பெருமையு முயாவுந் தகுதியு நலனும் பலவொடு பிறவுமற் றெல்லாந்
தருமிவ ளெனினு மிவளைநாம் வியக்கத் தருமதோ விருளிரிந் தோட
வொருசுடர்க் கொழுந்து விட்டுவிட் டெரிய மையையே யுமிழுமா போலத்
திருவெனு மிவளு நிற்கநிற் கவெறுந் தீயொழுக் கங்களே விளைக்கும். ()

மின்மினி யொளிபோற் சிறிதுபோ தற்பம் விளங்குறு செல்வமெய் யென்று
தன்மையு மறந்து மனமுமிந் தியமுந் தாமொரு கோடியுள் ளவர்போ
லுன்மத ராகி யொருவழிப் படாம லோங்குபே ராசையிற் படர்ந்து
வன்மையு மறமு மிகுந்துகண் டறியா வாழ்வினுன் மயங்குவார் சிலர்கள்.

பூதமும் பசாசும் வந்தமுக் கியவர் போனகை செய்வதே செய்வர்
சாதல்வந் தணுகி யவரென மயங்கிச் சதமுக விகாரமே விளைப்பர்
வாதம்வந் தடைசி வயிறூளந் தவர்போல் வலத்திலு மிடத்திலும் புரிவர்
தீதுறும்படிக்குத்துண் டவர்போலத்தியங்கியோய்ந்துடல்சுழன் றிருப்பர். ()

முடவர்போல் வேறு சிலர்களா னடப்பர் முதுமுக வாதமுள் ளவர்போன்
மிடைபடா நடுங்கி யோரொரு வார்த்தை மிகுவருத் தத்தினோ டுரைப்ப
ரடையவே பத்தா மவத்தையுற் றவர்போ லருகிருந் தவரையு மறியா
ருடையநோய் கண்ணி னுள்ளவர் போல வொளியுடை யவர்களைப் பாரார்.

தங்கள்கா ரியமே முடித்திடு கைக்குச் சமத்தரா கியசில கயவ
ரெங்கணு யகனே யென்றுநின் றேத்தி யிவரிவ ரிதத்திலே யொழுகிப்
பங்கமாஞ் சூதை வினோதமே யென்றும் பானமே சுகமென வுரைத்து
மங்குநா ணறமே பிறர்மனைச் சேற லானதே யுலாத்தென மொழிந்தும். ()

தாங்களு முள்ளே சிரித்துநின் றவர்க்குத் தகாதன சொல்லியே துதிப்ப
ராங்கவை யெல்லா மெய்யெனக் கருதி யருநிதிச் செருக்கினன் மயங்கி
யீங்கனல் விழியி லீசனே யென்று மிருபுய முகுந்தனே யென்றுந்
தேங்கம லத்தி லிராவப னென்றுஞ் சிந்தையாற் றம்மையுட் கொண்டு. ()

கடவுளா னவரை யுட்பட வணங்கார் காணினுங் குரவரைப் பேணு
ரடைவுளார் சிலரை யறிந்துகொண் டாடா ரந்தணர் பூசையுஞ் செய்யார்
முடிவிலா வறிஞர் தம்மையே யிகழ்வர் மூத்தவர் மொழிகளுங் கேளார்
படியுறு லமைச்சர் வார்த்தைகேட் குமது பரிபவ மாகவே நினைவர். (௩௪௧)

இராப்பக லினனே சிறிதிடை விடாம லிருந்திதம் பேசிவா விகளிற்
பராக்கற விருந்து தூங்குகொக் கன்ன பண்பிலா தவர்களே யவர்க்குப்
பிராத்தரா னவரு மமைச்சரு மொன்றிற் பேதமி லுழன்மா ரதாமும்
விராய்க்கொள்பே ருறவு மவரவர் தமக்கே வேந்தர்தாம் வேண்டுவ தளிப்பார். (௩௪௨)

சுந்தரா புரிவா ழமரர்கோன் றேவன் றாயநெஞ் சனையநின் னெஞ்ச
மெந்தரா சதம்வந் தெதிர்ப்பினுங் கலங்கா தென்னும தாரறி யாதா
ரந்தவா றமைந்த தாகினு மிந்த வழகுமிவ் விளமையும் வலியும்
வந்தடர் செலவு மிசைபெருஞ் செருக்கு மாற்றொணு ததனைநீ மாற்றி. ()

மிகமிக வருந்தி யாகினு மிந்த மேதினி தீதுரை யாம
றகைமிகு முதிய குரவர்நிந் தியாமற் சதிரரா னவர்க்ககப் படாம
லகமகிழ் தோழன் மாரிக ழாம லாசைக டம்வசத் திழாம
றிகழ்தரு நல்லோர் தாமக லாம றீயவர் தாமணு காமல். (௩௪௪)

மஞ்சுசேர் குழலார் மிகவணு காமல் வாழ்வினன் மதிமயங் காமற்
செஞ்சொல்வாழ் தெய்வ மாதுகை விடாமற் செருக்குளந் தனைக்கல வாமல்
விஞ்சுநூ லமைச்சர் மொழிகளை மறாமல் விடயமா னவைநலி யாம
னெஞ்சுதா னேடி வரைகட வாம னீதிநூ லடைவிலே யொழுகி. (௩௪௫)

மனமகிழ் ழுந்தை தருமபி டேக மங்கல மதனையும் பெற்றுன்
னினமிகு குரவர் வழிவழி யாக வேந்துபூ பாரமுந் தாங்கிக்
கனைகழல் பணியா தவர்களை வணக்கிக் கண்டுவாழ் பவர்களை யுயர்த்திப்
புனைகதிர் முடியா யுந்தையே போலப் புகழுடன் வாழ்ந்திரு நீயே. (௩௪௬)

எனச்சுக நாத னியம்பிய மொழியி னியல்பினுற் சந்திரா பீடன்
மன்த்திருள் கழுவித் துடைத்ததே போல மாசற விளங்கிநித் திரைகொண்
டனைத்தையு மறந்தோர் விழித்துணர் வுடையோரானது போலவே முழுது
நினைத்தவ னருகே சிறிதுபோ திருந்து நீடுதன் மாளிகை சேர்ந்தான். ()

மற்றைநாட் சிறுகாற் சந்திரா பீடன் மன்னர்கோன் மலரடி வணங்கி
யிற்றைநா டிக்கு விசயமேற் செல்ல வெனக்குநீ விடையருளென்ன
வுற்றபே ரன்பா லவன்முக நோக்கி யுனக்கபி டேகமுஞ் செய்த
வற்றைநாண் முகுத்த மாக்நீ செல்வ தடைவென வப்பொழு துரைத்து.()

வேறு.

பின்பு நல்லதொரு நாளின் மன்னவர் பிரான மைச்சரொடு பேணியே
யன்பி னுலுரிய வந்த ணுளரபி டேக மங்கல சடங்கெலா
முன்பி னூலின்முறை செய்ய வாசிபல முனிவர் கூறமுடி மன்னர்தா
மின்ப வாய்மைகண் மொழிந்து சூழ்தர விருந்த வுத்தம குமாரனை.(௩௪௯)

தடங்க ளாறுகள் சமுத்தி ரங்களிவை தம்மின் மற்றுள தலங்களிற்
கொடந்து* பன்மணிக ளவுட தங்களொடு கூட வேகிறை குடங்கடன்
னிடங்கொள் செங்கையி லெடுத்து மந்த்ரபுனி தங்க ளாயிருக ணுவகைநீ
ருடன்க லந்தபுன லால்வி ளங்கவபி டேக மோகையொடு செய்தனன். ()

ஆன வப்பொழுது தன்னி லோர்கொடி யடுத்து முன்படர் மரத்தையுந
தான ணைத்ததை விடாது வேறுமொரு தருவி லும்படரு மாறுபோன்
மான மெய்த்திரு மடந்தை மன்னனை விடாம லேயவன் மைந்தனு
மூன மற்றவடி வேன்ம கிபனையு முற்ற வோகையொடு பற்றினள். (௩௫௧)

பின்னர் மன்னனுயர் தேவி மார்களொடு பேதை மாதர்பலர் சூழவே
யன்ன மென்னவரு வாள்வி லாசவதி யகம கிழ்ந்திரு கரங்களான்
மின்ன மின்னவணி சந்து மெய்முழுதும் வெண்ணி லாவினை விரிப்பவே
வன்ன வன்மைமது மாலை சூழுமணி மகுட நின்றொளி வயங்கவே. (௩௫௨)

மாச றப்புதிய நிலவு போலுமொரு மடியு டுத்தருண் மருவுகோ
ரோச னைக்குண்முழு கிச்சி வந்தவறு கொன்று கன்னமல ராகவே
தேசு பெற்றிலகு காப்ப ணிந்துதிகழ் செங்கை வாளொடு சிறக்கவண்
டாசை யுற்றுமுரல் செவ்வி மாலைநிரை யாக மெங்கணும் விளங்கவே. ()

பரிபு ராதியறு பத்து நாலுபணி யும்பெ ரும்ப்ரபை பரப்பவே
பொருவி லுதையெனு மன்னர் மன்னனெரு பொற்பி ரம்புகொடு முன்புகின்
றருகு லாவரு நெருக்கொ ழித்துவர வம்பொன் மண்டப மணைந்திளங்
குரிசில் சிங்கமணி யாச னத்தின்மிசை கோல மாலென விருந்தனன். ()

* கொண்டுவந்து என்பது, 'கொடந்து' என மருவிற்று.

இருக்க வப்பொழுது மன்னர் யாவரு மிறைஞ்சி நின்றனரவ் வளவிலே
பெருக்க மந்தர மலைத்த வேலையொலி யென்ன வும்ப்ரளய காலநின்
றுருத்த மேகயொலி யெனவு மாமுரச முற்ற திக்குவிச யத்தின்மேல்
வரித்த நன்செல வுரைத்து நின்றதிர மண்ணும் வானமு மதிர்ந்தவே. ()

அந்த நீடொலி பரந்தெ ழுக்குரிசி லவனி பாலர்செய செயவெனத்
தந்த வோசையு மிகுந்தெ ழுத்தனது தாடொ ழாதமுடி யரசர்பான்
முந்தி வாழ்திரு மடந்தை தானெழ முகஞ்சு ளிந்தவர்க டேவிமா
ரிந்த்ர நீலநய னங்க ணீரெழ விருந்த வாசன மெழுந்தனன் (௩௫௬)

வேறு

ஒருவர்க் கொருவர் நெருக்கத்தா லுற்ற வடங்க ளற்றுதிருந்
தாளத் திரளைப் பயணமெழுந் தற்கா லத்தின் மங்கலமாம்
பொரியிற் சிதறி மன்னரெலாம் புடைசூழ் போத வெண்முலைகயைப்
பரவிப் பெயருங் கற்பகஞ்சூழ் பாரி சாத மெனநடந்தான். (௩௫௭)

நாமந் தருபத் திரலேகை நலஞ்சேர் பின்னு சனத்திருப்பச்
சேமம் பலவுங் கொண்டொருவன் செலுத்தும் பிடியின் மீதேறி
மாமந் தரபூ தரஞ்சுழலவ் வட்ட மான பாற்கடல்போ
லேமந் தருவெண் குடைநிழற்ற விராச தானி யெயில்கடந்தான். (௩௫௮)

பைம்பொன் முடியின் பின்பாகப் பரக்கும் ப்ரதாப வொளியெனவு
நம்பி யெதிர்கொண் டெழுந்தருள நானு லோகத் திருமகள்காற்
செம்பஞ் சொளிகி யெண்டிசையுஞ் சேர்ந்த தெனவும் பார்த்திபர்த
மம்பொன் முடியின் மணிவெயிலா லறவே சிவந்த தாதபமே. (௩௫௯)

ஒன்றுக் கொன்று மிடைந்துமிடைந் துயர்வெண் கவிகைத் திரணெரிய
நின்றுற் றிறைஞ்சு நெருக்கத்தா னிரைமா முடியின் மணிசிதற
வென்றிச் சேனு பதிநாமம் விளம்பி விளம்பி முன்காட்டச்
சென்றிப் படியே யெம்மருங்குந் திறல்மன் னவர்சே வித்துவர. (௩௬0)

தக்க ராக சிந்துரத்தாற் றரளத் தொடையான் மாலைகளான்
மிக்க சோதி பிறவணிந்த வெங்கைக் கந்த மாதனந்தான்
செக்கர் மாலைச் சேயொளியுந் திகழுந் தாரா சக்கரமு
மொக்க மேவி யொளிர்மேரு வோங்க லெனவே பின்போத. (௩௬௧)

இந்த்ரா யுதமாம் வாம்புரவி யெல்லா வணியு மணிந்துவிறல்
விந்தா லயமா னளித்தருளும் வெற்றிக் கொடிபோன் முன்செல்லச்
சந்த்ரா பீடன் றனேறுந் தாமப் படியைத் தாள்விரலா
லுந்தா மகவான் றன்றிசையை நோக்கி நடந்தா னப்பொழுதே. (௩௬௨)

ஓடு மதமா னிரையலேக்க யசையுங் கவிகை யொருகோடி
நீடு படைதா னெண்ணவொண்ணு நிறைமா மதியின் பதிவிம்பங்
கூடி யெழுபே ரலேயெங்குங் குலவு முகாந்தக் கடல்போல
வாடல் பெறவே மண்முழுது மடைவே பரந்து சென்றதுவே. (௩௬௩)

இவ்வா றரசன் செல்வதுகேட் டில்லத் திருந்த மந்திரிசே
யவ்வா றினிதா மங்கலமா மலங்க லணிந்து புறம்போந்து
மொய்வார் மதிவெண் குடைநிழற்ற முடிமன் னவர்கள் புடைசூழச்
செவ்வா தபனைச் சேர்மதிபோற் சென்றே யுவரா சனையடைந்தான். (௩௬௪)

நானு விதமாம் பெருஞ்சேனை நடக்குந் துழனி யதனுலு
மானு தடரும் பரிவெள்ள மார்க்கு மனுமா னிப்பாலுங்
கானு ருவிக் கடயானைக் கணங்கள் பிளிறு முழக்காலுஞ்
சேனு சமுகத் தொலியாலுஞ் செவிடாய் மோகித் ததுபூமி. (௩௬௫)

வளையார் கலிபோற் பெரும்படையால் வண்ணம் பலவா யத்தூளி
விளையா டினர்போல் விழிபுதைத்து மிகநீர் வேட்கை யுற்றவர்போற்
களியா னைகளின் மதசலமுங் கரசீ கரமு மிகப்பருகி
யிளையா தமரில் வென்றவர்போ லெழிலார் கொடிகள் பிடித்தெழுந்து. ()

வெற்றித் திருமா தெறிந்தெறிந்து விளையா டியபொற் சுண்ணம்போற்
சுற்றிப் பரந்து கார்காலந் தோன்றும் புயல்போ லெம்மருங்குஞ்
செற்றிக் கவிழ்ந்து திரிபுவனத் திருவின் முட்டாக் கெனவெங்கு
முற்றித் திருமா றிருவடிபோன் முதன்மூ வுலகுங் கொண்டதுவே. (௩௬௭)

ஆன பொழுது பரிநிரைவாய் விலாழி யாலு மடல்கரியின்
கான மததா ரைகளாலுங் கரசீ கரத்தின் பெருக்காலு
மேனை யெழுவேர் வுகளாலு மிவ்வா றெழுந்த துகளடங்கிப்
போன திசையும் வெளியாகிப் புலர்ந்து தோன்றிற் றப்பொழுது. (௩௬அ)

அளவு படாத விப்படைகண் டறவே களிகூர்ந் ததிசயித்து
வளமை விடாத மந்திரிசேய் மன்னன் குமாரன் முகநோக்கி
யிளம தயானை யரசேகே ளெங்கோன் றுரா பீடனெனுங்
குளிர்ம திமாலே வெண்குடையான் கொள்ளா வுலகுஞ் சிலவுண்டோ. ()

திக்கு விசயங் காரணமாய்ச் செல்லு மளவி லுன்னைமுகம்
புக்கு வணங்கா மன்னவரும் போற்றித் துதியா மன்னவருந்
தக்க கவரி பொற்பிரம்பு தரியா மன்ன வருமுளரோ
வெக்கு வலய மெதிராக யாம்போ கின்ற திப்பொழுதே. (௩௭௦)

என்றென் றினைய பலபேசி யேகும் பொழுதி லிளங்கோவுஞ்
சென்றங் குயரும் படங்குகளாற் சேணுர் தருப்பை மாலைகளா
னின்றம் பரமே னிமிர்வேலி நிறைய நானு விதமாக
வொன்றும் புதுமை பலவுடைத்தா யோங்கு மொருபா சறையடைந்தான். (௩௭௧)

அற்றை நியம முடித்தருந்தி யனேகங் கதையாற் பகற்போக்கிப்
பெற்ற வரையு மமைச்சனையும் பிரியான் பிரிந்த சோகத்தான்
மற்றை யவர்கள் வார்த்தைகளே மறித்து மறித்து மிருபாலு
மூற்ற வுயிர்போ லுறையுமிவர்க் குரைத்தே துயிலா திராவொழித்தான். (கஎஉ)

இந்த வடைவே நாடோறு மெழுந்த படைகேட் டெதிரெதிரே
வந்து வளரும் பெரும்படையான் மண்ணை நெரித்து மலையலைத்து
முந்து நதிகள் வற்றுவித்து மோடை யடைய வுடைப்பித்து
மெந்த வனமும் பொடிசெய்து மெல்லா வரணு மிடிப்பித்தும். (கஎக)

வணங்கா தவரைத் தாழ்வித்தும் வணங்கி யவரை வாழ்வித்து
மணங்கா லஞ்சி நின்றவரை யஞ்சே லென்றென் றருள்புரிந்து
மிணங்கா வபய மென்றவரை யீடேற் றியும்வந் தெதிர்ந்தாரைப்
பிணங்கா முடியைவேருடனேபிடுங்கியெறிந்தும்பிழைபொறுத்தும். (கஎச)

கூடா வரசர் முடிபறித்துங் குமாரர் பலரை முடிவைத்துந்
தேடா நிதிகள் சேகரித்துந் தேச நீதி நிலையிட்டும்
பாடா வரசர் பாவலராய்ப் பாடும் பரணி பலகேட்டு
நாடா னவைக ளெவற்றுந்தன் னாமத் தம்ப நடுவித்தும். (கஎரு)

மறையோர் முனிவர் வானவர்கண் மகிழும் படியே தாபித்துந்
திறையோர் கொணருந் திறைகண்டுஞ் சேனை பராக மிகவளர்த்துங்
குறையோ தரிய மேம்பாடு கொற்றம் பெருமை வெற்றிநெடும்
பொறையோ டினையகுணமுழுதும் புவிகடோறும்பொலிவித்தும். (கஎசு)

மேலைக் கரைசூழ் புவனமெல்லா மிதித்து நெரித்தும் வேலையெல்லாஞ்
சாலப் புழுதி புடைப்பித்துந் தானிப் படியே மூவாண்டிற்
கோலப் பரிதிக் கீழ்த்திசையுந் தெற்குத் திசையுங் குடதிசையு
மாலைக் குபேரன் வடதிசையும் வளைய வடைவே வலம்வந்து. (கஎஎ)

எல்லைக் கடல்சூழ் பூவலய மெல்லாம் வென்று தன்னாணை
செல்லச் செல்லு மிவன்வடகீழ்த் திசையிற் சென்று கயிலாயத்
தொல்லைக் கிரியி னருகாகத் துளவோன் றுணையாம் பார்த்தனுக்கும்
வெல்லற் கரிதா யிருந்தவிறல் வேட ரேம சடரென்போர். (கஎஅ)

வாழுங் கீழ்பாற் கடலருகே வயங்குஞ் சொன்ன புரந்தனையுஞ்
சூழும் படையால் வென்றதிலே தொன்னீ ருலகைச் சூழ்போந்து
தாழும் படியே மிகவிளைத்த தன்சே னையெலா மிளைப்பாறக்
கேழொன் றியசெஞ் சுடர்முடியான் கிளரா சனத்தில் வீற்றிருந்தான். ()

வேறு.

அங்கொருநாட் டனதுபரி மேற்கொண்டு வேட்டைபோ யரிய கான
மெங்குமுலா வருமளவி னிணைவறவோர் வரைமுடிநின் றிழிந்து மண்மேற்
றங்கியகின் னரமிதுனங் கண்டிதுமுன் கண்டறியாச் சந்த்ரா பீட
னிங்கிதன்மே லிந்திரா யுதத்தைநெடு விசைபெறவே யேவிச் சென்றான். ()

ஆங்கதுவு மனிதரைமுன் கண்டறியா தாகையினு லஞ்சி யோடத்
தாங்கரிய பரிவிசையாற் றுனேயெலாம் பிற்படுத்தித் தானே தானு
மீங்கிதுகைக் கெட்டுமினி யெட்டுமென வதன்பின்னே சிறிது போதிற்
பாங்குடனஞ் சியோசனைசென் றிடவதுவோர் வரைமுடிமேற் பாய்ந்த தன்றே. ()

பரிக்கங்கு நிலமல்ல வாகையினு லதினளவிற் பார்வை விட்டுத்
தரித்தென்ன காரியநாஞ் செய்தோமென் றறவெள்கித் தன்னைத் தானே
சிரித்தந்த வழிமீளச் சருகடர்ந்து தெரியாமற் சென்று வெய்யோ
னெரிச்சிந்து கதிர்களினுற் கனமாவுந் தானுமிக விளைத்துநின்றுன். (௩அ௨)

தோன்றியது கயிலாய மிதன்றெற்கே சொன்னபுரந் தூரப் போந்தோ
மான்றபெரும் பரிதாப மாறினு லல்லதுபோக் கரிது தெண்ணீ
ரூன்றுமிட முண்டோவென் றுளாவியிபம் பன்றிகடா வுதறுஞ் சேறு
தேன்றிகழ்தா மரைபாசி சிதறியதோர் சிறுநெறியைச் சென்று கண்டான். (௩அ௩)

அடையாள மிவையிற்று லண்ணிதினித் தெண்ணீரென் றறிந்து நெஞ்சின்
மிடையாற்றிச் சிறிதெதிரே சென்றளவிற் கயிலாய வெற்பின் மேற்கே
கடைகால மழைமேகங் கவிந்ததுபோ லொருசோலை கருகித் தோன்ற
நடையாறி யவன்மெல்ல மெல்லவது தனைநோக்கி நடக்கும் போது. ()

குலமலரிற் பரிமளமும் பரிமளநீர்த் திவலைகளுங் கொண்டு தெண்ணீ
ரலைதருகா லெதிரெதிர்வந் தன்புடையார் போற்றமுழுவி யாற்ற வாற்ற
மலர்கமல மதுநுகர்ந்து மனங்களித்த வோதிமங்கள் வாவா விங்கே
சலமுளதென் றழைப்பவர்போ லார்த்தெழவக் குரல்வழிபோய்ச் சார்ந்த போது. ()

அக்காவி னடுவாக வரியவன தெய்வதைக்கென் றயனுர் செய்த
திக்கான நிலாமுற்றம் போன்றுமெழிற் றிரிபுவனத் திருவின் சீர்பார்க்
கைக்கான கண்ணுடி போன்றுமுயர் கயிலாய முருகிக் கால்கொண்
டிக்காவி னின்றதுபோன் றுங்கடலே மூழ்பிறந்த விடமே போன்றும். ()

தவமுனிவ ருளம்போன் றுஞ் சான்றோர்தங் குணம்போன்றுந் தட்பமெய்தி
யுவமையிலா வகைதெளிந்து வண்டானம் வண்டினமோ திமங்க ரண்ட
மிவையிவையான் மிகவிளங்கி வனசமலர் குமுதமல ரிந்த்ர நீலம்
புவனமட மகளிர்வத னமுமிதழும் விழியுமெனப் பொலிந்து தோன்ற. ()

நாரணனுந் திருமாது நான்முகனுங் கலைமாது நான்ம ருப்பு
வாரணவூர் தியுஞ்சசியு மிருநான்கு வசுக்களுமேல் வருமீ ராறு
சீரணியுந் தினகரரு மருத்துவரு மொருபதினேர் சேவி லேறுங்
காரணரு மோரேழு முனிவர்களுந் திக்காளுங் கடவு ளோரும். (௩அஅ)

ஆனைமுகக் கணபதியுந் திறல்வேளு மம்புலியு மனங்க வேளுந்
தானவர்வித் தியாதரர்கின் னரர்யக்கர் கிம்புருடர் தவத்தோர் நாகர்
மானமுடைத் திறலரக்கர் கருடரிவர் முதலான மற்று ளோரு
மேனையுமற் றவரவர்நாட் டரிவையருந் தனித்தனியே யெய்தி யெய்தி. ()

கீராடி யேகினமை நிகழ்த்தியவ ரவர்நின்ற நிலையுந் தோளிற்
றூராடி யுதிர்ந்தமல ரிதழுமவ ரவர்களத்தின் றடந்தாள் வைப்பு
மாராத பெரும்பூசை செய்திடமு முதலான வடையா ளங்க
டீராத வினைதீர்க்கும் பலபலவாந் துறையெங்குஞ் சிறந்து தோன்ற.(௩௯0)

இப்படியே மனோகரமா யெண்ணரிய புண்ணியமா யெண்ணு நல்லோர்
செப்பியநூன் முறைதேருந் தேவனிய லமரேசன் செல்வ மென்ன
மெய்ப்புவியோர் பரிதாப முழுதாற்றி வேண்டுவன வெல்லா மீந்து
தப்பறவே பொலிந்தோங்கு மச்சோத மெனுநாமத் தடத்தைக் கண்டான்.

கண்டளவே யிளைப்பாறிக் கானிடைக்கின் னரமிதுனங் கண்டு பின்னே
மண்டியது நன்மையாய் வந்துநமக் கிப்படியே வாய்த்த தென்று
கொண்டுமனங் களிகூர்ந்து குளிர்வாவித் தென்கரைவாய்க் குறுகியங்கே
தண்டிவரும் பரியிறங்கிக் கலனைகளைந் திருநிலமேற் சாய்வித் தாற்றி. ()

எழுப்பியொரு சிறிதறுகு பறித்தருத்தி வாவியிலே யிறக்கி வேண்டு
மழைத்தகுளிர்ப் புனலூட்டி யலைந்தேற்றிக் கரைமிசையோர் மரத்தோ டார்த்து
நிழற்புகர்வாள் கொண்டதற்கு நெடும்புல்லு மரிந்திட்டு நீருட் போயத்
தழைத்தெழுபங் கயவளையந் தன்னொடும் புனலாலுந் தாகந் தீர்ந்து. ௩௯௩

தாமரைப்பா சடைகளைமார் புடனணைத்துக் கரையேறித் தழைத்து வீசி
யேமமுற்ற தொருபெருமண் டபத்தொருபா றையிற்படுத்த திருந்து தோளில்
வாமமுற்ற வுத்தரியந் தலைக்குயரந் தானாக வைத்துச் சாய்ந்து
சேமமுற்ற வடிவேலா னொருசிறிது பரிதாபந் தீரும் போதில். (௩௯௪)

கவ்வியபுற் கடியாது தலைநிமிர்ந்து செவிநெறித்துக் கவன வாசி
செவ்விமலர்ப் பூந்தடத்தின் வடமேலைத் திசைநோக்கித் திகைத்தே நிற்க
வெவ்வியவேன் மன்னனுமீ தென்னெனவத் திசைநோக்க வீணா நாதத்
தெவ்வியல்பு மினிதான தொருகீத மனோகரமா யெழுந்த தன்றே. (௩௯௫)

மானிடர்க ளியங்காத விவ்வனத்தே யிக்கீதம் வந்த வாறென்
றூனெனநன் கதிசயித்துத் தாமரைப்பா யலினெழுந்து தயங்கு கீத
மானதிசை யைப்பலகால் பற்பலகால் னின்றுற்று தரித்து நோக்கி
யானிதனை யறிவனென விவுளியைவான் கலனையணிந் திறைஞ்சி யேறி. ()

இசைகேட்டு முன்னோடு மிளமான்கள் வழிகாட்ட வெண்ணில் கோடி
நசைகாட்டு மேல்கரையே நடந்துவட மேலருகே நண்ணு வாங்கே
மிசைகாட்டுங் கயிலையின்பால் வெண்சந்த்ர ப்ரபையென்னும் வெற்பின் சோதி
திசைகாட்ட நிலவுமிழுஞ் சிவன்கோயி லதனருகே திகழக் கண்டான். ()

மைத்திகழ்கே தகைவனத்தி னறுந்தூளி வடிவமெலா மறைப்ப வீசன்
பத்தியினா லுத்தூளஞ் செய்தனன்போற் சென்றனுகிப் பளிங்கி னாலே
யுய்த்ததொரு நாற்றூண மண்டபத்தி னடுவாக வொளிருஞ் சோதி
முத்ததனா ல்முகுறமே யமைத்ததொரு சிவலிங்க மூர்த்தி யாக. (௩௯அ)

மாசறவே யிதழிதழால் வயங்குகின்ற மதிபோன்றும் வண்ண முத்தி
ஞசறுமா முடிபோன்று மழகொளிரு மாகாச நதியின் வெள்ளைத்
தேசுறுதா மரைமலர்கண் முடிக்கணிந்து தேவரெல்லாந் திரண்டு போற்று
மீசனிம வான்பயந்த வுமைபாக னெழுந்தருளி யிருப்பக் கண்டான். ௩௯௯

வேறு.

இறையவற்குத் தென்னருகே யிருந்தெழில்வெண் பட்டுடுத்துக்
குறைவறத்தன் பாங்கியரைக் கூடினள்போன் மாணிக்க
நிறைதருபொற் றூண்களெலா நெருங்குபதி பிம்பமெழப்
பொறைபடைத்த தவவெள்ளம் பொலந்தவளைப் புடைசூழ. (௪00)

பாற்கடலின் முழுகியிருந் தனள்போன்றும் பார்படைக்கப்
பேர்க்கரிய நான்முகத்தோன் பேணிவைத்த விதைபோன்றுங்
கூர்க்கரதி தவவேடங் கொண்டிருந்த படிபோன்றுஞ்
சீர்க்கலைமா னரன்பாதஞ் சேவிக்கின் றனள்போன்றும். (௪0௧)

செஞ்சடையு மச்சடைமேற் சேர்த்ததிரு வடிநிலையும்
பிஞ்சடையு மெழில்வடிவும் பிறைநுதலுந் திருநீறு
நஞ்சடையு மிடற்றவன்மே னூடியதா மரைவிழியு
நெஞ்சடையு மருணெறியு நெறிகடவா வாறுதலும். (௪0௨)

ஒருசெவிக்க ணின்றிலங்கு மொளிர்முத்தின் செபவடமு
மிருதனத்தி னிடைத்திகழு மிமையவர்கற் பகவுரியாம்
வரிசைபெற்ற வுத்தரிய முடிச்சுடனே வளர்மதிவெண்
கிரணமொய்த்த முந்நூலுங் கிளர்ந்துகிளர்ந் ததிர்விளங்க. (௪0௩)

இசைகளினுன் மனமொடுங்கி யிகல்விளங்கு சாதியெலாந்
திசைகடொறுஞ் சூழ்போந்து சித்திரங்கள் போனிற்ப
வசையகலா வகங்கார மாற்சரிய முதனீத்துப்
பசுமையினு லீடேற்றும் பாசுபத நெறிபூண்டு. (௪0௪)

தெய்வவடி வாகையினுற் சென்றவய தறிவரிதா
யவ்வுருவ மொருபதினெட் டளவுவய துளவெனலாய்ச்
செவ்விதரு கற்பகப்பூஞ் செந்தளிர்போ லங்கையிலே
மெய்வகைய தந்தத்தால் விளங்கியவீ ணையைவாங்கி. (௪0௫)

நரம்பானு மிடற்றானு நயந்தெழுந்து திசைகளெல்லாம்
பரம்பாநின் றுருக்குமுயர் பாட்டிசையா லெவ்வுயிர்க்கும்
வரம்பான வுமைபாகன் மலரடிசே வித்திருந்த
வுரம்பாவு தவவேடத் தொருதிருமா தையுங்கண்டான். (௪0௬)

கண்டளவே யிறங்கியொரு கவருடனே புரவியையார்த்
தண்டர்பிரான் கோயில்புகுந் தவனிருதா டொழுதந்த
வொண்டொடியைப் பலகாலு முற்றுற்றுப் பார்த்தவள்பான்
மண்டியவா றுதலாலும் வடிவாலு மதிசயித்து. (௪௦௭)

நிலவலயத் துள்ளார்க்கு நினைவறவந் திப்படியே
சிலபலிக்கு மாயிருந்த தின்றுபயன் சிறிதுமிலாக்
கலியுருக்கொள் கின்னரத்தைக் கண்டிதன்பின் வந்தநாம்
பொலிவுபெற்று விளங்கியவிப் புண்ணியபூ மியைக்கண்டேம். (௪௦௮)

அதன்பின்பு திவ்வியமா மம்புயவா வியைக்கண்டே
மதன்பின்பு திவ்வியமா மமுதவிசைத் தொனிகேட்டே
மதன்பின்பு திவ்வியமா மரிவையிவ டனைக்கண்டே
மதன்பின்பென் பெறவேண்டு மென்றுமிக வதிசயித்து. (௪௦௯)

இவள்வடிவ மிக்கீத நிச்சயமிம் பரிலில்லை
யிவளிமையோர் கன்னிகையென் றியம்புகின்ற திப்போதி
லிவளெமைக்கண் டேகாம லிருந்தனளே லிவள்பேரு
மிவடவஞ்செய காரணமும் யாங்கேட்போ மெனவெண்ணி. (௪௧௦)

அவள்பாடி விடுமளவு மங்கொருதூண் சாய்ந்திருந்தா
னவடானும் பாடிமுடித் தரனைவலம் வந்திறைஞ்சித்
தவமான வமுதூறிச் சாந்தமாம் பார்வையினு
லிவன்வாழும் படிதேற்றி யினிதாக முகமலர்ந்து. (௪௧௧)

இளைத்திருந்த தேன்மடியா யெழுந்திருமி னெனவவனுங்
கிளைத்தெழுந்த வுவகையனுய்க் கிளர்ந்திறைஞ்சிக் கருணையெலா
மளித்தபக வதியருளே ததுதலைமேற் கொள்வனெனு
வுளைத்தொடுங்கி யவள்பிறகோர் மாணுக்க னெனப்போனன். (௪௧௨)

ஆங்கொருநூ றடியளவு சென்றளவி லரும்பகலே
வீங்கிருள்வீ சியசோலை மிடைமிடைய விருபாலுந்
தூங்குபெருஞ் சாமரைபோற் றுலங்குமலை யருவியிரண்
டோங்கிவிழ வதனடுவே யொளிருமொரு சிறுகுன்றில். (௪௧௩)

மாணிக்கக் கமண்டலம்வற் கலாசயன மரவுரிமின்
காணுற்ற தொருசங்க கபாலமணி திருநீறு
பேணுற்ற வலாபுகத்தோ டியோகவட்டம் பிறவுமெல்லாஞ்
சேணுற்று விளங்கியதோர் செழுங்குகைவா யிலையடைந்தாள். (௪௧௪)

அதனருகோர் பாறையிலே யவனிருப்ப வவளுட்போ
யிதமுடனே தலைமாட்டி லிசைவீணை தனைவைத்து
முதிரருவி யோரிலைக்கே முகந்துகொணர்ந் தவன்முகம்பார்த்
ததிபெரும பூசனைக்கா மர்க்கியங்கொள் கெனவவனும். (௪௧௫)

அடிகளைநான் வணங்கியபே றமையாதோ வடியேற்கிப்
படிமிகவா தாஞ்செயுமோ பற்றுவனோ வென்றென்று
முடியடிமே லுறத்தொழவு முறைமையினான் மிகவருந்தி
வடிவிழிபூ சனைசெய்து மற்றொருபா றையிலிருந்தாள். (௪௧௬)

சிறிதிருந்த பின்னரிவன் றேயமுநா மமும்போந்த
முறைமைகளு மிவள்கேட்ப முறைமுறையே யவன்மொழிந்தா
னிறைவளையுங் கேட்டதற்பி னெழுந்திருந்து கபாலமெடுத்
தறவுயர்ந்த மரங்களின்பா லையமிடு மெனநடந்தாள். (௪௧௭)

மரங்களெலாந் தலைவணங்கி வளங்கெழுதீங் கனிபலவா
னிரந்தரமே கபாலத்தை நிறைத்தனமற் றிதனையெலாந்
தரந்தருகூ ரயிலோன்முன் றான்வைத்தா ளவனுமகிழ்ந்
தருந்தவமே பெரியதெனு வாச்சரிய மிகக்கூர்ந்து. (௪௧௮)

எழுந்துகல னையைவாங்கி யிகன்மாவைத் தளைந்தருகே
தழைந்தெழுபுல் லிடைவிடுத்துத் தாழருவிப் புனலாடி
யழுந்துநிய மங்கண்முடித் தமுதனைய கனியருந்திப்
பொழிந்தபுன லுண்டாறிப் போயொருபா றையிலிருந்தான். (௪௧௯)

அம்மாதுங் கனிமுதலா மாகாரங் கொண்டாறிச்
சும்மாதே தனித்தொருபா றையிலிருப்பச் சுரும்பேறுஞ்
செம்மாலைத் தோளானுஞ் சென்றருகே நின்றவடன்
சம்மாதத் துடனிருந்து தாழ்ந்தொருவா சகமொழிவான். (௪௨௦)

தணவாநின் கருணையினாற் றருக்குமன மனிதருக்குக்
குணமான நோய்மையே குவாலாக மேற்கொண்டு
துணையான தவத்தினைநின் றூயதிரு வாக்காலே
யிணையான சிலமொழிகேட் டின்புறவே யன்புறுமே. (௪௨௧)

சிறிதுபொழு துண்டான சேவைதா னெடுநாளை
யுறவுதரு கின்றமையா லுன்பெருமை மதியாம
லறிவிலியேன் கேட்பதுனக் கனுமதியே யாமாகின்
முறைமையினான் மொழிவனென வவண்மொழிமி னெனமொழிவான். ()

சீருடைநின் றிருவவதா ரத்தினாற் றெய்வகணத்
தியாருடைய திருமரபோ வீடேற விட்டதுதான்
பேரழகு தருமிந்தப் பிராயத்தே மனமொடுங்கிச்
சாரல்வனந் தனிற்றனியே தவஞ்செய்யக் காரியமென். (௪௨௩)

என்றளவி லவடானு மிருந்தொன்றை நினைந்துளமேற்
சென்றதுயர் மீதூரச் செயலழிந்தொன் றொன்றாக
நின்றுவிழுந் தாளமென நீணெடுங்கண் டுளிசோர
வன்றணிகூர்ந் தறவிம்மி வாய்விடா திருந்தழுதாள். (௪௨௪)

அப்படியே யழுமளவி லண்ணனும்பார்த் தருந்துயர்த்
னிப்படியே தெளிந்தோர்க்கு மெய்துமா றிருந்ததெனப்
பொய்ப்படியே நெடுநாளாய்ப் போனதைநா னினைப்பித்தேன்
றப்பிதுவே போதுமெனத் தன்னையே தானொந்து. (௪௨௫)

போயருவி நீர்கொணர்ந்து போற்றிமனந் தேற்றியபி
னாயிழையு முகங்கழுவி யணிந்தமர வுரிக்கலையாற்
சேயநய னந்துடைத்துத் தீயெழவே நெடிதுயிர்த்துத்
தூயவனை முகநோக்கிச் சொல்லுவன்கே ளெனவுரைப்பாள். (௪௨௬)

அறப்பாவி யாயருளொன் றற்றவளாய் முற்றியவென்
பிறப்பாலென் பயனேது பெருந்தவத்தாற் பயனேது
குறித்தாலுங் கூறரிது கூறினுங்கேட் கரிதுமனம்
பொறுத்தாலும் பொறுக்கரிது பொறுக்கரிதா யினுங்கேண்மின். (௪௨௭)

## வேறு.

அண்ட ருலகி லரம்பையரென் றவனி புகழுஞ் சிலமாத
ருண்டு தலைநா ளவர்குலந்தா னுயர்வே தத்து மயனுளத்தும்
பண்டு கடைந்த வமுதத்தும் படிநீ ரெரிகா லெனுமிவற்றுஞ்
சண்ட கிரண மிமகிரணந் தனிலு மதவே டன்னிடத்தும். (௪௨௮)

தரும னிடத்து மின்னிடத்துந் தக்கன் மகளிர் தங்களிலே
யிருவர் முனிவ ரரிட்டையுமென் றிவர்க ளிடத்து மெனவிந்த
வரிய பதினா லிடத்துதித்த வதனோ டந்த வரிவையர்பான்
மருவி யிரண்டு காந்தருவ மரபு முதித்த வவைதம்மில். (௪௨௯)

சிறந்த முனிபா லுயர்சித்ர சேனன் முதலா மீரெண்மர்
பிறந்து வளர்ந்தா ரவர்க்கெல்லாம் பின்னா யறிவான் முன்னாகி
நிறைந்த சித்ர ரதனென்போ னீதி நெறியான் மிகவிளங்கி
யிறைஞ்சு மகவான் றோழனுமா யிந்த மரபிற் கிறையானான் (௪௩0)

இவன்மு னிப்பா ரதவருடத் தெல்லை முடிந்த வடதிசையி
லவந்தா னில்லாக் கிம்புருட வருட மதனுக் கணிவரையா
நவஞ்சே ரேம கூடத்தை நகரி யாக்கி யதிலிருந்தான்
றவஞ்சேர் குணத்தோ யந்தவரை தானு மிஙனே சற்றிடமே. (௪௩௧)

இவன்செய் ததுவே சைத்ரரத மென்னு மிந்த மலர்க்காவு
மிவன்செய் ததுவே யச்சோத மென்னு மிந்தப் பூந்தடமு
மிவன்செய் ததுவே யிக்கோயி றானு மிருந்தோள் வலியாலே
யிவன்செய் ததுவே செயலெங்க ளெழிற்காந் தருவப் புவிக்கெல்லாம். ()

இனிமற் றந்த வரிட்டைதரு மெழுவோ ரிற்றும் புருமுதலா
முனிவற் றுயர்ந்தோ ரறுவர்க்கு மூத்தோ னன்னப் பெயரோனே
வனைபொற் கழலான் சித்ரரதன் மகுடஞ் சூட்டி வைத்தரசு
மனுசத் திரமும் பகுந்தளித்தா னவன்வாழ் பதியு மப்பதியே. (௪௩௩)

அந்த வமுத மதிக்கதிரி லமைந்த மரபி லவ்வமுதாற்
றந்த தெனவே யதிதவளந் தருபே ரழகு தன்னுடனே
வந்து பிறந்தாள் கௌரியெனு மடந்தை யொருத்தி யவடன்னைச்
சிந்தை களிகூர்ந் தஞ்சன்முதற் றேவி யாகச் சுவீகரித்தான். (௪௩௪)

அஞ்சன் றானுங் கௌரியே யெனும்பூந் திருவு மெப்போது
மிஞ்சுங் காதன் மீதூர விற்போர் வேளு மிரதியும்போ
னெஞ்சந் தானு முயிருமொரு நீர்மை யாகி நெடுங்காலம்
வஞ்சந் தானொன் றறியாமல் வாழ்ந்தார் வாழு மந்நாளில். (௪௩௫)

அவ்வா றமைந்த பெரியோருக் கரிய மகவா யவதரித்தே
னிவ்வா றமையாத் துயர்க்கெல்லா மிலக்காம் பாவி யொருத்தியையே
மெய்வா சகனு மென்றந்தை மிகவே களிகூர்ந் தென்னுடைய
துய்வா ளொளியா லெனக்குமகச் சுவேதை யெனவே பேரிட்டான். ()

ஆண்பெற் றவர்போ லென்னையவ னறவே மகிழ்ந்து பாராட்டப்
பாண்பெற் றினிய யாழ்போலப் பயில்காந் தருவர் மடிகளிலுந்
தூண்பெற் றனைய தோள்களிலுந் தொடைமார் பிலுமே விளையாடி
நாண்பெற் றறியா மிகுபேதை நன்னாள் கடந்தேன் பின்னாக. (௪௩௭)

வேறு

தளிரிடையே மலர்தோன்றி மலரிடையே தேன்றோன்றித் தயங்கு தேனி
லளிதருகா ரளிதோன்றி யதனிடையே மதந்தோன்றி யதிலே யெல்லாம்
வெளியிடுமா மதன்றோன்றி யிப்படியே மெல்லவந்த வசந்த காலந்
தெளிவதுபோ லென்னிடையே திகழ்ந்ததுவந் தெழிலிளமைச் செவ்விக் கோலம். ()

மயிலாடக் குயில்கூவ வண்டினங்க ளிசைபாட மதன பூசை
செயுமாதர் துழனிமிகப் பெருகியெழப் பரிமளமென் றென்றல் வீசப்
பயில்வாச மலர்த்தூளி பரந்துமணற் குவைகாட்டப் பதுமக் காடு
வெயில்காணும் படிமலர விருள்காணும் படிமலர விரையார் நீலம். (௪௩௯)

வரிவளைவா யமுதானம் மகிழ்புளகஞ் செய்ததுபோன் மலர்ந்து வாழ
வரிபொருநூ புரவொலியா லடிமலரா லசோகமெலா மசோக மாகக்
குரவமெலா முகிழ்முலையாற் குழைந்திளக மற்றுமெலாங் குளிர யார்க்குங்
கரைதெரியா வானந்த காரணமாய் வரும்வசந்த காலத் தோர்நாள். (௪௪௦)

இந்தமலர் வாவியினீ ராடுதற்கென் னன்னேவர யானுங் கூட
வந்துகரை யருகொளிரும் பாறைகளின் மலைமகடன் வளைக்கை யாலே
சுந்தரமாம் வகையெழுதித் தொழுதவரன் றிருவடியைத் தொழுது நின்றுஞ்
சந்தனமென் சோலைகளுந் தழைத்தகொடி மண்டபங்க டாமும் பார்த்தும்.

ஆர்த்துவருந் தெய்வதைகள் விளையாடுங் கொடியூச லணியும் பாரைப்
போர்த்தமலர்த் தூளியிலே தாளழுந்தி யோதிமங்கள் போக மாட்டா
வாய்த்ததருச் சூழல்களு மற்றுமுள்ள புதுமைகளு மகிழ்ந்து பார்த்துஞ்
சேர்த்தவுயிர்ப் பாங்கியரு மொருவேனும் விளையாடிச் செல்லும் போதில்.

அற்புதமாய் மனோகரமாய்த் திவ்வியமா யுலகோர்கண் டறியா வொன்று
யெற்பயில்கா ரளிமுழுது மொன்றினையொன் றறமுந்தி யெதிர்கொண் டோடப்
பற்பலவா மவ்வனப்பூம் பரிமளங்கள் யாவையுங்கீழ்ப் படுத்தி மேலாய்
வெற்பரசா யிமவானிற் காலுடன்வந் தொருவாசம் வீசிற் றன்றே. (சசங)

அந்தநறும் பரிமளத்தான் மூகுளிதமாம் விழியுடனீ தறிவே மென்னுச்
சிந்தைமகிழ்ந் ததனெதிரே சிறிதிடஞ்சென் றளவிலான் றிருக்கண் ணுலே
வெந்தமத வேளளவில் சோகத்தான் மெய்த்தவத்தை மிகமேற் கொண்டு
வந்தவசந் தனைப்போன்று மீசனருள் பெறத்தவஞ்செய் மாரன் போன்றும். (சசச)

தன்னொளியா லெங்கிலமுந் தனிக்கனக மயமாக்கித் தழைந்து வீழ்ந்த
செந்நிறவே ணியுமகன்ற திருநுதலும் புண்டரமுஞ் சிலையே யன்ன
மைந்நிறவார் புருவமுநீண் டகன்றனவெண் டாமரைபோன் மலர்ந்த கண்ணு
முன்னதமாய் நீண்டுவளர்ந் தொளிர்மூக்குஞ் செவ்வாயு மோங்கு தோளும்.

இருதோளில் வீழ்ந்தலைந்த குழையுமறை யுச்சரிப்பா லிலங்கித் தோன்றுந்
தரமேவு வெண்ணகையு மழகுபொழி திருமுகமுந் தரித்த மானி
னுரிமேவு மணிமார்பும் புரிநூலு மொருகையிற் பலாசத் தண்டும்
வரமேவு பவித்திரமும் படிகமணி கமண்டலமு மற்றும் யாவும். (சசரு)

கட்டினமுஞ் சியுமுடித்த வற்கலையு ஞானத்தாற் கரிய மோக
மெட்டனையு முண்ணிலா தேகுவபோ லெழுரோம ராசி தானும்
வெட்டனவே யுச்சரித்த வேதமுமாய்த் தருமத்தின் வேடம் போன்றுந்
தட்டணுகா துயர்பிரம சாரியத்தி னலங்காரந் தன்னைப் போன்றும். ()

தன்பருவ மனையானோர் முனிகுமரன் றிருப்பள்ளித் தாம மேந்திப்
பின்வரவு முன்பாகி நீராடல் காரணமாய்ப் பிறங்கு வாவிக்
கன்புடனே வருமவனோர் முனிகுமா ரனைக்கண்டே னளிகள் கோடி
யின்புறவே முரலுவதோர் பூங்கொத்து மவன்செவிமீ திலங்கக் கண்டேன்.

கண்டளவே யிந்தமலர்ப் பரிமளமே யந்தநறுங் கந்த மென்று
கொண்டிவனோர் மதனையயன் கோலமுன் வடிவாக்கிக் குறும்பு செய்யு
மண்டர்களு முனிவர்களுஞ் சங்கியா வகைவிடுத்தா னாக வேண்டு
மண்டலமா மதிபடைத்தா னிவன்வதனம் படைப்பதுகை வரவென் றுகும்.

எழின்மதியி னமுதகலை யிரவிகவர் கின்றனனென் பதுதான் பொய்யே
முழுதுமவை யிம்முனியே கவர்கின்றா னல்லாது முனிவெங் கானிற்
றழுவியற வுலர்ந்துலர்ந்து தவஞ்செய்வார்க் கிவ்வழகு தானுண் டாமோ
பழுதுபடா வழகிதற்குக் காரணம்வே றில்லையெனப் பார்த்தே னாக. (௨௫௦)

அடையுமடை வல்லாது நினையாம லழகினையே யடைவாக் கொள்ளுங்
கொடியமதன் புதிதான குருமலர்த்தே னிளையதொரு கோல வண்டுப்
பெடையைவச மழிப்பதுபோ லெனையழித்தா னப்போது பேதை யேனும்
வடுவதுநங் குலமகளிர்க் கெனவறிந்து மனமடக்க வலிபெ றாமல். (௨௫௧)

ஒருசிறிது மிமையாதே சிறிதுகுவிந் தொருபுறத்தே சாய்ந்து வாய்ந்த
வரிபரவிப் புடைபெயர்ந்த கண்ணாலே யவனழகா மமுதை வாரிப்
பருகுவது போன்றுமெனைப் பரிகரித்துக் கொள்ளென்னும் பரிசே போன்று
மருளினியென் னெஞ்சுனக்கே யளித்தனனென் பதுபோன்று மவனை நோக்கி. ()

நேராக வெனைமறந்து மூச்சடங்கி யோவியம்போ னெடிது நேரம்
பேராம லசையாம னின்றேனப் பொழுதுமதன் பின்னே நின்று
சீராடி யெனைத்தள்ளிக் கொண்டுசென்று விடுத்தனனோ சிந்தை யாசை
யாராம லிழுத்துக்கொண் டெய்தியதோ வறியேனா னருகே யானேன்.

நெஞ்சிலே யவன்வாழ விடங்கொடுக்கு மதுபோல நெடிது மூச்சு
விஞ்சியே மேன்மேலே தொடர்ந்தெழுந்த திதயத்தின் விருப்பையெல்லாம்
வஞ்சியா துரைப்பனபோல் விம்மியசைந் தனகொங்கை வழியும் வேர்வா
லெஞ்சியே கழுவுண்டு போனதுபோ லேபோன தெஞ்சா நாணம். (௨௫௪)

அனங்கசரம் படுமினியென் றஞ்சினாற் போனடுங்கிற் றாக மோக
மனங்குமர னெழில்காணப் புறப்பட்டாற் போற்புளகம் வந்த தெங்கு
நனைந்தெழுவேர் வினிலிழிந்த விருந்தாளிற் செம்பஞ்சி நலஞ்சேர் சோதி
புனைந்ததுபோ லோகைமிகுந் ததுநயனம் வினையேனப் போது நாடி. ()

எம்போது நொய்யவரே பாராட்டத் தக்கதிந்த வின்ப மிந்தச்
சம்போக முனிவரைநா னெஞ்சினா னினைத்திடவுந் தக்க தன்று
வம்போதான் மதனனமை யிம்முனிபாற் றள்ளுகின்றான் வறிதே யையோ
நம்போத மில்லாமை யென்னாகு மினியென்று நாணி மீண்டு. (௨௫௬)

என்னேயீ தொன்றிருந்த படியெனமற் றிப்படியே யறிந்தி ருந்து
முன்னேநின் றிங்கிதஞ்செ யைம்புலனை யடக்குதற்கு முடியா தென்ற
னன்னேய மிவனறியி னம்மைநகைத் திகழுவனே காமமென் செய்வே
மிங்நேய மறியாமு னேகுவதே காரியமற் றேகே மாகில். (௨௫௭)

நங்காதல் கண்டுமுனி சபித்திடினுந் தெரியாது நாம்போம் போது
பங்கான தவத்தோரைக் கண்டிறைஞ்சா தேகுவதும் பாவ முண்டா
மிங்கான தாகவிவர் கழலிறைஞ்சி யேகுவே மெனவே யெண்ணிச்
சிங்கார முனிகுமரன் றனைநோக்கி விடநின்று செங்கை கூப்பி. (௨௫௮)

ஒருகாதின் மாணிக்கக் குண்டலமுஞ் செவித்தாரு மொருதோள் வீழ்ந்த
முருகாருஞ் சுரிகுழலுஞ் சிறிதசைய வவனுடைய முகத்தின் மீது
தருகாத லுடனடந்த விழியிணையை வாங்காமற் றலம்பா ராமற்
பருகுதல்போ லாதரத்தி னுடன்பணிந்தே னவ்வாறு பணிந்த போது. ()

மதனனை தனையெவர்க்குங் கடக்கரிதா கையினாலும் வசந்த கால
மதனாலு மிடமதுவா கையினாலும் யௌவனத்தி னீதி யாலு
மிதுகாலந் தீவினையே னித்துயரம் படவேண்டி யிருக்கை யாலுந்
திதமாமென் மெய்ப்பாடு கண்டளவே யவன்வலியுஞ் சிதைந்த தன்றே. ()

புதிதாக வருமதனை யெதிர்கொள்வ போலெழுந்த புளக மொன்றை
மதியாதென் பால்வருதன் னெஞ்சினுக்கு வழிகாட்டு மாபோன் முன்னே
விதமான பெருமூச்சு நடந்ததுகைச் செபவடந்தான் விரத மெல்லாஞ்
சிதையாது போகாதென் றஞ்சினபோ னடுங்கியது சிதைந்த துள்ளம். ()

வேறுமொரு பூங்கொத்தின் செவித்தார்போற் கபோலமிசை வெயர்வு தோன்றிற்
றேறியதன் னுதாரத்தா லெனைப்பார்க்கப் பரந்தெழுந்த விருகட் சோதி
மாறரிய வச்சோத வாவியினிற் கமலமெலாம் வாணி லேறப்
பாறிமறு கிற்பறந்து திரிவனபோ லெம்மருங்கும் பரந்த தன்றே. (சகூஉ)

இவ்வகையே யறவெளியாய்த் தோன்றுமிவன் விகாரத்தா லிரட்டித்தேறி
மெய்வகையே வளர்மதன விகாரத்தி லகப்பட்டு வினையேன் பட்ட
வவ்வகையா கியவவத்தை யளவுரைக்க முடியாதப் போது நானு
முய்வகைசேர் தவமுனிவன் விகாரமெலா மடைவடைவே யுற்று நோக்கி.

இன்பரத மிதன்முன்பு புதிதுண்டு மறியாத விருநீ தன்கண்
டுன்பமுடன் மிகவிளைத்துச் சோம்பிறைப் போன்றுநெடுந் துயிலி னாலே
வன்புடைய விழிப்புண்டா னதுபோன்று மனத்தாசை வகையை யெலலா
மன்பிலுரைப் பதுபோன்று மிராகின்ற தறமுதிர்ந்த தனங்க ராகம். ()

என்றுதுணிந் திவ்வளவோ ரிடங்கண்ட பின்பணுகி யிவன்பின் போந்த
துன்றுதவ முனிபாதந் தொழுதெழுந்தெம் பெருமானே தோழ னாகிச்
சென்றமுனி குமரனவ னார்புதல்வன் பேரென்ன செவித்தா ராகி
யொன்றியபூங் கொத்தேதிப் பரிமளங்கண் டாதரித்தே னுரையா யென்ன.

அன்னவனு மென்முகம்பார்த் தாயிழையா யிவைகேட்கு மதனா லிப்போ
தென்னபய னுரையாயிங் கெனச்சிறிதே நகையாடி யிவைதான் கேட்க
மன்னியவா தரமுண்டேற் கேண்மினென வகுத்துரைப்பான் வையமேழுந்
துன்னுபெரும் புகழுடையான் சுராசுரர் முதலானோர் தொழுபொற் றாளான். (சகூகூ)

வரமாக மொழியுநள கூபரனு மொவ்வாத வடிவி னாலே
யரமாத ரனைவருக்கு மானந்த காரியமா யகல்வா னட்டுச்
சுரர்வாழ வுடன்வாழுந் தொல்லைமறை நெறிமுனிவன் சுவேத கேது
தரமான வாகாய கங்கையிலே திருப்பள்ளித் தாமங் கொய்வான். (சகூஎ)

தாமொருநாட் சென்றளவி லவ்விடத்தா மரைவனத்தோர் தவள மான
தேனவிழ்தா மரைமலரி லெப்பொழுதும் புலப்படவாழ் திருத்தான் கண்டங்
கானபர வசையாகி யனுராகத் தொடுபார்க்க வன்றப் போதின்
மேனயன மாம்புணர்ச்சி முடிவான பேரின்பம் விளைந்த தன்றே. (சசு௮)

அப்போதே யப்போதி லவதரித்தா னிவனிவனை யப்பூ மாதுங்
கைப்போதி லேந்திமுனி முகநோக்கி யெம்பெருமான் காட்சி யாலே
யிப்போது பிறந்தனனின் புதல்வனிவன் கைக்கொணீ யிவனை யென்னத்
தப்போதா முனியிவனைக் கொண்டுபோய் வேண்டுவன சதுர்கள் செய்து. (சசுகூ)

புண்டரிகத் துதித்தமையாற் புண்டரிக னெனப்பெயரும் புனைந்து நூலெண்
கொண்டகலை யனைத்தினையு மீந்தருளிக் குலப்பிரம சரிய மாகு
மண்டர்தொழும் விரதமுந்தான் கற்பித்தா னுகையினு லவன்சே யிந்த
வெண்டிசையும் புகழ்குமர னினிச்செவித்தார் வருவாயு மியம்பக் கேண்மின். (சஎ0)

வேறு.

இன்று கடையிருத்தை யாகையினு லீசன்முள்
சென்றுதொழு வான்கயிலை சேர நெடுவானி
னின்று மிறங்கி நெடுநந் தனவனத்தி
லொன்று மிருவேமு முடன்வந்தே மப்போது. (சஎக)

மன்னுமணி மாலை மணிமே கலையணிந்து
துன்னுசெவி ந் தாரரதச் சூதாங் குரமணிந்து
பன்னுமல ராற்செய் பலபணியும் பூண்டுமல
ரின்னறவு மாந்தி யிதயங் களிகூர்ந்து. (சஎ௨)

சேர்த்து வசந்தத் திருமடந்தை கைகொடுப்ப
வார்த்துவிளை யாடிவரு மந்தவன தேவதைதான்
பார்த்திவனைக் கண்டு பணிந்து பலகாலு
மேத்திநறும் பூங்கொத் திதுவுங் கரத்தேந்தி. (சஎ௩)

இந்த வழகுக் கிசைந்ததே யீதிதனைத்
தந்த குலப்பாரி சாதமுநா னும்பிறந்து
வந்ததனு லுள்ள பயன்பெறநீ வள்ளலே
சிந்தை மகிழ்ந்து செவித்தாராக் கொண்டருளாய். (சஎச)

என்றிரந்து கொண்டிவடா னேகாது பின்றொடர
நன்றிகொண்ட தன்றகைமை போற்றுகையா னுணியிவ
னென்றியம்பா தேபோக வுற்றிவனை நானேக்கி
நின்றுநண்பா வித்தா னெறிகேடு தானேது. (சஎரு)

ஏத்திவரு கின்ற விவளா தரந்தீரச்
சாத்தியருள் கென்றவள்கை தன்னின்று நான்வாங்கி
வாய்த்தசெவித் தாராக வைத்தே னிதாகையினாற்
கோத்த விரைப்பாரி சாதப்பூங் கொத்தென்றான். (சஎசு)

என்னு மளவி லெனைநோக்கிப் புண்டரிகன்
புன்முறுவல் செய்து புனையிழா யீதெல்லாம்
வன்னமுறக் கேட்டு வருந்துகின்ற தேனீது
தன்னினினை வுண்டேற் றரலா மெனக்கூறி. (சஎஎ)

தானேவந் தென்செவிமேற் றன்செவிமே னின்றொளிருந்
தேனேரும் பூங்கொத்தைச் சேர்த்தினா னப்போதென்
மானேய நெஞ்சிவன்கை வைத்திடத்தே சென்றொடுங்கிக்
கோனேயின் புற்றதெல்லாங் கூற முடியாதே. (சஎஅ)

ஆண்டமுனி வோனு மணைந்தென் கபோலதலந்
தீண்டியவா னந்தத்தாற் செங்கை விரனடுங்கிக்
காண்டகுநா ணோடிரவி காந்தச் செபமாலை
தாண்டி விழவதுவுந் தானறியா தேநின்றான். (சஎகூ)

யானதனை யப்பொழுதே யேற்றுக்கொண் டென்கழுத்தின்
மான முடனணிந்து மற்றவன்றன் செங்கைமலர்
தானெனவந் தன்பாற் றழீஇயதுபோற் பேரின்ப
மானதெலா மெய்தி யருகுநின்றே னப்போது. (சஅ0)

வேறு.

வந்தொரா யிழையாள் வணங்கிமா தேவி மஞ்சன மாடிநின் றன்னை
யிந்துவா ணுதலாய் பார்த்துநிற் கின்றா ளென்றவள் விரைந்துவந் துரைப்ப
விந்தவா சகத்தாற் புதிதகப் பட்ட விளம்பிடி யானது நுதன்மேன்
முந்தவீழ் தோட்டி வசத்தினா லியங்கு முறைமைபோ லேல்வச மின்றி. ()

அவனழ கான வமுதவான் சேற்றி லழுந்தினாற் போலவுங் கபோலத்
திவர்தரு புளக மானமுட் களிலே யெழுந்துகோப் புண்டபோ லவுமத்
தவமுனி முகமேற் பற்றிய வொண்கண் டனைவருத் தத்தினால் வாங்கி
யுவமையி னன்னீ ராடுவ தாக வொன்றிரண் டடியிடு மளவில். (சஅஉ)

மற்றைமா முனிவ னிவன்வலி யழிந்த வகையறிந் துரிமையி னுடனே
யுற்றகோ பத்தா லிவன்முக நோக்கி யுனக்கிது தக்கதொன் றன்று
சற்றரா னவர்கண் முயல்வதிக் கருமந் தபோதனர்க் கடாதது கண்டா
யிற்றைநா ளுனக்கிவ் விளந்தலை நெஞ்ச மெங்ஙனே வந்தது கெட்டேன். ()

உன்னிலை மைகளு மொடுக்கமு நெறியு முயர்தவத் தளவிலா தரமுங்
கன்னிய ரின்பங் களிலனு தரமுங் கல்வியு மிப்பொழு தெங்கே
நின்னிக ருரவோ ரிப்படி யழிந்தா னிறைந்தநற் குணங்களுக் கெல்லா
நன்னிலை யான புகலிட மெங்கே நானிதற் கென்கொலோ மொழிவேன். ()

அங்கையி னின்றுன் செபவடம் வீழ்ந்த ததுவுநீ யறிந்திலை யென்னே
தொங்குத லறவே தூய்மையா நெஞ்சுந் துவக்கற வழியுமோ கெட்டேன்
றங்கிய தவத்தோ யுனக்கிது வேண்டா தையலாள் கொண்டவுன் னெஞ்சை
யிங்கினி மீளா யிப்படிச் செயுமோ வென்றவன் சொல்லமற் றிவனும். ()

என்னையோ விந்த வார்த்தைசொல் வதுநீ யென்செப மாலைகொண் டிந்தக்
கன்னிதான் போகக் கடவளோ விடேன்காண் கண்டுகொ ளென்றுரை செய்து
மன்னுவார் புருவம் வளைத்திதழ் துடிப்ப வலியவே பண்ணிவெங் கோபந்
துன்னுமா போனின் றளிதரு முகத்தாற் றொடர்ந்துவந் தென்முக நோக்கி. (சஅசு)

என்செப மாலை தந்தலா தானை யேகலாய் பேதைநீ யென்னத்
தன்செப மாலை யாகவே கொண்டென் றனமிசை முத்தமா லையினை
மின்செறி மேனி முனிகையிற் கொடுத்து வெயர்வினின் முழுகிவிட் டிருந்தும்
பொன்செறி கமல வாவியி னுள்ளே புகுந்துநீ ராடிமீ தேறி. (சஅஎ)

திரையெறி பெருக்கா றணையிலே தேங்கித் தேங்கிநின் றெதிர்செலு மாபோல்
வரைதரு தாதி மார்சிறைப் பட்டென் வசமழிந் தன்னையோ டேகிப்
பொருவற விளங்கு மென்மனைப் புகுந்தேன் புகுந்தவப் பொழுதுதான் முதலா
வொருசெய லின்றி விரகமோ கத்தா லுடல்சுழன் றுள்ளமு மறைபோய்.

இங்குவந் தனமோ வங்குநின் றனமோ விருந்தனம் போதுகின் றனமோ
தங்குநந் தமரோ டுரைத்திருந் தனமோ தனித்துரை யாதிருந் தனமோ
பொங்குள மகிழ்ந்து நகைத்திருந் தனமோ புலம்பியே திகைத்திருந் தனமோ
வெங்கிருந் தனம்யாம் யார்கொலோ நம்பே ரேதென வொன்றறி யாதே.

இதற்குமுன் காம நோயறி யாதே னென்னநோ யீதென வறியா
திதற்கெது செய்வேன் யார்க்கெடுத் துரைப்பே னெங்ஙனே யேகுவே னென்றென்
றுதித்தவே தனையா லொன்றறி யாதே யுயர்மனை மேனிலத் தேறி
மதித்தபாங் கியர்கள் யாரையுந் தகைந்து மகிழ்விளை யாட்டலா மறந்து.

சீதள மணிச்சா ளரத்திலே வதனஞ் சேர்த்தவ ணின்றவத் திசையைக்
காதலி னோக்கி யத்திசைக் காற்றைக் கலந்தவன் விடுத்ததூ தைப்போ
லாதரித் தெதிர்கொண் டவனதி தூர மாகவு மாதப னளவின்
மேதகு கமல மென்னமற் றவன்மேல் விருப்புவைத் தங்ஙனே நின்று. ()

ஈதவ னமக்கு நல்கிய செவித்தா ரீதவன் செபவட மென்றென்
ருதர வுடனே யவற்றையே நோக்கி யாங்கவை பற்றுக்கோ டாக
மேதக விருந்தே னிருந்தபோ தெனக்கு வெற்றிலை யிடுந்தர ளிகைதான்
ருதவிழ் வாவிக் கென்னுடன் போந்தா டாழ்க்கநின் றென்னிடை வந்தாள்.

வந்தெனை நோக்கி யெம்பெரு மாட்டி வாய்த்தவிண் ணப்பமொன் றுண்டு
சிந்தனை யொழிந்து கேட்டரு ளென்று செப்புவா டெய்வவா வியிலே
முந்துற நடந்த பொழுதுநாங் கண்ட முனிகுமா ரரினுனக் கிந்தக்
கொந்தவிழ் செவித்தார் தந்தவன் முன்னங் கூடவந் தவனையு மொழித்து:

பையவந் தடியேன் வருநெறி யருகே பதுங்கிநின் றெனையழைத் தணங்கே
தையலிங் கிவளா ரார்மகள் பேரென் சாருமூ ரேதெனக் கேட்ப
வையகம் பரவும் வள்ளல்காந் தருவ மன்னர்கோ னஞ்சன்மா மகள்பே
ரெய்யும்வெஞ் சிலைவேள் புகழ்மகச் சுவேதை யேமகூ டம்பதி யென்றேன். (சகச)

என்னமற்றவனுந்திகைத்துநின்றொன்றையியம்புவான்போலவந்தென்றன்
முன்னுரைத் திடவுங் கூசியென் முகமே முறைமுறை நோக்கிநீ டுயிர்த்துப்
பின்னையுற்றிரந்துகொண்டுநின்றன்னைப்பெருகவுட்கொண்டதென்னுள்ள
முன்னிடத் தொருகா ரியமுள தணங்கே யுரைக்கவோ வொழியவோ வென்றான். ()

யானுமப் பொழுது வணங்கிநின் றெந்தா யெங்களுக் குங்கள்கண் பார்வை
யானதுட் படவுந் தீவினை யகற்று மாகையா லருளிய கருமந்
தானினிச் செய்கை கேவல மன்றே சங்கியா தருள்செயீ ரென்ன
நானுயிர்ப் பாங்கி யாகவே நெஞ்சா னயந்தருட் பார்வையா னோக்கி. ()

அங்குநின் றதொரு பச்சிலை மரத்தி னரும்பிய கொழுந்தெலாம் பறித்துப்
பங்கயந்திகழுஞ்செங்கையாற்பிசைந்தோர்பாறையிற்பிழிந்ததன்சாற்றாற்
சங்கைமற் றின்றிப் போர்த்தவற் கலையின் றலையிலே சிறிதுகீண் டெழுதி
மங்கைசெங்கையிலே யொருவரு மறியா வண்ணநீ கொடுவெனத் தந்தான்.

என்றடைப்பையிலேயிருந்தபட்டிகையையெடுத்தவள்காட்டமற்றியானுந்
தொன்றுபட் டுவருங் காதலர் போலத் தொழுதிரு கைகளால் வாங்கி
நின்றறப் பதறி நெஞ்சுமுன் னோடை நிமிர்ந்திரு தனங்கள்பூ ரிப்ப
வொன்றினைப்பலகாலுவந்துவாசித்தேனுற்றவாசகமதுகேண்மின். (சகஅ)

தனக்கிரை யான தாமரை வளையந் தானெனத் தாளமா லையினை
நினைத்துடன் கவ்வி வெள்கிய வன்ன நெடுந்துய ருழந்திருந் ததுபோற்
சினக்கயல் விழியார் முத்தமா லையினைச் செபவட மென்றுகேட் டுண்டு
மனத்திடர் பெருகா நாணுறு வருந்தா மயங்குகின் றனெனொரு முனியே. ()

என்னும்வா சகத்தைக் கண்டபின் குருடர்க் கிருண்டகூ ரிரவுவந் தெனவு
மன்னுகா னிடையே வழிபிழைத் தவர்க்கு வருந்துதிப் பிரமமுற் றெனவும்
பன்னுமா றறியா வூமனுக் குள்ள பழையநாக் குஞ்சிதைந் தெனவு
முன்னமே மதனன் மயங்கிய வெனக்கு மோகமே மிகவளர்ந் ததுவே. ()

அத்தர ளிகையை யுவந்துவந் தன்பா லணைத்தணைத் தளகமு றுதலு
மெத்தன வொடுதை வந்துதை வந்தென் மெய்யனை யெங்ஙனே கண்டா
யெத்தனை நேர மவனிடை நின்று யென்சொனு னிரந்துகொண் டுன்பி
னெத்தனை தூரம் வந்தன னெனக்கேட் டிங்ஙனே பகலெலாங் கடந்தேன். (இ0க)

அப்பொழு தொருவ னிதயரா கந்தோய்ந் தறச்சிவந் தென்னவா னிரவி
மெய்ப்படு வலையஞ் சிவந்தது கமல விரைமலர்க் காடுகள் குவிந்த
வொப்பருங் குமுத வனமெலா மலர்ந்த வொன்றிய சக்ரவா கங்க
டப்புடை யவர்போ லகன்றவப் பொழுது தானொரு சேடிமுன் வந்து. ()

செந்திரு வனையாய் போற்றிமுன் றந்த செபவடம் வாங்கவந் தேனென்
றந்தமில் வாவிக் கரையினுங் கண்ட வருந்தவ முனிவரி லொருவன்
வந்தனன் வாயி னின்றன னென்ன மகிழ்ச்சியான் மனத்தைமுன் விடுத்து
முந்துறத் தவளக் கஞ்சுக மாதை முனிவனை யழையென விடுத்தேன். ()

விடுத்தபி னந்தக் கஞ்சுகக் கொடிபின் வெண்ணிலா வரவத னுடனே
யடுத்திள வெயிருன் வருவதே போல வயிரொளி பரப்பியென் னெஞ்சந்
தொடுத்தபுண் டரிக னிதயமே யன்ன தோழனுங் கபிஞ்சல முனிவன்
கெடுத்ததொன் றுடையார் போன்றுமொன் றிரந்து கேட்பவர் போன்றுமுன் வந்தான்.

வந்தமா முனிவன் மனக்கருத் தெல்லாம் வந்தகோ லத்தினு லறிந்து
முந்தெழா வணங்கி யாசனத் திருத்தி முளரியந் தாள்கழீஇ யெனது
சுந்தரா திரேகை யுத்தரி யத்தாற் றுடைத்தரு கேநிலத் திருந்தே
னந்தமா முனியுஞ் சிறிதுபோ தொன்றை யருள்செயா தங்ஙனே யிருந்து.

ஒன்றுரைப் பவர்போ லென்முகம் பார்க்கு முரைசெயான் றரளிகை தன்னை
நின்றுபற் பலகா லெண்ணுமற் றிதனை னெறிமுனி நினைவைநா னறிந்து
துன்றுமெய்த் தவனே யையுற வேண்டா தோகைதா னிவளெனக் குயிர்கா
ணின்றுரைத் தருளாய் நெஞ்சிலுள் ளவெலா மென்னமா முனிவர னுரைப்பான். ()

வரிகழ லரசர் வான்குல வித்தே வருகவென் சொல்லுகேன் வாக்கும்
புரிதரு கின்ற தில்லைநா ணத்தாற் புகலநான் போந்தவிக் கருமம்
விரிசடை யிதனுக் கேற்றதோ விந்த மேகலைக் கேற்றதோ விந்த
விருமர வுரிக்கு மேற்றதோ வென்னே யிப்படிச் செய்ததே தெய்வம். ()

எங்களுக் கிதுபோற் பரிபவ மில்லை யென்னினு முபாயம்வே றில்லை
யுங்களுக் குரைத்துத் தீரவே வேண்டு முரைசெயா திருக்கிலோ விந்தக்
கங்குலிற் பெரிய தொருபிழை விளையுங் கலந்ததன் னுவியை நீத்து
மங்கடுத் தவனைக் காப்பதே முறைமை யாகையாற் சொல்லுகேன் கேண்மின். (௫௦௮)

அப்பொழு தின்முன் னவனைநான் கோபித் தறக்கொடி யனசில பேசித்
தப்பிது தவிர்நீ யென்றுபூ சைக்குத் தருமலர் கொடுவரப் போனேன்
மைப்படி குழலாய் நீயுநீ ராடி வந்துவிட் டனையதன் பின்னு
லெப்படிச் செய்தா னிவன்றனி நின்று னிவனைநா மறிகுவா மென்று. ()

ஆங்கவன் முன்பு நின்றிடத் தேசென் றருகொரு தூற்றினின் றொளித்துப்
பாங்குடன் பார்த்தேன் கண்டிலே னதனாற் பரிதபித் தனங்கதா பத்தாற்
பூங்கொடி யவள்பின் போகிவிட் டனனோ பொலங்கொடி போனபின் றெளிவுற்
றீங்கெனைக் காண நாணியே கினனோ வென்செய்தா னென்றுநின் றழுங்கி.

சென்றிலச் சையினன் முடியிலே தேனுஞ் செய்யினுந் தெரிந்திரா திவனை
யின்றினித் தனியே விடுகைகற் பல்ல வென்றுகொண் டவ்விட முதலாத்
துன்றுமைப் பொழிலும் வாவியுங் கிரியுஞ் சுனைகளு மெங்கணு நாடி
நின்றறத் துயரங் கூர்ந்துகா ணாமை னெஞ்சழிந் தேங்குமப் போது. (ருகக)

நிறைமலர்த் தடத்துக் கண்ணிதா யெங்கு நெருங்குபூம் பொழிலுடைத் தாகிச்
சிறையளிச் சமுக மின்னிசை பாடச் செறிந்துகோ கிலமெலாங் கூவக்
குறையறக் குலவி மயிலின மாடக் குருமலர்த் திரளெலாங் கண்டு
மறுவறப் புதிய வசந்தன்வீற் றிருக்க வகுத்ததோர் மண்டப மெனலாய்.

அதிமனோ கரமா யிருப்பதோர் கொடிமண் டபத்திலே யறிவெலா மழிந்து
முதிரவே கருத்து முற்றியோ ரிருக்கு முறைமையே போலவு மழுங்காப்
புதியவோ வியமே போலவுஞ் சிறிதோர் புறத்திலு மலைவுறு தொருவ
னிதியமா மொழுக்கந் தன்னினின் றலைந்து நெஞ்சுணீ யிருக்கவுந் தனியாய்.

மிகவனு ராக முடையனா யிருந்தும் வெளிறனா யொன்றினை வாக்காற்
புகலுதல் செய்யா திருந்துமா மதவேள் போரின்வே தனையுரைப் பவனா
யகமுறு துயரம் பொறுக்கமாட் டாம லஞ்சியோ டியதுபோ லஞ்சு
தகைதரு புலனு மொளிப்பவெற் றுடம்பு தன்னையே தரித்திருப் பவனாய்.

சற்றிமை திறவாக் கண்களி னுள்ளே தயங்குகா மக்கனற் புகைவந்
துற்றது போலக் கண்ணினீர்த் தாரை யொருசிறி தொழுக்கறு தொழுகச்
செற்றிய கொடியின் றளிர்களும் பூவின் றளிகளுந் தீந்துதீந் துதிர
முற்றிய காமக் கனன்முகந் தெழுந்து மூச்சுமேன் மேன்மிக வீச. (ருகரு)

கன்றிய வாம கபோலம்வீழ்ந் திருந்த கரநக கிரணம்வா னுதன்மே
லொன்றியவாரக் குழம்பெலாமணிந்த தொப்பவே யொளிரமுன் செவிமேற்
றுன்றிய பாரி சாதவா சத்தாற் சூழ்ந்தவண் டுகள்செவி யருகே
சென்றடன் மதன மோகமந் திரமே செபிப்பது போன்முரன் றார்ப்ப. ()

மதனவே ளெய்த மலர்க்கணைத் தாது வடிவெலாம் பதிந்துநின் றதுபோல்
விதனமே செய்யும் விரகதா பத்தான் மெய்யெலாம் புளகமுற் றேற
முதிரவே காமன் மோகன நீற்றை [illegible] றெறிந்தது போலப்
புதியபோ துகளிற் சுண்ணமா னவெலாம் பொழிலிளங் கொம்புகள் வீச.

இளமலர்க் கொடிக ளெழில்வன தெய்வ மெனமொழி மகளிர்செய் தருளும்
வளமிகு கலசா பிடேகதா ரைகள்போன் மதுவினைப் பொழியவே வார்க்கக்
களகள கவென வாரவா ரித்துக் காமன்வெம் படையெழு வதுபோற்
குளிர்பொழின் முழுதுங் குயிலினங் கூகூ கூவெனச் செவிசுடக் கூவ. ()

பொற்றலை யம்பைப்புகையெழக் காய்ச்சிப்போர்மதன் புடைப்பதே போலச்
செற்றிவண் டுக்கள்சூழ் செம்முகை களினாற் செழுமலர்க் கொம்புக ளுறைய
மற்றிவ னெஞ்சிற் றவவலி யின்ன மாய்ந்ததோ வில்லையோ தானென்
றுற்றறி வதுபோற் றென்றல்சென் றுடலு முள்ளமு மெள்ளவே தடவ.

வைகறைமதிபோல் வெளுத்துவெங்கோடைவந்தடர்கங்கைபோலிளைத்துச்
செய்கன லுள்ளே பற்றிய சந்தின் செழுமலர்க் கொம்புபோல் வாடி
நைகர மான குருடனே போன்று நாவிலா வூமனே போன்றும்
பெய்குர லறியாச் செவிடனே போன்றும் பேயடிப் புண்டவர் போன்றும்.

வீரவேள் வெற்றித் துவசமே போல விளங்கிய முத்தமா லையினைச்
சேரவோர் கையான் மார்புட னணைத்துத் தீர்விலா மோகமேற் கொண்டே
யேருலா வியசீர் மதனசிங் கார விரதமோர் வடிவுகொண் டிறங்கிப்
பாரின்மே லிருந்த தென்னவே யிருந்தான் பாவியே னிதனையுங் கண்டேன். (௫௨௧)

கண்டிமை யாமற் பார்த்துநின் றுள்ளங் கலங்கிநொந் தறநடு நடுங்கி
மண்டிய வாசா ரத்தினு லறிவால் வானவர் முனிவர்கண் முதலா
வெண்டிசை யோரும் வியந்துகொண் டாடு மிவனையு முட்பட வென்னே
திண்டிறன் மதவே ளிந்நிலை கண்டான் சிலைமதன் வலிமையே வலிமை. ()

என்றுசென் றருகேயிருந்தவன் றூண்மேலென் கைபோகட்டுயிர்த்துணைவா
நன்றுநன் றிதுதா னென்கொல்கண் விழியாய் நண்ணிய துரைசெயா யென்னக்
கன்றிநின் றறவே சிவந்தெழுங் கண்ணீர்க் கடலிலே மிதந்திமை யிமையோ
டொன்றுகண் களினை மெல்லவே விழியா வுற்றெனை நோக்கிநீ டுயிரா. ()

செழுமணி மிடறு தழுதழுத் தறவே செப்பவாய் மொழிதடு மாற
வழுதழு திருந்து துணைவநீ யிந்த வடைவெல்லா மறிந்திருந் தொருவேன்
பழுதுற வினனே கேட்டுவிட் டனையே பாவியே னென்றுவே றொன்றில்
விழைவற விருந்தா னுமற் றிதுதான் மீட்கொணு தென்றுளே கருதி. ()

ஆகினு மிதனை யானது பார்ப்பே மடுத்தவன் வழியலா வழியே
யேகிய பொழுது கடிந்துமீட் காம லிருக்கைபண் பன்றென நினைந்து
மோகித னுன வவன்முக நோக்கி முறைமையோ நமக்கிது நண்பா
நீகரு தியது குருவுப தேச நீதியோ தருமநூ னெறியோ. (௫௨௫)

இருநர களிக்கு மாதர்கூட் டத்தை யின்பமென் றுதரித் தொழுக
றருமமி தென்று நச்சுமென் கொடிக்குத் தண்புனல் சொரிவது கண்டாய்
பரிமள நீல மாலையென் றிருண்ட பாம்பினை யணிவது கண்டாய்
விரிசுட ரழலைச் செம்மணி யென்று மெய்யினோ டணைப்பது கண்டாய். ()

ஆகையா லிந்த நெறியலா நெறிபோ யயருமைம் புலனையு மீட்டு
மோகமா னதுவு மாறிநீ தெளியாய் முனிவனே யென்னவென் மொழியைப்
பாகையாற் றகைந்து தன்கணீர் துடைத்துப் பரிவினு லென்கரம் பற்றி
யோகைசேர் துணைவா பலபடி மொழிந்தெ னென்றுகே ளென்றவ னுரைப்பான். ()

உருத்தெழு முரகக் கடுவிடம் போலு முருவிலி கணைகளுக் கிலக்காய்க்
கருத்தழிந் திலையே யாகையி னுலே காரியஞ் சொல்லநீ வல்லை
தரித்திட நெஞ்ச முடையவற் கன்றோ சாற்றுவ திவையெலா மினிமேற்
றிருத்தவு மிந்த நெறியுப தேசஞ் செய்யவுங் காலமோ வல்ல. (௫௨௮)

என்னைநீ யிடித்துப் பேசவும் வேண்டு மியானுநீ யேதுரை செய்தா
யன்னதே செய்வே னாகினு மினியென் னடைந்தபே ரவத்தைகண் டனையே
மன்னுமா ருயிர்போ முன்னமென் னுள்ளே வடவைவெங் கனலினுங் கொடிதாய்த்
தன்னிலே யெரியுங் காமவெங் தீக்குத் தக்ககா ரியமினி முயலாய். (௫உ௯)

என்றுரை செய்து மீளவுங் கண்க ளிரண்டையு மிமைப்பற மூடிப்
பொன்றினர் போலே யிருந்துவிட் டனனப் போதிலும் பலபல முகத்தாற்
கன்றியு முவந்து மிரந்துகொண் டுரைத்துங் கலைகளாற் றேற்றியும் பார்த்தே
னொன்றிலுந் தெளியக் கண்டிலே னதனா லுளமழி துயரினோ டெழுந்து. ()

சந்தனத் தளிரை யளவறக் கொய்து சாறுகொண் டெங்கணும் பூசிச்
சுந்தரக் கற்பூ ரத்தரு வுலர்ந்து தோலிடைத் தோலிடை நின்ற
பைந்துகட் டிரளை வாங்கியோர் வடங்கும் படிநெரித் துடம்பெலாந் திமிர்ந்து
முந்துறப் பிழிந்த சந்தனச் சாற்றை முகந்துமார் பகத்திலே தேக்கி.(௫௩க)

அரம்பையங் குருத்தால் வீசினேன் வீச வீசவெவ் வழல்கொளுந் தியபோற்
றரம்பயில் பாய றீந்தது பின்னுஞ் சருகெழச் சருகெழ மாற்றிப்
பரம்பிய பாய லிப்படிப் பலகாற் படுத்தெனு லாவது பார்த்தேன்
வரம்பறு தாப மொன்றிலுந் தணியா வாறுகண் டதிபய மெய்தி. (௫௩உ)

ஒன்றிலுந் தீரா திந்தநோ யிவ்வ னுவகையான் முயக்கினு லல்லா
தென்றுகொண் டொன்றும் விசாரியா துன்பா லிரந்துவந் தனனிதற் கினிமே
னன்றுறுங் கருமஞ் செய்கநீ யென்று நவின்றிவ ளேதுசொல் லப்போ
கின்றன ளென்றென் முகத்தையே நோக்கிக் கேட்குமா றுதரித் திருந்தான். (௫௩௩)

நானுமீ தெல்லாங் கேட்டிருந் தெய்தா நல்லமு துண்டவர் போல
வானவா னந்தக் கடலிலே முழுகி யவனையு மென்வச மாக்கும்
வேனின்மா மதனுக் கென்னகைம் மாறு வினையனேன் செய்வதென் றெண்ணி
மோனமாய் நாணித் தலைகவிழ்ந் திருந்தோர் மொழிமொழி வேனெனு மளவில். (௫௩௪)

வேறு.

யானென் றனுங்கி யிருந்தே னெனக்கேட்டுத்
தேனென்று சொல்லன்னை சேடியருந் தோழியருந்
தானென்ற வந்து தலைப்பட்டா ளவ்வளவில்
வானென்று மாதவத்தோன் வாளா வெழுந்திருந்து. (௫௩௫)

கொம்பேநான் வந்து குவானேர முண்டினிநீ
வம்பேயென் னண்பன் மறுகாமற் காத்தருளென்
றம்பேய் விழிததும்ப வஞ்சலி சேய்க்கதியாய்
வெம்பேய்கொண் டார்போல் விடநெருக்கித் தொண்டகன்றான் ()

அன்னையும் வந்தென் னருகிருந்தா ளப்போதி
லின்னது செய்தா ளெதுசொன்னா ளென்றறியேன்
மன்னிய நெஞ்சறைபோய் வாடி யயர்ந்திருந்தேன்
பின்னை யவளும் பெயர்ந்தாண் முகநோக்கி. (ருகஎ)

தேவன் றனபாலன் சேரலர்போல் வானிரவி
தாவும் பரித்தேருந் தானுங் கடற்புகுந்தான்
கூவுங் குயிற்காளை கோலா கலத்துடன்வே
ளேவுங் கணைமாரி யேதளவென் றேதுவேன். (ருகஅ)

கற்ற கலைதேர் கபிஞ்சலன்வந் தம்முனிசெய்க்
குற்றபிழை யெல்லா முரைத்ததுவுங் கேட்டனையே
மற்றினியென் செய்யும் வகையறியே னென்றனக்குத்
தெற்றெனவுண் டாகச் செயுங்கா ரியமுரையாய். (ருகசு)

மாதர்க் கணியா மடமுநா ணுந்துறந்து
கோதற்ற பெண்மை குலமொழுக்கம் பாராமன்
மேதக் கவருரைக்கும் வீணுரைக்கு மஞ்சாம
லாதிக் குரவ ரனுமதியு மில்லாமல். (ருசo)

நாமேபோய் நண்ணினு னங்குரவ ரைப்பிழைத்த
தீமேவு வெம்பாவஞ் சேரு மதுபார்க்கில்
யாமேது பட்டே மெமையிரந்து கொண்டகன்ற
தூமேனி மாதவத்தோன் சொன்மறுத்த தீங்குவரும். (ருசக)

ஈதெல்லா நிற்க வினியொன்று நம்முடைய
காதலா லந்தக் கலைமுனிக்கோர் தீங்குவரிற்
றீதிலா நங்குடியைச் சேரக் கெடுத்துவிடு
மாதலாற் செய்யுமெந் நன் னனமே யென்பளவில். (ருசஉ)

பாதலத்திற் சேடன் பணுமண் டலமிந்தப்
பூதலத்தை விட்டுப் புறப்பட்ட தேபோல
வேதனைக்கு வித்தான வெய்யமதி மண்டலம்வந்
தேதமுற்ற பாவிக் கெரிதூஉ யெழுந்ததே. (ருசங)

காமத்தீ யுள்ளே கனலப் புறம்பெல்லாஞ்
சோமத்தீ வந்து சுடநஞ்ச முண்டாரைச்
சேமத்திக் காரரவந் தீண்டினுற் போன்மயங்கி
வேமத்தீ யாற்றமல் வீழ்ந்தேன் றராளிகைமேல். (ருசச)

சோரு மளவிலவ யேநறுஞ் சாந்தமணிந்
தாருமதிக் காந்த மணிநுதன்மேற் சேர்த்தொற்றிச்
சேருங் கவரியினல் வீசச் சிறிதுணர்ந்து
சாருந் தராளிகையைச் சற்றே கடைக்கணித்தேன். (ருசரு)

வெய்யநோய் கொண்டேன் விழித்ததுகண் டாங்கவடா
ளையகோ வென்றென் றடிமேல் விழுந்தழுது
செய்யபூ மாதனையாய் தேறுகநீ யஞ்சாதே
யுய்யநான் போயுன் னுயிர்க்கேள் வனைக்கொணர்கேன். (நிசசு)

போகவு மீண்டு வரவும் பொறுயாகி
லேகுக வென்னே டினியென்ன நாணமக்குச்
சோகமு மிந்தத் துயருமவன் றனலா
தாகுந் தமர்களெலா மாற்றுகைக்கு வல்லரோ. (நிசஎ)

என்ன வதனுக் கிசைந்தனங்க னேவினையா
லன்னவள்செங் கைதாங்க வாய்ந்தாய்ந் தெழுமளவிற்
றுன்னிமித்த மாகத் துடித்ததுகண் ணுங்கதுகண்
டென்னபிழை தெய்வ மினிவிளைப்ப தென்றஞ்சி. (நிசஅ)

வெள்ளிலைகற் பூரம் விரைப்போது சாந்தமுத
லுள்ளவெலாங் கொண்டவள்பின் போத வொருவேனுந்
தெள்ளுநறுஞ் சந்தனச்சே றுடிச் செபவடமும்
வள்ளலணி பூங்கொத்தும் வான்றுணையா கக்கொண்டு. (நிசகூ)

செம்பத்ம ராக கிரணத்தாற் செய்தனைய
பைம்பட்டொன் றுமேல பழுதறவே முட்டாக்கிட்
டிம்பர்க்கு ணோராக யாரு மறியாமல்
விம்பச் செழுமதிதோய் மேனிலத்தி னின்றிறங்கி. (நிநிo)

வான்சோலைக் கேகும் வழியே புறப்பட்டேன்
றேன்சேர் செவித்தாரின் றெய்வப் பரிமளத்தாற்
கான்சூ ழளிகள் கரும்பட்டாற் போர்த்ததுபோற்
றான்சூழ நான்போந் தனிக்குத் துணையாக. (நிநிக)

காமன் சிலைவாங்கி யம்படைசக் காலைவாய்ச்
சோமன் கரந்தாழ்த்துத் தூரநின்று தாழ்ச்சிசெய
நாமந் தருநாளைப் பின்னுக்கி நன்னெஞ்சு
மாமன்பு மாதரமு மைம்புலனு முன்னோட. (நிநிஉ)

வந்து வழியின் மலரினருந் தூளிகளாஞ்
சிந்து புழுதி புடைத்தேறுஞ் சேவடியைச்
சந்திரிகை யானுருகிச் சந்திரகாந் தங்களினின்
றுந்தி யரித்தோடு முதகத்தி னுற்கழுவி. (நிநிந)

தாமத் தரளிகையைப் பார்த்துத் தரளிகாய்
யாமத் திடையே யெமையிழுத்து வந்தமத
னுமக் குரிசிலையு நம்மெதிரே தள்ளிக்கொண்
டேமத் துடன்வரிலோ வென்று சிலபேசி. (நிநிச)

சீராடிக் கொண்டு வருமளவிற் றெள்ளுதிரை
நீராவி யின்குடபா லாகநெடுந் தூரத்தே
வாரா வொருகுரலென் வன்செவியி லேகாய்ந்த
நாராசம் போனுழையா நன்னெஞ்சை வாட்டியதே. (௫௫)

வந்தமொழி யாலும் வலக்கண் டுடிப்பாலுஞ்
சிந்தையழிந் தோடிச் சிறிதிடந்தான் சென்றளவி
லந்த நெடுங்குரலோ ராண்குரலா யக்குரலு
னெந்தை கபிஞ்சலன்ற னீடுபட்ட தோர்குரலாய். (௫௬)

கெட்டேன் விதியே கெடுவாய் கெடுத்தாயே
மட்டோர் கணைமதனு வன்பாவி வாழ்ந்தாயே
பட்டே கிடந்தனையே பாவியே னன்பாவோ
விட்டே னினிவாழ்வு வேண்டேனுன் வேண்டேனே. (௫௭)

திங்களு மன்மதனுந் தென்றலுமற் றெல்லீரு
மிங்கு முயன்றெண்ணு மெண்ணமெலா முற்றியதோ
வுங்கள்கண் ணிப்போ துறங்கியதோ பாவிகா
ளெங்கள் குடியை யிறங்கவிட விட்டீரே. (௫௮)

வெந்ததே நெஞ்சம் விழுந்ததிடி யென்றலைமே
லுய்ந்தினி நண்பா வுனைப்பிரிந்து வாழேன்காண்
வந்துயர் காணாத மாச்சுவே தாய்நீயு
மிந்தமறஞ் செய்யவிவ னென்னபிழை செய்தானே. (௫௯)

நேய முடைச்சுவேத கேதுவே நின்புதல்வ
னுயுவைவெங் காம னடப்பறித்துக் கொண்டான்கா
ணீயிவை யொன்று மறிந்திலையே நீடுளத்துட்
டைய கொடுவினையே செய்வதினிச் சொல்லாயே. (௫௬0)

சாற்று தவமே தருமமே சத்தியமே
யேற்றமுடை னீங்களினி யெங்கே யொதுங்குவீர்
நோற்ற கலைமகளே நூல்வாங்கி விட்டனையே
போற்றியபொன் னுடே பொலிவழிந்து போயினையே. (௫௬௧)

வன்னெஞ்சா யென்னை மறந்தா யுனக்கிந்தக்
கன்னெஞ்சார் தந்தார் கடைப்பிடியி னீயிறக்க
வின்னஞ்சா காதிருந்தே னென்னே யிரேன்காணுன்
பின்னஞ்சா தேவருவேன் பின்பார்த்துப் போகாயே. (௫௬௨)

ஆரோ டினிதிருப்பே னாரோ டினிமகிழ்வே
னாரோ டினிமனத்தி லற்றதெலாஞ் சொல்லுவே
னாரோ துணையாவா ரையோ தமியேனுக்
கிரோ வினித்தஞ்ச மாற்றேனு னாற்றேனே. (௫௬௩)

உன்னைப் பிரிந்து முயிர்வாழ வல்லேனோ
நின்னைத் தொடர வருகின்றே னிட்டோரா
வென்னைப்பின் பாராம லேகினையே மாச்சுவேதை
தன்னைச் சிறிது நினைந்திலையே தக்கோனே. (௫சுச)

என்று பலவிப் படியிப் படிகூட்டிக்
கன்றி யிரங்கிக் கனன்றுகனன் றேகதறு
கின்ற குரற்கேட்டேன் கேட்டுயிர்போய் வெற்றுடலா
யொன்றை யறியா துலேந்துவாய் விட்டலறி. (௫சு௫)

வேறு

ஓடைநெடுங் கரைக்கொடிக்காட் டுத்தரியங் கோலிவிழ வோடிக் காட்டு
மேடுபள்ள மறியாமல் விழுந்துமெழுந் தும்பதறி மிகத்தள் ளாடிக்
கூடவெனைச் சிலதூக்கிக் கொண்டுபோய் விட்டதுபோற் குவாறா ரத்தை
நாடியொரு நொடிவரையிற் கடந்துகொடி மண்டபத்தை நானே நண்ணி

அங்கொருசந் திரகாந்தப் பாறையிலே பலமலரா லமைக்கப் பட்டுப்
பங்குடைய மலர்க்கணையோன் சாயகத்தின் மயமான படுக்கை மீதே
யிங்கொருவேன் வருமோசை கேட்டசையா தேகிடப்பா னெனவுங் காமப்
பொங்குபெருங் கனலாறித் துயில்கின்றான் போன்றுமெனைப் புலந்தான் போன்றும்.

திருநுதலிற் சந்தனமுங் கற்பூர முழுப்பூச்சுஞ் செங்கை மீது
தருகமல வளையத்தா லணிகாப்பு மற்றதனுற் றருமுந் நூலுர்
விரிதருவா ழைக்குருத்தான் மேலிடுமுத் தரியமுமாய் விளங்கு காமற்
குரியசமா ராதனைக்கா மொருவிரதங் கொண்டங்கே யுறைவான் போன்றும். (௫சுஅ)

திகைத்தழுதே நீர்வற்றிச் சில்லிரத்தம் பரந்ததுபோற் சிவந்திட் டுள்ளே
மிகச்செருகி யொருசிறிதே தோன்றியகண் ணிணையாலே வினையேன் றன்னைப்
பகைத்துமத வேள்பொரநீ பார்த்திருந்தும் விட்டனையே பாவி தென்ற
றுகைத்ததுவு நினைந்திலையே வன்னெஞ்சி யெனவெறுத்துச் சொல்வான் போன்றும்.

இருங்காம வேதனையா லிதயத்தின் மேல்வைத்த விடக்கை யாலே
யருங்காத லுயிரனையா யுயிர்போன தாகிலுநீ யகலே லென்று
தருங்காத லுடனேதன் னெஞ்சகத்தி லுறைவேனைத் தகைவான் போன்றுஞ்
சுருங்காத வெங்காமச் சுரம்பொறுத்த தோவென்று தொடுவோன் போன்றும். (௫எ0)

களத்தணிந்த கமலவளை யங்களினுற் கலைமதிதன் கதிர்க ளாகும்
இளைத்தெழுபா சங்களினுற் பிணித்திழுப்பான் போன்றுமிந்தக் கெடுவா ளைக்கண்
டிளைப்புறுவெந் துயரிரட்டித் திருகையுநீட் டிக்கதறி யெழுந்து வீழ்ந்து
வளைத்திறுகத் தனைத்தழுவிக் கொண்டுகபிஞ் சலமுனிவன் வாய்விட் டார்ப்ப. (௫எக)

அடர்க்கின்ற திறலயிரா வதந்துயிலு மாபோல வரவிந் தத்துக்
கிடக்கின்ற பெரியோனைக் கிழான கொடும்பாவிக் கெடுவாள் கண்டேன்
படைக்கண்கண் மிகவிருண்டு மனமயங்கி யறிவிழந்து பாதா ளத்தே
விடச்சென்று வீழ்பவர்போ லெங்கேயோ தானறியேன் விம்மி வீழ்ந்தேன்.

அப்பொழுதென் செய்தேனோ னென்சொல்லிப் புலம்பினே னறியே னென்று
மொப்பறமுன் செய்தகொடு வினையாலோ பாவிமனத் துரத்தி னாலோ
விப்படிவெந் துயருறுவா ளென்றயனென் றலையிலிட்ட வெழுத்தி னாலோ
வெப்படியோ வெனதாவி யிறந்ததிலை யிறந்ததிலை யென்கை யானும்.

அறியேனா னப்போது நெடுநேரஞ் சென்றதற்பி னயர்வு நீங்கிச்
சிறிதேயோ ருணர்வுண்டாய்த் தீயிலிட்ட புழுப்போலத் திண்பார் மீதே
வறிதேயிப் பாவியுடல் பதைக்கின்ற வாறுகண்டேன் கண்ட போதே
யிறவாதே யிருந்தேனோ வெனக்கருதி யெங்கோனை யெழுந்து நோக்கி. ()

பாவியேன் பாவியேன் புண்டரிக முனியேபா தகமே செய்தாய்
மேவியே வாழவெண்ணி நான்வரவு மவமதித்து விட்டுப் போனாய்
தாவியே நீவெறுக்கத் தாழ்வேது செய்தேனான் றாழ்வுண் டேனு
மாவியே யனையானே யறக்கொடுமை செய்வர்களோ வறஞ்செய் வோரே.

கிளர்ந்தபகற் கடல்கடந்த வருத்தமெலாந் தரளிகையைக் கேட்டுப் பாருந்
தளர்ந்தமொழிக் கபிஞ்சலனைக் கண்டதற்பின் சிறிதங்குத் தரித்தே னில்லை
விளைந்தவிடர்க் கிடைவேனை வெறுப்பித்த பாவிகளார் வீணே நானின்
றளைந்ததனித் துயர்பாரீர் முனிவரரீ ரொருவார்த்தை யருளிச் செய்யீர். ()

அடுத்தவரைக் கைவிடுத்த லழகோதா னென்னுடைய வாசை பாரீர்
கடுத்துமதன் பரிபவித்த படிபாரீர் நொந்தேனான் காணும் பாவி
யிடுக்கணறி வாரில்லை யென்னென்பா ரீங்கில்லை யெனக்கு நீரே
தொடுத்ததுணை யென்றிருந்தே னிப்படியே செய்தீரே தோன்ற லீரே. ()

அறக்கொடிய பிழைகாரி யென்பதுநீ ரறியாம லடியேன் மீது
சிறப்புடைய பெருநேயம் வைத்தீர்நா னிப்படிக்குத் தீங்கே செய்தே
னிறப்பதுவுஞ் செய்திலே னிருக்கின்றே னிதுகண்டு மென்னே யென்னே
மறக்குடியோ நங்குடியும் வாழ்ந்ததே காந்தருவர் மரபு தானே. (௫௭௮)

அப்பொழுதே யென்னருகே யிருந்துவிடா தவமதிசெய் தகன்றுபோய்விட்
டிப்பொழுதோ விவைமொழிவா யென்றேயொன் றியம்பாம லிருக்கின் றீர்நீ
ரப்பொழுது மும்மானை யன்னைசிறைப் பட்டகன்றே னல்லா தேகே
னிப்பொழுதென் றனிபாரீ ரிடர்பாரீ ரினியிரங்கீ ரிறைவ னீரே. (௫௭௯)

இனியெனக்கோர் புகலில்லை யினியெனக்கோர் துணையில்லை யென்னென் றூற்ற
வினியெனக்கோர் தந்தைதா யென்பவரு மில்லையினி யெல்லா நீரே
யினியெனக்கு முன்பளித்த கருணையினைத் தோற்றுவீ ரிங்கே வாவென்
றினியணைத்தென் னிடர்களையீ ரிருடிகளு முனிவர்களோ வெம்பி ரானே.

இந்தவனத் தெய்வதைகா ளிறைஞ்சினே னெங்கோவை யெழுப்பித் தாரீ
ரந்தமிலாய் கயிலாயா வாருமற்றேற் கருள்புரியா யவனி மாதே
வெந்துயர்கண் டிவ்வுயிரை மீட்டருளாய் வாட்டமில்லா விதியே நீதான்
சிந்தைமகிழ்ந் தினியிரங்காய் தெய்வங்கா ளுனேதான் றியங்கு வேனே.()

என்றிஙனே புலம்பியசொல் லேதென்று நினைப்பேறா னெல்லை யுண்டோ
கன்றியபே யேறினர்போற் கதறியே மிகச்சொரிந்த கண்ணி னீருந்
துன்றியசோ கமும்விரித்த தலையுமலைந் தறத்துவண்ட துகிலு மெய்ம்மே
லொன்றியிரா தற்றுதிர்பூ ணும்புழுதி புடைத்தேறு முடம்பு மாகி.(நிஅஉ)

தாவாமலவனுடலோ டொன்றுதல்போன் மெய்யிறுகத் தழுவிக்கொண்டே
யாவாவென் றரற்றியுமுத் தாரத்தை நோக்கியிவ னாவி தன்னைக்
காவாமல் விடுத்தனையே பாவிநீ யெனவெறுத்துங் கண்ணீர்த் தாரை
யோவாத தாளிணையைப் பலகாலுந் தழுவிக்கொண் டிறக்கூப் பிட்டும். ()

தரியாது பலகாலும் பலகாலுங் கபிஞ்சலன்றன் றாளில் வீழ்ந்தும்
பெரியோனே யிவனுயிரைப் பிழைப்பியா யெனவழுதும் பிறங்கு சோகத்
தெரியாலே வெந்தொழிந்தே னென்பளவி லவளந்த விறந்த காலத்
தரிதான பெருந்துயரத் தன்மையடைந் தறமோகித் தயர்ந்து வீழ்ந்தாள்.

அவ்வளவிற் சந்திரா பீடனருந் துயரொடுசென் றணைத்துக் கண்ணீர்
மெய்வளர நனைந்தவவ ளுத்தரியத் தலையாலே வீசி வீசி
யுய்வளவுந் தேற்றியுணர் வுண்டான பின்பவளை யுற்று நோக்கி
யிவ்வளவு துயரமெலா மென்னாலே யன்னைநீ ரெய்தி னீரே. (நிஅரு)

இந்நெடுநாட் போனதனை நினைப்பித்தேன் மாபாவி யினியிவ் வார்த்தை
தன்னைவிடும் விடுமமையு மீதுசாற் றிடவரிது சாற்றி னாலு
முன்னவுநெஞ் சில்லையெனக் குணர்வழிந்தே னினிக்கேட்க வொண்ணா தென்னாற்
பன்னியவெந் துயர்க்கெல்லாம் பிழைத்தீரை யிழப்பதினிப் பண்போ வன்றே.(நிஅசு)

வேறு.

என்றவன் சொன்ன வெல்லையி லவண்மீண் டெரியெழ மூச்செறிந் திறைவா
வன்றைவெந் துயரி லழிவுறு வாவி யானதின் றழியுமோ வுரையாய்
வென்றிவெஞ் சமனும் பாவிபேர் கேட்டால் வெருவுற வோடுமா முனியைக்
கொன்றவ னெஞ்சங் கூசுமோ விதினுங் கூறுறு தனசில வுண்டோ. ()

எனக்குவந் திந்த விடர்விளைந் ததற்பி னிப்படிப் பயனிலா வுடம்பு
தனைச்சுமந் திருக்கை காரண மாகச் சார்ந்ததோர் புதுமையுண் டதுகேள்
கனத்தவெந் துயர்கொண் டிப்படி யுழியுங் காலையிற் றளிகை'முகம்பார்த்
தனத்தம்வந் ததுகண் டாயிழாய் நாமு மற்பர்போ லழுதுபோய் விடவோ.

யானனு மரணஞ் செய்யவே வேண்டு மெனக்குநீ யங்கியின் சயனந்
தானினி யுண்டாக் கென்னுமவ் வளவிற் சந்த்ரமண் டலத்தினின் றிறங்கி
வானிடை வரும்வே கத்தினாற் றோளில் வயங்குமுத் தரியமும் பறக்க
மேனிமிர் மகுட மொளிரவார் குழைமேல் விளங்குகுண் டலமொளி வீச.

தோள்வளை சிலம்ப மார்பின்முத் தாரந்துவண்டெழுந்தசையவெண்குமுத
வாள்வளைக் கன்ன பூரநின் றிலங்க வையக மெங்கணுந் திருமா
ருள்வளை முத்தம் பரந்ததே போலத் தன்னொளி பரப்பவெங் காம
வேள்வளை தெய்வ வடிவனொ ருரவோன் விரையமே தினியைவந் தணுகி.()

ஏமவிண் ணிடைநின் றிருகையு நீட்டி யிங்ஙனே யிறந்துமுன் கிடந்த
மாமுனி தன்னை யெடுத்துமே னின்று வாமக ளேமகச் சுவேதாய்
நீமன மழுங்கி யுயிர்விட லிந்த நெடுந்தவ னுடனுனக் கின்ன
மாமிகு மணமென் றெந்தைசொல் வதுபோ லன்புடன் மொழிந்துமீ தெழுந்தான். ()

ஆனவம் மொழிகேட் டதிபய மெய்தி யதிசய மெய்தியா தரப்பட்
டியானற விரைந்து கபிஞ்சலற் பார்த்தீ தென்னென வவனிதற் கொன்றுந்
தானுரை யாதே சடிதியி லெழுந்து தடையற வெகுண்டுமே னோக்கி
யூனமி லுத்த ரியந்தனைக் கட்டி யுடுத்துவான் மிசைக்குதித் தெழுந்து. ()

என்றனை வரற்கொண் டேகிய கொடியோன் யாரடா யாரடா வென்று
பின்றொட ரச்சென் றனனிரு வோரும் பேதையேன் பார்த்துநிற் கையிலே
மின்றொடர் தாரா கணத்திடைப் புகுந்து விட்டனர் மிகவுநான் றனிப்பட்
டன்றுள மழிந்து தரளிகை தனைப்பார்த் தறிவையோ விதைச்சொல வென்றேன். ()

என்றபோ தவளும் யானுயிர் துறப்பே னென்னுமிப் பயத்தினான் மயங்கி
நின்றுபே யடியுண் டவர்கள்போ னடுங்கிநீடுயிர்த் துரைசெய்வாள்வினையே
னொன்றுமீ தறியே னாகினு மினியொன் றுண்டிது பெரியதோர் புதுமை
பொன்றனீ யென்று தேற்றினா னுன்னைப் புலப்பட நின்றோர்வா னவனே.

இத்தகை யோர்சொற் கனவிலும் பொய்யா தினியிதற் கையமே தெனது
சித்தமு மிதனை நம்புகின் றதுநீ தெளிவுற விசாரியா துயிரைக்
கைத்திடு மதுதான் கற்பதன் றுடனே கபிஞ்சல முனிவனும் போனா
னத்தவ னிதுதா னெவ்வழி யானு மறிந்துவந் துரைசெயா மலிரான்.(௫௰௫)

ஆங்கவன் வந்தா லந்தவா னவனா ரவனிறந் தவனையு மெடுத்து
நீங்கிய தேது காரண மிகவே நேயமுற் றுன்முக நோக்கித்
தாங்குமி னுயிரை யிவனைநீ யின்னந் தழுவுவை யென்றவா றேதென்
றீங்கிவை யெல்லா மறிந்திதற் கீடா யிருத்தலுஞ் சாதலு மாமே. (௫௰௬)

சாமது பெரிய வருமையன் றெளிது தாழ்க்கவிப் போதெனத் தன்னா
லாமது மொழிந்து தாளில்வீழ்ந் தழுதா ளாருயி ரளவிலார் கொடியார்
காமரு முயிர்மே லாசையி னாலுங் கபிஞ்சலன் வருவனே யென்னு
மேமரு மாசை யானுமற் றிவடா னியம்பிய வாசையி னாலும். (௫௰௭)

காரிய மிதுவே யென்றுகொண் டுயிரைக் காத்திற வாமறு ணிருந்தேன்
சீரிய நூறு யிரமுக மொன்றாய்த் திரண்டதோர் பாழிர வதனை
யாருயி ரனைய தரளிகை யுடனே யப்படி யலறியும் வீழ்ந்தும்
பூரிய நிலமேற் புழுதியிற் புரண்டும் போக்கினேன் பொறியிலா வினையேன்.

அழுதழு தரிந்த குரலுமெப் புறமு மலைந்துவீ ழளகமு மந்தப்
புழுதியின் மறைந்த வுடலுமா யிரவு புலர்ந்தபோ தெழுந்துவா வியிலே
முழுகியென் னுடைய முதல்வனார் செங்கை முளரிசேர் செபவட முடனே
யெழின்மர வுரியு மவர்கமண் டலமு மெடுத்துமா தவத்தைமேற் கொண்டு.

தந்தைதா யரையொன் றாகவெண் ணுமற் றமரையுந் தோழிமார் களையுஞ்
சிந்தையா'ன் மறந்து விடயமே னின்று தியங்கிய மனத்தையு மீட்டு
முந்தியோ டியவைம் புலனையு மடக்கி முதல்விர தத்தையே மேற்கொண்
டெந்தையா யாரு மற்றவர் துணையா மீசனைச் சரணமா வடைந்தேன். ()

மற்றைநாணோர்ந்தவிப்புதுமையையோர்வகையினாற்கேட்டென்மாதாவுஞ்
சுற்றிவாழ் தருமப் பரிசனத் திரளுஞ் சூழவே வந்தெனைச் சூழ்ந்து
பற்றியே நெடுநே ரங்கனன் றலறிப் பகரலா நெறியெலாம் பகர்ந்து
முற்றவே வேண்டிக் கொண்டினி யமையு மூடியெ ரொழிகென மொழிந்தார்

எந்தைதானிஙனே வருத்தவும் வருந்தி யிகழ்ந்துநான் மறுத்திட வென்மேற்
பந்தமுற் றெழுநே யத்தின லனேகம் பகலெலா மிங்கிருந் தொருவேன்
சிந்தையிற் றுணிவு மீட்கொணு வாறு சிக்கென வறிந்துநோந் துயரா
லந்தரப் படுநெஞ் சுடையனாய்த்தமரோ டவன்றிருக்கோயிலைபடைந்தான்.

தாதையிப் படியே போனபின் கண்ணீர்த் தாரைமாத் திரத்தினா லவன்மேன்
மேதகத் திகழ்நே யத்தினைக் காட்டி மெய்ம்முனிக் குமாரன்மேல் வைத்த
வாதரத் தனுரா கத்தினு னலிங்கி யனேகதுக் கங்களுக் கிடமாம்
பாதகக் குரம்பை யிதனைநூ லோதும் பலவிர தங்களா லுலர்த்தி. (௬0௩)

கந்தசா கபலங் களையும்வா ரியையுங் கருதுமா காரம தாக்கொண்
டிந்தவா வியின்முப் பொழுதுநீ ராடி யீசனைத் தேசுலா மணியைச்
சந்த்ரசே கரனைத் தொழுதுபூ சித்துத் தரளிகை யோடுநா டோறுங்
கொந்துசேர் மலர்சூழ் சோலையி லிந்தக் குகையிலே யகமெலிந் திருந்தேன்.

இப்படிக் கொடிய பாவியாய் நேய மென்பதொன் றற்றவ ளாகிப்
பைப்படி மிசையோர் பயனறப் பிறந்த பண்பிலி யாகிநண் பிலியா
யப்படி பிரம கத்திசெய் திருந்த வறவுமங் கியாயகா ரியைநீ
மெய்ப்படி குணத்தோய் கேட்பதென் கொலெனு விம்மிவாய் விட்டிருந் தழுதாள். ()

சயமிகு சந்த்ரா பீடனு மிவடன் சாந்தகை யாலருந் தவத்தா
னயமிகு குணத்தா லுண்மையாற் செய்த நன்றியை யறிகையா லறிவா
லியல்புடை மையினா லருளினா லிவண்மே லின்னருள் கூர்ந்துநெஞ் சிளகிப்
பயனறி தவத்தோய் கேளென விவளைப் பார்த்தொரு வார்த்தைதா னுரைப்பான். ()

உலகுதா னின்பந் துன்பமென் றறியா தொருவர்செய் நன்றியு மறியா
திலகுபே ரின்ப மிசைநசை வையா திறந்தவர்க் குதவியாங் கருமம்
பலவுநே யத்தாற் செய்திடச் சோம்பிப் பயனற வழுதுபோய் விடுநீ
யஃகின்மா தவத்தோ யப்படி யன்றே யன்பினாற் செய்திடா துண்டோ. ()

அந்தமா முனிசெய் காரண மாக வன்னைதா தையர்முத லானும்
பந்தமா னவர்கள் யாரையுந் துறந்து பாரின்மே லிந்திர போகம்
வந்ததே யனைய செலவையு நீத்து மலரினு மெல்லிதா கியவிச்
சந்தமே னியையுந் தவத்தினால் வருத்தித் தனிநெடுங் கானிலே யிருந்தாய்.

இன்னமு மொன்றுண் டிங்ஙனே யரிய விருந்தவஞ் செய்திடா நிற்க
மன்னும்வெந் துயரா னெஞ்சையிப் படியே வருத்துகை காரிய மன்று
துன்னுமன் புடையார் தங்களோ டிறந்த தூயவர் செய்வதொன் றன்று
முன்னருந் துயர்கூர் சிந்தையின் மயக்கான் மூர்க்கர்தாஞ் செய்வது கண்டாய். ()

இறப்பது செத்தார்க் குதவியா மென்றோ விறந்தவர் பிழைக்கவோ தாம்போய்த்
திறப்பட வவரைக் காணவோ தமக்குச் செல்கதி யாகவோ வவர்தாம்
புறப்படு தத்தம் விதிவசங் களிலே போவர்கள் வலியவே யிறந்தோ
ரறக்கொடு வினையா மாத்மகா திகளொன் றழிவிலாப் பாவமே பெறுவார்.()

இருந்தவர் பிண்டோ தகக்கிரி யையினா லிறந்தவர் களையுமீ டேற்றி
யருந்தவ முயன்று தாமுமீ டேறி யழகுற விளங்குவர் புவிமேற்
றிருந்திய மனத்தோ ரிருந்ததே யொழிந்து செத்தவ ரில்லையோ ருயிராய்ப்
பொருந்திய விரதி காமன்வெந் துவிழப் பொறுத்திற வாதிருந் திலளோ.()

மன்னர்கோன் பாண்டு மரித்தநாட் குந்தி மரித்திடா திருந்ததும் விறல்வாட்
டன்னிக ரில்லா வபிமனா ருடனுத் தரைமரி யாததுஞ் சிந்து
வென்னுநா டனுடன் றுச்சளை யிறவா திருந்தது மிவரிவர் முதலா
மன்னகேள் வருட னவர வரிறவா வடைவுநீ யறிவுறு தொன்றே. (சுகஉ)

இனியுனக் கொருகா ரியமுள தவன்போ மேதுவே சங்கையா யிருக்கின்
முனிபொருட் டுயிரை நீத்திட றகாது முனிவனோ டின்னமுஞ் சேர்வை
யெனுமுரைத் திறநீ கேட்டதே யன்றோ விறந்தவன் றனையவன் கொண்டு
கனதலத் திடைபோ னதுபிழைப் பிக்குங் காரண மன்றிவே றுண்டோ.()

மன்னுகாந் தருவ மன்னவன் விசுவா வசுமகள் ப்ரமத்வரை யென்பாள்
பன்னகேந் திரனன் மரித்திட ருருவாம் பழமறை முனிதன தாயுத்
தன்னிலே பாதி கொடுத்தளித் திலனோ தழற்கணை சுடும்பரிட் சித்தை
யென்னையாள் வாசு தேவனுத் தரைகூ ரிடர்பொறு தெழுப்பிவிட் டிலனோ.

விந்தைவாழ் பதியா முச்சயி னியிலோர் வேதியர் குமாரனை முதனா
ளந்தயா தவர்கோன் யமபுரத் திடைநின் றழைத்தவா றூறி யாதா
ரிந்தவா றிறந்து பிழைத்தவ ரனேக ரிப்படி யுனக்கும்வந் தெய்துஞ்
சிந்தைநோய தீர்க வென்றனே கமெலாந் தெளிவுறமொழிந்துதான் றேற்றி.

நீர்கொணர்ந் துமுகங் கழுவுவித் திவட னெடுந்துய ராற்றின னப்போ
தேர்கொள்பைங் கொடியா ளுற்றபே ரிடர்கேட் டெழின்முகஞ் சாய்த்தனன் போலத்
தேர்கொள்செங் கதிரோன் குடகடல் வீழ்ந்தான் சேயிழை நியமமுஞ் செய்து
வார்கொடுந் துயரோ டிருந்துநீ டுயிர்த்து வற்கலா சயனமேற் சாய்ந்தாள்

திறமிகு சந்த்ரா பீடனு நியமஞ் செய்ததற் கருகொர்பா றையிலே
நிறைதளி ரதனாற் பாயல்செய் திருந்து நெஞ்சினு லேமகச் சுவேதை
யுறுதுய ரெல்லா மனுபவித் துலகத் துருவிலா ளணையே யாணை
விறலவன்விறலேயென் றுகொண்டவளை மீளவுநோக்கியொன் றுரைப்பான்.

மாதவக் கொடியே யுன்னுடன் வனத்தே வதிந்திட ரொன்றியே பயிலுந்
தாதவிழ் குழலா ளுன்னருட் சேடி தரளிகை தாளெங்கே யென்ன
வாதர வுடனே யவன்முக நோக்கி யண்ணலே முன்புநான் சொன்ன
சீதள வமுத மதனிலே பிறந்த தெய்வமங் கையர்குலந் தன்னில். (சுகஅ)

நிறைந்தமா குணத்து மதிரையென் பாளோர் நேரிழைதோன் றினு ளவளைச்
சிறந்தகாந் தருவ சக்கர வர்த்தி சித்திர ரதன்விவா கஞ்செய்
தறந்தவா வந்தப் புரத்தினுக் கெல்லா மதிபதி யாக்கிமற் றவளை
மறந்திரா திரவும் பகலுமா கமுடன் மன்னிய வுயிரென வாழ்ந்தான். ()

இவர்களிப் படியே யின்புறுங் காலத் திவர்கள்பா லிந்தமூ வுலகத்
தவர்களுக்கெல்லா மனோகரப்பொருளா யமைந்தநற் குணங்களா னிரம்பி
யுவமையற் றுயர்கா தம்பரியெனும்பே ருடையதோ ரொண்டொடி வடிவாய்
நவமணிக் கிடையே படாததோர் மணிதான் ஞாலமேல் வந்துதோன் றியதே. (கஉ௦)

ஈங்கிவள் பிறந்த நாண்முத லாக யானுமற் றிவளுமோ ரடியு
நீங்குத லறியா துடன்விளை யாடி நித்திரை யூணடை யிருத்தல்
பாங்குட னிவையுஞ் சிறிதுவே றின்றிப் பாடுத லாடுதன் முதலா
வோங்கிய கலைகள் யாவையு முடன்றேர்ந் தொழிவிலா வோருயி ரானேம்.

எனக்குவந் திந்த விடர்விளைந் ததற்பி னென்மிசை யன்பினு லெல்லாந்
தனக்குவந் ததுபோ லிவளிடர் கூர்ந்து தன்பெரும் பாங்கியர் முன்னே
மனத்திடர்பெருகாவென்மகச்சுவேதை வருந்தநான் வதுவையுட்புகவோ
சினத்தினி யென்னை வதுவையென் றுரைக்கிற் செகுப்பனு னுயிர்தனை யென்றாள். ()

மற்றிது கேட்ட மன்னர்கோ னிவளோர் மகளுமே யாகையி னுலே
யுற்றொரு வார்த்தை சொல்லவு மாட்டா துயர்குலத் தேவியுந் தானுந்
தெற்றென விதுவே தருமமென் றெண்ணித் தீவினை யேனிடை முழுதுங்
கற்றுணர் கீரோ தன்னெனு நாமக் கஞ்சுகி யொருவனை யேவி. (சுஉங)

நங்குல மகளே யருண்மகச் சுவேதாய் நாளுமுன் னிடரினு லிடர்கூ
ரெங்களை யிவள்கா தம்பரி தானு மிப்படி யிடர்விளைக் கின்றுண்
மங்கையை நீயே திருத்துக வல்லால் வல்லவ ரில்லைநீ சரணென்
றங்கவர் சிறுகா லிங்குற விடுத்தா ரவையெலாங் கேட்டுநா னிரங்கி. (சுஉச)

சொற்றர ளிகையை யவனுடன் கூட்டித் தோழிகா தம்பரி கேணு
னுற்றன துயர்போ தாமைநீ தானு முறுதுயர் விளைப்பது நன்றோ
சற்றுயி ருடனு னிருக்கவோ வேண்டிற் றந்தையார் சொன்னதே கேளென்
றற்றது சொல்லி விடுத்தன னதன்பி னண்ணனீ வந்தனை மாதோ. (௬௨௫)

என்றுமற் றென்று மியம்புறு தயர்ந்தா ளிவடுயின் றமையறிந் திவனு
மென்றளிர்ப் பாயன் மீதுசாய்ந் தையோ வினையனேன் றோழனென் னினைப்பா
னன்றியப் பாவை பத்திர லேகை யாற்றுமோ வரசர்க ளெல்லா
ரின்றெனக் காக வருந்துவா ரென்று நினைந்துகொண் டேதுயில் கொண்டான். ()

வேறு.

அவ்விரு ளகன்ற காலை யருந்தவ மகச்சு வேதை
செவ்விய நியம முற்றிச் செபித்திடச் சந்த்ரா பீட
னெவ்வமி னியமஞ் செய்யா விருப்பவப் போது தன்னிற்
றவ்வமி லன்பு பூண்ட தரளிகை யென்னுஞ் சேடி. (௬௨௭)

மணிக்குழை மணிக்கே யூர மணியணிக் கதிரா ரத்துப்
பிணிப்புறு கச்சைக் கேயூ ரகனெனும் பெயரோர் மைந்த
னிணைத்தபின் வரமுன் னேவந் திருந்தவம் மயிருள் வீழ்ந்து
தணிப்புறு முரிமை யோடத் தையல்பின் போயி ருந்தாள். (௬௨௮)

ஏரணி வீணைக் கேயூ ரகனுநின் றேத்தி யேத்தித்
தூரநின் றிறைஞ்சி வந்து சுவேதைதன் விழியாற் காட்டுஞ்
சீரணி பாறை மீதே திருந்துற விருந்து பின்னர்த்
தாரணி சந்த்ரா பீடன் றன்னையுற் றுற்று நோக்கி. (௬௨௯)

தேவர்க ளசுரர் வித்யா தரரெனுந் தெய்வ வர்க்கத்
தியாவரு மொவ்வார் காம னென்பவன் றானு மொவ்வான்
காவல னிவனு ரிந்தக் கவினிரு நிலத்தோ ருக்குண்
டாவதொன் றல்ல வென்னு வதிசயப் பட்டி ருந்தான். (௬௩0)

தையலு நியம முற்றித் தரளிகை தன்னை நோக்கிப்
பையர வல்குற் காதம் பரியைநீ கண்டா யோவத்
துய்யவள் சுகமோ நீபோய்ச் சொன்னது கேட்டா ளோகேட்
டுய்யவென் சொன்னு ளென்ன வுற்றவ ளெழுந்து நின்று (௬௩௧)

தேவிநீ மொழிந்த வெல்லாஞ் சென்றுநான் மொழிய வந்தப்
பூவையாள் கேட்ட னேகம் பொழுதெலா மழுது நொந்து
தாவிலாத் தனது வீணை தாங்குமற் றிவனோ டுள்ள
தியாவையு முரைத்து விட்டா ளென்றுரைத் தவளி ருந்தாள். (௬௩௨)

இருந்தவவ் வளவிற் கேயூ ரகனெழுந் திறைஞ்சி யன்னே
பொருந்துமெம் பிராட்டி நின்னைப் புல்லினே னென்று சொல்லி
வருந்திநொந் திரங்கி யுள்ள மறுகியுஞ் சிலசொற் சொன்னு
டிருந்திய வந்த வாய்மைத் திறமெலா முரைப்பக் கேண்மின். (சுஙங)

தரளிகை முகத்தா லேதாஞ் சாற்றிய விந்த மாற்றங்
குரவரை மறுத்த லஞ்சிக் கூறிய வாறே வல்லா
விருவினை செய்த தீயே னிதயஞ்சோ தித்த வாறே
மருவிய நேச பாச மாற்றிட வேண்டி மற்றே. (சுஙச)

வனத்திரு னுறையத் தானன் மனையில்வாழ்ந் தனளே யென்று
நினைத்திகழ்ந் துரைத்த வாறே நேயமே நிறையு மென்னெஞ்
சினற்பரி வறியா ரல்ல விப்படி யிருக்க விந்தச்
சினத்தவெங் கொடுமை யெல்லாஞ் செப்பிவிட் டதுதா னென்னே.

அருக்கன்வீழ் துயரி னாலே யழகழிந் தவச மாகுந்
திருத்தகு கமல வாவிச் செறிவினு லறிவி லாத
குருத்தகு சக்ர வாக குலமுமுட் படத்தங் கேள்வர்
கருத்துறு கலவி யின்பங் கைவிடா நின்ற வன்றே. (சுஙசு)

ஆதலா லினிய தோழி யருந்துய ருழப்ப மண்மே
லோதுகா தலினு லின்ப முறுபவ ருண்டோ கெட்டே
னீதொர்கா ரியமு நேரே யாரையு மறுப்பே னின்று
தாதைசூண் மறுத்தா ளென்று சகம்பழிப் பதற்குக் கூசேன். (சுஙஎ)

இதுதுணி வெனக்குத் தம்மை யிறைஞ்சினே னிரந்து கொண்டே
னிதுமுத லென்னை வேண்டி யிருப்பிரே லினியென் னூணை
யிதுபொருட் டாக வென்று மியம்பற்க வென்று சொன்னு
னிதுநுமக் குரைத்த வார்த்தை யென்றுபோ யவனி ருந்தான். (சுஙஅ)

அம்முக மொழியெ லாங்கேட் டணங்கனு ளனேக நேரஞ்
செம்முகங் கருகி வாடித் திகைத்திருந் தவனை நோக்கி
வைம்முக வேலோய் நாமே வந்திதற் கான வண்ண
மெம்முகத் தானுஞ் செய்வோ மேகுநீ யென்று விட்டாள். (சுஙகூ)

மற்றவன் போன பின்பு மாதவ மகச்சு வேதை
கொற்றவன் சந்த்ரா பீடன் குளிர்முக நோக்கி வேந்தே
யெற்றரு முடியான் சித்ர ரதன்படை வீடாய் மாசொன்
றற்றுய் ரேம கூட மதிமனே கரமா யோங்கும். (சுச0)

எண்ணுகிம் புருட லோக வெல்லையில் வளமை காட்டு
நண்ணுகாந் தருவ தேய நாகர்மே லுலகே போலும்
பண்ணுறு மொழியாள் காதம் பரிபரி வுடைய கேண்மைப்
பெண்ணர சுலகுக் கெல்லாம் பேரமு தனையா ளன்றே. (சுசக)

ஆகையா லுனது நெஞ்ச மபூர்வமா னவைதான் காண்
வோகைதா னுடைய தாகி லுற்றுநான் மொழியும் வாய்மை
வாகைசேர் தோளாய் நேரே மருதநொன் ருகி னுனுன்
பாகமா வுறவுக் கின்று பாக்கியஞ் செய்தே னுகில். (௬௪௨)

என்னுட னேம கூடத் தேறவந் தெனிலுங் காட்டிற்
பன்னுற வுடைய காதம் பரியையுங் கண்டு மற்றக்
கன்னிதன் பொல்லா விந்தக் கருத்தையு மாற்றி யந்த
நன்னகர்த் தங்கி யின்று நாளைநா மீள வேண்டும். (௬௪௩)

என்னமற் றவளை நோக்கி யிறைவனச் சந்த்ரா பீடன்
மன்னுமெய்த் தவத்தோ யுன்னை வந்துகண் டளவே யுன்ற
னன்னயத் தழுந்தி விட்டே னெனெனக் குரியே னல்லே
னின்னது செய்வா யென்று திப்படி மொழிவ தென்னே. (௬௪௪)

என்றுரைத் தவட னேடே யெழுந்திருந் தேம கூடஞ்
சென்றுபுக் கரசர் கோமான் சித்திர ரதன்வாழ் கோயிற்
றுன்றுபொற் கிரணம் வீசுந் தோரணந் திகழேழ் கட்டு
மொன்றெனக் கடந்து கன்னி யுறைமனை வாயில் சேர்ந்தான். (௬௪௫)

சொன்னமாச் சுவேதை தோற்றந் தூரத்தே கண்ட போதே
நன்முக மலர்ந்தி றைஞ்சி நயந்தெதி ரெதிரே யோடிப்
பொன்முக வாயின் மாதர் பொற்பிரம் பங்கை யேந்தித்
தன்முனே சேவித் தேகத் தடமணி மதிலுட் சார்ந்தான். (௬௪௬)

வேறு.

எவ்வுலகத் திலுமுள்ள வெழின்மாத ரிவ்வளவே யென்று காண
விவ்வுலகத் திடைத்திரட்ட விருத்தியதோ ரிடமெனவு மிராச போகஞ்
செவ்விபெறச் சிங்கார ரதமிருந்து விளையாடுஞ் செனன பூமி
யவ்விடமற் றிதுவெனவு மழகொளிர்மா ளிகையடைந்தா னடைந்த போது.

செந்திருவா ழமரர்கோன் றேவன்வருந் திருப்பவனி சேவித் தீண்டுங்
கொந்தணிவார்குழன்மடவார்குழாமெனவேகுழாங்கொண்டகோதைமாதர்
சுந்தரவாண் முகசோபை சோதிமதி மண்டலத்தின் சூழல் போன்ற
திந்திரநீ லப்பாறை போன்றதவர் விழிநிழற்று யிடங்க ளெல்லாம். (௬௪௮)

விற்புருவக்கொடிவனத்தின்விகாரமெலாமெழின்மதவேள்விற்காடெங்கும்
பொற்புடனின் றுலவுவதே போன்றதுசெங் கரம்வீசும் பொழுது வீசு
மெற்பயினு நற்கிரண மிகன்மாரன் சரவருட மென்ன லான
வற்புதவா பரணகிர ணங்களா தபன்கதிரை யழித்து வீசும். (௬௪௯)

கன்னியர்க ளழகுரைப்ப தெப்படிதோய் கண்மலரே கன்ன பூர
மின்னுமத ரத்தொளியே முகவிளக்க நகைநிலவே மெய்யி லெல்லாந்
துன்னியசந் தனங்களபஞ் சொல்லேதந் திரிநாதந் தூய மேனிச்
செந்நிறமே முட்டாக்குச் சேலைபதச் சேயொளியே செம்புஞ் சாகும். ()

ஈங்கிவர்வாழ் கட்டிலைவிட் டேகியத னுள்ளேசென் றெய்த வுள்வா
ழாங்கவர்க டந்தாமுக் கடைத்தனவாந் தொழிறோறு மடைந்து நின்று
தேங்கமழு மிதழ்வள்ளிக் கொடிகளுக்குக் கடியளிக்குஞ் செய்ய தாழைப்
பாங்குடைய நறுந்துகளாற் பாத்தியிடு வார்பனிநீர் பரிந்து வார்ப்பார். ()

வாசநறும் பனிநீராற் செய்தனசிற் றுறுடையா வண்ணங் கொட்டித்
தேசுடைய பன்மணிகள் பரப்புவார் தமாலமரஞ் செறிந்த காட்டுண்
மூசிருள்போம் படியாக மாணிக்க விளக்கிடுவார் முத்தத் தாரால்
வீசியமா துளங்கனியைப் பறவையினங் கோதாமல் விரைந்து சூழ்வார். ()

பலபலபுட் பாபரணம் பண்ணுவார் பைங்கிளிபூ வைகளை யெல்லாஞ்
சிலசிலசொற் பயிற்றுவிப்பார்செய்குன்றின் கொடுமுடிமேற்சென்று லாவக்
குலவுசிறைக் கவுதாரி தனைக்கொண்டு போய்விடுவார் கோதில் கீதக்
கலைபயிலச் சங்கீத சாலையிற்கின் னரமிதுனங் களைச்சேர் விப்பார். (௬௫௩)

வேறு.

வனமுலைக் கனத்தான் முன்னே வளைந்தொசிந் தொல்கி நிற்பார்
கனமணித் தூணில் வீசு கதிரையா தார மென்னு
நினைவினிற் பிடிப்பக் கண்டு நீர்விழா வண்ண மாதே
யினமுறப் பிடித்துக் கொள்ளீ ரெனநகை யாடர் நிற்பார். (௬௫௪)

மின்னொளி மணிப்பார் மேற்றம் வெண்ணகை கிரணந் தோன்ற
வன்னது விடுபூ வென்றே யதிலிட றுமற் கூசிக்
கன்னியர் விலங்கு மாறு கண்டுகா ரி[illegible]யீர் காணோ
மின்னமு நிலம்பார்த் தேகீ ரெனவினோ தங்கள் சொல்வார். (௬௫௫)

வருணசா ளரங்க ளாலே வந்துவீழ் பற்ப ராக
கிரணசா லங்க டம்மைக் கிளரிள வெயிலாக் கொண்டு
தருணமா மலர்க்கை யேந்தித் தகைபவர்க் கண்டு மாதே
யருணமா மிந்த வெய்யி லகற்றுறு தெனந கைப்பார். (௬௫௬)

இவைமுத லனேக கோடி யிளையவர் விளையாட் டெல்லா
நவநவ மாக நோக்கி நயந்துட னடந்து சென்று
குவைமலை நெடுந்தோள் வேந்துங் கோமக ளிருந்து வாழு
மவைமணி மண்ட பத்தை யன்புடன் சென்று கண்டான். (௬௫௭)

அந்தமண் டபத்தி னுப்ப னனேகமங் கையர்கள் சூழ்ந்த
சுந்தர மணிப்பீ டத்தோர் தூயபட் டணையிற் சாய்ந்து
தந்திரு வொளியாம் வெள்ளந் தன்னிலே நீந்து வார்போற்
பைந்தொடி யாயஞ் செய்ய பாவைமார் கவரி வீச. (சுருஅ)

பித்திகை சூழத் தோன்றும் பேரெழி லிருநான் காகு
மெத்திசைக் காவ லோரு மெய்திநின் றதுவே போலச்
சித்திர சாலஞ் சூழ்ந்த செய்திமூ வுலகத் தோரும்
பத்தியாந் தரத்தால் வந்து பார்க்கநின் றதுவே போல. (சுருகூ)

இடைவிடா வாய வெள்ளத் தேந்திழை மகளிர் தாமு
மடையவான் பதம்பெற் ருர்போ லழகினை யாதே பார்க்க
வடிவெலாங் கண்டு கண்டு வந்திலக் கணங்க டாமே
தடையிலா வாசை பூண்டு தழுவிநின் றழகு செய்ய. (சுசுO)

பாக்கிய னென் போலப் பயின்றபா லியம்விட் டேகத்
தாக்கிய காம ராசன் ருன்றலைக் கொண்டாற் போல
வாக்கிய விளமைச் செவ்வி யழகெலாந் தழுவி வாழத்
தேக்கிய தேக சோதி திசையெலா நிறைந்து பொங்க. (சுசுக)

வேறு.

உள்ளடி கண்டு பல்லவ நடுங்க வொளிர்நக பந்தியா லஞ்சி
வெள்ளிய முத்தம் புதைபடக் குறங்கான் மெல்லிய வரம்பைநின் றலைய
வள்ளிய விடையான் மின்கள்வா னேற மருவுமுந் திச்சுழி யதனுற்
றெள்ளிய நதியின் சுழியெலா மழிய நிதம்பத்தாற் றேருருண் டோட. ()

விரவிய ரோமா வலியினு லெறும்பு மென்மணற் பாழிபுக் கொளிக்க
வரைபயி லுதர சோபையால் வாடி வடவிலை சருகெழுந் துதிர
விருதன கிரியால் வடமலை வீணே யெழுபுவ னமுஞ்சுமந் திளைக்க
வரியகந் தரத்தால் வளைகடல் புகமெல் லங்கையாற் பங்கயங் குவிய. ()

ஆனதோள் கண்டுவேய்கண்முத் துதிர்க்கவமுதமெல்லிதழினுற்றொண்டை
கானிலே படரப் பற்களான் முல்லை காமவேள் கைக்குளே யாகப்
பானிலா வெழுந்த முகமதி யதனுற் பனிமதி பாதியாய் மெலிந்து
மேனிலா வளர்ந்த நுதலினு லஞ்சி வெய்யவ னிடத்திலே யொதுங்க. ()

காதுசேர் விழியாற் கடலவிடங் கொள்ளக் காதினுல் வள்ளைபங் கமுற
வோதுநா சியினுற் குமிழ்வனம் போத வொளிர்புரு வத்தினு லனங்கன்
மேதகு சாப மாலைபாய்ந் தழிய விரையளகாடவி யதனுன்
மோதுநீர் பருகி மிகமுகங் கருகி முகிலெலாம் வரையிலே பேற. (சுசுரு)

வேறு

வானிடங் கொண்ட தெய்வ மலைமகள் வன்பி னாலே
யானிடங் கொண்டே மென்னு மகந்தையை யறுக்கு மாபோ
லூனிடங் கொண்ட வில்லை ளுருவெலாங் கவர்ந்து கொண்டு
தானிடங் கொண்ட கோலந் தன்னைநே ரின்மை காட்ட. (௬௬௬)

மாயவன் மார்ப நீங்கா வனப்பினேம் யாமே யென்று
சேயவள் களியா நின்ற செருக்கெலாந் தீர்க்கு மாபோற்
பாயதன் பதிவிம் பங்கள் பார்த்தபார்த் திடங்க டோறுந்
தூயசெந் திருவா மாதின் சோதிசேர் வண்ணங் காட்ட. (௬௬௭)

உடையவா னமுதத் திங்க ளொன்றுபெற் றனமே யென்னுச்
சடையிலே விரும்பி யீசன் றரித்தவாச் சரியந் தீர்ப்பான்
முடிவிலா தனசிங் கார முறுவலாற் றிசைக ளெல்லா
மிடைவிடா தனேக கோடி யிந்துரே கைகளே சிந்த. (௬௬௮)

இகலுமா மதன வேளை யெரித்துவிட் டனமே யென்னுச்
சகலநா யகனு ருள்ளந் தருக்கிய வெழுச்சி மீட்பா
னிகரிலாத் தனது சோபை நெஞ்சுக டோறுந் தோன்றும்
வகையறு மனேக கோடி மகரகே தனருண் டாக்க. (௬௬௯)

சக்கர வாகங் கிள்ளை சாரிகை சகோர மன்ன
மைக்குயில் கபோதந் தோகை மான்விளை யாடல் கண்டு
மிக்கதன் றோழி மார்கள் விநோதங்கண் மொழியக் கேட்டுந்
தொக்ககின் னரசா லங்க டொடங்கிய பாடல் கேட்டும். (௬௭௦)

தரந்திகழ் சந்த்ரா பீடன் றன்னையே வியந்து முன்னே
யிருந்துரை செய்யுங் கேயூ ரகன்முக நோக்கி நோக்கிப்
பெருந்தகை யிவரா ரச்சேய் பிறந்தபா ரேது பேரென்
றிருந்திய வயதென் போதுந் திருவழ கிருந்த வாறென். (௬௭௧)

ஏதுதான் சொன்னாய் வள்ள லென்சொனா னேது நேரம்
போதுநீ கண்டு மந்தப் புனிதற்குஞ் சுவேதைக் கும்மிவ்
வாதனை யெஙனே யீங்கு வருவனோ வென்றென் றின்பக்
காதலோ டிருந்த காதம் பரியைவேற் காளை கண்டான். (௬௭௨)

வேறு.

கண்டளவே மதியுதயங் கண்டகடல் போலிதயங் களித்துப் பொங்கிப்
புண்டரிகா லயனெல்லாப் புலன்களையும் விழியாக்காப் புந்தி கேடன்
பண்டொருவேன் விழிசெய்த பாக்கியங்க ளிப்படியோ பலிப்ப தின்பங்
கொண்டபொரு ளனைத்தினுக்குங் கொள்கலமோ விதுமதவேள் கொற்றந் தானே. ()

இப்புதுமை கண்டறிவா ராரிதுநாங் கண்டறியே மிந்த ரூபஞ்
செப்பமிகு நான்முகத்தோன் செயலோவன் றிதுமதவேள் செயலே யென்றென்
றப்படியே வியந்துவியந் தனுகியசந் திராபீட னரிய பார்வை
பைப்பணிபோற் கடிதடத்தாள் படைவிழிமேற் கடிதோடிப் பாய்ந்த தன்றே. (௱௭௪.)

அப்பொழுதங் கவள்கேயூ ரகன்மொழிந்த வவனிவனே யாகு மென்னு
மொப்பரிய வவனெழின்மே லோடவிடு மிமையாத வுவகைப் பார்வை
யெப்புறமுஞ் சூழ்போத விவ்வொளியான் மெய்வெளுத்த விம்பர் கோமான்
கைப்பயிலு மலாயுதமால்* காணுமிவ னெனவிளங்கிக் காட்டி னானே. ()

இவ்வகையே பார்த்திடமுன் னெழுந்திருந்த தொருதுளக்க மிதன்பின் பாக
மெய்வழியே புளகமெழுந் திருந்ததன் பின்பாக விளங்கு சோதிச்
செவ்வியவா பரணவொலி யெழுந்திருந்த திதன்பின்செங் கமல நாதன்
கைவருகா தம்பரியு மெழுந்திருந்தா ளெழுந்திருந்த காலந் தன்னில். ()

உத்தரிய நழுவுவித்த தோடிவரு நீடுயிர்ப்பே யொல்கு மாதர்
கைத்தலம்வீ சியகவரிக் காலொருபேர் பெற்றதுவே கண்டே மன்பாற்
சித்தமுறுஞ் சந்திரா பீடனெழி றீண்டுகைக்கே செங்கை மார்பில்
வைத்ததெலா முலைமறைக்க வென்றவொரு பேரீடு மருவிற் றன்றே. (௱௭௭)

வேறு.

அடிகடாம் வருந்த வரிவையு மேமெழட் டடியெதி ரேநடந் தவளை
நெடிதுநாள் காணு திருக்கையான் மிகவே நேயமீ தூர்ந்துமா தவத்துக்
கொடியையா தரத்தாற் கழுத்துறத் தழுவிக் கொண்டனண் மகச்சுவே தையுமப்
படியிலே தழுவிக் கொண்டபின் காதம் பரிமுகம் பார்த்துரை செய்வாள். (௱௭௮)

வருகவென் னுடைய மன்னுயிர் மருந்தே வயங்குதன் வாம்பரிக் குரத்தான்
முரிதிரை யுததி நான்கில்வான் கரையு முத்திரை யிட்டுயிர் முழுதும்
பருவர லுறுமற் பரிந்துகாத் தருளிப் பாரத வருடலோ கமெலாம்
பெருகிய வருளா லாண்டகோன் றாரா பீடனென் றுளனொரு வேந்தே. ()

அவன்றிருப் புதல்வ னகிலபூ பரமு மாடக வாகுபூ தரத்தா
லிவன்றரித் தருளி யெண்டிசை விசயத் திததிசை வந்தவ னொருவேன்
றவந்தனிற் பயனு லென்னிடை நேர்ந்தான் சந்திரா பீடன்மற் றிவன்பேர்
நவந்தரத் திருநற் குணங்களா லெனக்கு நல்லுயிர்த் துணைவனு யினனே.

பற்றறுத் திருந்த வென்னையு மிவன்றன் பண்பினு லேவசி கரித்தான்
மற்றினிப் புகல்வ தென்கொலிப் படியே மனத்தொடு வாய்மைதூ யவனைக்
குற்றமற் றுயர்ந்த குணத்தனை யுறவு கொண்டவர்க் கெளியகோ மகனை
யுற்றிடக் கிடையா தாகையா னீயு முவந்தெனைப் போலவே காண்மின். ()

* 'அசலம்போல் விளங்கினன்' என்றும் முதனூலிற் பாடங் காணப்படுகிறது.

திசைமுகன் பணித்த திருத்தமு முவமை செப்பொணாப் புதியதோ ரழகு
மிசைதரு முளரி வனிதைநன் றான விடத்தையே யவாவுமென் னுமது
மசைவற விவன்றா னிணையில்வாழ்ந் திருக்க வம்புவி செய்தமா தவமும்
வசையறு சுரலோ கத்தினுஞ் சிறக்கு மானிட லோகமென் னுமதும். ()

மானிடர் விழிகள் செய்தபாக் கியமும் வான்கலை முழுதுமோ ரிடத்தே
தானினி துறையப் பெற்றதோர் பேறுந் தகையநீ யறியவேண் டுமெனா
நானற வருந்தி யிரந்துகொண் டளியா னம்பியை வலிமையிற் கொணர்ந்தே
னானவென் னுயிரே யுன்னையு மனேக மாகவே பண்ணலுக் குரைத்தேன்.

ஆதலான் முன்ன மறிவுறா வொருவ னல்லவோ வென்னுநா ணினையு
மேதிலா னிவனம் மியல்பறி யானே யென்பதோர் சங்கையுந் தவிர்ந்து
காதலா லென்னைப் போலிவ னையுநீ கருதுவா யிவனுனக் கென்றுந்
தாதுசேர் குழலாய் தோழனு மாகுந் தமருமாந் தாதனு மாமே. (சுஅச)

என்றிவண் மொழியு மெல்லையி லிறையு மிறைவியை வணங்கினான் வணங்கி
நின்றமன் னவனை விலங்கவே நோக்க நேரிழை கண்களி னின்றுங்
கன்றிய கடைக்கண் மிசைவிரைந் தோடுங் கருவிழி யிளைப்பினால் வெயர்த்த
வொன்றிய வெயர்வுத் துளிகளே போல வுவகைநீர்த் துளிகள்வீழ்ந் தனவே.

பொற்பது காண விரைவுட னோடிப் புறப்படு மனத்தின்மெய்ப் பொளிபோ*
லற்புத முறுவ னிலவுதோன் றியதுன் னாருயிர்த் துணைவனை நீயுங்
கற்பொடு பணியா யென்றுசென் னிக்குக் காரியஞ் சொல்லுமா போல
விற்புரு வப்பொற் கொடியிலே யொன்று விரைவுடன் மேற்கிளர்ந் ததுவே.

வந்தகொட் டாவி வழியினான் மனஞ்சேர் மன்னவ னேகுமோ வென்னுஞ்
சிந்தையிற் றகைவாள் போல்வாண் முகமேற் சென்றதோர் செந்தளிர்ச் செங்கை
பந்தியுற் றெழுந்த வெய்யர்வுநீ ராட்டப் பழுதற விளங்குமே னியெலாஞ்
சுந்தரச் சிலைவே ணின்றுலா வுதல்போற் றோன்றினான் றோன்றலா னவனே.

பரிமள நீல மாலைபோ னீண்ட பார்வைகள் பருகியிட் டதுபோல்
வரியொரு விழிமேல் வயங்கினான் சிறிதே வணங்கிய முகத்தினா லழைப்ப
விரைவுட னடர்ந்தா னென்னவா ணுதன்மேல் விளங்கினான் மேவுமா சையினாற்
றருமலி தடந்தோ டாங்களே யெழுதிக் கொண்டபோற் றோள்களிற் சிறந்தான். ()

அரிவையு மப்போ தண்ணலை வணங்கி யருண்மகச் சுவேதைதன் னுடனே
யொருமணிப் பீடத் திருந்தனள் விரைவுற் றோடியே சேடியர் கொணர்ந்து
திருமக ளனையா ளிருந்தபீ டத்தின் சென்னிமாட் டிட்டவெண் பட்டாற்
றரமொடு பொதிந்த கனகபீ டத்திற் சந்திரா பீடனுஞ் சார்ந்தான். ()

---

* ‘தூளிபோல்’ என்பது முதனூலின் பாடம். களங்கமற்ற மனமாதலின் அது வெண்ணிறமுடையதெனக் கொண்டு ‘முறுவலின் நிலவு’ என்றதற்கேற்ப இங்ஙனம் இந்நூலாசிரியர் மாற்றி யுரைத்தனர் போலும். ‘மனத்தினுண் டுகள்போல்’ என்று கொள்வது முதனூற் கருத்துக்கு இசையும்.

மாதவ மயிலை வழிபட வொழுகு மன்னர்கோன் மகளினை வறிந்து
சீதள வாயில் காக்குநோக் கான தெரிவைமார் செங்கையை யமைத்து
மேதகு வதன மீதுவைத் தியங்கும் விழிப்பயி லாலியாழ் வீணை
நாதமென் குழல்கள் பாட்டொலி வாழ்த்து நல்லுரை யாவையுந் தகைந்தார். (௬௯௦)

பத்தியி னுடனே யெழுந்துசொற் காதம் பரிமகச் சுவேதைதாள் கழுவி
யுத்தரி யத்தாற் றுடைத்துட னிருந்தா ளொண்டொடிக் கோருயிர்த் துணையாய்
வித்தக மரபு வடிவுசீ ரொழுக்க மேன்மையொத் தவண்மத லேகை
கொத்தலர் முடியோன் மறுக்கவு மிரந்து கொண்டவ ளடிகள்பூ சித்தாள்.

அருந்தவ மடந்தை யிருந்துநே யமுட னரிவைகா தம்பரி யுடைய
திருந்திய மாலைத் தோள்கடை வந்துஞ் செய்யமென் சிறையளி மூசச்
சரிந்தன செவித்தார் கடுக்கிய மடவார் சாமரக் காற்றினு லசைவுற்
றிருந்தன வளகந் திருத்தியுஞ் சுகமே யிருந்தனை யேயெனக் கேட்டாள்.

இறைமக டானு மில்லிருந் தனமே யென்பதோ ரிலச்சையான் மெல்லக்
குறைவுறு மொழியா லிருந்தன னென்று கூறினள் கூறிமற் றவட
னிறைமதி முகமே நோக்குமப் போது நெடுந்தகை யளவிலே போய்ப்போ
யுறைகடைக் கண்ணு நெஞ்சமுந் தகைய வுபாயமொன் றறிவுறா திருந்தாள்.

பொருதன மலைமே லெழுமிவ னுருவம் புளகிதத் தான்மறைந் தளவில்
விரகவே தனையான் மிகமெலிந் திருந்தும் விழிசிறி திமைத்தபோ திந்த
வரசனுங் காணச் செய்தபாக் கியந்தா னத்தனை யோவென வழிந்துந்
தெரிவைமா ரெழின்மேலிவன்பாதிவிம்பஞ்சேரவேபொறாமைசெய் திருந்தும்.

இருந்துதாம் பூல மிடமுயன் றளவி லெழின்மகச்சுவேதைதா னுரைப்பாள்
விருந்தினர் தம்மை முதலுப சரித்தே வேண்டுமற் றவர்களைப் பேணத்
திருந்துவே லரசுக் களிமின்முற் பாடு சேயிழை யென்னமற் றவளும்
வருந்துறாநாணிக்கவிழ்ந்திருந்தணங்கேவாங்கிநீவழங்கெனமொழிந்தாள்.()

மாதிது மொழிய மங்கையு நீயே வழங்குக வெனப்பல காலு
மாதர வுடனே வருமட மகளு மனேகநே ரத்துடன் பொருந்தித்
தாதவிழ் முடியான் றனக்குநேர் போதா தவர்கள்போ லேமனங் கூசிச்
சீதள நிலவு குலவுதாம் பூலஞ் செந்தளிர்ச் செங்கையால் வாங்கி. (௬௯௬)

தருமகச் சுவேதை புறத்திலே வதனஞ் சாய்த்துவைத் திணைவிழி குவிய
வகமுற நடுங்க நீடுயிர்ப் பெழவே ளரிவையர்க் கரசுநீ யென்னு
மிகவபி டேகஞ் செய்தனன் போல வெயர்த்தெழா வெயர்வுவெள் ளத்தே
புகுமெனை யெடுமி னெனலுமா போலப் பூந்தளிர்ச் செங்கைநீட் டினளே.

தோகைதன் செங்கை தோயுநீ டின்பந் துய்க்கவைம் புலனுமொன் றான
தாகுமென் றோத வைவிரல் குவிய வவற்றைமுற் படும்படி பதறா
வோகைகொண் டோடு மாறுபோன் மிகவு மொளிர்நகைக் கிரணமுன் வீச
மேகநன் கொடையான் விற்றழும் பொளிரும் வெற்றியங் கரங்மிர்த் தேற்றான். ()

நம்பிசெங் கையை நாடியே தேடி நககிர ணம்பரந் தோடக்
கம்பம்வந் தலையுங் கைவளைக் குரல்கள் கலந்துப சாரமே மொழிய
வெம்புமென் னுயிரீ துன்கையிற் றந்தேன் வேந்தனே காத்தரு ணீயே
தம்பமென் றவன்கை வைப்பதே போலத் தையலாள் வெள்ளிலை யளித்தாள்.

வெற்றிலை யிட்ட பொழுதுகை வழிபோய் விழுந்தவே ராங்கவன் கைம்மே
லுற்றெனை யுனக்கே யளித்துவிட் டனனென் றுதகஞ்செய் தன்மையே போன்ற
கொற்றவின் மதவேள் சாயகந் துளைத்த குருதிதோய் நெஞ்சமா கையினன்
மற்றிவன் றன்னை வந்துசேர் வதுபோன் மாணிக்க வளையும்வீழ்ந் ததுவே.

பின்பரு கிருந்த. மகச்சுவே தைக்கும் பெய்வளை வெள்ளிலை வழங்கி
யன்புட னிருந்தா ளிருந்தவப் பொழுதோ ரஞ்சுகம் பின்றொடர்ந் துவர
முன்பொரு பூவை வந்துகோ மகளை முற்பணிந் தறவெறுப் புடனே
தன்பெருங் கோபந் தள்ளிமீ தூரத் தானொரு வாசக மொழியும். (௭௦௧)

வருகவெம் பிராட்டி யென்னினுங்காட்டில் வளவியோ ரில்லையென் றகந்தை
பெருகியொன் றறியா விச்சிறு பறவை பின்றொடர்ந் தென்னையிப் படியே
பரிபவஞ் செய்ய வோட்டிநீ விடாமற் பார்த்திருந் தருளிய தென்றா
னொருசிறி தினிநீர் பராமுகஞ் செய்தா லுயிர்விடு வேனின தாணை. (௭௦௨)

எனவிது மொழிய விறைமக ணகைத்தா ளிருந்தவ மகண்மத லேகை
தனைமுக நோக்கி யென்கொலிப் பூவை சாற்றுமா றெனவவ ளுரைப்பாள்
புனையிழை யிறைவி பெருமணஞ் செய்திப் பூவைகா ளிந்தியை யன்பா
னணிபரி காச னென்னுமிக் கிளிக்கு நற்பெடை யாகவே யளித்தாள். ()

இற்றைநாட் சிறுகா லிப்பரி காச னிறைவிகா தம்பரிக் கன்பு
பற்றியே தாம்பூ லந்தரு மந்தப் பணிமொழி தமாலிகை முகம்பார்த்
துற்றவே காந்தத் தினியதோர் கீத மோதுவித் தனனது தன்னை
முற்றவே கண்டிப் பூவையப் போது முதன்முக மாறிநெஞ் சழன்று. ()

இந்தமென் கிளியி னருகுபோ குதலொன் றியம்புதல் பார்க்குதல் செய்யா
தந்தவெங் கோபத் துடன்றிரி தலினா லரிவையு நானுமற் றெல்லா
முந்துநின் கோப மொழிகநீ யென்றென் றுரைக்கவுங் கோபமா றாமல்
வந்துநின் றுரைத்த திவையென வவந்தி மன்னர்கோன் மகனகைத் துரைப்பான். ()

உண்டிது பொய்யன் றிறைவிதன் கோயி லொண்டொடி மங்கையர் பலருங்
கண்டனர் கண்ணுற் கன்னியென் றிந்தக் கடலுல கெலாமிக வறியக்
கொண்டவ ளிரங்க விப்பிழை செய்த கொடியவ னுடன்றமா லிகையைப்
புண்டா றுதலீர் கோபியா திருத்தல் போதுமோ கோமகட் கென்றும். ()

மாறுகாட் டியவிப் பரிபவந் தனக்கு வலியநஞ் சருந்துத லொன்றா
னீறுகாட் டியதீப் பாய்தலல் லாது நிச்சயந் தீர்வுவே றுண்டோ
வீறுகாட் டியகா ளிந்திமற் றிதற்கு மிகவுமின் றிலச்சியா திருந்தா
லீறுகாட் டியநுண் ணிடைமடந் தையர்க ளிவளையொன் றாகவெண் ணுவரோ. (௭௦௭)

என்றிவன் மொழிய விறைமகன் முதலா யாவரு நகைத்தனர் நகைப்பக்
கன்றிய மனத்தோ டப்பரி காசன் காவலன் றிருமுக நோக்கி
யொன்றிவ ளெளியா ளேழையென் றேவின் றுரைத்தனை யீதெலா நீதா
னன்றினுஞ் சிலபேர் கூடவந் தானு நாப்புகைக் கெளியளோ விவளே. ()

இங்குநீ சொல்லும் விரகுக டம்மி லிவளறி யாததொன் றில்லை
செங்கைவேன் மன்னன் கோயில்வா தனையாற் றிருந்திய காரணங் காலஞ்
சங்கையில் கோபப் பிரசாதால் விடயந் தரும்பிரமா ணங்களி னுடைய
பங்குக ளெல்லா மறிவளென் றிந்தப் பசுங்கிளி யுரைக்குமவ் வளவில். ()

வேறு.

ஒளிநி லாவென விளங்கு கஞ்சுகி யொருத்தன் வந்துதவ மங்கைமுன்
வெளிநி லாவுனது திருமு கந்தனை விரைந்து காணவிற விறைவனு
மளிநி லாவுகுழ லிறைவி யும்பெருக வாத ரித்தனர்கள் காணெனத்
தெளிநி லாவணைய மேனி யாடுணைவி திருமு கக்கமல நோக்கியே. (எகO)

யான்வ ருந்துணையு மிந்த மன்னவ னிருப்ப தெங்ஙனென நங்கையுந்
தேன்வருந்துமொழி யென்கொலிந்தமொழி செப்புகின்றதிவர் தம்மைமுன்
னுன்வி ரும்பியெதிர் கண்ட போதுமுத லுனெ னக்குரிய னல்லனுன்
றுன்வி ரும்பிய மணக்கு மென்பரி சனந்த னக்குமெவர் கடவரே. (எகக)

உங்க ளுக்கிரு வருக்கு மிப்பொழு துளம்பொ ருந்துமிட மெவ்விட
மங்கி ருக்கவென வாய வாகினுனை யன்னி தாகவுயர் சோலைவாய்த்
துங்க முற்றவிளை யாடல் வெற்பினிடை தூய சோதிமணி மண்டபத்
தெங்கள் கொற்றவ னிருத்த னன்றென வியம்பி வாணுதலு மேகினள். ()

கூரு மெய்த்தவ மடந்தை கந்தருவர் கோனி டைப்படர வுடனெழுந்
தீர முற்றதொடை யோனு மன்னன்மக ளோவ விற்பல விஞ்ஞைமுந்
தேரு மெக்கலையும் வல்ல வல்லிய ரனேகர் பின்புசெல முன்புகே
யூர கக்குரிசில் செல்ல வந்தமணி யொளிரு மண்டப மடைந்தனன்.(எகங)

அரிய கந்தருவ ராச கன்னிகையு மாயம் யாவையும் விடுத்துவிட்
டுரிய மங்கையர்க ளுவி ரண்டுபெய ரோடு மேனில மிடைந்துபோய்
விரைய வந்தொர்சய னத்தி லேயுற விழுந்த ழிந்துதனி நெஞ்சிலா
தரமி குந்துநிறை போய ழிந்துவிட ரித்த தெப்படி யுரைப்பதே. (எகச)

வேறு.

ஏழைநீ யென்செய் தாயென் றிலச்சைநின் றிடிக்க விங்ஙன்
றுழுமோ பேதா யென்று தகுதிதா னுறுக்க நேரே
வீழுமோ மடந்தா யென்று விணையமு மிகழ விவ்வா
றுழுமோ மரபுள் ளோயென் றரியகற் பறநிந் திக்க. (எகரு)

தனித்திருந் தென்னே யிந்தத் தாமவேள் புதியோ னென்று
நினைத்திலன் றொய்யே மென்று நினைவனே யிவனென் றற்பங்
கனத்திலன் மிவன்ற னுள்ளங் கண்டிலங் காத லானேன்
மனக்கருத் திவனுங் கண்டு மகிழ்ந்திலன் மதியி னாலே. (எகசு)

பழிக்குமே யுலக மென்றும் பார்த்திலேந் தந்தை தாய
ரொழிப்பிலாத் தமர்க ளெல்லா மொறுப்பதும் பார்த்தி லேநம்
விழித்துணை மகச்சு வேதை வெந்துய ருழந்து காலங்
கழிப்பதும் பார்த்தி லேமிக் கைதவ மறிந்தி லேமே. (எகஎ)

அன்பிவ ளளவி லில்லே மாயினு மனேக மாதர்
முன்பிது நிமித்த மாக மொழிந்தது மின்று காலை
யின்புறு வீணைக் கேயூ ரகனுட னியம்பி விட்ட
வன்புறு சபதந் தானு மறந்துவிட் டனமே யையோ. (எகஅ)

எண்டர வீழு மிந்த விளந்தலை யான நெஞ்சங்
கொண்டுதா னெங்கே போவேங் கொடிதறக் கொடிது காதல்
பண்டுநாஞ் செய்து போந்த பாவமோ தருமந் தானோ
கண்டிலா விவனை யிங்குக் காட்டிய தறிகி லேனே. (எகக)

கண்டுகேட் டறியா விந்தக் கள்வன்வந் தென்னைச் சிங்கி
கொண்டுகோட் டாலை செய்யக் குணமெனும் பொருளை வாங்கி
விண்டுகாட் டாநெஞ் சென்னை விற்றுவிட் டதுநா னின்று
தொண்டுமாய் விட்டே னென்றிற் சுதந்தர மற்று விட்டேன். (எஉ0)

நெஞ்சகங் கொண்டே யெம்மை நிறையழித் திரக்கஞ் செய்யா
வஞ்சகன் றன்னைக் கொண்டென் மற்றினி யிவனார் நாமார்
தஞ்சமன் றவனு மேலாற் றளர்வுறக் கடவே மென்றென்
றெஞ்சியுந் தேறி னுள்போ லிருந்தனள் சிறிது போது. (எஉக)

கோதையிப் படியே கொட்டிக் கொண்டிருந் தளவி லின்று
காதலித் தெம்மைக் கொண்டோர் காரியி மில்லை யானால்
யாதினுக் கிவள்பா னுந்தா மிருக்கின்ற தென்று நெஞ்ச
மாதரித் தவன்பா லேக வறவிரைந் தெழுந்த தன்றே. (எஉஉ)

நாவியங் கூந்தன் மாதே நாமும்போய் வருவே மென்றென்
றூவியுங் களத்தி லேசென் றரிவையை வினவி நின்ற
தேவும்வே ளனையான் பார்வைக் கெய்துமோ வென்று செய்ய
காவிபோற் கண்க டம்மைக் கழுவிய தொத்த கண்ணீர். (எஉங)

இவ்வகை நிறுத்த நில்லா தெழுந்துநெஞ் சவன்பா லேக
மெய்வரு மாசை யாலே மிகவழிந் தழிந்து வண்டு
மைவரு குழலி னுளுஞ் சாளரத் தாலே யந்தச்
செவ்விய மதவே ளன்னுன் சேர்ந்தசெய் குன்றை நோக்கி. (எஉச)

அங்கையா லெழுதி னுல்வேர் வரும்பிவீழ்ந் தழிக்கு மென்னுஞ்
சங்கையா லவனைச் சிந்தை தன்னினு லெழுதிக் கொண்டு
செங்கணுற் பார்க்கி லொட்டா தேங்குமா னந்த நீர்தா
மெங்கள்கேள் வனையென் றெண்ணி யிங்ஙனே வருந்தி நின்றாள். ()

அரசிளங் குரிசி றானு மந்தமண் டபத்தி லேயோர்
விரிதரு சுடர்மா ணிக்க வேதிகைச் சயன மீதே
வரிதரு கழற்காற் கேயூ ரகன்பதம் வருட மாத
ரிருபுடை யுஞ்சூழ் போத விருந்தன னிருந்த போது. (எஉசு)

நிலைநிலா தூச லாடு நெஞ்சின னாகி யந்தக்
கலவமா மயிலே போல்வாள் களவுதோய் கடைக்க ணாலே
பலபடி பார்த்தா னுமும் பார்த்தனம் பார்த்த போது
தலமுற நோக்கி நாணந் தயங்குபுன் முறுவல் செய்தாள். (எஉஎ)

இருந்தபின் றலைசாய்த் தொன்று மியம்புறு திருந்து நெஞ்சம்
வருந்திய தெழுது மாபோல் வள்ளுகிர்த் தலையி னாலே
திருந்திய படுக்கை மீதே கீறினு டேறி னாள்போ
லருந்துயர் தோன்று வண்ண மடக்கியுள் ளழிந்தி ருந்தாள். (எஉஅ)

ஆதலா லிவைமற் றெல்லா மருளுட னம்மேல் வைத்த
காதல்போன் றிருந்த வென்றுங் கருதொணு கருதி லிந்த
மாதுகாந் தருவ ராசன் மங்கைநா மனித னென்றூற்
போதுமோ விந்த வெண்ணம் புந்தியோ புந்தி கேடே. (எஉகூ)

இனியனூர்க் குள்ள நொய்ம்மை யெம்மையு மயக்கி யிந்த
நினைவினைத் தந்து வீணே நெஞ்சகத் தாசை பூட்டிச்
சுனையிடைப் பெய்த வெண்ணெய்த் துளியைநீர் பெருக்கு மாபோல்
வனிதைசற் றருளை மென்மேல் வளர்த்ததே யுள்ள தன்றே. (எகூ0)

மற்றுநாஞ் செயலே தாக வருந்துகின் றதுதா னம்மேற்
பற்றுமா தரமு மந்தப் பைந்தொடிக் குண்டே யானல்
வெற்றிவே டானே யெல்லாம் வெளிவெளி யாக்கி நெஞ்சத்
துற்றுள சங்கை யெல்லா மொழிக்குமிப் பொழுதென் றெண்ணி. ()

சீரிய நிதிகண் டெய்துஞ் செயலிலா மிடிய னேபோ
னேரிழை யருகே போய்ப்போய் நெஞ்சமே மாந்து நிற்க
வேரியந் தெரிய லோனும் வியாகுலம் புறந்தோன் றாம
லோரியல் பதனுற் றுங்கி யொருபடி யெழுந்தி ருந்து. (எகூஉ)

வாடிய மருங்கு லந்த மடந்தைமார் தங்க ளோடே
பாடியு மதுர வீணை பயின்றுவா சித்து நற்கு
தாடியுஞ் சதுரங் கப்போ ராடியுங் கலைகண் மற்று
நாடியும் பொழுது போக்கி நயந்துசற் றிருந்த பின்னர் (எகூ௩)

அரும்பொழில் பார்க்க வென்னு மாசையா லச்செய் குன்றி
லொருங்குட னேறி நின்று ஞேங்குகோ மகளு முள்ளம்
வருந்திநம் மகச்சு வேதை வந்திலள் பார்ப்பே மென்று
விருந்தொரு பேரிட் டுக்கொண் டிதற்குமே னிலத்தி லேறி. (எஙச)

வேறு.

குருமதிமண் டலமெனவோர் குடைநிழற்ற விரண்டிரண்டா
யிருபுடையுந் தழைந்தொருநான் கிணைக்கவரி பணிமாற
வரிவையர்பத் திருபதுபே ரருகுவர வான்கயிலைக்
கிரிமுடிமே னின்றலவுங் கெவுரியிவ ளெனப்பொலிந்தாள். (எஙரு)

மாதருக்கு நடுநடுவே மறைந்திடையே யிடையேதன்
சோதிபெற்ற வெழில்சிறிதே தோன்றவொசிந் தொசிந்துநின் றாங்
காதலுற்ற மதலேகை களந்தழுவிக் கொடுநின்றாம்
பேதமற்ற தமாலிகைதோள் பிடித்தூன்றிக் கொடுநின்றாம். (எஙசு)

நெடுநேர மிப்படியே நின்றுநின்று பலபடிபோய்த்
தடுமாறு நெஞ்சாலுந் தாவும்விழிக் கடையாலும்
வடிவேல னழகையெலாம் வாரிவா ரிப்பருகித்
தொடிமாது மகச்சுவேதை தோன்றி ளெனவிறங்கி. (எஙஎ)

நீராடன் முதலவற்றோர் நினைவிலா திருக்கவுநா
லாராயு மகச்சுவேதைக் காகவே யவைமுடித்தாள்
போராளும் வேலோனும் பொற்றொடியா ளிறங்கியபின்
றீராத காதலுடன் செய்குன்றந் தனையிறங்கி. (எஙஅ)

நேரிழையார் சேடியர்க ணீராட்ட நியமஞ்செய்
தாரமுதுண் டச்செய்குன் றதிலொருதாழ் வரைமீதே
காரணிமா மயிலாடல் கண்டுகொடி மண்டபமும்
வாருயர்சோ லையுஞ்சூழ்ந்த மரகதப்பா றையிலிருந்தான். (எஙகூ)

இருந்தளவிற் பாற்கடன்மீ தெழுந்துபரந் தந்தரமேல்
வருந்தகைபோ லோரொளிமுன் வரக்கண்டு வான்பகலே
திருந்துமதி யுதித்ததுவோ தெய்வநதித் திரைபுவிமேல்
விரிந்ததுவோ வெனநோக்கி வியந்திருந்தா னப்போது. (எசO)

திருவனையா ளொருகோடி சேவித்து வரக்கவரி
யிருபுடையும் பணிமாற விருங்கொற்றக் குடைநிழற்றச்
சுரர்தருவில் வருமரவின் றோல்போற்பட் டாடையிரண்
டுரிமையுட னேந்திமுன்னே யுயர்கேயூ ரகன்போத. (எசக)

பரவுதமா லிகைசிறுசண் பகத்தாமங் கொடுபின்னே
வரவொருநீர்ப் பாழிமின்ன மறைத்தகள பக்கையிற்
பிரிவில்பிரம் புடனடுத்துப் பிடித்திடக்கை தனிலேந்தி.
யொருதெரிவை வலக்கைகொடுத் துரிமையினோ டுடன்போத.(எசஉ)

வரிசையுடன் வருகின்ற மதலேகை தனையுமவ
ளருகுவருந் தரளிகையா மணங்கினையு மவள்கரமேற்
றருகனகத் தட்டியிலே தரமுடனே மடித்திட்ட
திருமிகவே யொளிருவதோர் சீனப்பட் டதன்மீதே. (எசங)

சேயதமிழ்ச் சுந்தரைவாழ் தேவனிய லமரேச
னேயமிகும் புகழ்போல நின்மலமாய் நிறைமதிக்கு
மேயதிருப் பாற்கடற்கும் வெண்மையுடன் றண்மையுமுண்
டாயதென வருசோதி யணிமுத்தா ரமுங்கண்டான் (எசச)

### வேறு

கண்டிது வாகு மிந்தநீ டொளிக்குக் காரண மென்றுகொண் டந்த
வொண்டொடி யாளை யெழுந்தெதிர் கொண்டா னுயர்மத லேகையுமந்தத்
திண்டிறன் மதவே ளிருந்தபா றையிலே சென்றொரு சிறிதிருந் தெழுந்து
வண்டணி செங்கை வருந்தமற் றவன்மேல் வளமிகு களபமும் பூசி.(எசரு)

துய்யமா லையையுஞ் சென்னியிற் சூட்டித் துலங்கொளி முத்தமா லையினைக்
கையிலே வாங்கிக் கொண்டுநின் றந்தக் காளையை நோக்கியெம் மரசே
யையுறு தெம்மைப் போல்பவ ரும்மை யணுகுதற் கிடந்தரு வதுநுஞ்
செய்யபே ரருளே யிவ்வருள் கண்டாற் சிலரணு காதவ ருண்டோ.(எசசு)

அளியினா லிந்த வழகிய வழகா லாருமக் காட்படா தவர்தா
மெளிமையா லந்த வினியசீ லத்தா லியாவர்நெஞ் சத்தைநீர் கொள்ளீ
ரொளியினா லெல்லா வுலகினு முயர்ந்த வுமக்கினி நாங்கள்செய் வதெலாந்
தெளிவிலா வாறு மறிவுகே டும்போற் றெரிந்ததிங் கப்படி யேனும்.(எசஎ)

எறிகட லமுத மனையவ ளொருபே ரீட்டினா லேந்தலா ரளவி
லுறவினை யறிவிக் கின்றமாத் திரமே யுள்ளதீ துயர்ந்தவர்க் கடிமைத்
திறமுய லுவதும் பெருமையே யன்றோ சீவனைக் கேட்பினு முயர்ந்தோர்
பறிபடு கின்ற தெனநினை யாமற் பண்பினா லளிப்பதா தரமே. (எசஅ)

இந்தமுத் தார மலைகடைந் தமுத மெடுத்திரத் தினங்களா னவெல்லா
மந்தரத் தவர்க ளெடுத்தகா லத்தி லவர்க்ககப் படாதுசே மித்துச்
சிந்துவிற் புதைந்து கிடந்தகா ரணத்தாற் சேடனும் பெயருடைத் தாகி
நந்தினீப் பாவை யிறையிடத் தனேக நாளெலா மிருந்தபி னிதனை.(எசகூ)

வாரிதி யரசன் வருணனுக் களித்தான் வருணனு மிந்திரற் களித்தா
னேரணி மகவா னெங்கள்காந் தருவ ராசனுக் களித்தன னெங்கோன்
காரிகை காதம் பரிதனக் களித்தான் காரிகை பார்த்துநும் முடைய
சீரணி யழகே யிதனழ குக்குச் சிறந்ததென் றிவ்விடை யளித்தாள்.(எ௫0)

பழுதற வுயர்ந்த பெரியவர் புகழா பரணமல் லாதொரா பரணம்
விழைபவ ரல்ல ராகினு மிதுதான் வேண்டிய தெங்களுக் கரியாள்
கெழுமுத லான வாதரம் பொருட்டாக் கேளுமொன் றின்னமு மாயோன்
றழுவிய மலரா ளுடன்பிறந் ததனாற் றகைமைபா ரதியுமா றன்றோ (எ௫௧)

திருந்திய மார்பிற் கவுத்துவ மென்னுஞ் சிலாசக லத்தையே சுமந்து
வருந்தின னும்மை யொப்பனோ வந்த மாயவ னம்மணி யிந்த
விருங்கதிர் தருசே டன்குணங் களிலே யேகதே சங்குண முடைத்தோ
பெருந்திரு வெங்கள் பெண்ணமு தழகைப் பின்செல வல்லளோ வதுவேன்.

தையலுன் மிகநீ ராதரஞ் செய்யத் தகாதவ ளொருத்தியு மல்ல
செய்யலா முவகைச் சிறப்பெலா மிவண்மேற் செயினுமோர் குறையிலை யெங்கள்
பொய்யிலா வுறவை யனாதரஞ் செய்தாற் பூங்கொடி மகச்சுவே தையையு
மையுறு வறவே வெறுத்திலச் சையினு லாருயிர் துறக்கவுந் தகுமே.(எ௫௩)

மகச்சுவே தையுமற் றீதுகா ரணமா மன்னுயிர்த் தரளிகை கையிலே
மிகச்சுவே தஞ்செய் யாரமுங் கொடுத்து விடுத்துமுற் பாடுசே யிழையா
ணிகழ்த்துபே ருறவா யிருக்கும திதற்கு நெஞ்சிலே தேனுமொன் றுன்னித்
திகைத்திரா தேற்றுக் கொள்ளவே கடவர் தீர்விது வேயென மொழிந்தாள்.

தடுப்பதன் றிதுவென் றுரைத்துமே ருவிலே தாரகா சக்கரந் தன்னை
யெடுத்தணிந் ததுபோ லிவன்றிரு மார்பத் திந்தவா ரத்தினை யணிந்தா
ளடுத்தவண் முகம்பார்த் தரசனு நகைசெய் தாயிழாய் நானொருத்தரமுந்
தொடுத்துரை செய்யா வாறுநீ வார்த்தை சொன்னதற் கேதுதான் சொல்வேன். ()

மங்கைகே ளெனக்கு நானு[illegible]யேனோ வாங்கவு மறுக்கவு நானோ
ருங்களா தரத்தாற் பண்பினுற் குணத்தா லோங்குகட் டுண்டதென் னுள்ள
மிங்குநீ ருமக்காம் பணிவிடை களிலே யேவியிவ் வடிமையை யாளீர்
சங்கியா தேநா னடிமையென் பார்க்குச் சாதன மொன்றுவேண் டுமதோ.

திருந்திய நெறியாற் பண்பினு னிறைந்த செல்விகா தம்பரி குணத்தாற்
கருங்கலின் வலிய வஞ்சநெஞ் சுகளுங் கசிந்துநின் றுருகுமே யென்றென்
றருந்ததி யனையா ளுடையவார்த் தைகளே யனேகநே ரம்புகன் றங்ஙனே
யிருந்தபின் மதலே கையைச்செல விடுத்தா ளிலங்கிழை சென்றபின் பாக.

ஏத்துகாந் தருவ ராசகன் னிகையு மிலங்குவெண் பட்டுமுத் தாரஞ்
சேர்த்தசந் துகளாற் றனையலங் காரஞ் செய்துகொண் டுதயபூ தரமேல்
வாய்த்தசந் திரனே யெனவிளை யாடல் வரைமிசை விளங்குமன் னவனைப்
பார்த்திட ராச சின்னமா னவையும் பரிசனம் யாவையு நிறுத்தி. (எ௫அ)

மின்னிக ரிடையா டமாலிகை யுடனே மேனில மீதுசென் றந்த
மன்னவனிதயங்கொள்ளைகொண்டோடிவாருமென்றயினெடுங்கடைக்கண்
டன்னையு முறுவ னிலவையு மேண்மேற் ருவிட வேவியோர் தெய்வ
மென்னகின் றஙனே செய்தன வெல்லா மெங்ஙனே தாளியம் புவதே. ()

அப்பொழு தெழுந்த நாணினு லிதழ்சற் றரும்பவே நகைசெய்திப் படியே
செப்பரி தான வனேகசிங் காரச் செயலெலாஞ் செய்துகொண் டந்த
வைப்பயி லயிலோ னுயிருநெஞ் சுமெலா மயமறக் கொள்ளைகொண் டடல்வேள்
கைப்படு மாலைக் காலமா மளவுங் கருத்துற நோக்கியே நின்ருள். (எசுo)

வேந்தர்கோன் மடந்தை விரகமுற் றழியும் வியாகுலங் காணமாட் டாமற்
பாய்ந்தபோ லிரவி குடகடன் மறைந்தான் பைந்தொடி மனத்தனு ராகந்
தோய்ந்தபோல் வானுந் திசைகளு நிலனுஞ்சூழ்ந்தது செக்கர்நே மிகனெஞ்
சார்ந்தகா மத்தீப் புகையென வெழுந்த வந்தகா ரக்கொழுந் துகளே. ()

மிக்கதிக் கயங்க ணின்றமே ஞெக்கி விடுங்கர சீகர மெனவே
தக்கவக் ககன தலமெலா நெருங்குந் தாரகா கணங்களப் பொழுது
மைக்கயற் குருவு தெரிவுறு ததனுன் மாதுமே னிலத்தினை யிழிந்தா
ளக்கடற் புடவி யரசுமா னனையா ராடுசெய் குன்றினை யிழிந்தான்.(எசுஉ)

சந்திரன் புலந்த ரோகிணி பஞ்சார் சரணதா டனங்களாற் சிவந்து
வந்தனன் போல வுதயரா கத்தால் வயங்கிமீ தெழுந்துமா மதவே
ளந்தமில் லாத வேகராச் சியத்திற் கமைந்ததோர் தனிப்பெருங் குடையா
யிந்தமூ வுலகு நிலவினு னிரப்பி யிலங்கினு னிலங்கிய காலை. (எசுஙு)

நிலவிடை நிலவு விரிந்தபோன் மலர்ந்து நின்றதோர் குமுதவா வியனீ
ரலைதரு தரங்க வாலவட் டக்கா லசையவோ திமமெலாந் துயிலக்
கலவியை யிழந்து நேமிகள் கதறுங் கரையிலே சாந்திரன் மெழுகி
யிலகிய தாளப் பாறையொன் றினைவந் திறைமகள் சேடியர் காட்ட. ()

எழில்புனை சந்த்ரா பீடனு மதன்மீ திருந்தன னிருந்தவவ் வளவில்
வழிபடு கேயூ ரகன்விரைந் தோடி வந்தடி வணங்கிமூத் தேல
விழைவொடு காதம் பரியுனைக் காண வேண்டிவந் தருளினு ளென்னத்
தழைவொடு பதறி யெழுந்திருந் தவளைத் தானெதிர் கொள்ளுமப் போதில்.

வாய்த்தகாந் தருவ ராசகன் னிகையும் வயங்குமே காவலி யளவே
சாத்திவெண் கோபம் பூத்தொரு குழைமேற் றரித்தொரு குமுதவெள் ளிதழாற்
பூத்திகழ் செவித்தார் வைத்துவெண் களபம் பூசிவான் ருருவிற் பிறந்த
வேத்தரும் வெண்பட் டிரண்டணிந் தெல்லா விராசகின் னங்களு நிறுத்தி.

ஆயபாங் கியர்பத் திருபது மாத ரளவுசூழ் வரமத லேகை
சேயகை கொடுப்ப மாமதிச் செல்வன் றிறம்பட ருரோகிணி யெனவே
போயவ னிருந்த பாறையின் கீழோர் புல்லர்போ லிருந்தன ளவனுந்
தூயபா றையின்மீ திருமிரு மென்று தோகைசொல் லவுநிலத் திருந்தான்.

மற்றுளோ ரெல்லா மிவர்களைச் சூழ்வந் திருந்தனர் சிறிதுபோழ் திருந்து
கொற்றவே லரசன் கூறுவா னெங்கள் கோமகள் பார்வைமாத் திரந்தான்
முற்றவா ழுடியோ ரளவிலோர் வார்த்தைமொழிவதும் பெரியதோ ரேற்றஞ்
சற்றனு மெனக்கித் தரமெலா மருளுந் தண்ணளிக் கேதுநான் செய்கேன்.

எள்ளுறு திவரித் தரமெலாஞ் செய்கைக் கேற்றதோர் குணஞ்சிறி தென்பா
லுள்ளதோ வென்று நினைந்துபார்த் தளவி லொருகுண மாகநான்காணேன்
வள்ளியோ ரொன்றைக் கருதியோ வருள்வார் மற்றவர்க்கருளியல் பன்றோ
தெள்ளியோ ருபசா ரத்தினு லல்லாற் சிறியவர் வசப்படா ரன்றே. (எசுசு)

ஏவிய பணியே செய்யுமிவ் வடிமைக் கிந்தவா தரமெலா மென்றன்
றேவியின் றிங்கே வருதற் கென்ன சிறப்புநான் செய்வதிச் சிறிதா
மாவியு மிந்த வற்பமா முடலு மடியுறை யாகவே வைத்தேன்
மேவிய விவைகைக் கொண்டிவை தமக்கோர் மேன்மைதந் தருள்செயி னன்றே. ()

எனுமிவ னுரையைத் தகைந்துகோ மகளுக் கிதயமா கியமத லேகை
நனிகுறு முறுவல் செய்துநா யகமே நயந்துநீ மொழிவதென் முன்னே
புனையிழை தனதே யாகவீ தெல்லாம் புகுந்துகைக் கொண்டுவிட்டனள்கா
ணுனதுப சார நொய்ம்மையாக் கியதே யுள்ளதங் கொன்றுநீ யுரையேல்.

என்றுபின் றாரா பீடன தியல்பு மிவன்பெருந் தேவிதன் கற்பு
மொன்றிய சுகநா தன்பெருங் குணமு முறையுமுச் சயினியின் சிறப்பும்
பொன்றிக ழவ்வூ ரெத்தனை தூரம் போதுமென் பதுநர லோக
நன்றியு மியாவு முவந்துகேட் டனனே நயந்தொரு சிறிதுபோ திருந்தாள்.

மன்னனை விடைகொண் டெழுந்தவ ளருகே வயங்குகே யூரக னென்னுந்
தென்னணித் தொடையோன் றுயிலவும்வேண்டுஞ்சேடியர்நிற்கவுங்கற்பித்
தன்னமு மயிலு மமுதமு மனையா ளங்குநின் றேகியோ ருயிர்போற்
றுன்னிய பாங்கி மார்சில ருடனே துயில்கொளு மேனிலம் புக்காள். ()

பயனறி சந்த்ரா பீடனுங் காதம் பரிபெருங் குணமுமா தலத்தா
லுயர்மகச் சுவேதை காரண மில்லா வுறவமே தகுமத லேகை
நயநெடும் பண்பு மாயவெள் ளத்தார் நன்றியுந் தகுதிப்பா டுகளும்
வயமிகு தருகாந் தருவபூ பதிதன் மட்டிலாப் பெரியதோர் செலவும். ()

வானமும் புகழ்கிம் புருடலோ கத்தின் வளமையு மற்றுநெஞ் சாலே
தானினைந் தறவே வியந்துகொண் டந்தத் தரளவெண் பாறைமே னினைவுக்
கானவன் கேயூ ரகன்பதம் வருட வருள்விழி துயின்றிரா வொழித்தா
னூனமின் மதியோன் மேலவே லையின்வா யுயர்பனங் காட்டொழுங் கிழிந்தான். ()

தாரணி சந்த்ரா பீடனு மருணோ தயத்திலே யெழுந்துநீ ராடிச்
சீரணி நியமஞ் செய்துநஞ் செல்வி திருப்பளி யுணர்ந்திருந் தனளோ
பாரணி கேயூ ரகவென வவன்போய்ப் பார்த்துவந் துயருமே னிலக்கீ
ழேரணி முன்றிற் படிகவே திகைமே லிருந்தனள் சுவேதையோ டென்றான்.

என்னமன் னவனுஞ் சென்றறு சமயத் திருந்தவ வேடமீக் கொண்ட
நன்னரைக் கூந்த லெளவைமார் தத்த நன்னெறித் தோத்திரஞ் செய்யக்
கின்னர மிதுனம் வங்கியம் பிடிக்கக் கிதநா தன்மகள் சுவேதை
பின்னிருந் தினிய விசைதொறு மடைத்துப் பேணுமா பாரதம் பாட. ()

கன்னியர் படிமக் கலமெதிர் காட்டக் கண்டினி திருப்பவ டனைக்கண்
டன்னவ ரந்த வேதிகை யிட்ட வாசனத் திருந்தபின் பாக
வின்னருட் சுவேதை தனைமுக நோக்கி யிலகுபுன் முறுவல்செய் தளவின்
மன்னவ னினைவை யறிந்துமற் றவளு மன்னர்கோன் மடந்தையை நோக்கி.

சந்திரன் கிரணத் தழகிய காந்தந் தானெனச் சந்திரா பீடன்
பைந்தொடி நினது குணங்களா லிளகிப் பகரமாட் டாதிருக் கின்றான்
சிந்தையி லேக நினைவுளான் போலுஞ் செய்தியொன் றையுமறி யாம
லைந்திவ னிராச சகடமா னவெல்லா நாடிநின் றிடருறு மன்றே. (எஎசு)

இனியதி தூரத் திருப்பினு நீங்க ளிருவரு மினியகா தலராய்ப்
பனிதரு மதியுங் குமுதமு மெனவும் பரிதியுங் கமலமு மெனவும்
புனையுகக் கோடி வாழ்கவிப் போது போய்வரச் சொல்லுக வென்ன
வனிதையு மிடறு தழுதழுத் தேற மாமகச் சுவேதையை நோக்கி. (எஅ0)

பள்ளமீ தோடும் பாய்புனல் போலப் பாங்கியு நானுமா யமுமிவ்
வள்ளலார் வசமே யாயினோ மினிமேல் வாசக மில்லையென் றியம்பிக்
கொள்ளைகாந் தருவகுமாரரையழைத்துக்குமாரரைக்கொண்டுபோயிவர்தம்
வெள்ளமாஞ் சேனை கண்டதோ ரிடத்தே விட்டுமீ ளுகவென விடுத்தாள்.

மன்னனு மெழுந்து மகச்சுவே தையைமுன் வணங்கிமன் மகளையு மிறைஞ்சி
யென்னினி மொழிவேன் பலபட மொழிந்தால் யாரையு முலகநம் பாதே
துன்னிய தாத வர்க்கமா னவர்சொற் சொல்லிடப் போந்திடுங் காலந்
தன்னிலே நினையத் தக்கவ ளுனுந் தவறிலே னென்றுநின் றியம்பி. (எஅஉ)

புறப்பட விறைவி யொழிந்தவ ரெல்லாம் புரவல னயத்திலீர்ப் புண்டு
சிறப்பொடு தலைவ ரெயிற்புற மளவுஞ் சென்றன ரவர்களை யங்கே
நிறுத்திமுன் கேயூ ரகன்கொடு வந்து நின்றவிந் திராயுதத் தேறி
மறப்படை வீரர் சூழ்ந்துபொற் பாதம் வழிபட வழிப்படும் போது. ()

நினைவறிந் தனள்போ லிறையவன் மடந்தை நேசபா சம்பிணித் தீர்த்த
தெனவவ னுடைய பின்புபோய் நின்று மேகலென் றெதிர்தடுப் பாள்போற்
பனிமதி யனையான் முன்புபோய் நின்றும் பலபல வுருவுகொண் டிவனை
நனிபிடிப் பவள்போ லெங்கணுஞ் சூழ்ந்து நாடிய போதுளத் தொளித்தும்.

இடைவிடா திவனே போதவச் சோதத் திருங்கரை சேர்ந்தவவ் வளவி
னடைவிடா விந்த்ரா யுதக்குரச் சுவடே நாடிவந் தங்கிருந் தனதன்
படையெலாங் கண்டு காந்தரு வரைத்தம் பதிசெல விட்டுவா ளரச
ரடையவே யெதிர்கொண் டார்த்தெழத் தன்ன தானகோ யிற்படங் கடைந்தான். ()

வேந்தருக் கெல்லாம் விடைகொடுத் திருந்து விரும்பிய வைசம்பாயனற்குஞ்
சேர்ந்தரு கிருந்த பத்ரலே கைக்குஞ் சிறந்தமாச் சுவேதைகே யூரன்
காந்தரு வக்கோன் மகண்மத லேகை கன்னிமார் தமாலிகை யிவர்தங்
கூர்ந்தபண் புகளு நண்புமற் றனவுங் கூறியே பகற்பொழு தொழித்தான்.

அந்திபட் டளவி னித்திரை மடந்தை* யரிவைகா தம்பரி யளவிற்
சிந்தையைக் கண்டு புலந்துபோய் விட்டாள் செல்வனு மப்படி விரதம்
வந்துறத் தானுந் துணுக்கென விதயம் வருந்தமா சற்றபெண் ணமுதைப்
புந்தியிற் கொண்டு விழித்திருக் குங்காற் போனது கங்குலாம் பொழுது.

வேறு.

சிறுகா ரியமஞ் செய்தரசர் சேவித் திருப்ப விருந்தளவி
லுறுகா தலிபான் முன்போல வுள்ள வொருநெஞ் சையுங்கொண்டு
மறுகால் வந்த தென்னவொரு வாயின் மாதி னுடனன்பு
துறுதார்க் கேயூ ரகன்றாதன் றேன்றித் தொழுது தொழுதடைந்தான்.

வருக விங்கே வருகவென,மகிழ்வுற் றணுக வணைப்பவவன்
பெருகக் கூறிப் பின்செல்லப் பிடித்து வலியத் தழுவிக்கொண்
டருண மணியா சனத்தின்கீ ழாக விருத்தி யன்பானெஞ்
சுருக வகலம் புளகமெழ வொளிர்புன் முறுவல் செய்திருந்தான். (௭௮௯)

அவனு மிவன்வெண் ணகையொளியா மமுத வெள்ளத் திடைமூழ்கி
யிவரு மிளைப்பு முழுதாறி யிருந்தா னவனை யிவனோக்கி
யுவகை தருபே ராயவெள்ளத் துடனே செல்வி சுகமேநந்
தவள நிறத்தாண் மகச்சுவேதை தானுஞ் சுகமே யெனவவனும். (௭௯0)

தேவ ரீர்தந் திருவுள்ளச் செயலி தானாற் சுகமவர்க்குண்
டாவ தியம்ப வேண்டுமோ வரசே யென்றம் புயத்திலையுண்
மேவும் படிவைத் ததனூலால் விசித்து மிசையப் பிணகளபத்
தோவில் கமல வளையத்தா லொழியா வகைமுத் திரையூன்றி. (௭௯௧)

ஈரத் துகிலாற் சூழ்ந்திருந்த விதனை யிம்முத் திரைப்படியே
வீரக் கழலோன் முன்காட்டி விரைய வவிழ்த்தாங் கதிலிருந்த
வேரிக் களபம் பசும்பாக்கு வெள்ளி லையுடன் கற்பூரஞ்
சேரத் திருமுன் வைத்திறைஞ்சித் தெரிய வொருவா சகமொழிவான். ()

இங்கே வரநா னெழுமளவி லிறைவ நின்னைத் திசைநோக்கிச்
செங்கே முடியா ளெம்மாட்டி செங்கை சூளா மணிசேர்த்தி
யங்கே வணக்கஞ் செய்தாணம் மரிய தவத்தா டிருவுளத்திற்
றங்கி ரத்தா லாசிமொழி சாற்றி யிறுகத் தழீஇக்கொண்டாள். (௭௯௩)

---

* நித்திரை மடந்தை யென்னுமிடத்தில் 'ராஜலக்ஷ்மி' என்ற பதம் முதனூலிற் காணப்படுகின்றது.

மதலே கையிலங் கியசூளா மணியி னொளியும் வார்குழலு
நுதன்மீ திசையும் படிபணிந்தா ணுடங்கு மிடையா டமாலிகைபூ
விதமே யளக மதரிகையார் மேவும் படிவீழ்ந் தடிபணிந்தா
ளிதமே தவத்து மகச்சுவேதை யிருந்து பின்னு மிவைமொழிந்தாள்.(எகச)

தம்மை யடாதே யிருந்தவர்க டாமே மிகுபாக் கியவான்கள்
செம்மை தருநற் குணமான திங்கட் கிரணம் பிரிந்தக்கால்
வெம்மை யிரவி கதிராகி விடுமே பற்றொன் றற்றிருந்த
வெம்மை முதலா விடர்செய்த தினிவே றென்று னியம்புவதே. (எகரு)

அன்பி னுடனிங் கெல்லாரு மமுதம் பிறந்த திருநாள்போ
லின்ப முதவு முனைநாளை* யிச்சி யாநின் றேமெங்க
ணன்பொன் னகர்தா மேகியபி னுளும் பொலிவற் றிராநின்ற
முன்பு தனிலுந்† தமைக்காண முயன்று தரிக்கு மென்னெஞ்சம். (எகசு)

அதுவே யன்றெங் களுக்கரியா வரிய திருமே னியுமனுங்கி
மதவே ளனைய தமைநினைந்து வருந்தா நின்று ளாகையினெம்
பதிமே லொருகான் மீண்டிவட்கோர் பண்புந் தரமுந் தரவேண்டு
மிதுவே கருணைக் கடையாள மிறைவா வின்னு மொன்றுண்டு. (எகஎ)

அடுத்த வவர்மாட் டெளிதான வருளே யாங்க ளனேகமெலாந்
தொடுத்து மதியா திப்படியே சொல்லும் படியிம் முதுமையெலாங்
கொடுப்ப ததனு லெம்போல்வார் குறைசெய் தவெலாம் பொறைசெய்கை
யுடுத்த கடல்சூழ் புவிபோற்று முரவோர்க் குள்ள கடனன்றே. (எகஅ)

என்று மொழிந்து தேவரீ ரெய்தும் பள்ளிக் கட்டிலிலே
யன்று மறந்து வரப்பட்ட வழகார் சேட னெனுமார
மொன்றும் வரவிட் டனரென்று வுத்த ரியத்துட் பொதிந்திருந்த
வென்றி யாரந் தனைக்கவரி வீசு மாதின் கைக்கொடுத்தாள். (எகக)

பாரா ளரசுந் தவமாதின் பாத சேவைப் பயன்முத்தத்
தாராய் வந்து பலித்ததுதன் றரநா மொழியுந் தகைமைத்தோ
வாரா யிதனை நினைந்திறைவி வரக்காட் டியதிங் கடியேன்மேற்
றீரா வருள்கா ணிதற்கினிமேற் செயல்வே றுண்டோ வெனக்கூறி. (அ00)

ஆர மதனை வாங்கியணிந் தன்பா லதிலே யொருகாலைக்
கீர நிலவார் வெள்ளிலையு மெடுத்துக் கொண்டாங் கெழுந்துயர்கே
யூரன் புயமே லிடக்கையைவைத் துரிமை யுடனே நின்றடல்வாள்
வீர மருவு கரத்தோனும் வேந்தர்க் கெல்லாம் விடைகொடுத்து. (அ0க)

---

* இன்பம் உதவும் உனை நாளை என்றும், இன்பம் உதவும் முனைநாளை யென்றும் பிரிக்க. உனை நாளை-உன்னை நாளைத்தினத்தில்; முனை நாளை-முன்னைய நாளை.

† முன்புதனில் உந்தமைக் காண என்றும், முன்புதனிலுந் தமைக்காண என்றும் பிரிக்க. முன்புதனில்-வலிமையில். முன்பு தனிலும்-முன்னை நாளிலும் அதிகமாக.

யானைக் கூடத் திடையேகி யிகலார் கந்த மாதனத்தைத்
தானக் கடலைப் பார்த்தங்கே சற்றுப் பொழுது நின்றதன்மேற்
கானச் சுரும்பு துரந்தொருபுற் கவளங் கொடுத்தவ் விடைநின்று
மானப் பரிமந் துரைநோக்கி மன்னர் பெருமான் போமளவில். (அ0உ)

சேனை யனையா னிருமருங்குந் திரும்பிப் பார்த்த குறிப்பறிந்து
வாயில் வாயில் செல்லாத வகைமற் றெல்லா ரையுந்தகைந்தா
ரேய வுவகை தருகேயூ ரகனுந் தானு மந்துரையுட்
போய வளவின் முகங்கண்ட புரவித் துறையோ ரெல்லாரும். (அ0௩)

பேணித் தொழுது தொழுதஞ்சிப் பிற்கா லித்துப் பிற்காலித்
தியாணர்ப் புரவிப் பந்தியினின் றேகி விட்டா ரேகியபின்
காணத் தகுமிந் திராயுதத்தைக் கண்டு வதனந் தைவந்து
சேணுற் றொளிருங் கேசரத்தைத் திருத்தி முதுகிற் றுகில்பேணி. (அ0௪)

ஒருபிற் சங்கத் தொருதாள்வைத் தொருதூண் மிசைச்சாய்ந் துறநின்று
பரிவிற் கேயூ ரகனைமுகம் பார்த்து நாமிங் கேகியபி
னொருநற் பிறந்த விசேடமெனை நினைத்தா ருண்டோ வெனக்கேட்ப
மருவித் திகழ்கே யூரகனு மண்கா வலனைப் பார்த்துரைப்பான். (அ0ரு)

அங்கு முதனீ புறப்பட்ட வளவி லளவி லாயமுடன்
மங்கை யுயர்மே னிலையேறி வழியே பார்த்துக் கொண்டேநின்
றிங்கு மறைந்த பின்னுமத லேகை தோள்சாய்ந் தித்திசைமேற்
செங்கண் விடுத்து நெடுநேரந் திகைத்து நின்று ணின்றிறங்கி. (அ0சா)

வந்து சமய மண்டபத்தில்* வறிதே சிறிது பொழுதிருந்து
பந்த மிகுநின் றண்ணளியே பற்றுக் கோடா வெழுந்திருந்து
சிந்தை கவருஞ் செய்குன்றிற் சென்று செல்வா நீயிருந்த
வந்தண் மயில்சூழ் மரகதப்பா றையிலே யன்பால் வந்திருந்து. (அ0எ)

திறலோ னிருந்த விடமீதென் செல்வ னீரா டியவிடமீ
தறவோன் பூசை செய்திடமீ தண்ண லமுது செய்திடமீ
திறையோன் பள்ளி கொண்டிடமீ தென்றென் றிவையே பலகாலும்
விறலோய்பார்த்துப்பார்த்திருந்தாள் வெய்யோன்மலைவாய்விழுமளவும்.

மாலைப் பொழுது மகச்சுவேதை வருட்டு மதனு மெழுந்தந்தக்
கோலத் திருமண் டபத்தமுது கொண்டு மதியோன் வந்தெழுந்த
காலத் திளகி யொருசந்த்ர காந்தப் பாவை போலுருகிச்
சாலத்திகைத்துத்திகைத்தொருகைத்தலமேல்வதனஞ் சாய்த்திருந்தாள்.

---

* அவஸ்தான மண்டபம் என்றும் ஆஸ்தான மண்டபம் என்றும் முதனூலிற் காணப்படுகின்றது.

சற்றுப் பொழுதப் படியிருந்து தாங்கிப் பாங்கி கைகொடுப்பப்
பற்றிக் கிளர்ந்து மெத்தெனப்போய்ப் பள்ளி யறைபுக் கணைமீதே
யுற்றுத் துவண்டு விழுந்தயர்வுற் றொருசற் றிமையா தோதிமமுங்*
கற்றைக் குமுதங் களுநேமிக் கணமுந் துணையா விரவொழித்தாள். (அக௰)

விடிவே றெணப்பார்த் தெம்பெருமான் விசேட மறிந்து வாவென்ன
வடியேன் வந்தே னெனவரசு மப்போ திவுளி மேற்கொண்டு
பிடியேர் பத்ர லேகையையும் பின்னே வைத்துக் கொடுதன்சொற்
படியே கேயூ ரகனுமொரு பரிமேற் கொண்டு பின்போத. (அகக)

வேறு.

படையெலா மங்கே வைசம் பாயன னுடன்வைத் தேகித்
தடையிலா தேம கூடஞ் சார்ந்துகாந் தருவ ராசன்
மடநலாள் கன்னி மாட மதிற்றலை வாயில் சேர்ந்தக்
கடையிலோர் கையி லேதன் கவனவாம் பரியை விட்டு. (அகஉ)

பத்திர லேகை யோடும் படருங்கா லெதிர்வந் தாளோர்
வித்தகை விறலி தன்னை மின்னெங்கே யெனவ ணாங்கி
மத்தக மயூர மென்னு மரகதச் செய்குன் றின்கீழ்ச்
சித்ரமுண் டகவா விப்பாற் செய்பனி மனைக்கே யென்றாள். (அகங)

வழியது காட்டிக் கேயூ ரகன்முன்னே வழிப்பட் டேகப்
பொழிலிடைச் சிறிது சென்ற பொழுதுசெங் கதிரும் பச்சை
தழுவுறும் வாழைக் காவுட் டாமரைத் திரள்கண் டாற்போ
லெழுமனோ கரமா யோங்கு மிமமனை தோன்றிற் றன்றே. (அகச)

வேறு

அந்த மாளிகை நின்று நிரைநிரை
யாக வேயெழுந் தங்கி தன்னையுஞ்
சந்தி ரன்குண மாக்குந் தொழில்வலோர்
தையன் மேனியைத் தீண்டுந் தகைமைசேர்
சுந்த ரந்திகழ் சந்தன நீரிலே
தோய்த்து டுத்த துகில்களுஞ் சோதிசே
ரிந்து ரேகை யெனவொளி வீசவே
யிலகு நெற்றி யிடுங்கள பங்களும். (அகரு)

---

* ஓதிம வடிவாகவும் குமுத வடிவாகவும் செய்யப்பட்ட மங்கல தீபங்கள். ஓதிம விளக்கு-அன்ன விளக்கு. 'ஓதிம விளக்கி னுயர்மிசைக் கொண்ட' என்பது பெரும்பாணாற்றுப்படை, ௩௧௭. ஓவியமும் என்று ஏட்டுப்பிரதியிலுள்ளது.

முருகி லங்கு சிறுபுறந் தோயவே
முடிந்து போகட்ட மூரிக் குழல்களு
மருண பங்கய வெள்வளை யங்களா
லமைத்த ணிந்தன வாபர ணங்களு
மிருத னங்கண் மிசைச்சந்த னங்களா
லிசையும் வண்ண மெழுதிய தொய்யிலுந்
தரும டந்தையர் தாம்வந் தெதிர்கொண்டு
தாள்ப ணிந்து தனைச்சூழ்ந்து செல்லவே. (அகசு)

குமுதமா லைக்கொ டி யாடை வெள்ளமுங்
குழைத்த சந்தனங் கொண்டிட்ட வேதிகைச்
சமுகமு மங்கவை மேனி ரைத்தன
தாமவா ழைத்தடந் தோர ணங்களு
மமுத சாத வளையப் பிரம்புகொண்
டடிக்கு மாமணி வாயி லோருமா
யிமக ராலயம் போலப் பொலிந்துநின்
றிலங்கும் வாயில்க ளெய்தியுள் ளெய்தினன். (அகஎ)

வேறு.

இருகரையுந் தமாலமரத் திளங்கொம் பாலே
யிசைத்தனகாட் டொழுங்குகளு மெங்கு மெங்குந்
திருமலியுங் குமுதமலர்த் தூளி யாலே
செய்தமணற் குன்றுகளுஞ் செல்ல மீளக்
கருகியபைங் கேதகைவெண் மடல்க ளாலே
கற்பித்த தோணிகளுங் கவினித் தோன்ற
மருமலியுஞ் சந்தனத்தண் புனல்க ளாலே
வகுத்தனசிற் றாறுகளே வயங்கு மோர்பால். (அகஅ)

தேமாவின் மலர்ப்பாலா னனைத்த நாவற்
செந்தளிரால் வேய்ந்துநிலந் தெரியா தந்தப்
பூமாவி னறுந்தளிராற் புதையப் போர்த்த
பொற்பன்ன சாலைகளும் பொய்யா வேழந்
தாமாக யந்த்ரகரி களப சாலந்
தங்களிலே தாங்கள்விளை யாடா நிற்கு
மாமாய யந்திரமாம் வண்ணப் பொற்று
மரைவாவி களுமெளிதாய் வயங்கு மோர்பால். (அகக)

பொழிவனதா ரைகள்வீழ மிந்த்ர கோபம்
புனைந்தெழுமின் பொய்யிடிகள் புரளு மாவி
யெழுதியவிந் திரசாப மிவற்றி னோடு
மியக்கியமா யப்புயல்க ளியங்கு மோர்பா

லழகியதா மரைவளைய மதனுற் செய்த
வணிதுகிலின் வெளியடைநின் றலைந்த தோர்பாற்
குழுமியபொய்ப் பறவையெலா நீரிற் சென்று
குளித்ததிவ லைப்பனியே குலவிற் றோர்பால். (அ௨0)

தெரிவையர்க ளிவைமுதலாச் செய்த செய்த
சிதோப சாரமெலாந் திருக்கண் சாத்தி
யெரிவிழியா லெரிந்தமதன் வெம்மை யாற்ற
விரங்கிமலை மகளளித்த விடம்போ லென்று
முரியபுன லரமகளிர் பிறப்புந் திங்க
ளுறையுமிட மும்போலா மூததி ராசன்
மருவியநீ ராவிமண் டபம்போற் கஞ்ச
வளையத்தா லமைத்தொளிர்மண் டபத்தி னுப்பண். (அ௨க)

சீதமிரு கோலங்கொள் பாங்கி மார்தந்
திரள்சூழ வனேகநதி சென்று சூழு
மாதிபகி ரதியெனவே விளங்கி மென்பூ
வணைமீது சாய்ந்துவீழ்ந் தழகா ரம்பு
சாதவளை யங்களினு லணிந்த முத்தின்
றார்வளைதோள் வளைமுதலாந் தயங்கு பூணு
நீதிமதி வந்துகுடி கொண்டா னென்ன
நிலவெழுசந் தனநிறைந்த நெற்றி தானும். (அ௨௨)

மழைகுடிகொண் டதுபோலக் கண்ணீர்த் தாரை
வருவிக்கு மதர்விழியும் வந்து வாயு
தழுவியிடங் கொண்டதுபோற் பெருமூச் சூதை
சரிக்கின்ற வாண்முகமுந் தபன நாதன்
விழைவினிடங் கொண்டதுபோற் றபிக்கு மெய்ம்மேல்
வேலைகுடி கொண்டதுபோல் வெயர்க்கும் வேர்வு
மழல்குடிகொண் டதுபோலக் காம வெந்தீ
யதனாலே யெரிந்துசிறி தவியா நெஞ்சும். (அ௨௩)

நெஞ்சினுடன் காதலன்பா லேகி மெய்யி
னில்லாத வலியுமத னெருப்பி னாலே
விஞ்சவும்வெந் தறநீறு பூத்தாற் போல
வெளிறியசந் தனப்பூச்சால் வெளுத்து மீதார்
புஞ்சபுள கங்களுமக் கண்ணீர் வெள்ளம்
போகவைத்த பாழியெனப் புனைந்த தாழைச்
செஞ்சிறுகேர் மடலான செவித்தார் வண்டின்
றீயிசையா லழிந்துருகுஞ் செயலு மாகி. (அ௨௪)

சந்தனங்கள் பளிங்குகள்கற் பூரந் தன்னாற்
றரும்பாவை களைத்தழுவித் தழுவிக் கொண்டும்
வந்துவந்து மதனனையான் வரவு கூறு
மடமாதர் தமைநோக்கி வந்தா னெங்கே
யெந்தவிடத் தேகண்டீ ரிந்த நேர
மெங்கேயாம் வந்ததுதான் மெய்யோ வென்றென்
றுந்துவிழிப் பயிலாமலே கேளா நிற்கு
மொண்டொடியை வண்டணிதா ருரவோன் கண்டான். (அஉ௫)

ஒண்டொடியு மலரணைவண் டினங்கள் வந்தா
னுரவோனென் றெழுப்புவபோ லுகளித் தார்ப்பத்
தண்டரள நிலத்தூன் றுஞ் செங்கை தன்னைத்
தன்பதிவிம் பந்தாங்குந் தன்மை காட்ட
மண்டுமலர்த் தூளிகளாற் புழுதி பூத்த
மதிமுகத்தை வந்தெழுமா னந்த வெள்ளங்
கொண்டுகழீஇ நழுவியவுத் தரிய மாகக்
கோலமணி முத்தொளியைக் குயமேற் பண்ணி. (அஉ௬)

மதிநுதன்மேற் சந்தனத்தின் கனத்தாற் சற்றே
வணங்கியவாண் முகத்தினளாய் வாரா நின்றோன்
கதிர்முகம்பற் றியநெடுங்கட் கடைக்கே சேர்ந்த
கரியவிழிக் கிரணமெனுங் கயிற்றாற் பூட்டி
யெதிரிழுக்கப் பட்டனள்போ லணைமே னின்று
மெழுந்திருந்தா ளேந்தலும்போ யெழிற்சு வேதை
பதமலர்தாழ்ந் திவளைக்கை தொழுதான் மாதும்
பணிந்தந்த மலரணைமீ திருந்தா ளன்றே. (அஉ௭)

திருந்திழைசே டியரிட்ட பொற்பீ டத்தைச்
செலத்தள்ளி நிலத்திடையே செங்கோல் வேந்து
மிருந்தளவிற் கேயூர னணங்கை நோக்கி
யெம்மாட்டி யிம்முருகற் கிதயம் போல்வாள்
பரிந்திவளே தாம்பூல மளிப்பா ளென்று
பத்திரலே கையைக்காட்டப் பாவை பார்த்து
வரந்தருமா னிடாளவி னேரே கொண்ட
வாரமிருக் கும்படியென் மலரோ னென்றாள். (அஉ௮)

மன்னருகே நின்றிறைஞ்சு மவளை யிங்கே
வருகவிங்கே வருகவென மலர்க்கை பற்றித்
தன்னருகே பின்சார வைத்துக் கொண்டு
தானேவந் தொருநேயந் தழைந்து தோன்ற

பின்னருள்கூர்ந் துபசாரத் துடனே கூட
விளங்கழைத்தோ ளும்புறமும் விளங்கைம் பானு
மின்னுதலுந் தைவந்து தைவந் தாற்றி
விடாதிருந்தா ளப்பொழுது வேந்தர் கோவும். (அஉகூ)

சுந்தரைவா ழமரேச னுடையார் போலச்
சோருமிவ ளவத்தைபெலாந் துலங்க நோக்கி
நந்தனிநெஞ் சிப்போது தானு நேரே
நம்புகின்ற தில்லையிவ ளலக்கத் தாலே
வெந்துருகு மிங்கொருவே னிணைத்த தொன்றை
மீட்டொருகா னினையாது மின்னே யன்னாள்
சிந்தையைநா மினியறிவே மென்று நோக்கிச்
சிலகவடா கியமொழிகள் செப்ப லுற்றான்: (அகூ௦)

காரிகையா யிந்தநெடுந் துயருக் கெல்லாங்
காரணமற் றிங்கெவனோ கண்டோர் தம்மை
யீருதல்போ லுன்மாட்டு முண்மை யாக
விதுவருத்தஞ் செய்கின்ற தில்லை கண்டாய்
வாரமுட னிப்பொழுது தேக மெல்லாம்
வழங்கியுமுன் னிடர்தீர்க்க மனமுண் டித்தை
யாரறிவா ரனங்கதமா யழகார் செங்கை
யறமெலிந்து விட்டதுவே யையோ வையோ. (அகூக)

அறத்தாபஞ் சேர்ந்தவச மாகுங் கண்க
ளனுராகம் போன்றனவே யாகை யானு
முறத்தாழுங் கண்ணீர்கள் கொங்கை மீதே
பொளிர்முத்த மாம்பணிக ளுதவு மிந்தத்
திறத்தானு மிதுபடுக்கும் பைம்பூ வம்பு
செய்ததுவே யிதுகண்ட தீயேன் கண்கள்
பொறுத்தானு மிக்கொடுமை தன்னை நோக்கிப்
பொருந்தாவி நழுவுவதே போன்ற தன்றே. (அகூஉ)

இனித்தேற வமையுமிலங் கியதோர் கன்னி
யிளங்கொம்பர் மணஞ்செறிபோ திசைந்த போதோ
தனித்தேகின் றெசிபொழுதோ விளக்கஞ் செய்யுந்
தன்மையதா மாகையினுற் றைய லார்க்கு
மனைத்தேமங் கலமுதவும் வரானு கூல
மானவலங் காரமெலா மணியா யென்னப்
பணித்தேறு துதவியுமங் கிவற்றை யெல்லாம்
பண்டிறந்த பாலதையாற் பகுத்துப் பார்த்து. (அகூகூ)

பொருவருமிப் பாக்கியமு மெமக்குண் டாகப்
போகுமதோ வென்றுநினைந் தொன்றுஞ் சொல்லா
தொருசிறிது நாணியிருந் தொன்றைப் பேரிட்
டொழிதருபுன் முறுவல்செயா வொருபா ஞேக்க
வருகருணை மதலேகை யதன்பின் பாக
மன்னவனைப் பார்த்தரசே வாரீ ரிந்த
வுருகுபெரும் பரிதாப முரைப்ப தொன்றே
வுரைக்குமதே திதற்கினிநா னென்று கேளும். (அகூச)

எப்பொழுது மினிதான குமார பாவ*
மெய்தியிருப் பவட்கெதுதான் வெய்தா காது
செப்பமிகுந் தாமரைக்குப் பனிநீர் தானுந்
தீயாவ தில்லையோ செம்மல் கூர
விப்புதிய மலாணை யி லுலே மேலே
யெழுந்தமனோ பவதாப† மெளிதோ வெங்கண்
மைப்பயிலுங் குழன்மயிலுக் கிதுதான் மாற்ற
மருந்துசலி யாமனனே‡ மற்றொன் றில்லை. (அகூரு)

என்றளவி லுத்தரந்தான் சொன்ன வாறே
வென்றிறைவி மகிழ்ந்திருந்தா ளேந்த லிந்தத்
துன்றுமிரு வகைப்பொருளாஞ் சொல்லை யொன்றிற்
றுணியாது சஞ்சலனுய்ச் சுவேதை யோடு
நன்றிமொழி பலவுமொழிந் தனேக நேர
நயந்திருந்து தகைத்திடவு மியைந்தி ராது
நின்றுவிடை கொண்டுபுறம் போந்து வாய்ந்த
நெடும்பரியை மேற்கொள்ள நினையும் போது. (அகூசு)

வயந்தருகே யூரகன்வந் தரசே யிந்த
மாதுபத்ர லேகையையெம் மாட்டி யின்றைக்
கியைந்தருகே கொண்டிருக்க விச்சிக் கின்று
ளினிநாளை வரவிடலா மிவளை யென்று

---

* இனிதான குமார பாவம் — ஸௌகுமார்யம். குமாரபாவம் — கௌமாரம். இனி, குமாரனை உன்னிடத்தில் இனிதான பாவம் (=எண்ணத்தை) எய்தியிருப்பவட்கு என்றும், குமார! உன் விஷயத்தில் காதலெண்ணமுற்றிருப்பவட்கு என்றும் உரைக்க இடமுண்டு.

† மனோ பவ தாபம்—மனத்தி லுண்டாயிருக்கிற தாபம். மன்மத தாபம் என்பது பிறிது பொருள். மனோபவன்—மன்மதன்.

‡ சலியா மனன்—சஞ்சல மில்லாத மனம். சஞ்சலமில்லாத மன்னன் என்பது மற்றோர் பொருள்.

வியந்தமத லேகைகடைத் தலைக்கே நின்று
விண்ணப்பஞ் செய்கின்றா ளென்னச் சொல்லி
நயந்தருள விவள்செய்த பேறே வென்று
நன்னுதலை யுள்விடுத்து நாம வேலோன். (அ௯எ)

படையிருப்பில் வந்துபுகுந் தளவிற் றங்கள்
பழையவனு மொருதூதன் பதறித் தோன்ற
வடன்மிகுந்த பரிநிறுத்தி யவனை நோக்கி
யையருமென் னன்னையுநம் மமைச்சர் கோவு
மிடரறக்கொண் டிருந்தனரே சுகமே யென்ன
யார்க்குமொரு குறையிலையென் றிறைஞ்சித் தூதன்
புடையெடுத்தோ ரிரண்டோலை கொடுப்ப வேற்றுப்
பொன்முடிமேற் கொண்டவிழ்த்துப் புரிந்து பார்த்தான். ()

மருவுமதில் வாசகநன் மைகளுண் டாக
மண்ணரச ரபிடேக மணிச்சூட் டாகு
மிருகமல பாதனிரா சாதி ராச
னெழிற்பரமே சுரன்மலைமா திடங்கொ ளீசன்
சுருதிதரு பதமறவாப் பரம மாயோன்
சொற்றாரா பீடனிசைத் தோன்ற லோலை
பெருகவளர் தருமெல்லாச் சம்பத் துக்கும்
பிறப்பிடமா கியசந்த்ரா பீடன் காண்க. (அ௯௯)

சங்குலகத் துயிர்களெலா மிடர்வே றின்றி
யினிதிருந்தார் தம்மைமகிழ்ந் தெடுத்துப் புல்லி
யோங்குமணி யுச்சியைமோந் திருந்து வாழ
வுளமிகவா தரிக்கின்றா ரூரி னின்று
நீங்கிநெடு நாளுளவா லன்னை மாரு
நினைந்திரங்கா நின்றார்க ணிகழ்ந்த வோலை
வாங்கியுரை வாசித்த பொழுதே நம்பி
வரும்பயண முகுத்தமென மனத்தே கொள்க. (அ௲0)

எனுமிந்த வாசகமே யமைச்சன் விட்ட
விரண்டாவ தாகியவோ லையிலுங் கண்டான்
மனமொன்று மந்திரிசேய் தனக்கு மிந்த
வாசகத்தால் வருமோலை யிரண்டுங் காட்டு
மெனநின்ற பேருடனே யியம்பி யெங்கோ
னியம்பியதே முகுத்தநமக் கென்று வாசி
தனினின்று மிறங்காம லிருந்தே யேகுந்
தன்பயண மணிமுரசஞ் சாற்று வித்தான். (அ௲க)

அலகில்பரித் தானைகளாற் சூழப் பட்ட
வதிகவலா சகன்மைந்தன் மேக நாத
னிலகுமுகந் தனைநோக்கிப் பத்ர லேகை
யினிவருகே யூரகனோ டிங்கே வந்தாற்
சிலைநுதலி தனைக்கொண்டு போது மாந்தர்
செப்புவதொன் றுளமொன்று செய்வ தொன்று
நிலையுடைய நெறியுடையா ரன்று நன்றே
நிகழ்த்துவார் தம்மிடத்து நெறியீ தொன்று. (அசஉ)

பாவையனை யாள்காதம் பரிக்கு நான்செய்
பரிவினுடன் பெருவிழைவும் பண்பு மற்றும்
யாவுமிக வஞ்சகமா யுரைத்த வெல்லா
மினியவுப சாரமுமே யான வந்த
வாவியனை யாளென்பால் வைத்த நேய
மறியாமல் வைத்தனளென் றவனி கூற
மேவியபே ரன்பவன்பால் வீணே வைத்தேன்
விதிவலியோ வெனநாணி வெறுக்குந் தன்னை. (அசங)

ஈங்கெனது குணங்களைநற் குணங்க ளாக
வியம்பியமாச் சுவேதைதனை யேது சொல்வா
ளாங்கவடா னெனக்கருதி யதற்கு நொந்தே
னதுநிற்க தந்தைதன தானை யென்றும்
பாங்குடைய வென்னுடலுக் குரித்து நெஞ்சம்
பகவனுறை பனியேம கூடந் தன்னிற்
பூங்கமலக் கொடிக்குரிமை பூண்டு பேணிப்
போகாம லென்னுயிரைப் புரக்கு மன்றே. (அசச)

வந்தகே யூரனுக்கு மேக நாத
மன்னியவென் மனத்தியல்பாம் வாய்மை கூறித்
தந்தைதன தேவலினுச் சயினிக் குள்ளந்
தனைவைத்துச் செல்கின்றேன் றனியே பாவி
யிந்தநிலக் கயவருட னெண்ணத் தக்கே
னேகுகின்றேன் யானுவி கொண்டி ருந்தாற்
பைந்தொடிதன் பாதமல ரன்றி வேறு
பற்றில்லை யென்பதுவும் பண்பீ தென்றும். (அசரு)

சொன்னகுணச் சுவேதைதனை வலமா வந்து
தொழுதிறைஞ்சிக் கொண்டதுவுந் தொழுதே நெஞ்ச
முன்னுமத லேகைதனை மீண்டு மீண்டு
முறத்தழுவிக் கொண்டதுவு மொருவே றுவி

தன்னைநிகர் தமாலிகையைத் தழுவிக் கொண்ட
தன்மையுமப் பரிசனங்க டம்மைத் தம்பான்
மன்னியநன் னேயமெலா மறிவே னென்று
மனமகிழ்ந்த வப்பதியை மறவே னென்றும். (அசசு)

செந்தமிழ்தே ரமரேசன் றேவன் வண்மைச்
செங்கைமுகக் கணபதிக்குச் செய்வித் தோங்கு
மிந்துவதி பொற்கோயில் போல வாய்ந்த
வெழிலேம கூடத்தெம் மிறைவன் பாதம்
வந்தனைசெய் தெந்தையர்வாழ் நகர்க்குச் சென்று
வருகின்ற வாறுமெல்லா மறத்த லின்றிச்
சுந்தரமா மொழிந்தவனை யேவென் றுற்றுச்
சொல்லிநெடுங் கடற்றனை தூவளா வண்ணம். (அசஎ)

கொண்டுவர வைசம்பா யனுக்குங் கூறிக்
குதிரையினின் றிறங்காமற் கதியை நோக்கி
மண்டுகுலக் குதிரையனு மானித் திந்த
மகிதலத்தைப் புரட்டிமிக வன்று ளாலே
தெண்டிரையி லிடுவதுபோற் பதறித் தேறச்
செறிந்திலங்கும் வல்லையக்கா டெங்கு மோங்கச்
சண்டவயப் புரவிநிரை யெங்குஞ் சூழத்
தடந்தோகை மயிலூர்தி தனைப்போற் செல்ல. (அசஅ)

அங்கதுதன் முற்கொம்பு பற்றிப் போது
மதிகவிசை யொட்டனுட னயர்வு காட்டா
தெங்கள்வள நகர்ப்புதுமை யெல்லாஞ் சொல்லென்
றியல்பாகக் கேட்பவவ னியல்பு கூறச்
சங்கையறு மனத்தினனுய்த் தழைத்த கானத்
தாரையினிற் செலத்தொடங்கத் தாரை யெல்லாங்
கங்குலெனப் பரந்திருண்டு கவடு தாழ்ந்து
களிறொடித்த வழிமருண்டு கருதொ ணுதாய். (அசகூ)

திண்டிறல்வேற் படைவீரர் மேனுட் பட்ட
செருக்களத்தில் வடிவாளுங் கணையும் வேலுங்
கண்டகமுந் தலைமலையுங் கல்லும் புல்லுங்
கட்டைகளு முதிர்சருகுங் கான யாறு
மண்டிவரு பெருங்களிறு மதத்தாற் சாய்ந்து
வழியில்விழும் பெருமாமு மடிந்த தூறுங்
கண்டகண்ட விடமெங்குங் குடிபோய்ப் பாழாய்க்
கால்வைத்தற் கரிதாய கடங்க டந்து. (அரு௦)

தேரிரவி குடதிசையை நோக்கிக் கொவ்வைச்
செங்கனிபோற் சிவந்தளவில் வெட்டிச் சுட்ட
காருலவும் பழம்புனத்தி லரிந்து விட்ட
கருந்தினைக்குஞ் செந்தினைக்குங் காவ லாகப்
போருலவு சிலைவேடர் செய்து வைத்த
புல்லாளும் புனப்புறஞ்சூழ் கலையு மானும்
பேரிதனு மந்நெறியிற் கண்டு கண்டு
பெயர்ந்தளவிற் பிறங்கியசெங் கொடிமுன் றோன்ற. (அ௬க)

அதற்கெதிரே சிறிதிடஞ்சென் றளவில் வேட
ரரிந்தவிபக் கோட்டாற்செய் கபாட மிக்க
விதப்புடைய விருப்புத்தோ ரணங்கள் கண்டோர்
வியத்தக்க நெஞ்சமா மிருகண் ணுடி
மதுப்பொழியுஞ் செந்தெரிய றருப்பை மாலை
வயங்கும்வா சற்கெதிரே மயிட மாவற்
புதக்கருங்கன் மேலிருப்பாற் செய்து நிற்பப்
பொருவருசெஞ் சந்தனத்தாற் பொலிவு செய்து. (அ௬உ)

கண்ணைவிழை பவரிடந்து வைத்த கண்ணுங்
காதலினு வாரரிந்து வைத்த நாவு
மெண்ணமுடிந் தவரரிந்த தலையும் பூவு
மெழுதுளிருங் காயும்போ லிலங்க நாளு
நண்ணுபலி விகற்பமுற நல்ல சோகி
னணிநெருங்கக் குக்குடத்தி னற்சூ டெல்லாந்
தண்ணளியோ டகாலத்தின் மலரா மற்றுந்
தருநிறையு மவ்வாறு தயங்கு முன்றில். (அ௬௩)

சூழவளர் பனங்கனிக ளுதிரக் கூனித்
துணிந்துதலை யரிந்திடுமத் தன்மை தோன்றக்
காழில்குலைப் பேரீந்து விரிந்த கூந்தற்
கடியின்வடி வாய்நிற்பக் கடிகொள் வாழி
வேழவுதி ரத்துடன்வெண் மருப்பு முத்தும்
விரசிநுகர்ந் தெதிரிட்ட விடங்க டோறுங்
கூழுதிரத் துடன்கலந்த பலியாத் தோன்றக்
குலக்கதிருங் குருதியிடைத் தோன்ற லாங்கே. (அ௬௪)

ஓடுபெருங் குருதியைக்கண் டேகி யுட்கி
யொருதலைக்குப் புற்றவன்று னதனுள் வீழ்ந்து
வாடுவது போன்றிருக்கும் வண்ணந் தோன்ற
வயங்குமணி முன்றில்வளை முரச மார்ப்ப

நீடுமகிற் புகையேறிச் சிவந்து காட்டு
நிரைவிளங்கும் வடிவாளு நெடிய வேலும்
பாடுபெறும் வகையிலங்கப் பரவிச் சிந்து
பலமலரின் பரிமளமும் பயிலக் கண்டான். (அ௫௫)

பொன்கொண்ட கோகனகப் பூவை வாழும்
புயவணிக னமரர்கோன் புவனங் காக்குந்
தென்கொண்டு வண்டிமிர்தார்த் தேவன் வண்மைச்
செங்கைமுகில் சுந்தரைவாழ் செவ்வேள் மீளி
மன்கொண்ட பெருங்குலபூ தரங்கள் போல
வைப்பித்த கோயில்பல வவற்றென் றென்ன
மின்கொண்ட மூவிலைவே லேந்துங் காளி
வீற்றிருக்கச் சிறந்துமிக விளங்குங் கோயில். (அ௫௬)

கண்டுவயப் புரவியினின் றிறங்கி மன்றல்
கமழ்கோயில் வலம்வந்து கனகப் போது
கொண்டலெனு மிகப்பொழிந்து தொழுது செய்ய
குலமலர்த்தா ளிணையிறைஞ்சிக் குறித்த துள்ளஞ்
சண்டவிறற் றருகணைக் காய்ந்து வாகை
தனைப்புனைந்த நின்னருளாற் றழைக்க விந்தப்
புண்டரிக மலர்ப்பாதம் பணிந்தே னென்று
புகழ்ந்தருளைப் பெற்றவனும் போந்த பின்பு. (அ௫௭)

துரங்கநிரை யுள்ளாகக் கட்டிச் சேனை
சூழுமரத் தடிதோறும் விட்டு வேழ
மரங்கடொறுந் தொடர்பூட்டிப் பிணித்துச் சேம
வாசகத்தான் முரசறைந்து வரவுங் கூறி
யரங்குலவு கூரிலைவேன் மன்னர் கோமா
னங்கவர்கள் படகடிக்கு மதுவு மெங்கும்
பரந்துவிரைந் திடம்பிடிக்கு மதுவு மெல்லாம்
பலருடனு நகைத்துரைத்துப் பார்த்து நிற்ப. (அ௫அ)

வழிபோவார் கல்லெறிந்து முறிந்த கையும்
மருந்திட்டுக் கெட்டதொரு கண்ணு மெங்குங்
குழியான புண்ணுநெளி முதுகிற் கூனுங்
குரங்குகடித் துத்துளைத்த கொண்ண மூக்கு
மொழியாம லோந்திபாம் புடும்பு பல்லி
யொப்பான பலநரம்பு மொடிந்த பல்லுங்
கழியான கருங்கட்டை நிறமும் பீற்றைக்
கந்தைதைத்த வூசிநுழை விரலுங் கையும். (அ௫௯)

யந்திரமந் திரமிரத வாத மென்னு
மிவையெழுதிக் கற்றந்த விடத்தை நாடி
வந்துவிடும் யோகினிகண் மோக மாக
வசிகரணம் வல்லவர்போன் மாயஞ் செய்து
சிந்துதனைக் கின்னரத்தைத் தெறித்துத் தன்பாற்
றிரண்டகொரசு கோதையெனத் திருந்தப் பாடிப்
புந்திகளி கூர்ந்திறைவி பாத நெற்றி
புண்ணுக வணங்கியுயர் போகம் வேண்டி. (அசுO)

தேவியையா குலப்படுத்தித் தீய ளுகித்
திருந்துமொரு கைபுடையி லிருந்து வந்து
மேவியவத் தானையுடன் வீணை காது
வெகுண்டவர்கண் மிடைப்படுத்த மிடைந்த வாண்டிப்
பாவிதனை யழைத்திஙனே வந்த வாறு
பகருமென வவன்பிதற்றப் பலவுங் கேட்டுக்
கேவலமோ நீரென்று நகைத்துச் சற்றே
கிளிமொழியா ளைப்பிரிந்த கிலேசந் தீர்ந்து. (அசுக)

ஓங்குபடங் குட்புகுந்து துயில்வான் போல
வொருகங்கு லீத்துதய ராக விம்பம்
பாங்குடைய வுலைமழுவிற் றோன்றப் பின்னே
பரவிவரு மாண்டிக்குப் பலவு நல்கித்
தாங்கரிய வொருபஞ்ச தாரை வாசி
தனிலேறித் தாரையுடன் சங்க மார்ப்ப
வாங்கியவல் லயத்துடனே செவ்வேள் போல
மலிதானை புடைசூழ வழியை நோக்கி. (அசுஉ)

அடுசினவெம் புலித்தோலுங் கலைமான் றோலு
மடல்வேழ வெண்கொம்பு மதின்வெண் முத்து
முடுநிரைபோ னெடுங்கழையின் முத்து மற்று
மொன்ருத மான்மதமு முவந்த யாவும்
படுகலையு மினமானு முயலு மென்னப்
பலகிளையுங் குக்குடமும் பலவுங் கொண்டு
தொடுகழலி னெயினர்தொழு திறைஞ்சிக் காட்டச்
சுடர்வேலோன் கண்டவர்க்குத் தோன்றச் சென்றான். (அசுங)

சென்றவர்வா ழெல்லைதனை நீங்கி வேரி
திறந்தொழுகும் பூங்காவுஞ் சிறந்தோர் தங்கு
மன்றன்மலர்ப் பூந்தடமுங் கருப்பு வேலி
வளைவயலும் விளைவயலு மற்று மெல்லாந்

துன்றியபன் னலந்தருபே ரூர்கள் கண்டு
துதித்துழவர் சுமந்துவரும் பச்சை யுங்கண்
டன்றவர்க ளிடத்துமகிழ்ந் தமர்ந்த பின்பு
மடைவடைவே மகிழ்ந்தவ்வூ ரமர்ந்து சென்று. (அசுசு)

வேறு.

சிந்தையத் திசைதொறுஞ் செல்லச் செல்லவே
யந்தியின் மகிழ்விடத் தமர்ந்த மர்ந்துமுன்
வந்துவந் தரசர்சூழ் மன்னர் மன்னனுந்
தந்தைதன் வளநக ரணுகச் சார்ந்தனன். (அசுரு)

அந்நகர் வாழ்பவ ரணுக வந்தன
னென்னநல் விழைவுட னெதிர்ந டந்துதஞ்
சென்னியி லஞ்சலி செய்தி றைஞ்சிவேன்
மன்னவன் மகிழவே மகிழ்ந்து வந்தனர். (அசுசு)

வெந்திறல் வேந்தனும் விரைந்து வாயிலில்
வந்தன னென்பது மன்னர் மன்னவன்
றந்தையுங் கேட்டபின் முளில் வீழ்ந்தனன்
மைந்தனு மிறங்கிமுன் வணங்கி வந்தனன். (அசுஎ)

வணங்கிய மைந்தனை வந்தெ டுத்துமுன்
றணந்தவத் தன்மையாற் றழுவி விட்டில
னணங்குசேர் வேலனு மஞ்சித் தாழ்ந்தனன்
கணங்களின் கண்களுங் கலுழப் புக்கன. (அசுஅ)

பின்னவன் மைந்தனைப் பெரிது நோக்கவு
மன்னவன் றந்தைதாண் மலரை நோக்கவு
மன்னவ ரன்புகண் டழிந்து நின்றனர்
துன்னிய மன்னருந் தொழுது சூழவே. (அசுகூ)

அன்னையைக் காணவென் றழைத்துக் கூடவே
மன்னவன் சென்றபின் வந்த மைந்தனு
மன்னையை வணங்கவந் தவட ழீஇக்கொளப்
பன்னரம் பெழுமுலைப் பாலிற் றோய்ந்தனன். (அஎ0)

சுற்றுமந் தப்புரத் தோகை மார்மகிழ்
வுற்றனர் பெற்றவ ளுடைய மாதவஞ்
சற்றல வென்றனர் தழைக்க வாழ்த்தினர்
செற்றிநீ ராஞ்சனஞ் சிறக்கச் செய்தனர். (அஎக)

பாவையர் மகிழ்வுறப் பார்த்துத் தந்தைத
னேவலின் மகச்சுக நாத னீங்கவன்
றேவியா மனோரமை சிந்தை வாழ்வுறக்
காவல னவரையுங் கண்டி றைஞ்சினன். (அஎஉ)

படையுட னேவைசம் பாய னும்வரு
மிடையற வென்றுரை செய்து மீளவுந்
தடையிலா வன்னை தன் பவனத் திற்புகுந்
தடைவின்மஞ் சனம்படிந் தமுது துய்த்தபின். (அஎங)

அந்திவாய்த் தன்பதிக் கேகி யாங்கவன்
சிந்தியா நிற்பதுஞ் செயலும் வேறிலை
முந்துகா தம்பரி மொழியத் தன்செவி
வந்துவாழ் விப்பவோ வாழ்வு மன்றிவை. (அஎச)

பாங்குட னேகுநம் பத்ர லேகையப்
பூங்கொடி தன்னுடன் புகன்ற யாவையு
மாங்கிவண் மொழியின் னமுது துய்த்ததா
மாங்கது தெய்வமங் கலமு மாகுமே. (அஎரு)

என்றுபார்த் திருந்தன னிருந்து நாட்சில
சென்றபின் சீரிய பத்ர லேகையை
வென்றிவேன் மேகநா தன்ற ரக்கினர்
மன்றல்சேர் குழலியும் வணங்கி நின்றனள். (அஎசு)

வணங்கிய மங்கையை வரவ ழைத்திவ
ளிணங்கின ளெனத்தழீஇ யிறைஞ்சி நிற்பமுற்
றணந்தவண் மேகநா தன்பு றந்தழீஇக்
குணந்தனைக் கூறிமுற் குறித்துக் கூறினன். (அஎஎ)

தோமிலா வாகுணைச் சுவேதை தன்னுடன்
காமர்கா தம்பரி கருத்து ளாயநோ
மாமத லேகைநம் வரத மாலிகை
யாமவர் சுகத்துள ராமின் னோர்களே. (அஎஅ)

இன்னருள் படைத்தன ரினிதி ருந்தன
ரன்னவா சகமுமங் கதுமொ ழிந்தனர்
மன்னவர் தீபமே வாக்குக் கெய்துமோ
சொன்னது முற்றவுஞ் சொல்வ தெங்ஙனே. (அஎகூ)

கொங்குசேர் பூங்குழற் குலவு பூந்தொடை
யிங்குநின் றிருவடிக் கென்றி றைஞ்சினள்
மங்கைகா தம்பரி யென்ன மன்னவர்க்
கங்கவன் விடைகொடுத் தவளை வாவென. (அஅ0)

மன்னுநீ ராவியில் வனசப் பாசடை
யன்னமென் பெடையுட னகல வந்தவா
பொன்னணி வாயிலின் புறத்து நிற்பநீ
யன்னவ ரிடத்துநின் றடைவு கூறென. (அஅக)

பயின்றது திருவுளம் பற்றிக் கேட்டருண்
முயங்கின டாடொரழ முயங்கி விட்டில
ணயந்தனள் பாங்கிரா ஞக நன்னுதல்
வியந்தன ளயர்ந்தனண் மெலிவு தோற்றவே. (அஅஉ)

தோற்றிய மெலிவினைச் சொல்ல வேண்டுமென்
றூற்றியு மஞ்சலி செய்து மங்கனே
போற்றியு மொழிந்திலள் புனித நின்னிடை
யேற்றியும் வருந்தியு மியம்ப நேர்ந்திலள். (அஅங)

தையல்பூங் காவிடைத் தனிய ழைத்தெனைப்
பையவே மரகதப் பாறை யேறியத்
துய்யமெல் லணையிருந் தயர்ந்து தோகைநா
னுய்யநீ யொருமொழி யுரைப்பக் கேளென. (அஅச)

கிள்ளையும் பூவையுங் கேட்கு நீள்வனத்
துள்ளநற் றேவதை யுணரு மென்றவாய்
விள்ளவும் வருந்தினள் விழியி லஞ்சன
வெள்ளமே வரவர வெயரிற் றேய்ந்தனள். (அஅரு)

நாணுதன் முதலிய நன்கி யாவையும்
பேணுதல் பெண்மையின் பெருமை யாதர
மாணுத லொடுக்கநன் மரபு காத்தலவ்
வாணுத லிடத்திலே வந்து கற்றன. (அஅசு)

யாழ்குழ லினைத்திறு மினிய சொற்றரத்
தாழ்குழ லினைந்தன டழுத ழுத்தனள்
வீழ்குழ லிசையென மெலிந்த வம்மொழி
கேழ்கிளர் கழலினுய் கேட்ட தில்லைநான். (அஅஎ)

பின்பவண் மொழிந்தனள் பெரிது மெந்தையா
யன்புடை யுறவின ரறிந்த தொன்றல
வென்பரி சனங்களு மீத றிந்திலர்
துன்பம திங்ஙனே தொடர்ந்து நின்றதே. (அஅஅ)

திங்களுக் கெழுசிறு தென்ற லுக்குமென்
கொங்கலர்க் கணைக்குவெங் குயிலுக் கன்றிய
கங்குலுக் கெழுதுளைக் கழைக்குப் பாவியே
னிங்கென குறைசெய்தே னென்னைக் காயுமே. (அஅகூ)

ஈதெலா முறுப்பவ ரிருந்து வாழ்பவ
ராதலான் மொழிவதென் னமையு மேயினி
மாதரா யிங்குநீ வந்த றிந்தது
போதுமே யெனவவள் புலந்தி ருந்தனள். (அகூo)

அன்னமே நீவெறுத் தருள வென்செய்தான்
மன்னர்கோ னென்றுநான் வருந்திக் கேட்டபின்
மின்னவிர் வேல்விழி விழைந்து கேளினி
யின்னநான் மொழிவதுண் டெனவி யம்பினாள். (அகூக)

வாய்ந்தபல் கனவிலே வந்து வந்தெனைச்
சேர்ந்தநாட் பணிந்துசெம் பஞ்சு தீட்டவு
மேய்ந்தபூ முலைத்தடத் தெழுத வுந்தெரிந்
தாய்ந்தபூந் தொடைகுழற் கணிந்து பேணவும். (அகூஉ)

வாசநாண் மலர்ப்பொழில் வந்து மாமணி
யூசல்போ லாடிடத் துழன்று நிற்கவுந்
தூசுதான் பேணவுந் தொடர்ந்து பின்வரக்
கூசவு மெனைத்தழீஇக் கொண்ட லைப்பவும். (அகூங)

மறுத்தலை யின்பமாக் கொண்டும் வாய்விட
வொறுத்தலைப் பொய்த்தலாக் கொண்டு முற்றுள
நிறுத்தலை யன்பினா னின்ற தாக்கொண்டும்
வெறுத்தலொன் றின்றியே விரும்பி மேல்வரும். (அகூச)

என்றிவை முதலிய வுரைப்ப வேந்திழை
யொன்றிய கருத்திவை யுண்மை யாய்விடி
னன்றிது தென்றலுக் கந்த நாண்மதிக்
கன்றிய மதனனுக் கன்பும் வாய்த்ததே. (அகூரு)

வேறு.

ஆன தோர்கனவு கண்ட தென்றுமிக வாத ரித்துநகை செய்துளே
தேன மர்ந்தகுழ லாயி தற்குவரு தீமை யென்கொல்விறல் வேந்துசேய்
மான வேலவனி மன்ன னான்மிகவும் வந்த தன்றுமதி யில்லையோ
வேனி லானுடைய பூச லால்வரும் விதங்க ளீதென விளம்பவே. (அகூசு)

இங்கு வேனிலவ னென்று கூறுமவ னியாவ னெத்தகையன் வண்ணமே
தங்க வன்படை யடுத்த வென்பொருவ தாரை நீமொழிக வென்னநான்
மங்கை மேனியிலன் வண்ண மில்லைமலர் வாளி தென்றலொரு வெய்யதேர்
சங்க ரன்றனையு மெய்த னன்பெரிய சக்க ரக்குரிசின் மைந்தனே. (அகூஎ)

கண்டொ ளிக்கவரி திங்கி வன்கணை கருத்தை நாடும திலக்கவன்
சண்ட வெங்கனல் கொழுந்தி லாதகன ருவு கின்றபுகை தானிலை
தெண்டி ரைக்குளெழு கவிகை வெய்யதொரு தேரும் வெய்யதொரு வந்தெனிற்
றுண்ட வெங்கன லிவன்ற னக்குநிகர் சொல்ல வேறொருவ ரில்லையே. ()

ஆத ரித்தவர் குணங்கள் கூறிலல கில்லை யங்கவ ரவர்க்குளங்
காத லிக்குநெறி கூறி லங்கவர்கள் காத லுக்குமொரு கரையிலை
பூத லத்திலவர் கூடு மப்பொழுது பொழுதெ லாமிகவு மற்பமா
மாத ருக்குநெறி யாட வர்க்குநெறி மறறு ரைப்பது மனேகமே. (அகூகூ)

இத்த லத்திலிது முறைமை மிக்கவ ரிராச கன்னியர்க ளெங்கணுஞ்
சித்த மொத்தவர் தமக்கு மாலையிடு செயற னக்குரியர் மக்களைத்
தத்த மக்கிதய முற்ற வர்க்குதவு தந்தை தாயரல விவர்கள்வே
றத்த ரத்திலுயர் தெய்வ கன்னிகை யதற்கு நீயொருவ லென்றுநான். ()

சென்று கொண்டுவர நினைவெ னக்குளது தேறெ னத்தெரிவை முகமலர்ந்
தொன்றி யாவிபெற பாவை போலுவகை யுற்று ரைத்ததொரு சற்றல
வென்றி மன்னவனை யிங்க ழைக்கவெனின் மிக்க வன்மையது விழைவினு
லின்று செல்வது நினைக்கி னுன்னுடனி திங்கி வந்தலையு மாகுமே. (கூ0க)

இங்கு வேள்பொர விருந்து விட்டன மெனிற்சி றப்பிலை யவன்றனக்
கங்கெ ளுருயி ரளித்து விட்டன னெனிற்பு கழ்க்கினிய தல்லவாம்
பொங்கு மாதரவு பெரிதெ னிற்புகல்வ தன்றெ னக்கரச னெஞ்சினிற்
றங்கு காதலுள ரோவெ னிற்பெரிய தாழ்வு கூறுவது முண்டரோ. (கூ0உ)

மாலை கொண்டினி யகப்ப டுத்திலது மற்றை மாதர்செய லுற்றிஙன்
சால வேமொழி யொழிந்தி ருக்கிலது தவற தாமிகவு மன்பிலார்
சீல மாயினர் விரைந்தெ னிற்கொடுமை செப்பு கின்றவழி யாகுமென்
கோல மிப்படி படைத்து விட்டன னெனிற்ப ரத்தையர் குணங்களாம். ()

மேவு மன்புடைய னென்று கூறிலது மிகவு மன்புடைய தல்லவாம்
யாவு நின்னையல தெய்த விங்கரி தெனிற்பெ ருக்கவித மாகுமென்
னேவ லாளுடன் விரைந்து போதவெனி லிங்கு வீறுடைமை யாகுமே
லாவி போனபிற காயி னுந்தெளியு மதுந மக்கரிய தின்னமும். (கூ0ச)

## பூர்வ காதம்பரி முற்றிற்று.



ஸ்ரீ :

# உத்தர காதம்பரி.

சீரார் தருசந் ரசிலா தலமே
லேரார் களபத் தியல்பான் மெழுகுந்
தாரா லயமுந் தழல்போல் வருநா
ளாரா யதுகண் டிலமன் றவனே. (௯௦௫)

அந்தக் கதிர்வே லவனின் றலவோ
வந்தக் காதம் பரிநா னலவோ
வந்தத் தறுகண் ணவனன் றலவோ
வந்தச் சிலைவே ளவனே யலவோ. (௯௦௬)

என்று தரவோ டிவைகூ றியயர்ந்
தொன்று கமறந் துரையற் றனளாய்
நன்று கியபா வையினல் லமணிக்
குன்று கியதூ ணெடுகூ டினளே. (௯௦௭)

நற்பா வைதனக் குநறுந் தளிரின்
பொற்பா ரமளிப் பொலிவுற் றதுபோல்
விற்பாய் பகலோன் விழுபோ தருவற்
செற்பா வியமா லைசிவந் ததுவே. (௯௦௮)

மாரா யுதமா னதுவன் கனலிட்
டோரா யிரமா கவுகைத் ததுபோ
னீரா சனவெஞ் சுடர்நீ ழலெலா
மேரா ரிவண்மே னியிலெய் தியதே. (௯௦௯)

ப்னூ றுமடந் தையர்பா வைநலா
ளந்நூ புரபா தமடைந் தனர்பின்
சொன்னூ தனமுண் டதுசொல் லுதுமென்
றந்நூ லிடையார் முனமைத் தொருபால். (௯௧௦)

ஏகிப் பொற்பா றையிலே றிமிகச்
சோகித் தொருதூ நகையே துயில்போன்
மோகித் தமயர் வுமொழிந் துயிர்நீ
யாகித் தருவா யவனன் பினையே. (௯௧௧)

என்றிப் படிகூ றியெனக் கெவையுங்
குன்றிற் பெரிதா யகொடுத் ததுட
னொன்றிக் கமழ்வெள் ளிலையிட் டொருநீ
சென்றித் துயர்தீ ரிதுநின் செயலே. (௬௧௨)

வேறு

என்றுமினி தாகவிவை கூறிவிடை தந்தாள்
பொன்றிகழ் சுணங்கிலகு பூண்முலையி னாள்பொற்
குன்றனைய தோளிறைவ கூறின மனத்தே
யொன்றியது முற்பட வுணர்ந்துகொள வென்றாள். (௬௧௩)

அந்தமயி றந்தமொழி யாரமுத மாகிச்
செந்தழலு மானபடி செப்பவரி தாகு
நொந்தன னலைந்தன னுவன்றனன் மயிற்கூ
றெந்தவிட ருற்றில னிதெப்படி யுரைப்பாம். (௬௧௪)

இந்தவுயிர் முன்செய்வினை யாலெனை விடாமற்
கொந்துகமழ் கோதையுரை கொண்டினி திருந்தாற்
சிந்தையொடு செல்வனிது செய்தியெனும் வேலை
கந்தனனை யானையொரு கஞ்சுகி வணங்கி. (௬௧௫)

மேதகு விலாசவதி மிக்கவரு ளுற்றுக்
கோதைநர பாலகுல தீபவனை யிங்கே
மாதுதிறன் மேகனுடன் வந்தவளை யுங்கொண்
டாதரவி னல்வர வழைத்தனள்செ லென்ன. (௬௧௬)

வந்தனன் வணங்கினன் மகிழ்ந்தன னிதென்கண்
டெந்தமை மறந்தனை யெனத்தழுவி நிற்பக்
கொந்துகமழ் கோதையும் வணங்கின ளணங்கே
யெந்தநில மெய்தியிவன் வந்ததிது வென்றாள். (௬௧௭)

யாதுமுகம் வாடிய திளைத்ததெது வென்றிங்
கோதுவதெ னன்னைமெலி வொன்றுமிலை யென்றான்
மாதர்பல ரிங்கமுது வந்ததென வங்கே
யாதரவும் வைத்தில னருந்தின னருந்தி. (௬௧௮)

பூசியபி னப்பொழுது பூசுவது செம்பொற்
காசின்மட லிற்பல கலந்துகொடு வந்தார்
வாசமிகு வெள்ளிலையு மற்றும விடத்தே
யேசரிய மாதரிவை யாவையு மளித்தார். (௬௧௯)

செப்பரிய வண்ணமனை விட்டுமனை சென்றங்
கப்பக லகன்றபி னனங்கசர மெல்லா
மெய்ப்பட விழுந்தணையில் வெற்றுடல் சுமந்தே
யிப்படி நெடுந்துயர் தனக்கிவ னிலக்காய். (௩௨0)

மானமதி வண்மைவிறன் வன்மைகலை மீதா
ஞானநிலை நன்றிநிறை நல்லபல வெல்லாம்
போனவினை மீளவுள வாகியன போலத்
தானுரிமை பெற்றுடைய தன்மையி லிருந்தான். (௩௨௧)

மங்கையொரு சேமமென வந்தென்மன நாடித்
தங்கின ளனிச்சமிவ டன்மையிறி தன்றே
யிங்கிவ ளிலக்கல வெனக்கருதி யென்மேற்
பைங்கணை விடுப்பதியல் பஞ்சசர வென்றான். (௩௨௨)

கொங்குகமழ் வெங்கணை குளிப்பவுடல் புக்குப்
பொங்குகட னீடொலி புகுந்துதுயில் காய
வங்கவ னிடர்ப்படுத லஞ்சியருள் வெய்யோன்
கங்குலெனு மப்பெரிய வாழிகரை கண்டான். (௩௨௩)

பொருப்பிரவி புக்கதொரு புட்சொல வெழுந்து
மருப்பரவு பன்மலரும் வந்தடையு மந்தச்
சிருப்பிரை* நதிக்கரை நடந்துதிர ளன்னம்
விருப்புடன் மடப்பெடையை மேவுமது கண்டு. (௩௨௪)

வாவிதிகழ் சுந்தரையில் வந்தவணி கேசன்
றேவனிறை வற்குதவு செம்பொனணி கோயிற்
பூவலய மங்கைமுடி போலுமது போலுங்
கூவுகொடி வேலனுறை கோயிலரு கானான். (௩௨௫)

வேறு.

அங்கு நீணதி யனங்க ளான்மருவு மம்பு யங்களி லளிக்குலங்
கொங்க வாவுநெறி யல்வ ரிக்கயல் குலாவி வள்ளையலை தன்மையாற்
கங்கு லிற்பிரிவு பெற்று மேவுமிரு சக்ர வாகசமு கங்களான்
மங்கை யிந்தநதி யொப்ப ளென்றுதிறன் மன்ன வன்கருதி நிற்பவே. ()

தூர மூரிவய வாசி மீதுசிலர் தோன்று கின்றவரி யாவர்கே
யூர கன்கொல்வா வேண்டு மங்கைமுத லுண்டு கண்டது நிமித்தமும்
பாரு மென்றனன் விரைந்து நின்றவர்கள் பதறி யோடியெதிர் செல்லவங்
கார மார்ந்தவர்க ளென்ன மன்னனென வந்நி லத்திடை யிறங்கினான். ()

---

* சிப்பிரா என்பது சிருப்பிரை யென்றே இந்நூலில் வழங்கப்பட்டுள்ளது.

அந்த வந்தவர்க ளேம கூடமெனு மந்த மால்வரையி னவர்களே
நொந்து வந்தனர் மிகுந்த நங்குறைக ளுவல வந்தவர்க ளென்றுபோய்
வந்து நின்றவ ளுரைப்ப வந்தவர் வணங்க மன்னவன் மகிழ்ந்தணைத்
திந்த வெஞ்சுர நடந்த தெப்படி யிளைத்த தென்றிவை மொழிந்துபின். ()

தூர நின்றவன் வணங்க வந்தவரை வினவி யிங்குனது சோபையே
வேரி சேரளக மங்கை யோடுபரி வார சோபையும் விளம்புநீ
பார வெந்துய ரொழிந்த போதுபக ரென்று பைம்பிடியி லேறிவந்
தேரு லாவுவர பத்ர லேகையுட னேறெ னப்பிடியி லேறினான். (௩௨௯)

சென்று மாளிகை யடைந்து பின்புதிறன் மன்ன வர்க்குவிடை தந்துபின்
முன்றி லிற்சிறிது நின்று நின்றுமுறை செய்ய வென்பதோர் முயற்சியான்
மன்ற லம்பொழிலில் வந்து வந்தவர்க ளோடு தன்மன மகிழ்ச்சியொன்
றன்றி நானமுத லான போசனமு மாயி ருந்தன னிருந்தபின். (௩௩0)

வார மாவதொரு பத்ர லேகையுடன் மன்ன வன்றனி யிருந்துகே
யூர கன்றனை யழைத்து மங்கையுரை செய்த துண்டுகொ லதென்றியு
மார வாரமுத சுவேதை யோடுமது லேகை யங்கவர்க ளென்சொனார்
சூரி வேலமொழி யென்ன வேறவர் மொழிந்த தில்லென வணங்கியே. ()

வேரி சேரளக மங்கை தன்னைவரு மேக நாதனுடன் விட்டுநின்
சீரி தானமொழி யவனு ரைப்பவது சிந்தை யிற்கொடு மொழிந்துபின்
வீர தாதைவிடு தூது கண்டுவிரை வோடு சென்றதும் விளம்பினே
னூர மாமுலை யணங்கி னுக்கறி வழிந்த தைம்புல னடங்கவே. (௩௩௨)

அவ்வி டத்தமர் சுவேதை யஞ்சின ளறத்த ளர்ந்திது தானுகர்
வெவ்வி டத்தனைய தென்று நொந்துமிக வெப்தவத் தொழிலி லேகினண்
மைவி டத்தனைய கண்ணி யங்கவ ளிருந்தி றந்தது மறந்துபோ
யிவ்வி டத்தியல்பி னைச்சு வேதையொ டியம்பு நீயென வியம்பியே. ()

நன்றெ டுத்தமது லேகை தன்னொடிவ னென்செய் தானென நகைத்துநின்
றுன்ற னக்குரைசெ யென்று ரைத்தது மறந்தொ ருத்தரிய வாடையான்
மன்ற லுற்றமல ரணையில் வாண்முக மறைத்து வாள்விழி யொழுக்குநீர்
சென்று சுட்டதனை யெங்கு மப்படி செறிந்த கங்குலில் வருந்தினாள். ()

மற்றை நாள்விழி திறந்தி மைத்ததொரு தன்மை யன்றிமலர் வாய்திறந்
துற்ற காரிய முரைத்த தில்லையதி லுண்டு காரிய முரைத்ததுங்
கற்றை வார்குழலி யவய வங்கள்பிறர் கருதொ ணுமன்மொழி கின்றசொற்
பெற்று வந்தன மிதன்பி னும்பெரும பேசு கின்றதெது பேதையேன். ()

மன்னு மாநில மடந்தை தன்றுணைவ மன்ன நின்னுரிமை கொண்டுநா
னின்னு மொன்றுதிரு முன்றி லிற்புகல்வ னிதுதி ருச்செவியின் மேவுவாய்
யன்னை யல்லதுணை யயலு மல்லதுணை யாரு யிர்த்துணையு மன்பினாற்
சொன்ன நல்லதுணை தானு மிப்பெரிய தோன்ற லல்லதிலை சொல்லினே.()

கங்கு லுக்குமுடி வில்லை யென்னுமிரு கண்க டந்ததிலை கனவெனுந்
திங்க ளுக்குவெயில் கால கூடமது செறித்து விட்டதுகொ லென்னுமப்
பைங்கு யிற்குவட வான லங்கொடிய பரவை தந்ததுகொ லென்னுமான்
மங்கை யர்க்குலகி லிப்ப டிச்சில வகுத்த னன்கொடிய னிவனெனும். ()

நின்னை யெய்தவெனு மாசை யிற்கொடிய நெஞ்சை யுங்கொடிய நெஞ்சது
தன்னி னின்னையு நிறுத்தி யாருயிர் தனத்தி லேவர நிறுத்தினண்
மின்னு லாவுகழல் வீர நீமிக வெளிப்ப டும்படி விடாததற்
கின்ன நெஞ்சம தியைந்தி ருந்ததிது வலிய திங்கென வருந்தினள்.(கூகூஅ)

அரிவை நாணிநிறை மதியெ ழுந்தபொழு தந்த கார முட னகலுமே
லுருவ நெஞ்சம தடங்கும் வண்டுக ளொடுங்கு மோடைவன சங்கள்போல்
வெருவி யைம்புலனு மகலு மேவியமர் சக்ர வாகமிது னங்கள்போன்
மருவெ ழுங்குமுத வாவி போலவிறன் மதன சேனையும் வயங்குமே.(கூகூகூ)

முல்லை வாளிமுத லான வாளிமுழு துந்தொ லைந்ததிவண் மெய்யிலே
யல்லி சேர்முளரி வளைய மென்குளிரி யாவையு மிப்படி தொலைந்தன
வெல்லை யானமட மாதர் தம்மொழி தொலைந்த தின்பமொழி கூறியே
வல்லி மாலிவை தொலைந்து பின்புமிக வந்து வந்தற வளர்ந்ததே. (கூசO)

உற்று மங்கையர் குவிந்தி ருந்துமொழி கின்ற துன்செயல தன்றியுஞ்
சுற்று மாதர்மொழி வதுவு முன்பெயர் துயின்ற போதுவரு கனவினு
மற்று மங்கவர்க ணெஞ்சி லுந்தெளிய வருவ துன்னுடைய வடிவமே
முற்று மோவியம தாக வல்லவர்கண் முயலு கின்றதுவு முன்னையே. (கூசக)

என்ன மன்னவனு மென்செ யக்கடவ தென்று தன்னையும் வெறுத்துநீ
சொன்ன சொன்னமொழி கொண்ட வென்செவி சுடாத தல்லவது சொல்லலென்
றின்ன லெய்திமல ரணையி லேவிழ வெடுத்த ணைத்தவர்கள் வெருவியே
மன்னு கின்றபனி நீரை வீசிய மயக்க மற்றபின் வணங்கினர். (கூசஉ)

வீர னுந்தழு தழுத்தி மைப்புடன் விழித்து நீயனுக வருகவே
யூர காவென வழைத்த வன்கவரி கொண்டு நிற்பவுரை செய்தனன்
றார வாணருட னுறவி லைப்பகையு மில்லை யென்றுலகு சொல்லுமா
லார மேவுமுலை யவளு ரைத்துவர விட்ட தில்லையது கொண்டுகாண். ()

அன்ன காதன்மத லேகை சொன்னதிலை யத்த வத்துயர் சுவேதையுஞ்
சொன்ன தில்லைமிக வுன்னு டன்பரி சனங்கள் சொன்னதிலை யென்றனக்
கென்னி னுங்கொடிய ரல்ல வோவவர்க ளென்று கூறியது நிற்கநா
னுன்னை யின்றுதரி சித்த போதெனது ளங்க ளித்ததுயிர் பெற்றதே. ()

மாத வத்துயர் சுவேதை மன்னுமத லேகை மாபரி சனங்கண்மற்
றுத ரித்தவ ரனேகர் வானுத லயர்ச்சி கண்டற வருந்தினர்
வேத னைப்பட விரைந்து வந்தனை விளம்பி வந்திலை விளம்பினு
லேது பட்டுமவ ரொன்று சொல்லியல திங்ங னேவர விடார்களே. (கூசரு)

## வேறு.

எண்ணி யிருந்த தொன்றல்ல விவைதா னொருகின் னரமிதுனம்
விண்ணி லியங்கப் பின்சென்றும் விரைவி லச்சோ தங்கண்டும்
பண்ணின் வழியே சுவேதைதனைக் கண்டு மவடன் பாங்காக
நண்ணு மொருகா தம்பரியை நயந்து கண்டுங் கண்டதற்பின் (௯௪௬)

அங்கு மிருந்த வனுராக மளவற் றலையு மவ்வளவிற்
றங்க வடிவே லையர்விடு தூத ருடனின் றவளிடத்தே
தங்க மனத்தைத் தனியேவித் தானே யுடனே தனிவரவு
மிங்கு வந்து மிதுகேட்கு மெல்லாம் விதியின் வசமென்ன. (௯௪௭)

அன்று கதிரோ னிவன்றுயர மதுகண் டிவன்றன் விழிவனசந்
துன்று வனசந் தாந்துயிலத் துயிலு மன்றோ வெனவிரங்கிச்
சென்று குடபால் வரையடைந்தான் றிமிர் வாடை நிலம்போர்க்க
வொன்றை யுரையா திருந்தனன்ற னுள்ள மதுபோ லிருண்மூண்ட. (௯௪௮)

திங்க ளமுத தாரைகளாற் றேற்றக் கடவே மென்பதுபோற்
பொங்கு குமுத வனமலரப் பொருப்பி லுதித்த வப்போது
சங்கை யறமென் பொழிலிடத்துச் சந்த்ர காந்தப் பாறையிலே
யங்க முருகி யவசமுற வகமு மறைபோ யமர்ந்ததற்பின். (௯௪௯)

ஒருகே யூர னடிவருட வுற்று நோக்கி யொண்டொடிதன்
னருகே யிருந்து மதலேகை யாற்றுங் கொல்லோ வதுநிற்க
வருகே தங்கண் மகச்சுவேதை வந்து தேற்றி மாற்றுவளோ
முருகேர் குழலி முகமதியை மொழிநாங் காண வல்லேமோ. (௯௫0)

என்று மொழிய விளந்தலையீ தென்ன வார்த்தை யெனவிறைஞ்சி
யொன்றை நாடி யெழுந்தருணீ யுரவோ யென்றங் கவனுரைப்ப
நன்று நீபோய்த் துயிலென்று நனிவா ளிரவி யப்பெரிய
குன்றி லேறு மவ்வளவுங் குறித்தான் குறித்த வெல்லையினை. (௯௫௧)

விரைந்து செல்ல நெறியல்ல விடைதந் தையர் விடுப்பதில்லை
யிரந்து சொல்ல வுளநாணு மீன்றோ டனக்கு மென்செய்கேன்
பரந்து செல்லப் பகையில்லை பலரோ டுரைத்தல் பண்பல்ல
கரந்து செல்ல லியல்பல்ல கடவு ளறிவ னிவையெல்லாம். (௯௫௨)

பெற்ற வவர்க்கு மற்றவர்க்கும் பேசத் தக்க தொன்றல்ல
வுற்ற துரைத்த றோழனுக்கே யுரித்திங் கவனு முளனல்லன்
முற்று மிதற்கென் செய்வதென முழுதுங் கருது மவ்வளவி
லற்றை யிரவு விடிந்ததென வாடும் பாடு மளியினங்கள். (௯௫௩)

ஈண்டு மிருண்மாய்ந் துதிப்பளவி லெழுகே யூரன் வந்திறைஞ்சப்
பூண்ட கழலான் மகிழ்ச்சியுடன் புகன்று னவன்றன் முகநோக்கித்
தாண்டு புரவித் தானையும்வை சம்பா யனனுந் தசபுரத்தின்
மீண்ட படிக்கு வந்தனர்நாம் விரும்புங் கருமந் திருந்துமென. (கூ௫௪

இந்த நெறியால் விரைந்தேக வெமக்கிங் கரிய தெனக்கருதி
யந்த விறல்வேந் தனைநோக்கி யதற்கோ ருபாயம் விசாரித்துக்
கொந்து கமழுஞ் செழுந்தென்றல் குலவும் வசந்தன் வரவுரைக்கு
முந்த வெழுந்த கருமேக மொழியும் பொழியும் புயலதுபோல் (கூ௫௫)

மருநாண் மலர்மென் குழற்கோதை வருந்தா வண்ண முன்செல்வ
தொருநான் கருது கின்றேனென் றுரைப்ப மகிழ்ந்தங் குடனேகப்
பெருநா ளிலங்கொண் டினிதாளும் பெரியோன் பத்ர லேகைதனைத்
திருநா டியவாண் முகநோக்கச் சிறந்தே தலைசாய்த் தினிதென்றாள். (கூ௫௬)

என்றங் கவளுந் துணியவுட னினிநீ மேக நாதனும்போ
யன்றங் கிவளை யிவன்கூட்டி விட்ட வெல்லை யளவாகச்
சென்றங் கமர்ந்த திறல்வைசம் பாயன் றனையுந் தெரிசித்த
பின்றங் குவது மங்கென்ன மேக நாதன் பெயர்ந்ததற்பின். (கூ௫௭)

விடைதந் தருள வெணப்பணிந்த விறற்கே யூரன் றனையழைத்துத்
தொடைகொண் டொழுக வருகண்ணீர் சோரத் தழுவித் தன்கழுத்திற்
புடைகொண் டிலகு மணியாரம் பூட்டி யவனைப் புகழ்ந்துமிகத்
தடைகொண் டுதவு மொழிகொண்டு தனிவா சகமொன் றுரைசெய்தான்.

என்ன வார்த்தை தனைச்சொல்வ தினிநா னணங்குக் கென்னுயிர்போன்
மன்ன வாய்த்த மதலேகை தனிலு மிவளை வாய்த்தவளென்
றன்ன மேத்தி மகிழ்ந்திருப்ப ளதனு லிவளு மஞ்சாமற்
சொன்ன வார்த்தை தனைச்சொல்வ டுணிந்து நீயுஞ் சொல்லச்சொல். ()

என்ன நினைவொன் றில்லாம லிஙனே பிரிவுண் டானதெனக்
கன்ன மடைசி வரும்விழிநீர் காய நனைப்ப நின்றானை
மன்ன னழைத்து வல்லியையென் வணக்க மாக வணங்கித்தாள்
சென்னி தனிலும் வைக்கின்ற செயல்விண் ணப்பஞ் செய்ததற்பின். ()

அன்றெ னுவி யனுமதிபெற் றடைவில் வாரா மற்பயண
நின்ற பெயரோ டுரைத்துவரு நெறியில் கொடிய வாக்காலே
யொன்று மீள மொழிகின்றே னொருவேன் வரவு பயன்படுதற்
கென்றெ னுவி தனையுயிர்கொண் டிருக்க விரந்து மொழியென்றான். (கூ௬௧)

இன்ன மொன்று மொழிகின்றே னிதுகேள் பத்ர லேகையினி
யுன்னை மிகவும் பேணிக்கொ ளுடலோ ரிரண்டுக் கோருயிர்நீ
சொன்ன வுயர்மா தவமுயலுஞ் சுவேதை யிடத்து நாம்வந்தான்
மன்னு கேயூ ரகவெதிரே வாவென் றவர்க்கு விடைகொடுத்து. (கூ௬௨)

பின்னை யவர்கள் பெயர்ந்ததற்குப் பெருக வருந்தி யதிதூரந்
துன்ன வரிய நெடுங்கானந் துவளச் செல்வ ரெனக்கருதி
மின்னு கழலான் படைவந்து விட்ட தறிய விரைவுடைய
ரென்னு மவரை விரைந்தேவி யெதிரே வைசம் பாயனன்பால். (௯௬௩)

செல்ல நினைந்து விடைவாங்கச் சென்று தாதை திருத்தாளைப்
புல்லி வணங்கி விடநின்ற பொழுது தாதை வருகவென்று
மல்ல னுடைய பதபீடத் திருக்க மொழிய மருங்கிருந்த
சொல்ல வரிய சுகநாதன் றனையுந் தொழுதங் கவனிருப்ப. (௯௬௪)

குணங்க ளணைந்த சுகநாதன் றன்னைக் குறித்துக் குலவேந்தன்
வணங்கி யிருந்த திருமைந்தன் வனப்பின் பொலிவு தனைநோக்கி
யிணங்கி யிவன்ற னெழின்முகத்தி லிலங்கு கின்ற வணலொழுங்கு
கணங்கொள் வண்டு சூழுமலர்க் கமலத் தியல்பு தனைப்போலும். (௯௬௫)

இனிமேல் விவாகந் தனக்குரிய னிதனை விலாச வதியுடனே
தனிநா முசாவி யறிவேனஞ் சந்த்ரா பீடன் வடிவுக்கும்
பனிவான் மதியின் குலத்துக்கும் பண்பா மிராச கன்னிகையை
நனிநா னிலத்தி லாராய்த னன்றிங் கிவனு னலம்பெற்றேம். (௯௬௬)

இவனு லெய்து நலம்போல விவனுக் குரிய மெல்லியலா
ணவமா கின்ற மணக்கோல நனிநாங் கண்டு வாழ்வதுமா
தவநா முயன்ற வியல்பாலா மென்னுந் தாரா பீடனைப்பார்த்
தவனு தரத்தாற் சுகநாத னதுவே கரும மீதென்றான். (௯௬௭)

எண்ணெண் கலையுந் தனதாக்கி யிருநாற் றிசையா மடமாதர்
தண்ணென் கரமுங் கைக்கொண்டு தலத்தோர் புகழத் தலமாது
நண்ணும் பெரிய கலைமாது நயந்த பெரிய புகழ்மாதும்
வண்ணம் பெரிய திருமாது மகிழப் புரக்கும் வள்ளலுக்கு. (௯௬௮)

இதுவே விவாகஞ் செய்திலனென் றியம்பு கின்ற வொருகுறைமற்
றெதுவே றென்ன விதுசந்த்ரா பீடன் கருதி யிருந்தநெறி
விதுவே யனைய நுதலிக்கு மெமக்குங் கூட்டம் விளைந்ததுவோ
வதுவே றொன்றோ கடவுளரு ளன்றோ பிறந்த மொழிதானும். (௯௬௯)

இந்த மொழிதா னடுக்கடல்புக் கேறா தவர்க்கு மரக்கலம்போ
லந்த வனத்தில் வழிபிழைத்தார்க் கங்கே நிலவ னடுத்ததுபோல்
வந்த தென்று துணையான வைசம் பாயன் வரவுதனைச்
சிந்தை நினைக்க வவன்றந்தை சென்று விலாச வதிபதியில். (௯௭0)

வந்த வளவி லவண்மகிழ்ந்து வணங்க மைந்த னெழில்பாராய்
முந்த விவாக மிவனுக்கு முயலா திருந்த தென்றானீ
யெந்த நெஞ்ச முனக்கிதுதா னிதற்கு நாணி யிருக்குமதோ
கொந்து செறிந்த குழலாய்நீ குறித்த தொன்றை மொழியென்ன. (௯௭௧)

வினவி விலாச வதியுடனே விவாக வார்த்தை மிகவிளம்பி
வனையுங் கழலான் செல்லவுடன் மைந்தன் சென்று வணங்கவவ
னினைவின் படியே சுகநாத னெடுநாட் சென்ற படைமீண்ட
தெனவங் கெதிரே செலவேண்டு மிவற்கிங் கருள விடையென்றான் (கூஎஉ)

விடைகொண் டன்னை திருமனையின் மேவி யினிது நுகர்ந்தினன்மேற்
கடையும் பொழுது படைமீண்ட தறியச் சென்ற ரறிந்துரைப்பப்
படைநின் றவர்க்கு வருங்கங்குற் பொழுது பயணப் புரிவுணர்த்தித்
தடையொன் றறத்தான் பயணமெனத் தனிச்சங் கார்ப்ப வுரைசெய்தான். (கூஎங)

ஒற்றைத் தனிச்சங் கார்ப்பளவி லொருபே ரூரு மொக்கவெழ
வற்றைக் கணிவந் தணிந்தணியா வணிகைக் கொண்டோ ரருகுவரக்
கற்றைக் கவரி காளாஞ்சி கதிர்வாள் கவிகை யெடுத்துவர
முற்றச் சிலம்பு மேகலையு முரசுந் துடியு முழங்கிவர. (கூஎச)

துப்போ டிகலு மிதழ்மடவார் சூழப் பாடி வரமகதர்
கைப்போ தெடுத்துப் புகழ்ந்துவரக் கதிர்போற் பந்த வொளிபரம்ப
வப்போ திந்த்ரா யுதமேற்கொண் டருணோ தயமுன் னடல்வேளுக்
கொப்போ னுபய மதிபோல வொளிர்வெண் கவிகை நிழற்சென்றான். ()

வைப்போர் வேலும் வடிவாளும் வரிவெஞ் சிலையு மதமதுகைக்
கைப்போ தகமுந் திண்டேருங் கவனப் பரியு மிடைமிடைய
வப்போ துதவுங் கார்கால மதுபோ லரசன் சென்றவிட
மிப்போ தெங்கே யெங்கேயென் றெழுநாற் படையும் பின்செல்ல. (கூஎசு)

தேனூ ரலங்க லமரேசன் றேவன் கொடையாற் றிசையெங்கு
மானூ துலவும் புகழ்போல வமுதஞ் சொரியு மதுபோல
வானூர் மதியர் தருநிலவில் வண்டா னங்க ளனங்களெழக்
கானூர் தரங்கச் சிருப்பிரையைக் கடந்து தசமா புரநோக்கி. (கூஎஎ)

பெருகா நின்ற நிலவதனாற் பிறங்குஞ் சந்த்ர காந்தசிலை
யுருகா வொழுகுந் தன்மைபோ லொழுகும் பனியான் வருகாலன்
முருகால் விளங்கு முனைவழியின் மூரி வயமா விசையிற்பன்
னிருகா தஞ்சென் றொருகங்குல் யாமத் திறுதி மதிவெளுப்ப. (கூஎஅ)

வெளியிற் பரந்த நிலவுவெள்ளம் விழுத்தா ரகைநீர் முகையழிய
வொளியிற் சிறந்த வுதயகிரி யோடைக் களிற்றுப் புகரெனவுந்
தெளியச் சிவந்த தினகரன்பொற் றேரிற் சிவந்த கொடியெனவு
மளியிற் சிறந்த கமலமுகை யவிழ வுதய ராகமெழ. (கூஎகூ)

கருப்புச் சிலைவேள் கணையாலுங் கலைமா மதிதன் கரத்தாலு
மருப்பற் றரும்ப னகையாலும் வருத்த வருந்தி யிரவெல்லாஞ்
சுருப்புக் குலமுந் திரடாதுந் துணையா விருந்த பதுமினியை
விருப்புற் றிதழார் மதுநுகர வெய்யோன் விரையு நெறிகண்டான். (கூஅ0)

கண்டு சிறிது சென்றளவிற் கடலே ழல்ல வெட்டென்ன
மண்டு தானை யெதிர்மீள மகிழ்ந்து வைசம் பாயனனைப்
பண்டு போல வன்றியுநாம் பலகான் மிகவு முறத்தழுவிக்
கொண்டு போத வேண்டுமெனக் கொண்டு வேறே யொருகோலம். (கூஅக)

படைவிட் டிடமு மெவ்விடமும் பதறிச் சென்று பெயர்கூறித்
தடவித் திரிந்துங் காணுமற் றளர்ந்து நொந்து தடுமாறப்
புடவிக் கதிபன் பரிவிசையாற் புரப்போ னிவனென் றரசரந்த
விடையிற் பண்ணிய வவர்களைப்பார்த் தெங்கே வைசம் பாயனென; (கூஅஉ)

இந்த நிழலி லெழுந்தருளி யிருந்தாற் புகல்வே மென்றவர்க
ளந்த மொழியைச் சங்கித்துத் தளர்ந்தங் கவச மாதலினுற்
றந்தை யனைய நரபாலர் தாங்கிக் குதத்தின் மீதிருத்தி
யெந்தை யிதுவென் னென்றுரைப்ப விதற்கொன் றுரையா திமைத்திருந்து. (கூஅங)

இங்கே வைசம் பாயனனை யான்கண் டிலன்மற் றெவ்விடத்தே
யெங்கே காண்பே னவனைப்போ லெனக்கிங் குற்ற துணையார்தா
னங்கே நின்று போந்தேனே யதிபா தகனே யன்றோதா
னெங்கே போவே னெதுசெய்வே னிருந்தே னின்னு மிருந்தேனே. (கூஅச)

என்னு ருயிரே யென்மனமே யென்றே னீதோ ரறியாமை
யென்னு ருயிரு மென்மனமு மெனக்கென் செய்த திவனைப்போ
லென்னு ருயிர்கொண் டிருப்பதினி யென்னு மெந்தை சுகநாத
னென்னுர்வஞ்சேரன்னையர்முனிவனையொழிந்தோயான்செல்வேன். (கூஅரு)

சென்று லவர்க்கத் திசைதன்னிற் சேரா வேந்தைத் திறைகொள்ள
நின்று னென்று மொழிவேமோ நிலமொன் றுண்டு செல்லாத
தொன்று லதனை வென்றுவா நின்று னங்கென் றுரைப்பேமோ
வென்று தாத்தாற் றன்மனத்தோ டெல்லா நினைந்து புலம்பியபின். (கூஅசா)

வேந்தர் கண்டு திறைதந்து விட்டா லவனை விட்டிஙனே
போந்த தேதங் கப்படிக்குப் பொருளுண் டான தோவன்றி
வாய்ந்த மெய்யிற் றீராநோய் வந்த துண்டோ வெனவஞ்சிச்
சார்ந்த பாவ மென்றுசெவி தம்மைப் புதைத்துத் தார்வேந்தர். (கூஅஎ)

வேந்தர் கோவே திருமேனி விளக்கம் போல விளங்கியெழில்
கூர்ந்து நண்ப னிருக்கின்றான் குறைவே தில்லை யெனக்கூடி
மாய்ந்து போன வாருயிரு மனமும் வந்த தெனவவரைச்
சேர்ந்து தழுவிக் களிகூர்ந்து செப்புஞ் செய்தி யினியென்ன. (கூஅஅ)

ஆனுச் செய்தி கேட்டருள வங்கே வைசம் பாயனனைச்
சேனு பதியாக் கற்பித்துச் சேனை யுடனே வரவுரைக்க
மேனுண் மேக நாதனுடன் விளம்பி மீள வன்றமர்ந்து
வானு ரிரவி யுதயத்தில் வாம முரச மறைந்ததற்பின். (கூஅகூ)

இங்கே யச்சோ தத்தடமு மிறைவ னிடமு முண்டென்ப
ரங்கே சென்று புனலாடி யடிக ளடித்தா மரைவணங்கா
தெங்கே முன்செய் வினையொழிப்பே னென்று கூறி யெங்களைக்கொண்
டங்கே நடந்து சென்றளவி லடைதற் கரிய திந்தவிடம். (கூகூ0)

என்று மயிலும் வரிக்குயிலு மிளமென் கிளியும் பொறிவண்டுந்
துன்று கொடிமண் டபம்பார்த்துச் சூழல் பார்த்துத் துயரெய்தி
யொன்றை யுரையா ததிலேநெஞ் சுறவைத் தொன்று நோக்காம
னின்று தளர்ந்து நெடிதுயிர்த்து நெறிபோ யயர்ந்து நிலையற்று. (கூகூக)

ஆங்குற் றதுகண் டவனியல்பா லஞ்சி நாங்க ளெல்லாரு
மேங்கித் துயருற் றிதற்கேது வேதென் றெண்ணி மிகவருந்திப்
பூங்கொத் தலர்தார்ப் புயனேயிப் புதுமை கண்ட திதுபோது
மீங்குப் பெருக வருந்துகின்றே மினிநீ யெழுக வெழுகவென்று. (கூகூஉ)

உன்னோ டுரைத்து வரப்படையை விட்டுப் போனா னொருநீயிங்
கென்னோ விருந்து வருந்துகின்ற தியல்போ சந்த்ரா பீடனுக்குப்
பின்னோ னென்று முயிரென்றும் பேசத் தக்கோ னன்றோநீ
யன்னோ வன்னோ வறநொந்தோ மமையும் போது போமதென்ன. (கூகூ௩)

என்னை யழைக்க வேண்டாவிங் கினிநீர் விரைய வேகுமென
வுன்னை யழையா தேகவெமக் குரியே மல்ல வென்றுரைத்தங்
கன்னை தனக்குந் தந்தைக்கு மரசன் சந்த்ரா பீடனுக்கும்
பின்னை யுரைப்ப தென்னென்றேம் பெயரா தென்றன் மனமென்றான். ()

பின்னு நாங்கள் வலியுடனே பேசத் துணிந்த வப்போது
மென்னை நீங்கள் கொண்டேக வென்றே விவைதா முரைக்கின்றீர்
மன்னு முயிர்போ முடல்போக மாட்டா துயிரை வருத்தாதே
யின்னு முயிர்தா னிருந்தக்கா லித்தால் விளைவ துண்டாகும். (கூகூரு)

என்றா னதுகேட் டியாமமிரண் டிருந்தே மங்கே யெழுந்திருந்து
சென்றான் காவிற் பாறைகளிற் சிறந்த வாவிக் கரையில்வெள்ளிக்
குன்றா னுறைபொற் கோயிறனிற் கூடிப் பிரிந்தார்க் காணார்போ
னின்றா னயர்ந்து வேறேயோர் நெருங்கு கொடிமண் டபத்திருப்ப. (கூகூசா)

அங்கே நாங்க ளடிவருடி யருளீர் நான போசனத்துக்
கிங்கே யெனச்சந்த் ராபீட னென்னா ருயிர்மற் றிவ்வுயிர்நும்
பங்கே யென்று புனலாடிப் பலமூ லங்க ளருந்தியபின்
செங்கோல் வேந்த முத்தினம்யாந் தேற்றிப் போந்தேந் துணையிருத்தி. ()

அன்று நாங்க ளாட்போத விடுவேஞ் செய்தி யறிவிக்கச்
சென்று விரைய வெழுந்தருளுஞ் செயலாற் கூட மாட்டார்க
ளென்று தணிந்தே மதன்பின்பு மிந்த நீதி யறிவித்தா
லொன்று மினையா தெழுந்தருள்வ துட்கொண் டொழிந்தே மெனமொழிய. (கூகூஅ)

வேறு.

அந்த வினைப்பய னென்றன் வினைப்பய னானவ னானவ னவனுக்கு
மிந்த நிலத்தவ ரஞ்சலி வேறல யாவையும் வேறல வொருநாளுந்
தந்தை வெறுத்தது தாயர் வெறுத்தது தானிலை வைசம் பாயன்றன்
சிந்தை வெறுத்தது செப்புமதெப்படி செய்வதெ னிப்படி செய்தானே. ()

என்று தருத்தரு நீழலி னின்று மெழுந்து வருத்தமதொன்றேதான்
சென்று விடத்தகு மன்னவ ரென்று திரும்பி மொழிந்துயிர் திண்டாடக்
குன்று மனத்தொடு மங்கல ராசி குவித்த படங்கு குறித்தேகி
யொன்றை யுரைத்திலனென்றை நினைந்திலனென்றை நினைந்திலனுள்ளானன். ()

ஆதன மேவி யிருக்க நினைந்திலனுடைக வோடை நுதற்கந்த
மாதன நின்றது கண்டனன் மாதனம் வந்தது கண்டிலனென்றான
வேதனை கொண்டணை மீது விழுந்தனன் மெல்லிய லார்தொழு தடிபேண
வோதன வாதர வற்றிர வொன்றை யுணர்ந்து துயின்றிலனொருபோதும்.

மைப்பொழு தேகமுன் மலரடி தொழவரு மன்னவர் தங்களை முகநோக்கி
மெய்ப்படி யாக விளம்பின ரிங்கினி விரைவுட னாள்விடு மதுவேண்டு
மப்படி கூறிய தப்பொழு தேகுவ னப்பொழு தேகிய வன்போல்வே
னிப்படி யானது காரிய மேலினி யெப்படி கூறு மிதற்கென்றான். (௧௦௦௨)

மன்னவ ரெப்படி கூறிய தப்படி மற்று மதற்குறை யுண்டோதான்
சொன்ன வுரைப்படி செய்வது நந்தொழி றுணிக விதற்கினி யூரேசென்
றன்னை தனக்கிது தந்தை தனக்கறி வித்து வரும்பொழு தடைவாகு
மென்ன வதப்படி செய்க வினிப்படை யெழுக வதற்கறை முரசென்றான்.

வேலை யெழுந்தது போல வெழுந்தது வெம்படை மன்னவ ருடனேமா
மாலை மதிக்குடை மன்னனு முத்தம வாரண மேற்கொள வெயிலோனுஞ்
சால நடுப்பட வந்தனல் சிந்திய தன்மை தனைச்சிறி தறியாது
போல நடந்திர வுச்சயி னிற்படை வீடு புகுந்தனன் விடிவேறு. (௧௦௦௪)

காலை யெழுந்தவர் தங்களி னின்று கலந்து கலந்துவை சம்பாயன்
சீலம தொன்றல வாகி யிருந்தது செய்வதெ னிப்படி செய்தானே
சால நெடும்பிழை யென்றவர் நின்று தளர்ந்தமை கண்டு தளர்ந்தேகிக்
கோல நெடுஞ்சிலை மன்னவன் மாளிகை கூடின னீடிய கூர்வேலான். ()

வாயி லவன்கடி தஞ்சி வணங்கிமுன் வந்தனர் கூறிய வுரையோடே
சேயவ னின்றது கொண்டு மனோரமை திகழ்சுக நாதன் வருந்தாம
லாய குணந்திகழ் தந்தையு மன்னையு மரமனை யேகின ரெனவங்கே
போயவ ரங்கு வருந்த விழுந்து புலம்பி யெடுத்தவ ருடனேபோய். (௧௦௦௬)

மந்தர மால்வரை யுஞ்சுழல் வுற்று வருந்திய மாகட லும்போலத்
தந்தை யுடன்சுக நாதன் வருந்திய தன்மையி னெந்தவர் தாள்பேணி
வந்து வணங்க மறந்தனன் மன்னவன் வாவென வந்து வணங்கித்தான்
முந்த மொழிந்திலன் வாடிய தந்தை மொழிந்தன னங்கவன் முகநோக்கி.

வந்தில னவனிவ னொருகுறை செய்தனன் மதியில னென்றதி முனிவோடே
தந்தை சொலச்சுக நாதனு மிவனொரு தவறிலன் வைசம் பாயன்றன்
சிந்தை தனிற்குறை படையொடு வருநெறி செப்பி விரைந்தன னிங்கேயங்
கெந்த வினைக்கவ னின்றன னிதுவிதி யிருகணி னாதவ னெனநின்றான். ()

இரவியை யிருளெதிர் விரவினும் வெண்மதி யினிமை தருங்கதி ரினைவிட்டுப்
பரவிய வெம்மை படைப்பினு நல்லவர் பழுதுரை மொழியினும் வரைமேவுந்
தரைமிகு பொறையது தவிரினு முதுதிரை தருகட றரவம ரக்காரும்
வினைதரு மமுதது கைப்பினு மிங்கிவன் மேலொரு குறையுள தெனலாமோ.

இவனில மைக்கிவ னறிவு தனக்கிவ னியல்பு தனக்கொரு நிகருண்டோ
வெனறி வற்றவ னவனிலையுற்றவ னவனியல் பற்றவ னன்றேதா
னிவனை வெறுப்பது மிவனை யொறுப்பது மிவனை மறுப்பது மியல்போதா
னவனை வெறுப்பது மவனை யொறுப்பது மவனை மறுப்பது மாமென்றான்.

இங்கிவ னன்னை பிதாவெனு மிந்நெறி யேது நினைந்திலை னீதன்றிப்
பைங்கழன் மன்னவன் முனிவ தறிந்தொரு பண்புடன் வந்திலை னீதன்றி
யங்குயி ராகிய நண்பு மறந்தன னன்பு மறந்தன னீதன்றிச்
சங்கைய தற்றன னங்க ணிலத்திசை தன்னை யறிந்தில னவனென்றே. ()

கானன மேவிய பைங்கிளி யுஞ்சில கற்பது முண்டவ னதுபோலுந்
தானு மருங்கலை கற்றன னதிலொரு தன்மை யுணர்ந்தில னக்கானத்
தேனை யருங்கிளி தன்னை வளர்த்தவ ரென்று நினைந்து வனத்தேகா
தான தெவர்க்கும் விளங்குற மிப்படி யல்ல லுழன்றிடு மோவென்றான். ()

என்றறி வற்றது கூறி வருந்தி வருந்தி யிருந்தொரு சுகநாதன்
கன்றி யுரைப்ப மறுத்திவை சொல்வது கற்பல மக்க டமக்காமோ
சென்று பலிக்கும திப்படி சொல்வது தீதவ னின்றமை தெரியாதென்
றன்றி வெறுத்திவை சொல்வது தவிரென வரசனு ரைத்தபி னவன்மைந்தன்.

செய்ய நினைத்தது செய்தது வேறொரு தீதிலை யீதற வபராத
மைய ருரைத்த தறத்துயர் செய்த ததற்குல கத்தவ ரெதுசொல்லார்
மைய விதிப்படி யான தெனச்சுக நாதனை மன்னன் வணங்கிப்பின்
மெய்யரு ளெந்தை தனக்குரை செய்தவர் விடைதர விரிபடை யெதிர்கொண்டே. ()

அந்த விடந்தனி னின்றவன் வைகிய வந்த விடந்தனி லுற்றேகச்
சிந்தை நடந்தது கற்பல விங்கிது செப்பி யியங்குவ தியல்பென்று
வந்தனன் வெந்திறன் மன்னவர் தம்முடன் வந்தில னின்னமும் வாரானு
னெந்த விடந்தனி லாயினு மேகி யழைப்ப னிதற்கருள் செயவென்றான்.

இனியொரு நானல தில்லை யழைப்பவ ரென்று வருந்தி மிகத்தானே
தனியழு துற்றன னின்றினி நீவிடை தரமொழி யென்றிது தனைநோக்கி
நனியுவ ராசன் வருந்தவு மிதுசுக நாதன் விளம்பவு நரபாலன்
பனிமதி வெண்குடை யானு நினைந்தொரு படியுரை செய்தன னீதொன்று.

ஓகையொ டாகிய சோம னுரோகிணி யுற்றன னப்படி யாகாமே
மோகித சந்த்ரா பீடன் விவாக மொழிந்து கிடந்தது பின்பேதா
ளுகிது வைசம் பாய னகன்றன னவனை யொழிந்திது கூடாதங்
கேக நினைந்தன னிவனிவ னேடல தெய்துத லரிதவ னினிதென்று. (கoகஎ)

தாயறி யத்தகு மன்ன மனோரமை தானறி யத்தகு மங்கேநீ
போயறி விக்கில் வருந்துவ ரெப்படி புகலுவ தெப்படி யானனு
நோயறி வித்தகர் சடமே வருத்தியந் நோய தகற்றுவ ரதுபோலங்
காய வருத்த மகற்றுதல் பண்பென வவனை யழைத்திது மொழியென்று. ()

தாரர சன்சுக நாதன் வளம்பதி தன்னி லிருந்திவை யுரைசெய்து
சீர்மரு வுஞ்சுக நாத னுடன்பதி சென்று புகுந்தபின் புவராசன்
பேரரு ளின்றிது பெற்றன மென்று பெயர்ந்து மனோரமை யொடுகண்ணீர்
சோரவிருந்தனன்னையுந்தொழுதங்கவர்சொற்படியுரைசெய்தான். ()

ஒன்றல வெங்கள் வருத்தம தென்றவு ருள்ள முடைந்திரு கண்ணாலே
நின்றுரு வப்புன றந்தனர் மைந்தனு நின்றவர் தம்முட னெடுநேரந்
துன்று விழிப்புனல் சோர வலைந்தவர் சொன்னது மெய்யல வினிநானே
சென்றவ னைக்கொடு போதுவ னன்னையர் தேறி யிருப்பது நெறியென்றான்.

இன்ன மனோரமை யுன்னையு மேக விடுத்து வருந்துவ தியல்போநான்
சொன்ன தறப்பிழை யங்கவ னின்றது துயரல விதுதுயர் தவிரென்று
ளன்னை யதெப்படி யிவனை நிறுத்துவ தவனை யொழிந்திவ னில்லானென்
றுன்னி யுரைத்தன ன்மன்ன வனுமினி யுரைசெய்வ தெப்படியுரையென்றாள்.

போதினி யென்றொரு புதல்வ னுடன்றிகழ் பொன்மனை புக்கன ளங்கேபின்
மேதகு தன்பய ணத்தை நினைந்து விலாச வதிக்கு விளம்பிப்போ
யாதர வின்படி கணிதரை யின்று முகுத்தம தாமென வஞ்சாதே
போது மதற்கொரு தீதிலை யென்றன ரொருதவ றில்லை யிதற்கென்றார். ()

என்றவர் போய்விட விறைவனு மோதன வின்ப நுகர்ந்தபி னிவர்சென்று
நன்று முகுத்தம தென்றுரை செய்தனர் நாளையன் றுளத யர்தன்னிற்
கன்று மனத்தை யொழிந்தெழு கின்றது கற்பென வங்கவர் கட்கெல்லா
மன்று கொடுத்துடன் வருபவர் வரவரு மிரவுட னப்பக லகல்வித்தான். ()

அந்தி படும்பொழு தன்னை தனைத்தொழு தப்பய ணந்தனை யறிவிக்க
மைந்த னடந்தபின் வந்தெதிர் நின்று வருந்தி வருந்தியென் மொழிவேனன்
சிந்தை மருண்டது கண்க டரும்புனல் செப்பும தொன்றையு மறியேனிங்
கிந்த வுடம்பு நடுங்கு மிதற்குமு னிப்படி கண்டில னிவையென்று. (கoஉச)

இப்பொழு திப்படி யாவதெ,னுசமு மெப்படி போக வுரைப்பெனீ
யப்பொழு தேகவு மிப்படி கண்டில னஞ்சினன் வைசம் பாயன்றன்
மெய்ப்படு தீமை விளைந்தது கண்டு விலக்குவ தில்லை யெனக்கூறிச்
செப்படுகொங்கையின்முத்தொடுகண்புனல்சிந்தவனைத்தவன்முகநோக்கி.

அன்னை யுரைத்த துனக்குப தேச மகன்றபி னப்படி நில்லாதே
யென்ன விரைந்திது போமது தாமத மித்தனை மீளுவ னென்னோடே
மன்னிய வைசம் பாயனு னென்று வணங்கி மனோரமை மனையிற்சென்
றன்னை யிதற்கு வருந்த லெனத்தொழு தங்கவ னேகின னவள்வாழ்த்த. ()

வந்தறி வித்தனன் வாயி லவர்க்கவர் மன்னவ னேவலில் வாவென்னத்
தந்தை தனைத்தொழு தவனடி யிணையொரு தன்றலை வைக்க வெடுத்தங்கே
புந்தி சொலச்சொல நின்றது கொண்டிது போது முகுத்த மெனக்கூற
வந்தமதிச்சுக நாதனை யுந்தொழு தவாருள் பெற்றவன் விடைகொண்டான்.

வேறு.

வீர வெம்பரி யேற வந்தனன் மேலெ ழுந்த தெறிந்துபோய்த்
தூர நின்றது கண்டு மங்கொரு தோழ னின்றது கருதியு
மீர வெண்பிறை நுதன்ம டந்தையை யெய்த வென்பது கருதியும்
போரில் வென்றி புனைந்த வன்கிளர் புரவி புக்கு விரைந்தனன். (க0உஅ)

இரவி லப்பொழு தொருசி றுப்பிரை யெனுந திக்கரை தன்னிலே
விரவு மங்கல மிருப டங்கிலும் விட்டி லன்புற வழியினு
லரச னேகின னென்ன மன்னவ ரடைய வுடைகுள மென்னவே
பரவி யேகின ரவரொ டும்படை யோடும் விட்டனன் வழியிலே. (க0உகூ)

ஏகி விட்டனன் விடிவ தற்குமு னிந்தி ராயுத மேறிநீ
டாகு லத்துட னிரவு நண்பக லான தொன்றை யறிந்தில
னோகை யற்றன னுணவ தற்கு முறக்க மற்றன னற்றபின்
வேக முற்றெழு மவன்வி சைக்கு விடிந்த தென்ன விடிந்ததே. (க0௩0)

பாரி டத்திலொ ரிந்த்ர சாலமெ னும்ப டிக்கதி விசையினு
னோரி டப்பரி துனைவ தன்றி நினைந்தி லன்படர் கதியையு
மோரி டத்திலும் விடநி னைந்தில னுற்ற வன்ற னிடத்திலு
மாரி டத்திலும் வருமி ளைப்பை யறிந்தி லன்றன் மனத்திலே. (க0௩க)

சென்ற வன்னெதிர் நிற்க நானொடு செலவி ரைந்தவெ னண்பனை
பின்றொ டர்ந்து பிடித்து நீயொரு பேதை செய்ததெ னென்றுமுன்
னின்ற நெஞ்ச மழுங்க லென்றொரு நெறிமொ ழிந்திவ னோடுநா
மன்று சென்று சுவேதை யாலய மவண்மகிழ்ச்சியி லெய்துவாம். (க0௩உ)

அன்று கண்டவ விவுளி கண்டவ ளறமகிழ்ந்தெதிர் கொள்வனு
மன்று நம்படை யங்க மாற்றி யருந்த வத்தவ டன்னுட
னன்று மங்கை யிருப்பி டஞ்செல வன்று சொல்லி விடுக்கவந்
தன்று வந்துமு னிற்ப வன்னுட னவள்ப திக்கினி தெய்துவாம். (கOகூகூ)

வந்த வாறது கண்டு சென்றவர் வாழி மங்கல மங்கல
மிந்த வாழ்பதி வாழ்வு பெற்றது மன்ன னெய்தின னிங்கெனச்
சிந்தை யான்மகிழ் வுற்றெ ழூந்தெதிர் சென்று வந்தவ ரைத்தழீஇ
யந்த மாநிதி சிந்தி வாணுத லவரை யென்வரல் வினவியும். (கOகூச)

அந்த வெம்பரி தாப மாறிய தன்மை யாலும தன்றியும்
வந்த நாணத னுலு மார்பினில் வைத்த தாமரை யிலையுடன்
றந்த தாமரை வளைய மானவை தள்ளி யங்கிலை தன்னிலே
முந்தை யார வடங்கி டந்தபின் முதிர வாரழ கெய்தியும். (கOகூரு)

மாத ரக்குளிர் பாயன் மேன்மிக வைத்த நாண்மல ருதிருநுண்
டாது றைத்தது புளகம் வந்தது கொண்டு தள்ளியு மாரவேள்
வேத னைக்கன விட்ட விந்தன மீது நீறெழு தன்மைபோற்
சீத ளக்குளிர் சந்த ழிந்தழி யாது மேனி திருத்தியும். (கOகூகூ)

வம்ப லைக்கு முலைக்க லைந்த மருங்குல் கொண்டு வருந்துகா
தம்ப ரிக்கெதிர் சென்று கண்க டமக்கு வாழ்வு தொடுத்துமுன்
னம்ப ரத்தி லரம்பை போன்மத லேகை யாக முறத்தழீஇ
யெம்ப தத்தி லிறைஞ்சு பத்ர லேகை தன்னை யணைத்துமேல். (கOகூஎ)

ஓது மாதவ மலிசு வேதை யுவந்து மங்கல முயலவு
மேது கூறுவ தேது செய்யும தென்று தோழியர் விரையவும்
போது போதெனு மவரு டன்பலர் போக வும்பலர் புகுதவு
மோது பேரிகை முரசு சங்கு முழங்கு கடலின் முழங்கவும். (கOகூஅ)

மேத குந்திரு வுடன்வி ரும்பு விவாக மங்கல மாகவு
மாது மாமத லேகை தன்னுடன் வந்து மணவறை புகுதவும்
போது மாமத லேகை யின்சொ லுரைத்து மீளவு மங்கனே
காத லோடவ னுண வென்னிரு கண்க ளித்துள மகிழவும். (கOகூகூ)

மேவி யப்படி மடியில் வைக்கவும் வெய்ய மார்பி லணைக்கவு
நீவி யெற்படு மிருகை பற்றி நிறுத்த வுங்குழை யளவிடுங்
காவி யைப்பொரு கண்ணி மைத்திரு கடையி லோடவு மீளவு
மாவி யைத்தரு மதர பானமு மமுத பானம தாகவும். (கOசO)

ஆன னந்தனில் வெயர்வ ரும்பவு மறிவ ழிந்துரை யாடவு
நான மென்குழ லலைய வுந்தனி நகைய ரும்பவு மங்கனே
தான ரும்பிய புளக மென்முலை தளர்ம ருங்கை வருத்தவு
மீன வன்பெரு விழைவு பெற்று விளங்க வுள்ளம துருகவும். (கOசக)

மேவு மந்த மனோர தந்தனில் விளையு மின்ப நுகர்ச்சியா
லாவி யுந்துணை யாவி யும்பிறி தல்ல வாகிர னிலவினுங்
காவி லுந்தனி சென்று சென்று கலந்து லாவரு போதுநின்
னேவ லானமத லேகை நண்பனை யெய்த வென்று கூறுவாம். (௧௦௪௨)

என்று நெஞ்சினி லிவைநி னைந்திவ னிடைவி டாம வியங்கவு
மொன்று பாதி தொலைந்த தந்நெறி யொன்று பாதி தொலைந்தபின்
கன்று வான்ரவி கதிர்க்கு முன்ன ரடுத்த கங்குலு மம்புலிக்
கன்றி ராகுவின் வரவு மந்நெறி செல்ப வர்க்கு விலங்குமாய். (௧௦௪௩)

காத விற்குனி செய்து மானயர் கணையின் மாரி தொடுத்துமேன்
மோதி மின்னுட னிடிநெ ருப்பை முகந்து சிந்தி முழுங்கிநீ
டாத பத்துட னிலவ கற்றியு மந்த கார மழைத்துமிப்
பூத லத்திடை பொரவி சைந்தது புயலொ ளிந்தது கோடையே. (௧௦௪௪)

பாத பத்திரள் வேர்ப றிந்தது மலரு திர்த்தது பைந்தடஞ்
சேத முற்றது மயில்க ளித்தது திசையொ ளித்தது விழைவுடன்
சாத கத்தின் விடாய்த ணிந்தது சக்ர வாக மலைந்ததங்
கேத முற்றது களிறு டன்பிடி யின்ப மெய்திய தேனமே. (௧௦௪௫)

ஆறு புக்கு மகிழ்ந்தி யுந்துறை யறியொ ணாமலு மசனியா
மேறு பட்டு முறிந்த பேர்மர மிடைகி டக்க விலங்கியுஞ்
சேறு புக்கெழு மயிட ராசிசெ றுத்து நிற்ப வகற்றியு
மாறு பட்டுரு வேறு பட்டுவரு மாவ ரித்திரள் வாங்கியும். (௧௦௪௬)

மதுர மொழிமட மயிலை வைசம் பாயன னைத்தன் மனத்தில்வைத்
ததிர விழுமழை தன்னி லேயசனி யன்று பணைத்தெழு மாறுபோன்
முதிரு மிவனது காம வெங்கனன் முடுகு நெய்யது வாகமே
லெதிர வருமிடை யூற தொன்றையு மெண்ண வுற்றில னேகினான். (௧௦௪௭)

ஏறு செல்வ தெனக்கு றித்தவ் விடத்தில் வைத்த மனத்தின்முக்
கூறு சென்றபின் மேக நாதனும் வந்து கண்டது கொண்டுளந்
தேறி நண்ப னிருந்த தெப்படி செப்பு நீயென வங்கவன்
வேறு கண்டது மில்லை யென்று விளம்பி மேலும் விளம்புவான். (௧௦௪௮)

தீத றத்தின நாலி ரண்டது செல்லு மென்றனர் செல்லிலச்
சோத வாவி தனக்கி னித்தொலை தூர நீதனி நில்லன்மே
லோத மைக்கட லுண்டு கார்வர வுற்ற கால மினிச்செலென்
றூத ரத்துடன் மீள விட்டன ரவர்க ளென்றன னென்றபின். (௧௦௪௯)

ஏத மற்றவள் பத்ர லேகை யிதற்கு முன்செல வல்லளோ
வோதெ னச்செல வல்லள் வேறிடை யூற தொன்றிலை யாகிலென்
றூத ரத்துட னவன்மொ ழிந்தபி னாவ தென்றவ னுடன்வரப்
பேத முற்ற மனத்தி லத்துயர் பேசி யேகிய பின்னவன். (௧௦௫௦)

பேத மேவி வனப்பு நின்று பிறங்கு கின்ற தரங்கவச்
சோத மேவி யினிப்பெ ருப்படை சூழ வோடி வளையுமென்
றேத மேவி யுரைத்து வந்த விளைப்பு டன்றனி யெங்கணுங்
காதன் மேவிய நண்ப னின்றது கண்டி லன்றுயர் கொண்டரோ. (கOருக)

பேணி யிங்கொரு பத்ர லேகை பெயர்ந்தென் வரவு விளம்பலா
ஞணி நின்றில னென்று நாடி நடுங்கி நின்றற நெஞ்சமுங்
கோணி மிக்க குணச்சு வேதை குறித்தி ராளல நற்றவத்
தாணி யானவ ளவளு டன்றனி வினவி யறிகுது மென்றுபோய். (கOருஉ)

ஈன மற்ற வருட்சு வேதை யிடத்தை நாடி யடுத்துவன்
ருனை நிற்ப விளங்கொ ளிக்கவ சங்க ழித்தணி நிலவுபோ
லான நற்கலை யந்த ரீயமு முத்த ரீயமு மாகவே
வான வெம்பரி யேறி யத்தவ மங்கை வாயிலை நண்ணினன். (கOருங)

நண்ணி வாசியி னின்றி றங்கி நடந்து சென்றவன் மேவுமப்
புண்ணி யாலய மெய்த லவனொரு புனித மாகிய பாறையிற்
கண்ணி னீர்வர வாகு லத்தொ டிருந்து விட்டனள் கம்பமுற்
றெண்ணி லாத கிலேச மூழ்கி யிருந்த தரளிகை தன்னுடன். (கOருச)

இந்த வாகுல மெய்தி வாடு மெழிற்சு வேதைத ளியல்புகண்
டெந்த வாகுல மிப்ப டிக்கிவ ளிங்கி ருந்தன ளென்றுதான்
சிந்தை யாகுல முற்று நின்று திகைத்தி ருந்திதி யாவரால்
வந்த வாகுல மென்று தரளிகை தன்னை மன்னவன் வினவவே. (கOருரு)

வேறு.

வினவவொரு தரளிகையுஞ் சோகத் தாலே
விளங்கிழைதன் முகநோக்க வினையேன் மேனு
ளெனதுபெருந் துயரமெலா முனக்கே சொல்லி
யின்றளவு முனைப்பேணி யிருந்தே னிங்கே
யுனைவரவும் பெற்றுமிக வுளம்வா டாம
லுறுதுயர மின்னமுநா னுரைக்க லாமோ
மனவலியு முடையேனு னதனுற் சொல்வேன்
மன்னவகே ளென்று மகச்சு வேதை. (கOருசு)

துங்கவென்றி வேந்தேநீ மொழிந்த வாறுந்
தூதருடன் சென்றதுவுந் துணிவு மெல்லா
மங்குவந்து கேயூரன் மொழியக் கேட்டே
னறத்தளர்ந்தே னப்போதே யவச மாகி

மங்கையன்று வருந்தியது கண்டு நொந்தேன்
மதிரையுடன் சித்ரரதன் வருத்த முற்று
னிங்குவந்த மதலேகை மற்று முள்ளா
ரெல்லாரு மனம்வாடி யின்ன லுற்றார். (௧0௫எ)

இவ்வாறு கண்டுணர்ந்து நொந்து பின்னை
யிருந்தவத்தின் முயல்வோநா மென்று போந்திங்
கவ்வாறு தவமுயன்றே னதுவுங் கண்டோ
ரந்தணன்றன் குமாரனந வறிவில் லாமன்
மைவாச நறுங்குழலீர் துய்ய செவ்வி
வனப்பழியீ மாதவத்தில் வருந்து கின்ற
தெவ்வாறு பாதகமீ தென்றுங் காம
னென்செய்வா னினியென்று மிவையுங் கூறி. (௧0௫அ)

தோராய பரிமளப்பூந் தென்ற லானுஞ்
செழுங்குயிலை யாகிவருந் திங்க ளானு
மாராம மலராய கணைக ளானு
மனங்கவே ளுக்கரசு நிலையுண் டாமோ
காராருங் குழலானுங் கண்க ளானுங்
கருப்பெழுதுந் தோளானுங் கனிவா யானும்
வாராரு முலேயானு மன்றி யென்று
மாதவத்தா லுண்டாமோ மயிலே யென்று. (௧0௫௯)

மற்றுமிவன் பலவுரைத்தான் பின்பு முன்பு
வந்தறிந்து கண்டவர்போல் வந்து கண்டிங்
குற்றதுரைத் தகலாம லெதிரே நின்று
முள்ளமறிந் தவர்போலுண் மகிழ்ச்சி பெற்று
நற்றவமே முயல்வாரிவ் வுலகத் தோர்த
நல்லுயிரை வாங்குதற்கோ நன்றீ தென்றுங்
கற்றதெல்லா மவன்கொலேயோ கண்க ளென்றுங்
கலவிநயப் புரைத்ததற்பின் காய்ந்து நோக்கி. (௧0௬0)

பூதங்க ளோரைந்தும் போதா தல்ல
பொங்குகனல் சுடுமுன்னைப் புதைக்கும் பூமி
வாதங்கொண் டுயிரேகு மந்த வாரி
வருசுழியி லமுக்குநெடு மாகந் தானு
மேதங்கொண் டந்தரத்தே யாக்கு மற்றை
யிருசுடரும் பொறுதென்றே னென்ற போது
மோதங்கோர் பைங்கிளிபோ லுரைத்த தேமீண்
டுரைசெய்தா னங்கதுகேட் டுயிர்த்து மீண்டு. (௧0௬௧)

வருகவினித் தரளிகைநீ வந்து வந்து
வருடியுளா வருமிந்த மறையோ னிங்கே
யருகுவரக் கடவனல்ல னவன்றன் கோட்பா
டதுவேறு தகையென்றே னதுவுங் கேளா
துருகுமனத் தினனாகி வந்து மெல்ல
வுட்புகுந்திப் பாறைதனி லொருவேன் மேவிச்
சுரிகுழலா டரளிகையுந் துயின்ற பின்பு
சோமனுக்கென் குறைசொல்லித் துயில்வா ராமல். (கOசுஉ)

புண்டரிகன் றன்னைநினைந் தன்றா கொண்டு
போனமா புருடனிது போகா தென்னக்
கொண்டிருந்தே முயிரின்னங் கூடா தான
குறையென்றன் குறையென்றுங் கொண்டு போகக்
கண்டுடனே சென்றகபிஞ் சலன்பா லன்புங்
கண்டிலமென் றிவையிவையே கருத விங்கே
தண்டிவருந் துடைநடுங்கப் பாவி யென்னைத்
தழுவநினைந் தான்றீண்டிற் றவறு மென்று. (கOசுங)

அந்தமதிக் கஞ்சலிசெய் தரனார் சென்னிக்
கணிமணியே நீயறிவை யென்றிங் கந்நாள்
வந்ததொரு புண்டரிகன் றன்னாற் செய்த
மாதவத்திற் குறையில்லை வலியான் மேன்மேன்
முந்தியிவன் மொழியுமுக ராகத் தாலே
முகராகத் துடன்பிறக்க மொழிந்தே னாக
வெந்தவத்தா னான்செய்த வினையி னாலே
வேர்போன மரம்போல விழுந்து விட்டான். (கOசுச)

விழுந்தவனுக் காருயிர்போய் விட்ட பின்பு
வேட்கையுட னின்றவர்கண் மிகவும் வாய்விட்
டழுந்தவுனக் கொருநண்ப னான தப்போ
தறிந்தேனென் றவளுரைப்ப வதனைக் கேட்டுச்
செழுந்தரள வெண்குடையா னண்பன் செய்த
தீமையினா லவன்வார்த்தை செப்பா தந்தக்
கொழுந்தரள வாணகையப் பிறப்பிற் கூடக்
கூடவோ நீரென்று குறைந்து வற்றி. (கOசுரு)

மன்னவன்சந்த் ராபீட னாவி சோர
வந்தெடுத்துத் தரளிகைதன் மடியில் வைத்துத்
துன்னியபே ரவத்தையிது காண்மி னென்னச்
சுவேதையும்வந் தவனவத்தை துணியக் கண்டு

பின்னையவன் மோகித்து விழவுஞ் சென்ற
பெரும்படையு மன்னவரும் பிதாவு மந்த
வன்னையரு மென்செய்வா ரவர்க்கென் சொல்வே
மனைவருமின் றுன்னுடைய வடிப்பின் செல்வேம். (கoசுசு)

என்றலறி விழுந்தழுதிங் கெவரோ காப்போ
ரிவ்வுலகை யவ்வுலகை யினிநீ யாளச்
சென்றனையிங் கறமுண்டோ செங்கோ லுண்டோ
திருந்தியபே ரருளுண்டோ சீர்தா னுண்டோ
நன்றியறி வாருண்டோ நன்றி யுண்டோ
நடுவுண்டோ பொறையுண்டோ நல்லோ ருண்டோ
வொன்றியதிண் டிறலுண்டோ வுலக முண்டோ
வுன்னையொழிந் தொன்றுரையா யென்று வாட. (கoசுஎ)

மன்னவன்றன் முகநோக்கி மறுகிச் சிந்தை
வாடியனு மானித்து வன்றுள் கொண்டு
பன்னகபா ரந்தொலைத்து வானிற் றுவிப்
பரிதாப மிகவுற்றுப் பதறி யார்த்தப்
பொன்னணிசங் கிலியையறுத் துதறிக் கூடப்
போவதுபோற் புரவிமனம் புரிய வப்போ
தன்னநடை யவள்பத்ர லேகை முன்சென்
றறிவிக்க மனமகிழ்ந்த வணங்கு தானும். (கoசுஅ)

அன்னையவண் மதிரைக்கு மைய னான
வருட்சித்ர ரதனுக்கு மற்று ளார்க்கு
மன்னுதவச் சுவேதைதனை நண்ணி நாதன்
மணிக்கோயில் வலம்வந்து வணங்கிப் போத
வென்னுமது மொழிந்தவர்கள் சென்று வாரு
மெண்றேவ வவரேவ லெய்தி வானின்
மின்னுமுகி லோசைக்கு மயில்போ லச்சொல்
விரும்பியகா தம்பரியும் விரைவிற் போந்து. (கoசுகூ)

கொங்குகம ழலங்கல்குழற் கணிந்து வாசக்
குங்குமமென் முலைக்கணிந்தா பரணம் பூண்டு
பைங்கனக மேகலைநூ புரங்க ளார்ப்பப்
பட்டுடுத்தோ ருத்தரிய மேலே போட்டுச்
செங்கைகொடுத் தொருபத்ர லேகை போதச்
சிறந்தகே யூரகன்முன் போத வாய்த்த
மங்கைமத லேகையுடன் முன்னே யெங்கோன்
மருண்டதொரு முழக்கமென வருந்தி வந்து. (கoஎo)

கண்டனள்கண் டுயில்பவன்போ லுயிர்போ யந்தக்
கடற்படையுங் காவலருங் கதற வுள்ளம்
விண்டுவரத் தரளிகையுஞ் சுவேதை தானும்
விழியருவி யாடவிழுந் தொழிந்தான் றன்னை
வண்டரவ மற்றமலர்ச் சோலை போல
மதியுதய மில்லாத வானம் போலத்
தண்டரள மில்லாத வாரம் போலத்
தாமரைப்போ தில்லாத தடாகம் போல. (கoஎக)

கண்டுகா தம்பரியீ தென்று னென்ன
கைதவந்தா னென்றுகருத் தழிந்து வீழக்
கண்டுமத லேகையவ ளாகந் தாங்கக்
கைவிட்டுக் கரையழிந்தாள் பத்ர லேகை
கண்டுகன வுணர்ந்தவர்போல் விழித்து வாடிக்
கழற்சந்த்ரா பீடன்முழுக் கவினை நாடிக்
கண்டுதுணிந் தனள்காதம் பரிதா னுள்ளங்
கருதிமத லேகையவள் காலில் வீழ்ந்து. (கoஎஉ)

வரிவளைநின் மனத்துயரந் தீர்வ தெல்லாம்
வாய்விட்டு நீயழுதா லன்றோ வென்னச்
சரிவளைநின் கருத்தறிந்தே னதுநாஞ் செய்யத்
தகுமோதா னெனநகைத்துச் சந்த்ரா பீடன்
புரிவதுதான் கண்டுமுயிர் போகா தாகம்
புகுந்திருந்த திவளையினிப் புகைந்து பொங்கி
யெரிவளரு மிடத்திடுவே னென்ன வன்னை
யென்னபிதா வென்றனளங் கிவனே யல்லால். (கoஎ௩)

மன்னனிவன் பொன்னுலகு புகுந்தான் பாத
மனம்பேணச் செல்வேனிம் மங்கலத்துக்
கென்னகுறை யுண்டிதற்கு மழுவா ருண்டோ
விதுநிற்க யான்வளர்த்த தேமாங் கன்றுக்
கின்னகைநீ வதுவையினுன் மால திப்பே *
ரிளங்கொடியைக் கொடுவளர்த்த விளமான் கன்றைத்
துன்னுதபோ த்னனிடத்தே ¶ விடுவெங் காமத்
தொழிற்படத்தைக் கிழித்தெறித றணிவு கண்டாய். (கoஎ௪)

இன்னமுநீ பரிகாச னென்னுங் கிள்ளை
யெழிற்பூவை காளிந்தி யிவற்றைக் கூட்டிற்
பின்னையுநீ வைப்பதொழி பொய்தற் குன்றைப்
பெருந்தவமா முனிக்குதவு பெரிது மன்பா

* மாதவி என்று முதனூலிற் காணப்படுகின்றது.
¶ தபோவனத்திடத்தே என்று முதனூலிலுள்ளது.

னன்னிதியந் தணர்க்குவழங் குனக்கும் வைத்து
நந்தவனத் தலர்தேவர் பூசைக் காக்கங்
கன்னைபிதா வென்னையொழிந் தாற்று ராற்றி
யவர்க்கொருநா னீயாகி யருள்செ யென்ன. (௧௦௭௫)

பின்னுமத லேகைபல பேச்சுக் கேட்டும்
பேசாமற் சுவேதையுடன் பேதுறுமன்
மன்னுமவ டனைமுயங்கித் தெளிந்து சொல்வாள்
வாராயுன் மாதவத்தால் வந்து கூடு
முன்னியது நீவருந்த நகைப்பா ரில்லை
யுனக்கிதனா லொருதாழ்வு மில்லை நீயே
முன்னுமெனக் கொருபாங்கி யின்னு மாக
மொழிகின்றே னினிவேறு மொழியே லென்று. (௧௦௭௬)

தோளிரண்டுந் துணைமுலையும் புளகங் காட்டத்
தொண்டைவா யிதழ்துடிப்பத் தொழுது நோக்கித்
தாளிரண்டுந் தலைக்கணிந்த மலர்போல் வைத்துத்
தன்மடியில் வைத்தளவிற் சந்த்ரா பீடன்
வாளிலங்கு மேனிதனில் வந்த சோதி
வாணிலவு போற்பரந்து வரவப் போது
நாளிலங்கு விசும்புதனி லுருவில் வார்த்தை
நவின்றதுமாச் சுவேதைதனை நயந்து நோக்கி. (௧௦௭௭)

வருகமக ளேயஞ்சன் மேனா ளுன்னை
வாடாத வகையுரைத்துப் புண்ட ரீக
னொருதனுவைக் கொடுசென்றங் கமுதில் வைத்தே
முன்னுடனே கூடுதற்கின் றிதுவு மொக்குங்
கருதிலிது தானும்வே றல்ல நாமே
காணிதுகா தம்பரிதன் கைப்போ தாகி
வருமமுதா லழியாதிவ் வுடலுஞ் சாப
வலிதொலையு மவ்வளவும் வைப்ப திங்கே. (௧௦௭௮)

என்றுரைத்த மொழிகேட்டுப் பத்ர லேகை
யென்னுமவ டனையொழிந்த வெவரும் வானத்
தோன்றவைத்த விழியுடைய ராகி நின்றங்
குளமகிழ்ச்சி பெறவந்த வொளிதன் மேலே
சென்றுபெற்ற வுணர்வுடனே பத்ர லேகை
திசைபிறிது நோக்காமற் சிந்தை தேறிப்
பொன்றுதற்கே யாவேசங் கொண்டார் போலப்
புரவியுடன் புரவலன்பின் போவே மென்று. (௧௦௭௯)

பொருகவனத் திந்திரா யுதத்தைக் கிட்டிப்
போதுநா மென்றதனைப் போற்று வானைத்
தருகவெனப் பற்றிமிக விரைந்தச் சோதத்
தடம்புக்கா ளப்பொழுதத் தடத்தி னின்று
மருவுமொரு வற்கலையும் பாசிக் கொத்தார்
வார்சடையும் புரிநூலும் வயங்கச் சாப
மொருவுமுனி குமரன்மா மகச்சு வேதை
யுற்றவனை நோக்கவவ ளுழையிற் சென்று. (௧0அ0)

எ.ானையறிந் திலையோவென் றவளை நோக்கி
யிளைத்துரைப்ப வாங்கவளு மெழுந்தி ருந்து
மன்னுகபிஞ் சலமுனிவ னன்றோ வென்று
வணங்கிவிழி நீர்வரவோர் வார்த்தை சொல்வா
டுன்னுதவப் புண்டரிகன் வானி லேறத்
தொலைவிலுயி ரிருந்ததனாற் சொல்லத் தக்க
தின்னுமது நிற்கவவன் றன்னைக் கொண்டன்
றேகியமா முனியேவ னெங்கே சென்றான். (௧0அ௧)

கொண்டுசெலக் காரணமென் கூடப் போயுங்
கூடவரக் கண்டதில்லை கொடியேன் காதற்
புண்டரிக நாதனெங்கே யவனை விட்டுப்
போந்தபடி தானேது புகலு மென்னத்
தண்டுநெடும் படையுமொரு சந்த்ரா பீடன்
றனக்கிரக்கு மன்னவருந் தாளைப் பேணு
மொண்டொடிகா தம்பரிதன் னுடனே வந்தங்
குற்றபரி சனங்களுநின் றுவந்து கேட்ப. (௧0அ௨)

அன்றுதவப் புண்டரிக னுடற்கொண் டேக
வவன்பிறகே யான்செல்ல வாகா யத்தி
லொன்றுமரம் பையர்தாமுஞ் சுரருங் காண
வுடுக்கணங்கள் வணங்கமதி யுலகந் தன்னிற்
சென்றுமகோ தயமென்னு மவையிற் புக்குத்
திகழ்சந்த்ர காந்தசிலா பீடந் தன்னி
னன்றிபெறப் புண்டரிக னுடலை வைத்து
நடுங்கியவென் முகநோக்கி நனிநீ யஞ்சல். (௧0அ௩)

தெளிகவினிக் கபிஞ்சலநான் சந்த்ரன் மேனாட்
சென்றனனீ திகழேம கூடந் தன்னி
லளியின்மத னங்கணையா லழிந்துன் னன்ப
னனவொரு புண்டரிக னறிவி லாதென்

ளொளியதனைக் கண்டுவெறுத் தென்னை நோக்கி
யுன்றலை யழிந்ததுயி ரொருநீ தானும்
விளியவிதி யனுராகத் தாலே கூட்டம்
விளையாம லிப்படியில் வினையேன் போல. (கo அச)

என்றுசபித் தனனங்கே யென்னை நோக்கி
யான்செய்த தவறில்லை யென்றி யானுங்
கன்றிமிக வென்னுடனே துன்ப மின்பங்
கலந்துநீ பெறக்கடவை கற்பீ தென்று
நின்றுவிரைந் ததிர்சாபங் கொடுத்து மீண்டு
நினைத்தளவி னங்கிரண நெறியால் வந்த
மன்றலணி குழற்கௌரி மகள்சு வேதை
மணவாளன் மருகனிவன் வாழத் தக்கோன். (கo அரு)

எனக்கருதி யிவனிந்தச் சாபத் தாலே
யிரண்டுபிறப் பென்னுடனே பிறக்கி லன்றி
மனத்துடனே சன்மசன்ம மென்று சொன்ன
வார்த்தையது வாயாகா தாகை யாலே
தனத்தைநெடுந் தவமாகக் கொள்ளுஞ் சுவேதை
தனைத்தேற்றி வேறங்கோர் தவறு காமற்
கனத்தையெடுத் திவவிடத்தே சாபத் தீமை
கடப்பளவுங் காப்பதற்குக் கருதிப் போந்தேன். (கo அசு)

ஈதெலாஞ் சுவேதகே துவுக்குக் கூறி
யிதற்குமே லென்செய்வ தென்று கேட்பப்
போதுநீ யெனவிரைவிற் போக விண்மேற்
புத்தேளி ரொருவனெனைக் கடந்தா யிங்கே
மாதுவாம் பரிபோல நீயு மிந்த
வாம்பரியா கக்கடவை யெனநா னஞ்சிப்
பாதமேல் விழுந்தறிந்து செய்த தன்று
பகர்ந்தருள சாபவிடை யென்னப் பார்த்து (கo அஎ)

உன்னைமேல் வாகனமா வுடைய கோமா
னுயிரிறுதி யுண்டாயன் றுதகம் புக்க
பின்னையுனக் கிச்சாப மகலு மென்று
பேசிவிடுஞ் சாபவலி பெற்று முன்னே
யந்நிலத்திற் சோமனுமென் னண்பன் றானு
மவதரிப்ப நானவனை யகலா வண்ண
மின்னநினைந் தருள்செய்ய வேண்டு மென்ன
விவ்வண்ண மாகுமினி யிதுகே ளென்று. (கo அஅ)

தன்னிகரி லாதபுகழ்த் தாரா பீடன்
றனக்குமக வேண்டியருந் தவத்தை நோற்க
வந்நினைவிற் சோமனவன் புதல்வ னாவ
னமைச்சனச் சுகநாதன் றனக்கு மாங்கே
மன்னுதவப் புண்டரிகன் மைந்த னவன்
மற்றவன்ற னன்பனே மன்னன் மைந்தன்
றன்னுடைய வாகனநீ யாக வன்னச்
சலதியில்வீழ்ந் தப்பொழுதே தனிமா வானேன். (கOஅகூ)

புண்டரிகன் பிறப்புமிஃ தென்னக் கேட்டுப்
பொறிகலங்கி மகச்சுவேதை புலம்பி யின்னல்
கொண்டுநீர் பிறந்துவரும் பிறப்புக் கெல்லாங்
கூற்றாகி யுமைக்கொன் றுவிட்டே னானே
மண்டலத்தி லெனைக்காணத் தக்க தோதான்
மாபாவி நானலவோ மற்று முண்டோ
வண்டரிடத் தாகியநீ ரடியேன் செய்த
வபராதம் பொறுத்தருளி யருளீ ரென்று. (கOகூO)

விழக்கண்ட கபிஞ்சலனீ யின்னே யிந்த
வேதனைகொண் டுயிரிழக்க வேண்டா மேலோர்
தொழக்கொண்ட வடிவுடனே புண்ட ரீகன்
றோன் றுமினிச் சுகமேயாந் துக்க மில்லை
நிழற்கொண்டு நானுரைத்தேன் றவமே செய்த
நீதவத்தை விடாமலிரு நீங்கள் வாட
வழக்கன் று நீர்வருந்த வேண்டா வென்றம்
மாகத்தின் மொழிசோமன் வார்த்தை யாகும். (கOகூக)

செய்தவத்தி னாகாத செயலொன் றில்லை
சிவன்பாகந் திருந்திழைகைக் கொண்ட தெல்லா
மொய்தவத்தின் வலியாகு முனக்கு மிந்த
முதுதவத்தா லென்பாங்கன் முயக்க முண்டாங்
கைதவத்தா லொன்றாகா தெனச்சு வேதை
கவலையொழிந் தனள்காதம் பரியப் போது
பெய்தவத்தெங் கபிஞ்சலனே பத்ர லேகை
பெயர்ந்துடனே தடம்புக்காள் பெயர்ந்த தெங்கே. (கOகூஉ)

என்னவவன் பெண்ணரசே வாவி புக்கே
னிவள்போன விடமறியே னிதுவு மன்றிப்
பின்னுமமு தொளிர்மதிய மென்னுஞ் சந்த்ரா
பீடன்றன் பிறப்புமொரு புண்ட ரீகன்

றன்னுயிரா லவதரித்த வைசம் பாயன்
றன்பிறப்பு மிவையெல்லாஞ் சுவேத கேது
வென்னுமுனி யறிந்திருப்ப னிவனைக் கேட்டே
யானறிவ னெனவிசும்பி லேகி விட்டான். (சு௦கக)

முழுதுமுனி மொழிந்தநெறி தானை யோடு
முடிமன்னர் திரள்கேட்டு மகிழ்ந்து பின்னு
மழுதுவிட விருந்தனர்பின் சுவேதை தன்னோ
டணிவளைகா தம்பரிமே லயன்கற் பித்தா
னெழுமையினு மொக்குமிது துன்ப மின்ப
மெமக்கதனு லினிநானே னியாதுஞ் சொல்வேன்
பழுதறுநின் றிருமுகத்தைப் பார்ப்பே னின்று
பகரினுனக் கோருயிராம் பாக்கி யானேன். (சு௦கச)

காரியமிப் படியிருந்த திதற்கு மேனீ
கற்பித்த வாறொழிய வறியே னென்ற
நேரிழைகா தம்பரிக்குச் சுவேதை யிந்த
நெறிகாட்டாய் பிறிதொன்றை நினையா தீங்குச்
சீரியசந் ராபீட னுகம் பேணித்
திருந்துமுத லொருவார்த்தை செப்பக் கேட்டேன்
னுருயிரை நான்பேணி யிருந்து கெட்டே
னவனடைதல் கபிஞ்சலனு லதுவுங் கேட்டாய். (சு௦கரு)

கல்லானு மரத்தானு முலோகத் தானுங்
கற்பித்த படிவமெல்லாங் கருத்துக் கொண்டு
சொல்லானு மலரானும் பூசை செய்தத்
துணிபொருளை வழங்கியவர் துயரந் தீர்ப்ப
தெல்லாரு மறியார்க ளல்ல நீமுன்
னெதுகொண்டா ராதிக்க லிவனிங் கானு
னல்லாயிங் குனக்கருளு மிந்த மூர்த்தி
நான்சொல்வ தேதென்ன நயந்து கேட்டு. (சு௦கசு)

விழைந்துதர ளிகையுமத லேகை தானு
மின்னனையா டானுமவன் மெய்யைக் கொண்டு
தழைந்தமரம் புடைசூழ்கன் முழைஞ்சு தன்னிற்
றயங்குமல ரணைவளர்த்தித் தன்பூ ணெல்லாங்
கழஞ்சிலொரு மோதிரமே யொழிய மேன்மங்
கலப்பொருட்டு வாங்கிவைத்துக் களைந்து வேய்க
ளிழைந்தவனச் சுனையாடி யொளிர்பற் சீவி
யிரண்டுமர வுரியுடுத்தங் கிளைத்து வாடி. (சு௦கஎ)

தன்னுடனே கொடுவந்த வகிலின் றாபந்
தகரநறுஞ் சாந்தமிவை தம்மைக் கொண்டு
மன்னுமலர் கொண்டும்விழி மாரி கொண்டும்
வாடியசந்த் ராபீடன் மலர்த்தாள் பேணிப்
பின்னுமவன் றளிணையை மடியில் வைத்துப்
பெரிதுமவன் முகநோக்கிப் பீடை யுற்று
மன்னருடன் றுனையுடன் பகற்போ தங்கு
வந்தபரி சனங்களுடன் வருந்தி விட்டாள். (௧0௯அ)

அற்றையிர வெழுமுகிலு மெழுந்த தென்ன
வதிருமிடி யனலாலு மின்க ளாலுஞ்
சற்றுமிரு ளுலகிலுள தென்று வண்ணந்
தயங்கவிழி வெறியார்ப்பத் தலத்தோ ரெல்லா
முற்றுமிக நடுங்கவதற் குளனஞ் சாம
லுறங்காம லவனிருதா ளுவந்து கையாற்
பற்றிவிடா திருந்தந்த விரவைப் போக்கிப்
பார்த்தளவில் வாடாத பண்பு கண்டு. (௧0௯௯)

இதுபெரிய புதுமைமத லேகை பாரா
யென்னவவ ளினிதொழிவ தேது செவ்வி
மதுவனச மலரெனலா நயனஞ் செவ்வாய்
வருந்தளிரி னியல்பெனலாம் வதன விம்பம்
விதுவலய நிகரெனலாந் திண்டோண் மேரு
வெற்பெனலாம் வியர்பரிப்ப தில்லை யென்னு
மதுவலது குறையுண்டோ முனியுஞ் சொன்ன
னுகாயந் தான்மொழிந்த தைய முண்டோ. (௧௧00)

என்னவவண் மிகமகிழ்ந்து மகச்சு வேதை
யிங்கிவன்ற னெழில்பாரா யிந்து வுந்தான்
மன்னுமிவன் முகந்தனக்கு மொக்கு மோதான்
மன்னவரும் பாருநீர் வாரு மென்னத்
துன்னுதுயி லன்றியிது வேறோ மங்கை
துணைக்கரத்தை யமுதென்று சொன்ன துண்மை
பின்னையெது சொல்வதுநா மென்று மன்னர்
பேசியவ ரடிதொழுது பேணி நிற்ப. (௧௧0௧)

மன்னுபெரும் பரிசனங்க ளுடனே சென்று
வரும்புனலி லாடிமலர் கொய்து போந்து
மன்னவன்ற னடிபோற்றி மன்னர் தம்மை
வாடியநீ ரிளைப்பாறி வருக வென்று

சொன்னவுரை கொண்டவர்க ளூனஞ் செய்து
துய்ப்பனவுந் துய்த்தளவிற் சுவேதை கூற
வன்னமவள் வருந்தியொரு சாக மூல
மருந்தினடன் பரிசனங்க ளுடனே யாங்கு. (கக௦உ)

அத்தினமுஞ் சென்றதற்பின் மற்றை நாளு
மவன்மேனி வாட்டமிலாத் தன்மை கண்டு
மெத்தமகிழ்ந் தினியஞ்ச வேண்டா நேரே
மெய்யிதனைச் சாபவிடை யளவு நோக்கி
வைத்தநெறி யிங்கேநம் மன்னை தந்தை
வருந்தாமற் சொல்லியவர் வாரா வண்ண
மித்தனையு நீயுரைத்து வருவா யென்றே
யிபம்பிமத லேகைதனை யேவி விட்டாள். (கக௦௩)

சென்றவளு மடைவாகச் செப்பு முன்னே
திடுக்கென்று செய்திதனைத் தெளியக் கேட்டு
நன்றிதுகற் பென்றுரைத்து நமக்கு நேரே
நன்றாக வாய்த்ததுடு நாத னன்றோ
வென்றுமணா வாளனுடன் மகளைக் காண்பே
மென்றுநினைந் தேமிதுதா னென தொன்றே
யொன்றியநன் மங்கலநாள் வருமே வென்றுற்
றொண்ணுதலை மகிழ்ந்துரைக்க வுவந்து மீண்டு. (கக௦ச)

அங்குமகிழ்ந் தன்னைபிதா வுரைத்த வெல்லா
மடைவாக மதலேகை யவட்குக் கூறத்
தங்குபெரு மகிழ்ச்சியுடன் சந்த்ரா பீடன்
றுள்பேணி யிருந்தளவிற் றடங்கார் நீங்கிப்
பொங்குகதி ரெத்திசையும் பரம்பச் சென்று
புலர்ந்துபுர விக்குரங்கள் பொறுக்கக் கங்குல்
பைங்குமுத பரிமளமுண் டாக்கத் திங்கள்
பகல்போல நிலவெரிக்கப் பலருஞ் செல்ல. (கக௦ரு)

ஆகின்ற காலத்தி லொருநா ளாங்கே
யாகியகா தம்பரிக்கு மேக நாதன்
மேகஞ்சேர் குழலாயுச் சயினி வேந்தன்
விடுதூதர் செய்திக்கு விசைய வந்தார்
மாகஞ்சேர் மதிக்குலத்தோன் சந்த்ரா பீடன்
வந்ததுமிங் கானதுவு மற்றுஞ் சொல்லி
யேகுங்கோ ளனக்கண்டே போக வேண்டு
மென்றுரைத்தா ரென்றுரைத்தா னிறைஞ்சி நின்று. (கக௦சு)

காணும லவரேகக் கடவ ரோதாங்
காணுத தொருபுதுமை காத்து நாங்க
டாணுடு நெறிகண்டு சந்த்ரா பீடன்
றனுக்கண்டு முகநாடித் தடங்க ணுடித்
தோணுடி விலாசவதி தாரா பீடன்
சுகநாதன் மனோரமையா ருயிர்சோ ராமல்
வாணுடிக் கண்டவர்க ளுரைக்க வேண்டும்
வருவார்க ளெனவவர்கள் வந்து கண்டு. (ககOஎ)

அஞ்சலியோ டிறைஞ்சியவர் காலில் வீழ்ந்தங்
கழக்கண்டு தேவியழக் கடவ தல்ல
சஞ்சலநீ ரொழிகவச ரீரி வார்த்தை
தப்பாது கபிஞ்சலனுந் தன்மை சொன்னுன்
மஞ்சுடைய திருமேனி வாட்ட மில்லை
வாட்டானை தன்னுடனே மன்னர் தாமு
நெஞ்சுதரித் தனரிதனு னீருங் கண்டீர்
நேராத நீர்கண்ட நெறிகுன் றமல். (ககOஅ)

ஆங்கவர்க ளச்சோதத் தடத்தி ருந்தா
ரவர்க்கேது தாழ்வென்றே ரடைவிற் கூறு
நீங்களென வெப்படியே சென்று நாங்க
ணின்றுரைப்பே நின்றுரைக்கின் முகமுங் கண்ணுந்
தாங்கரிய பெருந்துறையாந் தன்மை காட்டுந்
தப்பாதென் றவருரைப்ப மேக நாத
பாங்குடையா னொருவனைநீ யேவு கென்னப்
பரிவுடைய துவரிதன்போ தென்னச் சென்றான். (ககOகூ)

இப்பாலே விலாசவதி தளர்ந்து மைந்த
னிங்நெடுநாள் வந்திலனென் றவந்தி தன்னில்
வைப்பான வெழுதிருக்கள் வாழுங் கோயின்
மன்னியவ ரடிவணங்கி வரவு கேட்ப
வப்பாலே விடுதூதர் விரைவில் வந்தா
ரவர்க்கண்டே மௌனமொழியு மவரைக் கண்டேந்
தப்பாது வேண்டுகோ ளென்னக் கேட்டுத்
தவல்கொண்டா ளஞ்சலியத் தாரை நோக்கி. (கககO)

வருந்திவரு மவரெதிரே சென்றுசென்றோர்
மன்னவனெங் கேவைசம் பாய னெங்கே
திருந்துதெச வர்த்தனனவ்* வீர சேனன்
றிறற்சமர சேனனச்வ பத்ர சேன

* இப்பெயர் தேவ வர்த்தனன் என்று முதனூலிற் காணப்படுகின்றது.

னிருந்தனரோ விலவன்மா குமார வன்மா
வென்செய்தா ரென்சொன்ன ரிவர்க டம்மிற்
பொருந்தினரோ நாட்சென்ற தேது நீங்கள்
புறப்பட்டங் கெத்தனைநாள் புகலு மென்ன. (கககக)

அங்கவர்க டம்முடனென் றுரைசெய் யாம
லறத்தளர்ந்த நெஞ்சினரா யவர்கள் போத
மங்கைவிலா சவதியந்தக் கோயின் முன்றில்
வாய்நின்று வருமவர்தம் வண்ணங் கண்டு
செங்கயற்க ணீர்ததும்பச் சிந்தை சோரச்
செய்யபதந் தடுமாறச் சென்று வாய்விட்
டெங்கள்வழி யாசெங்கே யெங்கே சொல்லீ
ரென்றவுரை கேட்டுமிக விளைத்து வாடி. (கககஉ)

வந்தவர்கள் விழிநீரை மறைத்த லுற்று
மண்மிசைத்தந் தலைவைத்து வணங்கக் கண்டு
முந்தியெழுந் துரையுமென வச்சோ தப்பான்
முடிவேந்தன் றுவரிதநீ மொழிக முற்று
மந்தவிடத் துண்டான வடைவை யென்றங்
கவர்நிற்ப வவன்மொழியு மளவி னீங்க
ளெந்தமொழி கூறுவதிங் கறிந்தே னுங்க
ளியல்புநா னுமைக்கேட்ப தினியே தென்று. (கககங)

மின்னுமெ லிடியிடித்த தென்னே யென்னே
வேந்தர்குல மணிவிளக்கே வேந்த ரேறே
யென்னுவிக் கொருதுணையே யென்றன் வாழ்வே
யென்னுயிரே யென்னரசே யெதிர்ந்த போரிற்
பின்னுணி முன்னனுகு மவனே சந்த்ரா
பீடனெனுந் திருநாமம் பெற்ற கோவே
யந்நாளே துன்னிமித்தஞ் சொல்லக் கேட்டு
மறிந்திலையே யென்றுமிக வரற்றக் கேட்டு. (கககச)

மடப்பிடிமே னரபதியத் தாரா பீடன்
மதிவல்ல சுகநாத னுடனே யேறி
நடத்தியந்த வுச்சயினி தன்னைக் கொண்டு
நடப்பதுபோ னரலோக நடுங்கிச் செல்லக்
கடற்றொனிபோ லழுகுரலைக் கேட்டு நெஞ்சங்
கலங்கியவ னதர்ச்சென்று கடிகொள் கோயி
லிடத்திறங்கி விலாசவதி துயரந் தன்னை
யெதிர்கொண்டு வருந்தியெடுத் தணைத்துத் தேற்றி. (கககரு)

இலங்கிழைநீ கலங்கன்மின் சந்த்ரா பீட
னிருந்தனனே யிருப்பேமற் றிதுதா னிற்க
கலங்குவதென் விதிவசங்கா ணெல்லா நாமுங்
கண்டிலமோ வவன்பிறப்பக் காணு தேது
நலஞ்சிறந்த முகங்கண்டேந் தவழக் கண்டே
நகைகண்டே நாளுமவன் மொழியுங் கேட்டேந்
தலம்புரந்த நெறிகண்டேம் விசயங் கண்டேந்
தயங்குபல கலைகண்டேஞ் சற்றோ பெற்றோம். (கககசு)

காணாத தொன்றுண்டு விவாக நன்றி
கண்டிலேங் காண்பதற்குங் கடற்பூ பாரம்
பூணுக வவன்புயத்தே வைத்துப் பின்பு
புகலாய மாகானம் போவ தற்குங்
கோணாமை னினைத்திருந்த துண்டு மேலுங்
கூடியவா காண்கின்றே மென்று தன்னைப்
பேணாமை யிவையுரைக்கக் கேட்டோ ரங்குப்
பின்போந்து துவரிதகன் பேச வென்றார். (கககஎ)

பிறந்தடைவு துவரிதகன் சொல்லக் கேட்டுப்
பின்புமனம் வெடித்ததெனப் பேசி நீயின்
றிறந்துவிட வுற்றனநாம் வலியே மைந்த
னிளநெஞ்ச னண்பனியல் கேட்டி றந்தான்
சிறந்தமதிச் சுகநாத மாகா லன்றன்
றிருக்கோயி றனையடுத்த சேம மாக்கி
யறந்தனிலே கொடுதனத்தைச் சமித்துக் கூட்டி
யனல்வளர்க்கக் கற்பியென வறிவு சோர. (கககஅ)

பெருந்துயரால் விலாசவதி தன்னைத் தாரா
பீடனைப்பார்த் தப்போது பெருக வஞ்சி
வருந்துவது கேட்டலவோ மனம்பி ளந்தும்
வாடாம லிருந்தனனின் மைந்தன் வாடா
திருந்தனரங் குள்ளாருங் கண்டு தேறி
யினிவைசம் பாயன்றன் பிறப்பு மெல்லாந்
திருந்தவெனைக் கேட்டருளென் றடைவே யெல்லாந்
தெளிந்ததுவ ரிதகனது செப்பக் கேட்டு. (கககக)

சுகநாதன் முகம்பார்க்கத் தாரா பீடன்
சுகநாத னத்துயர மறைத்துச் சொல்வான்
மிகநாளு முக்குணத்தாற் பிறந்தி றக்கும்
விண்ணவர்க்கு மண்ணவர்க்கும் விலங்கி னுக்குஞ்

சகநாடு நல்வினை தீ வினைக ளாலுந்
தாபரசங் கமமான சகலத் திற்கு
முகநாலு மவத்தையெது தானுண் டாகா
துரைக்குமதோ விதற்கைய மொன் றுண் டாமோ. (கக௨0)

வெந்துசெல்லும் விடத்தாலும் வடிவா ளாலும்
வேலாலு முயிரழிந்து விட்டார் தாமு
மந்திரத்தான் மருந்தாலப் போன வாவி
வரப்பெறுவ ரலையலுயிர் வருமாக் கொள்க
விந்திரனுஞ் சாபத்தாற் பெரும்பாம் பானு
னிதனுமேல் த்ரிசங்குவுஞ்சண் டாள னானன்
வந்துமுதற் றசரதர்க்கும் வசுதே வர்க்கு
மைந்தனா னன்றிகிரி மாலு மன்றே. (கக௨க)

அம்புலிதா னவதரித்த துண்மை கண்டா
யதுநிற்க நின்றேவி வதனந் தன்னில்
விம்பமதி வந்தனுகக் கண்ட துண்டு
வினையேனும் புண்டரிகங் கண்ட துண்டே
யிம்பரவர்க் கவதாரஞ் சங்கை யில்லை
யிந்தவுட லுயிர்பெறுமோ வென்ன வேண்டா
வம்பரத்தா ருயிர்பெறுவ தமுதா லப்போ
தரவிரண்டு துணியுய்ந்த ததனா லன்றே. (கக௨௨)

சோமனவ தாரமெனச் சொல்வ தேது
சோதிதரு முகத்தாலும் வண்மை யாலுங்
காமருபே ரியல்பாலுங் கலைக ளாலுங்
கண்டனமா ரமுதமது கலந்த சாபம்
போமளவு மவ்விடத்தாம் போனா லங்குப்
புதல்வனுக்குக் காந்தருவ ராசன் போற்று
மாமகளை விவாகஞ்செய் வித்து வாழ்க
மன்னவநீ வருந்தலினி வருந்தே லென்ன. (கக௨௩)

வேறு.

யன்னன்பிற கிதென்றன் மனத்தாகுல மானு
ல்னனம்படு துயரெப்படி யளவில்லைய தென்றான்
மன்னும்புவி தன்னிற்செல வலரென்றனன்* மாது
மின்னஞ்சில புகலாதினி யெழுமென்று பணிந்தாள். (கக௨௪)

---

* புவிதன்னில் நாம் ஜீவித்திருக்குமாறு சீக்கிரஞ் செல்லக்கடவர்கள் என்பது பொருள்.

மன்னன்சில படையோடு வழிப்பட்டன னுடனே
பின்னும்புர வலர்சென்றனர் பேதித்தவர் நிற்பத்
துன்னும்படி மொழிசெய்ததர் சொல்லத்துவ ரிதக
னன்னந்திக ழச்சோத தடாகத்தை யடைந்தான். (கக௨௫)

மன்னன்றுவ ரிதகன்றனை வாவென்று விடுப்பப்
பின்னுஞ்சில படைபோனது பின்போனவ னுடனே
துன்னும்படை யொடுமன்னவர் துயருற்றவ ரொடுமீண்
டின்னந்தவ றங்கொன்றிலை யினிமங்கை வருந்தேல். (கக௨௬)

என்னப்படை யொடுமன்னவ ரிருதாளில் விழக்கண்
டன்னப்பெடை யன்னாளர செங்கேயென வலறிப்
பின்னப்பட வவளைத்தணி யென்றன்பொடு பேசி
முன்னூற்றடி பணிமேகலை மொழிநீசெய லென்றான். (கக௨௭)

உடலுக்கொரு தாழ்வங்கிலை யுயிருக்குமஃ தொக்கு
மிடருற்று வருந்தேலினி யென்றானது கொண்டே
திடமுற்றொரு தேவிக்கிது செயனீதெளி யென்றங்
கடலுற்றவன் மடமாதுட னப்போது பெயர்ந்து. (கக௨௮)

துதியேறு தவப்பாவை சுவேதைக்கிட மாகும்
பதியேதென வினவிப்பதி புக்கானவ ளேயோ
விதியேயிது வெனநொந்து மிகத்தன்குகை புக்காண்
மதிபோலொரு காதம்பரி மருள்கொண்டு விழுந்தாள். (கக௨௯)

அவரப்படி யாகத்தனி யாகச்சுக நாதன்
கவலைக்கிட மலவென்பது கற்பித்துழை புகமா
தவளப்பொழு தமனோரமை யொடுசென்றன ளனைகண்
டிவணிப்படி யென்மைந்த னெனைக்கண்டெது செய்தான். (கக௩0)

துயில்விட்டு வருந்தந்தை துணைத்தாடொழ வெழுநீ
முயல்விட்டெழு மதிபோனு முகத்தாலொரு மொழிதா
செயலற்றன மெப்போதுரை செப்பத்தெளி வதுநான்
மயனுற்றன னின்றந்தையு மைந்தாமற மாமோ. (கக௩க)

என்றிப்படி யலறிப்பிற கிருதாடலை வைத்துச்
சென்றுச்சியின் முகம்வைத்தனள் செறிகொங்கை களிற்பால்
குன்றிற்சொரி யருவிப்புன லென்னக்குதி கொள்ளக்
கன்றிச்சொரி விழிநீரொடு காயங்கவி னெய்த. (கக௩௨)

இனிநீவிடு சோகந்தனை யென்றங்கிரு தோளா
னனிமேதகு மைந்தன்றனை நரபால னணைத்துத்
தனியேதுயில் கின்றாயவை சம்பாயன னெங்கே
முனிவாருடன் மொழிகின்றிலை மொழியாயினி தென்னும். (கக௩௩)

மேலானுயிர் வருமென்பது மெய்கொண்டு தெளிந்தே
னேலாதவர் சுகநாத னுடன்றேவியு நொந்தா
ரேலாதவர் துயர்கூர்வ தினித்தேவியு னருளா
லாலாபம் விளைந்தங்கவ ராறப்புக லென்னும். (௧௧௩௪)

வந்தோமென வப்போதுன மகன்றேவி விழுந்திங்
கந்தோவற நொந்தாளவ ளாறும்படி யின்சொற்
றந்தோகை யுறக்கண்டு தழீஇக்கொள்ளென வேகிப்
பைந்தோகையு மவண்மேன்மிகு பரிவான்மடி வைத்து. (௧௧௩௫)

உன்னைத்திரு மகளேபெற வுயர்மாதவ முடையான்
றன்னைத்துய ரடுமோவொரு சரணந்தனி நீயே
முன்னைத்தவ வலியன்றி முயன்றார்பெற வல்லார்
மின்னைத்தெளி யினிநீயென மெய்ம்மாசு துடைத்தாள் (௧௧௩௬)

மடிவைத்தது மறியாளவண் மதலேகை யெடுத்துக்
கொடியிப்படி பணியென்றவள் கூறப்பணி தாவென்
றடிதொட்டனள் காதம்பரி யவன்றன்னை யணைத்திப்
படிகொற்றவ னடியைப்பணி யெனவந்து பணிந்தாள். (௧௧௩௭)

நீடுந்திரு மயில்வந்தது நீவந்தது சந்த்ரா
பீடன்றன துயிர்தந்த பெருந்தெய்வ மருந்திங்
கோடும்பொழு துனையொப்பவர் ஞாலத்தினி லுண்டோ
கூடுந்தவ முயல்வாயொரு குறையின்றி யிருக்க. (௧௧௩௮)

என்றங்கவர் சொல்லித்தன தொருமைந்தனை யெய்தச்
சென்றங்கவ னுடன்மாமை திருந்தத்தழு விக்கொண்
டின்றிங்கினி யாமென்செய்வ தென்றேகியொ ரருகே
யன்றங்கொரு கொடிமண்டப மதுமேவி யிருந்து. (௧௧௩௯)

எங்கேவர முடிமன்னவ ரிருமென்றவ ருடனே
யிங்கேமுறக் கண்டேமென வெண்ணீரிதன் முன்ன
மங்கேய விவாகத்துட னரசுக்கர சுதவிச்
சங்கேதம தாகுந்தவ முயலத்தகு மென்றே. (௧௧௪0)

அவ்வாறு நினைந்தேமது விதியின்வச மன்றோ
தெவ்வாறு படாமற்புவி தெரியத்தகு நம்மா
லிவ்வாறு தவம்பண்ண நினைந்தேமினி யிதனுக்
கொவ்வாமொழி கூறேலென வுரையாடி யிருந்தான். (௧௧௪௧)

பாசத்தவ மடமாதொடு காதம்பரி பலவு
நேசத்துட னிவைசெய்தவ நிறைவேற வளிக்குந்
தேசத்தவை கைக்கொண்டொரு மைந்தன்றிரு வழகே
பேசிக்கொடு தரிசித்தருள் பேராம லிருந்தான். (௧௧௪௨)

### வேறு.

என்றிவை யடங்கக் கூறி யிருந்தசா பாலி கேட்டே
னின்றிது நன்றென் றாங்கே நகைசெய்து முனியீ ருங்கட்
கொன்றினை யுரைக்கப் புக்கிங் கொன்றினை யுரைத்து விட்டே
னின்றிது கதையி னின்ப மிழுத்ததித் தூர மென்னை. (ககசங)

ஆதலாற் புண்ட ரீக னனங்கனா லீடு பட்டு
மேதினி தன்னில் வீழ்ந்து மிகச்சுக நாத னுக்கங்
கேதுவான் மகவாய் வைசம் பாயன னென்று பேராய்
மாதவ மகச்சு வேதை வாக்கினாற் கிள்ளை யானான். (ககசச)

என்றுசா பாலி கூற விளமையி லீத றிந்தே
னொன்றிய கனவிற் கண்ட துணருமத் தன்மை போலத்
துன்றிய கலைக ணாவிற் றோன்றின பேசப் பெற்றே
னன்றொரு மனிதர் மேனி யல்லதம் முனிபாற் பெற்றேன். (ககசரு)

ஆயினேன் வைசம் பாய னன்புடைச் சந்த்ரா பீட
னேயமு முடைய னானே னோரிமை சுவேதை தன்பா
லேயும்வன் காதல் பெற்றே னிறகெழா மற்கு றைந்தேன்
போயவர் தம்மைக் காணப் புரிந்தில னென்னைப் பெற்ற* (ககசசு)

தந்தையுந் தாயுந் தாரா பீடனுந் தேவி தானுஞ்
சுந்தரத் தவத்து வீர்ய சுவேதையு மற்று ளாரு
முந்தையி னன்ப னான முனிகபிஞ் சலனு மென்றன்
சிந்தைவிட் டகலா ரேது செய்தன ரங்கே யென்றும். (ககசஎ)

சாதலைக் கேட்டு நெஞ்சஞ் சடக்கென வெடித்து மாய்ந்த
பேதமில் சந்த்ரா பீடன் பிறப்பிட மெங்கே யென்று
மாதர விலங்கி னானே னாகினு மன்ப னான
மேதகு மவனைக் கண்டால் வெந்துயர் தீரு மென்றும். (ககசஅ)

வருந்திநான் வணங்கிக் கேட்ப மாமுனி யென்னைப் பார்த்துத்
திருந்திய சிறகி லாநீ செல்லவோ கேட்ட தென்று
பொருந்திய முனிவி னன்போற் புகன்றுநீ யிதனா னெஞ்சந்
தருந்துயர் மூழ்கி விட்டாய் தரித்துநீ வினவ லென்றான். (ககசகூ)

---

* என்னைப்பெற்ற தந்தையுந் தாயு மென்க. இவ்வாறு பெயரெச்ச சுருக நின்று அடுத்த செய்யுளோடு தொடருங் குளகச் செய்யுட்கள் பழையகாலத்துக் காவியங் களில் அருகி வழங்கக் காண்கின்றோம். 'குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்' என்றதைத் தவிர வேறு விதி காணப்படாமையானும், பிற ஆன்றோர் செய்யுட்களி லும் இங்ஙனம் சில பயின்றுவரக் காண்கின்றமையானும் இது வழூஉப்பட வந்த தன்றென வுணர்க.

இப்படி முனியு மாகி யிருக்கவிங் கிதனுக் கிந்தத்
தப்பிங்ஙன் வந்த வாறென் ருனுயிர் குறைந்த வாறெ
னெப்படி யறிந்தி லேன்யா னீதொரு புதுமை யென்றங்
கப்பொழு தையங் கூறென் றவனையா ரீதன் கேட்ப. (ககரு0)

கேட்டறி புதல்வ மீன கேதனன் விகாரந் தன்னால்
வேட்டன ராய மாதர் வீரியத் தாற்பி றந்தாற்
கோட்டமு மதனா லாகுங் குறைதலு மதனா லாகும்
வாட்டமு மதனா லாகு மாநிலத் தெவர்க்கு மொக்கும். (ககருக)

அந்தவீ ரியத்தி லான வவனிவ னுகை யாலே
வெந்திறற் காம நோயால் வெந்துய ருழந்தான் மேலு
முய்ந்தில னிடரின் மாய்ந்தா னுற்றசா பந்தொ லைந்தால்
வந்தநல் வினையா லாகும் வாழ்வுமா ருயிரு மோங்கும். (ககருஉ)

என்னநான் வணங்கி நின்றிங் கியம்பிய பரிசு நன்றே
யன்னிய விலங்கில் வாழ்வ ததிபிழை யதிலே யாயு
மன்னுவ தின்னு தெந்த வழியினாற் கதியுண் டாகு
முன்னுநீ மொழிக வென்ன வுரைத்துமிங் கிதுவும் பின்பே. (ககருங)

என்றிது விடிய நேர மிமகர விம்பந் தான்மா
சொன்றுகண் ணுடி யொக்கு முழைதொ றும் புட்க ளார்க்குஞ்
சென்றுநா நியமஞ் செய்வே மென்றெழக் கண்டு சிந்தை
கன்றிமுன் வாரக் கண்ணீர் கதையிலே கருத்தை வைத்து. (ககருச)

பின்புமா முனிவர் தாமும் பெயர்ந்தனர் நியமஞ் செய்ய
வன்பனு ரீத னென்னைத் தன்னிடத் தமர்த்திப் போக
வின்பமொன் றெய்தேன் றேர வெய்திய பிறப்பொ ழிந்தேன்
றுன்பமே முயன்றே னென்று துணிந்துயிர் விடநி னைக்க. (ககருரு)

வந்துமா முனியா ரீதன் மங்கல முனக்கு மேலு
முந்தையி னண்ப னான முனிகபிஞ் சலன்முன் வந்தென்
றந்தைதாள் பணிந்தி ருந்தா னென்றவன் றனைநான் காண
வந்தாப் படுமு னென்னை யவன்முனே கொடுபோய் வைத்தான். ()

அம்பரத் திழித லாலே யவிழ்சடை யலைய மேனி
வெம்பவுத் தரியஞ் சோர வெயர்வர விளைத்து நெஞ்சங்
கம்பமுற் றழிந்தி ருந்த கபிஞ்சலன் றன்னைக் கண்டிவ்
விம்பரிற் பிறந்த பாவி யென்செய்வே னென்னே யுன்னை. (ககருஎ)

வருகையா லெதிரே நானே வந்துனைக் கிலேசந் தீர
விருகையாற் றழுவப் பெற்றே னில்லையா சனத்தில் வைத்துப்
பெருகையா னிளைத்த மேனி பிடித்திலே னென்னத் தானு
முருகினன் சிரத்தில் வைத்தா னுரத்திலும் வைத்து நொந்தான். ()

இனியுனக் கிதுவே னன்பற் கிவ்வள வமையு மிந்தத்
தனியுனக் கொவ்வா தல்லல் சற்றுநீ தணிக வையர்
நனியெனக் கேது சொன்னார் நான்செய்த நன்றி யுண்டோ
முனிதனக் கேற வென்ன முனிகபிஞ் சலனுஞ் சொல்வான். (கக௫௯)

ஐயர்நஞ் சுவேத கேது வறிந்திதற் கான சாந்தி
செய்யமுன் றொடங்கி னார்நான் றிறற்பரி யுருவம் விட்டுப்
பையவந் திறைஞ்சி நிற்பப் பார்த்தெனை யழைத்து னண்ப
னுய்யநாஞ் சாந்தி செய்ய வுற்றிலே மொருதாழ் வுண்டு. (கக௬0)

பைங்கிளி யானு னண்பன் பண்பினு லறிய மாட்டா
னிங்குநீ நிற்க மேலா லினிதென நிறுத்தி யின்று
செங்கதி ருதயந் தன்னிற் சென்றுசா பாலி சொல்லா
லங்குணர் வுடைய னானு னவனைநீ யங்கே கண்டு. (௨கக௬க)

ஆசிநா முரைத்தே மென்று மல்லல்போ மளவு மிந்த
மாசில்சா பாலி தன்பால் வைகவு முரைத்தே மென்று
நேசமா தாவு மிந்த நீதியே யுரைத்துத் துன்ப
வூசலா லலைந்தா ளென்று முச்சியை மோந்தா ளென்றும். (கக௬௨)

கூறென வுரைத்தா னென்றுங் கூறிய குறித்து மெய்யிற்
பாறிய சிந்தை நீவிப் பரிதபிப் பவனை நோக்கி
வேறிதற் கேது சொல்வேன் வெம்பரி யாகி மெய்யி
லூறுபட் டலைந்தா யிந்த வொருவனு லன்றோ வென்றேன். (கக௬௩)

என்றிவை பலவுங் கூறி யெழிற்கபிஞ் சலனு நானு
மன்றரு ளுடனு ரீத னமைத்தபோ சனம ருந்தி
யொன்றியங் கிருந்த போதி லுனக்குப தேசஞ் சொன்னே
னன்றிதிங் கிருநீ யென்று நற்றவ னங்கே சென்றான். (கக௬௪)

ஆரிதன் வளர்க்க வங்கே வாயினே னைந பின்பு
தாரணி சந்த்ரா பீடன் றன்பிறப் பறியு முன்னே
சீரிய சுவேதை தன்பாற் செல்வதே நினைந்து செய்யுங்
காரிய மெனவி ரைந்தேன் கருத்தினால் வடக்கு நோக்கி. (கக௬௫)

முன்புநாட் பயின்ற தில்லை யாதலான் முரண ழிந்து
பின்பொரு நாவல் வீழ்ந்து பீடையுற் றிளைத்தி ருந்து
நன்பனி யோடை தன்னி னவமலர்த் தேனு கர்ந்து
மென்பனி வாரி யுண்டு விரைப்பது மக்காய் கோதி. (கக௬௬)

ஆறிவிட் டகன்றோர் காவி லந்தியில் வைகு மெல்லை
வேறுபட் டிருக்கு நெஞ்சம் வெங்கனல் போலுங் கண்ணு
மூறுபட் டிருக்கு மெய்யு முடையவ னொருவன் கையிற்
பேறுபட் டிருந்து நன்றி பெறவெனை விடுக வென்றேன். (கக௬௭)

என்னினைத் தென்னை யிங்குக் கைப்படுத் தினைநீ யென்ன
வுன்னையான் றுய்ப்ப தற்கு மொருவிலைப் பொருட்டு மல்ல
மன்னுயிர்க் கிடரு மில்லை வாடுத லொழிநீ யென்றான்
பின்னையங் கென்னைக் கொண்டு பெறுவதென் சொல்லா யென்ன. ()

ஞானமுந் தெளிந்த சொல்லு நல்லதோர் கிளிக்குண் டென்று
மோனிக ளிடத்திற் கண்ட முறைமையைக் கண்டோர் சொல்ல
யானது காண வேண்டு மென்றுநம் மிறைவன் கன்னி
தானிது மொழிந்து நின்றோர் தம்மையங் கேற விட்டாள். (௧௧௬௯)

அத்திர ளங்கே சென்ற தத்திர ளுடனே செல்லா
தித்திகழ் வனத்தில் வந்தே னென்கையா லாகப் பெற்றேன்
றத்தைநா னுனைவிட் டேகத் தகாதினித் தைய ரூனே
யத்தொழிற் குரிய னென்று னவனது சொல்லக் கேட்டு. (௧௧௭0)

வானவ ரவுணர் வந்து வணங்கவீற் றிருக்குங் கஞ்சத்
தூநகை யீன்று ளந்தச் சுவேதகே துத்தான் றந்தை
யானபுண் டரிக னனங் கமரலோ கத்தை விட்டிங்
கினர்தம் பதியின் மேவி யிருக்கவும் விதித்த தென்று. (௧௧௭௧)

அன்னையை யையன் றன்னை யருட்கபிஞ் சலனை நோக்கி
யின்னம்வந் தருளா தென்று னிதுநல்ல வார்த்தை யென்று
முன்னைவல் வினையை நொந்து மூர்க்கனை விடுநீ யென்னைப்
பின்னையிங் கெவர்தாங் கண்டா ரென்றிவை பேசக் கேட்டு. (௧௧௭௨)

பேதைநீ யறிவ தென்னை பேசுவ தைவர் கண்டா
ராதலா லுன்னைக் கண்டுங் கண்டிலே னென்றுற் பொய்யா
மேதுநான் செய்வ தென்றான் யான்முனி குமார னென்றி
லாதர வுடையே னென்றே னதற்குமங் கருளி லாமல். (௧௧௭௩)

வலைதனை வளைந்து மானை மரையைமற் றுள்ள மாவை
நிலையறத் துரத்து வாரு நெடுங்கணை திருத்து வாருஞ்
சிலைகுனித் தோடு வாருஞ் சிதறுஞா ளியைய ழைத்துக்
கொலைசெயத் தொடங்கு வாருங் கூவிளிக் கொள்ளு வாரும். (௧௧௭௪)

ஆனவெஞ் சுரத்தை யுங்கண் டஞ்சவப் பால்வ தைத்த
வூனினைச் சுடுவார் துய்ப்பா ருருவழி யாமல் வைப்பா
ரேனைய கொண்டு போவா ரிடங்களுங் காணக் கண்டு
போனசண் டாள னந்தப் புலையர்தஞ் சேரி புக்கு. (௧௧௭௫)

தன்னைமுன் னேவி விட்ட தையறன் றுள்வ ணங்கி
மன்னிய தவத்தால் வந்து வாய்த்ததொன் றெளிய தல்ல
வன்னமே பேணத் தக்க வரும்பொரு ளென்னக் கேட்டுக்
கன்னிதன் கையில் வாங்கிக் கருதியென் முகத்தை நோக்கி. (௧௧௭௬)

வந்தனை மகனே நன்றுன் மனக்கருத் தொழிப்ப லென்று
கந்தவன் பச்சை வாராற் கட்டிய கூட்ட டைத்துச்
சிந்தனை செய்யன் முன்போற் சிந்தனை செய்ய லென்று
தந்தன ளொருசொற் றைய றனியிருந் தென்னை நோக்கி. (ககஎஎ)

புலைத்திரண் மதுவை யுண்டு புலாலவை யருந்தி யாக
மலைத்துடன் விழுந்தெ ழுந்தங் கதிர்பறை யறைய வாடிக்
கலைத்தலைப் பற்றித் தம்மிற் கதத்தின்மேல் விழவுங் கண்டு
தொலைத்தில னுயிரை யொன்று சொல்லவுந் துணிந்தே னில்லை. ()

விண்ணிலும் பிறந்து மேலாய் மெய்த்தவன் குமார னாகி
மண்ணிலும் பிறந்து பின்னை வனத்தொரு கிளியு மாகித்
தண்ணிய சாதி நீண்டித் தகைந்தவார்க் கூட்ட டைக்க
வெண்ணிலா வினையே செய்தே மென்றிவை யிவைநி னைந்து.(ககஎகூ)

பிறத்தலி னில்லை வேறு பிழையென வுயிரை மாய்ப்ப
னறத்திற மல்ல வென்ப ராதலா னுயிரைக் காக்கப்
பறைத்திர டந்த காயும் பழமுமே நுகர்ந்து கோலிக்
கறப்பதுங் குடித்தி ருந்தேன் கலந்தகண் மாயம் போல. (ககஅ0)

ஆங்கவ ரிடத்துச் சின்னா ளமர்ந்தபி னொருநாட் கூடும்
பூங்கன கத்தி லாகப் பூமிபொன் னியல்பு மாகப்
பாங்குடை யவனீ கண்ட படியெழிற் பாவை யாகி
யீங்கெனைக் கொண்டு வந்தா ளீதொரு புதுமை கண்டேன். (ககஅக)

என்றுவை சம்பா யன்று னியம்பிய தெல்லாங் கேட்டுச்
சென்றுசண் டாள கன்னி சேர்விட மறிந்த ழைத்து
முன்றில்வா யெய்த நீபோய் மொழியென வாயி லோனை
யன்றுசூத் திரக னேவ வவனுட னவளும் வந்தாள். (ககஅஉ)

வந்தவ ளுள்ளே சென்று மன்னனை மதியா மற்றன்
முந்துதே சுவினு னேரே முகந்தனை நோக்கி வாராய்
சந்த்ரனே யண்ண லேகா தம்பரி தலைவ னேகே
ளிந்தநீ சந்த்ரா பீட னிவனொரு புண்ட ரீகன். (ககஅங)

இருவரு முற்ற துன்ப மிங்கள வில்லை யிந்த
வொருவனிப் பவத்துந் தந்தை யுரைதனை மறுத்துக் காத
றருதவச் சுவேதை தன்பாற் றுனியங் குதனி னைந்திப்
பரிபவப் பட்டா னிந்தப் பரிபவம் படுத்து மீட்க. (ககஅச)

தந்தையச் சுவேத கேது தானிவை யுணர்ந்து பார்த்தங்
கந்தநின் புதல்வ னின்னு மடக்கமற் றேகு கின்றான்
முந்தநீ சென்று சாப முடியுமவ் வளவுங் காக்க
வந்தமா நிலத்தி லேகென் றவன்விடை தரநான் வந்தேன். (ககஅரு)

இங்கிவன் மாதா யானே யெண்ணிய திருவும் யானே
யிங்கொரு பறைச்சி யாகி யிடும்பைசெய் வித்தேன் யானே
யிங்கினி யுங்கள் சாப விறுதிமே லுங்கட் கின்ப
மிங்கினிச் செய்வ தேயென் றியம்பியம் பரத்தி லானாள். (ககஅசு)

அப்பொழு தனங்க வேளு மன்றுசூத் திரக னாகந்
தப்புறு விலக்சா கக்கா தம்பரி யம்பாக் கொண்டு
கைப்படு கருப்பு வில்லின் கால்வளைத் தெய்ய மேன்மேல்
வெப்புள தாய்வ ருத்த விரும்பினர் பலருஞ் சூழ்ந்து. (ககஅஎ)

பரிதபித் தரம்பை யாலும் பங்கய வளையத் தாலுஞ்
சொரிமணி நீரி னாலுந் துகள்செய்கற் பூரத் தாலும்
விரிதருங் குவளை யாலும் விரைநறுங் குளிரி யாலு
மெரிதருங் காமத் தீயி லிழுதிடு வாரை யொத்தார். (ககஅஅ)

விரைவுறு காமத் தீயான் மெயில்வெயர் வருவ தெல்லா
முரைசெயிற் பசும ரந்தீ யுற்றுமிழ் நுரையே போலு
நிரையுறு காம பாண நெடுமுளை யறைந்தாற் போலக்
கரசர ணந்து டிக்கக் கண்டது தானு மில்லை. (ககஅகூ)

மெய்த்துடிப் படங்கக் கண்டு விழிப்புனல் சோர நின்றோர்
தத்தையாம் வைசம் பாயன் றன்னைநீ கெடுத்தா யென்று
ரத்தவச் சுவேதை தன்னா லாங்கவன் றனக்கு மன்னோ
வொத்ததா ருயிரு லந்த தோவிதி கொடிய தென்றார். (கககூ0)

அடங்கிய காமத் தீயா லவருடல் சுடுவ தாகத்
தொடங்கிய தன்மை யொக்கத் தோன்றிய தென்றற் கன்றான்
மடங்கிய வசோகு மாவும் வளரிளந் தளிரைக் காட்ட
முடங்கலர் குரவு காட்ட முகஞ்செயும் வசந்த காலம். (ககககூக)

வேறு.

இருநா ளிலத்தின் மடந்தையர்க்கு மிளையோர் தமக்கு மெழில்வசந்தம்
வருநா ளின்ப மதன்விளைக்க வரம்பு கடந்த பயிராகித்
திருநா ளிதுவென் றனங்கனுக்குச் சிறந்த செம்பொன் முடிசூட்டத்
தருநா ளொருகா தம்பரிதான் சந்த்ரா பீடன் றனையணைந்து. (ககககூஉ)

மாலைப் பொழுதி லச்சோத மதுர சலத்தான் முழுகுவித்துக்
கோலப் போது தனைச்சூட்டிக் குலவும் புழுகு சந்தணிந்தங்
காலக் கோல விழியாளு மவ்வா றாகி யடன்மதனுக்
கேலப் பூசை செய்ததற்பி னெங்கு நோக்கி யிடம்பார்த்து. (ககககூ௩)

நின்று நின்றோ ரடியிட்டு நினைந்தங் குயிர்த்துப் புளகம்வரச்
சென்று சென்று மனநடுங்கித் திகைக்கக் கண்டு சிலைக்காமன்
வென்றி கொண்ட சரந்தள்ளி விடவங் கவன்மேல் வீழ்ந்தவன்றன்
மன்ற லொன்று மலர்மார்பம் வெளவத் தரியா துயிர்வந்து. (கககூச)

மனத்துட் புகுந்தங் கவயவங்கண் மருவிப் பரந்து வரக்கரத்தாற்
றனத்தைத் தழுவ மிகவிம்மித் தனமா மமுத சலங்களெல்லாங்
கனத்துப் பணைத்து வரத்தெளியக் கண்டே யவர்கண் மலர்ந்திழைத்த
தினத்திற் பொலிந்த குமுதினியுஞ் செழுமா மதியு மெனச்சிறந்தார். ()

அப்போ தவடன் மடநாண மச்சந் தோன்ற வவைகண்டிங்
கிப்போ தஞ்ச லுன்னாலே யென்னா ருயிர்பெற் றெழில்பெற்றே
னப்போ திதுநந் தனுநின்கை யமுதா லாகு மென்றேன்யா
னிப்போ திதனிற் பழுதுண்டோ வுன்னு லலைந்தே னிருபிறப்பும்.(கககூரு)

இதுவென் சாப விடையெனக்கின் றிந்த வுடம்பி லுன்பொருட்டால்
விதுவின் புவன மெனதிந்த வெல்லை நிலமு மெனதாகு
முதுவெஞ் சாப மகச்சுவேதை முனிவன் றனக்கு முடிந்ததெனு
மதுவுஞ் சந்த்ரா பீடனவ னுன சந்த்ர னுரைப்பளவில். (கககூஎ)

மதியின் புவனந் தனினின்று வருத லாலம் மதிக்காந்தி
பொதியுங் குளிர்மெய்ப் புண்டரிகன் புனித நண்பன் கைப்பற்றி
விதுவிண் மிசையே வருகின்றா னெனமாச் சுவேதை தனக்கின்ப
முதிரும் படிகா தம்பரிபோய் மொழிந்தா ளவனு மிழிந்தானே. (கககூஅ)

வந்த புண்ட ரிகன்றன்னை வயங்குஞ் சந்த்ரா பீடனணிச்
சந்து மெழுகு தடந்தோளு மார்பு மிறுகத் தழுவிக்கொண்
டிந்த நீயென் னொருமருக னிதுதா னிற்க வப்பிறப்பு
மந்த வாய்ந்த வுயிர்ப்பாங்க னதுவே யாக வெனக்கென்றான். (கககூகூ)

அங்கே பணிந்த மடமாத ரனகன் சந்த்ரா பீடனைப்பார்த்
தெங்கே பத்ர லேகையென விவரை நோக்கி யவனகைத்தென்
பங்கே யான வுரோகிணிதன் பரிவா லென்னை நீங்காம
லிங்கே வந்து பிறந்தனளென் றிவ்வா றவனு முரைத்ததற்பின். (க௨00)

அன்னப் பெயரான் சித்ரரத னவர்வாழ் பதிக்குக் கேயூரன்
முன்னர்ச் சென்றான் மாராய மொழியச் சென்று மதலேகை
மன்னர்க் கிறைவன் றந்தையிட மறவி தனைக்காய் மந்திரத்தை
யுன்னிச் செபிக்கச் சோபனமே யுங்கட் குய்ந்தான் யுவராசன். (க௨0க)

அப்போ திறைவ னுவிபெற வமலன் வைசம் பாயனனு
மப்போ தங்கு வரக்கண்டே னென்னக் கேட்டங் கனைவோரு
மப்போ துவகை யுடனேதம் மாகந் துள்ளப் புளகமெழ
வப்போ தவர்க ளுறத்தழுவி யவளைத் தழுவி வருமளவில். (க௨0௨)

தாரா பீடன் றிரைந்துமிகத் தளர்ந்த கையாற் கலைசுற்றிக்
காரார் வண்மைச் சுகநாதன் கழுத்தைக் கட்டி யாடிவர
வாரா கரம்போன் மலிதானை மன்னர் மகிழ்ச்சி யுடனார்ப்பச்
சீரார் தந்தை தாளிணையைச் சேர்ந்தான் சந்த்ரா பீடன்போய். (கஉ0ங)

நீதா னெந்த நிலனுக்கு நெடுவா னுக்கு மெவ்வுயிர்க்கு
மீதா கின்ற கடவுளிது வேண்டா வென்ன வணங்கினையே
நாதா வுனைநான் பணிகின்றே னென்று பணிந்தா னரபாலன்
மாதா வுச்சி தனைமோந்து வணங்க விடாம லுறவணைத்தாள். (கஉ0ச)

அரிய காதம் பரியாலு மையன் மேனி தன்னாலு
முரிய வானின் மொழியாலு முயிர்கொண் டிருந்தே முமைக்கண்டேம்
பெரிய தவத்தா லிவையெல்லாம் பெற்றே மென்ன வவர்வாழ்த்துப்
புரிய வருள்சேர் சுகநாத னுடன்றே விவையும் போய்ப்பணிய. (கஉ0ரு)

விலக்க வவர்க ளவர்களுக்கு விழைந்த வைசம் பாயனிவன்
கலக்க மொழிக வெனமொழியக் கேட்டு முனிவன் கபிஞ்சலனும்
புலத்தை முனியு மாமுனிவன் புகன்றான் புதல்வ னுங்களுக்கித்
தலத்தில் வந்தா னுமைப்பார்க்க வென்று மிந்தத் தவச்செல்வம். (கஉ0சு)

தன்னை யிவனுக் கினிதளித்துச் சத்து வத்தைப் பெறத்துணிந்தே
மின்ன மொன்று மதியைப்போ லிவனுக் காயு வுண்டென்றுஞ்
சொன்ன படியே யான்மொழிந்தே னென்று சொல்லச் சுகநாதன்
மன்னு முனிவன் புண்டரிக னவனைத் தழுவி மனமகிழ்ந்து. (கஉ0எ)

வருக முனியெங் கபிஞ்சலனே வரதன் சுவேத கேதுவென்னெஞ்
சுருக விவ்வா றுரைத்ததெல்லா மொழிநாம் பெறுகைக் குணர்ந்தன்றோ
பெருக வென்றிப் பிறப்படைவு பேசித் தம்மிற் பெருமகிழ்ச்சி
மருவ விடிந்து வரவந்தார் மதிரை துணைவர் முதலானோர் (கஉ0அ)

வந்த வளவி லரிதாக வாய்த்த மருகர் தமைக்கண்டு
சிந்தை மகிழ்ந்து சுகநாதன் றாரா பீடன் சித்ரரத
னந்த விதுவின் மகளான கௌரி துணைவ னனைவோரு
முந்தி யிருந்து விசாரித்தார் முழுதும் விவாக மங்கலமே. (கஉ0கூ)

தாரா பீடன் றனைநோக்கித் தனியே சித்ர ரதன்றானும்
வாரா யரசே நம்பதியும் வண்மை யுடைத்தங் கதிற்சென்று
சீரார் விவாக மங்கலநாஞ் செய்யக் குறையே தெனவுரைக்கப்
பாரா யிந்தப் பதியிலுநம் பதிக்கே துயர்ச்சி யெனப்பகர்ந்து. (கஉக0)

இதுவே கயிலை மலைப்பக்க மிதுவே யரிய வச்சோத
மிதுவே யிறைவ னுறையுமிட மிதுவே சாப நீத்தவிட
மிதுவே செல்வம் பெற்றவிட மிதுவே யமையு மென்றுரைக்க
விதுவே யமையு மென்றுரைத்திங் கிதில்வே றில்லை யிடமென்று. (கஉகக)

உலகா சார மீதெங்கட் குள்ளப் பொருத்த மமையுமினிப்
பலகான் மொழிந்தென் னெனநிறுத்திப் பகருஞ் சித்ர ரதனஞ்ச
னலகார் பகழி நிகர்தடங்கண் மதிரை கௌரி முதலாகுங்
குலகார் வீணைக் கந்தருவக் குழாமு மற்றங் கணைவோரும். (கஉகஉ)

சொன்ன தாரா பீடனுடன் றணியுஞ் சுகநா தன்றானு
மன்னும் விலாச வதியுடனே மகிழ்ச்சி யெய்து மனோரமையு
மன்ன பலரு மன்னவரு மவர்க ளாண்ட பரிசனமு
மென்னு மிவர்க ளெல்லாரு மீண்டி விழாவுக் கெனநெருங்கி. (கஉகங)

எண்ணி முகுத்த மிதுநன்றென் றியம்ப விருவர்க் கிருவரையு
மண்ணி மிகவு மலங்கரித்து மணிப்பீ டத்தி லிருத்திமலர்க்
கண்ணி யணிந்து கைக்கொடுத்துக் கடவுட் சுடரை வலம்வரவும்
பண்ணி யிலங்கு மணவறையிற் பதிவித் தார்கள் பலர்வாழ்த்த. (கஉகச)

பதிவித் ததற்பின் படிமுழுதும் பண்டே தந்தோம் படியிதனை
மதிவித் தகனே யினிதாண்டு வாழ்க வென்று தழீஇக்கொண்டு
விதியிற் படியே யுறவாக விதித்த தெங்க டவமென்று
துதியிற் புகன்று காந்தருவத் தொகுதி யோரை மகிழ்வித்து. (கஉகரு)

வேந்தன் றாரா பீடனுமவ் விலாச வதியு மிவர்களுடன்
வாய்ந்த சுகநா தனுமவன்றன் மனம்போல் வாழு மனோரமையு
மேய்ந்த தவத்தி லினிதிருந்தா ரிதற்குப் பின்பு காந்தருவ
ராய்ந்த நிதியுந் தம்மகளிர்க் களித்துச் சென்றார் தம்பதிக்கு. (கஉகசு)

காதம் பரியுஞ் சுவேதையுந்தங் காதற் கடலைக் கரைகண்டே
கேதந் தீர்த்துச் செய்தவத்தா லின்ப நுகா வேழ்புவியோ
ரோதும் பெரிய வுச்சயினிப் படைவீ டெய்தி யொருகுடைக்கீழ்
வேதந் தருபுண் டரிகனுடன் சந்த்ரா பீடன் வீற்றிருந்து. (கஉகஎ)

சோமமுடியோன்பொருள்கொண்டுசுரர்க்காலயமுந்தொகுத்தெவர்க்குஞ்
சேம நிதியா மமரர்கோன் றேவ னருளுந் திறனுமெனத்
தாம முடியோன் றனபாலன் சந்த்ரா பீடன் றடங்கடல்சூழ்
பூமி முழுதும் பொதுநீங்கப் புரந்தான் கருணை புனைந்தானே. (கஉகஅ)

**காதம்பரி முற்றிற்று.**



ஸ்ரீ :

# காதம்பரி

## அரும்பதவுரை.

---

### காப்பு.

பொன்கொண்ட மேருப் பொருப்பிற்பொருட் கண்டு கொண்டு
மன்கொண்ட மாபா ரதமாகிய மற்றோர் வேத
முன்கண்ட வேத முனிசொல்ல முயன்று தீட்டுந்
தென்கொண்ட தார்வா ரணமென்பவர் தேசு மிக்கோர்.*

### பாயிரம்.

1. பொன்கொண்ட நேமி புயல் - அழகைத் தன்னிடத்தேகொண்ட திருவாழியாழ்வானையுடைய மேகம் போன்ற திருமால். புயல்-உவமவாகுபெயர். நேமி ஆயுத வரிசையிலும் ஆபரண வரிசையிலும் சேரும். இங்கே 'பொன்கொண்ட' என்ற விசேடணத்தால் ஆபரண வரிசையில் கருத்து என்று தெரிகின்றது. மின்னலோடுகூடிய மேகமென்பார் 'நேமிப்புயல்' என்றாரென்க. மின்னலுக்கு நேமியைக் கூறுதலை 'பாழியந் தோளுடைப் பற்பநாபன் கையில்—ஆழிபோல் மின்னி' என்ற அருளிச்செயலாலு மறிக. கருணைமழை பொழிந்து உலகத்தை ரக்ஷிக்குமவனுகையால் புயல் என்றார். மேல் அந்தப் பாது காப்பும் விரோதிகள் நிரஸனத்தோடே கூடினதாயிருக்கும் என்ற கருத்துப்பட 'நேமிப்புயல்' எனக் கூறினார். இங்கே நேமி ஆயுதகோடியில் சேர்ந்தது. இனி, பொன்கொண்ட நேமி என்பதற்குப் பொன்னைத் தன்னிடத்தே கொண்ட வஸுந்தரை என்று பொருள்செய்து பூமிக்குப் புயலைப்போல இன்றியமையாதவன் என்றுரைத்தலும் அமையும். நேமிப் புயல் என்பதற்குப் பூமிப் பிராட்டிக்குத் தலைவனான புயல் என்றலு மொன்று. ஸ்ரீதேவியை மூற்கூறாது பூதேவியை முற்கூறுத லமையுமோ வெனின், "அரவாகிச் சுமத்தியா லயிலெயிற்றி னேந்துதியால்—ஒருவாயின் விழுங்குதியா லோரடியி னளித்தியால்—திருவான நிலமகளை யிஃதறிந்தாற் சீறாளோ—மருவாழுந் துழாயலங்கன் மணிமார்பின் வைகுவாள்." என்று தெய்வப்புலமைக் கம்பநாடர் ஸ்ரீதேவியைவிட பூதேவிபக்கல் அதிகமான பிரேமையுடையான் என்று கூறியிருத்தலால் அமையுமென்க. நேமி என்பதற்கு ஆஞ்ஞாசக்கரம் எனப் பொருள் கொண்டு அகில லோகத்தையும் அழகிய ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தி வெம்மையின்றி ஆள்கின்ற புயல்போன்ற சர்வேசுவரன் என்றலு மிழுக்காது. முடிவில் 'கோமான்' என்றதையுங் காண்க. பூ மகள் - லக்ஷ்மி. பூமகள் விரும்பிப் புல்லி வாழப்பெற்ற இனிமையைக் கொண்ட திருமார்பினையுடையவன் என்க. பூமகளைப் புல்லி வாழும் மார்பன் என்றக்கால் பொருள் சிறவாது. என்னை, திருமாலினது ஏற்றங் கூறவந்த இடமேயன்றித் திருமகளினது ஏற்றங் கூறவந்த விடமில்லை யாதலாலென்க. "இறையு மகல கில்லேனென்றலர்மேன் மங்கை யுறைமார்பா" என்று பெரியாரும், "பொருவரு மரகதப் பொலங்கொள் மால்வரை—வெருவுற விரிந்துயர் விலங்க லாகத்தைப்—பிரிவற நோற்றனளென்னிற் பின்னையத்—திருவினிற் றிருவுளார் யாவர்" என்று கவிச்சக்கரவர்த்தியாரும் கூறியிருத்தல் காண்க. புல்லல்-

* இச்செய்யுள் காதம்பரி எட்டுப்பிரதியின் முதலில் எழுதப்பட்டிருந்தது.

தழுவுதல். இன் கொண்ட-இனிமையைக் கொண்ட. மின் கொண்ட என்று உரைத்தலுமாம். மின்-ஒளி. மின்கொண்ட மார்பன்-என்பதற்கு மின்னல் போன்ற பூநூலையணிந்துள்ள திருமார்பன் என்றலுமொன்று. "விண்ணிழிந்த மின்போலு நூன்மார்பா" என்றார் பிறரும். எழுபார்-ஸப்தலோகம். எழுகின்றபார் என வினைத்தொகையாக்கி யுரைத்தலு மேற்கும். எழுதல்-உண்டாதல். சதுவேதம்-நான்கு வேதம். சதுமுகன் முதலான வேறுபெயரால் கூறாது சதுவேதன் என்று கூறியதால் பிரமனைச்சிருட்டித்தது மாத்திரமேயன்றி, சிருட்டி கர்த்தாவாகிய அப்பிரமனுக்கு உலகினையின்னவாறு சிருட்டிக்க என வேதத்தை அவனுக்கு அன்ன உருவாய் உபதேசித்தருளியவனும் அத்திருமாலேயாம் என்பது தோற்றுமாறு நன்கு உய்த்துணரத்தக்கது. முன் கண்ட முதல் என்றது 'முன் கண்ட நாபி முதல்' என்றதனால், அகில லோகங்களோடு பிரமனைச் சிருட்டித்தான இந்தக் காரியம் திருவுந்திக் கமலம் செய்ததித்தனையொழிய அம்முதல்வன் செய்ததன்றாம் என்பது பெறப்படுமாறு காண்க. மூவகை மூர்த்தி-மூன்று வகைப்பட்ட மூர்த்தி; சிருட்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்னும் மூன்று திறப்பட்ட தொழிலையுடைய மூர்த்தியென்க. நாபி முதல், மூவகை மூர்த்தியான முதலென்க. "முதலாவார் மூவரே அம்மூவ ருள்ளும்-முதலாவான் மூரிநீர் வண்ணன்" என்ற அருளிச்செயலையுங் காண்க. என்கண்ட கோமான்-எனது கண்கண்ட கோமான். கோமான்-அமரர்கள் அதிபதி. என்னைக் குளிர நோக்கியருளிய திருக்கண்களை யுடைய மஹான் என்றலுமாம். கோ-கண். மான்-மஹான். "சரணௌ" என்றிருக்கையாலே இருபாதம் என்றார். அநிஷ்ட நிவாரணத்தோடு இஷ்ட பிராப்திக்குக் காரணமான திருவடிகள் என்க. இறைஞ்சல்-மனமொழி மெய்களால் வணங்கல். புயல் போன்றவனும், மார்பினை யுடையவனும், முதல்வனுமாகிய கோமானது பாதங்களை இறைஞ்சலுற்றேன் என்க.

2. சிவமெனும் பொருளும் சத்தியொடு சேரின் எத்தொழிலும் வல்லதாம் என்னும் துணிபுபற்றிச் சத்தியொடு கூடிய சிவத்தைச் சிந்தைசெய்வாம் என்றார். சுடர்-அக்கினியும், சூரியனும். எல்-காந்தி. நிசியும் சசியும் என்று இருத்தற்பாலது செய்யுளேக்கிப் பிறழ்ந்துகிடந்தது. சசி-சந்திரன்; சசத்தையுடையான் என்பது பொருள்; சசம்-முயல். நிசி-இரவு. ஒன்றி-சேர்ந்து. பரசத்தி-பராசக்தி. சிவந்தனை என்றிருத்தல் நேர்.

3. தூய்ய-பரிசுத்தமான. தன்னை நவில்வாரது களங்கத்தை யகற்றிப் பரிசுத்தமாக்கி நன்மையைத் தருதலின் 'தூய்ய நல் நாமம்' என்றார். நாமம்-பெருமையுமாம். வாழும் என் நா-வாழுவதற்குக் காரணமான எனது நாக்கு. உளதாக-இருக்கவும். 'எனக்கரி தாய துண்டே' என்றிருந்த பாடம் பின் எழுதுவோரால் 'எனக்கரி தாய துண்டோ' என்று திருத்தப்பட்டிருக்கிறது. பொருள் ஒன்றே. ஆயினும், அரி தாயது உண்டே எனப் பிரித்து, திருமாலால் அளக்கப்பட்ட உலகம் எனது சுவாதீனத்தில் உண்டு என மற்றோர் பொருள் செய்தற்கும் அது இடந்தந்து நிற்றல் காண்க.

4. செம் கோல மேனிச் சிவனார்-செவ்விய அழகுபெற்ற திருமேனியை யுடைய சிவபெருமானார். கோல மேனி என்பதற்கு வராகத்தினது மருப்பினை யணிந்துள்ள திருமேனி யென்றலுமாம். கோலம்-வராகம். எங்கள் பங்கோன்-எங்களது பங்கிலுள்ளோன். முராரி-முரன் என்னும் அசுரனை வதைத்தோன், திருமால். மங்கலத்தை யளிப்போன், அல்லலை அறுப்போன் என்பார் முறையே 'சிவனார் மைந்தன்' என்றும் 'முராரி மருகன்' என்றும் கூறினார். கடம்பன்-கடப்பமாலையை யணிந்தோன், சுப்பிரமணியன். முன்னோன்-முற்பிறந்தோன்; தமையன். வேழம்-யானை. வினைவேர்-பாப மூலம். வேழமுகவன் என்றதனுக் கேற்பப் புண்ய பாபங்களாகிற பலத்தையுடைய மரத்தை வேரோடு அறுப்போன் என்றார். வேணுபுரம் என்கின்ற சீகாழியில் நந்தன வனம் வைத்த இந்திரன் விநாயகக் கடவுளருளால் வாழ்ந்ததுபோல இடர்தீர்ந்து வாழப்பெறுவார்கள் என்க. கதை விரிவு காந்தம் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

5. மஞ்சுண்ட-அழகுற்ற. மஞ்சு-அழகு. மேகம்போன்ற பசுமையைத் தன்னிடத்தே கொண்ட என்றலுமாம். இனி, நீல கண்டமாகையால் மேகத்தைவிழுங்கியது போற் காணப்படுகின்ற கண்டத்தை யுடைய அழகினைப்புற்ற மயில் என்னினுமமையும். மேகத்தை எதிர்ப்பட்டக்கால் அடையும் களிப்பினையுடைய கோலமயில் என்று கோடலும் ஏற்புடைத்து. அயில்-கூர்மை. துஞ்சுண்டு-துஞ்சுதலையடைந்து. துஞ்சுதல்-இறத்தல். மறலி-இயமன். தோற்றல்-இழத்தல். அதி நேயம்-அதிக நேசம்.

6. குறுமா முனி-அகஸ்தியர். பாண்டி நாட்டுள்ள பொதியின் மலையிலே நிலைத்து வாழ்தல்பற்றி 'மன்னுங் குறுமா முனி' என்றார். குறுமாமுனி வண்டமிழ் என்றது உபசாரம். "தழற்புரை சுடர்க்கடவுடந்ததமிழ் தந்தான்" என்பதனால் தமிழ் மொழிக்கு முதற்குரவர் சிவபெருமானார் தலுணர்க. தென்னன்-பாண்டியன். எதிர் சென்ற-எதிர்நோக்கிச் சென்ற. இயல் பால் எழில் சங்கம்-இயல் முதலாகிய பகுதியை யுடைய அழகுபெற்ற சங்கம். இயல் இசை நாடகம் என்ற பகுப்பினை யுடைய தாகலின் இயற்பாற்சங்கம் என்றார். பால்-பகுதி. "எழுல கும்புகழ்-முத்து முத்தமி ழுந்தந்து முற்றும்" திருநாடாகலாற் புகழும்பயில் நாடென்றார். பயிலும்-பொருந்தும்.

7. மந்தராசலம்-மந்தர மலை. தொடை-மாலை. தாமரைப் பாவை-தனலக்ஷ்மி. வீரவிந்தை-ஜயலக்ஷ்மி. கனகம்-பொன். கல் நகம் எனப்பிரித்துக் கன்மலையை யொத்த தோளினையுடையான் என்றலுமாம்.

8. கங்குல்-இரவு. வேறோர்-பகைவருமாம். நலிவு-வருத்தம். மலிபுகழ் நிறுத்திக் காத்து என்க. நாவலர்-நாவில் வல்லோர்; வித்வான்கள். உறுதி-பற்றுக்கோடு.

9. நாவலார் தீபம்-ஜம்பூ த்வீபம். பரவுதல்-புகழ்தல்.

10. தரும் தரு அனையான்-கேட்டவற்றைத் தருகின்ற கற்பக விருக்ஷத்தை யொத்தவன்.

11. நீதிப் பொருள்கட்கு இடமாகிய ஆதிவராக னென்போனுக்குப் பின்பிறந்தவன். ஆகரம்-இருப்பிடம். பொன்னி நாடு-காவிரி நாடு; சோழநாடு. ஒன்றினும் மயங்காமல் மறையினிடத்தே யாழ்ந்துள்ள அர்த்த விசேஷங்களை யாராய்ந்து இப்பூமியில் வாழ வந்தோன் என்க. ஓர்ந்தவன் வாழவந்தோன் என்றிருத்தல் நேர். வாழ வந்தோன்-வாழ வந்த பெருமாள்; இந்நூலாசிரியரின் பெயர். மருளா-ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். ஒன்றின் மருளா மறை என்று இயைத்து ஒன்றாகிய பரப்பிரமவஸ்து நிச்சயத்தில் மயக்கமில்லாத வேதம் என்றுரைத்தலுமாம். தெருள்-ஞானம்.

12. சொற்கடற்கு எல்லைக்கரை காணலாகிய எல்லையில்லாத காதம்பரிக் கடலை என்க. எனவே வாணன் வடசொற்கடற்கு எல்லைகண்டோன் என்பது போதரும். பேணல்-தரித்தல். பித்துக்கொண்டவர் கள்கூடச் சொல்லுதற்கும் அஞ்சுகின்ற காரியத்தை நான் செய்யவுந் துணிந்தேன்; இது நகையே யென்க. பித்தருஞ் சொல்லார் என்பதற்கு ஈசுவரன் கூடத் துணிந்து சொல்லமாட்டார் என்றலுமாம்.

13. சுகம்-கிளி. சாரிகை-நாகணவாய். அப்படிப்பட்ட தெளியாதனவாகிய என் வாயிடத்துண்டாகிய புன்சொற்களை யென்க. நாவலர் இகழார் என்றது 'நாவலரானவர்தாம் இகழார்' என்றதனால் ஆரம்பத்தில் என்னைப்போலப் பரிசிரமப் பட்டுப் பிறகு தேறிய நாவலர்களேதாம் என்னை இகழமாட்டார்கள்; மற்றையோர் நூற்பெருமையறியாது என்னை இகழ்வர் என்பது தோற்றுமாறு உய்த்துணரத் தக்கது.

14. பூசை-பூனை. வற்றோ-வல்லதோ. வேண்டுவ-வேண்டுவனவற்றை.

## காதம்பரி.

1. கனைகழல்-சப்திக்கின்ற வீரக்கழல். கழல்-வீரர்கள் தங்கள் வெற்றிக்கு அறிகுறியாகக் காலில் அணிவதோர் ஆபரண விசேடம். பொலன் கவிகை-பொன்னாலாகிய குடை. புண்டரீக மின்-லக்ஷ்மி. பணைந்தல்-பருத்தல். வெற்பு-மலை. தேன்-அழகு, தேனுமாம். தார்-மாலை. செய்ய கல்-மாணிக்கம். மௌலி-கிரீடம். அனவரதம்-எப்போதும்.

2. சங்கு சக்கரம்-சங்க சக்கர ரேகை. "சங்கு சங்காக் குறியுள தடக்கையில்" என்றார் பிறரும். காமன் புரிகின்ற வெவ்விய போரினது அச்சத்தைக் கைவிடுதலினால் அரணகி யென்க. காமனால் வெம்புகின்ற ஓர் அச்சத்தைக் கைவிடுதலினால் என்றலுமாம். அகிலதலம் படைத்தலாவது எல்லா லோகங்களையும் தன் ஆளுகைக்கு உட்படும்படி செய்தல். இதுவே முதனூற் கருத்துக்கு இயையும். படைத்தலென்பதற்கு ரக்ஷித்தல் என்று பொருளுரைத்தல் ஏலாது. நிச்சங்கன்-பற்றற்றவன். சங்கம்-பற்று. சத்தி-பராக்கிரமம். சத்தி-ஆயுதவிசேடம். மெய்ச்சு அங்க அறுமுகன்-யாவரும் மெச்சுகின்ற அங்க ஸௌந்தரியத்தை யுடைய அறுமுகன். மெய்ச்சல்-மெச்சல்.

3. ஆர்க்கும்-சப்திக்கும். மகராலயம்-கடல். புரவலர்-அரசர்கள். பிறந்தகம்-பிறப்பிடம். போர்க்கரிய வலியாலும் என்று ஒரு சீர் சேர்த்துப்படிக்க.

4. பாவகன்-அக்னி. தூய்மையான தொழிலை யுடைமையால் என அரசனுக்கும், தூய்மையாக்குந் தொழிலையுடைமையால் என அக்னிக்கும் ஒட்டுக. பிரதாபத்தால் வன்னியாய் என்பது முதனூலின் பாடம். ஆதவன்-சூரியன். திறல்கொடும் சமன்-வலியையுடைய கொடிய யமன். தண் அளி-கிருபை. முகத்தினால் சசியாய் என்பது முதனூலின் பாடம். வேள்-மன்மதன். பாய-பரவிய. பீதகன்-குரு, பிருகஸ்பதி. பரவும்-துதிக்கும். பவனன்-வாயுபகவான்.

5. பண்ணுக்கு ஒப்பான இனிய சொல்லினையுடைய சரஸ்வதி என்க. பரிந்து-விரும்பி. அனவரதம்-எப்போதும்.

6. துங்கம்-உயர்வு. எழுடி யுயரமான யானை என்பார் 'துங்க நெடுங்களி யானை' என்றார். களி-செருக்கு. எத்தல்-துதித்தல். மதிக்குலத்து நீதிவேந்தர் என்க. நன்னீர் நதி என்று கூட்டுக. குவளை மலர் போலுங் கரிய விழியினையுடைய செங்கமலத் திரு வளர் மாளவதேசத்திலேயென்க. வேத்ரவதீ என்று முதனூலிற்கூறப்பட்டுள்ளது. அங்கும் வேத்ரவதீ நத்யா, வேத்ரவதீ ஸத்யா, வேத்ரவதீ ஸரிதா என்ற பாடங்கள் காணப்படுகின்றன.

7. முன்னையுகம் என்றது கிருதயுகத்தை. இடையாதாய்-பின் வாங்காததாய்.

8. ஆடகம்-பொன். இது நால்வகைப் பொன்னி லொன்று. கோபுர முதலியன வமைந்த வீதியை யுடைய அந்த நகரத்திலே இந்திரன்போலிருந்து என்க.

9. கட்டுண்டு-கட்டுப்பட்டு, யாப்புற்று. அடியுண்டு-அடிபட்டு; குறளடி, சிந்தடி, அளவடி முதலிய அடிகளை யுற்று. தளை உண்டு-விலங்கிடப்பட்டு; ஆசிரியத்தளை முதலாகிய பல தளைகளை யுற்று. படுவன-இறப்பன; உண்டாவன. பா-பாட்டு. மட்டு-கள்; தேன். மதுகரம்-வண்டு.

10. பங்கம்-குறைவு; சேறு. பழனம்-வயல். துடி-உடுக்கை. கோபம்-சினம்; இந்திரகோபம் என்கின்ற தம்பலப் பூச்சி. வெகுளி-சினம். மறந்து விடும்-மறந்து விடப்படும். மாசு-குற்றம்; சாம்பல். தாள் பூண்டு-பாதத்தை முடியில் தரித்து [வணங்கி]; தாளிலே அணியப்பட்டு. அறைந்து-முறையிட்டு; சப்தித்து. 'பரிபுரம்-பாதகிண்கிணி, சிலம்பு. "வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன-அஞ்சிலம்பே வாய்விட்டரற்றுவன-கஞ்சங்-கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே-விலங்குவன மெய்ந்நெறியை விட்டு." என்றதுங் காண்க.

11. வரம்பு-எல்லை. வருண மென்னுங் குரம்பு கடந்து ஓடாது என்னும் இது, முதனூலில் வர்ண சங்கர மென்பது சித்திரத்திலேயே யல்லாமல் மனுஷ்யர்களிடத்திலில்லை என்று சிலேடை வகையாகக் கூறப்பட்டுள்ளது. குரம்பு-கரை. பொருதல்-யுத்தஞ்செய்தல். தகுதி-ஒழுக்கம். இரும்பினும் வலியஞானகவசம்என்க. "கற்றனர் ஞான மின்றேற் காமத்தைக் கடக்க லாமோ" என்றார் கம்பரும்.

12. எப்படியும்-எல்லாவுலகமும். அஞ்சனம் படியப்பெற்ற அழகிய வேலைப் போலுங் கூரிய விழியால் என்க. "உயர் திணை யிடத்து விரிந்துந் தொக்கும்" என்றதனால் 'மடவார்ப்பெற்று' என வலி மிக்கது. அமைச்சர்-அமாத்தியர்; பக்கத்திருப்பவர்கள் என்பது பொருள். அவராவார் மந்திரிகள். உழையர் என்பதும் இப்பொருள் பற்றி வந்ததேயாம்.

13. சிந்தை எதும் இலனாய்-ஜயிக்கப்பட வேண்டிய ராஜ்ய விஷயமான ஆலோசனை எதுவும் இல்லாதவனாய். மரபு-குலம்.

14. பருவம்-வயது. பண்பு-குணம். ஒளி-புகழ். பயில்-சைகை. பேதிப்போர்-வெளியாக்குவோர். குரு-நிறம், பருமையுமாம். குழாம்-கூட்டம்.

15. பரி-குதிரை. சிரமம் செய்தல்-தேகப்பயிற்சி செய்தல். [Physical Exercise] வாரணம்-கோழி. வேழம்-யானை. வியலார்ந்த என்பதனை வாரணத் தோடும் வேழத்தோடுங் கூட்டுக. வியல்-காடு;பெருமையுமாம். புயலார்ந்த-நீர்பெருந்திய. இங்கே புயல் என்றது கங்கையை. புயலார்ந்தசடைமுடியார் என்றுகொண்டு ஜடா பாரத்தையுடைய முனி ஜனங்கள் என்று உரைத்தல் முதனூற் பாடத்துக்கு இயையும்.

16. அருக்கன்-சூரியன். சூரியகிரணம் சிறிது செந்நிற மாறிய அளவில் என்பார் 'அஞ்சாறு நாழிகையில்' என்றார். ரத்ன சாலம்-ரத்னபரண கிரண ஜாலம். சாலம்-கூட்டம். கோள்-கிரகம். தேசு-ஒளி. சுரரவை-தேவர்சபை. போன்ம்-போலும். சுரரவைபோல் பொருத்தமிகும் மண்டபத்தி லென்றலுமாம்.

17. வெண்கவரி-வெண்சாமரை. அன்னகுலபதி என்றது பிரமனை. திறப்பம். மாகதர்-துதி பாடுவோர். இருந்தேத்துவோர் என்பர் அடியார்க்குநல்லார். குழு-கூட்டம்.

18. தயங்கல்-ஒளிவீசுதல். இந்திரை கோன்-லக்ஷ்மீபதி, திருமால். பன்னகம்-

ஆதி சேஷன். விந்தை-வீரலக்ஷ்மி. திரு மங்கை-தனலக்ஷ்மி. புகழ்மங்கை-பிரதாப லக்ஷ்மி. கலைமங்கை-ஸரஸ்வதி.

19. இடத்துற - இடது பக்கத்திலே பொருந்த. செவ்வி-அழகு. வாயிலவள்-வாயில் காப்பவள்; பிரதீஹாரி. விடநின்று -மரியாதைக்காகச் சிறிது தூரம் விட்டு நின்று.

20. மகத்தவன்-இந்திரன். வெரீஇ-பயந்து. திண்புயமிருந்த திரு-வலிய தோளில் இருந்த ராஜலக்ஷ்மி. பறைமடந்தை -சண்டாள கன்னிகை. பஞ்சர சுகம்-கூட்டிலிருத்திய கிளி.

21. விழைகின்றனள்-இச்சிக்கின்றாள். அற என்பதனை விரைதலோடும் விழைதலோடும் கூட்டுக. குரிசில் - அரசன் துன்றிய-மிகுந்த.

22. பகிர்வதாக-பங்கிடுவதாக. மோக உருவம்-மோகினி உருவம். நடந்து வரு பாவை என்க. பாவை-பதுமை. புனைதல்-அழகாகச்செய்தல். துகில்-வஸ்திரம். மிசை மொய்ச்சி வரு சேய ஒளியால்-மேலே மொய்த்து வருகின்ற சிவந்த காந்தியால். கதிர் ரக்த வெயில்-சந்த்யாகாலத்துச் சூரியனது ரக்தநிறம் பொருந்திய வெயில். ரக்தவெயில் என்று திருத்திக் கொள்க. செந்நிறத்துகில், மணித்துகில் என்க. மணித்துகிலை உடுத்துச் செந்நிறத்துகிலை முட்டாக்கிட்டு வந்தாள் என்க. 'The dark dress with the red head-covering makes her look like a bed of lotuses on which the light of twilight is resting.' என்ற மொழி பெயர்ப்பும் காணத்தக்கது. கருநிறமுடைய இவள் செந்நிறத்துகிலை யுடுத்து வந்த தோற்றம் சந்தியாகாலத்துச் சூரியனது சிவந்த கிரணம்பட ஒளிர்கின்ற நீலமலர் நிறைந்த தடாகம்போல் இருந்தது என்று கொள்ளுதலிலும் குற்றமில்லை. இப்பொருள் கொள்ளு மிடத்து மணித்துகில் என்பதற்கு அழகிய துகில் என்று உரைசெய்க. நீல நிறம் பொருந்திய கஞ்சுகத்தை யணிந்துகொண்டிருந்ததாக மூதனூலிற் காணப்படுகின்றது.

23. குழைக்கு-காதில். "இந்நகர்க்கே வாழ்கின்றோம்" என்ற விடத்துப்போலக் 'கு' ஏழாம் வேற்றுமைப் பொருளுணர்த்தி நின்றது. "யாத னுருபிற் கூறிற் றாயினும் -பொருள்செய் மருங்கில் வேற்றுமை சாரும்" என்பது விதி. அமுத விம்பம்-சந்திர விம்பம். செறிந்து - அடர்ந்து. கங்குல் மயில்-ராத்திரியாகிற ஸ்திரீ. மயில் -ஆகுபெயர். சிந்துரம்-சிந்துரப் பொட்டு. கபிலநிறக் கோரோசனைப்பொட்டென்க. நுதற்கண்-நெற்றியிடத்தில். இலகுதல்-விளங்குதல். கவின்-அழகு. தண்மை-தாழ்வு. வேடு உருவு கொண்ட-வேட்டு வச்சியின் உருவத்தைக் கொண்ட. முக்கண் இறை தையல்-திரி நேத்திரனை சிவபெருமானது பத்னியாகிய பார்வதீ தேவி, பவானி.

24. பாங்கி - தோழி. மோகம் - ஆசை. கங்கைநீர் வெண்ணிறமுடையது. யமுனைநீர் கருநிறமுடையது. பஞ்சி-செம்பஞ்சு. மயிடன்-மகிஷாசுரன். கன்னி-துர்க்கை.

26. மணித்தறை-மணிகுட்டிமம். திதம் பட-ஸ்திதம்பட. செயலை-அசோகமரம். தளிரை முறித்துப் போகட அதன்மேல் நடந்தாற்போன்றவிருப்பத்தோடுநடந்து வருவாள் என்க.

27. அற-மிகுதியாக. தண்ணிய குலம்-தாழ்ந்த ஜாதி. அன்ன துவசன்-அன்னக் கொடியையுடைய பிரமன். 'பிரமன் இவள் தண்ணிய குலத்தின ளென்று கையால் தொடாமல் மனத்தால் சிருஷ்டித்த ஒரு கோலம்' என்று அதிசயப்பட்டவனது பொன் அடியை யென்க.

28. போற்றி-ஆதரித்து. வெற்பு-மலை. கற்பம்-கற்பகாலம்.

29. நாற்கவி-ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்பன.

30. திக்காமல்-தடுமாறாமல். மிக்காய்-மேலானவனே; விளி.

31. மன்பதை - மக்கட்பரப்பு. 'அன்புறவே கொள்' என்று திருத்துக.

32. சாடு-இருபொருள் பயக்கும் கவி அல்லது சொல்.

33. பொறை-பொறுமை. இறை-தங்குமிடம். அனலம்-நெருப்பு. நறைப்புகை-வாசனையையுடைய புகை. நறைப்புகையையும், ஆரத்தையுந் துறந்து என்றும், கும்மணப்புகையோடுகூடிய ஆகாரத்தைத் துறந்து என்றுங் கூட்டுக. சீர் ஆகு ஆரம்-சீர்மையை யுடைத்தாகிய முத்தமாலை. சீர் ஆகாரம்-சீரினையுடைய போஜனம். நீத்து-விட்டு.

34. இச்செய்யுளின் கருத்து முதனூலிற் காணப்படவில்லை. புரிசை-மதில்.

35. அளி-அன்பு. ஹர்ஷத்தோடுகூடிய தெளிந்த மதியினையுடைய பிரதான மந்திரியாகிய குமார பாலிதனை நோக்கி என்க.

36. சதிர்-சாமர்த்தியம்.

37. உடைய-உடையன. எரி-அக்னி. பூவை-சாரிகை, நாகணவாய்ப்புள்.

38. வேலை-சமயம். சோதிமன்னவன்-சூரியன்.

39. தொடி-அங்கதம், தோள்வளை. கடி-வாசனை. அலங்கல்-மாலை. அரவம்-சப்தம்.

40. தாளின் பரிபுரத்து ஓசை என்க. கோவை மேகலை-ஏழுவடமாகக் கோக்கப்பட்ட மேகலை. "எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை" என்னும் வெண்பாவால், மேகலை ஏழுவடமுடைத்தென்பது காண்க. எட்டுவடமுடையது என்றலுமுண்டு. இம்பர்-இவ்வுலகத்தவர்.

41. கிள்ளை-கிளி. தணிந்து - சிரமம் தணிந்து, இளைப்பாறி.

42. கதிரடங்கு இரவி-கிரணங்கள் அடங்கிய சூரியன். சிரமக் கூடம்-வ்யாயாம பூமி, தேகப்பயிற்சி செய்யுமிடம்.

43. ஓதிமம்-அன்னம்.

44. மான-ஒப்ப.

46. கடுக்கி-நெருக்கி. கனம்-பொன். வளைகுழை-வளைந்த குழை. வேரி-வாசனை. மைவளை - மேகத்தைத்தன்னிடத்தேவளைக்கின்ற.

47. விரை நெல்லி-சுகந்த ஆமலகம். அமர்ந்து-விரும்பி. அமர்ந்திருத்தல் ஒரு சொல்லுமாம்.

48. பாம்புரி - பாம்புச் சட்டை; லேசுக்கும் வெண்மைக்கு முவமை. புராரி-பசுபதி, திரிபுரத்தை யழித்தோனாகிய சிவபெருமான்.

49. அங்ககாரியம்-அங்கிகாரியம் என்று திருத்திக்கொள்க. அங்கிகாரியம் - அக்னிகாரியம். அங்கராகம்-பூசும் பரிமளம். தொங்கல்-மாலை. தூசு-வஸ்திரம். கொங்கு-வாசனை. தூப வர்த்தி-முக வாசத்தின் பொருட்டுக் கொள்ளப்படும் பரிமள வஸ்து விசேஷம். 'பரிபீத தூப வர்த்தி' என்பது முதனூலின் வாக்கியம். பரிபீதம் என்பதற்குக் குடித்தல் என்பது நேரே முதலெடுப்பில் தோற்றுகின்ற பொருளாகையாலே 'தூபவர்த்தி' என்பதற்குப் புகைச்சுருட்டு என்று பொருள் கொள்ளவும் இடமுண்டு. ஹூக்கா [Hookah] என்றலுமாம்.

50. ஆரம்-சந்தனம்.

51. வேதிகை-மேடை. கொட்டை-வட்டமான அணை. வருட-பிடிக்க.

52. விடலை-ஆண்மகன். அரசன்.

53. கோகிலம்-குயில். அரிமா-சிங்கம். மா-யானை. மாமா என்று கொண்டு பெரிய மிருகமாகிய யானை யென்றலுமாம். ரக்தத்தோடுகூடிய முத்தினை யொத்த மாதுளையின் வித்து என்க. வித்து-விதை. சிறந்த யானையின் மஸ்தகத்தில் முத்துண்டென்பது பிரமாணம். பின்றிய முத்து என்ற பாடமும் கொள்க.

54. கீழ்காய்நெல்லி-கீழாநெல்லிக்காய்; பிராசீன ஆமலகபலம். கொண்ட-கொண்டன. திருத்தி-சீர்செய்து.

56. தாதை-தந்தை. மேலை வாதனை-ஜன்மாந்தர அனுஸ்மரணம். வாதனை-வாஸனை.

57. என் போதும்-எவ்வளவு ஆகி யிருக்கும். பார்த்திபன்-அரசன்.

58. பரவை - சமுத்திரம். ஆதரம்-பிரியம். இரதம்-இரஸம்; மதுரம்.

59. உவரி - சமுத்திரம். நில வனிதை-பூமி தேவி.

61. மிடைந்து-நெருங்கி. புனல்-சலம். உடு-நக்ஷத்திரம். தாரகாகணம்-நக்ஷத்திரக் கூட்டம். நிறைதரு காயிலே கலந்து-கனியற மலர்ந்து என்ற பாடமுங் கொள்க. குழல்-இடம்.

62. மாதவி-குருக்கத்தி. தளவு-முல்லை. மாலதி-சிறுசண்பகம். நாக வல்லி-வெற்றிலைக்கொடி. கறி-மிளகு. சீதள லதைகள்-குளிர்ச்சியையுடைய கொடிகள். பாதபம்-விருக்ஷம். மாருதம்-காற்று.

63. இயங்கினர்-வழிப்போவார். பல்லவசயனம் - தளிர்ப்படுக்கை. பிரசம் - தேன். துகள்-மகரந்தம். வியம்-பெருமை.

64. அரிகள் படுக்கின்ற யானைகள் என்க. சிங்கங்களின் நகவரிசையில் அழுந்திக்கிடக்கின்ற அவ்யானையின் சிரேஷ்டமான முத்தின் விலையை ஆசைப்பட்ட கானவர்களால் கொல்லப்பட்ட சிங்கத்தின் குரலும் என்க. முக்தாபலம் என்றுள்ள முதனூல் வாக்கியத்தை 'தரளவிலை' என்று மொழிபெயர்த்திட்டார்போலும். தரளத்தை வேண்டாது தரளத்தை மாற்றி அதனால் வேறு சில பிரயோசனத்தை வேண்டுவராகையால் 'தரள விலையை இச்சித்தகானவர்' என்றார். வெருவி-பயந்து.

65. தானவர் - இராக்கதர். விந்தாடவி-விந்த்யாடவி; அடவி-காடு.

66. ராகவன் தானுந்தேவியுமாக இருந்தருள் பஞ்சவடி யென்க. துயில்-தூக்கம். மாகர்-வானிலுள்ளோர். விஞ்சிய-மிகுந்த. கோதாவரி என்று திருத்திக்கொள்க.

67. திருமகன் - திருடதஸ்யூ; இத்மவாஹன் என்பது இரண்டாவது பெயர். செற்றம்-தீர்க்ககோபம்; பகைமை நெடுங்காலம் நிகழ்வது என்பர் நச்சினார்க்கினியர்.

68. அகந்தை-செருக்கு. செங்கமலாலயன் - பிரமன். கைவகுத்தல் - சிருட்டித்தல்.

69. வற்கலை-மரவுரி. துவர்-செவ்விய சாயம். எயினமங்கையர்-வேட்டுவமகளிர். வெளிறி-வெளுத்து. இபம்-யானை. புனி

தம் - பரிசுத்தம். பனிய - குளிர்ச்சியை யுடைய.

70. முரண்-வலிமை. கக குலம்-பக்ஷிக் கூட்டம். முழக்கு, அரவம், ஒலி, இரியல், தொனி-சப்தம்.

71. கேதகை-தாழை. சுண்ணம்-மகரந்தப்பொடி. ஏர்-அழகு.

72. பதனம்-ஆலவாலம், பாத்தி. தோய்ந்த என்றிருத்தல் நேர். உரமாக-வலிமையுண்டாக. தகட்டு இரும்பு-இருப்புத் தகடு.

73. மிடைய-நெருங்க. செரித்தகாலம்-ஜரைமுதிர்ந்த விருத்தாப்பிய காலம். மறு-கறுப்புப் புள்ளி. மிக்க வயது சென்ற சரீரத்தில் கறுப்புப் புள்ளிகள் விழுதல் பிரசித்தம். முண்மறைந்து என்ற பாடமுங்கொள்க. எம்பெருமான்-சந்திர சேகரன். நிருத்தம்-தாண்டவம். பணே-கிளே. அசைய என்று திருத்திக்கொள்க.

74. என்னெனும்படி - எப்படிப்பட்டதென்று பார்க்கவெண்ணிய தென்னும்படி. இழிதற்கு-இறங்குதற்கு. புரவி-குதிரை.

75. பரவை - சமுத்திரம். முகந்து - மொண்டு. மேக சாலம் - மேகக்கூட்டம். தீவிய-திவ்விய. திருவைத்தாவிய என்று திருத்திக்கொள்க. சான்மலித்தாரு-முள்ளிலவமாம்.

76. ஈடு படாதது-காப்புக் குலேயாதது. ஈடு-பாதுகாப்பு. படாதது-அழியாதது. பிறரால்நாசத்தையுடையாதது என்றபடி. போக்கடிக்கப்பட்ட விநாச பயத்தோடு என்பது முதனூற்பாடத்தின் கருத்து. குடம்பை-கூடு.

77. கதிர்-நெற்கதிர் முதலியன. கனி-பழங்களின் ரஸம். வைகும் - தங்கும். பார்ப்பு-குஞ்சு "பார்ப்பும் பறழும் பறப்பவற் றிளமை" என்பதுதொல். சூத்திரம். பொதும்பு - பொந்து. சாலவும் - மிகவும். மேலேயின் வினையால்-பூர்வ ஜன்ம கர்ம வசத்தால்.

78. அளிசெயல் - வளர்த்தல். மிகுதியாகவுள்ள அல்ப சிறையை யுடையனும் எந்தை என்க.

79. அரிக்குரல்-நெற்கதிர். எஞ்சியது-சேஷமானது. நுகரும்-சாப்பிடும்.

80. என்னேயிப்படியே என்ற பாடமுங்காண்க. திளேத்தல்-இடைவிடாது பழகல். அல் நிறம்-கருநிறம். அல்-இருட்டு. ககன நதி-ஆகாச கங்கை. நதியினின்று-நதியின் புளினத்தினின்று. அமுத கதிரவன்-சந்திரன். வாரிதியினில் - சமுத்திரத்தில்.

81. கிரணக்கற்றை - கிரணத்தொகுதி. பற்பராகம்-பத்மராகம். சலாகை-அலகு. அகவ-ஆட.

82. முழை - குகை. கேசரி - சிங்கம். மூரிபோய் - சோம்பல் முறித்து. பிடி - பெண் யானே. விழைவு-காதல். வேர்-வியர்வை நீர். விடாய்-சிரமம். மாற்றி-பரிகரித்து. கால்-காற்று.

83. உலவும் வேலேயில் - சஞ்சரிக்கும் காலத்தில். ஆர்த்து-சப்தித்து. பொழில்-சோலே. விசும்பு-ஆகாசம். பரந்து-பரவி. பறந்து என்ற பாடங் கொள்ளுதலுமாம். தாதை-பிதா.

84. கோடரம்-பொந்து. ஏனம்-பன்றி. புளிஞர்-வேடர். வெங்கணர்-தறுகண்மையை யுடையோர். ஆர்ப்பரவம் - ஆரவாரம்.

85. குஞ்சித்தல்-குந்தி நிற்றல். எஞ்சினேம்-ஒழிந்தோம். பூசல்-பெரிதொலித்தல்.

86. மண்டுதல்-நெருங்கல்.

87. பலவா-பலபிரகாரமாக. சிலே-வில். வாளி-அம்பு. முகந்து என்பதை மோந்து என்று திருத்திக்கொள்க. முகத்துமிழ்ந்து என்ற பாடங் கொள்ளவும் இடமுண்டு.

88. கணே-அம்பு. ம்ருகத்திரள் என்று திருத்திக்கொள்க. பறிய-நீங்க. மறுகிவிட்டது-புரண்டுவிட்டது.

89. உந்தி உந்தி-சிறிது வெளிப்பட்டுத் தலேயை நீட்டி நீட்டிப்பார்த்து.

90. கப்புவிட்டு-கவர்விட்டு;பிளவுபட்டு. மீளி - பராக்கிரமம். ஆளியூர்தி - துர்க்கை. கோள் என்றது இங்கே தூமகேதுவை.

91. குன்றி-குன்றிமணி.

92. அம்சாவதாரமோ என்பார், 'நேர் கொண்டு உலவிய வடிவோ' என்றூர். நேர்கொண்டு-நேரப்பெற்று. தேயம்-உடல்; தேயமுமாம். கலிகாலத்தின் ஸாரமோ, கலிகாலத்தின் ஸஹரதியோ என்ற இரண்டு பாடங்கள் முதனூலிற் காணப்படுகின்றன. திண் காயம்-வலிய சரீரம். பாவத்தின் சகோதரமோ என்பது முதனூலின் பாடம். மாயம்-மோகம்.

93. உண்ணுங் குருதியை - உண்ணப்படும் மானினது இரத்தத்தை. இடை-அந்தராளம். சீயம்-சிங்கம். உளே-பிடரி. நால-தொங்க. குருளே-குட்டி. வண்ணம்-நிறம். ஞாளிகள்-நாய்கள்.

94. நர பலி-நர மாம்சத்தைப் பலி கொடுத்தல். தசை-மாம்சம். இகழ்ச்சி-ஸாது ஜனங்களால் நிந்திக்கப்படுதல். ஓரி-நரி. கேள்விகள்-சாஸ்திரங்கள்.

95. புளினர்-வேடர். சிவணல்-ஒத்தல்.

96. புனல்-நீர். துலக்கிய-சுத்திசெய்த. பாசடை-பசிய இலே. தாமரை வளையம்-தாமரைத்தண்டு. சேறற மண்ணி-சேறு போகக் கழுவி. விடாய்-இளைப்பு.

97. செந்தாமரையினது வெள்ளிய வளையங்களை யென்க. மதம்-வலி. அவருழை-அவரிடத்து.

98. நசையால்-விருப்பத்தால். நீளப் பார்த்தான், நின்றவன் எனப் பிரிக்க.

99. முகை-மொட்டு. சலசம்-தாமரை. கருள் இலே-கருமை பொருந்திய இலே. முளையா இளையன, இளையன சலசக் கருளிலே என இளையன என்பதனை இரண்டிடத்தும் கூட்டிக் கொள்க. எரும்-அழகுறும். துண்டம்-மூக்கு. இராகம்-செம்மை.

100. கடுகிட-சீக்கிரமாக. மென்னைத் திருகி-கழுத்தைத் திருகி. அறிவு தியங்கி-அறிவு கலங்கி.

101. பாவியை-பாவி யாகிய என்னை. உய்விக்கும்படி எது என்று-பிழைப்பிக்கும் பிரகாரம் யாது என்று. நீர்மை-தயை, ஒப்புரவு. வறள்-வறண்ட.

102. கோடுகள்-கிளைகள். உலவி-சஞ்சரித்து. வைப்பு-இடம். ஏனம்-பன்றி. நிணம்-கொழுப்பு. முடை-புலால் நாற்றம். ஓராது-யோசனை செய்யாமல். உற நீட்டி-நெடுக நீட்டி.

103. கொத்திய வதனை-கொத்திய வதனத்தையுடையவனே. கொத்திய அதனை யென்றலுமமையும். இருவேமும்-நாங்கள் இரண்டுபேரும். வறிதே-வீணே. வறிதே யுடல் சிதறிற்றிலே யென்றலுமாம்.

104. ஆராய்கைக்கு-யோசனைசெய்ய. செற்றிய-அடர்ந்த. கடி-வாசனை. பச்சிலே மரம்-தமாலமரம். சேரா-சேர்ந்து.

105. குஞ்சித்து-குந்திகின்றுகொண்டு. என்றுரைத்தை என்ற பாடமுங் கொள்க. துஞ்சி-இறந்து. நீர்வேட்கை-தாகம்.

106. சிந்தித் ததிபயம் என்ற பாடமுங் கொள்க. பேணுகை-காப்பாற்றுகை.

107. வலம் - பலம். மருண்டு-மயங்கி. பெலம்-பலம்.

108. அமையும்-போதும். இச்செய்யுளின் நாலாவது பாதத்தின் அழகிய கருத்து முதனூலிற் காணப்படவில்லை.

109. கனலுதல்-நெருப்பை வீசுதல். புலர்ந்து-உலர்ந்து. தான்றுதல்-நெருங்குதல். குருகு-சாரசம்,வெண்ணுரை. வெண் குருகு என்றிருத்தல் நேர். குருகின் ஓசையால் என்பதற்கு அன்னத்தினது நூபுரத்தொனி போன்ற ஓசையால் என்றலும் முதனூற் கருத்துக்கு இசையும். பொன்றுகின்றனம் - இறக்கின்றோம். போக்கிலாது-வேறு கதியில்லாமல்.

110. தபனன்-சூரியன். கமல நூலின் முந்நூலும்-தாமரை நூலாற் செய்யப்பட்டது போன்ற மெல்லிய முப்புரி நூலும். கலேயுரி - மான்தோல், கிருஷ்ணஜினம். இலங்க-விளங்க.

111. திடக்கை-வலக்கை. திருப்பளித் தாமம் - பத்திரம், புஷ்பம் முதலாகிய பூஜா திரவ்யம் வைக்கும் குடலே. வெண் கமண்டலம்-ஸ்படிக மணியாற் செய்யப்பட்ட கமண்டலம். சுருதி-வேதம். ஆரவாரம்-கோஷம். ஆரிடகுமாரர்-ரிஷிகுமாரர்.

112. நியமம்-செய்கடன். இடர்-துன்பம். உவணம் - பருந்து; சேனம் என்ற முதனூற் சொல்லோடு பொருந்த இவ்வாறு பொருளுரைக்கப்பட்டது. கழுகு என்றலுமாம். உவணம் என்று பாடங் கொள்க.

113. அங்காந்து-திறந்து. மரித்தல் - இறத்தல். கொடுபோய்-கொண்டுபோய். தோயம்-நீர். பருக்கி-குடிப்பித்து. புரப்போம்-ரக்ஷிப்போம்.

114. பயத்துளி-சலிலபிந்து,நீர்த்துளி. நூலடைவினில் ஆடி-சாஸ்திர விதிப்படி ஸ்நானஞ் செய்து.

115. மறை-வேதம். மரையினல் என்று கொண்டு தாமரையினல் என்றுரைத்தலும் முதனூற்கருத்துக்கு இசையும். ஆயினும் எதுகை நயங் குறையுமாறு காண்க. நிரப்பி-பூரித்து.

116. ஆகுதி-அவி. படிஒழுங்கு-சோபானவரிசை. விசும்பு அணவ-ஆகாயத்தைக் கிட்ட. சாகம்-கீரை. குளநெல்-நீவாரம்.

117. தமது அரு மறைகள்-தமது அரிய சாகைகள். திகழ-விளங்க.

118. தந்தி-தந்தத்தையுடையது,யானை. புழைக்கை - துவாரத்தை யுடைய கை, துதிக்கை. முகந்து-மொண்டு. அருத்த-ஊட்ட. மரங்களின் பாத்தியில் நிரப்ப என்று முதனூலிலுள்ளது. சிந்தியாது - பகையென்று கருதாமல். அரவு-பாம்பு. தோகை-பீலி. துயில-தூங்க.

119. கனல்-அக்னி. உயங்கி-வருந்தி. அணுகி-கிட்டி. பரிந்து-விரும்பி. கோல் காட்ட-கோலேப் பிடித்துக்கொண்டு வழி காட்ட.

120. மரை-ஓர்வகை மான். ஊனம்-குறைவு. வாரணம்-யானே. உளை மயிர்-பிடரி மயிர். வளையம்-தண்டு. ஈர்க்க-இழுக்க. அவை-சிங்கங்கள்.

121. விதம் - வேறுபாடு; புட்பொது

பழயவாசனை-முன்வழக்கம்.

122. வெங்கலி - கொடுமையுள்ள கலி காலம், அங்கமில்மதன்-சரீரமில்லாத மன் மதன், சங்கை--சந்தேகம், உவகை--சந் தோஷம்.

123. அறச்சிறுமல்--அதிகமாய் சிறுகா மல், அங்கியம்கடவுள் - அக்கினிபகவான், சந்நிதி-இடம்.

124 பிணித்துநாற்றிய-கட்டி தொங் கவிட்ட, சீவரம்-ஓர்வகை வற்கலை, முற் கவிசினைகள்-முன் கவிந்திருக்கிற கொம் புகள், அர்க்கன்-சூரியன்.

125. கணம்-கூட்டம்.

126. கேசம் - தலைமயிர், வான் - பெரு மை, வாலியனுய் -- வெண்ணிறமுடைய னுய்.

127. அருகியநோக்கு - கிட்டின பார் வை, ஆடகமால்வரை-தங்கமயமான பெரி யமலை, மறு-சரீரத்தில் உண்டாயுள்ள கரு ம்புள்ளி.

128. புண்டரம்-நெற்றியி லிடு நாமம்.

129. பவக்கடல்-பிறத்தலாகிய கடல், ஜன்மஸாகரம். மழு-தீ, சாந்தநை-சாந்தம், ஆதபன்-சூரியன்.

131. வெம்பி-மனம் புழுங்கி.

132. பயில்-வாழும், கதுமென - வேக மாய்.

135. போகையாம் பிறப்பில்-போன ஜன்மத்தில்.

136 அடைவில் - வரிசைக்கிரமமாய், தேசகாலம்-போது, நியமம்-செய்கடன்.

138. பானு-சூரியன்.

139. நாபியம்போது -- நாபிகமலம், கொப்புள்.

140. செக்கர்-சிவந்த.

142. துவலை - திவலை, ஐயர் - பிராம ணுள், பறிந்தது-கழிந்தது.

143. சடிலம்-ஜடை.

145. வேத்திராசனம் --- பிரம்பினுல் செய்த ஓர் ஆசனம்.

147. அடைவு-கிரமம்.

149. புவித்திருமாது - பூமிதேவி, தரங் கம்-அலைகள்.

150. மாகாலன்-மஹாகாலன், சிவபெ ருமான்.

151, மலர்த்திரு - லக்ஷ்மி, நசையள ந்து-ஆசைதீர, நறை- தேன், தேர் - தேர் ந்து எடுக்கிற.

153. கனக வடபூதரம்-மகம்மேரு, இம வான்-ஹிமயகிரி.

154. துழனி - சப்தம், பொதுமாதர்- வேசையர்.

155. அங்காடிவீதி-கடைவீதி.

163. அருகன் - பக்கத்திலிருப்பவன், மந்திரி; சுகநாதன்-சுகநாஸன் என மூத னூலிலுள்ளது, கிளியின் மூக்குபோலு ள்ளவன்.

165. ஒற்றர் - வேவுகாரர்.

167. இந்திரேகை-இந்து இரேகை-சந் திரன் காந்தி, வனமாலை - பரசுராமன் அணிந்துள்ள ஓர் விசேஷ ரத்தின ஆப ரணம்.

168. மதனராஜன் திருக்குழாம்-அழ குடைப்பெண்கள்.

170. அகரு-அகில், தூமம்-புகை, திரு ப்பளியறை-படுக்கையறை.

176. தொய்யில் - சந்தனம் முதலிய வாசனை திரவியத்தால் சரீரத்தில் ராஜஸ் திரீகள் இடுங்கோலம்.

178. ஏந்தல்-அரசன்.

180. அடைப்பை மங்கை-வெற்றிலைச் சுருள் கொடுக்கும் வேலைக்காரி.

181. ஆகுலம்-விசாரம்.

182. கலன்-ஆபரணம்.

186. பேதுற்று-மதிமயங்கி.

188. நரிவெருட்டு - குழந்தைகள் நித் திரையில் பயப்படுதல்.

191. அன்றை-முன்ஜன்மம்.

193. பாகையாம்-பக்குவமான.

196. உபவதித்து - உபவாஸமிருந்து, பட்டினியிருந்து.

197. நிமித்தம்-சகுனம், மேனிலமேல்- மேல் உப்பரிக்கையின் மேலே.

198. வைப்போரயிலாய் - வை போர் அயிலாய்.

200. அண்ணிதாக-சீக்கிரத்தில்.

202. வாரிசாத-வாரிதியிலுண்டான.

203. வேலை-சமுத்திரம்.

204. ஆயம் - ராஜஸ்திரியின் பரிஜனங் கள்.

214. அபிமந்திரித்து -மந்திரங்களினுல் குணமுண்டாக்கப் பெற்று இருக்கிற, நாற்றி-தொங்கவிட்டு.

215. நிம்பமென்தளிர்-வேப்பந்தளிர்.

216. சென்னியர்-பாணர்.

222. உதரபந்தனம்-ஓர் ஆபரணம், ஒட் டியாணம்.

223. வெள்குதல்-வெட்கமடைதல்.

227. அண்டை-ஓர் பாத்திரம், சிவிறி- நீர்த் துருத்தி.

228. படகம் - தப்பட்டை, மாகதர்- ஸ்துதியான பாட்டுப் பாடுவோர்.

229. பெருமகன்-அரசன்.

241. அலந்தலைகொண்டு - சந்தோஷம் தலைக்கொண்டுபோய்.

244. சவுளம்-குடுமிவைத்தல்.

246. செண்டுவெளி-குதிரை வையாளி வீதி, சிரமக்கூடம்-குஸ்திபழகுமிடம்.
248. சிறுகாலே - பிராதக்காலம், முன்னேரம்.
251. ஓங்கல்-மலை.
256. பாகர்-யானை ஓட்டுவோர், பாரசீகர்-பார்சீகதேசத்தார், பவனம் - காற்று, இவுளி-குதிரை.
258. அனுமானித்தல்-குதிரை கனைத்தல், உச்சைசிரம் - சிறந்ததோர் குதிரை.
272. நீவி-வஸ்திரம்.
274. உற்பன்னன்-மறுபடி யுண்டானவன்.
300. நாவி-கஸ்தூரி.
307. அதள-தோல்.
311. கஞ்சுகம்-சொக்காய்.
312. அங்கிகாரியம்-அக்கினியில் செய்யவேண்டிய வைதிக காரியங்கள்.
314. கடிகை-நேரம், சமயம்.
318. பெதும்பை - பிரௌடையாகாத பெண்.
324. இதவிய-உதவிய.
325. வை-கூர்மை.
327. சுடர்கள் - முச்சுடர், சூரியன், சந்திரன், அக்கினி.
328. பறியாது - நீங்காது, விரவினார்-நெருங்கியோர், வரமறு - பலன்தப்பாத, மூலமந்திரம்-முதன்மையான மந்திரம்.
329. ஒழுக்கறு - உண்டாதல் நீங்காத.
330. களிம்பு-கல்மிஷம், மாசு. இளிம்பர்-அல்பர், ஞானமில்லாதவர்.
331. சாயகம்-அம்பு, பாணம்.
332. அல்லவர்-நல்லோர் அல்லாதவர்.
338. மிடைபடா-கஷ்டப்பட்டு, பத்தாமவத்தை-சாவுநோய், ஒளியுடையவர்கள்-தேஜஸ் உள்ளோர்.
341. குரவர் -- பெரியோர், அடைவு-யோக்கியதை.
350. ஔடதங்கள்-மருந்துகள், பலவித சரக்குகள் கலந்து செய்யும் பதார்த்தம். ஸ்நானத்துக்கு உபயோகிப்பதால் விசேஷமுண்டாக்கும்.
351. இப்பாட்டிலுள்ள உபமான உபமேயம் வியக்கத்தக்கது.
355. மேகயொலி - மேகவொலியென மாற்றுக.
357. நல் பிரயாணம் செல்லுங்கால் நெற்பொரியை சிதறி அதன் மேல் நடந்து செல்லும் பெரியோர் அனுஷ்டானம் கவனிக்கத்தக்கது. பாரிஜாதம்- தேவலோகத்துள்ள ஒரு புஷ்பச்செடி.
358. சேமம் - அடக்கமாய் இருக்கவேண்டிய பொருள், ஏமம்-சுகம், எயில்-கோட்டை மதிள்.
361. சிந்துரம்-யானையின் நெற்றியில் இடப்பட்ட சிவப்பு திலகம். கந்தமாதனம்-பட்டத்துயானையின்பேர், தாராசக்கரம்-நட்சத்திரங்களின் வட்டமான கூட்டம்.
362. விந்தாலயமான் - வீரலெட்சுமி, மகவான்திசை-இந்திரன் திசை, கிழக்கு.
365. துழனி-சத்தம், அனுமானிப்பு-குதிரைக்கனைப்பு, பிளிறு - யானையின் சத்தம்.
368. விலாழி -- குதிரை வாய்நுரை, கரசீகரம்-யானை துதிக்கையால் வெளியிடும் சலம்.
370. கவரி-சாமரை.
371. படங்கு-கூடாரம், தங்கவேண்டிச்செய்த சிறுகுடில்கள். சேண்-ஆகாயம். பாசறை-சைனியத்தோடு அரசர் தங்குமிடம்.
372. இருபாலுமுற்றவுயிர்போலுறையுமிவர்க்கு-இரண்டு பக்கத்திலும் தன்னுயிர்போலிருக்கிற 1. பத்திரலேகை, 2. மந்திரிகுமாரன் வைசம்பாயனன்.
374. அணங்கால் - வீரலெட்சுமியால், இணங்கா-இணங்கி, வசப்பட்டு.
375. பாணீ-ஜயசீலனென ஓர் அரசன் பேரில் அவனடைந்த ஜயத்தையும்செய்த யுத்தத்தையுந் துதித்து எழுதும் கிரந்தம், நாமத்தம்பம்-தன்பேர் நீடூழி விளங்கவேண்டி ஸ்திரமாய் பேரிட்டு நடும் கம்பம்.
376. கொற்றம்-ஜயம், வெற்றி.
378. துளவோன் - துளசிப் பிரியனான மாயன்.
379. கேழ் - ஒளி, வலி.
380. கின்னரம்-ஓர்விதபட்சி (புராணத்திலுள்ளது.)
382. தரித்து - மற்றவர்களை விட்டுவிலகி, எரி-நெருப்பு.
383. பரிதாபம் - துயரம், இபம்-யானை.
384. மிடை-வருத்தம்.
387. தட்பம்-குளிர்ச்சி, கரண்டம்-நீர்காக்கை.
389. மானம்-அகங்காரம், கோபம்.
390. களத்தின் - இடத்தின், துறையின்.
392. மண்டியது - பின்துடர்ந்து ஓடியது, தண்டிவரும்-தண்டு இவரும், சேனையின் மேல்பாயும்.
393. நிழற்புகர்வாள் - பளபளப்புள்ள அழகிய கத்தி.
394. பாசடை-இலை, தழைத்து வீசி-இலைகளை பரப்பி, ஏமம்-இன்பம், வாமம்-இடதுபுறம்.

395. தெவ்வியல்பு- தெய்வத்தன்மை, மனோஹரமாய் - மனதை இழுக்கக் கூடியதாய்.

396. பற்பலகால்னின்றுற்று பல்பல கால் நின்று உற்று.

397. நசை-ஆசை, மிசைகாட்டும்-மேல் நோக்கி எழும், மோக்ஷத்தைக்கொடுக்கும்.

398. ஈசன்பத்தியினல் - ஈசனிடத்துள்ள பக்தியினுல், உத்தூளம் - விபூதியை உடம்பெல்லாம் பூசிக்கொள்ளல்.

400. பொலந்த -- பொலிந்த எனக் கொள்க.

401. கூர்க்க-அதிகமாக.

404. இகல்விளங்குசாதி-விரோத குணமுள்ள ஜாதிகள், பாசுபதநெறி - பாசுபத மதத்தின் மார்க்கமான கருணை, சந்நியாசம்.

405. செவ்வி- அழகு, மெய்வகையதந் தத்தால்-தன் சரீரத்தின் நிறம்போன்ற தந்தத்தால், முழுமையும் தந்தத்தால்.

406. உரம்பாவு-ஊக்கமிகுந்த.

407. ஆறுதலாலும் - சாந்தகுணத்தினுலும்.

410. இம்பர்-இவ்வுலகம்.

412. மடியாய்-சோம்பேறிபோல.

414. மின்காணுற்ற-பிரகாசம் தோன்றுகிற, அலாபுகம்-சுரைக்குடுக்கை, யோகபட்டம்-யோகஞ்செய் வேளையில் உபயோகப்படுத்தும்ஒருகச்சை,சேணுற்ற-மேலே தொங்கவிட்டுள்ள.

415. அதிபெரும-அதிக பெருமை பெற்றவளே.

416. வடிவிழி - அழகான விழியுடையாள்.

417. நிறைவளே-மகச்சுவேதை.

418. தரந்தரும் - யோக்கியதையைக் கொடுக்கும்படியான.

419. கல்லனையை-குதிரையின் சாமான்களே.

420. சும்மாதே-சும்மா இது வாளாதே என்பது போல வந்தது, சம்மாதத்துடன்-சம்மதத்துடன், நீட்டல் விகாரம்.

421. தணவா-நீங்காத, தருக்குமனம்-என் மனம் தைரியமடைகின்றது, துணையானதவத்தினே - துணைக்கு தவத்தையுடையவளே, குவாலாக-கூட்டமாக, அதிகமாக.

422. முறமையினல்-உறவினுல்.

429. முனிவர்-அரிட்டை என இருமகளிர். உதித்த-உதித்தனர்.

430. மகவான்-இந்திரன்.

431. நவம்சேர்புதுமைகள் நிறைந்த.

432. செயல் - செய்யத்குந்த காரியம், அதை மீறி நடக்கத்தக்கதில்லை.

433. அனுசத்திரம் - தம்பியின் திரம். அன்னப் பெயரோனை - ஹம்ஸன் என்பவனை.

434. தவளம் - வெண்மை, சுவீகரித்தான்-ஏற்றுக்கொண்டான்.

436. அமையாத்துயர் - பொருக்கமுடியாத்துன்பம்,

438. அளி-அன்பு, அளிவண்டு,

439. விரை-வாசனை.

440. வரிவளை-வரிவளையையுடைய மங்கையர், மகிழமரங்கள் மங்கையரின் வாயூறலால் புஷ்பிக்குமெனவும், அசோகவிருக்ஷங்கள் மங்கையிரின்பாதம் படுவதால் புஷ்பிக்குமெனவும், மங்கையரின் தனங்கள் படும்படி கட்டிக்கொள்வதினுல் குரவம் என்கிறவிருக்ஷங்கள் புஷ்பிக்குமெனவும் பழய நூல்களால் தெரிகிறது.

441. மலைமகள்-பார்வதி.

442. பாரை-பூமியை. ஒருவேனும்-தன்னைநிந்தித்துச்சொல்லும் சொல், கஷ்டத்துக்கும் துக்கத்துக்கும் ஆளானநானும்.

443. எல்-இரவு.

444. சென்றளவிலான் -சென்றளவில் அரன் எனத்திருத்திக் கொள்க.

445. வேணி-ஜடை.

446. உரி-தோல், பலாசத்தண்டும்-ரிஷிகள் பலாசமரத்தின் குச்சியை வைத்திருத்தல் அவசியம்.

447. முஞ்சி-புல்லினல் பின்னியுள்ளதும்இடுப்பில் தரிப்பதுமான அரைஞாண் போன்றது.

448. திருப்பள்ளித்தாமம்-பூசைக்கு அவசியான சாமான்களே வைத்துள்ள ஓர் குடலை.

449. கோலமுன்-இருஷி.

451. அடைவு-தகுதி. வடு குற்றம்.

453. ஓவியம்-சித்திரம்.

456. நம்போதம்-நம்முடைய ஞாநம்.

460. திதமான-ஸித்தமான, என்னிடமப்போதிருந்த.

462. பாறி-துரிதப்பட்டு.

463. உய்வகைசேர்தவம் - ஜீவன் முக்திக்கு அடுத்ததான தபஸு

464. அனங்கராகம்-அனங்கனுல் உண்டாக்கப்பட்ட ஆசை.

467. நளகூபரன்-குபேரன் குமாரன். அழகில் பெருமை பெற்றவன்.

468. தவளமான - சுத்தமான, வெண்மையான.

469. தப்போதாமுனி-தப்பு ஓதாமுனி

471. இருத்தை - கிருஷ்ணபக்ஷ சதுர்தசி, இதை சிவராத்ரி எனவும்படும். ஒன்று

மிருவேமும் - சேர்ந்திருக்கிற நாங்களிருவரும்.

472. அரதச்சூதாங்குரம்-சிவப்பு நிறம் பொருந்திய மாந்தளிர்.

476. ஆதரம்-ஆசை.

478. மானேயம்-மால், நேயம்.

479. இரவிகாந்த-சூரியன்போல் பிரகாசமுள்ள.

481. தோட்டி-குடாரி,யானையங்குசம்.

483. சற்றர் - அல்பர், ஞானமில்லாதவர். இளந்தலை-மனநெகிழ்ச்சி.

485. துவக்கு கட்டு, தொங்குதல்-தூங்குதல், மரதி.

488. அறைபோய்-கீழறுக்கப்பட்டு.

490. தகைந்து-வேண்டாமென்றுநீக்கி.

491. சாளரம் - சன்னல், ஆதபன்-சூரியன்.

492. பற்றுக்கோடு - ஊன்று கோல், ஆதாரம்.

496. கேவலமன்றே-அல்பமான காரியமல்லவே.

498. அடைப்பை - வெற்றிலை பாக்கு வைக்கும் ஓர் பை, பட்டிகை-சீலை, கச்சை.

500. திப்பிரமம் - திக்பிரமம், பன்னுதல்-பேசுதல்.

501. அளகம்-தலை மயிர், நுதல்-முகம், தைவரல்-தடவிக்கொடுத்தல்.

502. இப்பாட்டின் முதல் வரியில் 'ஒருவன்' என்பதை 'ஒருவேன்' என திருத்திக்கொள்ளுக, வலையம்-வட்டம், தான் ஒருசேடி-ஒருசேடிதான்.

504. கெடுத்தொன்றுடையார்போன்றும்-ஒன்றைத் தவிரவிட்டவர்போலும்.

505. கோலம் - தோற்றம், எழா-எழுந்து.

506. ஐயுறவேண்டாம் - சந்தேகப்படவேண்டாம்.

507. பரிபவம் அபமானம்.

510. தூற்றில்-புதரில்.

512. அண்ணிதாய்-சமீபமாய்.

514. வெளிறனாய் - கபடமில்லாதவனாய்,

518. 'கலசா பிடேகதாரைகள்' என்பதை கலசாபிடேக தாரைகள்' என திருத்திக்கொள்ளுக.

520. சந்தின்-சந்தனமரத்தின், நைகரமான-துன்பமடைந்த.

524. 'செப்பவாய்' என்பதை 'செய்யவாய் என திருத்திக்கொள்க.

527. தகைந்து-தள்ளி வெறுத்து.

528. உரக - பாம்பின், வல்லை-சக்தியுடையவன்.

530. பொன்றினர்-இறந்தவர்.

532. அரம்பை-வாழை, 'தீந்தது' என்பதைத் 'தீய்ந்தது' என மாற்றிக்கொள்க.

535. அனுங்கி-வருந்தி.

538. சேரலர்-விரோதிகள், காளம்-எக்காளம்.

541. பிழைத்த-தப்பி நடந்த, யாமேது பட்டேம்-நாம் ஹேதுவாக ஆனேம்.

544. சோமத்தீ - சந்திரனாலுண்டான உஷ்ணம், வேமத்தீ-வேம் அதீ எனப்பிரிக்க.

547. நாணமக்கு-நாண் நமக்கு.

548. துன்னிமித்தம்-கெட்ட சகுனம்.

549. விரைப்போது - வாசனையுள்ள புஷ்பம்.

550. இம்பர்-இவ்வுலகத்துள்ளோர்.

552. நாமம்-பெருமை, கீர்த்தி, பயம்.

553. "மலரினருந்தூளி" என்பதை "மலரினறுந்தூளி" எனத்திருத்திக்கொள்க, உதகம்-நீர்.

555. நாராசம்-இரும்புச்சலாகை.

567. சாயகம்-பாணம்.

571. களத்து-கழுத்தில்,

574. அயர்வு-மயக்கம்.

576. இடைவேனை-வருத்தப்படுவேனை

589. அனுமரணம்-கூடச்சாதல், உடன் கட்டை ஏறுதல், சயனம்-சிதை, சவத்தைச் சுடுவதற்குண்டாக்கும் படுக்கை.

591. என் தந்தை சொல்வதுபோல்-இந்த மகச்சுவேதை சந்திரனிடத்துதித்த சந்ததியைச் சேர்ந்தவள்.

592. 'தடையைற' என்பதை 'தடையற' என்று திருத்திக்கொள்க.

594. பொன்றனி - பொன்றல் நீ, நீ சாகாதே.

599. அரிந்த-க்ஷீணமான.

600. முதல்விரதம்-பிரமசரியம்.

601. கனன்று-கோபித்து.

602. நோம்-நோகும், அந்தரப்படுநெஞ்சுடையனாய்-ஒரு வழியும்போகாத, கலக்கமுற்ற நெஞ்சுடையனாய்.

603. நலிங்கு-நைந்து, கசங்கி.

605. பைப்படி - பைந்நாகஞ் சுமக்கும் இந்த பூமி.

608. செலவை-வாழ்வின் விதத்தை.

613. கனதலத்திடை - ககன தலத்திடை, ஆகாயத்தில்.

623. 'தருமமென்' என்பதை 'கருமமென்' என்று திருத்திக்கொள்க.

623. 'கீரோதன்' என்பதை 'கீரோதன' என்று திருத்திக்கொள்க, கஞ்சுகி-வேலைக்காரன்.

624. சிறுகால்-முன்னேரத்தில்.

627. எவ்வம்-குற்றம்.

630. கவின்-அழகு.
636. செறிவினல் - சம்பந்தத்தால், கைவிடா-கைவிட்டு.
637. சூள்-கண்டிப்பான உத்திரவு.
640. எற்றரு-எல்தரும் - பிரகாசம்பொருந்திய.
647. சிங்காரரதம்-சிங்காரரஸம்.
658. நாப்பண்-மத்தியில்.
660. வான்பதம் - உத்தம ஸ்தானம், பரமபதம்.
661. ஈனன்-ஹீனன், இல்லாதவன்.
663. கந்தரம்-கழுத்து, வளை-சங்கம்.
664. இதழ்-உதடு,வெய்யவன்-சூரியன்.
666. வரன் - அழகு, அரன்-சிவபெருமான், உரன்-வலி, தரம்-மேன்மை.
667. பதிவிம்பங்கள்-பிரதிபிம்பங்கள்.
668. முறுவல்-பல்வரிசை.
669. மகர கேதனன் - மீனக்கொடியோன், மன்மதன்.
670. சாலம்-கூட்டம்.
671. என்போதும்-எவ்வளவிருக்கும்.
672. வாதனை-வாஸனை ஸ்நேஹம்.
673. புண்டரிகாலயன்-பிரம தேவன்.
675. கைப்பயிலும் அலாயுதமால்-பரசுராமன்.
676. செங்கமலநாதன்-பிரமன்.
677. பேரீடு - பொய்யான காரணம், வதந்தி,
679. பருவரல்-துன்பு.
680. ஆடக வாடு பூதரததால்-பொன்மலையான மஹாமேருபோன்ற தோளால், பூபாம்-பூமியாகிய பாரம், நவந்தரு அத்திருநற்குணங்கள் - ஆச்சரியமுண்டாக்கக் கூடிய அந்த நற்குணங்கள்.
682. மிசைதருமுளரிவனிதை - முளரிமிசைதருவனிதை, லக்ஷ்மி. அவாவும் - ஆசைப்படுவள்.
684. தமருமாம் - பந்துவுமாகும், தாதன்-தாஸன்.
685. விலங்கவே நோக்க-கடைக்கண்ணால் பார்க்க.
690. பயிலால் - குறிப்பால், சங்கேதத்தால்.
692. மூச-மொய்க்க.
693. தகைய-தடுக்க.
698. 'நகை' என்பதை 'நக' எனத்திருத்திக்கொள்க.
699. கம்பம்-நடுக்கல்.
700. வேர்-வேர்வை
701. பெய்வளை-காதம்பரி, அஞ்சுகம் - அழகிய கிளி, பூவை-நாகணவாய்ப்புள்.
702. வளவியோர்-மேலானவர், பெருமையுடையார்.
703. புனையிழை இறைவி-காதம்பரி.
705. அவந்திமன்னர்கோன் - சந்திராபீடன்.
706. போதுமோ-தகுமோ.
707. இலச்சியாது - அவமானமடையாது, ஈறுகாட்டிய-மெல்லிதான, ஒடியக் கூடிய.
708. நாப்புகை-கேலி,ஹேளனம்.
709. விரகுகள்-சூதுகள், தந்திரங்கள்.
710. நிலா - நிலவுகின்ற, வீசுகின்ற. அளி-வண்டு.
711. தேன்வருந்துமொழி -அன்மொழித்தொகை, மஹாசுவேதையைச் சொன்னது. கடவர்-உடையார்.
712. ஆயவாகில் - அப்படியானல், துங்கம்-பரிசுத்தம்.
713. ஈரமுற்றதொடையோன்-சந்திராபீடன்,வல்லியர்-கொடிபோன்றஸ்திரீகள்.
714. ஆயம் - வேலைக்காரர்கள், விடரித்தல்-காமவேதனையால் துன்புறுதல்.
716. கனத்திலம்-கௌரவம்வஹிக்கவில்லை.
717. கைதவம்-மரியாதை.
720. சிங்கி-ஓர்நோய், சோட்டாலை-துன்பம்.
721. தஞ்சம்-காப்பாற்றுவோன்.
722. கொட்டிக்கொண்டிருந்தளவில் - திரும்பவும் திரும்பவும் தனக்குள்ளே ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது.
725. சங்கை-சந்தேகம்.
727. கல்வமாமயில்-தோகையோடுள்ள அழகியமயில்.
729. போதுமோ-உபயோகப்படுமோ.
730. இனியனர் - காமுகனர்; நொய்ம்மைவனிதையினிட சொல்பமான அருளை மேன்மேல் வளர்த்ததே-இது தான் உள்ள விஷயம்.
732. மிடியன்-தரித்திரன்.
735. கௌரி-பார்வதி.
740. தெய்வநதி-கங்கை, திரை - அலை, வியப்பு-ஆச்சரியம்.
742. நீர்ப்பாழி-பூரணகலசம்.
745. வண்டு-வளையல், சங்கு. களபம்-கலவைச்சந்தனம்.
747. அளி-கிருபை, எளிமை-யாவரும் நெருங்கத்தக்க தன்மை.
748. பேரீட்டினல் - பெரிய ஈடுபாட்டால், ஏந்தலார்-அரசன், இங்கு சந்திராபீடன்.
749. திரைப்பரவை இறை-அலையையுடைய கடலுக்குத் தலைவனை சமுத்திர

ராஜன்.

750. மகவான்-இந்திரன்.

751. விழைபவர்-ஆசைப்படுவோர், இச்சிப்பவர். இதுதான் வேண்டியது - இதை தாம் பெற்றுக்கொள்ள வேணுமென்று நாம் வேண்டியதுக்குக்காரணம். கெழுமுதலான-கற்றதான. தகைமை-பெருமை, "அதியும்" என்றதை "அறியும்" என்று திருத்திக்கொள்க.

752. சிலாசகலம் - கல்லின் துண்டு, வதுவேள்-வேளின் வதுவான ரதிதேவி.

756. சாதனம்-சாக்ஷியம்.

758. விளையாடல்வரை-கிரீடாசைலம்.

760. வைப்பயிலயிலோன்-வை பயில் அயிலோன், கூர்மை உள்ள வேலாயுதமுடையவன். அயமற-ஐயம் அற.

764. 'குமுதவாவியனீர்' என்பதை "குமுதவர்வியில்நீர்" என்று திருத்திக்கொள்க.

766. ஏகாவலி-ஒரு வடமுள்ளமேகலை, வெண்கோமம்-ஒரு கொடிப்புஷ்பம், எத்தரும்-எத்து அரும்-மேன்மையான.

768. தரம்-மரியாதை, யோக்கியதை.

769. எள்ளுறுது -அலக்ஷியம் செய்யாமல், வள்ளியோர்-பெருங்கொடைகொடுப்போர், தெள்ளியோர்-அறிவுடையோர்.

770. அடியுறை-பாதரக்ஷை.

777. வங்கியம்-வாத்தியக்குழல். கீதநாதன்மகள்-கந்தருவராஜன்மகள்.

778. படிமக்கலம்-கண்ணாடி.

782. தாதவர்க்கம்-தாஸவர்க்கம், வேலைக்காரர்.

783. ஈர்பபுண்டு-இழுக்கப்பட்டு, எயில்-கோட்டைமதிள்.

785. குரம்-குளம்பு.

787. புலந்து-கோபித்து.

789. பெருகக்கூறி-அதிகமாய் ஸ்தோத்திரஞ்செய்து, அகலம்-மார்பு.

791. பின்களப என்பதை பினகளப எனத் திருத்திக்கொள்க.

793 சூளாமணி-உயர்ந்த இரத்தினம், ஆசிமொழி-ஆசீர்வாதவசனம்.

802. கூடம்-விசாலமான ஸ்தலம். யானைக்கூடம்-யானைகள் கட்டும் சாலை, மந்துரை-படுக்கை, இங்குகுதிரைச்சாலை.

804. யாணர்-அழகுள்ள. கேசரத்தை-மயிரை.

805. நெருநல்-முந்தியநாள்.

807. பற்றுக்கோடு- பிடித்துக் கொள்ளும்கொம்பு, ஆதரவு.

811. இவுளி-குதிரை.

813. முண்டக - தாமரைப்பூவால்நிறைந்த; பனிமனை--குளிர்ச்சிக்காகக் கட்டிய வீடு.

815. அங்கி-நெருப்பு.

816. சிறுபுறம்-பிடரி, முருகு-வாசனை.

818. கவினி-அழகோடு.

819. பன்னசாலை--பர்னசாலை--இலைகளால் மேய்ந்தவீடு.

820. வெளியடை-படுதா, திரைச்சீலை.

821. அரமகளிர்-தெய்வப்பெண், உததிராஜன்-சமுத்திர ராஜன்.

822. அம்புசாதம் - அம்புஜம் - தாமரைப்பூ.

823. ஊதை-காற்று.

824. புஞ்ச-கூட்டமான.

825. பாவை-பொம்மை.

828. வாரம்-அன்பு, பக்ஷபாதம்.

829. ஐம்பால்-பெண்தலைமயிர்.

830. நலக்கம்-சோர்வு.

831. அனங்கதமாய்-1. தோள்வளையில்லாமல் 2. காமவிகாரத்தை உண்டுபண்ணக்கூடியதாய்.

848. மயிலூர்தி-சுப்பிரமணியன்.

849. அதுதன்முன்பு- - தன்னிட குதிரையின் முன்னால், ஒட்டன்-ஒட்டஜாதியான் - அரசன்குதிரைமேல் செல்லுங்காலும் முன்னால் கொம்பு ஊதிச்செல்பவன் ஜாதியில் ஒட்டன், அயர்வு-சலிப்பு, கவடு-மரக்கொம்பு, மரக்கிளை.

850. கண்டகம்-உடைவாள், முட்கள்-எதிரிகள் வேகத்தில் பின் தொடராவண்ணம் உருக்கினால் செய்த முட்களை வழியில்சிதறிவைத்தலுமுண்டு, தலைமலை-மண்டையோடு, தூறு-மரங்களின் அடிவேரும் அதன் சமீபத்தில் வெட்டி எடுத்துக்கொண்டது போகமீதமான அடிமரமும், கடம்-வழி, காடு.

851. இதண் - அட்டாலை, பரண். புல்லாள்-புல்லினால் செய்துவைத்த மனித உருவம்.

852. இபக்கோடு-யானைக்கொம்பு, கபாடம்-கதவு, 'நெஞ்சமா' என்பதை 'கஞ்சமா' என்று திருத்திக்கொள்க, கஞ்சம்-வெண்கலம், கண்ணாடி கண்டுபிடிக்குமுன் வெண்கலத்தால் கண்ணாடிசெய்து உபயோகித்ததையறிக, தெரியல்-பூமாலை, மயிடமா-எருமை.

853. இடந்து- பெயர்த்து, நாக்கள்துளிர்போலவும், தலைகள் காய்கள் போலவும் தோன்றும், விகற்பமுற-சந்தேகமுண்டாகும்படி, மலரா - மலராக, முன்றில்-முன்வாசல்.

854. கூனி - குனிந்து, காழ் - வைரம், கடி-பிசாசம், வாழிவேழம்-உயிருடனிருக்கும் யானை.

855. வளை-சஙகம், முரசம் - பேரிகை, பாடு-பெருமை,
856. மீளி-வலி.
857. மன்றல்-வாசனை, காய்ந்த-கோபித்த.
859. நெளி- நெளிந்த, வளைந்த,
863. எயினர்-வேடர்.
868. தணந்த-பிரிந்த, கலுழ-அழ, கலங்க.
871. நீராஞ்சனம்-ஆலாத்தி.
875. அப்பூங்கொடி-காதம்பரி, ஆங்கு-காதம்பரியிடம் சொன்ன அம்மாதிரியாகவே.
878. தோம்-குற்றம்.
881. பாசடை-இலை.
882. வியந்தனள் - ஆச்சரியப்பட்டு ஸ்தோத்திரம் செய்தாள்.
886 மாண்பு-பெருந்தன்மை.
887. சொற்றர-சொற்களை என்னிடம் சொல்ல.
889. கன்றிய என்பதை 'கன்றியக்' என்றுதிருத்திக் கொள்க, "அன்றி அக்கங்குலுக்கு.
890. உறுப்பவர்-உண்டாக்குகிறவர்.
894. 'யிள்பமாக்' என்பதை 'யின்பமாக்' என்று திருத்திக் கொள்க, ஒறுத்தல்-வெறுத்தல், உளநிறுத்தலை - மனம் ஒன்றிலும் செல்லாது சும்மாவிருக்கச் செய்தலை.
898. வந்து-காற்று.
899. ஆதரித்தவர்-6ம்வேற்றுமை, அந்த மன்மதனை அடுத்தவர்களுடைய. அலகு - எல்லை, அளவு.
900. வெருவல்-பயப்படாதே.
902. என் ஆர் உயிர் அளித்துவிட்டனன்-என் பிராணனை விட்டுவிட்டேன்.
905. ஆராயது-அவிடம் வந்தது யார், ஆர் ஆயது.
906 தறுகண்ணவன்-சௌரிய பராக்கிரமமுள்ளவன்-பலமுள்ளவன்.
908. அற்செற்பாவிய-இருண்டமேகங்கள் பரவிய, செல்-மேகம்.
909. மாராயுதம் - மாரஆயுதம், மன்மதனுடைய ஆயுதம், உகைத்தல்-தைத்தல், ஏறுதல், நீராசனம்-நீராஞ்சனம் மங்கள ஆலத்தி.
911. மயர்வு-மயக்கம், தூநகையே-பத்திரலேகையைப் பார்த்துச் சொல்லியது.
913. உணர்ந்துகொள - உணர்ந்துகொளல் வேண்டும், வியங்கோள்.
914. உவன்றனன்-ஆச்சரியப்பட்டான்

921. தான் உரிமைபெற்றுடைய தன்மையில்-தான் அந்த நற்குணங்களுக்கு பாத்தியம்உள்ளவன்போல் நல்ல நினைவுடன்.
928. நங்குறை என்பதை தங்குறை எனத்திருத்திக் கொள்க.
930. முறைசெய்ய-நித்தியகருமம், சந்தியாவந்தனம் முதலியன.
930. 'றன்றி' என்பதை 'றின்றி' என்று திருத்திக்கொள்க, ரானம்-ஸ்நானம், குளித்தல்.
931. மூறிவேல-கேயூரகன்.
932. வேரிசேரளகமங்கை - பத்திரலேகை.
934. தனை-தனத்தையுடையாள்.
935. பெரும-பெருமையுடையவனே.
938. 'நாணி' என்பதை 'நாண' எனத் திருத்திக்கொள்க.
940. மால்-மயக்கம் மையல் நோய்,
960. அடைசி-நெருங்கி,
969. விது-சந்திரன்.
972. இனன்-சூரியன்: சந்திரன்.
977. மாறுது-மயக்கமில்லாமல்.
983. குதம்-தருப்பைப்புல், ஆசனம்.
1000. குன்றுமனம்-குன்றியமனம், குறுகியமனம். மங்கலராசிகுவித்தபடங்கு-வாழைமரம் தோரணம் முதலிய சுபஸூசகமான அடையாளங்களுள்ள கூடாரம்.
1001. உணர்ந்து-விழித்திருந்து.
1004. உத்தமவாரணம் - கந்தமாதனம் என்ற பெயருள்ள பட்டத்து யானை, உச்சயினிற்' என்பதை 'உச்சனியிற்' எனத்திருத்திக் கொள்க, விடிவேறு-விடியற்காலத்தில்.
1018. நோயறிவித்தகர் - வைத்தியர், சடம்-ஜடம், சரீரம்.
1031. துனைவு-வேகம்.
1033. இவுளி-குதிரை.
1036. இந்தனம்-விறகு.
1041. மீனவன் - மீனக்கொடியோன், மன்மதன்.
1042. துணையாவி-துணைவியான காதம்பரியுடைய ஆவி. ஏவலான் - ஏவல் தொழில் புரியும்.
1044. காத-கொலை செய்கிற, ஆதபம்-வெயில், புயல்-மேகம்.
1045. பாதபம்-மரம், பாதத்தால் சாப்பிடப்பட்டது. திசையொளித்தது-திசை தெரியாமற் போயிற்று, ஏதம்-துக்கம்.
1046. அசனி-இடி, மயிடாசி-எருமைக்கூட்டம், மாவரி-அரிமா, சிங்கம்,

1048. "வைத்தன் மனத்தி" என்பதை "வைத்தன் வனத்தின்" எனத் திருத்திக் கொள்க, கூறு-பாகம்.
1049. துலேதூரம்--அதிகதூரம், கார்-மேகம், கார்கலம்.
1050. ஏதம்-துக்கம், குறை-குற்றம்.
1051. வனப்பு-அழகு, தரங்கம்-அலே.
1053. அந்தரீயம்-உள்ளாடை, வேஷ்டி
1054. புனிதமாகிய-பரிசுத்தமான, ஆகுலம்-துக்கம், கம்பம்-நடுக்கம். கிலேசம்-துக்கம்.
1059. ஆராமம்-பூஞ்சோலே.
1061. வாதம்-காற்று, வாரி-ஜலம், இருசுடர்-சூரியன், சந்திரன்.
1062. தகை-விலக்கு (ஒருமை-ஏவல்).
1064. முகராகம் -- முகத்தில் சிவப்பு நிறம்.
1065. வேட்கை--ஆசை, செழுந்தரள வெண்குடையான்-அரசன் சந்திராபீடன், கொழுந்தரள வாணகை-காதம்பரி.
1068 அனுமானித்து - கனேத்து, பன்னகம்-சர்ப்பம், பன்னகபாரம்-பூமி, மனமகிழ்ந்த வணங்கு-காதம்பரி.
1076. பேதுறுமல்--மனங்கலங்காமல், முயங்கி-கட்டிக்கொண்டு, உன்னியது-நினேத்தது, முன்னும்-இனிமேலாகவும்.
1077. தொண்டை-கோவைக்கனி.
1078. தனு-சரீரம்.
1079. பொன்றுதற்கு-சாதற்கு.
1080. பொருகவனத்து பொரு கவனத்து, போரிற்சிறந்ததும் வேகமுள்ளதுமான, புரிநூலும்-முப்புரிநூல், பூணூல், அவளுழையில்-அவளுக்குச் சமீபத்தில்.
1083. உடுக்கணங்கள்-நட்சத்திரங்கள், மதியுலகம்-சந்திரலோகம், அவை-சபை.
1085. அனுராகம்-ஆசை, கூட்டம்-சேருதல், இப்படியில்-இப்பூமியில்.
1085. தவறு-பிசகு, குற்றம்.
1086. கனத்தை-சரீரத்தை.
1087. புத்தேள்-தேவன்.
1088. உதகம்-சலம்.
1089. சலதி-ஜலதி, சமுத்திரம். மா-குதிரை.
1090. இன்னல்-துன்பம், கூற்றுரி-இயமனுகி.
1091. வழக்கன்று - நியாயமில்லே, மாகம்-ஆகாயம், சோமன்-சந்திரன்.
1092. முயக்கம்-சேர்க்கை.
1097. முழைஞ்சு-குகை.
1099. எழுமுகில்-சப்தமேகங்கள், உளன்-உளம்.
1100. விது-சந்திரன்.
1102. ஙானஞ்செய்து - ஸ்நானஞ் செய்து, துய்ப்பன-சாப்பிடத்தக்கவை.
1105. கார்நீங்கி-கார்காலஞ்சென்று.
1106. மாகம்-ஆகாயம்.
1109. 'பெருந் துறையாந்' என்பதை 'பெருந்துயராந்' எனத்திருத்திக்கொள்க.
1110. எழுதிருக்கள் - சப்தமாதாக்கள் என்கிற கன்னிமார், தவல்-துக்கம், அஞ்சலியத்தாரை-அஞ்சலிஹஸ்தரை, இருகை கூப்பிநின்றவரை.
1112. முன்றில்வாய்நின்று - முன்றிலினிடத்தில் நின்றுகொண்டு, வழி-சந்ததி.
1113. அடைவை - கிரமத்தை, விதத்தை.
1114. நாணி-வெட்கப்பட்டு; அரற்ற-கதற.
1115. நரலோகம் - மானிடர் உலகம், மண்ணுலகம், அதர்-வழி.
1117. புகலாய-அடையத்தக்க இடமாகிய.
1118. பிறந்தடைவு-நடந்தபடியே, சேமம்-இடம்.
1120. முக்குணத்தால்- முக்குணமான ஸத்துவ, ரஜஸ், தமஸ், இவைகளினுல், உகநாலு-நாலுயுகங்களிலும், ஐயம்-சந்தேகம்.
1121. போனவாவி-அந்த, போன ஆவி, அலேயல்-சலிக்கவேண்டாம், திகிரிமால்-சக்கரத்தண்ணலான மஹாவிஷ்ணு.
1122. அம்புலி-சந்திரன், இம்பர்-இவ்வுலகத்தில், சங்கை-கணக்கு, துணி-துண்டு, அரவிரண்டுதுணி-உயர்ந்தது, ராகு கேது என இரண்டு கிரகங்களாக பிழைத்தது.
1124. அன்னம்-ராஜஸ்திரீயான தேவி விலாஸவதி.
1125. புரவலர்-அரசர்.
1126. தவறு-கெடுதி.
1127. பின்னப்பட-வருத்தப்பட. தணி-பொருத்துக்கொள், செயல் - உள்ளபடி நடந்த சங்கதியை.
1130. உழை-குகை, பொந்து.
1131. மறமாமோ-பாபம் ஆகுமா.
1134. நோலாதவர்-ஸஹிக்க முடியாதவர், ஆலாபம்-ஸம்பாஷணே.
1136. மெய்ம்மாசு--சரீரத்திலுள்ள அழுக்கை.
1137. பணிதா-அடியேனுக்கு உத்திரவிடு, என்று சொல்லி.
1140. வர-சிரேஷ்டமான, இங்கேமுற-இங்கு விசாரமடைய.
1141. தெவ்வாறுபடாமல்-தெவ் ஆறு படாமல்--விரோதிகளுடைய வழியில் அகப்படாமல்.

1142. தேசத்தவை - அத்தேசத்தில் கிடைக்கக் கூடியவைகளை.

1144. அனங்கன் - மன்மதன், அங்கமில்லாதவன், மகவாய் - குழந்தையாய், கிள்ளை -கிளி.

1145. இளமையில் - கிளிக்குஞ்சாய் இருக்கும்போதே.

1147. முந்தையின்-முன் ஜன்மத்தின்.

1149. முனிவனன்- கோபமுள்ளவன். தரித்து-பொருத்து.

1150. வந்தவாறென்-வந்தவழிஎப்படி, ஐயங்கூறு-சந்தேகத்தை நிவர்த்திசெய்.

1151. மீனகேதனன்-மீனக்கொடியோன், மன்மதன், கோட்டம்-அநீதம், குற்றம் கோணல்.

1153. அன்னிய மனிதனல்லாத.

1154. இமகரவிம்பம்-சந்திரபிம்பம்.

1155. தேர-நல்லசாஸ்திரங்களை ஆராய்ச்சிசெய்ய.

1156. அந்தரப்படுமுன்-பறக்கும்முன்.

1158. கிலேசம் - துக்கம், பெருமையான்-பெரியதாயுள்ளகைகளால்.

1160. சாந்தி-பிராயச்சித்தம்.

1163. கூறிய-சொன்னவைகளை.

1164. நற்றவன்-கபிஞ்சலன்.

1166. முரணழிந்து-சக்திகுறைந்து.

1167. ஊறுபட்டிருக்கும்-காயங்களால் வடுப்பட்டிருக்கிற,பேறுபட்டிருந்து-பெறப்பட்டிருந்து.

1168. துய்ப்பதற்கு-சாப்பிட.

1169. மோனிகள்-தபஸ்விக்கள்.

1173. ஐவர்-பஞ்சலோக பாலகர், இந்திரன், இயமன், வருணன், குபேரன் ஸோமன்.

1174. ஞாளியை-நாயை.

1178. புலைத்திரள்-புலையர்களின் கூட்டம், கதத்தின்-கோபத்தோடு.

1179. தண்ணிய-தாழ்ந்த.

1180. கோலி - கால்களைக் கயிற்றால் தளைந்து.

1184. இப்பவத்தும்-இந்த ஜன்மத்திலும்.

1187. வெப்பு-உஷ்ணம்.

1188. குளிரி - நீர்த்துருத்தி, இழுது-செய்.

1189. விரைவு-வேகம்,வெயர்-வேர்வை

1198. விதுவின்-சந்திரனுடைய, இழிந்தான்-கீழேவந்தான்.

1199. சந்துமெழுகு - சந்தனத்தால் பூசப்பெற்ற.

1201. மாராயம்-சந்தோஷஸமாசாரம். மறலிதனைக்காய் மந்திரத்தை-ம்ருத்தியுஞ்செய மந்திரத்தை.

1202. அமலன்-குற்றமற்றவன்.

1203. வாராகரம்-சமுத்திரம். தானை-சைன்னியம்.

1204. மீதாகின்ற-மேலான.

1206. புலத்தைமுனியுமாமுனிவன் சுவேத கேது.

1209. மருகர்-மாப்பிள்ளைமார்.

1212. உள்ளப்பொருத்தம் - மனப்பொருத்தம்.

1214. மண்ணி -ஸ்நானஞ்செய்வித்து. கடவுட்சுடரை-அக்கினியை.

1217. கேதம்-துக்கம்.

1218. சோமமுடியோன் - பரமேசுவரன், பொது-கஷ்டம், துக்கம். கருணைபுனைந்தான் - கருணையை ஆபரணமாகக் கொண்டான்.

அரும்பதவுரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

# காதம்பரி வசனம்.

சீரார் கமலத் திருமா மகளுறையும்
ஏரார் மணிமார்பன் எம்பெருமான்—தாரார்
அரியபதந் தாழ்வா ரறியாமற் றாக்கில்
அரியபத முண்டோ வவர்க்கு.*

பொன்னாலாகிய சப்திக்கின்ற வீரக்கழல்களை யணிந்துள்ள காலினை யுடையவர்களும், அழகிய வெண்கொற்றக்குடையை யுடையவர்களும், பொன்னாற்செய்தநெற்றிப்பட்ட முதலியவற்றாலலங்கரிக்கப்பெற்ற யானைப் படையை யுடையவர்களும், பத்மாஸனியான லக்ஷ்மி எப்போதும் வாஸம் பண்ணுகின்ற பெரிய புஜங்களை யுடையவர்களுமாகிய அரசர்கள் பலர் இடைவிடாது வந்துவந்து வணங்குகின்றதினால், அவ்வரசர்கள் மலைபோலகன்ற தங்கள் மார்புகளில் அணிந்துள்ள திவ்யமான பரிமளத்தையுடைய அழகு மிக்க மலர்மாலைகளிலிருந்து வீழ்கின்ற மகரந்த ஜலத்தினாலும், அழகிய மாணிக்கங்க ளிழைக்கப்பெற்ற சிறந்த ரத்ன கிரீடத்தினாலும் எப்போதுஞ் செந்நிறம் பெற்று விளங்கும் தாமரைபோன்ற பாதங்களையுடையோனாய், கையில் சங்கசக்கரங்களைத் தரிக்கப் பெற்றமையால் மகாவிஷ்ணுவையும், மன்மதனை ஜயித்து விளங்குவதாற் சிவபெருமானையும், எல்லா உலகங்களையும் படைத்திடுதலாற் பிரமதேவனையும், சக்தியுடன் விளங்குதலால் ஷண்முகனையும், சகல புவனதலத்தையுந் தாங்குதலால் மேருவையும் ஒப்போனாய், சப்திக்கின்ற பெரிய கடலாகிய மேகலாபரணத்தை யணிந்துள்ள பூதேவிக்கு நாயகனாய், அரசர்களுடைய பெரிய பரிவினாலும், போரில் எவரும் எதிர்நிற்றற்கரிய ஒப்பற்ற பெருவலியினாலும் பகையரசர்களையெல்லாந் தலைவணங்கும்படி செய்த புகழினையுடையோனாய், மனத்தால் தருமதேவதையாய், ஐசுவர்யத்தாற் குபேரனாய், பாவனமான செய்கையால் அக்னியாய், ஜோதியால் சூரியனாய், கோபத்தால் யமனாய், கிருபையாற் சந்திரனாய், அழகால் மன்மதனாய், புத்தியால் பிருகஸ்பதியாய், உலகந்துதிக்கும் பெரிய பராக்கிரமத்தால் வாயுபகவானாய், கண்களில் திருமடந்தையும், தோள்களிற் பூமடந்தையும், நாவிற் கலைமடந்தையும் மிக்க விருப்பத்தோடு எப்போதும் வாழ்ந்து கொண்டிருக்க, விண்ணுலகிலுள்ள எல்லாத் தேவர்களுடைய உருவங்களையுந் தன்னிடத்தே கொண்ட திருமாலின் விசுவரூபமானது பலநாட் புரிந்த பெரிய தவத்தின் பயனால் மண்ணுலகில் வந்து

* அரியபதம்-திருமாலின் திருவடிகளை. தாக்கில்-ஆராயில், செய்யுளில். அரிய பதம்-அரிய பதவிகள், அரும்பதங்கள். தாழ்வாரவர்க்கு அரியபத முண்டோ என்க.

உதித்தாற்போல உதித்திட்ட சூத்திரக னென்னுங் கஜரத முதலிய படைகளாற்சிறந்த அரசர் கோமானைவன், சந்திரகுல மன்னர்களாகிய தனது முன்னோர்களெல்லாம் பரம்பரையாய்ச் செங்கோல் செலுத்தி அரசாட்சி புரிந்து வந்ததும், கங்காநதியையும் நாணமுறச் செய்கின்ற நருமதாநதியின் பிரவாகத்தினாற் சூழப் பெற்றதும், திருமகள் எப்போதும் நிலைத்து வாழ்கின்றதுமான மாளவ தேசத்தில், கடையான கலியுகமும் அக்கலியுகத்தின் கொடுமைகளுங் காணாதவண்ணம் பழைய கிருதயுகத்தின் அருண்மார்க்கமும், நீதியும், தர்மம் முதலியன பிறவும் ஓரிடத்தே திரண்டிருந்தனவென்னும்படி மேன்மையுற்று, ஒன்றிலுங் குறையில்லாததாய், பொன்னாற் செய்யப்பட்ட கோபுரங்கள் மாடங்கள் மாளிகைகள் முதலியன அமைந்த வீதியை யுடைத்தாகிய விதிசை யென்னும் ராஜதானியில் சுவர்க்கலோகத்தில் இந்திரன் வீற்றிருப்பதுபோல வீற்றிருந்து, எட்டுத்திசையையுந் தன் ஆளுகைக்குள்ளாக்கி ஏகசக்கராதிபதியாய் மிக்க தண்ணளியோடு மன்னுயிர்களை யெல்லாந் தன்னுயிர்போலக்கருதிப் பாதுகாத்துவந்தான்.

அவனது ராஜ்யத்திற் கட்டுண்டும் அடியுண்டுந் தளையுண்டும் படுவனவெல்லாம் புலவர்கள் செய்த பாட்டுக்களே, மட்டுண்டு மயங்குவனவெல்லாம் மதுகரமே, வழங்கப்படாதன வெல்லாம் பொய்ம்மொழிகளே, தலைகீழாக வெட்டுண்டு வீழ்வன வெல்லாங் கதலிக் குலைகளே, பறந்து நடுங்குவன வெல்லாங் கொடியாடைகளே, பங்கமுறுவன வெல்லாம் பழனங்களே, குறைந்து வருவன வெல்லாம் பூங்கொடிபோன்ற மாதர்களுடைய இடைகளே, கோபத்தைக் கொள்வன வெல்லாம் நீருண்ட மேகங்களே, மறந்துவிடப்படுவன வெல்லாம் பெரியோர்கள் வெகுளிகளே, மாசுபடுவன வெல்லாந் தீயே, தாள்பூண்டு அறைந்துகிடந்து அலறுவன வெல்லாம் அழகுற்ற பாவைமார்களது பரிபுரங்களே; இவ்வாறு புனைந்துரை வகையினல்லது நிஜமான இக்குற்றங்களை யுடையார் எவரும் இல்லை. அந்நாட்டு மகளிரது மனமென்னுங் கருங்கடல் வரம்புகடந்து செல்லாது. மைந்தர்களுடைய குணமென்னும் பெருங்கடலும் அவ்வாறே வர்ணமென்னுங் கரை கடந்து செல்வதில்லை. மிகுந்த விஜயபிரதாபத்தையுடையனான மன்மதன் மலர்க்கணை தொடுத்துப் பெரும் போர் புரியுங்காலத்திலும் அவர்களுடைய தகுதியை யறியாமற் போர்செய்யான்; ஒருபோது தவறிச் செய்தாலும் இருப்பினும் வலிய அவர்களது ஞானகவசமானது அவனது போருக்கு இடங்கொடுப்பதில்லை.

இவ்வாறு தனிச்செங்கோல் செலுத்திவந்த அவ்வரசர் கோமகனை சூத்திரகன், இளமை முதலிய எல்லா நன்மைகளும் அமையப் பெற்றவனாயிருந்தும், அஞ்சனந் தோய்ந்த தங்கள் அழகிய கண்பார்வையினாலே தன் மனத்தை வசீகரிக்கக் கூடிய அன்புடைய பல தேவிமார்களை யுடையவனாயிருந்தும், சந்தான விருப்பத்தையுடைய மந்திரிமாரனைவராலும் பிரார்த்திக்கப்பெற்றவனாயிருந்துஞ் சிற்றின்ப விஷயமான போகங்க ளொன்றிலேனும் ஆசையில்லாதவனாய், பூமண்டலத்தை யெல்லாம் ஜயித்துவிட்ட

படியால், மேல் ஜயிக்கப்படவேண்டிய ராஜ்யவிஷயமான சிந்தை யெதுவும் இல்லாதவனைப், அறிவில் சுரகுருவான பிருகஸ்பதியை இகழ்பவர்களாய், சகல சாஸ்திரங்களையும் நன்றாக வாதிக்கக்கூடிய ஸாமர்த்தியமுடையவர்களாய், அரசர்களுக்குப் பரம்பரையாக அமாத்தியத்தொழிலைப் புரிந்து வரும் மரபில் உதித்தவர்களாய், மனுநூலிற் கூறியுள்ள கிரமப்படி அறிய வேண்டுவனவற்றையெல்லாம் அறிந்தமைந்த மாட்சிமையையுடைய மந்திரிமார்களோடும், பருவம், எழில், அலங்காரம், சாஸ்திரவியுற்பத்தி, பண்பு, தேர்ச்சி, உருவம், புகழ் முதலிய இவைகளில் தன்னை ஒப்பவர்களாய், நிழல்போல ஒருகாலத்தும் பிரியாதவர்களாய், இங்கிதம், சைகை முதலியவற்றை நன்குணரும் நுண்ணறிவுடையோர்களாய், பெரிய முடிவேந்தர்களது குமாரர்களாயுள்ள தோழன்மார்களோடுஞ் சேர்ந்து, இயல் இசை நாடகம் காவியம் முதலாகிய பலதிறப்பட்ட உத்தமமான நூல்களின் விஷயங்களையெல்லாம் பரிசீலனஞ்செய்வதும், மாதர்களுடைய நர்த்தன விசேஷங்களைக் கண்டறிவதும், யானையேற்றங் குதிரையேற்றம் பழகுவதும், தேகப்பயிற்சி செய்வதும், கங்கையைத்தரித்த ஜடாமகுடத்தை யுடைய சிவபெருமானது பாதாரவிந்தங்களை அருச்சித்து வழிபடுவதுமாக இவற்றிலேயே தனது காலத்தையெல்லாங் கழித்துக்கொண்டிருந்தான்.

இவ்வாறு இருக்கின்ற நாட்களில் ஒருநாள், எட்டுத்திசையிலும் வியாபித்த இருளையெல்லாம் போக்கிச் சூரியன் உதித்து ஐந்தாறு நாழிகையான அளவில், அழகு செய்யும் ரத்னாபரண ஜாலங்கள் மாட்சிமையுற்ற நவகிரகங்களும் தேவர்களுந் திரண்டுவந்தாற்போல ஒளியை வீசத் தேவ சபைக்கு ஒப்பாகவிளங்குஞ் சபாமண்டபத்தில் இந்திரனைப்போல எய்தி, மின்னற்கொடியினையொத்த நுண்ணிடை மடவார்கள் இருமருங்கும் வெண்கவரி பணிமாற, பிரமதேவனை நிகர்த்த பிராமணோத்தமர்கள் அருமறையாசி கூற, 'இது என்னது, இது என்னது' என்று காட்டித் திறை செலுத்தி அடிவணங்கு மன்னவர்களும் மற்றைச் சூதர் மாகதர் முதலாகிய மங்கலப்பாடகர்களும் நெருங்கிநின்று மனங்களித்துப் புகழ்ந்து வாழ்த்தச் சந்திரகாந்தச்சிலையாற் சமைக்கப்பட்ட அழகிய மணியாசனத்தில், சந்திர விம்பம்போன்ற திருமுகத்தையுடைய லக்ஷ்மீகாந்தனான திருமால் ஆதி சேஷசயனத்தில் எழுந்தருளியிருந்தாற்போலச் சுந்தரம், தண்ணளி, சோதி, நீதி முதலிய அனைத்துந் துலங்கித்தோன்ற, ஜயமடந்தை, திருமடந்தை, புகழ்மடந்தை, கலைமடந்தை சமேதனாக வீற்றிருந்தான்.

அப்பொழுது, வாமபாகத்தில் அணைத்தவாளும், மெய்யோடு பொருந்தக் கையிற் பிடித்த பிரம்புமுடையளாய், பாம்பொடு பயிலும் புதியசந்தன லதை போன்ற அழகிய தோற்றத்தையுடையாளோர் வாயில் காப்பவள் வந்து அரசனை யடிபணிந்து, தூரத்தினின்று வாய்புதைத்து மிக்க வணக்கத்துடன், "விசுவாமித்திரமகாமுனிவரது தபோமகிமையால் சுவர்க்கலோகம் புகுந்த திரிசங்குவைச் சதமகனான இந்திரன் முனிந்திட்ட காலத்தில் அவனது புஜத்தில் வஸித்த ராஜலக்ஷ்மிதான் அச்சமுற்று வெருண்டு

பூமியிற் குதித்து வந்தனளோ என்று சொல்லத்தக்க தோற்றத்தையுடைய ஒரு பறை மடந்தை ஒரு கிளிக்கூட்டோடு அரமனையின் கடைத்தலையை யடைந்து 'மிகச்சிறந்த பொருளாகிய இந்த அபூர்வமான ரத்னம் நமது இறைவனுக்கே அருகமானது' என்று சொல்லித் தம்மைப் பணிதற்குப் பெரிதும் இச்சிக்கின்றாள்" என்று சொல்ல, அரசனும், 'நீபோய் அவளை அழைத்துவா' என்று கட்டளையிட, அவளும் அன்னவாறே சென்று, அந்தச் சண்டாளகன்னிகையை நோக்கி, 'அரசர் பெருமான் உன்னை உள்ளே வருமாறு கட்டளையிட்டருளினன்; ஆகையால் நீ விரைந்து செல்லுக' என்று கூறினாள். அதுகேட்டு அப்புலைமகளும் தேகமாத்யந்தம் பொருந்திய மிக்க நரையையுடைய கிழவனொருவன் முன்னேசெல்ல, ஒளிவீசும் பைம்பொன்னாற் சமைக்கப்பட்ட அக் கிளிக்கூட்டை யேந்திக் கொண்டு சிறுவனொருவன் பின்னேவர, முன்னந் திருப்பாற்கடல் கடைந்த காலத்தில் அங்குண்டான அமிர்தத்தைப் பங்கிடுவதற்கென்ற வியாஜத்தால் திருமால் கொண்ட மோகினி உருவைப்போலவும், நடந்து வருகின்ற மரகதப் பாவையைப்போலவும், செந்நிறமும், நீலநிறமும் பொருந்திய துகில்களை முறையே முட்டாக்கிட்டும் உடுத்தும் வந்த தன்மையினால் சந்தியாகாலத்துச் சூரியனது ரக்தவர்ணமான கிரணங்கள்பட ஒளிர்கின்ற நீலமலர் நிறைந்த தடாகத்தைப் போலவும், வெண்மைநிறம் பொருந்திய தோட்டை ஒற்றைக்காதி லணிந்து கொண்டிருந்ததால் சந்திர மண்டலத்தோடு பொருந்திய மிக்க இருள் செறிந்த இராத்திரியாகிற ஸ்திரீயைப் போலவும், நெற்றியிற் கண்ணைப்போல விளங்குகின்ற செந்நிறமான கோரோசனைப் பொட்டினழகினால், தாழ்ந்த ஜாதியான வேட்டுவச்சியின் உருவத்தைக்கொண்டு வருகின்ற கண்ணுதலோனான சிவபெருமானது தேவியாகிய பவானியைப் போலவும், முத்தமாலையை யணிந்துள்ள செயலால், இனிய பாங்கியென்ற மோகத்தைக்கொண்டு கங்கையால் இறுகத் தழுவப்பெற்ற யமுனாநதியைப் போலவும், செம்பஞ்சுக்குழம்பின் செய்ய ஒளியானது விஞ்சியெழுகின்ற பங்கயமலர் போன்ற பாதத்தினழகால், மகிஷாசுரனது சிரத்தை யறுத்து, அதிற் பெருகிவருகின்ற இரத்தந்தோய அச்சிரத்தைத தன காலால் மிதித்துவருகின்ற காத்யாயனியைப்போலவும், எப்போதும் மாயனுடைய மணிமார்பத்தி லுறைதலால், அவன் இருண்ட அழகினால் தனது சிவந்தமேனி நாளடைவில் மாறிக் கரிதாகப் பெற்ற திருமங்கையைப்போலவும், காமதகனப் புகையுள் நின்ற ரதிதேவியைப் போலவும், பார்வை மாத்திரத்தில் இன்பம் பயக்கும் பரிசால் அழகிய சித்திரத்தைப்போலவும், பாதங்களிலுண்டாகிய மிக்க காந்தியானது அடிக்கடி பரந்து வருதலால், மணித்தறையில் அறைபட்டுக் கால்கள் கன்றிவிடுமோ என்கின்ற பரிவினாற் சேடியர்கள் சோலைகளிலுள்ள அசோகினது புதிய செந்தளிரை யெல்லாங் கொய்து கொய்து முன்னே பரப்ப, அதன் மீது விருப்போடு நடந்து வருவாள் போல நடந்துவருபவள், தன் அழகைக்கண்டு மிகவியந்து 'இவள் தண்ணிய குலத்தினள் என்று கருதிப்

பிரமதேவன் கையால் தொடாமல் இதயத்தின் நினைவால் சிருஷ்டித்த கோலமாம் இது' என்று அதிசயப்படும் அரசர்கோமகனைக் கிட்டி அவனது பாதத்தை வணங்கிச் சற்று விலகி நின்றாள். அப்போது உள்ளபடி வயது சென்ற அந்த நரைமுது கிழவன், பொற்பஞ்சரத்தினின்று அக்கிளியைத் தன்கையிலே எடுத்து வேந்தன் முன்னர் வைத்து, 'அழியாப் புகழ் படைத்த அரசே! காடுகளில் சஞ்சரிக்கின்ற கிளிகள் ஏதோ அற்பமான இரண்டொரு சொற்களைத்தானே சொல்லும் என்று அவமதிக்கலாகாது; இதோ இந்தக் கிளியானது வேதம், இதிகாசம், புராணம், வியாகரணம் முதலிய சாஸ்திரங்கள், நாடகம், காவியமாகிய எல்லாவற்றையும் நன்குணரும்; அவற்றி னுண்மைப்பொருள்களையெல்லாம் செவ்வனே எடுத்து உரை செய்யும். நான்கு விதமான கவிகளையும் நன்றாகப் பாடும். சோதிடத்தில் நல்ல தேர்ச்சியை யுடையது. திரிகாலத்து வர்த்தமானங்களையும் உள்ளபடி அறியும். அதிகமாகச் சொல்வதேன். எல்லாக் கலைகளுக்கும் இது இருப்பிடம் என்னலாம். தக்கோர்களெல்லாங் கண்டு ஆசைப்படுகின்ற இதற்கு வைசம்பாயனன் என்பது பெயர். பெரியோனே! இந்தக் கிள்ளை நினக்கன்றிப் பிறரெவருக்குந் தகாது என்ற அபிப்பிராயத்தைக் கொண்டு எங்கள் இறைவன் திருமகளான இவள் நீ மனமகிழும்படி இதனைக் காணிக்கைப் பொருளாகக் கொண்டுவந்தாள். ஆகையால், அரசர்கள் பெருமானே! இதனை யன்போடு அங்கீகரித்தருளல்வேண்டும்' என்று சொல்லிவிட்டுப் பக்கத்திலே போய் நின்றான். அத்தருணத்தில் பஞ்சரத்தினின்றும் புறப்பட்ட அச்சொற்கிளியானது அச்சபையோர்களையெல்லாம் ஒருமுறை சூழப்பார்த்துவிட்டுப் பின் அவ்வேந்தன் முக நோக்கிப் புகழ்ச்சியாகக் கீழ்வரும் இரண்டு பாக்களையுஞ் சொல்லிற்று:—

பொறைக்கிறை யாய நின்னடி வணங்காப் புரவலர் பூவையர் கொங்கை
சிறைப்படு விழிநீர் மஞ்சன மாடிச் சிலைமதன் விகாரமுந் துறந்து
மறத்திறம் பயிலு மிதயகுண் டத்து வயங்குசோ கானல மருவி
நறைப்புகைச் சீரா காரமுந் துறந்து நற்றவ முயல்வன போலும்.

எழ்கடன் முழுது மஞ்சன சாலை யெழுகிரி நின்பத பீடஞ்
சூழ்கிரி வலைய நின்னகர்ப் புரிசை சோதிமுச் சுடருநின் றீபந்
தாழ்கழ லரசர் நின்பரி சனங்க டகுதிசேர் கோளநின் கவிகை
வாழ்கதிர் முடியாய் நின்பெரும் பெருமை வாக்கினு லுரைக்கரி தன்றே.

இவ்வாறு மொழியக்கேட்ட அரசர்கோனும் அளிபெரிதுடையனாய், மிகவும் ஆச்சரியமெய்திப் பிரதான மந்திரியாகிய குமாரபாலிதனை நோக்கி, 'தெளிபவர் போல எல்லாந் தெளியுமோ கிளியும்?' என்று வியந்துகூற, அமைச்சர் கோமான் அவ்வார்த்தையைக் கேட்டு, மிக அழகாகச் சகல சாஸ்திரவிஷயங்களையும் பேசுகின்ற இக்கிளியைப் பற்றி நாமும் வியந்து கூறுவோமாயின், இதனால் ராஜகாரியங்களெல்லாந் தாழ்வடையும்; ஆகையால், நமது செங்கோல் வேந்தன் இது விஷயமாகத் தன் திருவுள்ளத்தைச் செலுத்தாதிருக்கும்படி, நாம் நமது வாக்குசாமர்த்தியத்தால் மீட்க

வேண்டுமென்று கருதி மன்னனை நோக்கிக், "கேளாய், நரபதிதலைவனே! முன் யானை முதலிய எல்லாமுமே வாக்குடையவைகள்; அக்கினி பகவானது சாபத்தாற் பின்னர் அதனை இழந்துவிட்டன; அவற்றில் இப்போது அற்பம் வாக்குடையவைகளாகக் காணப்படுகின்ற கிள்ளையும் பூவையும் வாக்குடையவர்களான மனுஷ்யர்கள் தமக்குப் பன்முறை சொல்லித்தந்தனவற்றைத் திரும்பவும் ஒருகாற் சொல்லுதற்கு மாத்திரஞ் சிறிது திறமையுடையவைகளாக இருக்கின்றன. அவ்வளவே இக்கிளியுஞ் சொல்லிற்று. பிரமாதமான வாக்வல்லபம் எதுவும் இதற்கிருப்பதாக நான் நினைக்கவில்லை" என்று கூறினன். இவ்விதம் இவர்கள் பற்பல விஷயங்களையும் பற்றிப்பேசிக் கொண்டிருக்குஞ் சமயத்தில், கதிரவன் வானினுச்சிக்கு வந்ததை யறிவிக்கும் நாழிகைக் கணக்கர், முரஜம் சங்கம் முதலிய பற்பல வாத்தியங்களைப் பொலிவுடன் முழக்கவே, வேந்தன் தனக்கு நிகரான மற்றை ராஜகுமாரர்களை யெல்லாஞ் சூழ நோக்கி, முடியோடு முடிக ளுரிஞ்சி மூண்ட ஓசையும், தொடியோடு தொடிகள் எற்றித் தொடர்ந்த பேரொலியும், மணங்கமழும் மலர்மாலையில் மொய்த்த மதுகரங்கள் பொம்மென எழுந்துபாடும் இசையும், பாதம் முதலியவற்றில் அணிந்துள்ள பல்வகையான ஆபரணங்கள் எல்லாம் அசைந்தெழுகின்ற அரவமும், பாவைமாரது இனிய பாடல்களின் தொனியும், தாளிலிட்ட பரிபுரத்தின் நாதமும், மேகலையின் சப்தமும், கைகளிலணிந்துள்ள வளையல்களின் குரலும், சேவை செய்கின்ற அரசர்களெல்லாம் "ஜய, ஜய" என்கின்ற முழக்கமுமாகிய இவையெல்லாந் தம்முட் கலந்து பேரொலியாகியெழ, சிம்மாசனத்தினின்று மெழுந்து, வேந்தர்கள் அமைச்சர்கள் முதலியோர்களை யெல்லாம் விடைகொடுத்தனுப்பி, கிளியைக் கொண்டுவந்த அந்த நீசகன்னிகையைச் 'சிரமபரிகாரஞ் செய்து கொண்டுவா' என்று கூறி விடுத்து, கிளியையும் உள்ளே கொண்டு போமென்று போக்கி, அன்பு மிக்க தோழன்மார்கள் சிலருடன் கோயிலுக்குட் பிரவேசித்து, ஆபரணங்களை யெல்லாங் களைந்து வைத்துவிட்டு, சாயங்கால சமயத்தில் தனது மண்டலத்தை யாருங் கண்கூசாமற் பார்க்கலாம்படி கிரணங்களெல்லா மடங்கி விளங்குஞ் சூரியனைப்போன்ற தோற்றத்தை யுடையனாய் வியாயாம கூடத்தினுட் சென்று, பருத்த தோளும் அகன்ற மார்பும், புன்னகை பொலியும் வதனமும் வேர்க்கும்படி யனேக வித விளையாட்டுக்களைப்புரிந்து, பின் வலம்புரி முழங்க, மாகதர் மங்கலம் பாட, அவ்விடம் விட்டுப் பெயர்ந்து, ஒரு பொற்றோணி நிறைய நிரப்பப் பட்டலையெறிகின்ற தெண்ணீரானது மானஸ ஸரஸைப்போல அழகுற்று விளங்க, பக்கத்திலே போடப்பட்டிருக்கும் ஸ்படிக பீடமானது அத்தடாகத்தில் வஸிக்கும் ராஜஹம்ஸம்போலத் திகழ, ஆச்சரியமான வேலைப் பாடுகளுள்ள பொற்குடங்களினும், பெரிய வெள்ளிக் கும்பங்களினும், ஒளி வீசும் ரத்ன கலசங்களிலும் பூரித்து வைத்துள்ள பரிமளமான திவ்ய தீர்த்தத்தைப் பானம்பண்ணி அவற்றின் மீது மொய்த்துக் கொண்டிருக்குங் கரிய மதுகரங்கள் அக்கலசங்கண்மீது அலங்காரார்த்தமாக அணிந்

துள்ள கருநிறப் பட்டைப்போன்று அழகுசெய்ய, புறவடி தெரியாவண்ணங் காற்சட்டை போட்டுக்கொண்டும், சிறிய கொடியிடை தளராதபடி சேலையை யிறுக்கிக் கட்டிக்கொண்டும், பருத்த இளங்கொங்கைகள் அசையாதிருக்கும் விதமாய்க் கச்சை நன்றாக இறுக்கி முடிந்துகொண்டும், குழல்கள் இடையே சரியாத பிரகாரமாய் அவற்றை அழகாக எடுத்துக் கட்டிக்கொண்டும், கைவளையைக் குடுக்கித் தோள்வளையை யிறுக்கிக் குழையை மீதேற்றிக் கொண்டும் அரசர்பிரானை நீராட்டஞ் செய்விக்குமாறு மின்னிடை மடவார்கள் பரிவோடு நின்று கொண்டிருக்கிற இளமரக்காவி னடுவே யுள்ள மஞ்சனச் சாலைக்குட் சென்றுபுக்கு, புழுகுகாப்பணிந்து, சுகந்த ஆமலக விழுதைத் தேய்த்துக்கொண்டு அத்தோணி நீரிலே யிறங்கி நெடுநேரந் திளைத்து விளையாடியபின் அதினின்று மெழுந்து, அருகே யிடப்பட்டிருந்த பளிக்குப் பீடத்திலே அன்னத்தின்மீது எழுந்தருளி யிருக்கும் வருணபகவானைப்போல இனிதமர்ந்து வீற்றிருக்க, அங்கே தெரிந்து பூரித்துவைத்திருந்த திவ்ய தீர்த்தங்களினாலே பைந்தொடி மடவார்கள் நீராட்ட நீராடி, ஈரமாற்றிய பின், பாம்பின் சட்டையைப்போல இழைபோனது தெரியாத அவ்வளவு மெல்லிதாய் வெண்மையுமாயுள்ள இரண்டு ஆடைகளை யுடுத்துக்கொண்டு, உச்சிக்குரிய கடன்களையும் நான் முறைப்படி செய்து, திரிபுராந்தகனை சிவபெருமானது திருவடிகளைக் கிரமப்படி ஆராதித்து, பின் அக்னிகாரியங்களையும் நிறைவேற்றிவிட்டு, திவ்யமான பரிமள திரவியங்களைப் பூசிக்கொண்டு, பூமாலை பொன்றையும் முடியிலே தரித்து, ஆடைகளையுங் களைந்து சாத்தி, தன்னை யொத்த ராஜகுமாரர்களோடு போஜன மருந்தி, வாய்பூசி, முகவாசங்கொண்டு, தாம்பூலந் தரித்துப் பின்னர் அங்குநின்று புறப்பட்டு, ஓர் சேயிழைமடந்தை செங்கை தாங்கச் சென்று, துங்கமான வெண்பட்டினாலே நாற்புறமும் வளைந்து, சந்தனங் குங்குமம் பன்னீர் முதலியவற்றால் மெழுகி, மங்கலமாக எங்கணும் பூக்களைச் சிதறி, அதிரமணீயமாய் இருப்பதொரு மண்டபத்தை யடைந்து, அங்கே யழகிய பளிக்கு வேதிகையின்மீது வெள்ளிய மேல் விரிபை விரித்து, அதன்மேல் அநேக பட்டின் கொட்டைகளையுஞ் சேர்த்திய பைம்பொற்பீடத்திலே, ஏந்திழை யொருத்தி யடிவருட வீற்றிருந்து அன்பர்களான ராஜகுமாரர்கள் சிலரோடு அளவளாவிக் கொண்டிருந்தான்.

அப்போது மின்னற்கொடியையொத்த மெல்லியலொருத்தி கிளியினது வாசகங்களைக் கேட்கவிரும்பிய மன்னனது கட்டளையின்படியே அவ் வைசம்பாயன னென்னுங் கிளியைச் செங்கையிலேந்திவந்து அரசன் திருமுன்னே வைக்க, பார்த்திபன் அச் சுகத்தைப் பார்த்து, 'நமது அரமனைக்கு வந்தபின்னர் ஆகாரமாகப் பெற்றன உண்டோ?' என்று வினவ, அக் கிள்ளை 'இறைவனே! கேட்பாயாக, கோகிலத்தின் கண்கள்போலக் கருகி, யுள்ளே சிவந்து, தித்திப்போடு சிறிது துவர்ப்புமுடைய நாவற்கனிகளும், சிங்கத்தாற் பிளக்கப்பட்ட யானையினது மத்தகத்தினின்று சிந்திய இரத்தங்கலந்த முத்தினையொத்த மாதுளங்கனியின் விதைகளும், மரகத மணி

போன்றபிராசின ஆமலக பலங்களும்பிறவும், யான் கொண்டனவற்றிற்கு முடிவில்லை; நினது பெரிய தேவிமார்கள் மலரைப்போன்ற தங்கள் திருக்கரங்களால் திருத்தி அருத்தியபடியால், ஐயனே! நுகர்ந்தன அனைத்தும் அமுதத்தை யொப்பாயிருந்தன' என்று சொல்லத், தோன்றலும் 'துதித்ததுபோதும்; இவ்வார்த்தையை விட்டு, அறிவான் மிக்க பைங்கிளியே! நீ எனது மனத்துதித்த அவாவடங்கும்படி நான் கேட்பனவற்றிற் கெல்லாந் தக்கவாறு விடையளிப்பாயாக' என்று இரந்துகொண்டு, 'நின் பிறப்பின் வரலாறு என்ன? வைசம்பாயன னென்னும் பெயர் நின் பிதாவினாலேயே நினக்கு இடப்பட்டதா? தலைமைவாய்ந்த இந்தக் கலைகளெல்லாம் நினக்குத் தபோதனர்களது வரப்பிரஸாதத்தால் வந்தனவோ? அன்றி ஜன்மாந்தர அனுஸ்மரணத்தால் வந்தனவோ? இன்றேல் உள்ளபடி யோதியுணர்ந்தனவோ? இதற்கு முன்னர் நினது வாசஸ்தானம் எது? நினக்கு எவ்வளவு வயதாயிற்று? நீ இக்கிளியினது சரீரத்திலே மறைந்து வாழ்கின்ற தவமுனியோ? வேறு யாரோ? இவ்வாறு இந்தப் புலையன் கையிற் சிக்குண்டு என்பால் வந்ததேன்?' என்று வினவியருளத் தத்தையும் அத் தராதிபனைப் பார்த்துப், 'பரவைசூழ்ந்த பாருலகெல்லாம் பரிந்து காக்குஞ் செங்கோலரசனே! உமக்கு இவற்றை யெல்லாங் கேட்கவேண்டுமென்ற ஆதரமுண்டாகின் கேட்டவையனைத்துங் கூறுவேன், உவந்து கேட்டருள்வீராக' என்று இனிய தனது வரலாறுகளையெல்லாம் விஸ்தாரமாகச் சொல்லத் தொடங்கிற்று:—

"நாடோறும் உமது சேவார்த்தமாக வருகின்ற அரசர்கள் தொழுதெழுதலினாலே சிவப்படைந்திருக்கின்ற மலர்போன்ற பாதத்தையுடைய மன்னர் மன்னவ! திருமகள் மருவிவாழ்கின்ற மத்யம தேசமாகிய ஆரிய பூமிக்கு ஒரு சிறந்த ஆபரணமாய், மேல்கடல் தொடங்கிக் கீழ்கடல் பர்யந்தம் ஒரே தொடர்ச்சியை யுடையதாய், நிலமடந்தையின் திருவரையிலே தரித்த ஆடை யென்னலாம்படி விளக்கமுற்று, சூரபுன்னை திலகம் வகுளம் மாதுளை சூதம் நாகம் கவிர் அசோகு திருமரம் மருது பாதிரி செருந்தி சண்பகம் நரந்தை தக்கோலம் குரவு அகில் பலா குங்குமம் சாதி கூவிளை கைதை கற்பூரம் அரிதகி கதலி தாழை சம்பீரம் அழிஞ்சில் ஆர் ஆசினி வதரி முதலிய மரங்களும் இத்தகைய பிறவும் இடையே நெருங்கி, அவ்விடத்தே சஞ்சரிக்கின்ற யானைத்திரள்களின் மதஜலத்தையே நீராகக் கொண்டு நினைவினும் அதிகமாக மேனோக்கி நீண்டு வளர்ந்து மலர, இது மலர், இது நக்ஷத்திரம் என்று வேற்றுமை காணமாட்டாத தெய்வமடந்தையர்கள் முனிவர்களது பத்தினிமார்களுடன் கலந்து விளையாடுகின்ற சிற்சில சூழல்களையும், மாதவி முல்லை மாலதி நாகவல்லி மல்லிகை மிளகு முதலிய சீதளமான லதைகள் விருக்ஷ முழுதும் இடமில்லாமற் சென்று படர்ந்து, நிலவு வெய்யில் காற்று என்னு மிவைகள்கூடச் சென்று புகுதற்கரியதாய், அங்கே கிடக்கின்ற சூரிய காந்த சந்திர காந்தக் கற்களினால் இராப்பகல் விளங்கி, வழிச்செல்வோர்கள் படுத்துறங்கிய பல்லவசயனம்

எவ்விடத்துங் காணக்கூடியதாய், மலர்களினின்று பெருகுகின்ற தேனாகிற நீரைத் தெளித்து, மகரந்தப் பொடியாகிற மணலைப்பரப்பி, அழகிய நானாவித மலர்களைச்சிதறி வனதேவதைகள் விளையாடுகின்ற மண்டபங்களினாலும், வியக்கத்தக்க பற்பல பெரிய லதாகிருகங்களின் வரிசைகளினாலும் விளங்குகின்ற சிற்சில சூழல்களையும், சிங்கங்களினாற் கொல்லப்படுகின்ற யானைகளின் பிளிற்று முழக்கத்தையும், அச்சிங்கங்களின் நகபந்திகளிலே யழுந்திக்கிடக்கின்ற அவ்யானையின் முக்தாபலத்தை யிச்சித்து அங்குள்ள வனசரர்களாற் கொல்லப்படுகின்ற அச் சிங்கங்களினுடைய இடிமுழக்கம் போன்ற பெருங்குரலையும், கூட்டங் கூட்டமாய் அக் கானவர்கள் வேட்டையாடுகின்ற பெரிய ஆரவாரத்தையுங் கேட்டு வெருவிச் சரீர முழுதுஞ் சிலிர்த்திருக்கின்ற புளக மென்னும்படி முட்கள் செறிந்து திகழ்கின்ற சிற்சில வனபூமிகளையுந் தன்னிடத்தே கொண்டு, வானவர் முனிவர் தானவர் இயக்கர் மானிடர் சித்தர் காந்தருவர் முதலிய யாவரும் உறைந்து வாழ்கின்றதினால் அகில லோகமும் ஒரு வனவடிவமாய்த் திரண்டு பூதலத்தில் வந்து தங்கியிருந்தாற் போன்ற தோற்றத்தை யுடைய விந்த்யாடவி என்னும் பெயர்பூண்ட பெரிய வனமொன் றுள்ளது; அவ் வனத்துள் தண்டகாரணிய மென்ற ஒரு பெரிய பிரதேசமு முள்ளது. அதில், மேனாள் தம்பியான லக்ஷ்மணனை துயில் முதலியவற்றைத் துறந்து அல்லும் பகலும் இடைவிடாமற் குற்றேவல் புரிந்து வில்லுங் கையுமாய்ப் புறங்காவல் செய்துகொண்டிருக்க, ஸ்ரீராகவன் தானுந் தன் தேவியுமாகத் தேவர்களும் வணங்க எழுந்தருளியிருந்ததும், பஞ்சவடி யென்ற நல்ல பெயரை யுடையதும், அதிவேகமாக ஓடுகின்ற கோதாவரிக்கரை யருகே விளங்குவதுமான ஒரு ஆச்சிரம முண்டு. அதன் சமீபமாக, தமிழ்மொழியை வளர்த்தருளிய மஹானுபாவனான குறுமுனிவன், இல்லற தர்மத்தை முற்றுமுணர்ந்த தனது தருமபத்தினியாகிய லோபாமுத்திரையோடும், திருமகனான திருடதஸ்யூ என்பவனோடும், ஐம்புலன்களையும் வென்ற முனிஜனங்களெல்லாந் திருவுள்ளமறிந்து திருவடி தொழ வீற்றிருந்தருளிய மேன்மைபெற்ற ஆச்சிரம மொன்றும் இருக்கின்றது. அதற்கு அருகாக, சமுத்திரத்தை யெல்லாங் குடங்கையிற் கொண்டு ஆசமனஞ் செய்தருளிய அகத்திய முனிவரது அகந்தையைக்கண்டு அகமிக வெள்கிப் பெருஞ்சினங் கொண்ட வருணன் சிக்கெனச் சென்று இறைஞ்சிப் பிரார்த்திக்க, அவனது பிரார்த்தனைக்கிரங்கிக் கமலாசனனாகிய அப்பிரமதேவன் அக் குறுமுனிவனுடைய பகுமானத்தை மீளவும் பெறும்படியாகச் சமுத்திரத்தினும் பன்மடங்கு பெரிதாய்ச் சிருட்டித்ததொரு தடம்பெருங் கடலைப்போலத் தயங்கி, முனிவர்களுடைய மரவுரியின் துவர்களினாற் சிவந்தும், அடர்ந்த கூந்தலினையுடைய வேட மங்கையர்கள் கொங்கையில் திமிர்ந்த சந்தனத்தின் துகள்களால் வெளுத்தும், காட்டானைகளின் மதஜலங்களாற் கறுத்தும், புனிதமான தாமரை மலர்களினின்று பொங்கி வழிகின்ற மதுப் பெருக்கினாற் பொன்னிறத்தைப் பெற்றும், கரையினது நாற்புறமுஞ் சூழ்ந்துள்ள

குளிர்ச்சியையுடைய பசிய சோலைகளினாற் பசுநிறத்தை யுற்றும் விளங்குகின்ற பற்பல துறைகளை யுடையதாய், மோதியடிக்கின்ற பெரிய அலைகளின் திகு திகு திகு என்கின்ற முழக்கமும், மதுவைப் பானம்பண்ணிய வண்டினங்கள் களித்து விளையாடுகின்ற மொகு மொகு மொகு என்கின்ற அரவமும், யானைகள் வலியையுடைய நீண்ட துதிக்கைகளினால் நீர் முகந்து குடிக்கின்ற முகும் என்கின்ற ஒலியும், சக்கரவாகம் முதலிய நீர்நிலையே வசிக்கின்ற புட்குலங்களும், அன்னம் முதலிய எனைப் பறவைத் தொகுதிகளும் பறந்து செல்கின்ற இன்னதென்று அறியமுடியாத இரைச்சலும், முனிவர்களுடைய கமண்டலத்தினுண்டாகும் கல கல என்கின்ற தொனியுமொன்றுசேர்ந்து பேரொலியாய்த் தேவர்கள் வசிக்கின்ற சுவர்க்கலோகமுஞ் செவிப்படும்படி முழங்கப்பெற்றதாய், வனதேவதைகள் நீராடுதலினால் மிக்க பரிமள முடையதாய், தாழம்பூவினின்று உதிர்கின்ற நறிய மகரந்தப் பொடிகள் மணற்குன்றைப் போலக் கரையிடத்தே விளங்கப் பெற்றதாய் அழகுகொஞ்சும் பம்பையென்றதோர் பொய்கை விளங்காநிற்கும். அதன் மேல்பக்கத்தில், சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரத்தினாலே ஸ்ரீராமபிரான் எய்தருளிய ஏழு மராமரங்களின் பக்கத்தே, பாத்திகட்டினாற்போல மிகப்பெரியதோர் பாம்பு அடிமரத்தை வளைந்து சூழ்ந்துகொண்டிருக்க, மதகரித்திரள்கள் தினவு தீர்தற்பொருட்டு உராய்ந்து செல்வதால் தோய்ந்துள்ள மதத்தைப் பானம்பண்ணுவதற்காக அதில் மொய்த்துள்ள வண்டொழுங்கானது, வயது சென்ற கிழமரமென்று கருதி. அதற்கு உரமாக இருப்புப்பட்டங் கட்டியிட்டதுபோல விளங்க, விருத்ததனைகயினால் நரம்பெழுந்தன என்னும்படி. மேலெல்லாம் பற்பல கொடிகள் படர்ந்து மிடைய, ஜரைமுதிர்ந்த சாலத்திற் காண்கின்ற கறுப்புப் புள்ளிகளைப்போல உடல் எல்லாம் முட்கள் செறிய, பெரிய ஆயிரந் திருக்கைகளை உலகெல்லாம் பரப்பிப் பிரளய காலத்திற் சந்திர சூடனை எம்பெருமான் தாண்டவம் புரிந்ததுபோலத் திசைகடோறுஞ் சென்று பரந்து நெடுங் கிளைகள் பல அசைய, இந்திரனுடைய நந்தன வனத்தை எப்படிப்பட்டதென்று பார்க்க எண்ணிய தென்னும்படி வளர்ந்தோங்கி, மேலுலகிலுள்ள மங்கையர்கள் கீழிறங்குவதற்காகச் செய்த ஏணிபோலவும், அல்லாத தெய்வப் பைந்தொடி மடவார்கள் எந்த வானுலகத்தையும் இருந்தபடியே பார்த்தற்காகச் செய்த மேனிலம்போலவும் விளங்கி, தழற்கிரணனை சூரியனது ஓராழித் தேரிற் பூட்டிய குதிரைவாய் நுரைபோல மேலெல்லாம் வெள்ளிய பஞ்சுகள் விரிய, வாவிகள் தோறுஞ் சென்று நீர் பருகி வந்து உறைகின்ற புட்குலங்கள் போலக் கடனீரை முகந்தெழுந்த மேக ராசிகளெல்லாம் வந்து தங்குதலினால் அழகிய பற்பல கொடுமுடிகளையுடைய விந்த்ய பர்வதத்தை யொப்பதாய், விந்த்யாடவியென்னுந் திருவைக் கிளையென்னுங் கைகளினாலணைக்கின்ற சான்மலி விருக்ஷம் ஒன்றுண்டு. அத் தருவில், 'இது எவர்க்கும் ஏறவொண்ணாதது, ஈடுபடாதது' என்று கருதி உலகிலுள்ள கிளிகளனைத்துந் தத்தம் பெருஞ்சுற்றத்தோடும் போந்து, இலையுதிர்ந்த

முதுமரம் மீளவுந் தளிர்த்திட்ட பசிய தழைகள்போல நெருங்கி, கிளைகள் தோறும் பொருந்திய பொந்துகளிற் கூடுகட்டிக்கொண்டு, இரவெல்லாம் அக்குடம்பையி லடங்கிக் கிடந்து, இருள் புலரும் அதிகாலையில் எழுந்து பலவிடத்தும் பறந்து சென்று இரை கவர்ந்து, நெற்கதிர் முதலியவற்றை யும், கனிகளின் ரஸத்தையுங் கிரகித்துக்கொண்டு மாலைப்போதில் திரும்பி வந்து தத்தங் குஞ்சுகளுக்குக் கொடுத்துக் கோடரத்தில் தங்கியிருக்கும். அங்கு அவைதம்மில் ஓர் பொதும்பிற் சாலவும் வயது சென்று, பெடையுந் தானுமாய் வாழ்கின்றதோர் கிளிக்குப் பூர்வஜன்ம கர்மவசத்தினாலே நான் பிள்ளையாய் வந்து பிறந்தேன் வேந்தனே! பின்னுங்கேட்டருள்வீராக. மகா பாவியாகிய என்னைக் கருவுயிர்த்திட்ட வேதனையைச் சகிக்கமாட்டாதவளாய் எனது மாதா இறந்துவிட்டாள். அப்போது, தேவியைத் துறந்த துயரத்தை வெளிக்காட்டாமல் உள்ளேயேயடக்கிக்கொண்டு, பற் பல தீவினைகளைச் செய்தவனான என் மீது தனது பிராணனிலும் அதிக மாக அன்புவைத்து, மேல் என்னை ரக்ஷிப்பதற்கான மார்க்கத்திலேயே தன் சிந்தையைச்செலுத்தி, கட்டுவிட்டு இளகி அநேகமாக எல்லாம் உதிர்ந்து விட, உதிர்ந்தொழியாத இரண்டொரு இறகுகளைமாத்திரம் உடையனான எனது பிதா, தன்பாலுற்ற நரையை யுதறுதல்போல உடல் நடுநடுங்கச் சிறிதும் பலமில்லாமற் போனமையால், நடத்தல் பறத்தல் என்னுமிவற் றிற்கு அனருகனாய், அயல் வாழ்கின்ற மற்றைக்கிளிகளின் கூட்டினின்று சிந்திய நெல், தினை முதலியவற்றின் குரல் நொய்யைக் கொணர்ந்து நான் உண்டுபசிதீர்ந்தபின் மிகுதியிருப்பதைத் தான் நுகர்ந்து காலங்கழிக்கும். என்னை இவ்விதமான பெரிய பரிவோடும் வளர்த்துக்கொண்டிருந்த காலத் திலே, ஒருநாள், கமலத்தினது செந்நிறம்பொருந்திய மதுவை நுகர்ந்து அதிலேயே திளைத்து உடல் சிவந்ததோ ரன்னம் ஆகாச கங்கையினின்று மேகி மேல்கடலையடைந்தாற்போல மின்னிறங்கொண்ட அமிர்த கிரணனான சந்திரன் செந்நிறமுற்றுக் குடகடலில் விழ, அந்தரதலத்திலே சிந்திக் கிடக்கின்ற நக்ஷத்திரங்களாகிய விடுபூக்களைத் தனது கிரணக்கற்றைக ளாகிய பத்மராகத் திருவலகினாலே கூட்டி பொதுக்கிச் சுத்தமான வெளி நிலமாக்கிக் கதிர்க்கடவுளான சூரியனுதிக்க, அப்போது 'இறைவன் தோன்றினான், வணங்குவார் வணங்குமின்கள்' என்பனபோல மயில்கள் திசைதொறுங் கூவிக்கொண்டு ஆட, குகைகளிற் கிடந்து துயில்வுறுஞ் சிங் கங்கள் அறிவுற்றுத் தீவிழித்து மூரிபோய் நிமிர்ந்து புறப்பட, அது கண்டு மடப்பிடிகள் மதபரவசத்தினாலே யொன்றுமறியாது உறங்குகின்ற களிறுகளை யெழுப்ப, காதலுற்றுக் கலந்த வேடமங்கையர்களது வேர்வை நீரையும் விடாயையும் பரிகரித்து மலரினது பரிமளங்களைத் தந்து மந்த மாருதம் வந்துவந் தசைய, தாமரை மலர, ஆம்பல்வாய் குவிய, அவ்வாறு உதித்த இரவியினது வெம்பிய கதிர்களுஞ்சிறிது வந்து உலவுங் காலத்தில், கடல்போல ஒலித்துப், பசிய பொழிலொன்று பறந்து செல்வதுபோலப் பசுங்கிளிகளெல்லாம் விண்ணிற் பரந்து, பசிதணியத்தக்க இடந்தோறும்

பறந்து சென்றன. நானும் எனது தந்தையும் மாத்திரம் எங்களுடைய கோடரத்திலே தங்கியிருந்தோம்.

அப்போது, யாளி மான் முட்பன்றி யானை காட்டெருமை சிங்கம் முதலாகிய மிருக ஜாதிகளும், மென்மையான பக்ஷங்களையுடைய பறவைத் திரள்களும், பொங்கி யெழுகின்ற கடலைப்போல எவ்விடத்துங் கதறிக் கொண்டே ஓட, வேடர் முதலிய சிறிதும் இரக்கமில்லாத வெங்கணாளரெல்லாம் நாலுபக்கமுஞ் சூழநின்று பெருங்கூச்சலிட்டு வேட்டையாடுகின்ற பெரிய ஆரவாரத்தை நான் கேட்டு, நடுநடுங்கி, உடல்குன்றி, மனமழிந்து, 'இது விபரீதமான தொரு பேரொலி' யென்று பயந்து, எனது தந்தையின் பக்ஷத்தினுட் புகுந்து, அழுந்த அணைத்துக்கொண்டு, அலமலந்து, 'இன்றோடு நாம் தொலைந்தோம்' என்று எண்ணிக்கொண்டு அப்படியே புல்லிக்கிடந்த காலத்தில், வரவர அதிகமாகிக் கொடிதான பூசல்கள் விதம் விதமாக எங்குங் கிளம்பிவிட்டன. 'மதம் மணக்கின்றது, ஆகையாற் கரிகள் இந்தத் திசைவழியாகச் சென்றிருக்கவேண்டும்' என்று சொல்லிக்கொண்டு சிலர் அவ் வாசனையைத் தொடர்ந்து பிடித்து ஓடுவார்கள்; 'இது கடித்துமிழ்ந்த முத்தின் வாஸனையாகும்; ஆகவே, இது பன்றிதான்' என்று சிலர் அவ்விடஞ் செல்வார்கள்; 'இது மயிற்குரல், இது கிளிக்குரலாகும்' என்று சிலர் அதில் ஏகுவார்கள்; 'இது சருகிலுண்டாகிய சலசலப்பு; நிச்சயம் இங்கே மானுண்டு' என்று சிலர் அங்கு மண்டுவார்கள்; சிலர் வலையை யெடுத்து முடுக்குவார்கள்; சிலர் பலமுகமாக வளைந்து நெருக்குவார்கள்; சிலர் வில்லை வளைத்து நாணொலி செய்து பெருஞ்சினத்தோடு பற்பல அம்புதொடுத்து எய்வார்கள்; இலைமறைவிற் சிலர் ஒளித்துப் பதுங்கியிருந்து உபாயம் இயற்றுவார்கள்; தலையைத் துடைத்துவிட்டுக் கோபம் பிறக்க முகத்திலும் எச்சிலையுமிழ்ந்து தாவிப் பிடிக்கும் வேட்டைநாய்களைச் சிலர் ஏவிவிடுவார்கள்; இவ்வண்ணமாய்க் கொலைத்தொழிலைப் பூண்ட அவ் வேடர்கள்சிலைவளைத்துக் கணைதொடுத்தெய்தும், கொடுஞ்சினங்கொண்டு சீறி வேல் முதலியவற்றாற் குத்தியும் வதஞ் செய்யச், சிறிது தூரம் வரையில் ஓடி, அப்பாற் செல்லமாட்டாமற் குற்றுயிருங் குறையுயிருமாய் வீழ்கின்ற பற்பல மிருகத்திரள்கள் உயிர் பறியுங் காலத்தில் வாய்விட்டுக் கதறும் ஓசையினாலே மலைகலக்கிய கடல் என்னும்படி அக்கானம் நிலைகலங்கி மறுகிவிட்டது. இவ்விதமான அந்தப் படுகொலை யாரவாரம் நெடுநேரம் நிகழ்ந்தபின் கொஞ்சங் கொஞ்சமாய் முழுதுந் தணிந்துபோனதாக, நானுஞ் சிறிது பயந்தணிந்து, தந்தையின் சிறகினின்றும் வெளிப்பட்டுக் கோடரத்தின் வாயிலில் வந்து, எட்டியெட்டிப்பார்த்து, மிகவும் அச்சத்துடன் நடுங்கியு மொடுங்கியும் நின்றுகொண்டிருந்தேன். அப்போது, கரிய காளமேகக் கூட்டங்கள் தனித்தனி சிதறிக் கப்பு விட்டு நடந்ததோ, சத்திய பராக்கிரமனான ஸ்ரீராகவன்மீது ராவணனுடைய வெய்ய சேனைக்கூட்டம் நடந்ததோ, சிங்கவாகனியான காளியினுடைய பிசாசபூதம் அடங்கலும் வந்ததோ என்னும்படி கோளிலுங்

கொடிய வேடர் கூட்டம் எழுந்து நடந்தது. கடல்போன்ற அவ்வேடர் படையி னடுவிலே, இரும்பாற்செய்து வைத்தாற்போன்ற சிக்கென்று கரிதாய் உருண்டு திரண்ட தோள்களில் யானையின் முத்தோடு குன்றிமணியையுங் கலந்து கோத்து அணிந்துகொண்டாற்போலச் செவ்விய பச்சுதிரத் துளிக்குள் வெள்ளிய வேர்வை நீர் துளங்க, சிநேகம் என்பதனைச் சிறிதுங் கேட்டறியாத வஞ்சகனுை யமனுடைய அபராவதாரமோ, கொடுமைக் கெல்லாம் இருப்பிடமாகிய கலிகாலத்தினது உள்வரிக்கோலமோ, உலகத்தவர் தன்னைக் காணுமாறு மூர்த்திகரித்து வருகின்ற பாவமோ, மாயத்தின் வடிவமோ என்னும்படி மாதங்ககன் என்ற பெயரை யுடைய வேடனொருவன், தாம் குடித்த மானினது ரக்தத்தை மீளவும் உமிழாநின்றன என்னும்படி யொளிவிடுகின்ற மெல்லிய செவ்விய நாவை நீட்டிக்கொண்டு, சூரியனது கிரணத்துண்டங்கள் என்னத்தக்க வெள்ளிய பற்களின் நடுவே தாம் கடித்துதறிய சிங்கத்தினது பிடரிமயிர் ஒட்டிக்கொண்டு தொங்க, நிச்சயம் இவைகள் உளைமுளையாதனவாகிய சிங்கக் குட்டிகள்தாம் என்று வியந்துரைக்குமாறு ஒடி வேட்டையாடுகின்ற நானாவித வர்ணத்தோடுகூடித் திகழ்கின்ற நாய்கள்பல தன்னைச்சூழ்ந்துவர வருகின்றவனைக் கண்ணெதிரே கண்டு 'இப்படி ஒரு ஜாதியு மதற்கனுகுணமான அனுஷ்டான கிரமங்களும் இருந்தபடி என்னே! நரபலி யிடுதலே யிவர்கட்குப் புண்ணிய கருமங்கள்; புலாலும் மதுவுமே யிவர்கட்கு அன்னபானத்துக்கு அருகமான திரவியங்கள்; தனித்தனி யிருந்து கடல்முட்டக் கதறுகின்ற நரியோசையே இவர்களுக்கு நல்ல சாஸ்திர பாடங்கள்; இத்துராத்மாக்களுக்கு இவை தீயன, இவை நல்லன என்று ஹிதோபதேசஞ் செய்கின்ற சுகிர்த்தான பரமாசாரியர்களுங் கோட்டான்களேயாம்' என்று இவ்விதம் நான் எண்ணமிட்டுக் கொண்டேயிருக்க, அந்த வேடர் சேனபதியும் நாங்களிருந்த அந்த இலவ மரத்தின்கீழ்ப் பெரிய தனது சேனையோடும் வந்து, சிலையை நாண்மாற்றி, ஏனைய வேடர்களாற் பரப்பப்பட்ட செவ்விய தளிராசனத்தில் வீற்றிருந்தானுக, அவர்களில் வில்வேட்டையிற் சமர்த்தனான வேடனொருவன் கடல்போலகன்ற பம்பைப் பொய்கையை யடைந்து, மேலேயுள்ள மாசுபடிந்த புனலைக் கையால் விலக்கித் தள்ளி, அழகிய செந்தாமரையினது பசிய இலையொன்றைப் பறித்துச் சுத்திசெய்து குடமாக்கி, அது நிரம்பத் தெளிந்த நீரை முகந்து, தாமரைத் தண்டுகள் சிலவற்றையும் பிடுங்கிச் சேறுபோகக் கழுவி யெடுத்துக்கொண்டு, அம் மாதங்ககன்பால் வந்து, 'எந்தாய்! இவற்றைப்பருகிச் சிறிது இளைப்பாறுக' என்றுவைக்க, தண்ணிய சந்திரகலையைப் பசியோடு தாவிப் பருகுங் கருநிறமுடைய இராகுவைப் போல, அவன் வெள்ளிய அந்தச் செந்தாமரைவளையங்களை மிகத்தின்று பசிதணிந்து, குளிர்ந்த நீரைப்பருகித் தாகமுந் தீர்ந்தவனுகித் தண்ணிய இருப்புச் சங்கிலிகளாற் பிணிக்கப்பட்ட வலி பொருந்திய நாய்க்கூட்டங்களையுடைய பெரிய தன் சேனைத் திரளோடு மெழுந்து நெடுந்தூரம் போய்விட்டான்.

அப்பால் அவன் போனபின், அவர்களோடு சேர்ந்து வந்தவனும், வேட்டையாடிய மாமிசங்களிற் சிறிதும் பங்கு கொடுக்கப் பெறுதவனுமாகிய ஒரு கிழவேடன், 'தேனுந் தசைகளும் மாதங்ககன் எனக்கு ஒரு சிறிதுந் தந்திலன்; அவன் கண்முன்பாக யானும் எனது ஆருயிர்கொண்டு வாழப் பெறுவேன்' என்று சினந்து சொல்லித் தசையின்மீதுள்ள நசையினால் நாங்களிருந்த அச் சான்மலித்தாருவை மேலுங்கீழுமாகப் பலமுறை பார்த்தான்; அவ்வாறு பார்த்ததுதான் எனக்குத் தெரியும்; அம்மரத்தின் மீது எவ்விதம் ஏறினன் என்பதை யான் அறியேன். நொடிப்பொழுதில் அவன் அதன்கிளையின் உச்சியில் ஏறி நிற்பதைக் கண்டேன். முட்டையினின்று வெளிப்பட்டு இரண்டொரு தினங்களே கழிந்தனவாகிய சில ரக்தவர்ணமான புதிய இலவமொட்டை நிகராகவும், சிறைகள் அதிகமாக முளைக்கப் பெறுதனவாகிய இளங்குஞ்சுகள் சில செம்மையும் பசுமையுங் கலந்த தாமரையினது சிறிய இளஇலைகளை யொப்பாகவும், பச்சென்று செவ்வனே சிறைகள் அரும்பாதனவாகிய சில எருக்கங் காய்களை நேராகவும், செந்நிறம் பொருந்திய மூக்கையுடையனவாகிய சில செந்தாமரையின் முகையை யிணையாகவும், இவ்வண்ணம் பற்பல விதமாக இளமைத் தன்மை பொருந்திய கிளிகளையெல்லாம் வாரிவாரி யெடுத்து, ஐயோ! கொடியோனாகிய அந்தப் புளிஞன் அலங்கோலமாக அவற்றையெல்லா மென்னைத்திருகிக் கீழே யெறியக்கண்டு, மனந்திடுக்கிட்டு, மேல் இன்னது செய்வதென்பதைச் சிறிது மறியாதவனாய் அறிவுகலங்கிச் செயலற்ற என் தந்தை, கண்ணீர்பெருக விழிசுழன்று, அலமரலுற்றுக், காலுஞ் சிரமும் உடம்பும் நடுநடுங்கிப், பாவியாகிய என்னைப் பிழைப்பிக்கும் உபாயம் யாது என்பதையே சிந்தித்து, என்னை யிறுகத்தழுவியணைத்துச் சிறகினால் மூடித் தண்ணீர் வற்றி வறட்சி யடைந்த நாவினையுடையனாய், என்மீது வைத்த பெரிய அன்பினாலே மிகுந்த பரிதாபத்தையெய்தி அங்ஙனே விதியை நொந்துகொண்டிருந்தான். பாதகனான அந்த வேடனும் ஒவ்வொரு கிளையாக அந்த மரத்தினுடைய அநேகங் கிளைகளிலுஞ் சஞ்சரித்துக் கடைசியாக நாங்கள் வசிக்கும் பொதும்பின் சிறிய துவாரத்தின் வழியாகக் கொழுத்த பன்றிநிணத்தினது முடைநாற்றம் வீசுகின்றதும், கிருஷ்ண ஸர்ப்பத்தையும், யமதண்டத்தையும் போன்ற பயங்கரமான தோற்றமுடையதும், பனைமரம்போலக் கறுத்து நீண்டதுமான தனது கையைச் சிறிதும் ஆலோசனையின்றி நெடுக நீட்டி, கதறிச் சிறகைச் சிலுப்பிக்கொண்டு கன்றியமனத்தோடு பலதரம் மூக்கினாலே கொத்திய எனது பிதாவை அவன் பிடித்து மென்னைத் திருகிய காலத்திலும், அதன் சிறகிற்குள் தீவினையேனாகிய நான் மறைந்திருப்பதை அறியாதவனாய் உதறிக் கீழே வீசி யெறிய, நாங்களிருவரும் அம்மரத்தின்கீழ் உதிர்ந்து கிடக்கின்ற சருகின் குவியலிலே வீழ்ந்தபடியினாலே உடல் சிதறுண்டு போகவில்லை. வீணே யுயிர்பெற்றெழுந்த சிறியேனான நான் எந்தையை யப்போது கைவிட்டு, ஒன்றையுமே சிந்திக்காமல், எப்படியாவது நாம்

உயிர்பெற்றெழுந்தாற்போதும் என்கின்ற அவ்வாவையே கருதி, துணை யாவாரொருவரையுங் காணக்கிடையாமல், அவ்விடம் விட்டுப்பெயர்ந்து, அருகே பச்சென்று தழைத்து மேகம்போலக் குளிர்ந்து மணங்கமழுந் தமாலமரத்தினடியிலே மெல்ல மெல்லப் போய்ச் சேர்ந்து மறைந்தேன். இவ்விதஞ் சிசுஹத்திசெய்த அந்தச் சண்டாளனும் அம்மரத்தினின்றுங் கீழேயிறங்கிக் குனிந்து நின்று அங்கே சிதறண்டுகிடக்கின்ற கிளிகளை யெல்லாம்வாரி ஒரு குடலைக்குட்பெய்து இறுகக்கட்டிக்கொண்டு முன்னம் வஞ்சகர்களான அவ் வனசரர்கள் சென்றவழியே தானுஞ் சென்றான். அவன் அவ்வாறு ஏகியபின்னர், நான் எனது பிதாவைச் சாகக்கொடுத்த துக்கத்தினாலும், அதிதூரத்திலே விழப்பெற்ற சோர்வினாலும், நெஞ்சத் தோடுயிரையுமே தகிக்கவல்லதொரு நெருப்பைப்போல எனக்குப் பெரிய தோர் மரணதாக முண்டாயிற்று. அந்த நீர்வேட்கை என்னைக் கொன்றிட்ட படியினாலே, 'அவ்வழியே சென்ற கொடும்பாவி இந்நேரம் எவ்வளவு தூரம் போயிருப்பன்? இன்னமும் அவன் திரும்பிவருவானோ?' என்று இதையே சிந்தித்து, மிக்க பயத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே, 'நீருள்ள திசையிற் சென்று ஒருதடாகத்தைச் சந்தித்து யுயிரைக்காப்பாற்றுதல் தவறன்று' என்று புறப்பட்டு, நிலைநிற்கமாட்டாத இரண்டுகாலும் நடுநடுங்க நின்றும், பற்பலமுறை நட்டும், தலையை முன்னே குத்தி மார்பினால் தவழ்ந்தும், சரிந்து ஒருபுறத்திலே தாழ்ந்தும், பலமில் லாத சிறகை யூன்றி யூர்ந்தும், மருண்டு புரண்டும், உருண்டுருண்டு எழுந் தும், சக்தியில்லாமையினாலே களைத்துப்போய் மேனோக்கிப் பெருமூச்சு விட்டும், அடிக்கடி செயலற்றோய்ந்தோய்ந்திருந்தும் எந்தையைக்குறித்து,

அன்னைதான் மரிக்க வன்னையு நீயா யையனே! யையனு மாகி
யென்னைநீ வளர்த்தா யிப்படித் தனியே யிருந்துநா னிருந்துய ருறவோ?
வுன்னைநான் பிரிந்து பட்டதே யமையும் யானுமுன் னுடன்வரு கின்றேன்
முன்னையே யியநீ யன்னையார் தமக்கு மொழிந்திடாய் வினையனேன் வரவே.

என்று பற்பல சொல்லிப் புலம்பியும் நான் மனமழிவுற்றிரங்குதலினாலும், எந்தையா ரடிவயிற்றிலேமூட்டிய தீயினாலும், அதிஉக்கிரத்துடன் சூரியன் நெருப்பை வாரிச் சொரிதலினாலுங் கண்களிருண்டு வாய்புலர்ந்து, சாரசம் முதலிய நீர்வாழ்பறவையின் ஒலியினால் தடாகம் அதிகதூரத்திலுள்ளது என்று அறிகையினாலே 'நாம் இனி இறந்தோம்' என்று நிச்சயித்து அங் கேயே வேறு கதியில்லாமற் கிடந்தேன்.

அப்போது, அப்பிரதேசத்தின் பக்கத்திலே யுள்ளதொரு ஆச்ரமத் தில் எழுந்தருளியிருக்கும் அருணெறியை நன்குணர்ந்தவராகிய ஜாபாலி என்னுந் தபோதனரது குமாரனும், யாவரும் புகழ்ந்து பணிகின்றவனு மான ஹாரீதன் என்போன், செந்நிறத் தபனன்போன்ற தன் திருமேனியி னொளியால் திசையெல்லாம் இளவெயிலைப் பரப்பி, தாமரைத்தந்துவினாற் செய்யப்பட்டது போன்ற முந்நூலும் கிருஷ்ணாஜினமும் மார்பிலேவிளங்க, வலக்கையிற் பிடித்த பலாசத் தண்டமு மதன்மேல் திருப்பளித்தாமமும்,

இடக்கையிற் பிடித்த ஸ்படிக கமண்டலமும், இருபுடை யலைந்த செஞ் சடையும், அரையில் தரித்த மரவுரியும், நெற்றியிலிட்ட வெள்ளிய புண் டரமும், வலதுசெவியில் மாட்டிய ஜபமாலையும், உச்சரிக்கின்ற வேத கோஷமுமுடையனாய், ரிஷிகுமாரர்களோடு உச்சிக்காலத்திற் செய்யவேண் டிய அநுஷ்டானத்தைச் செய்து முடிப்பதற்காக நன்னீர் சூழ்ந்த பொய் கையை நாடிப் பிரீதியுடனே வருபவன் என்னையும் என் இடரையுங் கண்டு, கழிபெரும் இரக்கமுற்று, 'பச்செ<sup></sup>ன இறகு முளைத்ததுமில்லை; ஐயோ! இந்தப் பசுங்கிளிக் குஞ்சை வலிய சிறகையுடைய பருந்துதான் அடித்து வீழ்த்தியதோ? அன்றிக் காற்றுத்தான் அலைத்துத் தள்ளிவிட் டதோ? வீழ்ந்தவிதம் எப்படியென்று தெரியவில்லை; வாயை அடிக்கடி திறந்து, கண்களுமூடி, மரிப்பதுபோலப் பெருமூச்செறிந்து, தாயைக் காணுத்துயரத்தினால் ஆவி தளர்ந்தது; இப்போது நாம் இதனைக்கொண்டு போய் நீர்பருக்கி இதன் பிராணனைக் காப்பாற்றுவோம்; தோழன்மீர்! இதை எடுமின்கள்' என்று என்னை எடுக்கச் செய்து, குளிர்ந்த தீர்த்தத் தையுடைய பம்பைப் பொய்கையை நண்ணிப் பெரிய தண்ணளியினாலே என்னை ஒருகையிலே யேந்தித், தன் கைவிரலின் நகத்துநுனியால் நீர்த் துளிகளை என் தாபமெல்லா மாறும்படி என்வாயிற் புகட்டி, அதிக பிரீதி யுடன் முகத்திலுந்தெளித்து, உடம்பிலுந்தடவி, போனபிராணன் எனக் குத் திரும்பிவரச் செய்து, என்னைக் கரையின்மேற் குளிர்ந்ததோரிடத் திலே வைத்து, ஓர் தாமரையிலையினால் மூடி, பின்னர் மற்றை முனிகுமாரர் களோடு தானும் அப்பொய்கையுளிறங்கி, சாஸ்திர விதிப்படி நீராட்டஞ் செய்து, வேதவாக்கியங்களைச்சொல்லிச் சூரியனுக்கு அருக்கியங்கொடுத்து, மரவுரியைக் களைந்து வேறு உடுத்துக்கொண்டு, நீண்ட ஜடையை நீரற உதறி, விதிமுறைப்படி கமண்டலத்தையும் பூரித்து, அறிவில்லாத் திரியக் கான என்னையுங் கையிலே ஏந்திக்கொண்டு, ஆச்சிரமாலயத்தை நோக்கித் திரண்டுவரும் ரிஷிகுமாரர்களுடன் சேர்ந்து சிறிதுதூரஞ் சென்றவளவில், பற்பல காய்க்குலைகளும், நிறைந்த பூங்கொத்தும், மெல்லிய தளிர்க்கற்றை களும் நிறைந்து விளங்கப்பெற்ற மிளகு ஞாழல் முந்திரிகை வெற்றிலை முதலாகிய பூங்கொடிகள் பலவும் இடமின்றிப்படர்ந்து பொலிகின்ற பற்பல சோலைகளுடனே 'தவமுந் தவமுடையார்க் காகும்' என்றபடி தவஞ் செய்தற்குப் பாக்கியம் பெற்றவர்களான முனிவர்களுடைய ஆகுதிப் புகையுஞ் சோபானவரிசையைப் போலச் சுழன்று சுழன்று ஆகாயத்தை யளாவ, சமிதைகள் குசங்கள் தருப்பைகள் கந்தமூலங்கள் தேவாமிர்தத் தினு மினியனவாகிய கனிகள், சாகங்கள், நீவாரதானியங்கள் இவற்றைக் கிரகித்துக்கொண்டு, தங்கள் தங்களுடைய சாகைகளைச் சந்தை சொல்லிக் கொண்டே பிரமசாரிகள் பின்னேவர, முன்னே திமிதிமி யென்று வந்தடை யுந் தெய்வத் தன்மைபொருந்திய முனிகணங்கள் திகழ, அந்த முனிவர்க ளது அருமறைக் குரலையுற்றுக் கேட்டு அருகுறைகின்ற சுகங்களுஞ் சாரி கைகளும் பொழிலின்மிசையே யிருந்து அவர்களோதுகின்ற வேதங்களை

புச்சரிப்ப, யானைகள் தங்கள் துதிக்கையினால் நீர் முகந்து தாவுகின்ற மான்குட்டிகளுக்கு அருத்த, மயில்களின் அழகிய பெரிய தோகைகளிலே சிறிதுஞ் சிந்தையின்றி அரவங்கள் புகுந்து மெத்தென்று கண்டுயில, தபோதனர்களுடைய ஹோமாக்கினி யவிதலைக்கண்டு பசிய மயிற்குலங்கள் விரித்துள்ள தங்கள் பெரிய தோகைகளைக் கொண்டு அவைகள் அவியாமல் விசிறி ஜ்வலிப்பிக்க, வழிதெரியாமல் வருந்தி நீங்கிய அந்தர்களான ரிஷிகளுக்கு அவர்களுடைய அருளைப்பெற்ற குரங்குகள் பரிவோடு கோல் பிடித்து வழிகாட்ட, சிறிய மான்குட்டிகளும், சிறிய மரைக்குட்டிகளும் உளைமுளைத்துள்ள சிங்கக்குட்டிகளோடு பேதமின்றிக் கலந்து பெண்சிங்கத்தினது முலையை யூட்ட, உணர்வில்லாத யானைக்கன்றுகள் அரிமாவின் பிடரிமயிரைத் தாமரைவளையமென்று துதிக்கையாற் பிடித்து இழுக்க, அக்கோளரிகளும் அன்புற்று அசையாமல் அங்கேயே கிடந்து கண்ணுறங்க, மதத்தால் மயங்கிய யானைகள் தங்கள் மதத்திலே வந்துவீழ்ந்த வண்டுகள் இதத்தோடு அவற்றைப் பானம் பண்ணும்படி அசையாமல் இரங்கிநிற்க, இவ்வாறே பலதிறப்பட்ட விலங்கினங்களும் மெய்யருள்கொண்டு, முனிவர்களது ஆச்ரமபதத்திலே வஸிக்கப் பெறுகின்ற தன்மையினால் இயற்கையாகவுள்ள தங்கள் பகைமை மறந்து அன்புகொண்டு ஒழுக, வெங்கலி சிறிதுங் கண்டறியாததாய், மெய்யை யல்லாதவைகள் புகுதற்கு அரியதாய், அனங்கனென மன்மதனால் மறந்துவிடப் பட்டதாய், பூமியின் மேலும் மற்றோர் பிரமனுலகம் அமைந்துள்ளதோ என்னுஞ் சங்கையைத் தருவதாய், தருமமே நிலைத்துவாழ்கின்ற இடமாய், மனத்திற்குப் பெரிதும் ஆனந்தத்தைத் தரத்தக்கதாயுள்ள ஆச்சிரமமொன்று அதிரமணீயமாய் விளங்கித் தோன்றியது.

அந்த ஆச்சிரமத்தின் நடுவிலே, மிகச்சிறுகாமலும் அளவு கடந்து விரியாமலும் நிதானமான ஓர் அளவுடையதாகி, தபோதனர்களான முனிவர்களுடைய கருணைவாரிதிபோல மிக்க விஸ்தாரமுடையதாய்த் தன்னை வழிபடுகின்ற சத்திய விரதர்களான அம் முனிவர்களுக்கு அக்னிபகவான் சந்நிதி செய்து வைத்ததாமென்னும்படி அழகிய மலர்களுஞ் செவ்விய இளந்தளிர்களுஞ் செக்கச் செவேலென்று எங்கணும் பரந்துநின்று ஒளிர, சகல சாஸ்திரங்களையும் நன்கு பயின்றவர்களாகிய அம் முனிஜனங்கள் பலருங் கட்டித் தொங்கவிட்ட குசங்கள், சீவரங்கள், மரவுரியாடைகள், கமண்டலத்திரள்களாகிய இவைகளினு லலங்கரிக்கப்பட்டு எல்லாப்பக்கங்களிலுங் கவிந்துகொண்டிருக்கின்ற பற்பல கிளைகளால் நிறைந்து மணங்கமழ்கின்ற செவ்வசோக மரத்தின்கீழ்ச் சூரியனொளிபோலச் சிவந்த செவ்விய சந்தனத்தினாலே அழகாக மெழுகப்பட்டு விளங்குகின்ற மிகப்பரிசுத்தமான பூமியிலே, பூரணமான மனத்திருப்தியை யுடையவர்களாய், ஒன்றினு மாசையின்றி, அனாதியான வேதங்களையும், இதிகாச புராணங்களையும், மற்றைத் திருமுறைகளையுங் கற்கவேண்டிய கிரமப்படி கற்றுத்தேர்ந்து, மனமொழிமெய்களாகிற திரிகரணமு மொத்து, திவ்யமான காந்தியோடு

விளங்குகின்ற முனிகணங்கள் புடைசூழ, தான்செய்த புண்ணியகருமங்கள் பாதமுதற் கேச பரியந்தந் தன்னைச் சூழ்ந்து பெருமை செய்தாற்போலச் செறிந்துள்ள வெள்ளிய நரையினாலே வாலியனாய், மிகவும் மூப்படைந்து, ஏனைய முனிஜனங்கள் யாவரையுந் தன் தவத்தினாலே ஜயித்து நாட்டிய வெற்றிக்கொடிகள் போன்று, தசைவற்றி என்பெழுந்துள்ள சரீரத்தி னிரு மருங்கிலும் நீண்ட பற்பல செவ்வியசடைகள் வீழ்ந்துபுரள, பிறைகவிழ்த் தாலொத்த வெள்ளிய புருவங்களிரண்டுந் தளர்ந்து தொங்கி யிமையைவந் தமுக்க, குறைந்த பார்வையும், மிகக் குழிந்தாழ்ந்த கன்னங்களும், ஐம்புலன்களாகிற குதிரைகளை யணைக்குங் கயிறுகளைப்போன்று சரீரமெங்கும் புடைத்தெழுந்த நரம்பும், சுவர்ணமயமான மேருமலையிலே சிதறிக்கிடக் கின்ற நீலமணியை நிகர்ப்ப வடிவெல்லா மிவர்ந்துள்ள மறுவும், உந்திக் கமலத்தில் வந்து வீழ்ந்த தாடியும், கருணைக்கு இருப்பிடமாகிய கண்மலர் களும், சந்திர கிரணத்துக்குச் சதிர்சமான முப்புரி நூலும், அரையில் தரித்த மற்கலையும், கையிற்பிடித்த திரிதண்டமும், சிந்தையினும்வெண்மை யான பஸ்ம புண்டரங்களும், ஜபவடமும், கமண்டலமுமாகிய விவைகள் வந்து வந்து அடிபணிவோர்களுடைய வெந்துயர்களையெல்லாம் மாற்றிநின் றொளிர, பவக்கடல் கடக்கும் பாலமாய், ஆசையென்னும் படர்கொடி நிறைந்த காட்டை வெட்டி யழிக்குங் கூரிய மழுவாய், தவக்கடலுக்கோர் சந்திரனாய், சாந்ததையென்னு முத்தமகுணந் தங்கிவாழு மிடமாய், அள விடலரிய கலைகளுக்கெல்லா மெல்லை நிலமாய், அகவிருளகற்று மாதபனாய் விளங்காநின்ற ஜாபாலி என்னும் ஒரு முனிவர்கோமான் வீற்றிருந்தான்.

தவச்சிரேட்டனை அந்த ஹாரீதமுனிவன் என்னை அந்த அசோக விருக்ஷத்தினது சாயலில் ஓர்பால் வைத்துவிட்டு, கிருபாநிதியாகிய அந்த ஜாபாலி முனிவனது திருவடிகளை வணங்கிச் சென்று, சிறிது தூரம்விட்டு மெத்தென உட்கார்ந்தான்; அப்போது, மேன்மைபொருந்திய மற்றை முனிவர்களெல்லாம் அவனை நோக்கி, 'இந்தத் தத்தையை நீ எங்கே கண் டாய்? இவ்விடம் எடுத்துக்கொண்டுவந்ததற்குக் காரணந்தான் என்ன?' என்றுவினவ, 'வாவியை நோக்கிச் செல்லும் மார்க்கத்திலே மணலில் வீழ் ந்து ஆவி குறைந்து வாட்டமுற்று, வெயிலின் உஷ்ணந் தாங்கமாட்டாமல் வெம்பி, பாவிகள் எரிவாய் நரகில் வீழ்ந்து பதைக்குமாறுபோலப் பதை பதைக்கக் கண்டு, நான் மனநொந்து விரைந்துபோய் இதனை யெடுத்துக் கொண்டேன்; இது வசிக்கின்ற மரம் நாங்கள் ஏறுதற்குமுடியாதபடி மிக உன்னதமாக வளர்ந்திருந்தபடியால், சரேலென்று பொய்கைக்குப் போய்ப் புனல்கொண்டு இதன் தாபத்தைத் தணித்து, புதிதாகப் பக்ஷங் கள் முளைத்துப் பறக்கும் பருவம் வரும் வரையிற் காப்பாற்றுவது நமக்குத் தருமமா மாகையினாலே நான் இதனை இங்கே யெடுத்துவந்தேன்' என்று ஹாரீதன் அதற்கு மறுமொழி யளித்த பின்னர், பெருந்தவமுடைய அம் முனிவர்கோமான் தனது குன்றிய பார்வையினாலே யென்னைப் பலதரங் குனிந்து பார்த்து, ஒன்றை மறந்துபோய்த் திரும்பவும் அதனை உணர்ந்

திட்ட மாதிரியாய்த் தனது சடைமுடிதுளக்கி, 'பாபகர்மங்களின் பலன் இன்னதென்று இதோ பிரத்தியக்ஷத்தில் நன்கு விளங்காநின்றது' என்று கூறியருளினன். அதுகேட்ட முனிவர்களெல்லாம், 'எம்பெருமானே! தேவரீர் திரிகால ஞானியாகையாற் சுவர்க்க மத்ய பாதாலம் என்கின்ற மூவுலகிலும் வாழ்கின்ற ஜீவராசிகளடங்கலும் பூர்வ ஜன்மங்களிற் செய்துள்ள நல்வினை தீவினைகளெல்லாம் இன்னவென்று நுமக்குத் தடையறத் தெரியும்; ஆகையால், அடிகள் இதனைநோக்கி அருளிச்செய்த மாதிரியினாலே இக் கிள்ளையாரது விருத்தாந்தம் அபூர்வமானதொன்றாயிருக்குமெனத் தோற்றாநின்றது. போன ஜன்மத்தில் இது யார்? செய்த தீவினைகள் என்ன? என்பனவற்றைத் திருவுள்ளமுவந்து அடியேங்களுக்கு அருளிச்செய்யவேண்டும்' என்று பிரார்த்திக்க, அந்த முனிவர்பெருமான் அவர்களை நோக்கி, 'வாரீர் தவச்செல்வமுடைய பெரிய முனிவர்களே! இதனுடைய பூர்வ சரித்திரம் மிகவும் விஸ்தாரமானது. எல்லாவற்றையும் ஒன்றுகூட விடாமற் சொல்வதற்கு இப்போது தேசகாலமில்லை; சந்தியாகாலசமயமும் நெருங்கிவிட்டது; போய் அநுஷ்டானங்களைச் செய்துமுடித்துக் கிடைக்குங் காய்கனிகளைப் புஜித்துவிட்டு அபராத்திரியிலே வாருங்கள்; அதற்குள் இந்தக் கிளியும் ஆகாரங்கொண்டு சுகமாக இளைப்பாறியிருக்கும்; நான் உங்களுக்கு இதன் விருத்தாந்தத்தைச் சொல்லும்போது இதுவுங் கனவுகண்டு விழித்தாற்போலத் தனது பழைய சரித்திரம் நினைவிற்குவரப்பெற்று உணர்வுடையதாகும். அந்த விந்தையையும் நீங்கள் பார்ப்பீர்கள்' என்று முனிவர்கணம் புடைசூழ எழுந்திருந்தருளினன்.

அப்போது, முனிவர் குழாங்கள் சந்தனமுதலியவற்றோடு கொடுக்கும் அருக்கியங்களெல்லாஞ் சென்று தோய்ந்ததுபோலச் சூரியமண்டலஞ் சிவந்தது. 'இனிமேல் அருந்ததியுதிக்கும், அவள் திருமேனிமேல் நமது கரம்படலாகாது' என்னுங் கருத்தைக்கொண்டு அருக்கன், உள்ளே சுருங்கிய கரத்தையுடையனாய், அக்கடலிலே துயில்கின்ற மாயவனது திருநாபிக் கமலம்போல மேலைவாரிதியில் வீழ்ந்து மறைந்தான். மறைதலும், அப்பரவையிலுள்ள பவளக்காடடங்கலும் மேலே யெழுந்தாற்போலச் செக்கர் வானந் தோன்றியது. நாயகனை சூரியன் பிரிந்துபோன விரகவேதனையைச் சகிக்கமாட்டாமல், 'இவ்வுபாயத்தினால் நாம் நமது காதலனை நாளைச் சாரலம்' என்று யோஜித்து, மொட்டாகிய கமண்டலத்தையும், எங்கும் நிறைந்திருக்கின்ற அன்னங்களாகிய வெண்பட்டையும், அழகிய தங்கள் வளையமாகிற முந்நூலையும், வண்டொழுங்காகிற ஜபமாலையையுங்கொண்டு செங்கமலவாவி தவம்புரிவதுபோல விளங்கிற்று. வெய்யவனை தினகரன் குதித்திட்ட விசையினால் மேலே கிளம்பிய அவ் வேலைநீர்த் துவலைபோல உடுக்கணங்கள் துலங்கின. அருமறை யந்தணாளர்கள் தமது செங்கையாலள்ளி வீசும் அருக்கியத் தெண்ணீர் மேலே சென்று விசும்பைக் கழுவியது போலச் செவ்வானம் அகன்றது. முனிவரை இகழ்ந்திட்டாரது பாவம் மொய்த்தெழுந்ததுபோல எங்கும் நள்ளிருட் படலஞ் சூழ்ந்து மூடிற்று

ஈசனுடைய ஜடாபாரத்தினின்று வீழ்ந்த கங்காபிரவாகம்போல வெள்ளிய நிலவுவெள்ளம் பரந்தது. மலர்ந்து விரியுங் குமுதமலரினது நறிய தேனையும் மணத்தையுங் கலந்து முகந்து, கலைமுனிவனது குளிர்ந்த மலயமாருதம் வந்து வந்து வீசிற்று. இவ்விதம் அவ் விரவினது முற்பகுதி தொலைந்த பின், முனிவர்களெல்லாம் ஜாபாலி சொன்ன வண்ணமே செய்து, என்னைக் கையிலே யேந்திக்கொண்டெழுந்தருளிய ஹாரீதனோடுஞ் சென்றுபுக்கு, தண்ணிய நிலாவெரிக்கும் முன்றிலிடத்தே, ஜாலபாதன் என்ற பெயரை யுடைய முனிவனொருவன் மான்றோல் விசிறிகொண்டு வீச, வேத்திராசனத்தின்மீது எழுந்தருளியிருந்த முனிவர் கோமானான ஜாபாலியை யடி பணிந்து சூழ உட்கார்ந்தார்கள். அப்போது, புனிதனான அந்த ஹாரீதன் 'எந்தையே! வருந்திய கிளியும் இளைப்பாறி வந்தது. முனிவர்களும் இதனது அற்புத விருத்தாந்தத்தைக் கேட்க வேண்டுமென்ற அவாவோடும் வந்திருக்கின்றனர். இத் தத்தை முற்பிறப்பில் யாராக இருந்தது? எவ் விதமான தீவினையைச் செய்தது? அவ் வினைப்பயனை நுகரக் கிளியாக வந்த அடைவுதான் என்ன? இப்பிறவி தப்பினால் மேல் இதற்கு எப் பிறவி வாய்க்கும்? இவற்றை யெல்லாஞ் சவிஸ்தாரமாகச் சொல்லியருள வேண்டும்' என்று கேட்க, மெய்த்தவத்தையுடைய அம் முனிவர்கோமான் சூழ்ந்துள்ள ஏனைய முனிவர்களை யெல்லாம் அடைவினிற் பார்த்து, 'உங்களுக்கு இதனது சரித்திரத்தைக் கேட்கவேண்டுமென்ற ஆசையுண்டாயிற் சொல்லுகின்றேன். சாவதானமாய்க் கேளுங்கள்' என்று எனது பூர்வ விருத்தாந்தங்களை யெல்லாம் விஸ்தாரமாகச் சொல்லத் தொடங்கினார்:—

[ஜாபாலி சொன்ன கதை.]

பொறை முதலியவற்றாற் சிறந்த பூமிதேவியின் திருமுகமண்டலம் போலத் திகழ்ந்து, அறங்கள் பலவற்றையுந் தழுவி, பெரிய நகரங்களெல்லாவற்றிற்கும் ஆலயமாய் விளங்கும் அவந்திநாட்டிலே, புறத்திற் சிறிதும் பொசியாமற் சிவபெருமானுடைய ஜடையிலே புகுந்திட்ட கங்காநதியைப் புருவத்தை நெரித்துப் பரிகசித்தாற்போன்ற அலைகளையுடையதாய்க் கரை பொருதொழுகும் நன்னீர்ப் பெருக்கையுடைய சிப்பிராநதியின் தென்னண்டைப்பக்கத்திலே, அப் பூதல மடந்தையின் திருந்திய திருவதனத்திற்கு அழகுதருந் திலகத்தைப்போலவும், நல்வினைகளே பொருந்திய முன்னைய கிருதயுகத்தினது சிறந்த பிறந்தகத்தைப்போலவும், புவனமெல்லாந் தந்த மகாகாலன் தான் இனிது உறைதற்காகத் தானே கற்பித்துக் கொண்டதொரு தலத்தைப்போலவும் வயங்கி, அஷ்டலக்ஷ்மியுந் தன்னிடத்திலே மனமகிழ்ந்து வீற்றிருக்கப்பெற்ற மகிமையையுடையதாய், திசையளந்த வீதிகளும், திருவளர்ந்த மாளிகையின் திரள்களும், விண்ணளந்த கோபுரராசிகளும், திருமகளையொத்த அழகிற்சிறந்த தெய்வமாதர்கள் விருப்பமுற்று விளையாடுகின்ற நவமணிகளிழைத்த செய்குன்றுகளும், கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பிகள் பண்பாடும் பசுமலர்ச் சோலைகளும் எண்ணிறந்து பொலிய, வானவர் தானவர் உரகர் இயக்கர்

காந்தருவர் முதலியோர் வாழ்கின்ற உலகமெல்லாம் அவையல்ல இதுவே யென்று ஐயமற விளக்கிக்காட்டுகின்ற ஊனமில்லாத அவ்வானவர் முதலியோரது வடிவங்களைக் கொண்ட சித்திரங்களோடு மலிர்கின்ற மண்டபங்களினு முயர்ந்தோங்குந் தேவாலயங்களெல்லாம் நாற்சந்திதோறும் நயங் குலவித் தயங்க, கயிலையங் கிரியிலே யினிதுவீற்றிருக்குங் கண்ணுதலோனுன மகாகாலன் கருணைவடிவாகிய மயில்போன்ற அம்பிகையுடனே கனகமயமான மேருவிலே யெழுந்தருளியிருந்தாற்போன்ற தன்மையைக் காட்டி, அம் மகாகாலன் கோயில்கொண்டுறையும் பொற் கோயிலானது இமையோர்கள் வணங்குஞ் செயலுடனே ஹிமாசலத்தின் கொடுமுடி போல ஓங்கி விளங்க, வெற்றிபொருந்திய மீனக்கொடியையும், தங்களது ஒப்பற்ற பெருவீறு இத்தன்மைத்தென அறிவிக்குமாறு இடைவிடாது அசைந்து ஒலிக்கின்ற பற்பல மணிகளையும், விசும்பு தோயச் சென்றுலவிப் பறக்கின்ற கொடியாடைகளையும், செந்நிறம் பொருந்திய சாமரைக் கற்றைகளையுங் கட்டி நாற்றிய அழகிய பவளக் கொடியாலாகிய கால்கள் வரிசை வரிசையாக வாயில்கடோறும் நாட்டப்பெற்று, மன்மதனைக் குறித்துச் செய்கின்ற பெரிய விழாவோசையே எப்போது மலிந்துள்ள வேசையர் வீதிகளையும், பவளம் முத்து மரகதம் நீலம் மாணிக்கம் வயிரம் புருடராகம் வயிடூரியம் கோமேதகம் என்கின்ற நவரத்னங்களும் பொன்னுங் கொழுந்துவிட்டொளிர்தலினுற் குறுமுனிவனுல் ஆசமனஞ் செய்யப்பட்டு நீர்வற்றிய கடலானது பரக்க விளங்கினுற்போன்ற சதிர்வீசும் பற்பல கடைவீதிகளையும், தேர்சூழ்ந்த புறத்தெருக்களையும், விசாலமான ரதவீதிகளையும் உடையதாய், பளிங்காற் செய்த வேதிகைகளும், தொட்டிகளும், தூரவுகளும், மேகந்தவழும் பசிய பூங்காவனங்களும், அச்சோலைகளினடுவே கிரீடார்த்தமாக அமைக்கப்பெற்ற மலர்வாவிகளும் பிறவும் மன்மதனது பட்டாபிஷேக மகோற்சவத்திற்காக அலங்கரித்திட்டாற்போல ஒளிரப் பெற்றதாய், 'உள்ளே எழுந்தருளியிருக்கின்ற மகாகாலனே! இன்னமும் நீ என்னிடத்திலேயே வந்து வீற்றிருந் தருள்செய்வாயாக' என்று பிரார்த்தித்து வெள்ளிமலையான கைலாயம் வளர்ந்தாற்போன்ற மலைபோலுயர்ந்த மதில்களும், 'விமலனே! எங்கள் நன்னீர்க் கங்கையை நீ சிறைவைத்தது தகாது; இனியாயினும் விட்டுவிடுக' என்று சாகரங்களேழும் ஒன்றாகச் சேர்ந்து முற்றுகை யிட்டாற் போன்ற, பிறிதோருவமை சொல்லவொண்ணுத அம்மதிள்களின்புறத்தே வளர்ந்துள்ள மிகப் பெரிய அகழிகளையுங் கொண்டு, அறநெறிக்கோர் புகலிடமாய், தருமத்தின் வேராய், சத்தியத்தின் சகோதரமாய், தானமே தொழிலாக வுடையதாய், தவத்தின் கண்ணுய், லக்ஷ்மி மகிழ்ந்துறையுஞ் செந்தாமரையாய், விண்ணுலகும் மண்ணுலகாம்படியான மேம்பாடு பொருந்தி உச்சயினி யென்கின்ற ஓர் இராஜதானி இசையால் திசையளந்து விளங்காநிற்கும்.

இத்தகைய வைபவத்தோடு கூடிய அப்பெரும்பதிக்கு இறைவனுக, 'அவதரித்த இவன் பன்னக சயனனுன திருமாலேயாம்' எனவும், 'இவன்

ஸ்கந்தன்; மகாகாலனுடைய திருவடிகளை வணங்குவதற்காக அவதரித்தான் காணும்' எனவும், 'இவன் இந்திரனேயாம்' எனவும், 'இவன் தரும தேவதையே' எனவும் இவ்வாறு ஜனங்கள் பல்வேறு விதமாகப் பாராட்டியுரைக்க, சந்திர குலத்திற்கு ஒரு ரத்னதீபம்போலத் தாராபீடன் என்னும் அரசனொருவன் அவதரித்தான். அம் மன்னவன் தன் புஜபராக்கிரமத்தினாலே உலகிலுள்ள மன்னவர்களெல்லாந் தன் அடிபணிந்து இரண்டகநினையாமற் பின் செல்ல முன்செல்லும் பெரியோனாய், சந்திர சூரியர்களைப் போலவும், மாயோனுடைய கேசவாதி பன்னிரண்டு திருநாமங்களைப் போலவும் இருள்சேரும் வினைகளையெல்லாம் வேரற விலக்கி, தசமுகனால் வேர்பறிந்த கயிலாயத்தைச் சிவபெருமான் ஸ்தாபித்தாற்போல, இருண்ட கலிவலியினால் வேர்பறிந்து மடிந்துபோன தருமங்களையெல்லாம் வேரூன்றிச் சிறிதுஞ் சலியாமல் நிலைத்தோங்கி வளருமாறு பாதுகாத்து வந்தான்.

உதயகிரி, தென்மலை, மந்தரசிகரி, கந்தமாதனபர்வதம் என்று ஓங்குகின்ற இந்த நான்கு வரைகளுக்கு உட்பட்ட தாரணியையெல்லாந் தண்ணிய தனது தனிக்குடை நிழற்கீழ் வைத்துப் புரந்த மதுரமொழி வேந்தனாகிய அத் தாராபீடனுக்குப் பால்ய முதலாகவே ஸ்நேகிதனாய், மிக்க குணசாலியாய், அந்தணர்குலத் தோன்றலாகிய சுகநாதன் என்போன் மந்திரித் தொழில் பூண்டு கணமும் இடைவிடாமல் எப்போதும் பக்கத்தேயிருந்துகொண்டிருந்தான். சத்திபத்திற்கு இருப்பிடமாய், யாருந் தப்புதற்கொண்ணாத வினைகளையெல்லாம் உபாயத்தால் தப்புவதில் முற்பட்டவனாய், உத்தமர்களி லொருவனாய், யூக புத்தியில் மேருவாய், தவத்தில் வசிஷ்டபகவானாய், தர்ம சாஸ்திரத்திலேழுகடலுமாய், தெய்வபக்தி, சன்மார்க்கம், நீதி, பண்பு முதலியன நிரம்பப்பெற்ற பாலனுமாகிய அச் சுகநாதன் அளவில்லாத ஏனைய அமைச்சர்களும் மன்னர்களும் வந்து வந்து தன்னை வணங்குமாறு வீற்றிருந்து, பூமண்டலத்திலுள்ள விசேஷங்கள் அனைத்தையும் முற்பட ஆங்காங்கனுப்பிய ஒற்றர்களினாலே மூச்சுவிட்டதுள்பட நாடோறும் மனத்தில் வாங்கி, தனது மதிநுட்பத்தால் அவற்றைத் தீர விசாரித்துத் தெளிந்து, மன்னுயிர்களுக்குச் சிறிதுந் தீங்கு வாராதபடி வேண்டிய காரியங்களையெல்லாம் அப்போதைக் கப்போது செய்துவந்தான். மன்னனும் பிரதான மந்திரியாகிய அச் சுகநாதன் மீது பூபாரத்தை யெல்லாஞ் சுமத்தி, ராஜ்ய விஷயமான கவலை யொன்றுமேயில்லாமல், போக போக்கியங்க ளனைத்தையு மனுபவித்துக் களிக்குஞ் சிந்தையையுடையவனாய், ஏழிசைப்பாடலாடல்களில் வல்ல இளமங்கையரோடும், புராணம் நீதி முதலிய சாஸ்திர ஆராய்ச்சியை யுடைய சிறந்த பண்டிதர்களோடு மெப்போதுஞ் சூழவிருந்து இன்பநுகர்வானாயினான். அந்நாளிலே, ஈசனுடைய ஜடாமண்டலத்துக்கு அழகாக விளங்கும் இந்துவின் ரேகையையும், இந்திரை நாயகனான திருமாலினது மணிமார்பம் விளங்க ஒளிவீசுங் கவுத்துவத்தின் காந்தியையும், ஹலாயுதனான பலராமனது அழகிய பலவர்ணங்களோடு கூடிய வனமாலையின் பிரகாசத்

தையும்போன்ற காந்தியை யுடைய விலாசவதி யென்னுந் திருமகள் அவ்வேந்தர் கோனுக்குப் பட்ட மகிஷியாகிச்சிறந்து விளங்கினள்.

"விசாலமான மேதினியை யெல்லாம் வென்றனம்' என்று, வேந்தனே! நீ பெரியதோர் தருக்கினை யுற்றாய்; என்னை ஜயித்தனையோ? வல்லையேல் என் சேனையை ஜயித்துப்பார்" என்று சினந்து கன்னற் சிலையை வளைத்து, ஒப்பற்ற வெள்ளிய மதிக்குடையை யுடையோனாகிய மதன ராஜன் தனது சேனையை யேவிநின்றாற்போல, திருச்சூடாமணிய அழகுமிக்க பூவைமார்கள் அந்த முடியுடையரசனை, வாவியிடங்களிலும், மதுவைச் சொரிகின்ற மணங்கமழும் மலர்ச்சோலைகளின் பக்கத்திலும், முன்றில் வாயிலிலும், சிறந்த செய்குன்றின் மிசையிலும் எப்போதும் வளைந்து பூசல்செய்ய, அவர்களோடு பற்பல லீலைகளைப் புரிந்து பகற்போதைப்போக்கி, பூங்கணை மாரனது பெரும்பூசல் பின்னும் விளையுமோவென்றெண்ணி அதற்கு அஞ்சினன்போல, அகிற்புகை எங்குங் கமழ, அதிமனோகரமாய் அலங்கரிக்கப் பெற்றுத் திகழ்கின்ற பள்ளியறையை யடைந்து, பரிமளம்வீசும் மெத்தென்ற மலரணையை மேவி, காதலுற்ற ஆருயிருநெஞ்சு மொன்றாக்கலந்து இனிய குதலைச்சொல்லையுடைய தேவியான விலாசவதியினது கொங்கைகளிரண்டுந் தனது மார்பிலே புதையும்படி மனமுருகித் தழுவியணைத்துக் கங்குற்போதைக் கழிப்பானாயினன். இவ்வண்ணமாக, அவ் வெண்குடை வேந்தன் தனது ஆருயிர்க்காதலியாகிய விலாசவதியோடு காதலுற்றுக் கலந்து பன்னெடுநாள் இன்பம் நுகர்ந்தானாயினும், அவ்வின்பப் பயனாகிய புதல்வனைப்பெற்றானில்லை. எல்லாவித இன்பமும் எய்திய அம்மன்னவன் மைந்தனது நன்முகங்கண்டு மகிழ்வுறும் அந்த இன்பத்தை எய்தப்பெறாமையினால், நைந்து நைந்து மனத்தளர்ச்சியுற்றுப் பெருங்கவலைகொண்டு வாடினன்.

'என்ன செல்வம்! என்ன இன்பம்! என்ன நல்லரசு!' என்று தனது பெருஞ்செல்வத்தையும், தனது ராஜ்ய சுகத்தையும், உலகெங்குஞ்செல்லு மொப்புயர்வற்ற தனது ஆக்ஞாசக்கரத்தையும் வியந்துகொண்டு சாமானியர்களைப்போல அரசன் இறுமாந்திருக்கவில்லை. மைந்தனைப் பெறாத அம்மன்னன் இடம் பொருள் ஏவல் முதலிய அனைத்து முடையனாயிருந்தும் ஒன்றுமே யில்லாத வறியோர்களைப்போலவே மிகுந்த வாட்டத்தையுற்றுப் பலரோடும் சேர்ந்துபழகுதலில் நாணமும் வெறுப்புமுடையனாய்த் தன்னந் தனியே யிருந்துகொண்டிருந்தான். புத்திரனில்லாத இந்தக் குறையின்றி வேறு ஒரு குறையுமில்லாத அத்தாராபீடன் ஊழ்வலியாலாகிய இவ் வியாகுலத்தைப் பிறரறியாமல் உள்ளேயே செறித்துவைத்து ஒழுகுநாட்களிலே ஒருநாள், தனது தேவியாகிய விலாசவதியிருக்கும் பவனத்தை நோக்கிச் சென்றான். அந்தச் சமயத்தில், கையில் வீழ்ந்த கபோலமும், கண்ணீர் வீழ்ந்து நனைந்த பட்டாடையும், வடிவிலே காணப்படுகின்ற வியாகுல சோபையும், தொய்யில் துறந்த முலையும், மைதுறந்த விழியும், மலர்துறந்த கூந்தலும், மணியணிதுறந்த பிற அவயவங்களுந் தானுமாய்ச் செவிலித்

தாய்மார்கள் பன்முறை தேற்றவுந் தேருளாய், உற்ற பெருஞ்சோகத்தைக் கண்டு சமாதானமாக வாய்திறந்து ஏதேனுமொன்றைச் சொல்லவுந்துணியாமற் சூழ்ந்துநிற்கும் பாங்கிமார்கள் மத்தியில் தனியே வாட்டமுற்றிருந்த விலாசவதி அரசனது வருகையைக் கண்டெழுந்திருக்க, வேந்தன் அவளைக் கையைப் பிடித்து மணிப்பீடத்திலே யிருத்தித் தானும் இருந்தபின், தேவியின் திருமுகத்தை நோக்கி, வாட்டமுற்றிருப்பதை யறிந்து அச்சமுற்று, காரணமொன்றுந் தெரியாததனால் அயர்ந்து, அவளது தாமரை மலரைப் போன்ற கண் நீரைத்துடைத்து, 'நீ தஞ்சமில்லாதவர்போல மிகத்துயர் கொண்டு வாடுதற்குக் காரணம் யாது? அவற்றை இப்போது எனக்குச் சொல்லவேண்டும்' என்று கேட்க, தேவிக்கு வெற்றிலைமடித்துக் கொடுப்பவளான மகரிகை யென்பவள் மன்னவனைப் பார்த்து, "சுவாமீ! எங்களுடைய செல்வச் சீமாட்டிக்கு என்ன குறையிருக்கின்றது; வேந்தர்பெருமானை தம்முடைய இப்படிப்பட்ட பரிபூரணமான ஆதரவு இருக்கும்போது மற்று யார்தாங் குறைசெய்யப் போகிறார்கள்; வேறொன்றுமில்லை; இவர் வாட்டமுற்று வருந்துவதற்குள்ள காரணம் ஒன்றுண்டு. அதை அடியேன் விண்ணப்பஞ் செய்கிறேன், கேட்டருளவேண்டும். 'நம் ஆருயிர்க்காதலர் நாடோறும் நம் மனைக்கே வருகின்றனர். வந்துமென்? நாம் அடைகின்ற இன்பம் ஸபலமானதாக இல்லை' என்கின்ற சகித்தற்கரிய இந்தத் துக்கம் இவருக்கு நெடுநாளாகவே யுண்டு; புதிதாக இப்போது உண்டானதல்ல. இந்தத் துக்கத்தைப் பிராணை தேவரீர் அறியின் மனத்துக்குக் கிலேசமுண்டாகும் என்கிற அபிப்பிராயத்தைக் கொண்டு அதை வெளிக்காட்டாதவராய், நீராடாமலும், அமுது செய்யாமலும், உயர்ந்த ஆடையாபரணங்களை யணிந்துகொள்ளாமலும், விருப்பமுற்று விளையாடாமலும் இப்படியே இருந்துகொண்டுவருபவர் இன்று விடியற்காலத்தில் உமையவள் பாகனை மகாகாலனைப் பணிவதற்காக ஆலயத்தினுள்ளே செல்ல, அங்கே, ஐந்தாவது வேதமாகிய மகாபாரதத்தை வாசித்துப் பொருளுரைத்துக் கொண்டிருந்த வேதியர்கள் சிலர், 'புத்தென்பது ஒரு நரகவிசேஷம்; அதனிற் புகாதளிப்பவன் புத்திரன்; ஆகையாற் புத்திரப்பேறில்லாதவர்கள் உத்தமமான லோகத்தை யடையமாட்டார்கள்' என்று சொன்னதைக் கேட்டு மிகவு நெஞ்சமழிந்து இங்கே எழுந்தருளி, அடியேங்கள் எல்லாந் தேற்றவும் தேருது, இப்படி கண்ணுங் கண்ணீருமாயிருக்கின்றார்; புகுந்த விஷயம் இது. இனிமேல் திருவுள்ளத்துக் கேற்றதைச் செய்தருள்வீராக" என்று சொல்ல, மன்னனுஞ் சிறிதுபோது திகைப்புற்றிருந்து, பெருமூச்செறிந்து, தேவியை நோக்கி, 'மாதர்க்கரசே! நாம் இப்பிறப்பிற் புத்திர பாக்கியத்தைப் பெறுதற்குப் பூர்வஜன்மத்தில் தக்கபடி தவஞ்செய்தோமில்லை. தெய்வச் செயலுக்கு நாம் செய்யக் கூடியதுதான் என்ன? நமது பாவம் இவ்வாறிருந்தது! அழகிய சின்னஞ் சிறு புதல்வர்களை வாரியெடுத்து மார்புறத் தழுவியணைத்துச் சீராட்டி வாழும் பேரின்பம் அப்பிறப்பில் அரிய தவஞ்செய்தவர்களுக்கே வாய்க்கப்பெறும். ஜன்மாந்தர சுகிர்தமில்லாத

வர்களுக்கு இம் மக்கட் செல்வம் எய்துவதில்லை. இதற்கு நாம் என்ன செய்யலாம்! எனக்கும் இவ்வித மனத்துயரம் நெடுநாளாக இருக்கின்றது.

கெற்பபா ரத்தின் முன்வரு வயாவுங் கிளரொளி மழுங்கிய வழகு
மற்பமாய் மெல்ல வசைந்தநன் னடையு மவசமு மென்றுநான் காண்பேன்?
பொற்பில்வாழ் புதல்வன் பிறந்தன னென்று புகுந்துநம் பரிசன மெல்லா
நிற்பதோர் ரென்னைக் கலைபிடித் தீர்த்து நிதிமுகந் தென்றுதான் கொள்வார்?

மெல்லவே நோக்கிக் கண்வளர் புதல்வன் மேவிய கரிவெருட் டுகையாற்
பல்லிலா வெயிறு பையவே தோன்றப் பழுதற நகைக்குமந் நகைகண்
டல்லலா கியவெந் துயரெலா மாறி யங்ஙனே நீயரு கிருப்ப
மல்லுலா வியவென் றோள்கள்பூ ரித்து மனமகிழ்ந் தென்றுநான் வாழ்வேன்?

புழுதியா ரழகு பொலிந்தபொன் மேனிப் புதல்வனென் னெஞ்சுமென் கண்ணுந்
தழுவியே பின்பு செல்லமுன் றிலிலே தவழுவ தென்றுநான் காண்பேன்?
வழுவிலாப் பளிக்குச் சுவர்ப்புற நின்ற மாணிழ லுள்வர வதுகண்
டழுதுதான் பிடிக்க வதனுட னுழலு மவ்வழ கென்றுநான் காண்பேன்?

என்று கொண்டு என்மனம் எத்தனையோ காலமாக வருந்துகின்றது; இன்று நேற்றல்ல. நிறைந்துள்ள எனது செல்வத்தையும், அரசனைச் சிம்மாசனத்திலிருந்து வாழ்வதையும் நான் பொருளாகவே கொள்ளவில்லை. இயல்பாகவே மணங்கமழ்கின்ற அழகிய கூந்தலையுடைய பெண்ணே! தெய்வஞ் செய்கின்ற காரியத்திற்கு மனிதர்கள் யாது செய்ய முடியும்? இப்போது உண்டாகின்ற எதுவும் நாம் பூர்வஜன்மத்திற் புரிந்த கர்மத்தின் பயனேயன்றி வேறில்லை; ஆயினும் ஒன்றுண்டு. முனிவர்களே மேலான தெய்வங்கள்; அவர்களினுஞ் சிறந்த தெய்வங்கள் வேறு இல்லை; அவர்கள் கிருபை செய்வார்களானால் இம்மையில் இனியனவான எவற்றையுமே தருதற்கு வல்லவர்கள். அறுபதினாயிரம் ஆண்டு மலடுசென்ற கிழவனான தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமன் முதலான நான்கு அருமைத் திருக்குமாரர்களைப் பெற்றதும், மகதநாட்டரசன் ஜராஸந்தனைப்பெற்றதும் எதனால்? அம் முனிவரர்களது அருட்பிரஸாதத்தினாலன்றோ? இவ்வாறு, முனிவரருளாற் குமாரர்களைப் பெற்றவர்கள் பலர். ஆகையால், நீயும் அத்தகைய அருள் வள்ளல்களாகிய முனிவரடிகளைப் பணிக; அவர்களுக்கான பூசனைகளையே நாடோறு மகிழ்வொடு புரிக; குருஜனங்களையும் பக்தியோடு தொழுக; வறியார்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்துத் தருமங்கள் பலவற்றையுஞ் செய்க; சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற நோன்புகளனைத்தையும் அன்புகொண்டு அவ்வவற்றிற் கேற்ற கிரமப்படி நோற்க; இவற்றைச் செய்யவேண்டுமென்ற எண்ணத்தையே யெப்போதுங்கொள்க; தருமத்தையே செய்யவேண்டுமென்ற எண்ணமுடையவர்களுக்கு எல்லா நன்மைகளுந் தாமாகவே தடையின்றி வந்துசேரும். எனது காதல் திருமகளே! இதைக்குறித்து நீ வருந்தேல்' என்று சொல்லியும், பின்னும் இப்படியே பற்பல வார்த்தைகளைக் கூறியும் அவளைச் சமாதானப்படுத்திக் கண்ணீர் மாற்றி, நன்னீர் கொண்டு முகந்துடைத்துச் சிறிதுபோது அங்கேயிருந்து

பின்னர் எழுந்துபோய்விட்டான். அரசர்கோன் போனபிறகு ஏந்திழையும் மனத்துயரெல்லாம் நீங்கி, நீராடல் செழும்பணி யணிதல் அருந்துதல் முதலியனவற்றை யெல்லாம் முன்போலவே செய்து, ரிஷிகள் தேவர்கள் குருக்கள் அந்தணர் என்னுமிவர்களைச் சகலவித உபசாரத்துடனும் ஆராதித்து, நாயகனுர் சொன்ன மற்றை நோன்பு முதலியவற்றையுஞ் சொன்ன வண்ணமே ஆசையோடு முயன்று அனுஷ்டித்துவரத் தொடங்கினுள்.

நாக்கு வழித்துக் காவிபோகப் பல்லை நன்ருகத் துலக்கித் தீர்த்தங்கடோறுஞ் சென்று ஸ்நாநஞ் செய்தும், உபவாஸ மிருந்தும், இரவில் அம்பிகை கோயிலுக்குட்சென்று பலம் புஷ்பம் தூபம் தீப முதலியவற்ருற் பூஜித்து அந்தச் சந்நிதியிடத்திலேயே தருப்பையைப் பரப்பி யதன்மீது வரம்வேண்டிக்கிடந்து விழித்துயின்றும், பற்பல சகுனங்களைப் பார்த்தும் இவ்வாறு மெய் வருந்தி விரதங்களை யெல்லா மனுஷ்டித்து வருங்காலத்தில், ஒருநாள், நிலந்தெளியச் சிறிது பொழுதிருக்கும் விடியற்காலத்தில் விண்மீதுயர்ந்த உவளகத்திலே யிருக்கும் விலாசவதியினது முகத்திலே சீதளகிரணனுன சந்திரன் சென்று புகுந்திட்டதாகக் காவலர்பெருமான் கனவு கண்டான். கண்டதுந் துயிலுணர்ந்தெழுந்து மிக்க மகிழ்ச்சியை யெய்தி, அமைச்சர் கோமானுன சுகநாதனை யழைத்துரைச் செய்து, 'இப்போது நான் கண்ட நற்கனவு இது' என்று தான்கண்ட கனவின் பிரகாரத்தை அவனுக்குச் சொல்ல, சுகநாதனு மனங்களித்து, 'ஒப்புரைக்க முடியாத இக் கனவினுலே உலகத்திலுள்ளாருடைய மனக்கருத்தும், கூரிய வேலையுடைய பெருமானே! நம்முடைய மனோரதமுங் கைகூடுமென்பதிற் சிறிதுமையமில்லை; நானும் இன்று இரவுபுலருங் கடையாமத்திலே சீலனுன ஒரு நான்மறை யந்தணனென் என் மனையாளின் மடியிலே ஒரு வெண்டாமரை மலரைக் கொண்டுவந்து வைக்கக் கனவு கண்டேன்; ஆகையால் சமீபத்தில் நமக்கு நன்மைக ளுண்டாகப்போகின்றன; மற்றவைபோல வைகறைப் போதிலே கண்ட கனவுகள் பொய்யாகா; சீக்கிரத்தில் நுமது தேவியார் அரிபோல அரிய ஒரு திருமகனைப்பெற்று, நிச்சயமாக நும் மனத்தைப் பெரிதும் மகிழ்வுறச் செய்வர்; கோவே! வாழையடி வாழையாக வளரும் நுமது சந்ததியால் உலகம் சுகித்து வாழ்வதாக' என்று வாழ்த்த, அண்ணல் அவ்வமைச்சனுடனே அந்தப்புரஞ் சென்று, தாங்க ளிருவருங் கண்ட அற்புதமான கனவின் திறத்தைச் சொல்லிச் சொல்லி விலாஸவதிக்குப் பேருவகை விளைவித்துப் பெயர்ந்து சென்ருர்கள்.

கனவுகண்ட அந்நாள் முதற்கொண்டே, கடவுள் திருவருளினுல் ஓடைப்புனலுட் சந்திரபிம்பந் தோற்றுவதுபோல விலாஸவதி திருவயிற்றிலே கருப்பமுண்டாகி வயங்கிற்று. பாரிஜாதத்தால் தேவர்களுடைய நந்தவனம் விளங்குவதுபோலவும், திருப்பாற்கடலிலுண்டாகிய கவுத்துவ மணியினுல் திருமாலின் திருமார்பந் திகழ்வது போலவும் மணங்கமழும் அந் நறுமலர்க்குழலாள் கருப்பத்தினுல் அதிக சோபிதமுற்று, கொட்டாவி, பெருமூச்சு, சோம்பல் முதலியவற்றைப் பொருந்தி, வேலைநீரைப்

பருகி மெய்கனத்த மேகமாலையைப்போல மெதுவாக அசைந்து நடக்கும் நடையினையுடையளாய், அசனத்தை மறந்து, முகம்வெளுத்து, முகங் கறுத்த பயோதரங்களையுடைமையாற் கார்காலத்தை பொக்குமென்று சிலேடைவகையிற் புனைந்துரைக்குஞ் சிறப்பினையெய்தித் திகழ்கின்றவளைப் பரிஜனங்களெல்லாங் கண்டு பரமானந்தபரிதர்களானார்கள்.

அவர்களில், சேடியர்குழாத்திற் பிரதானமானவளும், தேவியினது பாதசேவையிலே யுரிமைத்திறம்பூண்டவளுமான குலவர்த்தனை யென்னும் பூங்குழற்சேடி யொருத்தி, ஓர்நாள் மாலைப்போதில் மன்னவனது சபாமண்டபத்தையெய்தி, பன்னக வேந்தனான ஆதிசேஷனுடைய பணாமணியின் சமூகத்திலே அப்ராகிருதமான தனது திருமேனியின் திவ்ய காந்தியோடு எழுந்தருளியிருக்கும் வரதனான திருநாராயணனைப்போல, அநேக ரத்ன தீபங்களின் மத்தியி லரசர் பலர் தன்னைப் புடைசூழ்ந்து நிற்க, அமைச்சனான சுகநாதனோடு பேசிக்கொண்டிருந்த பெருமானைக் கண்டு, அடிபணிந்து, மாதேவி கருப்பமுற்ற சந்தோஷ சமாசாரத்தை ரகசியமாகக்கொண்டு மொழிய, அதுகேட்ட தராதிபன் அமுதவெள்ளத்திலே திளைத்தாற்போல மெய் புளகித்து, சுவர்க்கலோகாதிபத்யத்தையும் தான் பெற்றதுபோல அத்யானந்த பரவசனாய், உவகைபொங்கி மீதூர, மார்புந் தோளும் பூரித்தான். கூர்ந்த மனமகிழ்ச்சியானது உள்ளடங்காமற் பொங்கிவழிந்து புறத்தே பாய்ந்ததுபோலப் புன்முறுவலின் வெள்ளிய நிலவொளி பரந்த தேர்வேந்தனது திருமுகமும், எழிலும், ஆனந்தக்கண்ணீர் பெருகுமவனது மலர்க்கண்களு மமைச்சன் முகமீது செல்ல, மன்னர் பெருமானது திருமுகத்திற் றோன்றிய உவகைப் பெருக்காலும், மின்னற்கொடி போன்ற குலவர்த்தனை முகமலர்ச்சி கொண்டு நிற்கும் முறுவற் குறிப்பாலும், இன்னது இதுவென்று முன்ன ரறியாதவரா யிருந்தும் இதுவாகத்தானிருக்குமென்று தனது நுண்மதியாலாராய்ந்தறிந்து உளங்களித்த சுகநாதன் தன் ஆசனத்தைவிட்டெழுந்து அரசன்பாற் சென்று, 'அரசர்க்கரசே! நுமது திருமுகமும், அன்னமனைய ஆரணங்கின் அழகிய முகமும் ஏதோ ஒரு சந்தோஷ சமாசாரத்தை வெளியிட் டுரையாநின்றன; அந்தச் சோபன விஷயத்தை இன்னதென்றறிய என் மனம் ஊரைந்து விரைந்தெழுகின்றது. முன்னம் நாம் கண்ட அக்கனவு நிஜமாகவே பலித்திட்டதோ' என்று கேட்க, இறைவன் புன்னகை செய்து, 'இவள் சொன்னது மெய்யாயின், அக்கனவு பலித்ததும்மெய்யேயாம்; இப்படிப்பட்ட இனிய மங்கலம் எனக்கும் உண்டாகத்தக்கதோ! உண்டாயிருந்தால் அதைத் தேவியினந்தப்புரஞ் சென்று நேரில் அறிந்துகொள்வோம்' என்று சொல்லிச் சிம்மாசனத்தை விட்டெழுந்திருந்தான். எழுந்து, அரசர்களுக்கெல்லாம் விடைகொடுத்தருளி, சோபனஞ்சொன்ன குலவர்த்தனைக்குத் தானணிந்திருந்த ஆபரணங்கள் அனைத்தையுங் கழற்றியளித்து, உவகை முன்னே குதித்தோட, அதனைப் பின்றொடர்ந்து நெஞ்சமும் விரைந்து செல்ல, புத்திரன் இல்லையென்ற சோகம் கால் தளர்ந்து பின்னிட்டகலச் சென்று, வானமெங்குந்

தாரகை நெருங்கிச்சூழத் தோன்றிய திங்களுஞ் சிறிதே வெளிப்பட்டு ஒளிர்கின்ற ஆரம்பமான குளிர்ந்த மாலைக்காலத்தில் மந்திரியான சுகநாதனுடன் தேவியிருக்கும் அந்தப்புரத்திலே புகுந்தான். அப்போது அந்த அந்தப்புர மாளிகையானது பூரண கும்பங்களும், ரத்ன தீபங்களும், நெய்பெய்த சுடர் விளக்குக்களும் விளங்கிக்கொண்டிருக்கின்ற பக்கவாயில்களினாலும், முழுதுந் திவ்யமான மங்கல சித்திரங்களே யெழுதப்பட்டுள்ள அழகிய சுவர்களினாலும் மிக ரமணீயமாகத் துலங்கிக்கொண்டிருந்தது. உள்ளே, அழகிய நித்திரா கும்பமானது தலைமாட்டிலே விளங்க, விபூதியினாற் பற்பல தொழில்களைச் சூழ எழுதி, வேல்பல நிரைத்து, அபிமந்திரித்த செடி மூலிகைகளையும், மயிரால் திரிக்கப்பட்ட கயிறுகளிலே யேறிட்டிருக்கிற இரும்பாற் செய்த அரசிலைகளையும், வேப்பந் தளிர்களையும் நாற்புறத்திலும் வளையக் கட்டித் தொங்கவிட்டு, வெண்கடுகை எங்கணும் வாரிச் சிதறி, இவ்விதம் வேண்டிய ரக்ஷைகளைச் செய்து ஒளிர்கின்ற இடத்தில், உயர்ந்த மணிப்பீடத்திலே, மகிழ்ச்சியுற்ற மனத்தையுடைய மங்கையர்பலர் மங்கலம் பாட, தோகையர் சிலர் ஆலத்தியெடுக்க இருந்தருளிய தேவியான விலாஸவதி, சென்னியிற் குவித்த கையையுடையராய்ச் சென்னியர் புகழ எழுந்தருளிய புரவலனைக்கண்டு, ஒரு கையாற் சேடியினுடைய செங்கையைப் பிடித்து, மற்றொரு கையை முழந்தாளிலூன்றிக்கொண்டு மெதுவாக எழுந்திருக்க, பார்த்திபன் பார்த்து, 'உயர்குல விளக்கே! இவ்வளவுதூரம் நீர் எழுந்திருந்ததே அருமையான காரியம். போதும், போதும், உட்காரும்' என்று அவளது கையைப்பிடித்து உட்காரவைத்துத் தானும் வீற்றிருந்தான். பக்கத்திலே சேடியர்களா லிடப்பட்ட ஆசனத்தில் அமைச்சனும் அமர்ந்தான். அதன்பின்னர் அழகிய வீரக்கழலையுடையோனான காவலன் தேவியை நோக்கி, 'மங்கைநல்லாய்! இன்று சாயங்காலம் குலவர்த்தனை முகமாக நீர் சொல்லி யனுப்பிய செய்தி யென்ன? அதனை நான் கேட்க விரும்புகின்றேன். பூங்குழன் மானே! ஆரியனான சுகநாதனும் அந்த வார்த்தையைக் கேட்கப் பெரிதும் இச்சிக்கின்றான்' என்று கூற, நேரிழை விலாசவதியுந் தனது கரிய கூர்விழிக் கடையினாலே ஒதுக்கிப் பார்த்து, மறுமாற்ற மொன்றுஞ் சொல்லாமல், புன்முறுவல் பூத்த தனது வெண்ணகையான பட்டினாலே முகத்தை மூடி, நாணமும் உவகையுந் தங்களிற் போராட, பருத்ததோர் கொங்கையின்மேற் பங்கய வதனஞ் சேரத் தலை குனிந்திருந்தாள். அவ்வளவோடு விடாமல், மன்னவர்கோன் திரும்பவும் திரும்பவும் இவ்வாறே கேட்க, அவற்றிற்கும் மின்னற்கொடி போன்ற அம்மெல்லியல் கோபங் கொண்டவள்போலக் காட்டி, யொன்றையுமே விளம்பாமலிருக்க, மன்னவன் தேவியை நோக்கி, 'அன்னமே! நீர் எனக்கு ஒன்றுமே யருள்செய்யாமற் போனாலும், நிலாப்போல வெண்ணிறமுற்ற உமது முகம் உரைசெய்யாதோ? செவ்விய சண்பகம்போன்ற ஒளி மாறிச் சிறுசண்பகம் போன்ற ஒளியையுடைய நுந் திருமேனிதான் அருள் புரியாதோ? கட்புலனுக்குப் புலனாகாத நுண்ணிடை, உதரபந்தனம் தெறிக்

கும்படி இப்போது அகன்றிட்டதுதான் புகன்றருளாதோ?' என்றிப்படிப் பட்ட வாசகம் பலவற்றை மொழிந்து விளையாட, அதற்குப் பைந்தொடிப் பாவைமிகுந்த கூச்சமுற்று நாணுதல் கண்டு, மந்திரியான சுகநாதன் அம் மன்னர் கோனையும் மாதரசியையும் 'நெடிது வாழ்க' எனப் பன்முறை வாழ்த்திவிட்டுத் தனது மாளிகைக்குச் சென்றான். அரசர்கேசரியான தாராபீடன் அன்று அங்கேயே தங்கியிருந்து, தேவிமீதுள்ள பெருங்காதலி னாலே 'இவள் வயா விருப்பத்தையெல்லாங் கேளாமலே குறிப்பறிந்து நிறைவேற்றுங்கள்' என்று பரிஜனங்களுக்குச் சொல்லிவிட்டுத் தனது அரமனைக்கேகினான். ஏந்திழையான விலாசவதியும் ஈரைந்து திங்களும் நிறைந்து நல்லதோர் சுபதினத்திலே, நாழிகை பார்த்துக்கொண்டே யிருக் குங் கணிதநூ லாராய்ச்சியிற் றேர்ந்தவர்களான சிறந்த சோதிடர்கள் உத்தமமென்று கொண்ட நல்லதோர் சுப முகூர்த்தத்திலே உலகத்தவர் அல்லலனைத்துந் தீருமாறு நல்ல அரசிளங்குமாரனொருவனைப் பயந்தாள். அந் நற்செய்தி கேட்ட அந்தப்புரத்தவர்களெல்லாம், ஓடுவாரும், ஒருவர் மீது ஒருவர் தாக்கிச் செல்வாரும், ஒருவர் சென்று மற்றொருவரைத் தேடு வாரும், சோபனஞ் செப்புவாரும், தழுவி யணைப்பாரும், பாடுவாரும், மகிழ்வாரும், துதிப்பாரும், துதித்துக் கொண்டே ஆடுவார்களுமாய், அடைந்த கௌதூகலத்திற்கு எல்லை யில்லை. மற்றும் அந்நகரத்துள்ள அரசர்களும், முனிவர்களும், திரளான ஜனங்களும், பரிஜனங்களுந் தம்மிற் கலந்து நின்று ஒருவர்மே லொருவர் மஞ்சள் நீரை வாரியடித்துக்கொண்டு விளையாடா நின்ற பேருவகை சொல்லுந் தரத்ததில்லை. சங்கம் படகம் தாரை எக்காள முதலிய வாத்திய முழக்கமும், மாகதர்களுடைய மங்கலப் பாடல்களினோசையும், பிராமணர்களுடைய வேத ஒலியும் பெருந்திரைக் கடல்போல எங்கு மெழுந்தன. வழிமறித்து வளைப்பார் சிலர்; இச் சோபன சமாசாரத்தை எங்கும் போய்ச் சொல்லுவார் சிலர்; சொல்லி, ரத்னாபரணங்களையும், பட்டாடைகளையும் பரிசிலாகப் பெறுவார் சிலர்; சொல்லுவார்க் கெல்லாம் அணிகளையும் ஆடைகளையும் சன்மானமாக அளித்துக்கொண்டே யிருப்பார் சிலர்; குறள் கூன் கிழம் முதலானவர் களுக்கு அவர்கள் வேண்டுமளவிற்கு நிதிமுகந்து கொடுப்பார் சிலர்; முகம னுரைப்பார் சிலர்; இவ்வாறு, அம்மங்கலமானது நகரெங்குங் கொண்டா டப்பட்டது. அப்போது அவனீபதியான தாராபீடன், அருமருந்தனைய பாலனுடைய மலர்முகத்தைப் பார்க்கப் பதறிய தனது நெஞ்சை யடக்கிக் கொண்டு தணிய இருந்து, நான்கு வேதங்களையு நன்றாக வோதியுணர்ந்த சீலர்களான பிராமணோத்தமர்கள் பரிவுடனே அருளிச்செய்ததொரு நன் னாளில் நல்ல சுப முகூர்த்தத்திலே, சுகநாதன் கூடவரச் சென்று, நெற் குவியல்கள் தோறுங் கற்பினையுடைய மங்கையர்கள் நின்று கொண்டு துதிக்க, குங்கலியம் பாம்பின்தோல் ஆட்டுக்கிடாயின் கொம்பு முதலிய வைகள் எங்கும் புகைய, கனலிலிடப்பட்ட வேப்பிலையும் லவணமும் வெடு வெடெனத் தீய, பொற்கலங்களிலே ஏற்றிவைக்கப்பட்ட மங்கல தீபங்கள்

பல சுடர்விட்டுப் பொலிய, மறையோர்கள் வேதமொழிப்படி சாந்திகள் பலவற்றைத் தடையின்றி யோத, உருவிய சுடர்வாளுடன் சூரர்கள் பலர் எங்கு நடமாடிக்கொண்டேயிருக்க, செய்யவேண்டுஞ் சடங்குக ளின்னின்ன வென்பதை நன்கறிந்த பெரியோர்களால் நியமிக்கப்பட்ட எல்லா வித ரக்ஷைகளினாலு மோங்கி விளங்குஞ் சூதக மனையை யணுகிக்கண்டு, நல்ல தீர்த்தத்தினாலே யாசமனஞ்செய்து, அக்னியைக் கையாற் பரிசித்து, முகமலர்ச்சியுடன் உள்ளே புகுந்து, மேனியெல்லாம் வெளிறியும் இளைத்தும் விளங்காநின்ற கற்பிற்சிறந்த மடமாதின் மடியிலே, தேவமாதர்களின் கைம்மலரினின்று நழுவிவீழ்ந்த தெய்வக்குழந்தையோ, வெற்றிவேலைக் கையிலே யுற்ற குமாரக்கடவுளோ வென்னும்படி அழகோடு வளர்கின்ற செல்வக் குழந்தையை, மனமுருகிச் சொரிகின்ற ஆனந்த வாரியினாலொளி கொண்டு திகழ்கின்ற கண்களினாலே பருகுவதுபோல ஆபாதசூடம் பல முறை யுற்று நோக்கி, உவகைப் பெருங்கடலிலே முழுகி, 'பிறவியினாலாகிய எல்லாப் பயன்களையும் பெற்றோம்' என்று மனமகிழ்ந்திருந்தான். மந்திரியு முளமகிழ்ச்சிகூர்ந்து மைந்தனைப் பலகாலுற்று நோக்கிச் சிந்தித்து, மன்னவர் பெருமானை நோக்கி, 'எல்லையில்லாப் புகழ்படைத்த வேந்தே! நமது குலமுதல்வனாகிய இளவரசின் அவயவத்தின் ரேகைப்பந்திகள் தெரியாத இக் குழந்தைப் பருவத்தைப் பாராய்; செங்கழுநீர்மலரின் அழகிய இதழ்போன்ற விரல்களையுடைய அங்கைகளிலே சங்கரேகையோடு தெய்வத்தன்மை பொருந்திய சக்கர ரேகையும் விளங்குவதைப் பாராய்; மணங்கமழூந் தளிர்போலச் சிறந்து விளங்கும் பாதங்களில் கொடி தேர் குடை யானை குதிரை பங்கயம் முதலிய உத்தமமான ராஜ சின்னங்கள் ஒளிர்கின்ற அழகினைப் பாராய்; இவனது அழுகுரலுந் துந்துபி நாதம்போல அதிராநின்றது; அதனைக் கவனித்துப் பாராய்; இவை முதலான சக்கரவர்த்திக்குள்ள லக்ஷணங்களெல்லாம் பூர்ணமாகக் காணப்படுகின்றதனால், இவன் மிகப்பெரியோன் என்பது நன்றாய் விசதமாகின்றது. அதனையும் பாராய்' என்று இவைபோன்ற பலவற்றைச் சொல்லி யிருவரும் மகிழ்ந்து கொண்டிருந்த எல்லையில், ஒருவன் ஓடிவந்து, இறைவனது பாதத்தை வணங்கி, 'ஒரு குடை நிழலிற் புவிமுழு தாளும் உத்தம! மேலும் மேலும் சோபன பரம்பரைகளாகவே எல்லாம் வந்து கொண்டிருக்கின்றன; மந்திரியான சுகநாதன் மனையாளும் இன்று ஒரு திருமகனைப் பெற்றனள்' என்று கூறினான். அமிர்தம் போன்ற அந்த வார்த்தையைக்கேட்டு, ஆனந்த வெள்ளத்திலே மூழ்கித் திளைத்துச் சிந்தை மகிழ்ந்து, தூசெறிந்து பிடித்து, எழுந்து கூத்தாடி, செய்வது தெரியாமற் பரவசப்பட்ட அச் செங்கோல் வேந்தன், மந்திரியின் மணிமார்பை இறுகத் தழுவியணைத்து அவன் மேலே யணிந்து கொண்டிருந்த பூவேலை செய்திருந்த உயர்ந்த பட்டுத்தரியத்தைத் தானே பரிசிலாகப் பறித்துக்கொண்டு 'சுகமோ துக்கமோ எனக்குண்டானது உனக்கும், உனக்குண்டானது எனக்கும் உடனே யுண்டாகிவருகின்ற அந்யோந்யமான நமது பழைய நட்பைக் குலைத்துவிடாமல் இன்ன

மும் அம் மெய்க்கடவுள் அறிவிப்பது இப்படியோ!' என்று தெய்வத்தைப் பன்முறை துதித்து, பெரிய அந்தச் சோபனசமாரத்தைத் தக்க தருணத்தில் வந்து சொன்ன அவனுக்கு வேண்டுவனவற்றை யெல்லா மளித்து, அக்கணமே அவ்விடம் விட்டெழுந்து, பல பிராமணோத்தமர்களோடும் அரசர்களோடும் புறப்பட்டு, சிலம்பொலியுங் கலையொலியும் வளையொலியுந் திசையெல்லாஞ் செவிடுபடும்படி யொன்றாகித்திரண்டெழுமாறு ஆடுவாரும் பாடுவாருங் களிப்பாருமாகிய கன்னிமார்கள் தடுமாற்றமுற்று, ஒருவர்க்கொருவர் சோபனங்கூறி, ஆடை பைம்பூண் முதலியவற்றை வலியச் சென்று சண்டையிட்டுப் பறித்து விளையாட, வாத்தியங்கள் பலவும் மேகம்போல முழங்க நடந்து சென்று, அமைச்சர்பிரானுடைய மனையிலே புகுந்து, தனக்குக் குழந்தைபிறந்த அன்றையினும் அதிகச் சிறப்பாகக் கலியாணம் செய்வித்து, நெடுநேரம் அங்கிருந்து, அவ்விடம்விட்டுப் புறப்பட்டுத் தனது அரமனைக் கேகினன்; பின்னர், குமாரன் பிறந்த நக்ஷத்திரம் முதலியவற்றிற்குப் பொருத்தமானதொரு சுபதினத்திலே பிராமணர்களுக்குக் கோடிக்கணக்காக நிதியை முகந்து கொடுத்து, தேவியின் திருமுகத்திலே திங்கள்புகக்கண்ட கனத்திறத்திற்கு ஏற்பத் தனது மைந்தனுக்குச் சந்திராபீடன் என்னுஞ் சிறந்த நாமத்தைச்சூட்டினன். அமைச்சர் கோமானான சுகநாதனும் வேந்தனது அனுமதிப்படியே பிராமணர்களுக்குரிய கர்மாக்களை யெல்லாங் கிரமப்படி செய்து, தனது குமாரனுக்கு அந்தணர் மரபிற்கு அனுகுணமான வைசம்பாயனன் என்று நாமகரணஞ் செய்தான்; இவ்விதமே இவ்விரண்டு குமாரர்களுக்கும் சௌளமுதலியன பிறவும் உரியகாலத்தில் மிகச் சிறப்போடு நடத்தப்பட்டன; அப்போது, சந்திராபீடனுந் தனது பேதைப்பருவங் கடந்து கல்விகற்றற் குரிய பாலப்பருவத்தை யடைந்தான். அதுகண்ட வேந்தன் தன் மைந்தனுக்கு விளையாட்டிற் பராக்கொழியவேண்டுமெனக் கருதி, தனது அரமனைக்குக் கூப்பிடுதூரமத்தியில், புனல் பெருகுஞ் சிப்பிரை யாற்றங்கரை யோரத்தில், மிக அகன்றாழ்ந்த அகழும், வானுறநீண்ட பெரிய சுதை மதில்களும், வாயில் தோறுந் தோரணங்களுந் துலங்கியோங்க, அதன் பக்கத்தே அழகியதோர் செண்டு வெளி செய்து, அதற்கருகாக வியாயாம கூட மொன்றைப் பாங்காக அமைத்து, இப்படியே இன்றியமையாதன வனைத்துஞ் செய்துள்ளதொரு பெரிய கல்லூரி மாளிகையை நிர்மாணஞ் செய்வித்து, அதில் ஒரொருவ ரோரொருவராக ஒவ்வொரு கலைகளினுஞ் சூரியர்களைப்போன்ற ஆசான்மார் அனைவரையுந் தேடிச் சேர்த்து, தனது மைந்தனையுஞ் சுகநாதன் மைந்தனையும் அவர்கள் வசத்தி லொப்புவித்து, எப்போதும் அக்கழக மாளிகையிலேயே யிருந்து பயினு மாறும், சிந்தை போனபடி வெளிப்பட்டு விளையாடாவாறும் பற்பல காவல் செய்து, அழகிய நூறு சிறுவர்களையும் அவர்களுக்குத் துணையாகச் சேர்த்து விட்டு மற்றும் எல்லாவித சௌகரியங்களையுங் குறைவின்றிச் செய்து, தானும் நாள் தப்பாமல் அதிகாலையில் தன் தேவியான விலாஸவதியோடுஞ் சென்று பார்த்துக்கொண்டு வந்தான்.

இவ்வாறு சிலகாலஞ் சென்ற அளவில், புதல்வன் மீது மிகுந்த ஆதரம் வைத்து வித்யாதினகரர்களான அவ் வாசாரியர்கள் அதிகரிப்பித்தருளியபடியால் பளிங்கைப் போன்ற அமலமான அவனது மனத்தில் எல்லாக்கலைகளுஞ் சிலையிலெழுத்தைப்போல ஒருநாளும் நீங்காத வண்ணம் நன்ருகத் தோய்ந்திட்டன. வேத நூல், ஆகம நூல், சோதிட நூல், வாகட நூல், துரக நூல், வில்வேதம், குஞ்சர நூல், மந்திர நூல், யந்திர நூல், நவமணி நூல், யோகநூல், தருமநூல், களவு நூல், மன்மத நூல், சூது நூல், கீத நூல், நாடக நூல், நீதி நூல் முதலிய எல்லா நூல்களையுஞ் சந்தேக விபரீதமற நன்குகற்றும், வில் முதலிய தொண்ணூற்றெட்டாயுதங்களையும் எடுத்துப் பழகுவதிலும், யாழ்முதலிய படிப்படியான முப்பத்திரண்டு வாத்தியங்களையும் வாசித்தலிலும் மிக்க தேர்ச்சி யுற்றும், தேர் யானை குதிரை யிவற்றை யூர்தலில் திறமை பூண்டும், இந்திர ஜால முதலிய ஜாலவித்தைகளிற் கைதேர்ந்தும், நாடகம் காவியம் புராண முதலியவற்றில் நல்ல பரிசயம் பெற்றும், ஆரியம் முதலிய பதினெட்டுப் பாஷைகளையும் அந்தந்தப் பாஷைக்குரியவர்கள்போலப் பேசுதற்குத் தெரிந்தும், சித்து விளையாட்டிற் பழகியும், இலைகிள்ளல் பூத்தொடுத்தல் முதலாகிய சிற்ப சாஸ்திரத்தில் நிபுணனாகியும், விடவித்தை மற்போர் நீந்துதல் கடத்தல் குதித்தல் எழல் ஏறல் முதலிய இவைபோன்ற இதர விஷயங்களை நன்குணர்ந்தும், சகல சாஸ்திர பண்டிதனாய், மலைபோன்ற மதயானைகளைக் கைதூக்கி விட்டெறிவதிற் பீமனையும், மேருமுதலாகிய எவ்வித மலைகளையும் பிளக்கும்படி கணையெய்வதில் விசயனையும் வென்று மகாபராக்கிரமசாலியாய் விளங்கினான்.

வலியொழிந்த மற்றைக்கலைகளெல்லாம்ராஜகுமாரன்போலவேவைசம்பாயனனும் நன்கு கற்றறிந்தான். இவ்விருவர்களும் சாஸ்திர வுணர்ச்சியாலும், தம்முன்னோர்களுடைய நீடித்த பரம்பரையான ஸ்நேக சம்பந்தத்தாலும், பாலியர் தொடங்கிக் கலந்து விளையாடிய நண்பினாலும் மிக்க நேசமுற்று ஓருயிரும் ஓர் நெஞ்சமும்போல அபேதமாய் விளங்கினார்கள்.

இவ்வாறு சகலசாஸ்திர பாரங்கதனாய் மேன்மையுற்றுத் திகழ்ந்த சந்திராபீடனுக்கு, ஓர் இளமரக்காவுக்குக் கொத்துநிறையப் பூத்த மலர் போலவும், பசிய மயிலுக்கு அழகுற முளைத்த தோகைபோலவும் அழகு மிக்க யௌவனமும், பேரொளியும் புவனத்திரயத்திலுமுள்ள எத்தகைய பெரியோர்க்கும் பேராசை யுண்டாகுமாறு உண்டாகி யுயர்ந்தோங்கின. அக்காலத்தில், எல்லாக்கலைகளும் பூரணமாக அமைந்தன என்று உபாத்தியாயர்கள் அருளிச் செய்யக்கேட்டு, மகிழ்ச்சிகூர்ந்த முடிவேந்தன் 'திருமகனைக் கொணர்மின்' என்று சமர்த்தனான வலாககன் என்பவனை ஒரு நன்னாளிலே பெரிய சேனையோடும் அனுப்ப, அவன் பணிந்து விடைபெற்றுச் சென்று, இளவரசன் வீற்றிருக்கும் அக் கல்லூரி மாளிகையின் வாயிலையடைந்து, தான் வந்த செய்தியை அறிவிப்பித்து, உத்திரவுபெற்று உள்ளே போய், தாள்களில்வீழ்ந்து வணங்கி, 'இருமின்' என்றபின் சிறிதுபொழு

திருந்து மீண்டுமெழுந்து நின்று வணங்கி, "எந்தாய்! இந்த இருபது வயது காலமுமிவ்விடத்திலேயே வாழ்ந்துகொண்டிருந்தீர். ஒப்பற்றஎல்லாக் கலை களும் பூரணமாயினவென்று உத்தமர்களான உபாத்தியாயர்கள் சொன்னார் கள்; அதுகேட்டுப் பேரருள்கொண்ட அரசர்பிரான் தம்மை அணிநகரத் துள் அழைத்துவருமாறு உத்திரவளித்து, 'சாகரத்தினின்றுவெளிப்பட்ட தனால் இது தாராபீடனைத் தாங்கத் தக்கது' என்று பாகருக்கடங்காத மதங்கொண்ட பற்பலயானைப்படைகளையுடைய பாரஸீகதேசமன்னவன் காணிக்கைப்பொருளாக அனுப்பிய வாயுவேகமாகச் செல்கின்ற கடுவிசை யையுடைய இந்திராயுதம் என்னும் பெயர்கொண்ட குதிரையொன்றையுந் தம்க்குத் தகும் என்று அனுப்பியருளினார்; அதுவுந் தலைவாயிலில் நின்று கொண்டிருக்கின்றது. வெற்றிபொருந்திய முடிவேந்தர்களது குமாரர்கள் பலர் பெருங்கூட்டமாகத் திரண்டு நம்முடைய ஸ்ரீபாதசேவையில் விருப் பினர்களாக இங்கே வந்து சேர்ந்திருக்கின்றனர்" என்று சொல்ல, அர சிளங்கோளரி, 'அவ்விந்திராயுதத்தை யுள்ளே கொணர்மின்' என்றுரைக்க, குதிரையைப் பழக்கி நடத்துவதில் வல்லவர்களான வேலைக்காரர்கள் சிலர் கடிவாளக்கயிற்றைப் பிடித்துக்கொண்டுவந்து அதனை எதிரே நிறுத்தினார் கள். அப்போது, அந்த இந்திராயுதமென்னும் இவுளியானது 'அதிவேக மாகச் செல்லுவதில் எனக்கு நீ இணையாவையோ?' என்று எதிரிட்டுக் கருடனைச் சண்டைக்கு அழைப்பதுபோலக் கனைத்து, 'யாரும் புகழ்ந்து உரைக்கின்ற இந்திரன் குதிரையான அந்த உச்சைச்சிரவம் எப்படிப் பட்டது? அதன் சிறப்பை நாம் அறிவோம்' என்று உச்சைச்சிரவத்தை நோக்கி மேலே கிளம்பிச் செல்வதே போல அடிக்கடி தலைதூக்கி எழுந்து, கதிவிசேஷங்களைப் படைத்திடுதலினால் அமரேசனான இந்திரனும் பெறற் கரியதென்றுசொல்லத்தக்கசிறப்புடையதாய், சூரியனுடைய ஏழு குதிரை களிலொன்று பார்மே விழிந்தோ என்றுரைக்குமாறு பிறங்கி யோங்கி, திருமாலின் திருவடிபோல மூவுலகத்தையுந் தாவுதற்கு முந்துவதாய், நிறம் சுழி முதலியவற்றில் தீங்கில்லாததாய், மற்றும் உத்தம அசுவலக்ஷ ணங்களொன்றினுங் குறையில்லாமற்சிலாக்கியமான குணங்களைப்பொருந் தியதாய், உயர்ந்து நீண்ட காத்திரத்தையும், கடைந்துவிட்டாற் போன்ற கணைக்கால்களையும், பெரிய தட்டுக்களையும், நீண்டு குவிந்து மினுமினுப் போடு கூடிய முகத்தையும், நிமிர்ந்துள்ள செவிகளையு முடையதாய், சுடெதிரில்லாமல் நின்றுகொண்டிருந்தது. சந்திராபீடன் ஒப்பற்ற அந் தத் தெய்வப் புரவியினை யுற்று நோக்கி, உலகத்தி லொன்றையுமே விய வாதவன் அதனைச் சாலவும் வியந்து, 'இப்படியும் உலகத்தில் ஒரு குதிரை யுண்டோ! ராஜசேகரனான எந்தையின் சிரேஷ்டமான பெருந் திருவிற்குத் தேவர் பிரானது செல்வமும் நிகரன்று' என்று பற்பலகாற் புகழ்ந்து, 'இந்த ஆடல்மா பூலோகத்திலே யுள்ளதொன் றன்று; இதனைக் கேவலம் குதிரை சாமான்யத்திற் சேர்த்துரைத்தல் சிறிதுந் தகாது' என்று கூறி, அதனை மேற்கொள்ளக் கருதிய மனத்தையுடையவனாய்ச் சென்ற அவன்,

சிறிதுபோது அங்கேயே சங்கித்து நின்று பெரியதோர் கூச்சமுற்று, 'இது ஒரு பெரிய சாபத்தினாலே இவ்வாறு துரங்கவுருக் கொண்ட தேவனே யன்றி வேறில்லை; இது நிச்சயம்' என்று சிந்தை செய்து, பக்கத்திற்போய், 'நீ உள்ளபடி யெத்தகைய பெரியோன் என்பதனை யான் அறிகின்றிலேன்; உன்னைக்கேவலங் குரகதமென்றே கருதிச் சிறியேன் செய்யாநின்ற பிழைகளை யெல்லாம் பெரியோனான நீ பொறுத்தருளல் வேண்டும்' என்று மனத்தால் வேண்டாநிற்ப, 'பெருந்திறல் கொண்ட அவ் வாசியும் அம் மன்னவ குமாரனைப் பிரீதியுற்ற பார்வையினாலே நோக்கி, வலதுகாலால் மண்ணை அடிக்கடி வெட்டிக்கொண்டு, 'இன்று என்னை நீ மேற்கொள்' என்று அழைப்பதுபோல அநுமானித்துத் தலை சாய்த்து நிற்க, அப்பொழுது அதன் நினைவை யறிந்து மேற்கொண்ட சந்திராபீடன் திரிலோகத்தையுஞ் சிறிதிட மென்று நினைத்துக் கொண்டு மலைபோல உயர்ந்த தலைவாயிலைக் கடந்து வெளியே புறப்பட்டு வந்தவளவில், நீண்ட நாளத்தோடு கூடிய நீலோற்பலங்கள் நிரம்பப் பூத்து விளங்குவதொரு தடாகத்தைப்போல விண்முழுதும் நெடிய வேலாயுதங்கள் பல ஒளிகொண்டு விளங்க, இந்திர தனுவோடு சேர்ந்த கரிய புயல்போல அழகிய மயிற்றோகையினாற் செய்யப்பட்ட குடைகள் பல திசைகடோறும் பரந்து தோன்ற, திருமாலினது உந்திக்கமலத்துண்டாகிய உலகனைத்துஞ் செவிடுபடும்படி அநுமானித்து, தாவி வருகின்ற கடலினது பெரிய திரைகளைப்போல நிரை நிரையாக வருகின்ற குதிரைப்படையைக் கண்டான். அப் புரவித் தானையும் மதியுதயங் கண்ட கடல்போல அச் சந்திராபீடனது உதயத்தைக் கண்டு மகிழ்வுற்றுப் பொங்கி யெழுந்து எதிர்நோக்கிச் செல்லா நிற்க, அப்போது படைவேந்தர்களது குமாரர்களனைவருஞ் சத்திர சாமரங்களை எல்லாந் துறந்து, ஒருவர்க்கொருவர் விரைந்து புக்கு நெருங்கிப் புறப்பட்டு எப்புறத்துஞ் சூழ்ந்தார்கள்; படைத்தலைவனான வலாககன் அம் மன்னர்குல மைந்தர்களையெல்லாம் இன்னின்னார் என்று தனித்தனி அவர்களது பெயரைச் சொல்லிச் சுட்டிக்காட்ட, வரிசை வரிசையாக வந்து தன்னை வணங்கிய அவர்களைச் சந்திராபீடன் கண்டு, அவரவர்கட்குத் தக்கவாறு தனது இன்னமுதம் போன்ற மொழியாலும், களிகொண்ட விழியாலும், நகைபூத்த முகத்தினாலும் இன்பம் வரச் செய்துகொண்டு, ஓரருகு வலாககனும், ஓரருகு வைசம்பாயனனும் வர, பெரிய ராஜலக்ஷ்மி வாழ்கின்ற இதழாயிரங்கொண்ட பெரிய வெண்டாமரையினது செழுமலர்போலச் சிறந்து தோன்றும் மாலை கொண்ட வெண் குடை நிழற்ற, தானைகள் சாமரை வீச, சூதர் மாகதர் முதலான மங்கலப் பாடகர்கள் 'ஜய ஜய' என்று வாழ்த்த, வடிவு கொண்ட மாரவேளையும், ஒரு முகங்கொண்ட முருகவேளையும், காமனார் தாதையான கருடத்வஜத்தையுடைய திருமகள் கேள்வனையுங் கொண்டாடாவண்ணஞ் சிறப்புற்ற பெரிய கோலத்தோடு படைவீட்டிற் புகக்கண்ட அவனிதலத்தவர்களெல்லாம், "நமது விழிபுரிந்த அருந்தவந்தான் என்னே!" என்று சொல்லி வியந்து பற்பலவாறு பாராட்டிப் பெருமகிழ்ச்சி கொண்டு குது

கலித்தார்கள். அரசிளங்குமாரன் நகர் நோக்கி வருகின்றானென்ற செய்தி கேட்டதும் அந் நகரத்துள்ள பூங்கொம்புபோன்ற பூவைமார்களெல்லாம் மாடங்களிலும் மாளிகைகளிலும் சூளிகைகளிலும் மண்டபங்களிலும் கூடங்களிலும் நர்த்தனசாலைகளிலும் கோபுரங்களிலும் செய்குன்றுகளிலும் வானுற வுயர்ந்த மேனிலங்களிலும் ஆறுகிடந்தாற்போன்ற நீண்ட வீதிகளிலும் பிற இடங்களிலும் 'நீங்குமின் நீங்குமின்' என்று சொல்லி முன் நிற்பாரை விலக்கி, இடமற நெருங்கிப் புகுந்து, தேனை நுகரும் அளியினங்கள் போலவும், மண்ணீர் வற்றி மழையுமில்லாத வறட் காலத்திலே உண்ணீர் கண்டோடும் உழைக்குலம் போலவும், அமிழ்தினில் மொய்க்கும் ஈயினம்போலவுஞ் சிலம்பு முதலியன சிலம்பப் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்கள். அவ்வாறு அன்னமன்னைய அப் பூங்குழல் மாதர்கள் எவ்விடங்களிலுந் திரண்டு, சாளரங்களை யெல்லாந் திறந்து திறந்து பார்த்த தோற்றமானது அச் சந்திராபீடனது பேரழகைக் காணவேண்டுமென்ற வேணவாவினாலே அப் பொன்னகரங் கண்விழித்துப் பார்த்ததனைப்போலக் காணப்பட்டது. கண்ணாடியிலும், கலங்கலில்லாத தெண்ணீர் வாவியிலுந் தோற்றுஞ் சாயைபோல, அச் சந்திராபீடனது விண்ணாட்டவர்களான தேவர்கள் தாமுங் கண்டு வியக்குந் திருமேனியானது பண்போன்ற இனிய சொல்லையுடைய அப் பாவைமார்களது களங்கமில்லாத உளங்கள்தோறுங் குடிகொண்டு விளங்கியது. அதனால், அம்மெல்லியலார்களிற் சிலர் அவன் மீது ஏவிய தங்கள் கண்களை யிமைக்காமலும், அசையாமலுஞ் சித்திரப் பிரதிமைபோல நின்றார்கள்; ஆவியும் நெஞ்சும் அறிவும் மடநாணும் நீவியும் பறிகொடுத்து நெறிகடந்த மால்கொண்டு நின்றார் சிலர்; 'இந்த அற்புத உருவம் கமலாசனனான பிரமனது கைவண்மையோ? அன்றிக் காமனது கைவண்மையோ? வந்து காண்மின்கள்' என்று கண்களிக்கப் பார்த்து நின்றார் சிலர்; திவ்பமான காந்திபெற் றொளிர்கின்ற இவன், சந்திராபீடனெனப் புதியதோர் திருநாமம் பெற்றுவருகின்ற நாராயணனே யன்றி வேறில்லை என்றார் சிலர்; கற்பென்னும் பேய்பிடித்த காரிகையார்களுடைய மலர்க்கண்கள் பூர்வ ஜன்மத்திற் பண்ணிய பாவத்திற்கு முடிவில்லை என்று நிந்தித்துரைத்தார் சிலர்; இடம்பார்த்துக் கணைதொடுக்கும் அறிவின்மையினாலே கண்ணுதலினால் மேனி வெந்து, மீண்டும் அச் சங்கரன் அருளால் உயிர்த்தெழுந்த மன்மதனது உருவமே யிவனது உருவம் என்று உருகினார் சிலர்; பக்கத்தேயுள்ள வைசம்பாயனனது முகத்தைப் பார்த்துச் சந்திராபீடன் இன்னமுதச் சொல்லொன் றிபம்பி நகைசெய்ய, அதைக் கண்டு, தம்மைப் பார்த்து நகைசெய்ததாகத் தமது கரைகடந்த காதலாதிசயத்தாற் கருதி, 'என்னை முகம் பார்த்தான்; என்னை முகம் பார்த்தான்' என்று இதனையே பலதரம் பாராட்டி யுரைத்துக்கொண்டு கொங்கை புளகமெழப் பூரித்து நின்றார் சிலர்; கருணைபொழியுங் கமலக் கண்களைப் பாரீர், உதயகாலத்து உவாமதிபோன்ற செவ்விய திருமுகத்தைப் பாரீர், அழகிய மாணிக்கமலைபோலகன்று, உத்தமமான மூன்று ரேகைகளையும் பொருந்தி

யுள்ள மணிமார்பத்தைப் பாரீர், காளைப்பருவத்தின் கட்டழகைப் பாரீர், பொற்கலையோடு பொலியுந் திருமருங்கைப் பாரீர், மாலையோடு விளங்கும் மணித்தோள்களைப் பாரீர், வேலைத் திரைபோல அதிவேகமா யழகுபெறத் தாவி வருகின்ற குதிரையைப் பாரீர், சோலைபோலக் கவிந்து குளிர்நிழல் கொடுக்கும் அழகிய கொற்றக்குடையினைப் பாரீர் என்று முதலெடுப்பில் தாம் பார்த்ததனைவிட்டுப் பிறிதொன்றிலே செல்லமாட்டாது அதிலேயே ஆழங்காற்பட்டுத் தகையுண்ட கண்ணினையுடையராய்த் தாம் கண்டதையே வியந்து, மற்றவரையும் அதனைப்பாரீர் என்று அழைத்தார் சிலர்; இவனது மார்போடு கூடி யின்ப நுகர்தற்குத் தவம்புரியுந் தையலார் யாரோ? என்று கரைந்தார் சிலர்; இவனைப்பெற்ற வயிறுடையாள் என்ன நோன்பு நோற்றாள் கொலோ? அம்மெய்த்தவத்தின் மகிமையை நாம் என்னென்று சொல்வது! என்று பகர்ந்தார் சிலர்; இவ்விதம் மொய்த்துவந்த மடவார்களெல்லாருந் தத்தமக்குத் தோற்றியவாறு அவனது ஒப்புயர்வற்ற அவயவ சௌந்தரியத்தைப் பற்பலவாறு புகழ்ந்தும், பருகுவரைப்போலத் தங்கள் வாள்விழியாற்பார்த்தும், மார்பிலணிந்துகொண்டுள்ள முத்துவடத்தினாலே அவனைப் பிணிப்பவர்போல முற்பட ஓடியும் பெருங்கூட்டமாய் நெருங்கிச் சூழ்ந்துகொண்டு, நானாவிதமலர்களையும் நெற்பொரியையும் பொழிந்து பொழிந்து துதிக்க, சந்திராபீடன் மிகப் பெரிய அக்கொடிவீதிகளை யரிதிற் கடந்து சென்று, யாமத்துக்கு யாமம் முறைதவறாது வந்துநின் றுலாவிக்கொண்டிருப்பனவும், மழையைச் சொரிந்துகொண்டிருக்கின்ற கரிய மேகத்தையும் அருவிபாய்கின்ற கரிய கிரியையும் ஒப்பானவுமான யானைத்திரள்களும், ஆயிரக்கணக்கான குடைகளும், பற்பலதேச மன்னவர்கள் மலைபோலக் குவித்த பாகுடங்களும், தூதுவர்களும், வீரர்களும் எள்ளிடுதற் கிடமின்றி நெருங்கியுள்ள அரமனை வாயிலை யடைந்தனன். அடைந்து, குதிரையை விட்டிறங்கி, அன்புமிக்க தோழனாகிய வைசம்பாயனன் கைகொடுத்துக்கொண்டு தன்னைப்போலவே எல்லாவித மரியாதைகளுக்கு முரியனா யருகே வர, படைத்தலைவனான வலாககன் ஆயுதபாணியாய் முன்னே செல்ல நடந்துபோய், யாரும் அச்சமுற்று வெருவுமாறு சுழற்றிக்கொண்டிருக்கிற பிரம்பினைக் கையிலே பிடித்து, மிக்க வெண்மையான கஞ்சுகத்தை யணிந்துகொண்டு, இரண்டுபக்கங்களிலுங் கோடிக்கணக்கான பற்பல வாயில்காவலர்கள் நின்றுகொண்டிருக்கின்ற வாயில்கள் அநேகங்களையும், சாந்து தீற்றியதனா லுண்டாகிய தவளமான ஒளி பரவி, மிகவுயர்ந்த தூய்மையையுடைய வெள்ளியங்கிரியான கயிலாயமே யிதுவென்னும்படி சிறப்புற்று ஒளிரும் மேனிலைகளும், எண்ணில்லாத கொடுமுடிகளும், புதிய கைபுடைகளும், மண்டபத்திரள்களும், பொன்முகப்பிலே பற்பல மணி குயிற்றியுள்ள நவரத்ன வேதிகைகளும், ஆடரங்குகளுமாகிய பலவற்றையும், இசை முரலும் வண்டினங்கள் நிரம்ப மொய்த்துக்கொண்டிருக்கின்ற மதப் பெருக்கினையுடைய கந்தமாதனம் என்னும் ராஜ யானை விளங்கிக்கொண்டிருக்க அழகிய நானாவிதமான வர்ணகம்பள விதானங்களினாலும் முகபடாங்களினா

னும் அலங்கரிக்கப்பெற்றுள்ள யானைக்கூடங்களும், நான்கு பகுதியாகப் பிரிக்கப்பெறும் நானிலத்திலுள்ள விசேடங்கள் அனைத்தையும் பழுதற எழுதி யறிகின்றபுத்திமான்களான இலேக சேகரர்க ளமர்ந்துள்ள மண்டபங்களுமான எல்லாவற்றையுங் கடந்து, இவ்விதமாக அற்புதங்கள் பல பொலிவெய்தி, போகங்கள் அனைத்தையுந் தம்மிடத்தே கொண்ட மூன்று லோகங்களும் ஒன்றாய்த்திரண்டு ஓர் பூமியில் வந்திருந்தாற்போலப் பார்க்கப் பார்க்க மகிழ்ச்சிதருகின்ற செல்வங்களெல்லாநிறைந்த அரமனையின் ஏழு கட்டினையுங் கடந்து உள்ளே சென்று, இடங்கொள்ளாத அரசர்கள் யாவரையும் வெளியே நிறுத்தி, அவர்களில் நேசமுற்றவர்களான சிலரை மட்டும் உள்ளே செல்லவிடுத்து, ஒளி வீசுகின்ற கூரிய வாளையும் மெய்க் கவசங்களையுந் தரித்துக்கொண்டு நிற்கும் அரசனது திருமேனி காப்பவர்களாகிய வலிமிக்க வீரர்களும், உக்கம் பொற்கவரி ஆலவட்டமென்னும் இவற்றை வீசிக்கொண்டிருக்கும் மடமாதர்களும் புறஞ் சூழ்ந்துநிற்க, சிங்கஞ் சுமந்த மணிப்பீடத்திலே வெண்மையானதொரு வட்டவணைமீது ஜலம் வற்றியுள்ள மந்தாகினியின் மணல் திட்டின்மேற் பாற்கடலிலுதித்த ஐராவதஞ் சாய்ந்திருந்தாற்போல வீற்றிருக்கின்ற, தனது நன்றியையே எப்போதுங் கருதுகின்ற அன்புமிக்க தந்தையினது தாண்மலர்களைக் கண் குளிரக்கண்டு, தூரத்திலிருந்தபடியே பலமுறை வணங்கிப் பக்கத்திலே செல்ல, மன்னவனும், ‘வருக, வருக, எந்தையே வருக’ என்று மனமகிழ்ந்து சரீரம் புளகிக்கும்படி வாரியணைத்து, இரண்டு கைகளினாலும் நெடுநேரந் தனது மார்புறத் தழுவி, ஆனந்தக் கண்ணீர் பெருக, முகமலர்ச்சிகொண்டு உச்சிமோந்து பாராட்டியருளினன். அப்போது, லோகபதியான தந்தையின் பாதபீடத்தினருகே தனது அடைப்பைக்காரன் உத்தரியத்தையாசனமாக மடித்துப்போடக்கண்டு, அவனைத் தனது கைத்த விழிக்கடையினாலே முனிந்து, அதைக் கால்விரலினுனியாலே யெத்தி யொதுக்கி, மைந்தனான சந்திராபீடன் வெறுநிலத்திலே யிருந்தான். இப்படி மைந்தனைப்போலவே புத்தி பண்ணத்தக்க மந்திரி குமாரனான வைசம்பாயனனும் அந்த அற்பமான ஆசனத்திலேயே யுட்கார்ந்தான். இவ்வாறு ஒரு நாழிகைநேரம்வரை இருந்தபின், மன்னர்பிரான் இளவரசைநோக்கி, ‘வீர! என்னைப்போலவே நினது தாய்மார்களையும் மகிழ்வித்து வருவாய்’ என்று கூற, அவ்வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு வணங்கி, மன்னவன்மைந்தன் மந்திரி மைந்தனோடு அன்னையின் கோயிலையடைந்து, முன்னறிதெய்வமான அவளது திருவடிகளைத் தாழ வணங்கியெழுந்ததும், அன்னை, தன்னுடைய தனங்களினின்று ததும்பிப்பொங்கிய பாலினால் நனைந்து குளிர்ந்த அம்மைந்தனது உச்சியை மீளவும் மீளவும் மோந்து, ‘இந்த ஏழு லோகங்களையும் உந்தையும் நீயும் பல்லாண்டு பல்லாண்டாக இருந்து புரந்து, ஊழி சிறிதாகக் கொண்ட நெடுங்காலம் வாழி’ என்று குழைந்து வாழ்த்திப் பரிவோடு இறுகத் தழுவிக்கொண்டு, மடியிலேயிருத்தியணைத்து, தோள்களையும் மார்பினையும் நுதலையும் முதுகினையும் மிதமிஞ்சிய வாத்ஸல்யத்தினாலே மனங்கரைந்து

உருகிப் பற்பலமுறை தடவிக்கொடுத்து, 'ஒழுங்கான வித்யாப்யாஸத்தாலே, என் ஐயனே! நினது அரிய பொன் மேனியெல்லாம் பட்ட கஷ்டத்திற்குச் சிறிதும் உருகாத கடினமான நெஞ்சை நினது தந்தையார் எப்படித்தான் படைத்தனரோ அறியேன். இத்தனை காலம்வரையிலும், சிறிதுங் குறைவின்றி ஸம்பூரணமாகவே நல்ல வித்தைகளையெல்லாம் அதிகரிப்பித்தருளிய அத்தனை யாசாரியர்களும் நெருக்கியதை, என் அப்பனே! நீ எப்படிப் பொறுத்தாய்? புத்திரர்களென்று பிறந்தவர்கள் பாலகர்களாய் விளையாடல்புரிந் தொழுகு மவைகளில் ஒன்றேனும் நீ விளையாடியறியாய்; இதை நினைக்கும்போது உனது ஐயர் மனத்தினும் உன் மனம் அதிக கடினமானது என்று தோற்றுகிறது' என்று மொழிந்து, அங்ஙனே நெடுநேரம் இருந்தவள் இப்படியே மந்திரி குமாரனையுஞ் சிறிதும் வேற்றுமை பாராட்டாமல் மைந்தனைப்போலவே சிந்தித்து, அத்யாதரங்கொண்டு தழுவி முற்சொன்ன விவற்றையே சொல்லியிருந்தனள். அதன்பின், புத்ரரத்னமான சந்திராபீடன் மற்றுள்ள தாய்மார்களையும் மகிழ்வுறச்செய்து, திரும்பி வாயிலடைந்து, இந்திராயுதமென்னுமவ்வாம்பரியை மேற்கொண்டு, படைவெள்ளமும் அரசர்வெள்ளமும் பின்செல்லச் சென்று, சுகநாதன் இருந்தருளிய பொன்மனையிற்புக்கு, அங்கே பிரீதி மிக்க பிதாவைப்போலவே பேரன்புகொண்டு வீற்றிருந்தவனைக் கண்டு, படிமேல் முடிதோய மிக்க வணக்கத்தோடு வணங்கி யவனருகிற்சென்றான். அவ்வாறு வணங்கி வந்த ராஜகுமாரனை எதிர்கொண்டழைத்துத் தழுவிக்கொண்டு, இரண்டு மைந்தர்களையும் இரண்டு கைகளினாலே யணைத்து மனமுருகி மகிழ்ந்து, 'பண்டு முயன்ற தவப்பயன் இன்று பலித்தது' என்று களிகூர்ந்து, எட்டுத்திசையும் புகழ்கின்ற மந்திரியான சுகநாதன் ஆசனத்திலிருந்தான். வட்டமான மதிக்குடையையுடைய மன்னனது மைந்தனான சந்திராபீடன் பக்கத்திலே யிட்ட மணிக்கதிராசனத்திலே யிராமல் தலத்திலே யமர்ந்தான்; அது கண்ட மன்னர்களெல்லாம் ஒளிர்கின்ற பொற்றவிசுகள் அனைத்தையும் விட்டு மந்திரிகுமாரனோடு நிலத்திலே யுட்கார்ந்தார்கள். பின்பு, அமைச்சர்கோமானான சுகநாதன் உள்ளத்தே கூர்ந்த உவகையானது புறத்திலும் பொசிந்தாற்போலப் புளகங்கள்வரச் சிந்தைமகிழ்ந்து, குமாரனைநோக்கி, 'நீ கசடறக்கற்ற நெடுங்கலையும், தலைகூடிய யௌவனமும் உடையனாய் வரக்கண்டோம்; இதுவே எங்கள் வாழ்வுக்கு இனிப் போதுமானது; இன்றன்றோ தாராபீடன் தனது எண்ணமும், இந்த வாழ்வினாலே யடையக்கூடிய பயனையுங் கைகூடப்பெற்றான்; உவரிசூழ்ந்த உலக மெல்லா மின்றன்றோ துயரந்தீர்ந்து மகிழ்ந்தன; இப்படியே பிதாவும் நீயும் நெடுங்காலமிருந்து இப்பூமியை நிலைபெறுமாறு பாதுகாத்து வாழ்வீர்களாக' என்று பற்பல உவகையாசிகளை மொழிந்து உயர்ந்த ஆடை யாபரணங்களாலும், அப்போது பூத்த திவ்ய மலர்மாலைகளாலும், சந்தனம் பன்னீர் புழுகு கஸ்தூரி முதலிய பரிமளவஸ்துக்களாலும் நன்றாக அலங்காரஞ்செய்து அனுப்ப, அந்தப்புரஞ்சென்று தேவியான மனோரமையைக்கண்டு பதம்

பணிந்து, அங்கிருந்து திரும்பித் துரகராஜனை மேற்கொண்டு, கொற்றவேல் வேந்தனை தாராபீடன் வாழ்கின்ற அரமனைபோலவே நன்றாக அமைக்கப் பட்டுப் பற்பல பூரணகும்பங்களுந் தோரணங்களுந் துவசம் முதலிய மற்ற வைகளும் நிறைந்து, நானாவித மலர்களையுஞ் சிதறி, மங்கல வாத்தியங்கள் யாவும் முழங்கப் புண்யாகவாசனஞ் செய்யப்பெற்றுக் குற்றமறவோங்கி யுயர்கின்ற **குமாரபவனம்** என்னும் அரமனையை யடைந்து உள்ளே பிரவே சித்து, சித்திரமுதலியவற்றினு லணிந்துள்ளதொரு அழகியமண்டபத்திலே சிறிதுநேரந் தங்கியிருந்து, பின்னர் அரசர்குமாரங்களோடு மெழுந்து ஸ்நானஞ்செய்து, அனுஷ்டானங்களையெல்லாஞ் செய்துமுடித்து, அமுது செய்து, பற்பல பிரகாரமாகப் பகற்போதைப் போக்கி, ராஜதுரங்கமான இந்திராயுதத்திற்குத் தனது அழகிய பள்ளியறைக்கு அருகாகவே பந்தி யமைத்தான்; அப்போது, பகலென்னு மடமங்கை தனது செங்கையிலே வைத்து அழகுபார்க்கு மணிக்கண்ணுடியை யுறையிலிட்டாற்போலச் சூரி யன் மேலை வேலையுட் புகுந்தான். புகுதலும், 'குவிகின்ற கமலத்தி னுள்ளே குலவெயில் ஒளித்திட்டன; இப்போது இவற்றையெல்லாம் நாம் அருந்தல் வேண்டும்' என்று கருதி இருளினுடைய சிறிய சகலங்கள் அறைகூவிக் கொண்டு மேற்செல்லுமாறுபோல வண்டினங்களெல்லாம் அவ் வனசமலரி னுள்ளே சேர்ந்து ஓடுங்கின; உடனே கங்குல்யாமமுந் தலைப்பட்டது. அப்போது, சோதிமிக்க அநேக தீப் பந்தங்கள் சூழ, நாயகனை சந்திரா பீடன் கால்நடையாகவே நயந்துசென்று, தந்தையின் தூய பாதபங்கயங் களைப் பணிந்துபோய் அன்னையின் சேவடிகளையும் வணங்கித் தொழுது, திரும்பிப் பள்ளியறையிற்சேர்ந்து, பள்ளிகொண்டு, வைகறைப் போதிலே துயிலுணர்ந்தெழுந்து, வேட்டைகாணும் விருப்பினனாய், வேந்தன்பாற் சென்று விடைபெற்று, அதிதீரர்களான சிற்சில பதாதிவீரருடன் திரும்பி இந்திராயுதமென்னும் வயப்புரவிமீ தாரோகணித்து, தோலாற்செய்த சட் டையைத்தரித்துக் கச்சை நன்றாக வரிந்து வீக்கி வலிபெறுமாறு கரிய நூற்கயிற்றினலே மயிர்முடியை யெடுத்துக்கட்டி வில்வேல் முதலிய ஆயு தங்களைக் கையிலே பிடித்து வலிய இருப்புச் சங்கிலியிலே பிணிக்கப்பட் டிருக்கிற நாய்களையும் பற்றிக்கொண்டு கொலைத்தொழில் பயின்ற வேடர் கள் கோலாகலத்தோடு முன்னே யோடிச் செல்லக் கானகத்துட்சென்று, கடிய வெங்கணை தொடுத்து, ஏனம் சிங்கம் எட்டடிவேங்கை புலி மான் முதலிய அநேக கோடி மிருகங்களை வானமுஞ்செவிடாம் வண்ணம் வாய் விட்டுக் கதறுமாறு கொன்றுதள்ளி, தன்னுடைய மிகுந்த பராக்கிரமத்தி னலே யானைகள் முதலாகிய ராஜார்கமான பெரிய மிருகங்களையெல்லாங் கொல்லாமல் உயிருடனே வளைந்து பிடித்து, மின்னலைப்போல ஒளிவீசும் விறல்வேல் வேந்தர்களெல்லாம் வியப்புறும்படி மிருக வேட்டையாடி, ஜகத்சக்ஷுவான சூரியன் உச்சிக்குவந்த நண்பகற்போதிலே திரும்பி, பெரிய படைவீரர்களெல்லாரும் பிற்பட, பிற்படாமற் பரிவிசையினலே தன்னைவந்து கூடிய சிரேஷ்டர்களான ராஜகுமாரர்களோடும் மற்றுஞ் சில

ரோடும் வேட்டையிலுண்டான அதிசயங்களையெல்லாம் ஒவ்வொன்றாகப் பேசிப்பேசி வழிகடந்ததுதெரியாமல் நகரத்தினுட்சென்று, குமாரபவன மென்னுந் தனது சிறந்த மாளிகையை நண்ணி, இவுளியை விட்டிறங்கி யுள்ளேபுகுந்து, கஞ்சுகங் களைந்து, இருபாலும் நின்று வீசுகின்ற மயில் விசிறியின் மாருதத்தினாலே இளைப்பு மாறி, உத்தமமான நல்ல தீர்த்தத்தினாலே ஸ்நானஞ் செய்து, ஈரந்துவட்டி, ஆடையிரண்டை யணிபெற வணிந்து, தனது மரபிற்கேற்ற அக்னிகாரியங்களைக் குறைவற முடித்து, உச்சிக்காலத்திற் செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களையுஞ் செய்து கழித்து, அங்கு நின்று புறப்பட்டுச் சீரிய அங்க்ராகபூமியிற் சென்றான். அப்போது தந்தையான தாராபீடன் வாரியருடனே ரெவிட்ட மடந்தைமார்களும், அன்னையான விலாஸவதி வரவிட்ட சேடிமார்களும், ஏனைய அன்னைமார்கள் பலரும் வரவிட்ட பாங்கிமார்களும் முறையேவந்து சிறந்த மணியணிகள் பட்டாடைகள் பூமாலைகள் அங்கராகங்கள் என்னும் இத்திறத்தன எல்லாவற்றையும் இறைவனை அவன்திருமுன்னே வைத்து நின்றார்கள். அண்ணலும் அவற்றையெல்லாந் தான் அணிந்துகொண்டு, உற்ற உயிர்த்தோழனை வைசம்பாயனனுக்குந் தன் கையினாலேயே நலம்பெற அலங்காரஞ்செய்து, மற்றைய ராஜகுமாரர்களுக்குங் கொடுத்து, நாழிகைக் கணக்கர் கடிகைகூறப், போஜன மண்டபத்தை யெய்தி, தனது பெரிய தோழனோடுந் தகைமையுற்ற குமாரர்களோடு மன்புட னிருந்து, அருந்துங் காலத்தில் அவரவர்களுக்குத் தக்கவாறு தனது பேரருளினாலே இன்புறுகின்ற உபசாரத்தைச் செய்து ஹிதத்தோடு அவர்களை மகிழ்வித்துத் தானு நுகர்ந்து, செங்கைபூசிப் பெயர்ந்து, தாம்பூலம் வாங்கிச் சிறிதுபொழுது அங்கே யிருந்து, பின்னர் இந்திராயுத மிருக்குமிடத்திற்கு வந்து, தனது வெற்றித்திருக்கரத்தினாலே அதற்குப் பிரியமான நல்ல புல்லை யளித்து, அற்றைப் பகற்போதைப் பற்பல விநோத விளையாட்டுக்களினாலே போக்கி, மாலைப்போதிலே மன்னன் மாளிகை சென்று தந்தை தாயரை வழிபட்டுத் திரும்பி, மெத்தென்ற அமளியின்மேற்படுத்துக் கண்படைகொண்டு கங்குற்போதையுங் கழிப்பானாயினான்.

பிற்றைநாட்காலையில், கதிராயிரங்கொண்ட சுடர்க்கடவுள் தோன்றியவுடன், பிராதக்கால சந்தியா வந்தனங்களையெல்லாஞ் செய்து முடித்து, சிறந்த அச் சந்திராபீடன் இனிதாக வீற்றிருக்குங்காலத்தில், புரவலர் பெருமானான தாராபீடனது அந்தப்புர மாளிகைக்கு உரியவனும், நல்ல கௌரவமுடையவனுமான கயிலாயன் என்பவன், தன் பின்னே திருமகள் என்றே சொல்லத்தக்க மிக்க வனப்புவாய்ந்து, தங்கிய பேதும்பையான பருவங்கடந்து, ஆரம்பமான மங்கைப் பருவத்தை யெய்தி, அழகிய செந்தாமரையினது முகையைப்போலக் கொங்கைகள் அளவாகத்தோன்ற, கொற்றவனது அரமனை நீதிகளனைத்தையுந் தன்னு ளளந்தறியக் கூடியவண்ணந் தெரிந்துள்ள ஒரு சுடர்க்கொடிமாது, அரிய சுககரமான இளந்தென்றல் வீசவும் அசைந்தசைந்து அழகுசெய்யும் ஒரு செழுங்கொடிபோல மெல்ல

ஓசிந்தொசிந்து ஒல்கியொல்கி வர, முன்னே வந்து புரவலனது புத்திர சிகாமணியைக் கண்டு, அவனது பொற்பாதங்களை வணங்கிப் புகழ்ந்து, "என் ஐயனே! ஒரு நாயகமாய் உலகெல்லாம் புரக்கும் எமது கோமகனாது பெருந்தேவியாராகிய விலாஸவதி ஒன்றைத் திருவுள்ளம் பற்றியருளினர்; அதனைக் கிருபையாற் கேட்டருளவேண்டும்; 'ராஜாதிராஜனை தாராபீடன் பகைவனை குலூதராஜனை ஜயித்து, அவனது வளநகரைக் கைப்பற்றிய காலத்திலே, அகப்பட்ட சிறைகளையெல்லாம் அந்தப்புரத்தவர்களுக்கு அளிக்கும்போது, எனது செத்திலே வந்த சிறைகளில் அம் மன்னவன் மகளாகிய இந்த அழகுமிக்க பத்ரலேகை தனித்துநிற்பதை நான் கண்டு, மிகப் பெரியதோர் ராஜ்சையினாலே இவளை எனது மகளைப்போலவே கருதி வளர்த்து வந்தேன்; இவளது அடைவும் அன்பும் இத்தகையதென்று சொல்லுந் தரத்ததில்லை; ஆகையால், குமைமந்தராகிய தமக்கு அந்தரங்கமாய் நம்பிக்கை வைக்கத் தக்கவள்; இவள் தமக்குத் தாம்பூலந்தரத்தகும் என்று அங்கு வரவிடுத்தேன்; தாமும் இவள்திறத்தி லன்புபூண்டு சேவை கொள்க' என்று செப்பியருளினர்" என்று விலாஸவதி பணித்ததைக் கூற, அவனைநோக்கி, 'அன்னை எது சொல்லி யனுப்பினரோ, அதனையே நான் செய்வேன்' என்று சொல்லி அக் கஞ்சுகிக்கு விடைகொடுத்தனுப்பினன்; உடனே மின்னற்கொடிபோன்ற அப்பத்திரலேகை இறைவன் திருமுன்னே சென்று அவனை மெய்யன்போடு வணங்கிநின்றாள். அன்று தொடங்கி அப் பத்திரலேகையும் ராஜ குமாரனை சந்திராபீடனை அல்லும் பகலும் அனவரதமும் அவனது பிரியமான சாயைபோலத் தொடர்ந்து, ஒப்பற்ற தனது சேவையினால் ஓரடியேனும் விட்டுப் பிரியாதவளாய், எல்லாப் பொருளுக்கு முரியவளாகி யிதயமு முயிரும்போல இணைந்திருந்தாள்.

இவ்வாறு சிலநாட் சென்ற வளவில், இனிய தனது குமாரனுக்குப் புஜங்கஞ் சுமக்கும் பூபாரத்தைச் சிறிது புஜத்திற் சுமந்து உலகத்தைக் காக்கும்படி யௌவராஜ்யபட்டாபிஷேகஞ் செய்விக்கவேண்டுமென, கூரிய வேலாயுதத்தையுடைய கொற்றவன் அமைச்சர்கோனை சுகநாதனோடும் ஆலோசனைசெய்துகொண்டுவந்தான். அங்ஙனமெண்ணிவந்த நாட்களிலே, ஒருநாள், இதழ்விரிந்த மலர்மாலையை யணிந்துள்ள சந்திராபீடன் அமைச்சர் பிரானது மனைக்குச் செல்லச் சுகநாதன் கண்டு, இளவரசுரிமைக்குத் தக்கோனாகிய இவனுக்கு ஹிதோபதேசஞ் செய்தற்கு இது நல்ல தருணம் என்று எண்ணி, அவனது முகத்தைப்பார்த்து, 'வீரனே! நான் உனக்குச் சிற்சிலவிஷயஞ் சொல்லவிரும்புகின்றேன். அவற்றையெல்லாம் நீ மனமுவந்து கேட்பாயாக' என்று சொல்லத் தொடங்கினான். "அறிய வேண்டுவனவற்றையெல்லா மறிந்தும், கற்கவேண்டுவனவற்றையெல்லாங் கற்றும், கற்ற அந்நூல்களிற் கூறிய ஒழுங்கான மார்க்கத்திலேயே யொழுகியும், பிறிதொரு நெறியிலே செல்லாமலுமிருக்கின்ற நல்ல குமாரனை உனக்கு நான் சொல்லவேண்டுவதொன்றுமே யில்லை; ஆகிலும், ஒருசிறிது சொல்லவேண்டியிருக்கின்றது; இன்ப நுகரும் செவ்விப் பருவமாகிய நல்ல

யௌவனத்தில் சந்திரன் சூரிய னக்னி முதலிய எந்தச் சுடர்களினாலுமே அகற்றுதற்கு முடியாத வலிய மோகாந்தகாரமானது எவரையுமே மூடி மறைக்கும். திருவினா லுண்டாகும் மதங்கள் மூப்புற்றகாலத்துந் தணியா; செல்வமாகிய இருட்படலம் ஒருவரால் மருந்தால் ஒன்றினாற் பறியாது; உற்கமாகிய மதத்தினாலே உண்டாகும் வெம்மை சுற்றத்தார் செய்யுஞ் சைத்தியோபசாரத்தினால் தணிவதில்லை; விஷயமாகிற விஷமோகம் மந்திர முதலியவற்றா லகலாது; ஆகையால், நான் உனக்குச் சாஸ்திரநெறிப்படி விஸ்தாரமாகச் சொல்லவிரும்புகின்றேன்; ஜனித்தநாள் தொடங்கி இடைவிடாத கர்ப்பஸௌகமும், புதிதான இளமையும், பொருந்திய பேரழகும், நிகரில்லாப் பெருவலியுமாகிய இவையெல்லா மொன்றுசேர்ந்து ஓரிடத்திலிருக்குமாயின் எப்போதும் பெரிய தீமைகளே விளைந்துகொண்டிருக்கும்; அவற்றை யிவ்வளவுதானென்று சொல்லி நிறுத்த எவர்க்கு மாகாது. மேற்கூறியவற்றில் ஒரொன்றே யுலகில் ஆடவர்களுக்கு எல்லாவித அனர்த்தங்களையும் விளைவித்தற்குப் போதுமானது; பிறிதொன்று வேண்டுவதில்லை. பளிங்கிலே வீழ்ந்த சந்திரகிரணம் நன்றாகப் பற்றுவது போலச் சிறிதுங் களங்கமில்லாத நெஞ்சிலே குரு உபதேசஞ் சீக்கிரமாகப் பற்றி, மறதிமுதலியவற்றா லகலாமல் நிலைநின்று விளங்கும்; ஒளிர்கின்ற ரத்னாபரணங்களினால் விளங்குகின்ற அழகிய மார்பினையுடையாய்! உன்னைப்போன்ற சிறியோருடைய தகுதியான நெஞ்சினுக்கே யன்றிப் பூரியோருடைய களங்கமுற்ற மனத்தினுக்கு இந்த வாயுரைகளெல்லாம் ஏற்கமாட்டா; நீ இதன் முன்னர் விஷய மோகத்தி லகப்பட்டனையில்லை; ஆகையால், இதுவே உனக்கு உபதேசஞ் செய்தற்கு ஏற்ற காலம்; விஷயாந்தகாரத்திலே மூழ்கி நிற்பார்க்குச் சொல்லும் உபதேசங்களெல்லாம் அவர் மனத்தில் அற்பமுந் தேங்குவதில்லை; ஒருகாற் சிறிது தேங்கிநின்றாலும் அது மன்மதனது மாயமான சாயகந் துளைத்த வழிகளினால் ஒழுகி யோடிவிடும். நல்லுபதேசஞ் செய்யும் நல்லோரை நாடில் எங்கேனும் ஒரொருவ ரருமையாகக் காணப்படுவர்; அல்லாதவர்களோ பலர்; அவர்கள் அரசர்களது அதிகாரத்திற்கு அஞ்சி யெதிரொலிபோல அவ்வரசர்க ளுரைத்ததையே யுரைப்பார். இதுபோலவே, பெரியோர்கள் சொல்லுகின்ற பொருண்மொழிகளைச் சொல்லியபொழுதே மனத்தில் வாங்கிக்கொள்ளுந் தூயவருஞ் சிலரேகாண்; மல்லுயர் தோளாய்! மற்றவர்கள் மூத்தோர்களுடைய அமிர்தம்போன்ற வார்த்தைகளைச் செவிகொடுத்துக் கேளார்; கேட்டாலும் ஒரு காதினால் வாங்கி மற்றொரு காதினாலே வெளிவிட்டு மதத்தினாலே மறந்துவிடுவார்கள்; இவை நிற்க. 'திருமகள்' 'திருமகள்' என்று உலகத்திலுள்ளோரெல்லாஞ் சிறப்புடன் வியந்து பாராட்டுகின்ற பரிசய மரியாதவளுடைய வேற்றுமைப்பட்ட விசித்திரமான பற்பல குணங்களை யான் என்னென்று பகர்வேன்! அவளை யொருவன் அடையப் பெறுதல் அரிது; அரிய செய்தவத்தினாலே யடையப்பெற்றாலும், கருமுகிலனையாய்! நீங்கவிடாமல் அவளை வைத்து ரக்ஷிப்பது அதனினும் அரிது. போகாமற் காத்தலென்பது ஸௌலபஸாத்

யமான காரியமில்லை. அத் திருமகளோ என்னில், பரிசயமறியாள், மரபினை யோராள், பழுதிலா ஒழுக்கமும் பாராள், வரிசையை நினையாள், கல்வியை நாடாள், மருவிய மானத்தை யுட்கொள்ளாள், பெருகிய வண்மையை எண்ணாள், பெரிய மாதவத்தை யாதரியாள், விண்ணிடைத் தோன்றும் மின்னலினும் விரைவாகத் தான் ஆச்ரயித்த இடத்தைவிட்டுக் கடிதிலே மறைந்து போய்விடுவள். பெருமை உயர்வு தகுதி நலம் பலம் முதலிய பிற எல்லாவற்றையும் இச்செய்யாள் செய்வளெனினும் இவளை நாம் வியந்துரைக்கத் தகாது; ஏனெனின், இருளெல்லாம் இருந்தவிடந் தெரியாமல் விரிந்தோடுமாறு தூண்டாவிளக்கொன்று கொழுந்துவிட்டு எரிய எரிய மையையே யுமிழுமாறுபோலத் திரு என்று சொல்லு மிவளும் நிற்க நிற்க வெறுந் தீயொழுக்கங்களையே விளைப்பள். மின்மினி யொளியைப்போலச் சிறிதுபோது அற்பமாக விளக்கமுறுகின்ற இச் செல்வத்தை மெய்யென்று நம்பி, தமது தன்மையை மறந்து, மனமும் இந்திரியமுங் கோடிக்கணக் காகப் பெற்றுள்ளவர்கள்போ லுன்மத்தராய், ஒருவழிப்படாமல், நாளுக்கு நாள் அதிகரிக்கின்ற பேராசையிற் படர்ந்து, தறுகண்மையுங் கொடுமை யுமே மிகுந்து, முன்னங் கண்டுகேட்டறியாத அஸ்திரமான வாழ்வினாலே சிலர் பெரிதும் மயக்கமுற்று உழல்வார். பூதமும் பிசாசும் வந்து அமுக்கியவர்கள் போல அடிக்கடி நகைசெய்வர்; மரணத்தைக் கிட்டியவர்போல மயங்கிப் பற்பல முகவிகாரத்தைச் செய்வர்; வாதம்வந்து தாக்கி வயிறு உளைந்தவர்போல வலத்திலும் இடத்திலும் உடம்பைத் திருகிக்கொள்வர்; நோவுறும்படி நையக் குத்துண்டவர்போலத் தியங்கி போய்ந்து உடல் சுழன் றிருப்பர்; முடவர்போல் வேறு சிலர்களால் நடப்பர்; முற்றிய முக வாத முள்ளவர்போல நடுக்கமுற்று ஒவ்வொரு வார்த்தையாக மிக்க சிர மப்பட்டுக் கொண்டு பேசுவர்; பத்தாவதான மரணவஸ்தையை யடைந்த வர்போலப் பக்கத்திருப்பவர்களையும் இனாரென்று அறிய மாட்டார்; கண்ணோயுள்ளவர்போல வெளுத்த ஆடையை யுடுத்துக்கொண்டிருப்பவர் களையும், தேககாந்தியுடையவர்களையும் பார்க்கமாட்டார்; இத்தகையோர் களைத், தங்கள் காரியத்தை எப்படியாவது முடித்துக்கொள்ளுதற்குச் சாமார்த்தியமுள்ள சதுரர்களான சிலகயவர்கள் 'எங்கள் நாயகனே!' என்று பொய்த் தோத்திரஞ்செய்தும், கைகட்டி மரியாதை வைப்பவர்போலக் கால்கடுக்க நின்றும், இவர்கள் சென்றவழியே சென்றும், அபிமதமான வற்றையே செய்தும், உரு வண்மை உயர்வு திரு முதலியவற்றையெல்லா மழித்து மானத்தைச் சிதைக்கவல்ல பொய்ச்சூதை விநோதமான நல்விளை யாட்டென்று சொல்லியும், வஞ்சங் களவு பொய் மயக்கம் என்னு மிவற் றிற்கெல்லாங் காரணமாய், அதிபாதகமான மதுபானத்தைத் தேகத்துக்கு ஆரோக்கியமென்று கட்டுரைத்தும், மானக்கேடுண்டாகப் பிறர்மனை நயத் தலை யுலாத்தென்று மொழிந்தும், தாங்களு முள்ளே சிரித்து நின்று, இவ்வாறு தகாதனவற்றையெல்லாந் தழுவியுரைத்தும் பிரியம் வருமாறு துதிப் பார்கள்; முற்கூறிய இவற்றையெல்லாம் மெய்யென்றே கருதிப் பெரிய

செல்வச் செருக்கினாலே மயங்கி, கனல்விழியில்லாத ஈசனே யென்றும், இரண்டு புஜங்களை மாத்திரமுடைய முகுந்தனேயென்றும், கமலாசனத்திலில்லாத பிரமனே யென்றுந் தம்மைத் தாமே மதித்துக்கொண்டு, தருக்குற்று, தெய்வங்களையும் வணங்கார்; கண்ணெதிர்ப்படினுங் குரவர்களைப் பேணார்; சான்றோர்கள் சிலரை யறிந்து கொண்டாடார்; அந்தணரையும் பூஜைசெய்யார்; அறிவான் மிக்க பெரியோர்களையே யிகழ்வர்; மூத்தவர் மொழிகளையுங் கேளார்; சகல சாஸ்திரங்களையும் நன்கு கற்றவர்களான அமைச்சர்களது ஆலோசனையைக் கேட்பதும் பரிபவமாகவே நினைப்பர். இராப்பகல் சிறிது மிடைவிடாது கூடவே யிருந்து இச்சகவார்த்தைகளைப் பேசிக்கொண்டு, வாவிகளிற் பராக்கறவிருந்து தூங்குவதுபோற் காணப்படுங் கொக்கினையொத்த பண்பு சிறிதுமில்லாத கபவர்களே இவர்களுக்குச் சகோதரரும் அமைச்சரும் ஒன்றிலும் பேதமில்லாத தோழன்மாருங் கிட்டிய உறவினருமாவர்கள்; அவர்களுக்கே இத்தகைய அரசர்கள் வேண்டுவனவற்றையெல்லா மளிப்பர்; பளிங்குபோன்ற நிர்மலமான நினது நெஞ்சம் எப்படிப்பட்ட ராஜஸம்வந்து எதிர்ப்பினுங் கலங்காது என்றவிஷயம் யாரும் அறிந்ததே. ஆயினும், இந்த அழகும், இந்த இளமையும், இந்த வலிமையும், இந்தப் பெருஞ்செல்வமும் ஒன்றுசேர்ந்ததனா லுண்டாகின்ற பெரிய செருக்கு சுலபமாக மாற்றக்கூடியதில்லை; இதனை யெப்படியாவது நீ மாற்றி, மிகமிக வருந்தி யாகிலும், இந்த மேதினி தீதுரையாமலும், பெருந்தகைமை வாய்ந்த முதிய குரவர்கள் நிந்தியாமலும், சதுரரானவர்கள் கையிலே யகப்படாமலும், அகமகிழ்கின்ற தோழன்மார்கள் இகழாமலும், ஆசைகளெல்லாம் உன்னைத் தங்கள் வசத்தில் இழுக்காமலும், நல்லோர்கள் உன்னைக் கண்டு அகலாமலும், தீயவர்கள் நினது சமீபத்தில் அணுகாமலும், மேகம்போன்ற கரிய கூந்தலையுடைய மாதர்கள் அதிகமாக நெருங்காமலும், வாழ்வினால் மதிமயங்காமலும், கலை மடைந்தையைக் கைவிடாமலும், உள்ளத்திற் செருக்கென்பது சிறிதுங் கலவாமலும், கற்றவர்களான அமைச்சர்களுடைய வார்த்தைகளைத் தட்டாமலும், விஷயமானது சிறிதும் நலியாமலும், மனம் சுவேச்சையாகச் சென்று வரைகடவாமலும் மனுநூல் நெறியிலேயே சென்று, மனமகிழ்ச்சி மிக்க பிதாவினால் அளிக்கப்படும் யௌவராஜ்யபட்டாபிஷேக மங்கலத்தையும்பெற்று, உனது முன்னோர்களான பெரியோர்களெல்லாம் பரம்பரையாகத் தாங்கி வந்த பூபாரத்தையும் நீ தாங்கி, உனது கனைகழலைப் பணியாதவர்களை வணக்கி, கண்டு வாழ்பவர்களை யுயர்த்தி, புனைகதிர் முடியாய்! உந்தையே போல நீயும் புகழுடன் வாழ்ந்திரு.'' என்று சுகநாதன் இயம்பிய உபதேசமொழிகளினாற் சந்திராபீடன் மனவிருளைக் கழுவித் துடைத்ததுபோல மாசற விளங்கி, நித்திரைகொண்டவர்கள் எல்லாவற்றையு மறந்திருந்து விழித்தவுடன் உணர்வுடையோ ராவதுபோல எல்லாவற்றையும் நன்குணர்ந்து, அவனது அருகிலேயே சிறிதுபோது உட்கார்ந்திருந்து, பின்னர்ப் பெரிய தன் மாளிகைபோய்ச் சேர்ந்தான்.

மற்றைநாள் சிற்றஞ்சிறுகாலிற் சந்திராபீடன் மன்னவன்பாற்சென்று அவனதுமலரடிவணங்கி, 'இற்றைநாள்நான் திக்குவிஜயத்தின்மேற் செல்ல எனக்கு அனுமதி தந்து விடையளிக்க வேண்டும்' என்று பிரார்த்திக்க, மைந்தன்மீது வைத்த பெரிய வாஞ்சையினாலே அரசர்பிரான் அவனை நோக்கி, 'உனக்கு யுவராஜ பட்டாபிஷேகஞ் செய்விக்க வேண்டுமென்று எண்ணியிருக்கின்றேன்; செய்த அந்தச் சுபதினமே திக்குவிஜயத்திற்குச் செல்ல நல்ல முகூர்த்ததினமாகக் கொண்டு நீ பிரயாணப்படுவது உத்தமம்' என்று கூறியிருந்தான். சிலகாலஞ் சென்றபின்னர், மன்னர்பிரானான தாராபீடன் மந்திரிமார்களோடு மாலோசித்து, நல்லதோர் மங்கல நாளிலே, அன்பின்மிக்க புரோஹிதர்களான பிராமணோத்தமர்கள் அபிஷேகத்திற்குரிய மங்கலமான வைதிக காரியங்களையெல்லாம் நூன்முறைப்படியே செய்ய, முனிவர்பல ராசிகூற, முடிமன்னவர்களெல்லாம் இனிய பற்பல தோத்திரங்களை மொழிந்து சூழ்தர, பெருமிதந்தோற்ற வீற்றிருந்த உத்தம குமாரனை, பொய்கைகள் ஆறுகள் சமுத்திரங்கள் என்னுமிவற்றினின்றும், பல உத்தம க்ஷேத்திரங்களிலே யுள்ள புஷ்கரிணி முதலியவற்றினின்றும் கொண்டுவந்து, ரத்னங்களையும் ஓடதிகளையும் கனிகளையும் பெய்து பூரித்துள்ள நிறைகுடங்களைத் தனது செங்கையிலே யெடுத்து, மந்திரத்தினாலே புனிதமாய், இரண்டு கண்களினின்றும் பெருகுகின்ற ஆனந்தவாரியோடுங் கலந்த தீர்த்தத்தினாலே மிகுந்த சந்தோஷத்தோடு சிறப்பாக அபிஷேகஞ் செய்தனன். அப்போது ஒரு பூங்கொடியானது முற்படத் தான் அடுத்துப் படர்ந்துள்ள மரத்தை விடாமல் அணைத்துக்கொண்டிருந்த படியே அருகிலுள்ள மற்றொரு தருவினும் படருமாறுபோல, பெருமை பொருந்திய ராஜலக்ஷ்மியானவள் மன்னவனை விடாமலிருந்துகொண்டே, அவன் மைந்தனாகிய ஊனமற்ற கூரியவேலையுடைய மகீபனையும் மிக்க ஓகையோடு தழுவிப் பற்றினாள். பின்னர், மன்னவனது தேவிமார்கள் பலரோடு பேதைமார்கள் பலர் ஒருங்குகுசூழ, அவர்களிடையே அன்னம்போல வருபவளான பெருந்தேவியான விலாஸவதி அகமகிழ்ச்சி கூர்ந்து தனது இரண்டு கரங்களினாலும் ஒளிவிட்டு மின்னும்படி பூசிவிட்ட சந்தனமானது மேனிமுழுதும் வெள்ளிய நிலவொளியைப் பரப்ப, நானாவித வர்ணங்களையுடைய மலர்களினாற் றொடுக்கப்பட்ட மதுவொழுகும் அழகிய மாலைகளோடு விளங்கும் ரத்னகிரீடமானது ஒளிவிட்டு வயங்க, மாசற்றொளிர்கின்ற வெள்ளிய இளநிலவைப் போன்ற மடிபை யரையிலே தரித்து, கோரோசனைக்குள்முழுகிச் சிவந்த அறுகம்புல்லைக் கன்னமலராகவைத்து, தேசுகொண்டு இலங்கும் ஏனைய ரக்ஷைகளையு மணிந்து, செங்கை வாளொடு சிறக்க, வண்டினங்கள் ஆசையுற்று முரல்கின்ற செவ்விய மலர்மாலைகள் பல ஆகமெங்கணுந் திகழ, பரிபுரம் முதலிய அறுபத்து நான்கு ஆபரணங்களும் பெரிய பிரபையைப் பரப்ப, ஒப்பற்ற தாதையாகிய சக்கரவர்த்தி பொற்பிரம்பொன்றைக் கையிலே பிடித்துக் கூட்டத்தையெல்லாம் இருமருங்கும் விலக்கியொதுக்கிக் கொண்டு முன்னே செல்ல, அழகிய பொன்னாற்செய்த சபாமண்டபத்தை

யடைந்து, இளங்குரிசிலான சந்திராபீடன் ரத்னகசிதமான சிம்மாசனத்தில் அழகியமணவாளனை திருமாலைப்போல வீற்றிருந்தான். அப்போது, மன்னர்களெல்லாம் வந்து வந்து இறைஞ்சி நின்றார்கள். அவ்வளவிலே, மந்தரமலைத்த சிந்துவின் ஒலிபோலவும், ஊழிக்காலத்தி னிறுதியில் உருத்தெழுந்த மேகங்களின் ஒலிபோலவுந் திக்குவிஜய பிரயாணத்தை யுணர்த்திய முரசங்கள் மண்ணும் விண்ணும் அதிருமாறு அதிராநின்றன. அந்த நீடொலியெங்கும் பரந்தெழ, அவனிபாலர்க ளனைவரும் 'ஜய ஜய' என்று வாழ்த்திய ஓசையும் மிகுந்தெழ, தாள்வணங்காத முடிமன்னர்களிடத்து முன்னங் குடிகொண்டிருந்த திருமடந்தை மிடிகொண்டிடுமாறு அவர்களை விட்டுப் பெயர்ந்தெழ, முகஞ்சுளிந்த அவர்களுடைய தேவிமார்களது இந்திரநீலம் போன்ற கரிய நயனங்களிலிருந்து சோகநீர் பெருகியெழ, சந்திராபீடன் தான் வீற்றிருந்த சிம்மாசனத்தைவிட்டுத் திக்குவிஜயஞ் செய்ய எழுந்திருந்து, ஒருவருக்கொருவர் நெருக்கத்தினாலே தங்கள் மார்பிலணிந்துகொண்டிருந்த முத்தமாலை யற்று உதிர்கின்ற தரளத்திரள்களைப் பயணம்புறப்படுகின்ற காலத்தில் மங்கலமாக வாரியிறைக்கும் நெற்பொரியைப்போலச் சிதறிக்கொண்டு மன்னவர்களெல்லாம் புடைசூழ்ந்துவர, வெண்ணிறமுடைய மொட்டுக்களைச் சிந்திக்கொண்டு பெயர்ந்து வருகின்ற கற்பகங்களினாற் சூழப்பெற்ற பாரிஜாதம் என்னும்படி நடந்துசென்று, பெருமைபொருந்திய பத்திரலேகை யழகுமிக்க பின்னாசனத்திலேயிருக்க, மங்கலப்பொருள்கள் பலவற்றாலு மலங்கரிக்கப்பெற்றுப் பாகனாற் செலுத்தப்படுகின்ற பிடியின்மீதேறி, மந்தரபர்வதஞ் சுழலுங் காலத்து அப்பாற்கடலினுண்டாகிய வட்டமான சுழியைப்போல ஒளிர்கின்ற வெண்கொற்றக்குடை நிழற்ற, இராஜதானியினது பெரிய எயிலைக்கடந்து வெளியே புறப்பட்டான்.

அப்போது, யுவராஜனைப் பொன்முடி சூடப்பெற்றபின் எங்கும் வியாபித்து நிறைந்த அவனது பிரதாப ஒளிபோலவும், நம்பியான அச்சந்திராபீடனை எதிர்கொண்டழைப்பதற்காக எழுந்தருளிய நாணலோகத்தினுமுள்ள திருமடைந்தையின் திருவடியிலே யணிந்துள்ள செம்பஞ்சுக்குழம்பானது இளகி யெண்டிசையினுஞ் சேர்ந்ததுபோலவும், பார்த்திபர்களின் பொன்முடிகளிற் குயிற்றியுள்ள மாணிக்கமணிகளின் காந்தியால் வெயிலெல்லாம் மிகச் செந்நிறமுற்று விளங்காநின்றது. ஒன்றோடொன்று மிடைந்து மிடைந்து உத்துங்கமான சுவேதச் சத்திரங்கள் நெரிபடவும், ஒருவரோடொருவர் நெருங்கிநின்று தலைதாழ்த்து இறைஞ்சுதலினாலே ஒன்றோடொன்று தாக்குண்ட மௌலிகளினின்றுந் தெறித்து மணிகளெல்லாஞ் சிதறவும் வந்து வந்து வணங்கும் அரசர்களை யெல்லாம் வெற்றிபொருந்திய சேனாபதி அவர்களது நாமத்தை இன்னின்னவென்று தனித்தனி சொல்லிச் சொல்லிக் காட்டிக்கொண்டே முன்னேசெல்ல, இவ்வாறு அவ் விறல்மன்னவர்கள் எம்மருங்குஞ் சென்று சூழ்ந்து சேவித்துவர, அழகிய செந்நிறச் சிந்தூரத்தினாலும், தரளத் தொடையினாலும், பூமாலை

யினுலும், மிகுந்த ஒளியினையுடைய பிறவற்றினுலும் அணிந்துள்ள நீண்ட துதிக்கையினையுடைய கந்தமாதனம் என்னுந் தந்தாவளமானது அந்திமாலையின் செவ்விய ஒளியையும், சுடர்வீசும் நக்ஷத்திர மண்டலங்களையும் ஒருங்கே மேவப்பெற்றொளிர்கின்ற மேருவரையைப் போலப் பின்னேவர, இந்திராயுதமென்னும் வாம்புரவியானது எல்லாவித அணிகளையு மணிந்துகொண்டு, விறல்மிக்க ஜயமடந்தையினுல் அளித்தருளப்பெற்ற வெற்றிக்கொடிபோல முன்னேசெல்ல, சந்திராபீடன் தானேறுந் தாமப் பிடியைத் தாள்விரலினு லூந்தி, மகவானுன இந்திரன் திசையை நோக்கிச் சென்ருன்.

அப்போது, பெருக்கெடுத்தோடுகின்ற மதவெள்ளத்தை யுடைய யானைத்திரள்களினுலே அலைப்புண் டசைகின்ற ஆதபத்திரங்களைக் கோடியினுமதிகமாகவுடைய நெடிய சேனுசமூகமானது, நிறைமதியின் எண்ணவொண்ணுத பிரதிபிம்பங்கள் பெரிய அலைகள்தோறுங் குலவித் தோன்ரு நிற்கப் பொங்கியெழும் யுகாந்தக் கடல்போல வாகைபெறுமாறுபூமண்டல முழுதும் பொங்கிப் பரந்து செல்லாநின்றது. இவ்விதம் அப்பெரிய படைவெள்ளத்தோடு இளவரசனுன சந்திராபீடன் செல்லாநின்ற செய்தியை இல்லத்தேயிருந்த மந்திரி சேயான வைசம்பாயனன் கேட்டு, தானும் அவ்வாறு இனிய பல மங்கல மாலைகளை மலைந்து புறம்போந்து, நிறைமதி போன்ற வெண்குடைநிழற்ற, முடிமன்னர் புடைசூழப் புறப்பட்டு, செங்கதிர்த் தினகரனைச் சேரவருகின்ற வெண்கதிர்த் திங்கள்போலச் சென்று யுவராஜனை யடைந்தான். இவ்வாறு, நானுவிதமான பெரிய படைவெள்ளம் எழுந்து செல்கின்ற துழனியினுலும், சிறிதும் பின்வாங்காது அடர்கின்ற குதிரைத் திரள்கள் அனுமானிக்கும் பேரரவத்தினுலும், மலையருவி போல மதஜலத்தைப் பெருக்குகின்ற மத்தவாரணங்களின் பெரிய பிளிற்று முழக்கத்தினுலும், சேனுசமூகத்தி னுெலியினுலும் உலகெல்லாஞ் செவிடுபட்டு மயங்கின. அப்போது, அப்படை யிடத்துண்டாகிய துகள்வெள்ளமானது, கடல் போன்ற பெரும்படையினுற் பற்பல வர்ணபேதங்களைப் பெற்று, விளையாடுகின்ற மங்கையர்போல எல்லார் விழிகளையும் புதைத்து, மிக்க நீர்வேட்கை யுற்றவர்போலக் களியானைகளின் மதஜலத்தையுங் கரசீகரத்தையும் பருகி, யுத்தத்தில் தோலாமல் வென்றவர்போல அழகிய கொடிகளைப்பிடித்தெழுந்து, வெற்றித் திருமாது எறிந்தெறிந்து விளையாடிய பொற்சுண்ணம்போல எங்கணுஞ் சுற்றிப் பரந்து, கார்காலத் தெழுந்த மேகம்போலக் கவிந்து, திரிபுவனமாகிற திருவினுடைய அவகுண்டனபடம்போல நிறைந்து, திருமாலின் திருவடிபோல உலகெல்லாந் தாவி யளவாநின்றது. உடனே, கவினமாவின் விலாழியாலும், பகைவரைக் கொல்லவல்ல யானையின் மததாரைகளாலும், கரசீகரத்தின் பெருக்காலும், சுவேத நீராலும் இவ்வாறெழுந்த தூளியடங்கி, மறைந்துபோன திசையெல்லாம் வெளியாகிப் புலர்ந்து தோன்றிற்று. அப்போது, அளவுபடாத அந்தப் பெருஞ் சேனையைக்கண்டு மிகவுங் களிகூர்ந்து அதிசயித்துத் தொன்மை மறவாத மந்திரிகுமாரனுன வைசம்பாயனன் ராஜகுமாரனுன சந்திராபீட

னது முகத்தை நோக்கி, 'போதக மனைய பூபதியே! கேட்பாயாக; எமது கோமானுந் தாராபீடனென்னுந் திருநாமத்தை யுடையவனுமான குளிர்ந்த உவாமதியைப்போன்ற வெண்கொற்றக் குடையை யுடையோன் வெற்றி கொள்ளாத உலகமுஞ் சில வுண்டோ? திக்கு விஜயங்காரணமாக நீ செல்லும்போது உன்னை எதிர்கொண்டு சரணம் புகுந்து வணங்காத மன்னவர்களும் போற்றித் துதியாத புரவலர்களும், அழகிய வெண்கவரி பொற்பிரம்பு முதலியவற்றைத் தரித்து முன்னே செல்லாத முடிவேந்தர்களும் உளரோ? இவ்வாறாக, நாம் இப்போது எந்தக் குவலயத்தை நோக்கி எதிர்த்துச் செல்வது?' என்று இத்தகைய பற்பலவற்றையும் பேசிக்கொண்டே யேகுங்காலத்தில், இளங்கோவும் உயர்ந்த கூடாரங்களினாலும், தருப்பைப் புல்லாற் றொடுக்கப்பட்ட தட்டிகளினாலும், அம்பரத்தை யளாவிய சுற்று வேலிகளினாலும் நிறைந்து, நானாவிதமான அற்புதங்களையுடையதாய் ஒளிர்கின்ற ஒரு பாசறையை யடைந்து, அற்றைநாட் கர்மானுஷ்டானங்களைச் செய்துமுடித்துப் போஜனஞ்செய்து, அனேகங் கதைகளினாலே பகற்போதைப் போக்கி, தந்தையான தாராபீடனையும் அமைச்சனான சுகநாதனையும் ஒரு நாளும் விட்டுப்பிரியாதவன் அன்று பிரிந்ததனாலுண்டாகிய சோகத்தினாலே யவ்விருவர் விஷயமான வார்த்தைகளையே திரும்பவுந் திரும்பவுந் தனது இரண்டுபக்கத்திலுமிருக்கின்ற உயிர்போற் சிறந்தவர்களான பத்திரலேகை வைசம்பாயனன் என்னும் இவ்விருவர்களுக்குஞ் சொல்லிக்கொண்டு சிறிதுங் கண்துயில்கொள்ளாமற் கங்குற் போதையுங் கழித்தான்.

இம்முறைப்படியே, நாடோறும் வழிநடையிற்சென்று, அங்கங்கே மார்க்கத்தில் எதிர்ப்பட்டுவந்து சேரும் அரசர்தம் படைத்தொகுதியால் மேன்மேல் வளரும் பெரும்படைகொண்டு பூமியை நெரித்தும், மலைகளை யலைத்தும், கடுகி யோடுகின்ற நதிகளை வற்றுவித்தும், ஓடைகளடங்கலும் உடைப்பித்தும், வனங்களை யெல்லாம் பொடிசெய்தும், அரண்களை யிடிப்பித்தும், வணங்காதவர்களைத் தாழ்வித்தும், வணங்கிப் புகுந்தவர்களை வாழ்வித்தும், அஞ்சி நின்றவர்களை யஞ்சேலென்று அபயமளித் தருள்புரிந்தும் அபயமென்று அடைந்தவர்களை யீடேற்றியும், வந்தெதிர்த்தவர்களைக் கருவறுத்தும், பிழை பொறுத்தும், மாற்றலர்களான மன்னர்களுடைய முடிகளைப் பறித்தும், ராஜகுமாரர்கள் பலர்க்கு முடி சூட்டியும், தேடாநிதிகள் சேகரித்தும், தேசநீதியை நிலைபெட்டும், பாடாத வரசர்கள் பாவலர்களாய்த் தன்னைப் பாட்டுடைத்தலைவனாகக்கொண்டு பாடிவரும் பரணியென்ற பிரபந்தங்கள் பலவற்றைக் கேட்டும், நாடானவைகளெவற்றினுந் தனது நாமஸ்தம்பங்களை நடுவித்தும், அந்தணர் முனிவர் தேவர்கள் முதலியோர் மகிழும்படி ஸ்தாபித்தும், திறைமன்னர்கொணரும் பாகுடங்களைக் கண்டும், சேனசமூகங்களை மிகுதியாக வளர்த்தும், குறைகூறுதற் கிடமில்லாதபடி மேம்பாடு கொற்றம் பெருமை வெற்றி பொறை முதலிய இத்தகைய குணங்களெல்லாம் புவிகள்தோறும் பொலிவித்தும், மேலைக்கரையிலுள்ள

புவன மெல்லாவற்றையும் மிதித்தும் நெரித்தும், சமுத்திரங்களையெல்லாம் புழுதியினாலே புடைப்பித்தும் வருவானாயினான். இப்படி மூவாண்டினிற் பரிதி யுதிக்குங் கீழ்த்திசையையும், தென்திசையையும், குடதிசையையும், குபேர திக்கான வடதிசையையு முறையே பிரதக்ஷிணமாகச் சூழ்ந்து, கடலை யெல்லையாகக் கொண்ட பூவலயத்தையெல்லாம் ஜயித்து, எங்குந் தனது ஆணையே செல்லச் செல்லுமிவன் வடகீழ்த் திசையிற்சென்று, கயிலாய மென்னும் அப் பண்டைக் கிரியினருகாகத் தண்ணந்துழாயணிந்த கண்ண பிரானைத் துணைக்கொண்ட அருச்சுனனுக்கும் வெல்லற்கரிய ஹேமஜடர் என்னும் பெயர்கொண்ட விறன் மிக்க வேடர்கள் வாழ்கின்றதும், கீழ்கட லின்பக்கத்தே வயங்குவதுமான சுவர்ணபுரம் என்னும் ஊரையும், சூழ்கின்ற தனது பெரும்படையினாலே வென்று, அந் நகரத்தினில் தங்கி, உலகனைத் தும் வலம்வந்து பலங்குன்றியிளைத்த தனது சேனையெல்லாம் இளைப்பாறச் செய்து, ஒளிவீசுஞ் செவ்விய சுடர்முடிபோன்ற சந்திராபீடன் தனது பெருவீறு தோற்றக் கிளர்கின்றதோர் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான்.

அங்ஙனமிருக்கும் நாட்களிலே ஒருநாள், தனது இந்திராயுதமென் னும் பரியின்மீது ஏறிக்கொண்டு வேட்டையாடச் சென்று, செல்லற்கரிய கானக மெங்குஞ் சுற்றித் திரிந்து வருங்காலத்தில், நினைவினும் நெடிய ஒரு வரைமுடியினின்றும் இழிந்து, பூமியிலே தங்கிநின்றதொரு கின்னரமிது னத்தைக்கண்டு, முன்னம் அப்படிப்பட்ட தொன்றைக் கண்டறியாதவ னான சந்திராபீடன் அதனைக் கைப்பற்றக் கருதி, அதிவேகமாகத் தனது குதிரையைச் செலுத்திக்கொண்டு, அது தங்கியிருக்கும் இடநோக்கிச் சென்றான்; அக் கின்னரமிதுனமும் மனிதரை முன்னங் கண்டறியாத தாகையினாலே அச்சமுற்று ஓடாநிற்க, இவனுந் தாங்கமுடியாத தனது பரிவிசையினாலே சேனைகளையெல்லாம் பிற்படுத்தித் தன்னந் தனியனாய், 'இங்கிது கைக்கெட்டும், இதோ எட்டிவிட்டது' என்று இப்படி மனோ ரதித்துக்கொண்டே அதனைப் பின்றொடர்ந்து, கணப்போதிற் பதினைந்து யோசனை தூரஞ் செல்லாநிற்க, முடிவில் அதுவும் ஒருபெரிய வரைமுடிமேற் பாய்ந்து மறைந்து விட்டது. அம் மலைப்பிரதேசங் குதிரை செல்லக் கூடிய இடமல்ல வாகையா லதனைத் தொடர்ந்துசெல்லும் நோக்கத்தைவிட்டுச் சிறிது நிதானித்து, 'என்ன காரியஞ் செய்தோம்!' என்று கழிவிரக்கமுற்று வெள்கி, தன்னைத் தானே பரிஹஸித்துக் கொண்டு, எங்குஞ் சருகடர்ந்து மூடியிருந்தபடியால் வந்தவழியே மீள்வதற்குந் தெரியாமல் நெறிதப்பிச் சென்று, சூரியகிரணம் நெருப்பைவாரிச் சொரிந்து தகித்தபடியால் தானுங் குதிரையுங் களைத்து நின்று, 'அதோ கயிலாயத்தின் கொடுமுடி தெரிகின் றது; அதன் தெற்கே சுவர்ணபுரம்; வீணே நெடுந்தூரம் வந்துவிட்டோம்; குதிரையுங் களைத்துவிட்டது; சிறிது சிரமபரிகாரஞ் செய்து கொண்டா லல்லது இனித் திரும்பிப்போதல் ஸாத்யமில்லை' என்று சிந்தித்து, தண்ணீ ரிருக்குமிட முண்டோவென்று எம்மருங்கும் நாடித் திரிந்து வருகையில், யானை பன்றி மகிஷம் முதலிய வனமிருகங்கள் உதறிச் சிந்திய சேறும்,

மதுவோடு கலந்த தாமரைத் தளங்களும், சைவலக் கொத்துக்களும் நெருகச் சிதறிக் கிடக்கின்ற ஒரு சிறிய கொடிவழியைக் கண்டான். அவ் வடையாளங்களைக் கொண்டு அண்ணிதாகத் தெண்ணீருண்டு என்று எண்ணிச் சிறிது மனக் கிலேசந் தீர்ந்து, அதன்வழியே சற்றுத் தூரஞ் சென்றதுங் கயிலையங்கிரியின் குடதிசையிலே, ஊழியிறுதியிற் கூடுகின்ற காளமேகங்களெல்லாங் கவிந்திட்டாற்போலக் கன்னங்கறேலெனப் பசிய பூஞ்சோலையொன்று கண்ணெதிர்ப்படக் கண்டு, வழிநடந்த வருத்தந் தணிந்து, மெல்ல மெல்ல அச்சோலையை நோக்கி நடக்கும்போது, பதுமம் முதலிய புஷ்பங்களினுடைய பரிமளங்களையும், பராகங்கலந்த சீகரங்களையும் முகந்துகொண்டு, தெண்ணீரலையிலே தவழ்ந்தெழுந்த சீதள மாருதமானது மந்தமாகத் தளர்நடையிட்டு, அவனை யெதிர்கொண்டசைந்து, அன்புற்றவர்கள் போலக் கலந்து தழுவி விடாய் தணிக்க, தளையவிழ்ந்து மலர்ந்த கமலங்களினுடைய மதுவை நுகர்ந்து மனங்களித்த ஓதிமங்கள், 'வா வா, இங்கே ஜலமுளது' என்று அழைப்பவர்போலச் சப்திக்க, சந்திராபீடன் அக்குரல் வழியாகவே அச்சோலைபோய்ச் சார்ந்தான். சார்ந்ததும், அப் பூங்காவின் நடுவிலே அரிய வனதேவதைகளுக்காக அயனுற் சிருஷ்டிக்கப் பட்டதொரு திக்களாவிய நிலாமுற்றத்தைப்போலவும், அழகிய திரிபுவனலக்ஷ்மியானவள் அழகு பார்க்க வைத்த நிலைக்கண்ணுடியைப் போலவும், கைலைமலையானது உருகிக் கால்கொண்டோடி அக்காவின் நடுவிலே தேங்கி நின்றதைப் போலவும், சாகரமேழும் பிறந்திட்ட இடத்தைப்போலவும் விளங்கி, தவமுனிவர்களுடைய உளத்தைப்போலவும், சான்றோர்களுடைய விழுமிய குணங்களைப்போலவுந் தட்பமெய்தித் தெளிந்து, வண்டானம் வண்டினம் ஓதிமம் கரண்டம் முதலிய இத்தகைய பறவைகளினுற் சோபிதமுற்று, வனசங் குமுதம் இந்திரநீலம் முதலிய மலர்கள் முறையே பூமாதேவியின் வதனமு மிதழும் விழியும் போலப் பொலிந்துதோன்ற, நாரணனுந் திருமகளும், நான்முகனுங் கலைமகளும், நான்கு மருப்பினையுடைய வாரணவூர்தியான இந்திரனுஞ் சசியும், அஷ்டவசுக்களும், துவாதசாதித்யர்களும், மருத்துக்களும், விருஷபாரூடராகிய ஏகாதச உருத்திரர்களும், சப்தரிஷிகளும், அஷ்ட திக்பாலகர்களும், வேழமுகத்தையுடைய விநாயகரும், தேவசேனுபதியான முருகவேளும், அம்புலியும், அனங்கவேளும், தானவர் வித்யாதரர் கின்னரர் இயக்கர் கிம்புருடர் தவத்தோர் நாகர் வலிமிக்கவர்களான அரக்கர் கருடர் என்கின்ற இவர்கள் முதலிய மற்றவர்களும், மற்று மவரவர்நாட்டு மங்கைமார்களுந் தனித்தனியே வந்துவந்து நீராடிச் சென்றதை யறிவிக்குமாறு, அவரவர்கள் நின்ற நிலைகளும், அவர்கள் தங்கள் புஜங்களிலே யணிந்துள்ள மாலைகள் அசைந்து உதிர்ந்திட்ட மலரிதழ்களும், அவர்களிருந்தவிடத்திற் காணப்படுகின்ற அடிச்சுவடுகளும், பரியாப்தமில்லாவண்ணம் அவர்கள் பூஜைசெய்த இடங்களுமாகிய இவ்வடையாளங்களெல்லாம் எத்தகைய தீராத வினைகளையுந் தீர்க்கவல்ல துறைகடோறுந் துலங்கித்தோன்றுநிற்க, இப்படியே அதிமனோகரமாய், புண்ணிய

வடிவாய், நயனுடையான்கட் பட்ட செல்வம்போற் புவியிலுள்ளாரது பரி தாபமனைத்தையும் பரிகரித்து, அவர்களுடைய மனோபீஷ்டங்களையெல்லா நிறைவேற்றி, நிர்மலமாய்ப் பொலிந்தோங்குகின்ற அச்சோதம் என்னும் பெரிய தடாகத்தைக் கண்ணுற்றான். கண்ணுற்றதும் இளைப்பாறி, 'கான கத்திற் கின்னரமிதுனத்தைக்கண்டு அதனைப் பின்றொடர்ந்து சென்றதும் முடிவில் நமக்கு நன்மையாகவே வந்து பலித்தது' என்று கருதி மனங் களிகூர்ந்து, குளிர்ந்த அப்பொய்கையின் தென்னண்டைக்கரையைக்கிட்டி, அங்கே தனது வாம்பரியைவிட்டிறங்கி, சேணம் முதலியவற்றையெல்லாங் களைந்து, மணற்பாங்கான இடத்திலே அதனைச் சாய்வித்துச் சிரமத்தை யெல்லாம் போக்கி, பிறகு எழுப்பி, ஒரு சிறிது அறுகம்புல்லைப் பறித்து அதன் வாயிலே கொடுத்து அருந்தச்செய்து, அம்மலர்வாவியிலே யிறக்கி, வேண்டியமட்டும் மழைபோற் குளிர்ந்த தண்ணீரைக் குடிப்பித்து, நன்றாக நீச்சடித்துக் குளிப்பாட்டிக் கரையேற்றி, அங்குள்ளதொரு மரத்தோடு சேர்த்துக் கட்டி, ஒளிவீசுகின்ற கூரிய தனது வாளாயுதத்தினாலே யதற்குப் புல்லுமரிந்து போட்டு, நீரிலிறங்கித் தாமரைவளையஞ் சிலவற்றைப்பிடுங்கித் தின்று, நீரருந்தித் தாகசமனஞ் செய்துகொண்டு, பசிய பற்பல தாமரை யிலைகளை மார்புடனணைத்துக்கரையேறி அங்கு அதிரமணீயமாக விளங்குவ தொரு மண்டபத்தின் சிலாதலத்திலே வெள்ளிடை தெரியாம லவற்றைப் படுக்கையாகப் பரப்பி, அதிலே சிறிதுநேரம் உட்கார்ந்திருந்து, பின்னர் இடதுதோளிலே போட்டிருந்த உத்தரீயத்தைத் தலைக்குயரமாக வைத்துச் சாய்ந்து, கொஞ்சம் விச்ரமித்துக்கொண்டிருந்தான்.

அப்போது, இந்திராயுதமென்னும் அந்தக் குரகதமானது கவ்விய புல்லைக் கடியாமல் தலையைத் தூக்கிச் செவியிரண்டையுநெறித்துக்கொண்டு செவ்விய மலர்களானிறைந்த அழகிய அந்தத் தடாகத்தினது வடமேலைத் திசையை நோக்கித் திகைத்து நிற்க, வெவ்விய வேலாயுதத்தையுடைய மன்னனான சந்திராபீடன், 'இப்புதுமை என்னோ?' என்று அத்திசையை நோக்க, வீணாநாதத்தோடுலயித்து இசைநூல் மரபு வழுவாது செவிக்கினிய தொரு சங்கீதம் மனோகரமாய் எழுதலைக்கேட்டு, 'மானிடர்களியங்காத இவ்வனத்தே இக் கீதம் வந்தவாறு என்!' என்று அதிசயித்துச் சயனித் திருந்த அத் தாமரைப் பாயலினின்றெழுந்து, தைவருகின்ற மகரவீணை யோடு தழுவித் தூங்குகின்ற மழலையின் இயன்ற செவிக்கினிய அச் செஞ் சொற்கீதமெழுகின்ற அம் மேலைத்திசையைப் பற்பலகால் ஆதரத்தோடு உற்றுக்கேட்டு, 'யான் இதனை அறிவேன்' என்று இவுளியைக் கடிவாள முதலியவற்றால் அணிந்து, இறைஞ்சி யாரோகணித்து, இசைகேட்டு முன் னோடு மெண்ணில்லாத இளமான்கள் வழிகாட்ட, நசைகாட்டும் அத்தடா கத்தின் மேல்கரையின் வழியாகவே நடந்து வடமேற்கு மூலையிற் செல்ல, அங்கே, விண்காட்டுங் கைலைமலையினடிவாரத்தில் சந்த்ரப்ரபை யென்னும் வெண் சிகரியானது திகந்தத்தையெட்டிய பெருஞ்சோதியோடு விளங்கா நிற்க, அதன் அருகே நிலவுமிழ்கின்றதொரு சிவாலயம் விளங்குவதைக்

கண்டான். கண்டு, மேகம்போற் றிகழ்கின்ற கேதகைவனத்தின் வழியாகச் சென்று, அத்தாழைமலர்கள் சிந்திய பராகங்கள் வடிவ மெல்லா மறைக்க, அதனால், சிவபக்தி மிகுதியினாலே மேனிமுழுதும் உத்தூளனஞ் செய்து கொண்டானன்போன்ற தோற்றத்தையுடைய அவன், அக்கோயிலை யணுகி, அங்கே பளிங்கினாற் செய்யப்பெற்ற ஒரு நாலுகால் மண்டபத்தின் நடுவில், ஜோதிமிக்க ஆணிமுத்துக்களினாலே பிரதிஷ்டை செய்த தொரு சிவலிங்க வடிவமாக, மாசற்ற இதழ்களினால் நிலவுமிழ்கின்ற பிறைமதிபோலவும், அழகிய முத்துக்களினாற் செய்யப்பெற்றதொரு சிறந்த மௌலிபோலவும் விளங்கும்வண்ணம் ஆகாசகங்கையிலுண்டாகிய காந்திமிக்க வெண்டாமரை மலர்களை முடிக்கணிந்து தேவர்களெல்லாந் திரண்டு போற்றுகின்ற பர்வத ராஜதனையையான உமைபாகன் எழுந்தருளியிருக்குந் திருக்கோலத்தைத் தரிசித்தான். அவ்விறைவனது தக்ஷிண பாகத்தில், அழகிய வெண்பட்டை யுடுத்து, பாங்கிமார்கள் பலரைக் குறைவறக் கூடிநின்றாற்போல மாணிக்க மிழைத்த பொற்றூண்களிலெல்லாம் நெருங்கிப் பற்பல பிரதிபிம்பங்கள் தோற்றுநிற்க, பொறைகொண்டாற்றிய தவவெள்ளம் அழகியதா யவளைப் புடைசூழ்ந்து விளங்க, பாற்கடலில் முழுகி யெழுந்தவளைப் போலவும், வரப்போகிற கிருதயுக லோகத்தைச் சிருஷ்டிப்பதற்காகப் பிரமதேவனால் முன்னாடிக் காப்பாற்றி வைக்கப்பட்டதொரு விதையைப்போவலும், சிவபெருமானது பாதபங்கயத்தைச் சேவிக்க வந்த கலைமகளைப் போலவும், பெரிய தவவேடத்தைக் கொண்டிருந்த ரதிதேவியைப்போல்வும், செவ்விய சடையும், அச்சடையின்மேலே சேர்த்திய திருவடிநிலையும், பால்வடியும் எழில்வடிவமும், பிறைநுதலும், திருநீறும், கறைமிடற்றண்ணலை நாடிய தாமரைபோன்ற நெடுங்கண்களும், நெஞ்சைவிட்டகலாத அருள் நெறியும், நெறிகடவாத சாந்தமும், ஒரு செவியிடத்தே நின்றுவிளங்குகின்ற கதிர் வீசும் நித்திலத்தாலாகிய ஜபவடமும், இரண்டு தனதடங்களுக்கும் நடுவே விளங்குகின்ற, தேவர்களுடைய கற்பகவுரியாலாகிய அழகுபெற்ற உத்தரீயத்தின் முடிச்சோடு உவாமதியின் வெள்ளிய கிரணங்கள் மொய்த்தாற் போன்ற முந்நூலுங் கிளர்ந்து கிளர்ந்து பிரகாசிக்க, இசையின்பத்தினாலே மனமொடுங்கித் துஷ்டத்தன்மையை யுடைய மிருகஜாதிகளெல்லாந் திசைகடோறுஞ் சூழவந்து சித்திரங்களைப்போல அசையாமல் நிற்க, வசையகலாத அகங்காரம் மாற்சரியம் முதலானவைகளைக் கைவிட்டு, ஈரமுற்ற தண்ணளியினாலே யாவரையும் உஜ்ஜீவிக்கச் செய்யும் பாசுபத மார்க்கத்தைத் தழுவி, தெய்வ வடிவாகையினாலே சென்ற வயது இத்தனையென் றறிவரிதாய், அவ்வுருவம் பதினெட்டு வயதிருக்கலாம் என்று மதிக்கக்கூடியதாய் விளங்க, அழகுமிக்க கற்பகவிருக்ஷத்தினது புதிய செந்தளிர்போன்ற அங்கையிலே நிஜமான தந்தத்தினாலே செய்யப்பட்டதொரு வீணையை வாங்கி, அவ்வீணையின் நரம்பிலிருந்தும், கண்டத்திலிருந்தும் நயமாக எழுந்து திசை எல்லாம் பரவிச் சென்று உருக்குகின்ற உயர்ந்த பாட்டிசையினாலே எல்லா வுயிர்களுக்கும் ரக்ஷகனை பார்வதீ ரமணனுடைய பாதாரவிந்தங்களைத் தோத்

திரஞ் செய்து சேவித்துக்கொண்டிருந்த திடமான தவவேடத்தோடுகூடிய ஒரு சுந்தரியையுங் கண்டான்.

கண்டளவில், பரியைவிட்டிறங்கி, அதனை ஒரு மரக்கிளையிற் கட்டி, தேவேசனது கோயிலுக்குட் பிரவேசித்து, அப்பிரானுடைய உபய பாத பங்கயங்களையுந் தொழுது, அவ் வொண்டொடி மடவரலைப் பற்பலமுறை யுற்றுற்றுப் பார்த்து, அவளது மிகுந்த சாந்தத்தையும், ஒப்புயர்வற்ற அழகிய வடிவத்தையுங்கண்டு ஆச்சரிய முற்று, 'நிலவலயத் துள்ளவர்களுக்கு ஒன்றை நினைக்க அதுவொழிந்து மற்றொன்று பலிப்பதும் ஸஹஜமாயிருக்கிறது; இன்று, சிறிதும் பயனில்லாத கலிவடிவங் கொண்டுவந்த கின்னரமிதுனத்தைக் கண்டு, அதன்பின்னே போந்திட்ட நாம் பொலிவு பெற்று விளங்கிய இப் புண்ணிய பூமியைக் கண்டோம்; அதன் பின்பு திவ்வியமாகிய இந்த அம்புஜவாவியைக் கண்டோம்; அதன் பின்பு திவ்விய மாகிய அமுதவிசையினது தொனியைக் கேட்டோம்; அதன் பின்பு திவ்வியமான அரிவையிவளைக் கண்டோம்; இதன்பின்பு நாம் பெறவேண்டுவது முண்டோ?' என்று மிக்க ஆனந்தாதிசயமுற்று, 'இவ்வடிவமும் இக் கீதமும் நிச்சயம் இந்நிலவுலகத் துள்ளதன்று; இவள் ஒரு தெய்வ கன்னிகையேயாமென்று நன்றாகத் துலங்குகின்றது; இப்போது, இவள் என்னைக் கண்டு கைலாசத்தின் சிகரத்திலாவது, ககனதலத்திலாவது கண்ணுக்குத் தெரியாது ஏகாமலிருப்பாளாயின் இவள்பெயரும், இவள் தவஞ்செய்கின்றதற்குள்ள காரணமும் பிறவும் நாம் கேட்டுத் தெரிந்து கொள்வோம்' என்று சிந்தித்து, அவள் பாடிநிறுத்தும் வரையிலும் அங்கேயே யொரு தூணிற் சாய்ந்துகொண்டிருந்தான். அவளும் பாடிமுடித்து, அக் கங்காதரனை வலம்வந்து பணிந்து, தவமான அமுதமூறிச் சாந்தமுற்ற பார்வையினாலே அவனைத் தேறுதலுறுமாறு கடாக்ஷித்து, இனிதாக முகமலர்ச்சி கொண்டு, 'சோம்பி இளைத்திருப்பதேன்? எழுந்திருமின்' என, அவனுந் தழைத்தெழுந்த பேருவகை யுடையோனாய் முகமலர்ச்சிகொண்டு அவளது பாதங்களை வணங்கி, 'நெடுங்கருணைகொண்டு அடியேனை ரக்ஷித்தருளிய பகவதி பணித்தருளியது எதுவாயினுஞ் சிரமேற் கொண்டு செய்வேன்' என்று, அதிக வணக்கவொடுக்கத்துடன் அவள் பின்னே ஒரு சிஷ்யனைப் போலச் சென்றான். அவ்வாறு நூறடிதூரஞ் சென்றதுங் கடும்பகலினும் பேரிருளை செறிந்த பசிய மலர்ச் சோலைகள் எம்மருங்கும் நெருங்கி யடர, இரண்டு மலையருவிகள் இருபாலும் பெரிய வெண்சாமரைபோல நிர்மலமாய்த் தெளிந்து சடசடவென்ற பெரிய ஓசையோடு வந்து விழுந்து கொண்டிருக்க, அதனடுவே ஒளிர்கின்ற ஒருசிறிய குன்றில், மாணிக்கத்தாலாகிய கமண்டலமும், வற்கலையாலாகிய சயனமும், மரவுரியும், மின்போல் ஒளிவிடுகின்ற ஒரு சங்ககபாலமும், திருநீறு வைத்துள்ள ஒரு சுரைக் குடுக்கையும், யோகபட்டிகையும், மற்றெல்லாமும் விண்ணூற்று விளங்கிக்கொண்டிருக்கின்ற அழகிய ஒரு பிலத்துவாரத்தை யடைந்து, அதனருகாகவுள்ள ஒரு பாறையின்மேற் சந்திராபீடனை யிருக்கச்செய்து, உள்ளேபோய்,

தலைமாட்டிலே இன்னிசைக் கருவியாகிய அவ் வீணையை வைத்துவிட்டு, ஓரிலையிலே சுவை முதிர்ந்த அவ்வருவிநீரைச் சிறிது முகந்து கொணர்ந்து, அச்சந்திராபீடனது முகத்தைப் பார்த்து, 'மஹானுபாவ! பூசனைக் குரிய இந்த அர்க்கியத்தை அங்கீகரிக்கவேண்டும்' என்று சொல்ல, அவன் அத் தவமடந்தையை நோக்கி, 'அடிகளை அடியேன் பிரணாமஞ் செய்யப் பெற்ற பேறொன்றே எழுமைக்கும் ஈடேறப் போதுமானதன்றோ? அடியேனுக்கு இவ்வாறு மேலும் மேலும் பெரிய ஆதரத்தோடு உபசாரங்கள் செய்யத் தகுமோ? அடியேன் இவற்றை யங்கீகரிப்பதற்கும் அருகனோ?' என்று சொல்லி மறுத்து, அடிமேல் முடிவைத்துப் பன்முறை வணங்கவுங் கேளா தவளாய், அதிதிகளைச் சத்கரிக்க வேண்டுமென்ற கிரமமிருப்பதை முன்னிட்டு, அவனை நிர்ப்பந்தித்து அவனுக்கு அக் கருந்தடங்கட் காரிகை சகலவித உபசாரங்களையுஞ் செய்து மற்றொரு பாறையிலே இருந்தாள். அங்ஙனஞ் சிறிது நேரம் இருந்தபின், அவனது தேசமும், அவனது பெயரும், வந்த வரலாறும் என்னென்று அவள் கேட்க, சந்திராபீடனும் வரிசையாக அவற்றிற்கெல்லாஞ் சவிஸ்தாரமாக விடையளித்தான். அந்தப் பைந்தொடிப்பாவை யவற்றையெல்லாங் கேட்டபின் எழுந்திருந்து, பிக்ஷாபாத்திரத்தைக் கையிலே யேந்திக்கொண்டு மிகவுயர்ந்த மரங்கடோறுஞ் சென்று, 'ஐயம் இடுமின்' என்று சொல்லிக்கொண்டே நடந்தாள். அப்போது, அப் பலவிருக்ஷங்களெல்லாந் தலைவணங்கி நன்றாக முற்றிப் பழுத்த தீங்கனிகள் பலவற்றை யோயாமற் சொரிந்து அக் கபாலத்தை நிறைத்தன. அவள் அவற்றையெல்லாங் கூரிய வேலாயுதத்தையுடைய அச் சந்திராபீடன் முன்னே கொண்டுவந்து சமர்ப்பித்தாள். சந்திராபீடன் பெரிதும் மன மகிழ்ந்து, 'அருந்தவமே பெரிது' என்று பாராட்டி யுரைத்து, அத்யாச்சரியமடைந்தவனாய் எழுந்திருந்து, கலனை களைந்து, இகல்மிக்க அப் பரிமாவை யோரிடத்தே தளைந்து, நல்ல பசும்புற் றரையிலே மேய விட்டு, தாழ்வரையிலே வந்து விழுகின்ற அவ்வருவிப் புனலிலே ஸ்நானஞ்செய்து, பக்தி சிரத்தையோடு அனுஷ்டானங்களை யெல்லாஞ் செய்து முடித்துத், தேவாமிர்தம் போன்ற அந்தக் கனிகளைப் புஜித்து, அருவி நீரை யருந்திச் சிறிது நேரம் இளைப்பாறி, முன்னிருந்த அப்பாறையிலே போயிருந்தான். தவம்புரியும் அத் தையலுங் கனிமுதலாகிய ஆகாரங்களை யுட்கொண்டு சிரமந்தணிந்து, தனியாக ஒரு பாறையின் மீது நிச்சிந்தையாக உட்கார்ந்திருந்தாள். அப்போது, வண்டிமிருந் தண்டெரியற் றிண்டோளனான சந்திராபீடன் அவளருகிற் சென்று நின்று, அவளது அனுமதியின்மேல் உட்கார்ந்து, 'உற்றநோய் நோன்றல் முதலாகிய தவத்திற் கங்கமான காயகிலேசங்களையெல்லாம் மிகவும் அதிகமாக மேற்கொண்டு மெய்த்துணையாகிய தவச்செல்வத்தைப் பெற்ற பெரியோய்! என்றுமே நீங்காத நினது நெடிய கருணைப் பிரஸாத பிராப்தியினாலே புரோத்ஸாகிதமான குதூகலத்தை யடைந்து தடுமாற்றம் அடைந்திருக்கின்ற எனது மனம், மனிதர்களுக்கு இயற்கையாகவுள்ள அற்பத்தன்மையை அதிகமாக மேற்கொண்டு,

நினது பரிசுத்தமான திருவாக்கினாலே அமிர்ததுல்லியமான சில வார்த்தைகளைக்கேட்டு இன்புற்று அன்புசெய்ய இச்சிக்கின்றது; சிறிதுபொழுதுண்டான சேவையானது நெடுநாட் பழகிய நட்பினைத் தருகின்றதுபற்றி, உன்னுடைய பெருமையை மதியாமல் அறிவில்லாத நான் இங்ஙனம் வினவுவது உனக்குச் சம்மதமாகுமாயின் சிலவற்றைத் தெரிவித்துக் கொள்வேன்' என்று விநயத்தோடு மொழிய, அவளும், 'மொழிமின்' என்று அநுமதியளிக்கப் பெற்று, அவளை நோக்கி 'பெருமை பொருந்திய நின்னுடைய திருவவதாரத்தினாலே தெய்வகணத்தில் யாருடைய திருவம்சமானது ஸபலமாகி உயர்ந்தது? பேரழகுதருகின்ற இந்தப் பிராயத்தில் மனமொடுங்கி வனசஞ்சாரலிலிருந்து தவஞ்செய்வதற்கு யாது காரணம்?' என்றுகேட்டான். அங்ஙனங் கேட்ட வளவில், அவள் அப்படியே திகைப்புற்றிருந்து, கடந்துபோன செய்தி யொன்றை நினைந்து, மனத்துயரம் உள்ளடங்காமல் வெளியே பொங்கச் செயலற்று, ஒவ்வொன்றாகப் பெரிய முத்தமாலையிலிருந்து அற்று விழுகின்ற தாளங்களைப்போல மழைபோன்ற நெடிய கண்களினின்று நீர்த் துளிகள் சோரத் துக்கத்தை யடக்கிக்கொண்டு பெரிதும் விம்மலுற்று,வாய்விடாமல் அழுதுகொண்டிருந்தாள். அப்படியே அவள் அழுதுகொண்டிருக்கு மளவில், அண்ணலான சந்திராபீடன், 'இப்படியே தெளிந்தோர்களுக்கும் இன்பதுன்பங்கள் எய்துமா றிருந்தது' என்று சிந்தித்து, 'பொய்யென்று எண்ணும்படியாய் நெடுநாளாய்க்கடந்து போனதொரு விஷயத்தை நான் நினைப்பித்தேன், தப்பிதுவே போதும்' என்று தன்னையே தான் நொந்துகொண்டு, அருவி நீர் கொணர்ந்து சைத்யோபசாரஞ்செய்து மனந்தேற்றியபின், ஆயிழையும் அந் நீரால் முகத்தைக் கழுவி, அணிந்த மரவுரிக் கலையினாற் செவ்விய நயனங்களைத் துடைத்து, தீயெழுமாறு நெட்டுயிர்ப் பெறிந்து, தூயவனான சந்திராபீடனது முகத்தை நோக்கி, 'சொல்லுகிறேன் கேள்' என்று சொல்வாளாயினாள்:—

"மஹாபாபியாய், அருள் என்பது சிறிதுமே யில்லாதவளாய் முற்றிய எனது பிறப்பினாலே ஆவது என்ன? ஏதேனும் பயனுண்டோ? இப்பெரிய தவத்தினாலுந்தான் என்ன பிரயோஜனம்? எனது சரித்திரமோ, அந்தோ! குறித்தாலுங் கூறலரிது; கூறினுங் கேட்டலரிது; கேட்பினும் மனம்பொறுத்தலரிது; மனம் ஒருகாற் பொறுத்தாலும் ஆத்துமா அதனைச் சிறிதும் பொறுத்தலரிது; அங்ஙனம் பொறுத்தற் கரியதாயினுங் கேட்பாயாக. தேவலோகத்தில் அரம்பையர்கள் என்று உலகத்தவர்கள் புகழ்ந்துரைக்கின்ற சிலமாதர்கள் உண்டு; தலைநாளில் அவ்வரம்பையர்குலமானது வேதத்திலும், பிரமனது உள்ளத்திலும், பண்டு கடைந்த அமுதத்திலும், நிலம் நீர் தீ காற்று என்னும் இப்பூதங்களிடத்திலும், சூரியனது தழற்கிரணத்திலும், சந்திரனது ஹிமகிரணத்திலும், மன்மதனிடத்திலும், தருமனிடத்திலும், மின்னலிடத்திலும், தக்ஷபிரமனது அநேகம் புத்திரிகளிலே முனி, அரிட்டை யென்கின்ற இவர்களிடத்திலு மாக அரிய இந்தப் பதினான்கு இடத்திலும் உற்பத்தியாயிற்று; அதனோடு அந்த அரிவையர்களி

டத்தில் இரண்டு காந்தர்வ மரபும் உதித்திட்டன; அவைதம்மில், முற்கூறிய முனியிடத்திற் சிரேஷ்டனான சித்திரசேனன் முதலாகிய ஈரெண்மர் பிறந்து வளர்ந்தார்கள்; அவர்களுக் கெல்லாம் இளையோனாய், அறிவால் முதியோனாய்ச் சற்குண சம்பன்னனான சித்ரரதன் என்போன் உத்தம சன்மார்க்கசீலனாய், பெரும்பிரதிஷ்டையும் பெற்று, அதிபிரபலனாய்த் தேவர்களெல்லாங் கைகூப்பித் தொழுகின்ற மகவானான இந்திரனுக்குத் தோழனுமாகி இந்த வம்சத்திற்குத் தலைவனானான். இந்தச் சித்ரரத வேந்தன் இப்பாரத வருஷத்தின் எல்லை முடிந்த வடதிசையில் குற்றமற்றுயர்ந்த கிம்புருஷவருஷத்துக்கு அலங்காரமாக விளங்கிக் கொண்டிருக்கின்றதும், பற்பல புதுமைகளையுடையதுமாகிய ஹேமகூடம் என்னும் பர்வதத்தை ராஜதானியாகக் கொண்டு, அதிலேயே யரசுபுரிந்துகொண்டிருந்தான். அந்த அணிவரையும் இதோ அடிநிலத்திலேதான் இருக்கின்றது. இவன்றான் சைத்ரரதம் என்னும் இந்தப் பூங்காவனத்தையும் உண்டாக்கினான்; அச்சோதம் என்னும் இப் பூந்தடத்தைச் செய்தவனுமிவனே. இந்தச் சிவாலயமும் இவனாலேயே நிர்மாணஞ் செய்யப்பட்டது; அழகுமிக்க எங்களுடைய கந்தர்வராஜ்யத்திற்கெல்லாம் இவனிட்டதுதான் சட்டம். பொற்கழல் புனைந்த இச் சித்ரரதன் முற்கூறிய அந்த அரிட்டையென்பவள் பயந்த எழுவோர்களில் தும்புரு முதலாகிய முனிவற் றுயர்ந்தோ ரறுவர்க்கும் மூத்தோனாகிய ஹம்ஸன் என்பவனை மகுடஞ்சூட்டிவைத்து, அரசனுக்கித் தம்பிக்குரிய பாகத்தையும் பகுந்து கொடுத்தான். அவனும் அந்த ஹேமகூட நகரத்திலேயேதான் வாழ்ந்துகொண்டிருக்கின்றனன். அந்த ஹம்ஸன் முற்கூறிய அந்த அமுதமதிக்கதிரில் உற்பன்னமான மரபிலே அவ்வமுதத்தாலேயே சிருஷ்டிக்கப் பெற்றவள்போல அதிக தாவள்யமான சௌந்தர்யத்துடனே வந்து பிறந்த கௌரியென்னும் மடந்தையை முதல் தேவியாக ஸ்வீகரித்தான். பின்னர், அஞ்சனும் அழகிய திருமாமகளையொத்த அக் கௌரியும் மிதமிஞ்சிய பெருங்காதலினராய் எப்போதும் இணைபிரியாமல், மன்மதனும் ரதியும்போன்று நெஞ்சமும் உயிரும் ஒரு தன்மையராகிக் கபடமென்பதனையே யறியாமல் நெடுங்காலம் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். அங்ஙனம் வாழ்கின்ற அந்நாளிலே, அன்புற் றமர்ந்த அபூர்வ தம்பதிகளான அப் பெரியோர்களுக்கு நான் அருமந்த மகவாய் அவதரித்தேன். இவ்வாறு படாத துயரெல்லாம் படுவதற்கென்றே பிறந்த மகாபாபியான வென்னைச் சத்தியவிரதனான எனது பிதா கண்டு, மிகவுங் களிகூர்ந்து, தூய்மையான எனது தேககாந்தியை முன்னிட்டு எனக்கு மகாசுவேதை என்று பேரிட்டான். புருஷ ஸந்ததியைப் பெற்றவர்போல என்னை யவன் மிகவும் மகிழ்ந்து பாராட்டி, வளர்த்து வாராநிற்க, நான் பண்பாடு மின்னிசைக் கருவியாகிய யாழைப்போலக் கந்தருவர்களுடைய மடிகளிலும், தூண்போலத் திரண்டுயர்ந்த அவர்களுடைய தோள்களிலும், மாலையொடு மணக்கும் புஜங்களிலுமே மாறிமாறி விளையாடிச் சிறிது நன்றென்று சொல்லத்தக்க எனது பேதைப்பருவத்தைக் கடந்தேன்.

அதன் பின்னுக, தளிரிடையே மலர்தோன்றி, மலரிடையே தேன் தோன்றி, இனிதாகித் தயங்குகின்ற அத் தேனிலே அன்புதரும் அளிதோன்றி, அதனிடையே மதந்தோன்றி, அதிலே யெல்லாம் வெளியிடுகின்ற சிறப்புமிக்க மதன்தோன்றி, இப்படியே படிப்படியாக மெல்லமெல்ல வருகின்ற வசந்த காலமானது தெளிவதைப்போல, என்னிடத்திலே யெழில் விளங்குகின்ற இளமைப் பருவத்தினது அலங்காரமனைத்துங் கொஞ்சங் கொஞ்சமாக வந்து கூடித் திகழ்ந்து கொஞ்சியது.

மயில்கள் ஆடவும், குயில்கள் கூவவும், வண்டினங்கள் இசைபாடவும், மதனபூஜை செய்கின்ற மாதர்களுடைய துழனி மிகவும் அதிகமாகிப் பெருகியெழவும், பரிமளத்தோடு கூடிய மந்தமாருதமானது வந்து வந்து வீசவும், நறுமணமிக்க நானுவித மலர்களிலுமுள்ள மகரந்தங்களெல்லாப் எங்கணும் பரந்து மனற்குவையின் பண்புகாட்டவும், பதுமங்களெல்லாம் வெயில் விரிந்தாற்போல விரியவும், இருள் விரிந்தாற்போல நறுமணங்கமழ்கின்ற இந்திர நீலங்களெல்லாம் மலரவும், பைந்தொடி மாதர்கள் கொப்புளிக்கின்ற வாயூறலான அமுத நீரினுலே மகிழமரங்களெல்லாம் புளகஞ்செறிந்தனபோல மலர்ந்து மகிழவும், மாணிக்கப் பரல்பொதிந்துள்ள அப்பாவைமார்களது நூபுரத்தொனியினுலும், பாதபங்கயத்தா லுதைப்பதினுலும் அசோக தருக்களெல்லாம் அசோகமாகித் தருக்கவும், ஆலிங்கனஞ்செய்யப்பெற்ற அம் மங்கைமார்களது கோங்கரும்பன்ன கொங்கைகளினுலே குராவிருக்ஷங்களெல்லாங் குழைந்திளகவும், மற்றைப் பாதபங்களும் இவ்வாறே குளிர்ந்து குலவவும், யார்க்குங் கரைதெரியாத ஆனந்தகரமாய் வாராநின்ற வசந்த காலத்திலே யொருநாள், இந்த மலர்ப் பொய்கையில் நீராடுதற் பொருட்டு எனது அன்னை வர, யானுங் கூடவே வந்து, கரையருகிலொளிர்கின்ற பாறைகளிலே பார்வதிதேவி தனது பைந்தொடிப் பங்கயச் செங்கையினுற் சுந்தரமாக எழுதித் தொழுத சந்திரசேகரனுடைய திருவடிகளைத் தொழுது நின்றும், கந்தங் சமழுஞ் சந்தனச் சோலைகளையுந் தழைத் தடர்ந்த லதாமண்டபங்களையும் பார்த்துக் களித்தும், ஆர்த்துவருகின்ற தேவதைகள் விளையாடுகின்ற கொடியூசல்களின் அலங்காரத்தையும், பூமி தெரியாமற் போர்த்துள்ள மலர்த்தூளிகளிலே தாள்கள் அழுந்தி ஓதிமங்கள் அப்பாற் பெயர்ந்து செல்லமாட்டாத தருச் சூழல்களையும், மற்றும் அங்குள்ள பொற்புமிக்க அற்புதங்களையும் பற்பலகாற் பார்த்து மகிழ்ந்தும், கூடவந்த பிராணசகிகளும் நானுமாக விளையாடிச் சென்றோம்.

அங்ஙனஞ் சென்ற காலத்தில், அற்புதமாய், மனேகரமாய், திவ்வியமாய், உலகத்தவர்கள் கண்டறியாத சிறப்பினை யுடையதாய், ஒளிமிக்க அளியினங்களெல்லாம் ஒன்றினையொன்று முந்தி யெதிர்கொண்டுசெல்ல, பற்பலவாகிய அவ்வனத்திலுள்ள புஷ்பங்களின் பரிமளங்களை யெல்லாங் கீழ்ப்படுத்தி, அதி சிரேஷ்டமானதாய், பர்வதராஜனை ஹிமவானினின்று வருகின்ற காற்றோடு கலந்து வந்து ஒரு நறுமணம் வீசிற்று. அந்த நறிய பரிமளத்தினுலே முகுளிதமான லோசனத்தோடு கூடினவளாய் நின்று,

'இதனை யறிவோம்' என்று அத் திவ்யகந்தம் வந்த திசையெதிராகச் சிறிது தூரஞ் சென்றதும், முடிவில்லாத ஹரனது நெற்றித் திருக்கண்ணினாலே வெந்துவீழ்ந்த மன்மதன் விஷயமாயுண்டான அளவில்லாத சோகத்தினால் மெய்த்தவத்தை மிகுதியாக மேற்கொண்டுவந்த வசந்த ருதுவைப்போலவும், ஈசனுடைய அருளைப் பெறுவதற்காகத் தவம் புரிகின்ற மாரவேளைப் போலவும் விளங்கி, தன்னுடைய மேனியினொளியால் எந்நிலமும் ஒப்பற்ற கனகமய மாக்கி, தழைந்து வீழ்ந்த செந்நிற வேணியும், விசாலமான அழகிய நெற்றியும், அந்நுதன்மே லிடப்பட்ட வெள்ளிய புண்டரமும், சிலைபோல் வளைந்து மைபோற் கறுத்த நீண்ட புருவங்களும், புண்டரீகம் போன்ற விசாலமான நெடிய கண்களும், உன்னதமாக நீண்டு வளர்ந்து ஒளிர்கின்ற நாசியும், பவளம்போற் சிவந்த வாயும், மலைபோலுயர்ந்திட்ட தோள்களும், இரண்டு தோள்களிலும் வீழ்ந்து அலைகின்ற மகரக்குழையும், வேதோச்சாரணத்தினாலே இலங்கித் துலங்குகின்ற நித்திலத்தை யொத்த வெள்ளிய தந்த பந்திகளும், அழகு பொழிகின்ற திருமுகமும், கிருஷ்ணாஜினந்தரித்த மணிமார்பும், தாமரைத்தந்துபோன்ற முப்புரிநூலும், ஒரு கையிற் பலாசத் தண்டும், பவித்திரமும், ஸ்படிகமணி மாலையும், கமண்டலமும், ஏனையவனைத்துமுடையனாய், கட்டின முஞ்சியும், உடுத்த வற்கலையும், அறிவின் செறிவினாலே கரிய மோகாந்தகாரமானது எள்ளளவும் உள்ளே தங்காமல் வெளியே புறப்பட்டுச் செல்வனபோல மெய்யிலெழுகின்ற ரோமராசியும் பொருந்தி, உதாத்தம் அனுதாத்தம் முதலிய ஸ்வர வழுவின்றித் திருத்தமுற உச்சரிக்கின்ற வேதவித்தாய், தருமத்தின் வேஷம் போலவும், குற்றமற்றுயர்ந்த பிரமசரியவிரதத்தினது அலங்காரத்தைப் போலவும் விளங்கி, சமவயதுடைய மற்றோர் முனிகுமாரன் திருப்பள்ளித் தாமத்தை யேந்திப் பின்னேவர, முன்னதாக நீராடல் காரணமாய் அழகிய இப்பொய்கைக்கு அன்போடு வந்துகொண்டிருந்த ஒரு முனிகுமாரனைக் கண்டேன்; கோடிக்கணக்கான மதுகரங்கள் இன்புற்று முரல்கின்றதொரு பூங்கொத்தையும் அவன் செவியின்மீது சவிகொண்டிலங்கக் கண்டேன்; கண்டதும், 'இந்த மலர்ப் பரிமளமே அந்த நறுங்கந்தம்' என்று நிச்சயித்து, 'திரிபுவனங்களிலுமுள்ள அற்புதரூபராசிகளை எல்லாம் ஒருங்கு திரட்டிக் குஸுமாயுதனை முன்னஞ் சிருஷ்டித்து, பின்னரவனிலும் அதிரூபவானாய்ச் சிருஷ்டித்த மற்றோர் மன்மதனோ இவன்; குறும்பு செய்கின்ற தேவர்களும் முனிவர்களுஞ் சங்கியாதிருக்கும் வண்ணம், இவனை முனிகுமாரன் வடிவாகப் பிரமன் சிருஷ்டித்து வரவிடுத்தான் போலும்' எனவும், 'இவன் முகமண்டலத்தை நன்றாகச் சிருஷ்டிக்க வேண்டுமென்று கருதிய கமலாசனன் அக் கைத்தொழில் செவ்வையாகத் திருந்துவதற்காகவே சந்திர மண்டலத்தை முன்னங் கைபழகப் படைத்திட்டான் போலும்' எனவும், 'அழகுவிஞ்சுஞ் சந்திரனுடைய அமிர்தகலைகளை யெல்லாம் இராகு கவர்கின்றான் என்பது கேவலம் கிம்வதந்தியே யன்றி யுண்மையன்று; அவ்வமிர்த கலைகளை யெல்லாம் இத் தவமுனியே கவர்கின்றான்; இதிற் சிறிதும் ஐய

மில்லை; இன்றேல், பசுமர மெல்லாம் பட்டெரிகின்ற நீர்வற்றிய கொடிய கானகத்திலே நின்று, விரதானுஷ்டானங்களை யெல்லாந் தழுவிச் சரீரம் வாட வாடத் தவம்புரிகின்றவர்களுக்கு இந்த அழகு எங்கேனும் உண்டாகுமோ? இதைத் தவிர்த்து, பழுதுபடாத இத் திவ்ய சௌந்தர்யத்திற்கு வேறு ஒரு காரணமும் இல்லை' எனவும் அவனது ரூபலாவண்யங்களைப் பற்பல விதமாகப் பாராட்டி வியந்து பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது, காதலுக்குத் தகுதியான கிரமத்தைவிட்டுச் சிறிதும் ஆலோசனையின்றி அழகினையே விஷயமாகக் கொள்கின்ற கொடியனான மகரக்கொடியோன், புதிதாக அப்போது மலர்ந்த செவ்விமாறுத நன்னிறமுடைய மலரிடத்தேயுண்டாகிய தேனைனது அழகியதோர் நாகிளம் பெடைவண்டைப் பரவசமாக்குதல்போல என்னை வசமழியச் செய்தான்; அந்த நிலையிற் பேதையேனாகிய நான் குலமகளிர்க்கு அது பெரியதோர் இழுக்கினை விளைக்கும் என்று அறிந்திருந்தும் மனத்தை யடக்கச் சக்தியின்றி, ஒரு சிறிதும் இமைபாமல், சிறிதுகுவிந்து, ஒரு புறத்தே சாய்ந்து, அழகுமிக்க செவ்வரி பரந்து, புடைபெயர்ந்து விளங்கும் கண்களால் அவனது அழகாகிய அமுதத்தை வாரி வாரிப் பருகுவதுபோலவும், 'காமநோயைப் பரிகரித்து என்னை யங்கீகரித்துக்கொள்' என்றுரைக்கும் பரிசுபோலவும், 'என் நெஞ்சை யுன்றனக்கே யர்ப்பணமாக அளித்துவிட்டேன்; எனக்கு அருள் செய்வாயாக' என்று பிரார்த்திப்பதுபோலவும், அப்படியே பார்த்த வண்ணமாக, மெய்ம்மறந்து, மூச்சடங்கிச் சித்திரம்போல நெடுநேரம்வரையில் அவ்விடம் விட்டுப் போாமலும் அசையாமலும் நின்றுகொண்டிருந்தேன்; அப்போது, மன்மதன்றான் பின்னே நின்று விளையாட்டாக என்னைத் தள்ளிக் கொண்டு போய் விடுத்தனனோ, அன்றிச் சிந்தைநிறைந்த ஆசைதான் உள்ளடங்காமல் என்னை யிழுத்துக்கொண்டு எய்தியதோ, இனையதென்று சொல்ல வறியேன், எப்படியோ நான் அவனது சமீபத்திலேபோயிருந்தேன். நெஞ்சிலே யவன்வாழ்தற்கு இடங்கொடுப்பதுபோலப் பெருமூச்சானது மேன்மேலும் அதிகமாகித் தொடர்ந்தெழுந்தது; மன விருப்பத்தையெல்லாஞ் சிறிது மொளியாமல் உரைப்பனபோலக் கொங்கைகள் விம்மி விம்மி யசைந்தன; வழிந்தோடும் வேர்வை நீராற் சேஷமின்றிக் கழுவுண்டு போனதுபோல அழிபாத எனது நாணமும் அழிந்துபோயிற்று; இனிமேல் அனங்கசரம் பாயுமென்று அஞ்சினாற்போல ஆகமெல்லா நடுக்குற்றன; முனிகுமாரனது எழிலைக் கண்டு களிப்பதற்காகக் காமமோகங் கொண்ட என் மனமானது வெளியே புறப்பட்டாற்போலச் சரீரமெல்லாம் புளகங்கள் எழுந்தன; காலிலே யணிந்திட்ட செம்பஞ்சுக் குழம்பானது நனைந்தெழுந்த வேர்வினாலே யழிந்தொழிந்தது; நலமுற்ற சோதி புனைந்தது போல நயனங்கள் களிகூர்ந்தன; அப்போது, தீவினையேனாகிய யான் சிறிது ஆலோசித்து, 'எம்போன்ற அற்பர்களே பாராட்டத் தக்கது இந்த இன்பம்; ஹேயமான இச் சம்போக சுகத்தைக் குறித்து நாம் இம் முனிவரை நெஞ்சால் நினைக்கவுந் தகாது; என்ன கஷ்டமோ, வீணாக மன்மதன்

நம்மை இந்த முனிவனிடத்திலே தள்ளுகின்றான்; ஐயோ! நாம் இங்ஙனம் ஆத்மபோத மழிந்து கெட்டலைந்தால் மேல் ஏதாக விளையும்?' என்று நாணமுற்று மீண்டு, 'ஈதொன்று இருந்தபடி யென்னே!' என்று இப்படியே யறிந்திருந்தும், முன்னே நின்று இங்கிதஞ் செய்கின்ற வைம்புலன்களையும் அடக்குதற்கு முடியாமல் 'நம்முடைய கரைகடந்தகாதலை யிவன் அறியின் நம்மை நகைத்து இகழ்ந்திடுவனே; இதற்கு நாம் என்செய்வது? நம்முடைய இந்த நேசத்தை இவன் அறிந்துகொள்வதன் முன்னரே நாம் அகன்று செல்வதே இனிச் செய்யத்தக்க காரியம்; ஏகாமலிருப்பின், நம்முடைய தகாத காதலைக்கண்டு இத் தவமுனிவன் சபித்தாலும் சபிப்பன்; அதன் விளைவு இன்னதென்று நமக்குத் தெரியாது; நாம் போகும்போது அழகிய தபோதனர்களைக் கண்டு வணங்காமற் செல்வதும் பெரிய பாபத்துக்கு இடமாகும்' என்று கலங்கி, 'இங்கு ஆனது ஆகட்டும்; இவர்களை யிறைஞ்சி யேகுவோம்' என்று துணிந்து, சிங்காரமிக்க அம் முனிகுமாரனைத் தரிசித்துச் சிறிது விலகி நின்று செங்கை கூப்பி, ஒரு காதின் மாணிக்கக் குண்டலமும், செவித்தாரும், ஒரு தோளின்மேல் வீழ்ந்த மணங் கமழுஞ் சுரிகுழலும் சிறிது அசைய, அவனது முகத்தின்மீது காதலோடு சென்ற கண்ணிணையை வாங்காமலும், நிலநோக்கித் தலைகுனியாமலும், பருகுதல்போலப் பெரிய ஆதரத்தோடு பணிந்தேன்; அங்ஙனம் பணிந்தபோது, மன்மதனது ஆணையை எவர்க்குங் கடக்கரியதாகையினாலும், வசந்தகாலமாய் இருந்ததனாலும், இடமும் அதுவாக இருந்தபடியினாலும், யௌவனத்தினது தர்மத்தினாலும், தற்காலம் தீவினையேன் இவ் விதமான துயரங்களையெல்லாம் படவேண்டியிருக்கையாலும், வெளிப்படையான எனது மெய்ப்பாட்டைக் கண்டவுடன் அவன் வலிமையுஞ் சிதைந்து விட்டது. புதிதாக வருகின்ற மன்மதனை யெதிர்கொண்டழைப்பன போல அவனது மெய்யெங்கும் புளக மரும்பின; ஒன்றையும் லக்ஷியஞ்செய்யாமல் என்னிடத்திற்கு வருகின்ற தனது நெஞ்சினுக்கு வழிகாட்டிச் செல்லுமாறு போல முற்படப் பெருமூச்செழுந்து சென்றது. கையிலேயுள்ள ஜபமாலையானது விரதமெல்லா மினிச்சிதையாமற்போகாது என்று அஞ்சியது போல நடுங்கியது; மனமுஞ் சிதைந்தது; மற்றொரு பூங்கொத்தின் செவித்தார்போலக் கபோலத்தின்மீது வெயர்வு தோன்றிற்று; மிதமிஞ்சிய தனது ஆதராதிசயத்தினாலே என்னைப் பார்க்கும்பொருட்டு எங்கும் பரந்து பதறி யெழுந்த அவனது இரண்டு கண்களும், ஒப்பில்லாத அந்த அச்சோத சரஸிலுள்ள புண்டரீகங்களெல்லாம் விண்ணிற் செல்வதற்காக அதை விட்டுக் கிளம்பி எம்மருங்குஞ் சஞ்சரிப்பனபோலக் காணப்பட்டன. இந்த விதமாக மிகவும் வெளிப்படையாகத் தோன்றிய அவனது விகாரத்தினாலே முன்னிலு மிருமடங்கு அதிகமான காதல்கொண்டு மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கின்ற காமவிகாரத்தில் அகப்பட்டுப் பாவியான யான் அப்போது பட்ட அவஸ்தை இவ்வளவு, இத்தன்மையது, என்றுசொல்லமுடியாது; அத் தருணத்தில், நானும் நன்னெறியை யுடைய அத் தவமுனிவ

ன்து சேஷ்டைகளையெல்லாம் முறையாக உற்று நோக்கி, 'சிற்றின்ப ரஸ விருந்தை யிதன் முன்னம் இன்னதென்று நுகர்ந்தறியாத ரிஷிகுமாரனுடைய பார்வையானது துன்பத்தோடினைப்புற்றுச் சோம்பிக் கிடந்தாற்போலவும், நெடிய துயிலினாலே ஊக்கமுற்று விழித்தெழுந்தாற்போலவும், மனத்திலேயுள்ள ஆசைப்பாடுகளை யெல்லாம் அன்பு கூர்ந்து உரைசெய்து நின்றாற்போலவுந் தோற்றா நின்றது; அனங்கராகம் அதிகமாக முதிர்ந்திட்டது' என்று துணிந்து, இவ்வளவு இடங்கண்ட பின்பு சமீபத்திற்சென்று, அவன் பின்னே வந்த மாதவ முனியினது பாதங்களைத் தொழுதெழுந்து, 'எம்பெருமானே! தோழனாகி முன்னே செல்கின்ற முனிவன் யாருடைய புதல்வன்? பெயரென்ன? செவித்தாராகப் பொருந்திய பூங்கொத்து ஏது? இப் பரிமளத்தைக் கண்டு ஆதரமுற்றேன்; பணித்தருள வேண்டும்' என்று கேட்க, அம் முனிகுமாரனும் என்னுடைய முகத்தைப் பார்த்து, 'ஆயிழையாய்! இவைகளைக்கேட்பதனால் இப்போது யாது பயன்? உரையாய்' என்று சிறிது நகையாடி, 'இவைகளைக் கேட்கவேண்டுமென்ற ஆதரமுண்டாயிற் கேளாய்' என்று சொல்வானாயினான் :—

'வையமேழிலும் படர்ந்த பெரிய கீர்த்தியையுடையவனும், சுரர் அசுரர் முதலாகிய அனைவராலுந் தொழப்பெற்ற அழகிய பாதங்களையுடையவனும், சிரேஷ்டமாக மொழிகின்ற நளகூபரனுந் தனக்கு இணையாகாத வடிவழகினாலே அரமாதர் அனைவருக்கும் ஆனந்தத்தைப் பயக்க வல்லவனும், விசாலமான தேவலோகத்திலே தேவர்களுடன் கலந்து வாழ்பவனும், பிராசீனமான வைதிக மார்க்கத்திலேயே செல்பவனுமாகிய சுவேதகேது என்னும் முனிவன் நாடோறும் மேன்மைபொருந்திய ஆகாச கங்கையிலே திருப்பள்ளித் தாமங் கொய்து வருபவன், அவ்வழக்கப்படியே சென்ற ஒரு நாளில், அக்கங்கையிலே ஏராளமாக மலர்ந்துள்ள அரவிந்த வனத்திலே தேனொடு மலர்ந்த தவளமான ஒரு தாமரைப் போதிலே பிரஸந்நமாக வாழ்ந்துகொண்டிருந்த லக்ஷ்மியானவள் கண்டு, பரவசையாகி, அனுராகத்தோடு அம் முனிவனைப் பார்க்க, அப்போது நயனமாம் புணர்ச்சியினால் முடிவான பேரின்பம் விளைந்தது; அப்போதே அப்போதில் இவன் அவதரித்தான்; இவனை அப்பூமாதுங் கைப்போதிலேந்தி முனிவனது முகத்தை நோக்கி, 'எம்பெருமானுடைய காட்சியினா லிப்போது பிறந்தனன்; இவன் நினது புதல்வனாவான்; இவனை அங்கீகரித்தருளவேண்டும்' என்று சொல்லத், தப்பானவற்றை யொருநாளுஞ் சொல்லாதவனாகிய அம் முனிவன் இவனைக்கொண்டுபோய், செய்யவேண்டிய சடங்குகளனைத்தையுஞ் செய்து புண்டரிகத்தில் உதித்தமையால் புண்டரிகன் எனப் பெயரும் புனைந்து, வேதசாஸ்திரங்களனைத்தையும் அதிகரிப்பித்தருளி, சிரேஷ்டமான பிரமசரியமாகிற தேவர்களுந் தொழுகின்ற அவ் விரதத்தையுங் கற்பித்தருளினான்; எண்டிசையும் புகழ்ந்துரைக்கின்ற இம் முனிகுமாரனது வரலாறு இது. இனி, செவித்தார் வந்த விதத்தையுஞ் சொல்லக்கேளாய். இன்று சதுர்த்தசிதினமாகையால் ஈசனுடைய பாதாரவிந்தங்களைச் சென்று பணி

தற்பொருட்டுக் கயிலையங் கிரியை நோக்கி நெடிய ஆகாயத்தினின்றும் இறங்கிப் பெரிய இந்த நந்தனவனத்தின் வழியாக நாங்கள் இருவருமாகச் சேர்ந்து வந்தோம். அப்போது, சிறந்த முத்தாரங்களையும், நவரத்னங்களிழைக்கப்பெற்ற அழகிய மேகலாபரணத்தையும் அணிந்து, செந்நிறமுற்ற மாந்தளிரைச் செவித்தாராகச் சேர்த்து, மற்றும் விதம் விதமாகப் புஷ்பங்களினாற் செய்த எல்லாப் பணிகளையும் பூண்டு, மலரினின்று வழிகின்ற இனிய மதுவை மாந்தி, இதயங் களிகூர்ந்து, வசந்தமாகிற திருமடந்தை கைகொடுக்க, பெரிய ஆரவாரத்தோடு விளையாடிக்கொண்டுவந்த அந்த வனதேவதையானவள் இந்த முனிவர் சார்வபௌமனைக்கண்டு, பணிந்து, பற்பலகால் தோத்திரித்து, நறிய இந்தப் பூங்கொத்தையுங் கரத்திலேந்திக் கொண்டு, 'இவ் வழகுக்கே இது இசைந்தது; இதனைத் தந்திட்ட சிரேஷ்டமான அந்தப் பாரிஜாதவிருக்ஷமும் நானும் பிறவியாலாகிய பயனைப்பெற்று உஜ்ஜீவிக்கும்படி இதனைத் திருவுள்ளமகிழ்ந்து செவித்தாராகக் கொண்டு அருளவேண்டும்' என்று பிரார்த்தித்துவிடாமற் பின்றொடர்ந்துகொண்டே வர, இம் முனிவன் நலம் மிக்க தனது விரதத்தைப் போற்றுகின்றவனாதல் பற்றி நாணமுற்று, ஒன்றுமே பேசாமற் போய்க்கொண்டிருக்க, நான் எதிர்நின்று தடுத்து, இவனை நோக்கி, 'நண்பா! இத்தால் என்ன விரதபங்கம் உண்டாகிவிடும்? பணிவொடு பிரார்த்தித்து வருகின்ற இவளது ஆதரந்தீர இம் மஞ்சரியைச் சாத்தியருள்க' என்று சொல்லி, நான் அவ்வனதேவதையின் கையிலிருந்து வாங்கி இதனைச் செவித்தாராகவைத்தேன்; ஆகையால், இது மணஞ்செறிந்த பாரிஜாதப் பூங்கொத்தென்று அறிந்துகொள்' என இவ்வாறு அவன் யாவுஞ் சொல்லி நிறுத்துமளவில், புண்டரிக முனிவன் என்னை நோக்கிப் புன்முறுவல் செய்து, 'புனையிழாய்! இதையெல்லாம் இப்படி சமத்காரமாய்க் கேட்டு வருந்துவானேன்? இதன்மீது உனக்கு விருப்பமுண்டாயிற் கொடுக்கத் தடையில்லை' என்று கூறி, தானே வந்து என் செவிமேல், தன் செவிமேல் நின்று ஒளிர்கின்ற தேன்மிக்க பூங்கொத்தைச் சேர்த்தினன்; அப்போது மால்கொண்ட எனது நேய நெஞ்சமவன் கைவைத்த இடத்திலே சென்று ஒடுங்கி, கோனே! இன்புற்றதையெல்லாம் என்னென்றுகூறுவேன்! ஆண்டு அம்முனிவர்பெருமானும் என் கபோலத்தை அணைந்த ஸ்பரிச சுகத்தினாலே செவ்விய கைவிரல்கள் நடுங்கி, நாணத்தோடுங் கூடச் சூர்யகாந்தச்சிலையினாற் செய்யப்பெற்ற ஜபமாலையு நழுவி விழ, அதனையு மறியாமல் அப்படியே நின்றான்; அப்போது, யானும் அந்த ஜபவடத்தைப் பிரஸாதமாகப்பெற்று, பெருமையோடு அதை என் கழுத்தில் அணிந்துகொண்டு, அவனது மலர்க்கரங்கள் என்னை வந்து தழுவியது போலப் பெரிய சுகானுபவத்தை யெல்லா மெய்தி, அவனது அருகிலேயே நின்றுகொண்டிருந்தேன்.

அப்போது, ஏந்திழைப் பாங்கி யொருத்தி என்பால் விரைந்து வந்து வணங்கி நின்று, 'மாதேவி மஞ்சனம் ஆடிவிட்டு, பிறைநுதன் மானே! நினது வருகையை எதிர்பார்த்து நிற்கின்றனள்' என்று சொல்ல, அந்த

வாசகத்தினாலே, புதிதாகப்பிடிக்கப்பட்ட கரிணியானது முதன்முதலாகத் தனது மத்தகத்திலே வீழ்ந்த அங்குசத்தின் வசமாகிப் பெயர்ந்துசெல்லு முறைபோல நான் வசமழிந்து, அவனது அவயவ சௌந்தர்யமாகிற பெரிய சேற்றிலே யாழங்காற்பட்டு நின்றாற் போலவும், கபோலத்திலெழுந்த புளகமாகிய முட்களிலே யெழுந்து கோப்புண்டாற்போலவும், அத் தவமுனிவனது முகத்திலேயே பதிந்து கிடந்த எனது ஒள்ளிய கண்களைக் கஷ்டமான பிரயத்தனத்தினாலே வாங்கி, ஒப்புரைக்கவொண்ணாத அப்பொய்கையில் நீராடுவதற்காக இரண்டொரு அடியெடுத்து வைத்தேன். வைத்ததும், கூடவே வந்தவனான மற்றொரு முனிவன் புண்டரிகனிவ்வாறு வலியழிந்து நிற்கு மாற்றத்தைத் தெரிந்துகொண்டு, நெருங்கிய சிநேகத்தாலுண்டாகிய சுதந்தரத்தை முன்னிட்டுப் பெருஞ்சினமடைந்து, தோழனது முகத்தை நோக்கி, 'இது உனக்குச் சிறிதுந் தக்கதன்று; கேவலம் அற்பமதிகளே முயல்கின்ற இந்தக் காரியந் தபோதனர்களான உன்போன்ற பெரியோர்களுக்கு அடுக்கவே யடுக்காது; இதுகாறுந் திடமான சித்தவிருத்தியோடிருந்த உனக்கு, அந்தோ! இப்போது இந்த இளந்தலைநெஞ்சம் எவ்வாறு வந்து தலைப்பட்டது? உன் நிலைமைகளும், ஒழுக்கமும், சன்மார்க்கமும், மாதவத்தி லுண்டாகிய அளவில்லாத பெரிய பிரீதியும், மாதர் விஷயசுகங்களிலுண்டாகிய அப்பிரீதியும், கல்வியும் இப்போது எங்கே யோடி ஒளித்தன? நின்போன்ற ஞானவான்களே யிப்படி யழியத் தொடங்கினால் நிறைந்த நற்குணங்களுக்கெல்லாம் ஸ்திரமான நல்ல புகலிடம் யாது? இந்த அநியாயத்திற்கு நான் என்ன சொல்வேன்! அங்கையினின்று ஜபவடம் வீழ்ந்ததையும் நீ அறிந்தாயில்லை; என்னே! இழுக்கமற் றுயர்ந்த தூய்மையான நெஞ்சமும் இங்ஙனம் அடியோடு அழிந்துவிடுமோ? அந்தோ! கஷ்டம்! கஷ்டம்!! தபோமகிமையை யுடைய பெரியோய்! உனக்கு இது வேண்டாம்; தையலாள் அபகரித்துக்கொண்ட உனது நெஞ்சத்தை இனியாயினும் இப்புறமாகத் திருப்பாய்; நீயும் இவ்வாறு செய்வையோ?' என்று சொல்ல, புண்டரிகனும், 'யாரைப்பார்த்து என்ன வார்த்தை சொன்னாய்? அழகு, அழகு! எனது ஜபமாலையைக் கைப்பற்றிக்கொண்டு இக் கன்னிகையும் போய்விடுவாளோ? நானோ விட்டு விடுபவன்? இதோ வாங்கி வருகின்றேன் காண்' என்று சொல்லி, நீண்ட தனது புருவங்களை வளைத்து, இதழ்கள் துடிக்குமாறு தானாக வலியச் செய்துகொண்டு, கோபம் பொங்குவது போலக் காட்டிக், கிருபையோடு பொருந்திய முகத்தையுடையவனாய்த் தொடர்ந்து வந்து, எனது முகத்தைப்பார்த்து, 'எனது ஜபமாலையைக் கொடுத்தாலல்லாமல், பேதாய்! ஆணையிடுகிறேன், நீ போகக்கூடாது' என்று சொல்லக்கேட்டு, அவனது ஜபமாலைக்குப் பிரதியாக எனது தனதடத்திலே கிடந்த முத்துவடத்தை மின்போன்ற தேககாந்தியை யுடைய அம் முனிவன் கையிலே கொடுத்து, ஏற்கனவே ஒரு முறை வெயர்வை நீரிலே முழுகி யெழுந்திட்ட நான், திரும்பவும் அழகுமிக்க அந்தக் கபவாவியிலே யிறங்கி நீராட்டஞ்செய்து கரையேறி, அலைமோதுகின்ற பெரிய

பிரவாகத்தோடு கூடிய நதியொன்று அணையிலே தேங்கித் தேங்கி நின்று எதிர்த்துச் செல்லுமாறு போலச், சூழ்ந்திருக்கின்ற தாதிமார்களுடைய காவலிலகப்பட்டு, வசமழிந்தவளாய் அன்னையோடு சென்று, நிகரின்றி நிலவும் எனது அரமனையிற் புகுந்தேன் ; புகுந்த அப்போது தொடங்கி, ஒரு செயலுமில்லாமல் விரகமோகத்தினாலே உடல் சுழன்று, மனத்தையும் பறிகொடுத்து, 'இங்கு வந்தனமோ? அங்கிருந்து நடந்து வருகின்றனமோ ? நெருங்கிய பாங்கிமார்களுடனே ஒருங்கிருந்து உரையாடிக் கொண்டிருக்கின்றனமோ? அன்றித் தனியே மௌனமாய்க் கவலைகொண்டிருக்கின்றனமோ? மனங் களிகூர்ந்து சிரித்து விளையாடுகின்றனமோ? புலம்பித் திகைத்துக் கொண்டிருக்கின்றனமோ ? யாம் இப்போது எங்கே யிருக்கின்றோம்? நாம் யார் ? நமது பெயர் என்ன ? ' என ஒன்றும் அறியாமல், இதற்கு முன்னங் காமநோய் தெரியாதவளான நான் இது இன்ன நோய் என்று தேரமாட்டாமல், 'இதற்கு எது செய்வேன் ? யாரோடு எடுத்துரைப்பேன்? எங்ஙனே ஏகுவேன் ?' எனறென்று உதித்திட்ட மிக்க வேதனையினாலே ஒன்றுமே யறியாமல் மேன்மாடத்திலே யேறி, மதிப்புடைய பாங்கிமார்களனைவரையுந் துறந்து, விளையாட்டெல்லாம் மறந்து, சீதளமான மணிகளாற்செய்யப் பெற்ற சாளரத்திலே எனது வதனத்தை வைத்து, அவன் நின்ற அத்திசையைக் காதலோடு பன்முறை நோக்கி, அத்திசையினின்று வருகின்ற காற்றைக்கலந்து, அவனா லனுப்பப்பட்ட தூதைப்போல அதனைப் பெரிதும் அபிமானித்து, எதிர்கொண்டு, அவன் அதிதூரத்தி லிருக்கச் செய்தேயும் ஆதபன் திறத்தில் அழகிய அம்புஜம்போல அவன்மீது அன்பு வைத்து, அங்கேயே ஸதா நின்றுகொண்டு, 'இது அவன் நமக்கு நல்கிய செவித்தார் ; இது அவன் ஜபவடம்' என்றென்று மிகப்பிரீதியுடனே அவற்றையே நோக்கி, அவைகளையே பற்றுக்கோடாகக் கொண்டிருந்தேன்.

அங்ஙனம் இருக்கும்போது, எனது தாம்பூல கரங்க வாகினியாகிய தரளிகை யென்பவள் என்னுடனே அம் மலர்ப் பொய்கைக்கு ஸ்நானஞ் செய்யப் போந்தவள் அத்தனை நேரங்கழித்து என்னிடம் வந்து, என்னை நோக்கி, 'எம் பெருமாட்டி! உனக்கு க்ஷேமகரமாக வாய்த்ததொரு விண்ணப்பமுண்டு ; அதனை வேறொரு கவலையுமின்றிச் சாவதானமாய்க் கேட்டருள்வாயாக. தெய்வத்தன்மை பொருந்திய அம் மலர்ப் பொய்கையினருகே முன்னே நாம் சென்றிருந்தபொழுது கண்ட முனிகுமாரர்களிருவரில் உனக்கு இந்தச் செவித்தாரைத் தந்தவன் தன்னோடு கூடவந்தவனை விட்டு, மெதுவாக நான் வருகிற மார்க்கத்தின் பக்கத்திலே வந்து பதுங்கி நின்று, என்னை யழைத்து, 'அணங்கே! இம் மாதரசி யாருடைய புத்திரி? பேரென்ன ? வஸிக்கும் ஊர் எது?' என்று கேட்க, 'வையகமெல்லாந் துதிக்கின்ற பெரிய வள்ளலும், கந்தர்வராஜசேகரனுமாகிய ஹம்ஸன் என்பவனது சிறந்த தனயை; மலர்க்கணை தொடுக்கு மாரவேளும் மகிழ்ந்து புகழ்கின்ற இம்மங்கைநல்லாளுக்கு மகாசுவேதை என்று பெயர் ; இவளது வாசஸ்தானம் ஹேமகூடநகரம்' என்று சொன்னேன். அதுகேட்டு அந்த

மறைமுனிவன் திகைத்துநின்று, ஒன்றை யியம்புவான்போல அருகேவந்து, என் முன்னே யவற்றை யுரைத்திடுதற்குங் கூசி, எனது முகத்தையே பன்முறை நோக்கி, நெட்டுயிர்ப் பெறிந்து, பின்னர்ச் சிறிது சமீபத்தில் வந்து, நயந்து கொண்டு, 'உன்னை என்மனம் பெருகவும் உட்கொண்டுவிட்டது; உன்னால் எனக்கு ஆகவேண்டிய காரியமும் ஒன்றுண்டு; அணங்கே! அதனை உரைக்கவோ, ஒழியவோ?' என்று கேட்டான். அப்போது நானும் வணங்கி நின்று, 'எந்தாய்! எங்களுக்கு உங்கள் கடாக்ஷமுட்பட யாவுமே தீவினைகளையெல்லாந் தீயினிற் றூசுபோ லகற்றவல்லன; அப்படியிருக்க, நியமித்தருளிய ஒரு கைங்கரியத்தைச் செய்யக்கிடைப்பது ஸாமாளியமானதோ? சிறிதுஞ் சங்கையின்றி அருள்செய்யவேண்டும்' என, எனது வாக்கியத்தினாலே நான் நினது உயிர்ப்பாங்கியாகவே மனத்தால் நிச்சயித்து, என்னைக் கிருபாநோக்கத்தோடும் பார்த்து, அங்கே நின்றதொரு தமாலமரத்தினது புதிய கொழுந்துகளை யெல்லாம் பறித்துப், பங்கயம்போலத் திகழாநின்ற தனது செங்கையினாலே அவற்றை நன்றாகக் கசக்கிப் பிசைந்து ஒரு பாறையிலே பிழிந்து, அச் சாற்றைக்கொண்டு, சிறிதுஞ் சங்கையின்றித் தான் போர்த்திருந்த வற்கலையினது நுனியிற் சிறிது கிழித்து, அதிலே யெழுதி, 'இதனை ஒருவரு மறியாவண்ணம் அம் மங்கையின் செங்கையிலே கொடு' என்று சொல்லி, இதனை யென்கையிலே கொடுத்தான்' என்று, அடைப்பையிலே யிருந்த பட்டிகையை அவள் காட்ட, நானும் நெடுநாட்பழகிய காதலர்போல அதனை எனது இரண்டு கைகளினாலுந் தொழுது வாங்கி, மனங்கிடந்து பதறத் தனங்களிரண்டும் விம்மியெழுந்து பூரிக்க, அதிலே யெழுதியுள்ள வாசகமொன்றைப் பன்முறை படித்துப் படித்துப் பார்த்தேன்; அவ் வாசகத்தை நீயுங் கேட்பாயாக:—

'தனக்கிரை யான தாமரை வளையந் தானெனத் தரளமா லையினை
நினைத்துடன் கவ்வி வெள்கிய வன்ன நெடுந்துய ருழந்திருந் ததுபோற்
சினைக்கயல் விழியார் முத்தமா லையினைச் செபவட மென்றுகேட் டுண்டு
மனத்திடர் பெருகா நாணுறா வருந்தா மயங்குகின் றனனொரு முனியே.'

என்னு மிவ்வாசகத்தைக் கண்டபின்னர், இயற்கையிலேயே கண்தெரியாத குருட னொருவனுக்கு அதன்மேல் மிகவும் இருண்டதோர் அந்தகாரம் எதிர்வந்தாற்போலவும், பெரியதோர் அரணியத்தில் வழிதப்பிச் சென்றானொருவனுக்குத் துக்கஹேதுவான திக்பிரமம் உண்டானாற்போலவும், பேசவும், பேசுவதைக் கேட்கவுந் தெரியாத ஊமனுக்கு அற்பசொற்பமிருந்த பழைய நாக்குஞ் சிதைந்திட்டாற் போலவும், முன்னமே மன்மத தாபத்தால் மயங்கிக் கிடக்கின்ற எனக்கு மோகமானது ஒன்று நூறாக மேன்மேல் வளர்ந்திட்டது. அப்போது, நான் அத்தரளிகையை உவந்துவந்து, அன்பால் அணைத்து அணைத்து, அவளது அளகமும் நுதலும் மெதுவாகத் தைவந்து தைவந்து, 'என் மெய்யனை எங்ஙனே கண்டாய்? எத்தனை நேரம் அவனிடம் நின்றாய்? வாய்ச்செய்தி யென்ன சொல்லி யனுப்பினான்? உன்னை இரந்து கொண்டவண்ணமாக எவ்வளவு தூரம் வரையில் அவன் உன்னைப் பின்

தொடர்ந்துவந்தான்?' என்று இப்படி யனேகம் விஷயங்களைத் திரும்பவுந் திரும்பவுங் கேட்டுக்கொண்டே பகற்போதையெல்லாங் கடந்தேன். அந்த நிலையில், என்னுடைய ஹிருதய ராகத்தைத் தானுந் தோய்ந்து மிகச் சிவந்தாற்போலச் சூரியமண்டலஞ் சிவந்தது; மணஞ்செறியுங் கமல மலர்க் காடுகளெல்லாங் குவிந்தன; ஒப்பற்ற குமுத வனங்களெல்லாம் மலர்ந்திட்டன; இழைந்து கிடந்த சக்கரவாகங்களெல்லாம் பிரிவுற்றகன்றன; அப்போது, ஒரு சேடியானவள் எனது முன்னே வந்து, 'செந்திருவனைய சுந்தர மயிலே! போற்றி; 'முன் தந்த ஜபமாலையை வாங்கவந்தேன்' என்று சொல்லிக்கொண்டு, அந்தமில்லாத அச்சோத வாவிக்கரையில் முன்னம் நாம் கண்ட அருந்தவ முனிவ ரிருவரில் ஒருவன் இங்கே வந்து, நினது அநுமதியை யெதிர்பார்த்து வாயிற்படியிலே நின்றுகொண் டிருக்கின்றனன்' என்று சொல்ல, அடைந்ததோர் பெருமகிழ்ச்சியினாலே நான் எனது மனத்தை அவனை எதிர்கொள்ளுமாறு முன்னே விடுத்து, அதன்பின்னர் ஒரு வெண்ணிறக் கஞ்சுக மடந்தையையும், 'முனிவனை யழைத்துவா' எனச் சொல்லி விடுத்தேன். விடுத்ததும், அந்தக் கஞ்சுகக் கொடியின் பின்னே, வெள்ளிய நிலாவை யடுத்து இளவெயில் தொடர்ந்து வருவதேபோலத் திகழ்கின்ற பெரியதோர் திவ்ய காந்தியைப் பரப்பிக்கொண்டு எனது மனோஹரனை புண்டரீகனுடைய இதயமேபோன்ற தோழனாகிய கபிஞ்சல மாமுனிவன், கைதவறிய தொன்றைத் தேடிவருபவனைப்போலவும், ஒன்றை அபேக்ஷித்து வருபவனைப்போலவும் வந்தான். அங்ஙனம் வந்துநின்ற அம்முனிவனது அபிப்பிராயங்களை யெல்லாம், வந்த அவனது முகவிலாசத்தினாலேயே நான் அறிந்துகொண்டு, எழுந்து எதிர்சென்று வணங்கி, ஆசனத்திலெழுந்தருளி யிருக்கச்செய்து, அவனது சரணாரவிந்தங்களை நன்னீர் கொண்டு விளக்கி, அழகிய காந்தியையுடைய எனது உத்தரீயத்தினாலே துடைத்து, அருகே நிலத்தில் உட்கார்ந்தேன்; தவமகிமையையுடைய அம் முனிவனுஞ் சிறிது போது ஒன்றையுமே அருள்செய்யாமல் அப்படியே யிருந்தான்; பின்னர் ஏதோ ஒரு விஷயத்தைச்சொல்லவருவான்போல எனது முகத்தை நோக்குவான்; யாதும் உரை செய்யான்; தரளிகைதன்னைப் பற்பலகால் உற்று நோக்குவான்; இவற்றினால் நான் அந் நன்னெறி முனிவனது மனக்கருத்தை யெல்லாம் நன்கறிந்து, 'மிகுந்த மெய்த்தவச் செல்வத்தையுடைய முனிவர் பெருமானே! சிறிதும் ஐயுறல்வேண்டாம்; மயில்போன்ற இந்த மங்கைநல்லாள் எனக்கு உயிர்த்தோழிகாண்; ஆதலால், மனத்திலுள்ளதையெல்லாஞ் சிறிது மொளியாமல் உரைத்தருளலாம்' என, அம்முனிவரன் உரைப்பானாயினன்:—'வாராய், கந்தர்வராஜகுலதிலகமே! நான் என்னென்று சொல்வேன்! நாணத்தினாலே என் நாவும் எழவில்லை; சொல்லவந்த இந்தக்காரியமானது, அந்தோ! விரிந்துகிடக்கின்ற இந்தச் சடைமுடிக்கு ஏற்றதோ? இந்த மேகலைக்கு ஏற்றதோ? இந்த மரவுரிக்குத்தானேற்றதோ? என்னே! இவ்விதமாகவெல்லாந் தெய்வம் எங்களைச் சோதிக்கின்றது! எங்களுக்கு இதுபோற் பரிபவமான காரியம் வேறு எதுவும் இல்லை; என்றாலும்; வேறு

கதியில்லை; உங்களுக்குச் சொல்லித்தான் தீரவேண்டும்; சொல்லாம லிருந்தாலோ இன்றிரவே பிரமாதமான விபத்தொன்று நிச்சயம் விளைந்துவிடும்; உயிரைக்கொடுத்தாவது இடுக்கண்களைந்து அடுத்த தோழனைக் காப்பாற்றுவதே முறைமையாகையாற் சொல்லுகிறேன் கேண்மின். முன்னம் உனது கண்முன்பாகவே நான் அவனைக் கோபித்துச் சொல்லத்தகாத கொடிய வார்த்தைகள் சிலவற்றைச்சொல்லி, 'இது மிகவுந் தப்பான காரியம்; இதை நீ தவிர்த்துவிடு' என்று சொல்லிவிட்டுப் பூஜைக்கு வேண்டிய புஷ்பங்களை யெடுத்துவரப்போனேன். மைக்கருங்குழலாய்! நீயும் நீராடி வந்துவிட்டனை; அதன்பின்னர், 'தனியாக நின்ற இவன் என்ன செய்கிறான் பார்ப்போம்' என்றெண்ணி, நான் முன்னம் அவன் நின்றுகொண்டிருந்த இடத்திற்குச் சென்று, அருகிலுள்ள ஒரு புதரிலே மறைந்துநின்று பார்த்தேன்; இவனைக் காணேன்; அதனால், பரிதபித்து, 'அனங்க தாபத்தினாலே அப் பூங்கொடியாள் பின்னே போகிவிட்டனனோ? அப்பொற்கொடி போனபின்பு அறிவு தெளிந்து, என்னைக் காண நாணமுற்று எங்கேனு மேகிவிட்டனனோ? என் செய்தானோ? தெரியவில்லை' என்று மனமழுங்கி, 'இலச்சையினாற் சென்ற இவன் முடிவில் ஏதேனும் விபரீதமானதொன்றைச் செய்தாலுஞ் செய்வன்; இவனை இனித் தனியே விட்டிருப்பது நியாய மன்று' என்று கருதி, நான் அவ்விடம் முதலாக நெருங்கி யடர்ந்த பசிய பொழிலும், வாவியும், கிரியும், சுனைகளுமாகிய எவ்விடத்திலும் இவனை நாடித்திரிந்து காணாமல், மனம் அழிந்து ஏங்கித் தியங்கிய காலத்தில், மலர் நிரம்பிய அப்பொய்கைக்குச் சமீபமாய், எங்கும் நெருங்கிய பூம்பொழில்களை யுடையதாய், அழகிய சிறையினை யுடைய வண்டினம் யாவும் இன்னிசைபாட, குயிலினங்களெல்லாங் கிளைதொறுஞ் செறிந்து கூவுதல் செய்ய, மயிலினமுழுதுங் குறையறக் குலவி அழகிய தங்கள் தோகையைவிரித் தாடாநிற்க, நன்னிறமுடைய மலர்த்திரள்கள் எல்லாவற்றையுங் கொண்டு, வசந்தன் கொலுவீற்றிருத்தற்காகப் புதிதாய் நிர்மாணஞ்செய்யப்பெற்றதொரு மாசில்லா மண்டபம் என்னத் தக்கதாய், அதிமனோகரமா யிருப்பதோர் கொடி மண்டபத்திலே அறிவெல்லா மழிந்து, பரபிர்ம்ம வஸ்துவினிடத்திலே லயித்த மனமுடையவர்களான பெரியோர்கள் யோகத்திலிருக்கின்ற முறைமையைப் போலவும், ஒளிமழுங்காத புதிய சித்திரப் பதுமை போலவும், ஓர் புறத்திலுஞ் சிறிது மலையாமல், ஒருவன் தேடரிய பெருநிதியாகிய சன்மார்க்கத்தினின்றும் அலைந்து, நெஞ்சினுள்ளே நீ யிருக்கவுந் தனியனாய், மிருந்த அனுராகத்தை யுடையனாக இருந்தும் வெளிறனாய், ஒன்றையும் வாக்கினாலே புகலாதவனாயிருந்தும் மன்மதனது பெரும்போரில் விளைந்த வேதனைகளனைத்தையும் விரித்து உரைசெய்பவனாய், நிறைந்த மனத்துயரத்தைப்பொறுக்கமாட்டாமல் அஞ்சியகன்றனபோல அஞ்சு புலன்களுந் துஞ்சி யொளிக்க, அதனால் வெற்றுடம்பொன்றையே தரித்திருப்பவனாய், சற்றும் இமைதிறவாத கண்களினுள்ளே காமாக்கினியினது புகைவந்து கவிந்ததுபோலக் கண்ணீர்த்தாரையானது சிறிதும் ஓயாமல் நிரந்தரம் ஓடிக்கொண்டேயிருக்க, நிறைந்

துள்ள கொடியினது தளிர்களும், பூவினது நறிய மகரந்தப்பொடிகளும் தீந்துதீந் துதிருமாறு முதிர்ந்துள்ள காமக்கனலை முகந்துகொண்டெழுந்து பெருமூச்சானது மேனோக்கி அதிகமாகி வீச, கன்றிப்போயிருந்த வாம கபோலத்தைச் சுமந்து கொண்டிருந்த கைவிரலின் நக காந்தியானது ஒள் ளிய நுதலின்மேல் மிகச்செவ்விய சந்தனக்குழம்பை யணிந்திட்டதைப் போல ஒளிர, முன்னஞ் செவியிடத்தே பொருந்திய பாரிஜாத புஷ்பத்தின் வாசனையினாலே வந்து சூழ்ந்துள்ள கரிய வண்டுகளெல்லாஞ் செவியருகே சென்று வீரனான மன்மதனது மோகமந்திரத்தை ஜபிப்பதுபோல முரன்று சப்திக்க, மாரவேள் எய்த மலர்க்கணையினது மகரந்தப்பொடிகள் வடிவெல் லாம் பதிந்துநின்றாற்போல வியசனகரமான விரகதாபத்தினாலே சரீரமெல் லாம் புளகங்கள் நிரம்பி யெழ, அனங்கனான மன்மதன் முதிர்ந்துள்ள மோகனப்பொடியை மெய்ந்நிறைய வாரித் தூவிநின்றாற்போலப், புதிதாக அலர்ந்த நாண்மலர்களிலுள்ள பராகங்களானவற்றை யெல்லாம் அழகிய அந்தப் பூம்பொழிலினது இளங்கொம்புகள் ஓயாமல் வீச, வனதேவதை யென்று சொல்லப்படுகின்ற அழகு மிக்க வனிதையானவள் செய்தருள் கின்ற சிரேஷ்டமான கலசாபிஷேகதாரைகளைப்போல மலர்கள் நிறைந்த இளங்கொடிகளெல்லாம் மதுவினை மழைபோற் பொழிந்து அபிஷேகஞ் செய்ய, கள கள கள என்ற பெரிய ஆரவாரத்தோடு காமனது வெவ்விய சேனாசமூக மெழுந்து செல்வதுபோலக் குளிர்ந்த அச் சோலை முழுதுங் குயிலினங்கள் கூ கூ கூ வெனச் செவிசுடும்படிக் கூவ, அழகிய பொன்னா லாகிய சிலீமுகத்தைப் புகையெழுமாறு பழுக்கக் காய்ச்சிப் போர்மதன் புடைப்பதே போல, வண்டுமூசிய செந்நிறச் சண்பக மொட்டுக்களினாலே செழிய மலர்க்கொம்புகள் அறைய, 'இம் முனிவனது நெஞ்சிலிருந்த தவ வலிமையானது இன்னம் மாய்ந்துவிட்டதோ இல்லையோ' என்று மெய்ம் முழுதும் பரிசித்து அறிவதுபோலத் தென்றற் காற்றானது அவனுடைய உள்ளும் புறமும் மெள்ளச் சென்று தடவ, வைகறை மதிபோல வெளுத்து, கோடைவந்து தாக்கிய கங்காநதிபோல இளைத்து, உள்ளே செழுங்கனல் பற்றியுள்ள சந்தனமரத்தினது செழுமையான மலர்க்கொம்புபோல வாட்ட முற்று, நைகரமான குருடனைப்போலவும், நாவில்லாத ஊமனைப்போலவும், பிறர்குரல் அறியாத செவிடனைப் போலவும், பேயினால் அறையுண்டவன் போலவும், வீரனான மன்மதனது வெற்றிக்கொடிபோல விளங்காநின்ற அம் முத்தமாலையை ஒருகையால் மார்போடு சேர அணைத்துக்கொண்டு நிவர்த்தி யில்லாத பெரிய காமமோகத்தை மேற்கொண்டவனாய், அழகுவிளங்குஞ் சிறந்த மன்மதனது சிங்கார ரஸமே யொரு முனி வடிவங் கொண்டிறங்கிப் பாரின்மேல் வீற்றிருந்தது என்னும்படி யிருந்தான்; பாவியேன் இக்கோலத் தையுங்கண்டேன்; கண்டு, இமையாமற் பார்த்து நின்று, மனக்கலக்கமுற்று நொந்து, மிகவும் நடுநடுங்கி, 'மிகுந்த ஆசார சீலத்தையுந் தெளிந்த மெய் யறிவையுமுடைமையால் வானவர் முனிவர் முதலிய எட்டுத்திசையினரும் வியந்து கொண்டாடுகின்ற இவனையுமுட்பட, என்னே! அதிபராக்கிரம

சாலியான மன்மதன் இந்த ஸ்திதிக்குக் கொண்டுவந்து விட்டான்! அந்தச் சிலைமதன் வலிமையே வலிமை!' என்று கருதி, அவனிருந்த இடத்திற்குச் சென்று, பக்கத்திலிருந்து, அவனது தோளின்மேல் எனது கையைப்போட்டு, 'உயிர்த்துணைவா! நன்று நன்று! இதெல்லாமென்ன? கண்ணைத்திற; உற்ற செய்தியை யொளியாமற் சொல்' என்று சொல்ல, கன்றிப்போய் மிகச் சிவந்து ஓயாமற் பெருகியோடிக் கொண்டேயிருக்கின்ற கண்ணீர்க்கடலிலே மிதந்து இமையோடு இமையொட்டி மூடியுள்ள கண்களை மெல்லத் திறந்து, என்னை உற்றுப்பார்த்து, நெட்டுயிர்ப்பெறிந்து, நெஞ்சடைத்து, வாய்மொழி தடுமாற்றமுற, நெடுநேரம்வரையில் அழுதுகொண்டேயிருந்து, 'துணைவா! நீ இந்த விருத்தாந்தங்களையெல்லாம் நன்றாக அறிந்திருந்தும் நான் வியர்த்தமாயழிந்தொழியுமாறு இங்ஙனங் கேட்டுவிட்டனையே; பாவியேன் இதற்கு என் செய்வேன்!' என்று இவ்வளவே சொல்லி, மற்றொன்றிலும் நோக்கமற்றுப் பின்னரும் முன்னிருந்த வண்ணமாகவே இருந்தான். நான், அதுகண்டு, 'இது ஒன்றினாலும் நிவர்த்திக்கப் போகாது' என்று மனத்திலே நிச்சயித்து, 'ஆகிலும் இயன்றமட்டும் முயன்று பார்ப்போம்; உற்ற தோழனொருவன் வழியல்லாத வழியிற் பிரவேசித்துச் செல்லும் போதுமேற்சென்றிடித்துரைத்துத் திருப்பாமற் பார்த்திருப்பது அழகல்ல' என்று கருதி, மோகிதனை அவனது முகத்தை நோக்கி, 'நண்பா! இது நமக்கு முறைமையோ? நீ கருதிய இவ்விஷயங் குருவினால் உபதேசிக்கப் பெற்ற நீதியோ? நீ அப்பியசித்த தருமசாஸ்திரங்களிற் கூறிய மார்க்கமோ?

> இருநர களிக்கும் மாதர்கூட் டத்தை யின்பமென் றுதரித் தொழுகல்
> தருமமி தென்று நச்சுமென் கொடிக்குத் தண்புனல் சொரிவது கண்டாய்;
> பரிமள நீல மாலையென் றிருண்ட பாம்பினை யணிவது கண்டாய்;
> விரிசுட ரழலைச் செம்மணி யென்று மெய்யினோ டணைப்பது கண்டாய்;

ஆகையால், இந்த நெறியல்லாத நெறியிற்சென்று வருந்துகின்ற ஐம்புலன்களையுஞ் சன்மார்க்கத்திலே திருப்பி மோகந்தீர்ந்து, முனிவனே! நீ தெளிவாயாக' என்று சொல்ல, அவன் எனது வார்த்தையைத் தடுத்துப் பெருகாநின்ற தனது கண்ணீரைத் துடைத்துப் பரிவோடு எனது கையைப் பிடித்துக்கொண்டு, 'நண்பா! பலவாறு மொழிவதிற் பயனென்ன? நான் சொல்வதொன்றைக் கேளாய்' என்று சொல்வதானான்:—'படமெடுத்துச் சீறி யெழுகின்ற ஐந்தலை நாகத்ினது கொடிய விஷத்தைப்போன்ற அனங்கனது பஞ்சபாணங்களுக்கு நீ லக்ஷியமாயகப்பட்டுக் கருத்தழிந்தாயில்லை; ஆகையினால் காரியங்களைச் சொல்லுதற்கு நீ சமர்த்தன்தான்; தரித்திடுதற்கு நெஞ்சமுடையவர்க்கன்றோ இவைகளையெல்லாஞ் சொல்லவேண்டும். மனமழிந்திருக்கின்ற என்னை இனிமேல் திருத்தவும், எனக்கு இவ்விதமான சன்மார்க்க உபதேசஞ்செய்யவு மிது காலமில்லை. என்னை நீ இவ்வித மிடித்துப் பேசத்தான் வேண்டும்; நானும் ஆப்தனான நீ யெதைச் சொன்னாயோ அதையெல்லாஞ் சொன்ன வண்ணமே செய்வேன்; இத்தருணம் நான் அடைந்துள்ள பெரிய அவஸ்தையானது எப்படிப்பட்டதென்பதைக் கண்

கூடாகக் கண்டறிந்தனையன்றோ; சிறிது ஒட்டிக்கொண்டிருக்கிற எனது ஆருயிரானது அடியோடு அகன்றுபோதற்கு முன்னம் வடவைத்தீயினுங் கொடிதாக என்னுள்ளே யெரிகின்ற காமமாகிற கொடிய வெங்கனலைத் தணிக்கத்தக்க காரியம் எதுவோ அதிலே இனி நீ முயலவாயாக' என்று உரைசெய்து, மீளவுங் கண்களிரண்டையும் இமைப்பின்றி மூடிக்கொண்டு இறந்தவன்போலச் செயலற்றிருந்துவிட்டான்; அப்போதும் நான் விடாமற் கோபமாகவும், நயமாகவும், பிரார்த்தனையாகவும் பற்பல பிரகாரமாகச் சொல்லியும், சாஸ்திர வாயிலாகத் தேற்றியும் பார்த்தேன்; ஒன்றினாலுந் தெளிவதாகக் காணப்படவில்லை. அதனால், மனமழிந்து பெரிய துக்கத்தோடு மெழுந்திருந்து, சந்தனத்தளிரைக் கணக்கின்றிக் கொய்து சாறு பிழிந்து, மேனியெங்கும் பூசி, அழகிய கற்பூரவிருக்ஷத்தினது உலர்ந்த பட்டைகள்தோறுந் தங்கிக்கிடந்த பச்சைக்கற்பூரத்தின் துகள்களையெல்லாந் திரட்டியெடுத்துப் பொடிசெய்து, வேர்வையடங்கும்படியாக உடம்பெல்லாந் திமிர்ந்து, முன்னம் பிழிந்துள்ள அச் சந்தனச் சாற்றை முகந்து மார்பினிடமாகத் தேக்கி, வாழைக் குருத்தினாலே வீசினேன். வீச வீச நெருப்புப் பிடித்தாற்போல அவன் படுத்துக்கிடந்த சிறந்த பல்லவ சயனமானது தீந்துவிட்டது. இங்ஙனந் தீந்து தீந்து சருகாகிக் கொண்டேயிருக்க, நானும் மாற்றி மாற்றிப் புதிய தளிர்ப்படுக்கைகளைப் பன்முறை பரப்பி என்னாலானவரையிற்பார்த்தேன். வரம்பின்றிப் பெருகிய அவனது தாபம் ஒன்றினுந் தணியாதபடியைக் கண்டு, அதிக பயங்கொண்டு, 'இவளது உவகையுற்ற முயக்கத்தினாலன்றி வேறொன்றினும் இவ்வியாதி தீராது' என்று துணிந்து, ஒன்றும் விசாரியாமலுன்னிடம் பிரார்த்தித்து வந்திருக்கின்றேன்; இதற்கு இனிமேல் ஆகவேண்டியகாரியத்தை நீ செய்க' என்று தான் வந்த காரியத்தைச் சொல்லி, நான் என்ன உத்தரஞ் சொல்லப் போகின்றேனென்று எனது முகத்தையே நோக்கிக் கேட்பதற்கு ஆவல் கூர்ந்திருந்தான். நானும் இவற்றையெல்லாங் கேட்டு மகிழ்ந்திருந்து, கிட்டரிய தேவாமிர்தத்தைப் பானம் பண்ணியவர்போல அப்போதுண்டான ஆனந்தசாகரத்திலே முழுகி, 'அவனையும் என்வசமாக்கிய வசந்தனான அம் மன்மதனுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்?' என்று வியந்து, மௌனமாய் நாணமுற்றுத் தலைகவிழ்ந்திருந்து, 'நானொன்று சொல்லுகிறேன்; அதைக் கேட்டருள வேண்டும்' என்று அம் முனிவனைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினேன். அத்தருணத்தில், யான் ஏதோ சிறிது அசௌக்கியமுற்றிருக்கின்றேன் என்று கேள்விப்பட்டுத் தேன் போன்ற இனிய சொல்லையுடைய எனது அன்னையானவள் சேடிமார்களுந் தோழிமார்களும் புடைசூழ என்பால்வந்து தலைப்பட்டாள்; அவ்வளவில், பெரிய மாதவத்தையுடைய அக் கபிஞ்சல முனிவன் வீணே எழுந்திருந்து, 'பூங்கொடியே! நான் வந்து நெடுநேரமாயிற்று; போய் வருகிறேன்; அநியாயமாய் என் நண்பன் மனமறுகி வருந்தாவண்ணங் காத்தருள்வது நினது கடன்' என்று சொல்லி நெடிய தனது கண்களில் நீர்ததும்ப அஞ்சலித்துப்

பேய் பிடித்தவன்போல வொன்றுந் தெரியாம லெழுந்திருந்து, கூட்டங் களையெல்லாம் நெருக்கித் தள்ளி விலக்கிக்கொண்டு போய்விட்டான்.

அன்னையும் என் அருகேவந்து உட்கார்ந்தாள். அப்போது இன்னது செய்தாள், இன்னது சொன்னுளென்பதை நான் அறியேன்; மனத்தைப் பறிகொடுத்து வாடி யயர்ந்திருந்தேன்; பிறகு அவளும் என்னைப் பார்த்து விட்டுப் பெயர்ந்து சென்ருள்; சென்றதும், போர்முகத்திலே தோற்றுப் புறங்கொடுத்தோடும் புரவலர்போலச் சூரியன் தனது தேரோடும் மேல் கடலிலே சென்று மறைந்தான்; குயிலாகிற எக்காள முழக்கத்தோடு வந்த மன்மதன், அந்தோ! தொடுத்த கணைமாரிக்கு அளவு சங்கியையில்லை; அப் போது, நான் தாளிகையைப் பார்த்து, 'அன்னமே! சகலசாஸ்திரங்களையும் நன்குதேர்ந்தவனுன கபிஞ்சலன் வந்து அம் முனிகுமாரனுக்கு உண்டான சங்கடங்களையெல்லா முரைத்ததையும் நீ கேட்டிருந்தாயல்லவா; அதற்கு இன்ன பரிகாரத்தைச் செய்யலாமென்று தெரியவில்லை; சடக்கென மேல் நான் செய்யவேண்டிய காரியத்தை இன்னதென் வெனக்கு யோஜித்துச் சொல்; மாதர்களுக்கு உத்தம பூஷணமாகிய மடத்தையும் நாணத்தையுந் துறந்து, குற்றமற்றுயர்ந்த பெண்மை, உயர்குடிப் பிறப்பு, ஒழுக்க முதலிய வற்றையும் பாராமல், பெரியோர்களுடைய வார்த்தைக்கும் லோகாபவாதத் திற்கும் அஞ்சாமல், மாதாபிதாக்களுடைய அநுமதியுமில்லாமல், நாமே போய் நண்ணினல் நமது பெரியோர்களை உல்லங்கனஞ் செய்தோமென்கிற அதிபாதகம் நமக்கு வந்துசேரும்; அதைப் பார்த்தால், அந்தப் புண்டரிக முனிவனுடைய துயரத்துக்கெல்லாம் நாமே காரணமானுேமென்று நம்மை யிரந்துகொண்டகன்ற பரிசுத்தமான திருமேனியையுடைய அக் கபிஞ்சல முனிவனது நியமனத்தைத் தட்டினுேமென்ற அபசாரம் வரும். இவை எல் லாம் இருக்கட்டும். இனி யொரு விஷயம் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்; நம்முடைய காதலினுலே அந்தக் கலைமுனிக்கு ஏதாவது ஒரு அபத்தியம் ஏற்பட்டுவிடுமாயின், அது தீதில்லாத நமது குலத்தை அடி யோடு நாசஞ் செய்துவிடும். ஆகையினுலே, இந்தத் தர்ம சங்கடத்திற்கு நான் என்ன செய்வேன்? சொல்லாய்' என்று சொல்லி வருந்துங் காலத் தில், பாதலத்திலேயுள்ள ஆதிசேஷனுடைய பணமண்டலமானது இந்தப் பூதலம்விட்டு வெளிப்புறப்பட்டதைப்போல எனது விரக வேதனைக் கெல் லாம் வித்தாகிய கொடிய சந்திரமண்டலமானது துக்கபட்ட பாவியான எனக்குச் சகிக்கப்போகாமல் நெருப்பைச் சொரிந்துகொண்டு வானத்தே யெழுந்தது. காமத்தீ யுள்ளே அனற்ற, புறம்பெல்லாஞ் சோமத்தீ வந்து சுட, நஞ்சமுண்டு துஞ்சிக்கிடக்கின்றவரைக் கிருஷ்ண ஸர்ப்பந் தீண்டினுற் போல மயங்கி, நான் அந்தத் தீயைப் பொறுக்கமாட்டாமற் சோகித்துத் தாளிகையின் மேல் வீழ்ந்தேன்; நான் அங்ஙனஞ் சோருமளவில், அவள் நறிய சந்தனக்குழம்பை மெய்யெல்லாம் அணிந்து, அழகிய சந்திரகாந்தச் சிலையை யெனது நுதலின்மேற் சேர்த்து ஒற்றி, கவிரியினுலே வீச, நான் சிறிது சோகந் தணிந்து, சாய்ந்து கொண்டிருந்த தாளிகையைச் சற்றே

கடைக்கணித்தேன். மிகக்கொடிதான நோய்கொண்டு மூர்ச்சித்து வீழ்ந்த நான் சிறிது கண்ணை விழித்ததைக்கண்டு, அத்தரளிகையானவள், ஐயகோ! என்று என் அடியின்மேலலறிவீழ்ந்து கதறி அழுது, 'பூமாதுபோன்ற பொற்பின் செல்வியே! தைரியமாயிரு; பயப்படாதே; உனக்கு உயிர் வரும்படியாய் நான் இக்கணமே சென்று உனது பிராணநாதனை அழைத்துக் கொண்டுவருகிறேன்; போய், உடனே திரும்பிவருகிற அவகாசம் வரையிற் கூடத் தாங்கமாட்டாயாயின் என்னோடு கூடவே வா, போவோம்; இனிமேல் நமக்கு நாணமென்ன வேண்டியிருக்கின்றது; இந்தச் சோகத்தையும், இந்தத் துயரத்தையும் அவனைத்தவிர உற்றவர்களான மற்றவர்களாலே மாற்ற முடியுமோ?' என்றாள். நானும் அவள் சொல்லிய வார்த்தைக்கு இசைந்து, மன்மதாவஸ்தையினாலே அத்தரளிகையினது கையைப் பிடித்துக்கொண்டு, யோஜனைபண்ணிப் பண்ணி எழுந்திருக்குமளவில் துன்னிமித்தமாக வலக்கண் துடித்தது; அதைக்கண்டு, 'இனித் தெய்வம் என்ன தீமையை விளைவிக்கப் போகின்றதோ?' என்று அச்சமுற்று, வெற்றிலை, கற்பூரம், புஷ்பம், சந்தனம் முதலிய எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு தரளிகை பின்னே வர, நானும் பரிமளமிக்க கலவைச் சந்தனச் சேற்றிலே முழுகினவளாய், ஜபவடத்தையும், வள்ளலான அம்முனிவரன் அணிந்துகொண்டிருந்த பூங்கொத்தையுமே பெரிய வழித்துணையாகக் கொண்டு, செவ்விய பத்மராக கிரணத்தாற் செய்தாற்போன்ற அழகியதோர் பட்டுவஸ்திரத்தினாலே நன்றாக அவகுண்டனம் இட்டுக்கொண்டு, பூமியிலொருவருங் கண்டறியாவண்ணஞ் சந்திர மண்டலத்தை யளாவிய மேன்மாடத்தினின்று மிறங்கி, சைத்ரரதமென்னும் இச்சோலைக்கு வரும் வழியிலே புறப்பட்டு, மதுவொழுகுகின்ற செவித்தாரினது தெய்வப் பரிமளத்தினாலே சோலைகளிலுள்ளமதுகரங்களெல்லாங் கரும்பட்டாற்போர்த்ததுபோல வந்து மொய்த்துத் தனிவழியே செல்கின்ற எனக்குத் துணையாகாநிற்கவும், காமன் தனது கன்னற் சிலையை வளைத்துக் கணைமாரி தொடுதெய்யவும், காலைவாய்ச் சோமன் கரந்தாழ்த்துத் தூரத்தினின்று தாழ்ச்சி செய்யவும், நங்கைமார்க்குப் பெருமை தருகின்ற நாணத்தைப் பின்னாக்கி, நல்ல எனது நெஞ்சமும், அந்த நெஞ்சு நிறைந்த அன்பும், அளவுகடந்த ஆதரமும் முன்னே யோடவும் நடந்து வந்து, வழியிலே சிந்திக்கிடக்கின்ற புஷ்பரேணுக்களாகிற புழுதியேறிப் படிந்த எனது சேவடியைச் சந்திரிகையினாலுருகிச் சந்திரகாந்தச் சிலையினின்றெழுந்து அரித்தோடுகின்ற உதகத்தினாலே கழுவி, தரளிகையைப் பார்த்து, 'தரளிகாய்! நம்மை இந்த நள்ளிரவினிடையே யிழுத்துவந்த மன்மதன் பெருமை பொருந்திய நங்கோமானையும் நமக்கு எதிர்முகமாக ஆனந்தமாய்த் தள்ளிக்கொண்டு வந்தாலோ——' என்று சிற்சில பரிஹாஸ வார்த்தைகளைப் பேசிச் சிரித்து விளையாடிக்கொண்டே வரும்போது, இத் தெண்ணீர்வாவியின் மேல்பக்கமாக நெடுந்தூரத்திலிருந்து வருவதோர் குரலானது எனது கடினமான செவியிலே பழுக்கக் காய்ந்த நாராசம்போலப் பாய்ந்து எனது மனத்தைப்

பெரிதுந் தபிக்கச் செய்தது. வந்த மொழியாலும் வலக்கண்ணினது துடிப்பாலும் நான் சிந்தை யழிந்து விரைந்தோடிச் சிறிது தூரஞ் சென்றவளவில் அந்த நெடுங்குரலானது ஓர் ஆண்குரலாய், அவ்வாண்குரலும் என் அப்பன் கபிஞ்சல முனிவனது ஈடுபட்டதோர் பெரிய பிரலாபக் குரலாயிருந்தது

கெட்டேன், விதியே! கெடுவாய்!! கெடுத்தாயே;
மட்டேர் கணைமதனு! வன்பாவி!! வாழ்ந்தாயே;
பட்டே கிடந்தனையே, பாவியேன் நண்பாவோ!
விட்டேன் இனிவாழ்வு! வேண்டேன்!! நான், வேண்டேனே!!!

திங்களும், மன்மதனும், தென்றலும்,மற்றெல்லீரும்
இங்கு முயன்றெண்ணும் எண்ணமெலாம் முற்றியதோ?
உங்கள்கண் இப்போது உறங்கியதோ? பாவிகாள்!
எங்கள் குடியை இறங்கவிட விட்டீரே!

வெந்ததே நெஞ்சம்! விழுந்ததிடி என்றலைமேல்!
உய்ந்தினி நண்பா! உனைப்பிரிந்து வாழேன்காண;
வந்ததுயர் காணுத மாச்சுவேதாய்! நீயும்
இந்தமறம் செய்யஇவன் என்னபிழை செய்தானே?

நேயமுடைச் சுவேத கேதுவே! நின்புதல்வன்
ஆயுவைவெங் காமன் அடப்பறித்துக் கொண்டான்காண்!
நீயிவை யொன்றும் அறிந்திலையே? நீடுளத்துள்
தீய கொடுவினையே! செய்வதினிச் சொல்லாயே.

சாற்று தவமே! தருமமே! சத்தியமே!
ஏற்றமுடன் நீங்களினி எங்கே ஒதுங்குவீர்?
நோற்ற கலைமகளே! நூல்வாங்கி விட்டனையே!!
போற்றியபொன் நாடே! பொலிவழிந்து போயினையே!

வன்னெஞ்சாய் என்னை மறந்தாய்; உனக்கிந்தக்
கன்னெஞ்சார் தந்தார்? கடைப்பிடியி னீயிறக்க
இன்னஞ்சா காதிருந்தேன்; என்னே! இரேன்காண்,
பின்னஞ்சா தேவருவேன்; பிணபார்த்துப் போகாயே.

ஆரோ டினிதிருப்பேன்? ஆரோ டினிமகிழ்வேன்?
ஆரோ டினிமனத்தில் அற்றதெலாஞ் சொல்லுவேன்?
ஆரோ துணையாவார்? ஐயோ! தமியேனுக்கு
ஆரோ இனித்தஞ்சம்? ஆற்றேன்! நான், ஆற்றேனே!!

உன்னைப் பிரிந்தும் உயிர்வாழ வல்லேனோ?
நின்னைத் தொடர வருகின்றேன் நிட்டோ!
என்னைப்பின் பாராமல் ஏகினையே! மாச்சுவேதை
தன்னைச் சிறிதும் நினைந்திலையே தக்கோனே!

என்று இவ்விவ்விதமாகப் பலவாறு கூட்டி மனங்கன்றி யிரங்கித் தபித்துத் தபித்துக் கதறுகின்ற அக்கபிஞ்சலனது குரலைக் கேட்டேன்; கேட்டதும், பிராணன்போய் வெற்றுடலாக ஒன்றும் அறியாமல் மனமுலைந்து வாய்விட்

டலறி, இம் மலரோடையின் கரையிலேயுள்ள செடிகொடிகள் நிறைந்த காட்டிலே எனது உத்தரீயங் கோலிவிழ, அதனையும் அறியாமல் ஓட்டமாக ஓடி, காட்டிலுள்ள மேடுபள்ளந் தெரியாமல் விழுந்தும் எழுந்தும் மிகத் தள்ளாடி, யாரோ சிலர் என்னைத் தூக்கிக் கொண்டுபோய் விட்டதுபோல நெடுந்தூரத்தை ஒரு நொடியளவில் நாடிக்கடந்து சென்று, அவனிருந்த அக்கொடிமண்டபத்தைக் கிட்டி, அங்கே ஒரு சந்திரகாந்தப் பாறையிலே நானாவிதமான மலர்களினாலே அமைக்கப்பட்டு அழகிய மன்மதனது மலர்க் கணையின் மயமான படுக்கையின்மேலே, தமியேன் வருகின்ற ஓசையை ஓர்த்துக்கேட்டுக்கொண்டு அசையாமற்கிடக்கின்றவனைப்போலவும், பொங்கிய காமமாகிய பெருங்கனல் தணிந்து துயில்கின்றவனைப் போலவும், என்னைப்புலந்தவனைப்போலவும், திருநுதலிலிட்ட சந்தனமும், மேனிமுழுதும் பூசிய கற்பூரமும், அழகிய செங்கையிலே தாமரைத்தண்டாற் செய்தணிந்த காப்பும், அத்தாமரை நூலாலேயே செய்த முப்புரிநூலும், விரிந்துள்ள வாழைக்குருத்தாலாகிய உயர்ந்த உத்தரீயமும் உடையனாய், சிறப்புற்று விளங்குகின்ற மன்மத சமாராதனைக்குரிய பெரியதோர் விரதத்தை மேற்கொண்டு அங்கே உறைபவனைப்போலவும், திகைப்புற்று அழுது நீர்வற்றிச் சிறிது இரத்தம் பாய்ந்ததுபோலச் சிவந்திட்டு, உள்ளே அதிகமாகச் செருகி, மிகச்சுவல்பமாக வெளியே தெரிகின்ற கண்ணிணையினாலே தீவினையேனாகிய என்னை நோக்கி, 'மன்மதனானவன் பெரும்பகைகொண்டு என்மீது பஞ்சபாணங்களையும் வருஷித்துப் போர்செய்யாநிற்க, நீ பார்த்திருந்தும் என்னைக் கைவிட்டகன்றனையே; பாவி! இளந்தென்றலானது வீசியடித்து என்னைத் துகைத்ததையும் நீ மனத்தால் நினைத்தனையோ? கடினமான ஹிருதயத்தையுடைய துரோகி!' என்று என்னை வெறுத்துரைப்பவனைப் போலவும், கொடிய மன்மதாவஸ்தை தாங்கமாட்டாமல் இதயத்தின் மீது வைத்த இடதுகையினாலே, 'ஏ, எனது ஆருயிர்க்காதலி! பிராணன்போன போதிலும் நீ என்னை விட்டுப் போகேல்' என்று என்மீது வைத்த பெரிய காதலினாலே தனது நெஞ்சகத்திலே யுறைகின்ற என்னைத் தடுப்பவனைப் போலவும், தணியாத கொடிய காமச்சுரமானது அடிக்கின்றதோ என்று தொட்டுப் பார்ப்பவனைப்போலவும், கண்டஸ்தலத்திலே யணிந்துள்ள கமல வளையங்களினாலே, கலையோடு கூடிய சந்திரனானவன் தனது கிரணங்களாகிற நீண்ட பாசங்களினாலே பிணித்திழுக்கப் பெற்றவனைப்போலவும், விதியிலியேனை என்னைக் கண்டதுஞ் சோகமுற்ற வெந்துயரமானது இருமடங்கு அதிகமாகப்பெற்று, இரண்டு கையையும் நீட்டிக் கதறியெழுந்து, தன் மெய்யில் வீழ்ந்து இறுகக்கட்டி யணைத்துக் கொண்டு கபிஞ்சலமுனிவன் வாய்விட்டுக் கதறாநிற்க, பகைவரை யழிக்கவல்ல பெருந்திறல் கொண்ட ஐராவதந் துயிலுமாறு போல, அரவிந்த தளங்களின் மத்தியிலே நீளக் கிடக்கின்ற மஹானுபாவனை மிகக் கீழான தௌர்ப்பாக்கியத்தையுடைய கொடும்பாவியான யான் கண்டேன்; கண்டதும், கண்ணிருண்டு மனமயங்கி அறிவிழந்து, அதப்பாதாளத்தில் வீழ்பவர்போல நான் எங்கேயோ என்னை

யறியாமல் அடியற்ற மரம்போல விம்மி வீழ்ந்தேன். அப்போது, நான் என்ன செய்தேனே? என்னென்னவெல்லாஞ் சொல்லிப் புலம்பினேனே? எனக்கு ஒன்றுந் தெரியாது. பூர்வஜன்மத்தில் நான் புரிந்திட்ட ஒப்பற்ற கோரமான கொடுவினையினலோ, பாவியேனுடைய நெஞ்சழுத்தத்தினலோ, 'இவ்வாறு இவள் பற்பல கொடுந்துயரங்களை யனுபவிக்கக் கடவள்' என்று அயன் அன்று என் தலையிலெழுதிய எழுத்தினலோ, வேறு எந்தப் பிரகாரத்தினலோ எனது பிராணன் போகவில்லை. பிராணன் போகவில்லை என்ற விஷயமுங்கூட அப்போது எனக்குத் தெரியாது. நெடுநேரஞ் சென்ற பின் சோர்வு தெளிந்து, ஏதோ கொஞ்சம் உணர்வுண்டாகப்பெற்றுத் தீயிலிட்ட புழுவைப்போல வெறுந்தரையிலே வீழ்ந்து புரண்டு இப்பாவியுடல் துடிதுடிப்பதைக் கண்டேன். கண்டபோதே, 'இன்னமும் நான் இறவாமல் இருந்தேனே?' என்று கருதி எனது முனிவர்பெருமானை எழுந்து நோக்கி,

பாவியேன்! பாவியேன்! புண்டரிக முனியே! பாதகமே செய்தாய்;
மேவியே வாழவெண்ணி நான்வரவும் அவமதித்து விட்டுப் போனய்;
தாவியே நீவெறுக்கத் தாழ்வேது செய்தேன்நான்? தாழ்வுண் டேனும்
ஆவியே அனையானே! அறக்கொடுமை செய்வர்களோ அறஞ்செய் வோரே?

கிளர்ந்தபகற் கடல்கடந்த வருத்தமெலாந் தரளிகையைக் கேட்டுப் பாரும்;
தளர்ந்தமொழிக் கபிஞ்சலனைக் கண்டதற்பின் சிறிதங்குத் தரித்தே னில்லை;
விளைந்தஇடர்க் கிடைவேனை வெறுப்பித்த பாவிகள்யார்? வீணே நானின்
றளைந்ததனித் துயர்பாரீர்; முனிவரரீர்! ஒருவார்த்தை அருளிச் செய்யீர்.

அடுத்தவரைக் கைவிடுத்தல் அழகோதான்? என்னுடைய ஆசை பாரீர்;
கடுத்துமதன் பரிபவித்த படிபாரீர்; நொந்தேன்நான் காணும்; பாவி
இடுக்கண் அறி வாரில்லை; என்னென்பார் ஈங்கில்லை; எனக்கு நீரே
தொடுத்ததுணை என்றிருந்தேன்; இப்படியே செய்தீரே தோன்ற லீரே.

அறக்கொடிய பிழைகாரி என்பதுநீர் அறியாமல் அடியேன் மீது
சிறப்புடைய பெருநேயம் வைத்தீர்; நான் இப்படிக்குத் தீங்கே செய்தேன்;
இறப்பதுவுஞ் செய்திலேன்; இருக்கின்றேன் இதுகண்டும்; என்னே! என்னே!
மறக்குடியோ நங்குடியும்? வாழ்ந்ததே காந்தருவர் மரபு தானே!

'அப்பொழுதே என்னருகே இருந்துவிடா தவமதிசெய் தகன்று போய்விட்
டிப்பொழுதோ இவைமொழிவாய்?' என்றேவொன் றியம்பாமல் இருக்கின் றீர்நீர்
அப்பொழுதும் உம்மானை அன்னைசிறைப் பட்டகன்றேன் அல்லா தேகேன்;
இப்பொழுதென் தனிபாரீர்; இடர்பாரீர்; இனியிரங்கீர் இறைவ னீரே.

இனியெனக்கோர் புகலில்லை; இனியெனக்கோர் துணையில்லை; என்னென் றுற்ற
இனியெனக்கோர் தந்தைதாய் என்பவரு மில்லை; இனி எல்லாம் நீரே;
இனியெனக்கு முன்பளித்த கருணையினைத் தோற்றுவீர்; 'இங்கேவா' என்று
இனியணைத்தென் இடர்களையீர்; இருடிகளும் முனிவர்களோ? எம்பி ரானே!

இந்தவனத் தெய்வதைகாள்! இறைஞ்சினேன், எங்கோவை எழுப்பித் தாரீர்;
அந்தமிலாய், கயிலாயா! ஆருமற்றேற் கருள்புரியாய்; அவனி மாதே!
வெந்துயர்கண் டிவ்வுயிரை மீட்டருளாய்; வாட்டமில்லா விதியே! நீதான்
சிந்தைமகிழ்ந் தினியிரங்காய்; தெய்வங்காள்! நானேதான் தியங்கு வேனே?

என்று இவ்வாறு புலம்பிய சொற்களை, ஐயோ! நான் ஏதென்று நினைப்பேன்? எவ்வளவென்று சொல்வேன்? பேய்பிடித்தாற்போலக் கனன்று கனன்று கதறி, மிகச் சொரிந்த கண்ணீரும், துன்றிய சோகமும், விரித்த தலையும், அதிகமாக அலைந்து துவண்ட துகிலும், தேகத்திலே பொருந்தியிராமல் கழன்றுவிழுகின்றபூணும், புழுதிமூடியசரீரமுமுடையவளாய்ப், பிரிவின்றி அவனது சரீரத்தோடு சரீரமாய் ஐக்கியப்படுதல் போல இறுகத் தழுவிக் கொண்டு, 'ஐயோ!' என்று அரற்றியும், முத்தாரத்தை நோக்கி, 'இவனது பிராணனைக் காப்பாற்ற மாட்டாமற் கைசோரவிட்டிட்ட பாவியன்றோ நீ' என்று சொல்லி வெறுத்தும், எனது கண்ணீர்த்தாரையானது ஓயாமல் வீழ்ந்து கொண்டேயிருக்கின்ற அவனது சரணயுகளங்களைப் பற்பலகாற் றழுவிக்கொண்டு பலமாகக் கூப்பிட்டும், சகிக்கமாட்டாமற் பற்பலகாற் கபிஞ்சலனுடைய திருவடிகளின்மேல்வீழ்ந்தும், 'பெரியோனே! இவனுயிரைப் பிழைப்பியாய்' என்று சொல்லி அழுதும், நான் மிகுந்த சோகாக்கினியினாலே வெந்தொழிந்தேன்." என்று சொன்னதும் மகாசுவேதையானவள் பூர்வங் கடந்துபோன அந்த அரிய துக்கமான நிலைமையை யடைந்து மோகமுற்றயர்ந்து கீழே வீழ்ந்தாள். அப்போது, சந்திராபீடன் பெரிய துயரத்தோடு சென்றெடுத்தணைத்துக் கண்ணீர் வார்தலினாலே நனைந்து போன அவளது உத்தரீயத்தின் தலைப்பாலே வீசிவீசிச் சுவாசம் வருகிற வரையில் தேற்றி, உணர்வு வந்தவுடன் அவளை உற்றுநோக்கி, 'இவ்வளவு துக்கங்களும் என்னாலேயன்றோ நீர் அனுபவிக்க நேர்ந்தது. நெடுநாளைக்கு முன் நடந்துபோன தொரு செய்தியைப் பாவிநான் ஏன் நினைப்பித்தேன்? இனி இந்த வார்த்தையை விடும், விடும், போதும்; அம்ம! இது சொல்லக் கூடியதில்லை; சொன்னாலும் அதைக் கிரகிக்க எனக்கு மனமில்லை; எனது உணர்வெல்லாம் அடியோடே அழிந்துவிட்டது; இனி என்னாற் கேட்கவும் ஒண்ணாது. மேலும், சொல்லிய இக்கஷ்டங்களுக்கெல்லாம் எப்படியோ தப்பிப் பிழைத்த உம்மை, இவ்விர்த்தாந்தத்தை மீளவுஞ் சொல்லச் சொல்லி நான் இப்போது இழந்துவிடுவது நியாயமோ?' என்று சொன்னான். என்று சந்திராபீடன் சொன்னகாலையில், மகாசுவேதை மீண்டும் எரியெழுமாறு நெட்டுயிர்ப் பெறிந்து, 'இறைவா! அன்றுண்டான கொடுந்துயரிலே அழியாத பிராணனா இன்று அழிந்துவிடப்போகிறது? பயங்கரனான கொடிய யமனும் இந்தப் பாவியின் பேரைக்கேட்டால் மனம்வெருவி ஓட்டம் பிடிப்பான். சிறந்த தபோதனனைக் கொன்ற அதிகடினமான இந்த நெஞ்சம் இதற்கெல்லாங் கூச்சமுறுமோ? இதனினும் வேறாகக் கூற ஒண்ணாத சில விருத்தாந்தங்களுமுண்டோ? இதுநிற்க. எனக்கு இவ் விபத்து வந்து விளைந்த பின்னரும், பயனில்லாத இவ் வுடம்பை நான் இவ்வாறு சுமந்து உழல்வதற்குக் காரணமா யேற்பட்டதோர் புதுமையுண்டு; அதனையும் நீ கேட்பாயாக. பெரிதாகிய வெந்துயர்க்கடலிலே முழுகி உயிரழியுங் காலையில் நான் தரளிகையின் முகத்தை நோக்கி, 'ஆயிழாய்! இவ்வித அனர்த்தம் வந்து ஸம்பவித்த பின்னரும் நாம கேவலம் க்ஷுத்ர ஜனங்களைப்போல

இரண்டுகூறா லழுதுவிட்டுத் திரும்பிப்போவது தகாது. நான் அநுமரணஞ் செய்யவேவேண்டும். அதற்காக என்னைவேண்டி நீ சீக்கிரமாகச் சிதையை அடுக்கு' என்று சொல்லிக்கொண் டிருக்குமளவில், சந்திர மண்டலத்தினின்று மிறங்கி, விண்ணிடை வருகின்ற வேகத்தினாலே தோளிலே யணிந்த உத்தரீயமானது பறந்து வயங்கவும், சென்னிமேனிமிர்ந்த ரத்ன மகுடம் ஒளிசெய்யவும், குழைமேல் விளங்குங் குண்டலங்கள் வில்வீசவும், தோள்வளை சிலம்பவும், மார்பிலே யணிந்துள்ள முத்தாரந் துவண்டு அசையவும், வெண்குமுத மலராலாகிய கன்னபூரஞ் செவியினின் றிலங்கவும், திருமால் ஓங்கியளந்த உலகெல்லாம் முத்தம்பரவியதுபோலத் தனது திருமேனியின் திவ்ய காந்தியைப் பரப்பிக்கொண்டு, மன்மதனையுந் தன் வடிவில் ஏகதேசமாய் மறையும்படி செய்யவல்ல சுந்தரமான தெய்வவடிவத்தையுடைய ஒரு வீரன் விரைவாக மேதினியை வந்தணுகி, அந்தரத்திலிருந்தபடியே தனது இரண்டு கைகளையும் நீட்டி, இங்ஙனம் என்று கண்முன்பாக இறந்துகிடந்த அம்முனிவனைத் தூக்கியெடுத்துக்கொண்டு, ஆகாயத்திமேல் நின்று, என்னை நோக்கி, 'ஏ, வரமகளே! மகாசுவேதாய்! நீ வீணாக மனம்வருந்திப் பிராண பரித்யாகஞ் செய்யவேண்டாம். இந்த நெடுந்தவனான புண்டரீகனோடுமேல் உனக்குச் சிறப்பாக மணம் நிகழும்' என்று என் பிதா சொல்வதுபோல அன்போடு மொழிந்து ககனமார்க்கத்திற் சென்றான்.

அவ்வார்த்தையைக்கேட்டுநான் அதிக அச்சமும் அதிசயமும் ஆதரமும் எய்தி, விரைந்துபோய்க் கபிஞ்சலனைப் பார்த்து, 'ஈது என்ன?' என்று கேட்க, அவன் அதற்கு ஒன்றும் உத்தரஞ் சொல்லாமலே சடிதியில் எழுந்திருந்து, பெருஞ்சினமுற்று, அண்ணாந்து பார்த்து, உத்தரீயத்தை நன்றாக வரிந்து கட்டிக் கொண்டு, ஆகாசத்திமேல தாவியெழுந்து, 'எனது மித்திர சிகாமணியை எடுத்துக்கொண்டகன்ற துஷ்டன் யாரடா? யாரடா?' என்று அவனைப் பின்தொடரச் சென்றான்; இவ்விதம் இவ் விருவோர்களும்பேதையேன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஒளிமிக்க நக்ஷத்திர கணங்களின் நடுவே புகுந்து மறைந்துவிட்டார்கள். அப்போது, நான் தன்னந்தனியளாய் மனத்தைரியமிழந்து தரளிகையைப் பார்த்து, 'இதெல்லாம் இன்னதென்று உனக்குச் சொல்லத்தெரியுமோ?' என்றேன். என்றபோது, அவளும் நான் பிராணனை விட்டுவிடுவேனோ என்ற பயத்தினாலே மதிமயங்கி, யொன்றுமே யறியாமல், பேயடிப்புண்டவர்போல நடுக்கமுற்றுப் பெருமூச்செறிந்து சொல்வதானாள்:—'தாயே! எனக்கு ஒன்றுமேதெரியவில்லை; ஆகிலும், ஒன்றுமாத்திரம் நான் சொல்வேன்; இதுவோ இதுவரை உலகத்திலில்லாத புதுமையாக இருக்கின்றது. 'நீ பிராண பரித்தியாகஞ் செய்யவேண்டாம்' என்று பகிரங்கமாக அத்தேவன் உன்னைத் தேற்றியருளினான் இத்தகைய மஹான்களுடைய வாக்கியம் கனவிலும பொய்பாகாது. இதிற் சிறிதும் ஐயமில்லை; என் மனத்திற்கேற்க இது நம்பிக்கையாகவே தோற்றுகிறது. இதைநீ தீர்மானமாகவிசாரியாமற் பிராணனை விட்டுவிடத் துணிவது நியாயமன்று. கபிஞ்சல முனிவனுங் கூடவே போயிருக்கிறான். அத்தபோ

தனன் இதனை யெவ்விதமாயாவது இங்கே விசாரித்தறிந்துவந்து நமக்குச் சொல்லாமல் இருக்கமாட்டான். அவன் வந்தவுடனே, 'அந்த வானவன் யார்? இறந்தவனை யெடுத்துச் செல்லக் காரணம் என்ன? உனது முகத்தை நோக்கி, 'பிராணனைத் தரித்துக்கொண்டிரு; பின்னரும் இவனைக் கொழுநனாய்த் தழுவுவை' என்று சொன்னவிதம் யாது?' என்று இவற்றையெல்லாங் கேட்டு, அதற்குமேல் அவன் சொல்லும் உத்தரத்திற்குத் தக்கபடி இருப்பதோ, இறப்பதோ ஒன்றைத் துணிந்திடுதல் உத்தமம். சாவது ஒரு பிரமாதமான காரியமில்லை; எப்போது வேண்டுமானாலும் லேசாகச் செய்துகொள்ளலாம். இப்போது நீ கொஞ்சம் பொறுத்துக்கொண்டிரு' என்று தன்னால் ஆனவரையிற் சொல்லி எனது காலைக் கட்டிக்கொண் டழுதாள். பிராணனைக் காப்பாற்றும் விஷயத்தில் யாருக்குத்தான் பிரியமிராது? நான் எனது ஆருயிர்மேலுள்ள ஆசையினாலும், கபிஞ்சல முனிவன் வருவான் என்ற நம்பிக்கையினாலும், தரளிகையின் வாக்கியத்திலேயுள்ள விசுவாசத்தினாலும் இதுவே இனிக் கர்த்தவ்யமென்று நிச்சயித்துப் பிராணனை யிழக்கும அபிப்பிராயத்தை விட்டு, பெரிய நூறுயிரம் ஊழிபோலத் திரண்ட பாழான அந்தக் காளராத்திரியை எனது ஆருயிர்த்தோழியாகிய தரளிகையுடனே அலறியும் வீழ்ந்தும் புல்லிய புவியின்மேற்கிடந்துருண்டும் புழுதியிற் புரண்டும் அவலச்சுழியையுடைய யான் ஒருவாறு போக்கினேன். அழுதழுது மெலிந்த குரலும், எப்புறமும் அலைந்து வீழ்ந்த கூந்தலும், புழுதி படிந்த உடம்பு முடையவளாய்ப் பொழுது புலர்ந்ததும் எழுந்திருந்து, இப் பொய்கையிலே இறங்கி ஸ்நானஞ் செய்து, எனது பிராண நாதனது கரகமலத்திலிருந்த ஜபவடத்தோடு அழகிய அவரது மரவுரியையும், கமண்டலத்தையும் நான் கிரகித்துக்கொண்டு தவம்புரியத்தொடங்கி, மாதாபிதாக்களையும் பொருட்டாக மதியாமல், சுற்றத்தார்களையுந் தோழிமார்களையுஞ் சிந்தையான் மறந்து, விஷயத்திலே மண்டித் திரிந்து தியங்கிய மனத்தையும் எனது சுவாதீனமாகத் திருப்பி, கட்டுக்கடங்காமல் முன்னம் சுவேச்சையாக ஓடிய ஐம்புலன்களையு மடக்கி, பிரமசரிய விரதத்தை மேற்கொண்டு, அகில ஜகத் பிதாவாய், தீனதயாளுவாய் விளங்கும் மஹேசுவரனைச் சரணமாக அடைந்தேன். அதன் மறுநாள், நிகழ்ந்த இப் புதுமையையெல்லாம் ஏதோ ஒரு விதமாகக் கேள்விப்பட்டு எனது மாதாவுஞ் சுற்றி வாழ்கின்ற பரிஜன சகிதமாக இங்கே வந்து, என்னைச் சூழ்ந்து பற்றிக்கொண்டு, நெடுநேரம் வரையில் தேம்பித் தேம்பி யலறி, சொல்லக்கூடிய புத்திமதிகளையெல்லாஞ் சொல்லி, என்னை வெகுவாகப் பிரார்த்தித்து, 'அம்மா! பட்டது எழுமைக்கும் போதும்; இத்துக்கத்தை இவ்வளவோடு விடு' என்று சொன்னாள். பிதாவும் இவ்வாறு என்னை வருந்தியழைக்கவும் நான் அவர்களது சொல்லைக் கேளாமல் இகழ்ந்து மறுத்திட்டேன்; மறுத்தேனாயினும், என் மீது வைத்த ஆசாபாசத்தினாலே தளையுண்டு, எனது பிதாவான ஹம்ஸன் பற்பல நாள் இங்கேயே யிருந்து, தமியேனுடைய அத்யவஸாயத்தைக் கண்டு, 'இது ஒன்றினாலுந் திருப்ப ஒண்ணாது' என்று சிக்கெனத் தெரிந்து

நிராசையாய் என்னைக் கைவிட்டு, நொந்து வேதனைப்படு மனத்தையுடைய னாய்ச் சுற்றத்தார்களோடுந் திரும்பித் தனது அரமனை போய்ச்சேர்ந்தான். தாதை இவ்வாறு அகன்றுபோனபின்னர், எனது கண்ணீர்த்தாரை மாத் திரத்தினாலே அப் பிதாவினிடத்தில் எனக்குள்ள மிகுந்த விசுவாசத்தைக் காட்டி, மெய்த்தவச் செல்வத்தையுடைய அம் முனிகுமாரன்மேல் வைத்த ஆதரத்தோடு கூடிய அனுராகத்தினாலே பீடிக்கப்பட்டவளாய், பற்பல துக்கங்களுக் கிடமாகிய இப் பாதகக் குரம்பையைச் சாஸ்திரோக்தமான பற்பல விரதானுஷ்டானங்களினாலே யுலர்த்தி, காய் கனி கிழங்கு சருகு முதலியவற்றையுந் தீர்த்தத்தையுமே மனமுவந்த ஆகாரமாய்க்கொண்டு, இப் பொய்கையிலேயே திரிகாலமும் ஸ்நானஞ் செய்து, ஈசனைய்த் தேசுலா மணியாய்விளங்கும் சந்திரசேகரனை வந்தித்து ஆராதனஞ்செய்துகொண்டு, இன்னுயிர்ப்பாங்கியாகிய தரளிகையோடு நாடோறும் மணங்கமழும் இப் பூஞ்சோலையில் இந்தக் குகையிலேயே நான் மனம் மெலிந்து வலித்துக் கொண்டிருக்கின்றேன். இப்படி மஹாபாபியாய், சிநேகதர்மத்தைச் சிறிது மறியாதவளாய், நிஷ்பிரயோஜனமாய்ப் பிறந்த குணக்கேடியாய், நட்பு மறந்து, பிரமஹத்தி செய்திருந்த கொடிய பாபகாரிணியை, 'உத்தம குணத்தோய்! நீ என்ன கேட்கவேண்டியிருக்கின்றது?' என்று சொல்லி வாய்விட்டழுதாள். பெரிய பிரதாபத்தையுடைய அச் சந்திராபீடனும் அவளது ஒப்புயர்வற்ற சாந்ததையையும், அரிய தவவிரதத்தையும், ஸௌ லப்ய குணத்தையும், வாய்மையையும், செய்ந்நன்றி யறிதலையும், ஞானத் தையும், சீலத்தையும், அருளுடைமையையுங்கண்டு அவள்மீது இன்னருள் கூர்ந்து நெஞ்சிளகி, 'பயனறி தவத்தோய்! நான் சொல்வ தொன்றைக் கேளாய்' என்று அவளைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்வானாயினன்:—

'உலகமானது இது துக்கம், இது ஸுகம் என்று அறியாது; ஒருவர் செய்த உபகாரத்தையும் அறியாது; நிலையான சிறந்த பேரின்பத்திலே விருப்பம் வையாது; இறந்தவர்களுக் குதவியான கர்மங்கள் பலவற்றையும் விசுவாசத்தோடு செய்வதற்குச் சோம்பி, யொரு பயனுமில்லாமல் அழுது விட்டுப் போய்விடும்; கணக்கில்லாத பெரிய தவத்தையுடையோய்! நீயோ அப்படிப்பட்ட தன்மையையுடையவ ளல்லள். நிஜமான அன்பு மாத்திரம் ஒருவருக்கு இருப்பின் அதனாற் செய்யப்படாத காரியமும் ஒன்றுண்டோ? நீ முனிகுமாரனை அப் புண்டரீகன் காரணமாகத் தாய்தந்தையர்களையும் நெருங்கிய எல்லாப் பந்து ஜனங்களையுந் துறந்து, பாரின்மீது இந்திர போகத்தையொத்த சகல ஸாம்ராஜ்யத்தையுங் கைவிட்டு, மலரினு மெல்லி தாகிய ஸௌகுமார்யத்தையுடைய இந்த அழகிய மேனியையுந் தவத்தினால் வருத்தித் தனியே இந்த நெடிய கானகத்திலே யிருந்துவிட்டாய். இன்ன மும் ஒன்றுண்டு. இங்ஙனம் அரும்பெருந் தவத்தைச் செய்திடாநிற்க, பற்பல கொடிய துக்கங்களினாலே மனத்தை யிவ்வாறு வருத்தமுறச் செய் தல் தகாது. தமது மிகுந்த அன்புக்கு விஷயமானவர்கள் இறக்கத்தாமு மவர்களோடு கூடவே யிறந்துவிடுத லென்பது தூயவர்களான விவேகிகள்

செய்யுங் காரிய மில்லை. நினைக்கரிய துக்காதிசயத்தினாலே சிந்தை மயங்கிய மூர்க்கஜனங்களே இத் தகைய காரியத்தைச் செய்வார்கள். அனுமரணஞ் செய்தல், செத்தார்க்கு உபகாரமாமென்றோ? இறந்தவர் பிழைக்கவோ? தாம்போய் அவரைக்கண்டு களிக்கவோ? அன்றித் தமக்குச் செல்கதி யாகவோ? வேறு எது கருதியோ? தெரியவில்லை. அவரவரும் வந்த தத்தம் விதிவசப்படியே போவர்கள். அதையறியாது வலியத்தங்கள் பிராணனை விடுபவர்களெல்லாம் மிகக்கொடிய பாதகமாகிய ஆத்மஹத்தி செய்பவர்கள் என்று யாவராலும் நிந்திக்கப்பெற்றுப் பிராயச்சித்தமில்லாத பெரிய பாவத்தையே பெறுவார்கள். இறவாமல் இருந்தவர்களோவெனில், பிண்டோதகக் கிரியையினால் இறந்தவர்களையும் ஈடேற்றி, அருந்தவம் முயன்று தாமும் ஈடேறி, உத்தமமான பதவியைப்பெற்று அழகாக விளங்குவார்கள். உலகத்திலே தெளிவான சித்தவிருத்தியோடு கூடினவர்களெல்லாம் இறவாமல இருந்தார்களே யொழிய இறந்துவிடவில்லை. ஈருடலுக்கு ஒருயிராய்ப் பொருந்திய ரதிதேவியானவள் காமன் வெந்து விழக்கண்டும் துக்கத்தைப் பொறுத்துக் கொண்டு இறவாமல் இருந்துவிடவில்லையோ? மானுருவங் கொண்ட கிந்தமர் என்னும் முனிவரது சாபத்தினாலே மன்னர்கோனான பாண்டுமாண்டுபோனபோது குந்திதேவி மரித்திடாதிருந்ததும், விறன்மிக்க வாளாயுதத்தை யுடையவனும், ஒப்பரிய பெரிய பராக்கிரமத்தை யுடைய வீரனுமான அபிமன்யுவோடு விராடராஜபுத்திரியான உத்தரை மடிந்திடாதிருந்ததும், சிந்துதேசாதிபதியான ஜயத்ரரதன் அர்ச்சுனனாற் கொல்லப் பட்டிறந்தபோது திருதராஷ்டிரனது தனையையான துச்சளை மாய்ந்திடா திருந்ததும், இவர்முதலாக எத்தனையோபேர் தங்கள் கேள்வருடன் பொன்னுலகேகாமற் புவியிலிருந்ததும் நீ கேட்டறியாததோ? மேலும் நான் உனக்குச் சொல்வதொன்றுண்டு. அம் முனிவரன் இறந்துபோன விஷயமே சங்கையாக இருக்கும்போது, அவன் பொருட்டு உயிரையிழப்பது தகாது. 'முனிவனோடு உனக்கு இன்னமும் ஸமாகமம் உண்டாகும்' என்ற மொழித்திறமும் நீ கேட்டிருக்கின்றாயல்லவா? இறந்தவனை யெடுத்துக்கொண்டு அவன் பொன்னுலகிற் போனதும் பிழைப்பிக்கும் நிமித்தமேயன்றி வேறுண்டோ? கந்தர்வராஜனான விசுவாவசு என்பவனுக்கு மேனகையிடம் பிறந்த ப்ரமத்வரை யென்பவள் பாம்புகடித்திறந்தபோது, ஸ்தூலகேசருடைய ஆச்ரமத்தில், பிருகு மஹரிஷியினது புத்திரரான சவனருக்குக் கொட்போனும் பிரமதி என்பவரது புதல்வனுமாகிய ருரு என்னும் மறைமுனிவன் தனது ஆயுளிற் பாதியை யவளுக்குக்கொடுத்துப் பிழைப்பிக்கவில்லையோ? பாண்டவகுலத்தை அடியோடு தொலைத்துவிடவேண்டுமென்றுகருதித் துரோணாசாரியரது புத்திரனான அசுவத்தாமாவினால் விடப்பட்ட பிர்ம்மசிரிஷமென்ற கணையினாலே சுடப்பட்டுக் கருப்பத்தினின்று மிறந்து வீழ்ந்த பரிக்ஷித்து வேந்தனை, அவனது அன்னையான உத்தரைபட்ட துக்கத்தைக் காணமாட்டாமற் கருணை கூர்ந்து எனது குலதெய்வமாகிய ஸ்ரீவாஸுதேவன் எழுப்பியருளவில்லையோ? வீரலக்ஷ்மி விரும்பியமர்கின்ற உச்சயினிமா நகரத்தில்

பிராமணோத்தமரான சாந்தீபனியின் குமாரனை முன் அந்த யாதவர்கோனான மாதவன் யமபுரத்தினின்றும் அழைத்தருளிய அதிசயத்தை அறியாதார் யார்? இப்படியாக, இறந்து பிழைத்தவர்கள் அநேகர். இவ்வாறு உனக்கும் ஸம்பவிக்கும். மனவருத்தத்தை ஒழி' என்று அநேக விஷயங்களையெல்லாம் மனந்தெளியச் சொல்லி அவளைத் தேறுதல் செய்து, நீர்கொணர்ந்து முகங் கழுவுவித்து அவளது பெருந்துயரத்தை யாற்றினான். அப்போது, அழகிய பூங்கொடியைப்போன்ற அம் மகாசுவேதையடைந்த பெரிய துன்பத்தைக் கேட்டுச் சகிக்கமாட்டாமல் தனது எழில்மிக்க முகத்தைச் சாய்த்தனன் போல ஏழ்பரித்தேரோனான சூரியன் மேல்கடலிலே விழுந்து மறைந்தான். அச் சேயிழை மடந்தையுஞ் சாயங்கால நியமங்களை யெல்லாஞ் செய்து முடித்து, மிகக்கொடிய துயரத்தோடு நெடுநேரமிருந்து நெட்டுயிர்ப்பெறிந்த படியே அயர்ந்து தனது வற்கலாசயனத்தின்மேற் சாய்ந்தாள். வீறுமிக்க அச் சந்திராபீடனும் நியமங்களைச் செய்துமுடித்து, அதற்கு அருகாக வுள்ள ஒரு பாறையிலே நிறைந்த தளிர்களினாலே ஒரு பாயலைச் செய்து கொண்டு அதன்மீது உட்கார்ந்திருந்து, மனத்தினாலே மகாசுவேதையினது மிகுந்த துக்கத்தையெல்லாம் அனுபவித்து, 'உலகத்திலே அனங்கனது ஆணையே ஆணை! அவனது பராக்கிரமமே பராக்கிரமம்!' என்று தன்னுள் வியந்து, மீளவும் அம் மஹாசுவேதையை நோக்கி, 'மாதவகொடியே! உன்னோடு கூட இவ் வனத்திலேயே தங்கியிருந்து, ஸமமாக நினது துக்கத்தைப் பகிர்ந்தனுபவிக்கின்றவளும், உன் அருளைப் பெற்றவளுமான இன்னுயிர்த் தோழியாகிய அப் பூங்குழற் றரளிகை யெங்கே?' என்று கேட்க, அவளும் அவனை ஆதரத்தோடு நோக்கி, "அண்ணலே! முன்னம் நான் சொன்ன அந்தச் சீதளமான அமிர்தத்திலே பிறந்த தெய்வமங்கையரது குலத்தில், உத்தமகுணங்களனைத்தையும் ஒருங்கே நிறையப்பெற்ற மதிரை யென்ற நேரிழை யொருத்தி தோன்றினாள். அவளை, சிறந்த கந்தர்வ சக்கரவர்த்தி யான சித்திரரதன் என்பவன் மணம்புரிந்து, அவளையே அறந்திறம்பாது தனது அந்தப்புரத்தவர்க் கெல்லாந் தலைவியாக்கிக் கணமும் இணைபிரியாமல், அல்லும் பகலும் அவளோடு கூடவேயிருந்து, உடலும் உயிரும் போல அந்நியோன்யமாய் மனமொத்து வாழ்ந்துவந்தான். இவ்வாறு இவ்விருவரும் இன்புற்று வாழுங்காலத்து, இவர்கள்பால் இந்த மூன்று லோகத்தவர்களுக்கும் மனோகரப்பொருளாய், எல்லா நற்குணங்களும் பூரணமாய்மைந்து, உவமையற்றுயர்ந்த காதம்பரி என்னும் பெயர்பூண்ட ஒரு ஒண்டொடிப் பொற்கொடி வடிவமாய், நவமணிவரிசையிற் சேர்த்தெண்ணப் படாததோர் நவமணியானது ஞாலமேல்வந்து தோன்றிற்று. இந்தப் பெண்மணி பிறந்தநாள்முதலாக, நானும் இவளும் ஒருவரையொருவர் ஒரு கூட விட்டுப் பிரியாமல், எப்போதும் ஒன்று சேர்ந்து விளையாடி, நித்திரை ஊண் நடை இருத்தல் என்னும் இவற்றிலுங்கூடச் சிறிதும் வித்தியாசமின்றி, பாடல் ஆடல் முதலிய எல்லாவிதக்கலைகளையும் ஒருங்கிருந்து பயின்று, இரண்டுடலுக்கு ஒருயிர்போலச் சிறந்து விளங்கினோம். எனக்கு இவ்வித

மான அனர்த்தம் வந்து ஸம்பவித்தபின்னர், இவள் என்மீது வைத்துள்ள உழுவலன்பினுலே, இவ் விபத்தெல்லாந் தனக்கே விளைந்ததுபோலப் பேரிடர் கூர்ந்து, தனது பெரிய பாங்கிமார்கள் முன்பாக மிக்க மனவருத்தத்தோடு, 'என் இன்னுயிரான மகாசுவேதை வருந்த, நான் விவாகத்திற்கு உட்படுவதோ? என்னிடம் இனிக்கலியாணம் என்ற பேச்சை யாராவது எடுப்பார்களாயின் நான் பெருஞ்சினங்கொண்டு உயிர் செகுப்பேன்' என்று ஓர் கொடிய சபதத்தைச் செய்தாள். இச்செய்திகேட்ட மன்னனுன சித்ரரதன் இவள் தனக்கு ஏகபுத்திரியாக இருக்கின்றதனுலே, நெருங்கி ஒரு வார்த்தை சொல்லவும் மாட்டாமல், சிறந்த தனது பட்டமஹிஷியுந் தானுமாக யோஜித்து, இதுவே இனிச் செய்யத்தக்கதென் றெண்ணித் தீவினையேனுகிய என்னிடம், முழுதுங் கற்றுணர்ந்தவனுன க்ஷீரோதன் என்னும் பெயரையுடைய கஞ்சுகி யொருவனை, 'நம் குலமகளே! அருள் மிக்க மகாசுவேதாய்! உன்னுடைய துக்கத்தைக்கண்டு சகிக்கமாட்டாமல் நானும் துக்கித்துக்கொண்டிருக்கின்ற எங்களை இக்காதம்பரியும் இவ்வாறு துக்கப்படுத்துகின்றுள். இந்த மங்கையை நீதான் நற்புத்திகள்சொல்லித் திருத்த வேண்டும். உன்னைத்தவிர்த்து இவளுக்குச் சொல்லக் கூடியவர்கள் வேறு இங்கு ஒருவருமில்லை. எங்களுக்கு நீயே இனித் தஞ்சம்' என்று சொல்லி அருணோதயகாலத்தில் இங்கே யனுப்பினுர்கள். நான் அப்பெரியோர்கள் சொல்லிவிடுத்ததையெல்லாங் கேட்டு மனமிகவருந்திச் சமயோசிதமாகச் சொல்லவல்ல தரளிகையை அக்ஷீரோதனுடன் கூட்டி, 'தோழி, காதம்பரி! நான் சொல்வதைக்கேள்: நான் பட்டதுக்கம் போதாமல் நீயும் இவ்வாறு கொடுந்துயர் விளைப்பது நன்ருே? நான் இன்னஞ் சிறிதுகாலம் உயிரோடிருக்கவேண்டின் தாய்தந்தையர் சொன்னதையே கேள்' என்று உற்ற செய்தியைச் சொல்லி யனுப்பினேன். அனுப்பியகையோடு நீயும் வந்துசேர்ந்தாய்'' என்று சொல்லி, மற்றென்று முரையாமல் அப்படியே கண்ணயர்ந்தாள். அவள் துயின்றதை யறிந்து சந்திராபீடனுந் தன் பல்லவசயனத்திற் சாய்ந்து, 'ஐயோ! என் தோழனுன வைசம்பாயனன் என்னென்ன நினைக்கின்ருனே? தவிர, அப் பைந்தொடிப் பாவையான பத்திரலேகை என்னைப் பிரிந்து எப்படி யாற்றுவாள்? அரசர்களெல்லாம் எனது வருகையை எதிர் பார்த்து நின்று வருந்துவார்களே.' என்று இப்படி யெல்லாஞ் சிந்தித்துக் கொண்டே தூங்கிவிட்டான்.

அக் கங்குற்போது கழிந்ததும், அரிய தவத்தையுடைய மகாசுவேதை யெழுந்திருந்து நியமங்களைச் செவ்விதாகச் செய்து முடித்துவிட்டு ஜபத்தி லுட்கார்ந்தாள். சந்திராபீடனும் கர்மானுஷ்டானங்களையெல்லாம் வழுவின்றிச் செய்துவிட்டு ஓரிடத்தில் வீற்றிருந்தான். அப்போது, நீங்காத பேரன்பு பூண்டொழுகுந் தரளிகை யென்னும் பாங்கியானவள், சிறந்த ரத்னங்களினுற் செய்யப்பெற்ற குழை கேயூரம் ஆபரண முதலியவற்றையும், ஒளிவீசும் முத்தாரத்தையும், வரிந்துகட்டிய கச்சையையுமுடைய கேயூரகன் என்னும் பெயரையுடைய வீரனெருவன் தன்பின்னே யடுத்துவர முற்

பட வந்து, ஜபத்திலிருந்த அழகிய மயில்போன்ற அம் மகாசுவேதையி னது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அடக்க வொடுக்கத்துடன் அவளது பின்பக்கத்திலே யுரிமையோடு போய் உட்கார்ந்தாள் அழகு விளங்கும் யாழ்வல்லோனுகிய அக்கேயூரகனும் நின்றவண்ணமாக அவளைப் பன்முறை வாயாரத் துதித்து, தூரத்திலேநின்று தொழுது, சமீபத்தில் வந்து, மகா சுவேதை தனது கண்ணுற் சுட்டிக்காட்டிய ரமணீயமானதொரு சிலாதலத் திலே நன்றாக உட்கார்ந்தபின்னர், வாகைசூடிய அச் சந்திராபீடனைப் பன் முறை உற்றுற்றுப்பார்த்து, 'தேவர்கள் அசுரர் வித்யாதரர்கள் என்கின்ற தெய்வவர்க்கத்திலே எவரும் இவனுக் கிணையாகார்; காமன் என்கின்ற அவ னும் நிகராகமாட்டான்; இக்காவலன் யாரோ தெரியவில்லை; இந்தத் திவ்ய ரூபலாவண்யம் பூலோகவாசிகளான மனிதருக்கு ஒருபோதும் உண்டாவ தன்று' என்று தன்னுள்ளே வியந்துகொண்டிருந்தான். தவம்புரியும் அத் தையலும் ஜபம் முடிந்ததுந் தரளிகையை நோக்கி, 'மின்னிடையாளான காதம்பரியை நீ கண்டாயோ? அத் தூயவள் சுகமோ? நீ போய்ச் சொன் னதைக் கேட்டாளோ? கேட்டு, எனக்கு உயிர்வரும்படி என்ன உத்தரஞ் சொன்னுள்?' என்று கேட்க, உட்கார்ந்திருந்த அத் தரளிகை உடனே எழுந்து நின்று, 'தேவீ! நீ மொழிந்தனவற்றையெல்லாம் நான் ஒன்றுவிடா மற் சென்று மொழிய, அப்பூவை நல்லாள் கேட்டு நெடுநேரம்வரை அழுது, மனம் நொந்து, குற்றமற்ற தனது வீணையைத் தாங்கும் இம் மைந்தனிடத் தில் உற்ற செய்திகளையெல்லாஞ் சொல்லி வரவிடுத்தாள்' என்றுரைத்து விட்டுட்கார்ந்தாள். அவள் உட்கார்ந்ததும், கேயூரகன் எழுந்துநின்றிறை ஞ்சி, "தாயே! உனது ஆருயிர்த் தோழியாய்ப் பொருந்திய எமது பிராட்டி யாகிய காதம்பரி பிரதமம் நின்னை நன்றாக ஆலிங்கனஞ்செய்துகொண்டே னென்று சொல்லி, வருத்தமுற்று நொந்து, மனமறுகி யிரங்கிப் பின்னுஞ் சிற்சில வார்த்தைகளைச் சொன்னுள். திருந்திய ஆணித்திறமான அவ்வார்த் தைகளையெல்லாஞ் சொல்லுகிறேன் கேளாய்: 'தரளிகை முகமாகத் தாம் சொல்லியனுப்பிய இந்த மாற்றமெல்லாம் எனது பெற்றோர்களான பெரி யோர்களது நியமனத்தை மறுத்தற்கஞ்சிச் சொல்லிய விதமோ? அன்றி, அதிகமான தீவினையைச் செய்துள்ள அடியேனுடைய ஹிருதயத்தைச் சோதித்த வண்ணமோ? இன்றேல், மருவிய நமது நேசபாசத்தை மாற்றிட வேண்டியோ? த[illegible] ,'நான் வனத்திலே வஸிக்கத் தான் உயர்ந்த ராஜ மாளிகையில் வஸிக்கின்றுளல்லவா' என்று கருதி யிகழ்ந்துரைத்த பிர காரமோ? நேசமே நிறைந்துள்ள எனது நெஞ்சின் நற்பரிவைத் தாமறியாத வரல்ல. இப்படியிருக்க, இப்படிப்பட்ட கோபமான கொடுமை வார்த்தை களையெல்லாஞ் சொல்லிவிட்டதுதான் ஏனோ? நாயகனை சூரியன் மேல் கடலில் வீழ்ந்து மறைந்த விரகவேதனையை யாற்றமாட்டாமல் அழகழிந்து அவசமாகித் தளருஞ் சிறந்த தாமரைப்பொய்கையின் தன்மையைக் கண்டு, அவ் வாவியில் வாழும் நன்னிறமுடைய அசேதனங்களான சக்கரவாக பக்ஷி கள் கூடத் தமது நாயகரோடு கூடிக்களிக்கும் கலவியின்பத்தைக் கைவிட்

டிருக்கவில்லையோ? ஆதலால், மனத்திற்கிசைந்த இன்னுயிர்த்தோழி அரணியத்திலிருந்து அருந்துயருழக்கவும், சிற்றின்பமென் றுரைக்கப்படுகின்ற காதலின்பத்தைக் கைக்கொண்டு களிக்கும் பொய்ந்நட்புடையவர்களும் இப்பூமியிலுண்டோ? அந்தோ! பாவியேன் இந்த ஒரு காரியத்தைமட்டும் யார் சொன்னாலுங் கேளாமல் நேரே மறுத்துவிடுவேன். 'தாதையிட்ட கட்டளையை மரியாதையின்றி மறுத்திட்ட மாபாவி' என்று என்னை ஜகமோரெட்டும் பழிதூற்றுவதற்கு நான் சிறிதும் பயப்பட மாட்டேன். இதுவே எனக்குத் துணிவு. நான் தம்மை யிறைஞ்சிப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன்; இது முதலாக என்னுடைய க்ஷேமத்தைக் கோரியிருப்பீராயின், என்மேல் ஆணை, இனி இதுவிஷயமான பிரஸ்தாபத்தை யென்றும் இயம்பற்க' என்று சொன்னாள். உமக்குச் சொல்லியனுப்பிய வார்த்தை யிதுவே'' என்று சொல்லிவிட்டு அவனும் போய் உட்கார்ந்தான். அந்த வாய்ச்செய்தியையெல்லாம் அணங்கனைய அம்மகாசுவேதைகேட்டு, முகங்கருகி வாடித் திகைத்து, நெடுநேரம்வரையிற் கவலைகூர்ந்திருந்து, அக்கேயூரகனை நோக்கி, 'கூர்வேலோய்! நாமே நேரில் வந்திருந்து இதற்கு வேண்டிய காரியத்தை எந்த முகமாகவாவது செய்வோம், நீபோய்வரலாம்' என்று சொல்லியனுப்பினாள். அவன் அவ்விடம்விட்டுப் பெயர்ந்து சென்றதும், மாதவம் பூண்ட அம்மகாசுவேதை கொற்றவனான சந்திராபீடனது குளிர்ந்த மதிவதனத்தை நோக்கி, 'வேந்தே! கதிர்முடிதரித்த சித்ரரத சக்கரவர்த்தியின் படைவீடாகிய மாசற்றுயர்ந்த ஹேமகூடமானது அதிமனோகரமாய் விளங்காநிற்கும். பெருஞ்சிறப்பினதென்று யாவராலும் மதிக்கப்படுகின்ற கிம்புருஷலோகம் எல்லையில்லாப் பெருவளங்களுக்கெல்லாம் நிலைக்களமாகும். அக் கந்தர்வ தேசமோ சுவர்க்கலோகம்போன்ற அழகினையுடையது. பண்போன்ற இனிய மொழியையுடைய காதம்பரியென்னும் தோழமைபூண்ட அப் பெண்ணரசு அந்த உலகுக்கு ஓர் அமிர்தம்போல ஒளிர்கின்றாள். ஆகையால், உனது நெஞ்சம் அபூர்வமானவற்றைக் காணவேண்டுமென்ற அவாவுடையதாயின், நான் சொல்லும் வார்த்தை உன்னால் மறுக்கப்படாமல் அங்கீகரிக்கத்தக்கதாயின், சிறந்த உனது சிநேகத்திற்கு நான் இன்னும் பாத்திரமாம்படியான பாக்கியத்தைச் செய்திருந்தேனாயின், நீ என்னுடனே ஹேமகூடத்துக்கு வந்து, என்னைக் காட்டிலும் சிநேகதர்மத்திற் சிறந்த காதம்பரியையுங் கண்டு, அக் கன்னிகையின் பிடிவாதமான இந்தப் பொல்லாத அபிப்பிராயத்தையும் மாற்றி, அந்தத் திவ்ய நகரியில் இன்றைக்குத் தங்கியிருந்து, நாளைத் திரும்பிவர இச்சிக்கின்றேன்' என்று கூற, இறைவனான சந்திராபீடன் அவளை நோக்கி, 'சிறந்த மெய்த்தவத்தோய்! உன்னை நான் வந்து தரிசித்தவுடனேயே உனதுசிறந்த விநயமாகிய நற்குணக்கடலிலே ஆழ்ந்துவிட்டேன்; இனி நான் எனக்கு உரியனல்லேன்; ஆகவே, இன்னது செய்வாய் என்று நியமித்தருள்வதைவிட்டு இவ்வாறுமொழிந்ததற்குள்ள காரணம் யாதோ தெரியவில்லை' என்று சொல்லி, அவளோடும் எழுந்திருந்து ஹேமகூடஞ்சென்று, அரசர் கோமானான சித்ராதன் வாழ்கின்ற அரமனை

யினது கிரணம் வீசுகின்ற பொற்றோரணங்கள் கட்டிய ஏழு கட்டினையும் ஒன்றுபோற்கடந்து உள்ளே பிரவேசித்துக் கன்னியாகிய அக்காதம்பரி யுறைகின்ற அந்தப்புர வாயிலையடைந்து, அம் மகாசுவேதையினது தோற்றத்தைத் தூரத்திற் கண்டபோதே முகமலர்ச்சிகொண்டு வணங்கி மிக்க பிரீதியோடு எதிர்கொண்டோடிவந்து, அவ் வரமனைவாயிலைக் காப்பவர்களான பிரதீஹாரிகள் கையிலே அழகிய பொற்பிரம்பை யேந்திக்கொண்டு தன் முன்னே சேவித்துச்செல்ல, மணிகளிழைத்த பெரிய மதிற்படியைக் கடந்து உள்ளே சார்ந்து, எல்லா உலகங்களிலுமுள்ள அழகிய மாதர்கள் இவ்வளவே யென்று கணக்கிட்டுக் காணுமாறு, இவ்வுலகத்தி லொருங்கு சேரத் திரட்டியிருத்திய இடத்தைப்போலவும், ராஜபோகஞ் சீர்திருந்திச் செவ்வி பெறுமாறு சிறந்த சிங்காரரஸங் கொஞ்சிவிளையாடுகின்ற ஜனன பூமியைப் போலவும் அழகொளிரும் மாளிகையை அடைந்தான்.

அப்போது, அச் சந்திராபீடனைக் காண்பதற்காகக் குழாங்கொண்டெண்டிய கோதைமாதரது சுந்தரமான முகங்களெல்லாம் ஒளிமிக்க சந்திர மண்டலங்களின் சூழல்போலத் துலங்கின. அம் மெல்லியலார்களது விழி நிழல் தோய்ந்த இடங்களெல்லாம் இந்திரநீலப் பாறையைப்போலக் கன்னங்கறேலெனக் காணப்பட்டன. அழகிய மன்மதனது கார்முகங்கள் நாலு பக்கமும் பொற்புடனெழுந்து சஞ்சரிப்பனபோல அப் பூவைமாரது வளைந்த புருவக்கொடிகள் எங்கணும் உலாவித்திரிந்தன. அச் சேயிழை மடவார்கள் அழகிய தங்கள் செங்கரங்களை வீசிநடக்குந்தோறும் உண்டாகிய நககிரணங்கள் வீரனை மன்மதனது சரமழைபோலத் தயங்கின. அணங்கனைய அவ் வரிவைமாரது அற்புதமான ஆபரணகிரணங்கள் ஆதவன் கிரணத்தையும் வெளிக்கிளம்பாமல் அழித்து வீசின. இங்ஙனங்கூடிய அக் கோதைமாதரது ஒப்பரிய பெரிய சௌந்தர்யாதிசயத்தை என்னென்று உரைப்பது! மைதோய்ந்த கண்மலர்களே அவர்களுக்குக் கன்னபூரமாகவும், அதரத் தொளியே முகவிளக்கமாகவும், நகைநிலவே மெய்யெங்கும் பூசிய சந்தனகளபமாகவும், சொல்லே தந்திரிநாதமாகவும், தூய்மை மிக்க மேனியின் செந்நிறமே சிரோவகுண்டனபடமாகவும், பதங்களின் செவ்விய காந்தியே செம்பஞ்சாகவும் அமைந்து விளக்கமுற்றன.

சந்திராபீடன், இத்தகைய சுந்தரம் பொருந்திய கந்தர்வமாதர்கள் வாழ்கின்ற கட்டைவிட்டகன்று உள்ளே சென்றான். அதன் உள்ளே வாழ்கின்ற வனிதாரத்னங்களெல்லாந் தத்தமக்கு ஒப்படைத்த காரியங்களிலே அவஹிதர்களாய் அடைந்து நின்று, தேன் மணக்கும் மலர்களோடு கூடிய வள்ளிக் கொடிகளுக்கு-இனிய கந்தத்தையுடைய செந்தாமரைமலரினது பராகங்களினாலே பாத்திகோலிப் பனிநீரைப் பரிந்து சொரிவாரும், திவ்யமான பரிமளத்தையுடைய பனிநீராற் செய்தனவாகிய சிற்றாறுகள் உடைப்பெடுத்தோடா வண்ணங் காந்தியையுடைய ரத்னங்களைக் கொட்டிக் கரையாகப் பரப்புவாரும், மணமிக்க தமாலமரங்களடர்ந்த காட்டிலே மூண்ட பேரிருள் போம்படியாக மாணிக்க தீபம் வைப்பாரும், மாதுளங்கனியைப்

பறவையினங் கோதாமல் முத்தமாலையினாலே விரைந்து சுற்றுவாரும், பற்பல புஷ்பாபரணங்களைப் பண்ணுவாரும், கிளி நாகணவாய் முதலியவற்றிற்குச் சிற்சில அருமைச் சொற்களைக் கற்பிப்பாரும், கிரீடாபர்வதத்தின் கொடுமுடியிலே சென்று உலாவுமாறு அழகிய பக்ஷங்களை யுடைய கவுதாரியைக் கொண்டுபோய் விடுவாரும், கோதில்லாத கீத சாஸ்திரத்தை நன்கு பயிலுமாறு அச் சங்கீத சாலையிற் கின்னரமிதுனங்களைச் சேர்விப்பாருமாய்ப் பரபரப்போடு விளங்கினார்கள். அங்குள்ள மங்கையர் வெள்ளங்களிலே சிலர் தங்கள் வனமுலைப்பொறையைச் சுமக்கமாட்டாமல் முன்னே வளைந்தொசிந்து ஞால்கி, யருகேயொளிர்கின்ற ரத்னகசிதமான பொற்றூண்களினின்று மெழுகின்ற கிரணத்தை ஆதாரமென்னும் நினைவினாலே பிடிக்கக் கண்டு, மற்றுஞ் சிலர் அவர்களைநோக்கி, 'மாதர்களே! நீங்கள் விழுந்துவிடாதபடி யின்னமும் உறுதியாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள்' என்று நகையாடாநிற்பர். மின்னலைப்போலொளிவிடுகின்ற மணிகுட்டிமங்களிலே தங்கள் நகத்தினது வெள்ளிய கிரணங்கள் தோன்ற, அதனை விடுபூவென்று கருதி, யதிலே யிடறாதபடி சிலர் கூச்சமுற்றொதுங்கி நடக்கக்கண்டு, 'காரிகையீர்! ஒன்றுங் கீழேகிடக்கக்காணோம். இன்னமும் நிலத்தைக் குனிந்துபார்த்துச் செல்லுங்கள்' என்று விநோதவார்த்தைகள் சொல்வார் சிலர். வண்ணங்கள் பிடித்த சாளரங்களிலிருந்து வந்துவீழ்கின்ற பத்மராககிரணக் கற்றையைக் கிளர்கின்ற இளவெயிலென்று கருதிச் சிலர் அழகிய தங்கள் மலர்க்கரத்தாற்கவித்துத் தடுக்கக்கண்டு, 'மங்கைமீர்! செந்நிறமிக்க இந்த இளவெயில் நும்மால் அகற்றவொண்ணாது' என்று சொல்லி நகைப்பார் சிலர். இவை முதலாக எண்ணிறந்த இளையவர்களது விளையாட்டுக்களையெல்லாம் புதிது புதிதாகக் கண்டு, அதிக விருப்பத்தோடு உள்ளே நடந்துசென்று, குவிந்து திரண்ட குலாசலம் போன்ற நெடிய தோள்களையுடைய கொற்றவனான அச் சந்திராபீடன், கோமகளான காதம்பரியிருந்து வாழ்கின்ற மணிமயமான சபாமண்டபத்தை அன்போடு சென்றுகண்டான்.

அந்த மண்டபத்தின் மத்தியிலே, அநேக இளமங்கையர்கள் சூழ்ந்து நிற்குஞ் சுந்தரமான ஒரு மணிப்பீடத்திலே, தூயதோர் பட்டணையின்மேற் சாய்ந்து, தனது லாவண்யமாகிற ஒளிவெள்ளத்திலே நீந்துவாரைப் போலப் பசும்பொன்னாற் செய்த தொடிகளை அணிந்த தோழிமார்களான தோகையர்குழாங்கள் இருமருங்குங் கவரிவீச, பித்திகைகளிற் சூழ்ந்துதோன்றுந் தனது பேரெழிலானது அஷ்டதிக்பாலகர்களும் எய்தி நின்றாற்போன்று விளங்க, மூவுலகத்தவர்களும் ஒருங்கு திரண்டு பக்தியாதிசயத்தினாலே தன்னைப் பார்ப்பதற்காக வந்துநின்றாற்போலச் சித்திரஜாலங்கள் சூழ்ந்து திகழ, இடைவிடாது நெருங்கியுள்ள ஆயவெள்ளத் தேந்திழைமாதர்கள், தாமும் ஒருங்கே சுவர்க்கபதவியைப் பெற்றுள்ளவர்போலத் தனது அழகினை யிமைகொட்டாம லப்படியே பார்த்துக்கொண்டு நிற்க, லக்ஷணங்கள் இவளது வடிவத்தையெல்லாங் கண்டு கண்டு, கங்குகரையில்லாத ஆசைபூண்டு, தாமே வலியவந்து தழுவிநின்றழகு செய்ய, பாக்கியமில்லாதவன்

போலத் தன்பாற்பயின்ற பால்யமானது அப்பாற்பெயர்ந்துசெல்ல, யாரையும் வெற்றிகொண்ட காமராஜன் தன்னிடைத் தோற்றினாற்போலப் பாக்கியம் புரிந்த இளமைப்பருவம் அழகெல்லாந் தழுவிவாழ, தேங்கிக்கிடக்குந் தேககாந்தி திசையெல்லாம் நிறைந்துபொங்க, உள்ளடிகண்டுவெருவிப் பல்லவம் நடுங்க, ஒளிர்கின்ற நகபந்தியைப் பார்த்துப்பயந்து வெண்ணிறத்தையுடைய முத்துக்கள் சேற்றிற் புதைபட, தொடைக்குத்தோற்ற வாழைகள் தலைசுழன்றலைய, வள்ளிபோன்ற இடையினுக்கிளைத்த மின்னற் கொடிகள் விண்ணிடைச்சென்று மறைய, அழகுபொருந்திய உந்திச் சுழியைக்கண்டு வெள்கி நதியின் சுழிகளெல்லாந் தோன்றித்தோன்றி யழிய, நிதம்பத்தினுக்கு நிகரழிந்து நெடுந்தேர்கள் உருண்டுருண்டோட, விரவிய ரோமாவலியினால் மயங்கிய எறும்பொழுக்கெல்லாம் மெல்லிய மணற்பாழியிலே புகுந்தொளிக்க, மடிப்பு வீழ்ந்த உதரசோபைக்கு எதிர்நிற்க மாட்டாமல் வடபத்திரங்கள் வாடிச் சருகாகி யுதிர, இரண்டு ஸ்தனகிரிகளையுங்கண்டு அழுக்காறுற்ற மேருவரையானது வீணே சப்தலோகங்களையுஞ் சுமந்து வருந்த, அரிய சுந்தரமான கந்தரத்தைக்கண்டழுங்கிய சங்கங்கள் கடலில் வீழ்ந்தழுங்கியாழ, மெல்லிய அங்கையினாற் சங்கைகொண்டு பங்கயங்கள் முகங் குவிந்து வருந்த, மென்மையுற்ற தோள்களைக்கண்டு வேய்கள் கண்முத்துதிர்க்க, அமுதொழுகுகின்ற மெல்லிய செவ்விதழைக்கண்டு மனம்புழுங்கிக் கோவைகள் கானிடைச் சென்றுபடர, பற்களாற் பரிபவமுற்ற முல்லைப் போதுகள் காமவேளின் கையிலகப்பட்டு நாணத்தையடைய, பால்போல வெண்ணிலா வெழுந்த தண்ணிய முகமதியைக்கண்டு வெள்கிப் பனிமதி பாதியாய் மெலிந்து அந்தரமுற்று, மெலிந்த அந் நிலையில் வளைந்த நுதலினாற் பின்னருமிளைத்துப் புறங்கொடுத்தோடி வெய்யவனிடத்திலே ஒதுங்க, காதளவோடிய கண்களைக் கண்டு கலங்கிக் கருங்கடல் கடுவிஷத்தை யுட்கொண்டு மறுக, காதுகளைக் கண்டு நடுக்கமுற்று வள்ளைகள் பங்கமுற்றொடுங்க, நாசியினால் நாணமுற்றுக் குமிழ்கள் வனத்திற்சென்றுகுடிகொள்ள ஒளிர்கின்ற புருவங்களுக்குத் தோற்றுப் புறங்கொடுத்திட்ட அனங்கனது சிறந்த சிலைகள் ஆலையிலேபாய்ந் தரைபட்டழிய, மணங்கமழும் அளகாடவியினாலே அகமழிந்த மேகங்களெல்லாந் தாபமுற்று, அலைமோதும் உவரிநீரைச் சென்றுபருகி முகங்கறுத்து மலையின்மேலேறி மலைய, மேன்மையைத் தன்னிடத்தேகொண்ட தெய்வத்தன்மை பொருந்திய பர்வதராஜனது புத்திரியாகிய உமையவள், 'நாம் நமது சாமர்த்தியத்தினாலே அரனது இடப்பாகத்தைக் கொண்டிட்டோம்' என்று கொண்ட அகந்தையை அடியோடறுக்குமாறுபோலப் பராக்கிரமம் பொருந்திய கன்னற்சிலையோனான மன்மதனது வடிவத்தையெல்லாந் தானே கவர்ந்துகொண் டோங்கிய சிரேஷ்டதரமான கோலமானது தனக்கு எவருமே நிகரில்லாத் தன்மையை வெளிக்காட்டாநிற்க, 'மாயவனது மணிமார்பத்தைவிட்டு இறையும் அகலகில்லாத பெருவனப்புடையோம் நாந்தாம்' என்றெண்ணிச் செய்யவளான திருமாமகள் மனங்களிக்கின்ற செருக்கையெல்லாந் தீர்க்குமாறுபோலப் பாவி

யெழுந்த தனது பிரதிபிம்பங்கள் பார்த்திட்ட இடங்கள் தோறுந் தூய அச் செந்திருவாகிய மடந்தைமார்கள் பலரது சோதிமிக்க வண்ணத்தைக் காட்ட, 'உத்துங்கமான அமிர்தகிரணத்தையுடைய பிறைமதியொன்றை யாம் பெற்றிட்டோம்' என்று மகிழ்ந்து அதனைச் சடையிலே ஈசன் விரும்பி யணிந்த ஆச்சரியத்தை யகற்றும்பொருட்டு முடிவில்லாதனவாகிய தனது சிங்காரமுறுவலானது திசைகளெல்லாம் இடைவிடாது கோடிக்கணக்கான சந்திரரேகைகளைச் சிந்த, 'யாவரையும் வெற்றிகொண் டுயர்ந்த மன்மதனை நாம் எரித்துவிட்டோம்' என்று தருக்கிய சர்வேசுவரனை சிவபெருமானது மனவெழுச்சியை யடக்கவேண்டி நிகரில்லாத தனது அவயவ சோபையானது கண்டவர்களது உள்ளந்தோறுங் கணக்கற்ற அனேககோடி மகரகேதனர்களையுண்டாக்க, சக்கரவாகம் கிள்ளை சாரிகை சகோரம் அன்னம் குயில் மயில் கபோதம் மான் முதலியவற்றின் விளையாடல்களைக் கண்டும், நெருங்கிச் சூழ்ந்த தோழிமார்களது விநோதவார்த்தைகளைக் கேட்டும், மிகச்சிறந்த சந்திராபீடனது ரூபகுணசம்பத்துக்களையே பலவாறு வியந்து தன்முன்னே புகழ்ந்துரைத்துக்கொண்டிருக்கின்ற கேயூரகனது முகத்தை நோக்கி, 'அப்பெருந்தகையோன் யாவன்? அந்தக் குமாரனது ஜன்மபூமி எது? பெயரென்ன? எத்தனை வயதாகி யிருக்கும்? அவன் வடிவழகு எப்படி? நீ அக் கோமகனிடம் யாது சொன்னாய்? அதற்கு அவ் வள்ளல் சொன்ன உத்தரம் என்ன? நீ பார்த்து எவ்வளவு நாழிகையாயிற்று? அப் புனிதனான சந்திராபீடனுக்கும் நமது மகாசுவேதைக்கும் எப்படி பரிசய முண்டாயிற்று? அவனிங்கே வருவனோ?' என்று கேட்டுக்கொண்டு இன்பக் காதலோடு வீற்றிருந்த காதம்பரியைக் கண்டான். கண்டதும், சந்திரோதயத்தைக்கண்ட கடல்போலப் பொங்கியெழுந்த பேருவகை யுடையோனாய், 'புண்டரிகாலயனான பிரமதேவன் எல்லாப் புலன்களையும் விழியாகவே செய்யாமற்போனான். உள்ளபடி அவன் புத்தியில்லாதவனே தான்! நிற்க. இவ் விரண்டு விழிகளும் பூர்வம் புரிந்த பாக்கியங்கள்தாம், என்னே! இவ்வாறு வந்து பலித்திட்டன. இன்பந்தரும் எல்லாப்பொருள்களுக்கும் இது கொள்கலமோ? அன்றி, இது மன்மதனது வெற்றிப்பொருளோ? அம்ம, இப்புதுமையைக் கண்டறிவார் யார்? நாம் இதுவரையில் இப்படிப்பட்ட ரூபத்தை எங்குங் கண்டதில்லை. இது நான்முகத்தோனது செயல்தானோ? அன்றி, மன்மதனதுகைவன்மையோ? இன்னதென்று தெரியவில்லை' என்று அப்படியே வியந்து வியந்து பிரமித்துநின்று, பின்னர்ச் சமீபத்திற் சென்ற அச் சந்திராபீடனது அரிய பார்வையானது, அழகிய மேகலாபரணத்தையுடைய அக் காதம்பரியின் வாள்விழியின்மேற் கடிதாக ஓடிப் பாய்ந்தது. அப்போது அக் காதம்பரியும், 'கேயூரகன் மொழிந்த அம் மன்னவன் இவனாகத்தானிருக்கவேண்டும்' என்று தீர்மானித்து, ஈடுமெடுப்புமில்லாத அவனது அழகின்மேலே யோடவிட்ட இமையாத உவகைப் பார்வையானது எப்புறமுஞ் சூழ்ந்து செல்ல, அவ் வொளியினாலே மெய்வெளுத்த பூபதியான சந்திராபீடன் ஹலாயுதனான பலராமன் இவனே யென்னும்படி

விளங்கினன். இவ் வகையே பார்த்துக்கொண்டிருக்கப் பிரதமத்தில் ஒரு துளக்கம் எழுந்தது. அதன் பின்பாகத் தேகமெங்கும் புளக மெழுந்தது. அதன் பின்பாகச் சோதிமிக்க திவ்ய விபூஷணங்களின் சப்தம் எழுந்தது. அதன் பின்பாகச் செவ்விய கமலாசனனுகிய பிரமதேவனது கைத்திறத்தை எல்லாம் விளக்கிக்காட்டவல்ல காதம்பரியும் எழுந்திருந்தாள். எழுந்திருந்ததும், விரைவாக ஓடிவருகின்ற நெட்டுயிர்ப்பினுலே உத்தரீயம் நழுவி வீழ்ந்தது. அவ்வாறு அது நழுவிவீழ்ந்ததற்குள்ள நிஜமான காரணத்தை யாரும் அறியவில்லை பூங்கொடிபோல வொல்கி யொசியும் பாங்கிமார்கள் செங்கையிலே கொண்டு வீசிய கவரிக்காற்றே அப்பழிக்குள்ளாயிற்று. அப்போது, காதம்பரியானவள், மிகுந்த அன்பினுலே தனது சித்தத்தில் வந்து தங்கிய சந்திராபீடனது அழகிய திருமேனியைத் தொட்டுப் பயில்வதற்காக மார்பிலே செங்கையை வைத்து அணைத்ததையெல்லாம் முலைமறைப்பதற்காக வென்றே யெல்லாரும் எண்ணினர்கள். இவ்விதமான சம்பிரமத்தோடு அக்காதம்பரியுந் தன் மலர்ப்பதம் வருந்த ஏழெட்டடி தூரம் எதிர்கொண்டு நடந்துவந்து, அம் மகாசுவேதையை நெடுநாளாகக் காணுதிருந்த படியினுலே மிகவும் அதிகமான நேசத்தோடு அவளை யாதரத்தாற் கழுத்தோடு இறுகத் தழுவிக்கொண்டனள். அம் மாதவக்கொடியும் அவ்வாறே புல்லி யணைத்துக்கொண்டபின் காதம்பரியினது முகத்தை நோக்கி, "வாராய் எனது அருமருந்தன்ன கண்ணுட்டி! சிறப்புற்றெளிருந் தன்னுடைய வாம் பரியினது குரத்தினுலே பொங்கியெழுந்து மறிகின்ற அலைகளையுடைய நான்கு சமுத்திரத்தினது பெரிய கரைகளையும் முத்திரையிட்டு, மன்னுயிரையெல்லாம் பருவர லுருமற் பரிவோடு காத்தருளி, பாரதவருஷத்திலே யுள்ள எல்லா லோகங்களையுந் தன் பேரருளால் ஆண்டுகொண்டு தாராபீடனென்ற மன்னனெருவ னிருக்கின்றுன். அவனது அரிய திருக்குமாரனுகிய இம் மஹானுபாவன் அகில பூபாரத்தையும் மேருவைப்போ லொளிர்கின்ற தனது புஜபூதரத்திலே தரித்து, திக்குவிஜயங்காரணமாக இந்தத் திசைக்கு வந்தவன், நான் பண்ணிய பூஜாபலத்தினுலே என்னிடத்திற்கு எப்படியோ வந்துசேர்ந்தான். இவனுக்குச் சந்திராபீடனென்பது பெயர். ஆச்சரியமான தனது கலியாண குணங்களினுலே எனக்குச் சிறந்த பிராணசிநேகிதனுக ஏற்பட்டான். பற்றறுத்திருந்த என்னையும் இவன் இங்ஙனந் தனது பண்பினுலே வசீகரித்தான் என்னில், நான் இவனைப்பற்றி இன்னும் அதிகமாகச் சொல்லுவானேன். நிஷ்களங்கமான மனமும், பரிசுத்தமான வாக்கும், மாசற்றுயர்ந்த உத்தமமான நற்குணங்களுமுடைய இப் பற்குனனை, உறவுகொண்டவர்க்கு எளியனுன இக் கோமகனை நாம் காணக்கிடைப்பது அரிதாகையினுலே, நீயும் என்னைப்போலவே மனவுவகையோடு இவனது சிநேகத்தை ஸம்பாதித்துக்கொள். சிருஷ்டிகர்த்தாவாகிய அந் நான்முகனுடைய அருமையான வேலைத்திறமும், உவமைசொல்லுதற் கொண்ணுத புதியதோர் அழகும், புகழைத் தருபவளான அம் மலர்மடந்தை நன்றுன இடத்தையே நாடியமர்வாள் என்ற விஷயமும், இவனது புஜபூதரங்களில்

ஸதிரமாக வாழ்ந்திருக்கப் புவிமகள் புரிந்திட்ட மாதவமும், புரைதவிர்ந் தொளிருந் தேவலோகத்தினும் மானிடலோகமே சிறந்துள்ளதென்ற உண்மையும், மானிடர்களது விழிகள்செய்த பாக்கியமும், சிறந்த எல்லாக்கலைகளும் ஓரிடத்திலே இனிதாக உறையப் பெற்றதோர் பேறும், இத்தகைய பிறவும் நீ அறியவேண்டுமென்ற எண்ணத்தோடு இந்த அருட்கடலான நம்பியை நான் வருந்திப் பிரார்த்தித்துப் பலாத்காரமாய் இங்கேஅழைத்துக் கொண்டுவந்தேன்; என் ஆருயிரனையாய்! உன்னைப்பற்றியும் நான் இந்தப் புருஷோத்தமனுக்கு வெகுவாகச் சொல்லியிருக்கின்றேன். ஆகையால், 'இவன் நமக்கு முன்பின் பரிசயமில்லாதவனல்லவோ?' என்ற நாணத்தையும், 'அந்நியனை இவன் நமது ஸ்வபாவத்தை இன்னதென அறியானே' என்ற சங்கையையும் விட்டு, என்னிடத்திற் போலவே யிவனிடத்திலும் நீ அன்பும் மரியாதையும் வைக்கத்தகும். இவன இன்றுமுதல் என்றென்றைக்கும், தாதுசேர் குழலாய்! நினக்கு உயிர்த் தோழனுகவும், நெருங்கிய பந்துவாகவும், அன்புடைய தாஸனுமாகவும் இருப்பான்'' என்று சொன்னவுடனே, சந்திராபீடனும் அக் காதம்பரியை நமஸ்கரித்தான். அங்ஙனம் வணங்காநின்ற அந்த மன்னவகுமாரனைக் கந்தர்வகன்னிகையான அக் காதம்பரியுங் கடைக்கண்ணாலே பார்த்தாள். பார்த்தவுடன், அந் நேரிழையாளது நெடுங்கண்களினின்று, கன்றிய கடைக்கண்மிசை விரைந்தோடிய கருவிழியினது இளைப்பினுல் வெயர்த்திட்ட வெயர்வைத்துளிகளோ என்னும்படி ஆனந்தபாஷ்ப பிந்துக்கள் வீழ்ந்தன. அவ் வரசிளங்காளையினது அழகினைக் காண்பதற்காக விரைவுடனே புறப்பட்டோடிய பளிங்கனைய மனத்தினது யதார்த்தமான ஒளியைப்போல அற்புதமான நகை நிலவு தோன்றிற்று. 'உன்து ஆருயிர்க் காதலனை நீயுங் கற்பொடு பணியாய்' என்று சென்னிக்கு க்ஷேமசமாசாரத்தைச் சொல்லச் சென்றதுபோல மன்மதனது கருப்புருவங் கொண்ட கரும் புருவங்களிலொன்று விரைவுடனே மேனோக்கிக் கிளர்ந்தெழுந்தது. வந்த கொட்டாவியின் வழியாக, மனத்திலே வந்து தங்கிய மன்னவன் மீளவும் ஏகிவிடுவனே என்ற அபிப்பிராயத்தினாலே தடுத்திடுகின்றனளோ என்னும்படி அவளது வாண்முகத்தின்மேற் செந்தளிர்ச் செங்கையொன்று செல்லாநின்றது. அப்போது, சரமாரியாகப் பொழியும் வேர்வைநீரானது நன்றாக நீராட்டஞ் செய்விக்க, அதனாலே பழுதற்று விளங்கும் அவளது கோமளமான மேனியெங்குஞ் சுந்தரனை கந்தர்ப்பன் சஞ்சரிப்பதுபோலத் தோன்றலான அச் சந்திராபீடன் பிரதிபிம்பித்துத் தோன்றினான். பரிமளம் பொருந்திய நீலோற்பல மாலைபோல நீண்டகன்ற பெரிய பார்வைகள் பருகியிட்டாற்போல, வரிபரந்த அவளது கருவிழிகளிற் சிறிது வயங்கினான். வணங்கிய முகத்தினாலே யழைத்திட, அதற்கிணங்கி விரைவாகச் சென்றான்போல அவளது வாணுதலின்மேலும் விளங்கினான். ரூபத்தின்மேலுள்ள மிகுந்த ஆசைப்பாட்டினாலே தடந்தோள்கள் தாங்களே யெழுதிக்கொண்டனபோல அவளது தோள்களிலுஞ் சிறந்து காணப்பட்டான். இவ்விதமான நிலைமையோடு அக் காதம்பரியும் அன்னா

லான அச் சந்திராபீடனை வணங்கி, அருண்மிக்க மகாசுவேதையுடனே யொரு ரத்னஸிம்மாஸனத்திலே உட்கார்ந்தாள். பாங்கிமார்கள் அதிக விரைவாக ஓடிச்சென்று கொணர்ந்து, திருமகள்போன்ற அக்காதம்பரியிருந்த மணிப் பீடத்தின் தலைப்பக்கத்திலேயிட்ட, வெண்பட்டினாலே அழகாகப் பொதிந் துள்ளதோர் பொற்பீடத்திலே சந்திராபீடனும் வீற்றிருந்தான். அப்போது தவமடந்தையான அம் மகாசுவேதையை உபசரிக்கத் தொடங்கிய அக் கந்தர்வராஜ தனையையின் அபிப்பிராயத்தை யறிந்து, வாயில் காப்பவர் களும், பிறர்களது நோக்கத்தை யறியவல்லவர்களுமான தெரிவைமார்கள் கையை யமைத்து, வாய்பொத்தி நிற்கும் கண்ஜாடையை யறிந்து, இனிய நாதத்தையுடைய வீணை, யாழ், குழல் முதலிய வாத்தியங்களையும், பாடல் களையும், வாழ்த்துரைகள் தோத்திரமொழிகள் முதலியவற்றையும் உடனே யாவரும் நிறுத்திவிட்டார்கள். மதுரமான வார்த்தைகளையுடைய காதம் பரியும் பக்தியோடு எழுந்திருந்து, மகாசுவேதையினது திருவடிகளை நன்னீர்கொண்டு விளக்கி, உத்தரீயத்தினாலே துடைத்து உபசரித்துவிட்டு, முன்போல அவளது பக்கத்திலேபோயுட்கார்ந்தாள். ஒண்டொடியாளான அக் காதம்பரிக்குச் சிறந்த உயிர்த்தோழியும், அறிவு குலம் ரூபம் குணம் ஒழுக்கம் மேன்மை முதலியவற்றால் சமானையாயுமுள்ள மதலேகை யென் பவள் மலர்முடியோனான அச் சந்திராபீடனது பாதங்களை, அவன் பன் முறை மறுக்கவுங் கேளாளாய்வெகுவாகப் பிரார்த்தித்துக்கொண்டு பூஜை செய்தாள். அப்போது, அருந்தவம்புரியுஞ் சேயிழையாளான அம் மகா சுவேதை சிறிது நேரம் உட்கார்ந்திருந்து, பின்னர் மிகுந்த பிரீதியோடு தோழியான காதம்பரியினது அழகிய தோள்களை நீளத் தடவிக்கொடுத் தும், வண்டுகள் மூசுதலினாலே சரிந்துள்ள அவளது கர்ணபுஷ்பங்களைத் தளராதபடி நேராகவைத்தும், பாங்கிமார்கள் வீசுகின்ற சாமரைக்காற்றி னாலே அலைந்து குலைந்த கூந்தலை நன்றாகக் கோதிமுடித்தும், 'அம்மா, காதம் பரி! சுகமாக இருக்கின்றாயா?' என்று கேட்டாள். இறைமகளான காதம் பரியும், 'இவள் காட்டிலிருக்க நாம் வீட்டிலிருந்தோமே' என்கிற நாணத் தினாலே மெதுவாக ஹீனஸ்வரமான வார்த்தையினால் 'இருந்துகொண்டிருக் கின்றேன்' என்று கூறினாள். அவ்வாறு சொல்லிவிட்டு அவள் மதிமுகத்தை நோக்கும்போதெல்லாம் நெடுந்தகையோனான அச் சந்திராபீடனிடத்திற்கே மீளவும் மீளவுஞ் சென்றுதங்குகின்ற தனது கடைக்கண்ணையும் மனத் தையும் அங்ஙனம்போகவொட்டாமற் றடுப்பதற்கான உபாயமொன்றையு மறியமாட்டாதவளாய் மயங்கி, ஒன்றொடொன்று நெருங்கி யெழுந்த மலை போன்ற தனது தனங்களிலே காணப்படுகின்ற அவ் வரசிளங் குமாரனது உருவமானது புளகிதத்தினாலே மறைந்திட்டவளவில் விரகவேதனையினாலே மிகவும் மெலிவுற்று வருந்தியும், விழிகள் சிறிது இமைத்தகாலையில், 'இவ் வரசனைக் காண்பதற்கு நாம் பண்ணிய பாக்கியம் இத்தனைதானோ?' என்று மனமழிந்தும், ஏனைய தெரிவைமாரது மேனியிலும் அவனது பிரதிபிம் பத்தைக்கண்டுபொறாமைகூர்ந்து புழுங்கியும், பலவாறு மையல்கூர்ந்திருந்து

தாம்பூலங் கொடுப்பதற்கு முயன்றாள். அச் சமயத்தில், எழின்மிக்க அம் மகாசுவேதையானவள் காதம்பரியை நோக்கி, 'கண்மணி! விருந்தினர்களை முதலில் உபசரித்துவிட்டுப் பிறகுதான் மற்றவர்களை யுபசரிக்கவேண்டும்; ஆகையாற் பிரதமத்தில் இவ்வடிவேற் குமரனுக்குக் கொடு' என்று சொல்ல, அவளும் அவ்வார்த்தையைத் தட்டுவதற்காக வருந்தி, நாணத்தினாலே தலை கவிழ்ந்திருந்து, 'அணங்கே! நீயே இத்தாம்பூலத்தை வாங்கி வழங்கு' என்று சொன்னாள். அவ்வார்த்தையைக்கேட்ட அம்மஹாசுவேதை, 'நீயே கொடு' என்று பலகாலும் நிர்ப்பந்திக்க, ஆதரத்தோடுகூடிய அம் மடமயிலும் நெடு நேரம்வரையில் லஜ்ஜையோடு நின்றுகொண்டிருந்து, பின்னர், அத் தார் முடிவேந்தனுக்கு நேரே செல்லமாட்டாதவர்போல மனங்கூசிச், சீதள மான நிலவைப்போற் குலவும் அத் தாம்பூலத்தைத் தனது செங்கையிலே வாங்கி, மேன்மை பொருந்திய மகாசுவேதை புறமாகத் தனது வதனத்தைச் சாய்த்துக்கொண்டு, இணைவிழி குவிய, மனம் நடுங்க, நெட்டுயிர்ப் பெழுந்து செல்ல, 'நீயே மங்கையர்க்கரசி' என்று மன்மதன் பட்டாபிஷேகஞ் செய் திட்டாற்போல வெயர்த்தெழுகின்ற வேர்வைநீர் வெள்ளத்திலே மூழ்கி, 'இவ்வெள்ளத்திலே யழுந்துகின்ற என்னை எடுமின்' என்றுரைப்பாள்போல அவ் வள்ளலுக்கெதிராக அழகிய தனது பூந்தளிர்ச் செங்கையை நீட்டினாள் அப்போது, 'அத்தோகையன்னாளது செங்கைதோயும்நீடின்பந் துய்க்கவே, கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிதலாகிய ஐம்புலனும் ஏககாலத்திலே வந்துபலிக்கும்' என்று ஓதுமாறுபோல ஐந்து விரல்களுங் குவியாநிற்க, அவற்றை முற்படும்படியாகப் பதற்றமுற்று, ஓகைகொண் டோடுமாறு போலமிக்க காந்தியோடுகூடிய நககிரணமானது முன்னே செல்ல, மேகம் போலக் கைம்மாறு கருதாமற் பொன்மழை பொழிவோனாகிய அச் சந்திரா பீடன் விற்றழும்பேறி ஒளிர்கின்ற அழகிய தனது வெற்றித் திருக்கரத்தை நிமிர்த்து அதனை யேற்றான். அங்ஙனம் ஏற்றருளிய அந் நம்பியினது செங் கையை நாடித் தேடிக்கொண்டு நககிரணமானது முன்னே பரந்துசெல்ல, கம்பமுற்றலைகின்ற கைகளில் அணிந்துள்ள வளையொலிகள் ஒன்று கலந்து அவனுக்கு உபசாரமானவார்த்தைகளைச் சொல்ல, 'மன்மத பாணத்தினாலே வெம்புகின்ற என் இப்பிராணனை உன் கையிலே அடைக்கலமாகக் கொடுத் துவிட்டேன்; வேந்தனே! இதனைக் காத்தருள்வாயாக; உன்னைவிட எனக்கு வேறு தஞ்சமில்லை' என்று சொல்லி வைப்பதுபோல, அவனது கையிலே தையல் நாயகமான அக் காதம்பரி தாம்பூலத்தை வழங்கினாள். அப்போது, அவளது கைவழியாக வழிந்தோடியவேர்வைநீர் அவனது கையிலேவீழ்ந்த தோற்றமானது, 'என்னை யுனக்கே அளித்துவிட்டனன்' என்று தாரை வார்க்குந் தன்மைபோலக் காணப்பட்டது. வெற்றிச்சிலைதரித்த காமவே ளினது சாயகந்துளைத்த இரத்தத்தோடு கூடிய நெஞ்சமானது ஓடிவந்து அவனைச் சரணமாக அடைவதுபோல அவளது மாணிக்கவளையுங் கழன்று கீழே வீழ்ந்திட்டது. பின்னர், அருகிருந்த மகாசுவேதைக்கும் அப் பொற் றொடி மடந்தை அன்போடு வெற்றிலை வழங்கிவிட்டு உட்கார்ந்தாள்.

அப்போது, அழகிய கிளியொன்று பின்றொடர்ந்துவர, ஒரு பூவையானது முன்னேவந்து, கோமகளான அக் காதம்பரியினது பாத பங்கயங்களைப் பணிந்து, அதிக வெறுப்போடு தனது பெரியகோபத்தையெல்லாம் வெளிக்காட்டிப் பின்வருமாறு சிலவார்த்தைகளைச் சொல்லிற்று. "வாராய், எமது பெருமாட்டி! 'என்னிலுஞ் சிறந்தவர் ஒருவருமேயில்லை' என்பதாக அகந்தை பெருகித் திரிகின்ற ஒன்றுமறியாத இந்தச் சிறிய பறவையானது என்னை யெப்போதும் பின்தொடர்ந்து இவ்விதமாகப் பரிபவப்படுத்திக் கொண்டேயிருக்கவும், நீ ஓட்டிவிடாமற் பார்த்துக்கொண்டிருப்பதற்குள்ள காரணம் யாதோ தெரியவில்லை. அற்பமேனும் இனி நீ பராமுகஞ் செய்வையாயின், நின்மீது ஆணையாய்ச் சொல்லுகிறேன், நான் எனது பிராணனை விட்டுவிடுவேன்" என, இவ் வார்த்தையைக்கேட்டுக் காதம்பரி குறுநகை நகைத்தாள். அப்போது, அருந்தவம்புரியும் ஆரணங்காகிய மகாசுவேதை மதலேகையினது முகத்தைநோக்கி, 'இச்சாரிகை சாற்றுமா றென்கொல்?' என்று கேட்க, அவள் உரைப்பாளாயினள். "நமது இறைவியான காதம்பரி பெரியதோர் கலியாணத்தைச் செய்து, இப்பூவை காளிந்தியைப் பரிஹாஸன் என்னும் இக்கிளிக்குப் பெடையாகக் கொடுத்தாள். இன்று அதிகாலையில் பரிஹாஸன் என்னும் இந்தக் கிள்ளையானது காதம்பரிக்கு அன்புடன் வெற்றிலைமடித்துக் கொடுப்பவளான தமாலிகையென்னும் பணிமொழியாளது முகத்தைப் பார்த்து, ஏகாந்தத்திலே இனியதோர் கீதத்தை யோதுவித்தது. அதையெல்லாம் இச்சாரிகை கண்ணுற்று, அப்போதுமுதல் முகத்தைத் திருப்பிக்கொண்டு நெஞ்சழன்று, இந்தத் தத்தையினருகிற் சாராமலும், இதனோடு வார்த்தைசொல்லாமலும், கண்ணெடுத்துப்பாராமலும் மிகுந்த கோபத்தோடு திரிகின்றதனாற் காதம்பரியும் நானும் மற்றுள்ளவர்களெல்லாரும், 'சாரிகாய்! ஏன் வீணாகக் கோபித்துக்கொள்ளுகின்றாய்? நீ இந்தக்கோபத்தையொழி' என்று பலவாறு சமாதானத்தைச் சொலலவுங் கோபந்தணியாமல் இங்கேவந்து இம்மாதிரி சொல்லிற்று" என, அவந்தி தேசாதிபதியின் குமாரனான சந்திராபீடன் புன்முறுவல் செய்து, "உண்மைதான்; நானுங் கேள்விப்பட்டிருக்கிறேன்; இதிற்சிறிதுகூடப் பொய்யில்லை; இது இறைவியின் அந்தப்புரவாஸிகளான மங்கைமார் பலரும் பிரத்தியக்ஷமாகக் கண்டறிந்த விஷயம். 'இவள் எனது தர்மபத்னி' என்று கடல்சூழ்ந்த இந்த உலகெல்லாம் அறியும்படி விவாகஞ்செய்துகொண்ட மனையாள் மனம் வருந்த இவ்விதமான நீசகிருத்தியத்தைச் செய்த சண்டாளனுடன் தமாலிகையையும், திலகவாணுதலீர்! நீர் சினந்து தக்கபடி சிக்ஷிக்காமல் விட்டிருப்பது இறைவியாகிய தமது கவுரவத்துக்குச் சிறிதுந் தகாது. மேலும், கற்புடை மடவார்க்குச் சிறிதும் அடாத இம் மானக்கேட்டுக்கு, விஷத்தை யருந்தியோ அல்லது நீறுபூத்த கொழுந்தழலில் வீழ்ந்தோ எப்படியாவது இவ்விரண்டிலொன்றைச்செய்து, வலியத் தங்கள் பிராணனை விட்டாலன்றி வேறு விமோசனமில்லை. இவ்வளவுதூரம் வந்தபின்னுந் தைரியத்தோடிருக்கின்ற இக் காளிந்தி இப்பெரும்பழிக்கு நாணமுற்றழியாதிருப்பின் இந்த

உவளகத்திலேயுள்ள சிற்றிடை மடந்தையர்களெல்லாம் இவளை ஒருகுல மங்கையாகத்தான் மதித்துச்செல்வார்களோ?'' என்று சொன்னான். இவ் வார்த்தையைக்கேட்டுக் காதம்பரி முதலாக அங்கே யுள்ளவர்களெல்லாங் கொல்லென்று சிரித்தார்கள். சிரிக்கவே, கன்றிய மனத்தோடு பரிகாஸன் என்னும் அப் பைங்கிளியானது பார்த்திபனது திருமுகத்தைப் பார்த்து, '''இவள் அநாதை, எளியவள், ஏழை' என்று கருதியல்லவா நீர் இந்தவார்த் தையெல்லாஞ் சொன்னீர். நிரம்பவும் நன்றாயிருக்கின்றது! உம்மோடுகூட இன்னும் பலபேர் சேர்ந்தாலும் இவள் இங்ஙனம் நீங்களெல்லாரும் பரிஹ ஸிக்கத் தக்கபடி அவ்வளவு எளிமையான ஸ்திதியிலில்லையென்று திடமாக எண்ணிக்கொள்ளும். மேலும், இப்போது நீர்சொன்ன தந்திரங்களில் இவள் அறியாதது ஒன்றுமேயில்லை. செங்கைவேன் மன்னனை சித்ராதனது அர மனை வாஸனையினாலே இக் காளிந்தி காரணம், காலம், கோபம், பிரஸாதம், நல்விஷயம், தகுந்த பிரமாணங்களின் பாகுபாடுகள் ஆகிய இவையனைத்தை யும் நன்றாக அறிவாள் என்று அறியக்கடவீர்'' என்று சொல்லிற்று.

அந்த ஸந்தர்ப்பத்தில், ஒளிமிக்க நிலாவைப்போல் விளங்குங் கஞ்சுகி யொருவன் தவமங்கையான மகாசுவேதையின் திருமுன்பே வந்துநின்று, 'தாயே! வெள்ளிய உவாமதிபோல ஒளிர்கின்ற உனது திருமுகத்தை விரை விற் காணவேண்டுமென்று நமது இறைவனும், பிரமரங்கள் மொய்க்கின்ற குஸுமங்களையுடைய நமது பூங்குழல் இறைவியும் பெருகவும் ஆதரித் தனர்கள். சீக்கிரஞ்சென்று காண்' என்று சொல்ல, மாசற்ற மதியம்போல் வயங்கும் மேனியையுடைய அவள், தனது தோழியான காதம்பரியினது அழகிய மலர்முகத்தைநோக்கி, 'யான்போய் வருங்காறும் இந்த மன்னவன் எங்கேயிருப்பது?' என்று கேட்க, அந்நங்கையும், 'அம்மா, அமிர்தவசனீ! ஏன் இம்மாதிரியாக வார்த்தைசொல்லுகிறாய்? நான் இம்மஹானுபாவனை விரும்பி எதிர்கொண்டு கண்டதுமுதல் நான் எனக்கு உரியவளில்லை என்ற விஷயத்தை நீ அறியாயோ? நான் விரும்பியமர்கின்ற இம்மனைக்கும், எனது பரிஜனங்களுக்கும் இனி இவரையன்றி வேறு எவரோ உரியர்? உங்களிரு வருக்கும் இப்போது மனம்பொருந்திய இடம் எதுவோ அங்கேயே தங்கி யிருப்பதற்கு என்ன தடை?' என, 'அப்படியானால், உனக்கு ஸமீபமாக உள்ள பெரிய பூஞ்சோலையின் மத்தியிலிருக்கின்ற சிறந்த செய்குன்றின் மீதினுள்ள தூய்மையான காந்தியையுடைய அம்மணிமண்டபத்திலே நமது கொற்றவன் தங்கியிருத்தல் நலம்' என்று சொல்லிவிட்டுச் சென்றனள். மிகுந்த மெய்த்தவத்தையுடையளான அம்மகாசுவேதை அவ்வாறு கந்தர்வ ராஜனைக் காணுமாறு சென்றவுடனே, குளிர்ந்த மலர்மாலையையுடையவ னன அச் சந்திராபீடனும் காதம்பரியினிடம் விடைபெற்றெழுந்திருந்து, அவளது கட்டளையின்படி பற்பல விநோத விளையாட்டுக்களிலும், சகல கீதசாஸ்திரங்களிலும் வல்லவர்களான வல்லியர்பலர் பின்னேவர, கேயூர கன் என்னும் வீரன் முன்னேசெல்லச் சென்று, அம் மணிமயமான மண்டப மண்டினன். அரிய அந்தக் கந்தர்வராஜகன்னிகையுந் தனது ஆயவெள்

ளத்தையெல்லாம் விட்டகன்று அந்தரங்க ஸகிகளான நாலைந்துபேரோடு அவ்விடம்விட்டுப் பெயர்ந்து விரைவாக மேன்மாடத்தையடைந்து, அங்குள்ளதொருசயனத்திலே தளர்வுற்றுச்சாய்ந்து, பொலிவழிந்து மெலிந்து, நெஞ்சில் ஆதரமிகுந்து, நிறையெல்லாம் நிலையழிந்தொழியக் காமநோய் கொண்டு கமர்வுற்று வருந்தியதை நாம் எங்ஙனம் விவரிப்பது?

'ஏழை நீ என்னகாரியஞ் செய்தாய்?' என்று இலச்சைநின் றிடிக்க, 'பேதாய்! இங்ஙனந் தாழ்தல் நினக்குத் தகுதியோ?' என்று தகுதியும் மற்றொரு புறத்திலே யொறுக்க, 'மடந்தாய்! நீ இங்ஙனம் நேரே வீழ்வாயென்றறிகிலேனே' என்று வினயமும் பக்கத்தில் நின்று பரிஹஸிக்க, 'உத்தம குலப் பிரஸூதையான நீ இப்படி ஆழ்தலடுக்குமோ?' என்று அரிய கற்பும் அறவே நிந்திக்க, இன்னது செய்வதென்றறியாமல் தன்னந்தனியளாயிருந்து, 'நாம் இந்தத் தாமவேள் புதியோன் என்றும் நினைத்திலம். நம்மை மிகவும் அற்பமாக மதிப்பனேயென்று சிறிதேனுங் கவுரவத்தை வகித்தோமுமில்லை. இவனுடைய மனோபாவமும் இப்படிப்பட்டதென்று நமக்குத் தெரியாது. காதல்கொண்ட என் மனக்கருத்தை இன்னதெனத்தனது நுண்மதியினாலே யறிந்து இவன் மகிழ்வுற்றானுமிலன். ஐயோ! நாம் உலகம் பழிக்குமே என்பதையும் பார்த்திலோம். தந்தை தாயர் சுற்றத்தார் முதலியோர் ஒறுப்பதையுங் கவனிக்கவில்லை. கண்ணுக்குக்கண்ணான நம் மகாசுவேதை கொடிய துக்காக்கிராந்தையாய் மனமழிந்து காலங்கழிப்பதையும்நினைத்திலோம். இக் கைதவம் நமக்கு எப்படி யுண்டாயிற்றோ? இம் மகாசுவேதை விஷயத்தில் உண்மையில் நாம் அன்பில்லோரமாயினும் பற்பல மாதர்களின் முன்னிலையில் முன்னம் நாம் இது நிமித்தமாக மொழிந்திட்டதும், இன்று காலையிற் கேயூரகனிடம் நாஞ் சொல்லிவிட்ட கொடிய சபதமும், ஐயோ! இப்படிப் பட்டதென்பதை நாம் கட்டோடே மறந்துவிட்டோமே. சிந்தையுற் றழிகிற இந்த இளந்தலையான நெஞ்சத்தைக்கொண்டு நான் எங்கே போவேன்? அம்ம! இக்காதல் மிகவுங்கொடிது,கொடிது!! பூர்வஜன்மத்தில் நாம் பண்ணிய மகத்தான பாவமோ, அன்றிக் கொடிய மறலியோ, முன்னம் நாம் கண்டிராத இவனை இங்கேகொண்டுவந்து காட்டியது எதுவோ தெரியவில்லை. கண்டுகேட்டறியாத இந்தக் கள்வன் இங்கேவந்து என்னைச் சிங்கிகொண்டுவருத்தாநிற்க, விண்டுகாட்ட வொண்ணாத எனது நெஞ்சம் இவன்பாலுள்ள உத்தமகுணங்களையெல்லாங் கிரகித்துக்கொண்டு, அதற்கீடாக என்னை விற்றுவிட்டது. அதனால், நான் இன்று ஒருவருக்குத் தொண்டுமாய்விட்டேன். ஒன்றிலும் இனி எனக்குச் சுதந்தரமில்லாமற் போய்விட்டது' என்று பலவாறு எண்ணமிட்டு வருந்தினாள். மீளவும், 'நமது உள்ளத்தைக் கவர்ந்துகொண்டு நம்மை நிறையழித்துச் சிறிதும் இரக்கங்காட்டாத இவ் வஞ்சகனைக்கொண்டுதான் யாது பயன்? இவன் யார்? நாம் யார்? இவனுக்கும் நமக்கும் என்ன ஸம்பந்தம்? இவன் நமக்குத் தஞ்சமல்லன்; இவனை ரக்ஷகனைக் கொள்ளின் மேல் நாம் இவனால் தளர்வுற்று வருந்தக் கடவேம்' என்று எஞ்சிநின்ற அந் நிலையிலுஞ் சிறிது தேறினவளைப்போலச்

சிறிதுபோது திடமாயிருந்தாள். இப்படியாக, அந்தப் பூங்குழற் கோதை நல்லாள் பலவாறு கொட்டிக் கொட்டி யளந்துகொண்டிருந்தபோது, 'இவனைக் காதலித்த நம்மைக்கொண்டு இவளுக்கு யாதொரு பிரயோஜனமுமில்லையானால், நாம் எதற்காக இவளிடந் தங்கியிருப்பது?' என்று கருதி யெழுந்ததுபோல நெஞ்சமானது தான் ஆதரித்த அவ்வரசர்கோமானிடஞ் செல்வதற்காக அவளைவிட்டு அதிவேகமாக எழுந்தது. அப்போது அவளது ஆவியும், 'நாவி மணக்கும் அழகிய கூந்தலையுடைய மாதே! நாமும் போய் வருகின்றோம்; எமக்கும் விடையளிப்பாயாக' என்று கண்டஸ்தலத்திலே சென்று அவளை வினவாநின்றது. 'குஸுமசாஅனை மன்மதனைப்போன்ற அக் குமாரன் நமது பார்வைக்கு எட்டுவனோ?' என்ற எண்ணத்தினால் அவள் தன் அழகிய நீலோற்பலம்போன்ற கண்களை நன்றாகக்கழுவிக்கொண்டாற் போலக் கண்ணீர்பெருகிற்று. இவ்வகையாக, நெஞ்சமும் அவள் எப்படி நிறுத்தினும் நில்லாமல் அவனிடத்திற்கே யோடியோடிச் செல்லாநிற்க, அதனால், ஆருயிரழிந்தழிந்து சோர்கின்ற அவ் வண்டிமிருந் தண்குழலாள் அவனது திவ்யரூபத்தின் மீதுள்ள விருப்பத்தினாலே சாளரத்தின் வழியாகச் செவ்விய மன்மதனைப்போன்ற அம் மன்னவகுமாரனிருக்குஞ் செய்குன்றைப் பற்பலகா லுற்றுநோக்கி, 'இவனை நாம் நமது கையினாலெழுதுவோமென்னில் வேர்வைநீர் அரும்பிவீழ்ந்து பூர்த்தியாகாவண்ணம் இடையே யழித்து விடுகின்றது. செவ்விய கண்ணாற் காண்போமென்றாலோ ஆனந்த பாஷ்பம் பெருகிப் பார்க்கவொட்டேனென்று தடுக்கின்றதே. அந்தோ! இதற்கு நான் என்செய்வேன்!' என்று வருந்தியிருந்தாள்.

அரசிளங்குரிசிலான அச் சந்திராபீடனும் அம் மணிமண்டபத்திலே, சுடர்வீசுகின்றதோர் மாணிக்கவேதிகையின்மீது பரப்பியுள்ளதொரு சயனத்திலே சாய்ந்துகொண்டு, கழற்கால் வீரனை கேயூரகன் அடிவருட, மாதர்கள் இருபுடையுஞ் சூழ்ந்துநிற்க வீற்றிருந்தனன். அங்ஙனம் வீற்றிருந்த காலையில், நிலைநில்லாம லூசலாடுகின்ற நெஞ்சினையுடையோனாய், 'கலவமாமயிலென்றே சொல்லத்தக்க அக் காதம்பரி களவுத்தன்மையைப் பொருந்திய தனது கடைக்கண்ணினாலே நம்மைப் பலபடி பார்த்தாள். நாமும் பார்த்தனம். நாம் பார்க்கும்போதெல்லாந் தலைகுனிந்து நாணமுற்று அழகாகப் புன்முறுவல் செய்தாள். அங்ஙன மிருந்தபின், தலையைச்சாய்த்துக்கொண்டு ஒன்றையும் இயம்பாமலிருந்து, தனது மனவருத்தத்தை யெல்லாம்எழுதிக் காட்டுபவள்போலக்கூரிய உகிர்நுனியினாலே தனதுமெத்தென்ற பஞ்சணையின்மீது கீறினள். தேறினவளைப்போல உடனே தனது துக்கத்தை வெளிக்காட்டாமல் அடக்கிக்கொண்டு மனமழிந்திருந்தாள். ஆகையால், இவைமுதலானவைகளெல்லாம் இவள் நம்மீது அருள்கொண்டு காதல் கூர்ந்திருந்ததை யறிவிக்கின்றன. எனினும், நாம் அவ்வாறு நிச்சயமாகக் கருதவுங்கூடாது. ஏனெனில், இந்த மாது கந்தர்வராஜனது மங்கை; நாமோ மனிதன்; ஆதலால் நமக்கு இந்த எண்ணந் தோன்றியது கேவலம்

மதியீனமே யன்றி வேறில்லை. மனிதர்களுக்கு அஸாதாரணமாகவுள்ள நொய்ம்மையானது என்னையும் மயக்கி, இவ்விதமான எண்ணத்தை யெனக்குத் தந்து, வீணாக எனது நெஞ்சகத்திலே சபலத்தை யுண்டாக்கி, சுனையிடத்திலே தெறித்த எண்ணெய்த்துளியை அச் சுனைநீர் மேலும் மேலும் பெருக்கிக்காட்டுமாறுபோல, அந்த வனிதாரத்தினத்தினது சிறியதோர் அருளை மேன்மேலும் வளர்த்திட்டது. இதுவே உண்மை. விஷயம் இப்படியிருக்க, நாம் எதற்காக வருந்துகின்றோம்? நம்மீது அப் பைந்தொடிக்கு விசேஷமான பற்றும் ஆதரமும் உண்டாயிருப்பது உண்மையேயாயின் வெற்றிவேளான மகரத்வஜன் தானாகவே எல்லாவற்றையும் வர வர வெளியாக்கி, நமது மனத்திலேயுள்ள சங்கையையெல்லாம் இப்போது ஒழித்துவிடமாட்டானோ?' என்று எண்ணி மிகச் சீரியதோர் பெருநிதியைக்கண்டு அதனைப் பெறுதற்குச் செயலில்லாத வறியவனைப்போல, அந் நேரிழையாள் பக்கலிலே பன்முறை சென்றுசென்று நெஞ்சமானது ஏமாந்துநிற்க, மணங்கமழும் மாலையை யுடையோனாகிய அம் மன்னவன் தனது வியாகுலத்தையெல்லாம் புறத்தே தோன்றாமல் தனது பெருந்தன்மையினாலே யடக்கிக்கொண்டு ஒருவாறு எழுந்திருந்து, அங்குள்ள மின்னிடை மடவார்களோடு பாடியும், மதுரமாக வீணையைத் தழுவி வாசித்தும், சூது சதுரங்கம் முதலிய விளையாடியும், சாஸ்திராராய்ச்சிசெய்தும் சிறிதுஸுகமாகப் போதைப் போக்கி யிருந்து, பின்னர் அரிய அப் பூஞ்சோலையைப் பார்க்க வேண்டுமென்ற பெரிய ஆசைமேலீட்டினாலே அக் கிரீடாபர்வதத்தினது சிகரத்திலே யேறிநின்றான். பெருஞ்சிறப்பினையுடைய அக் கந்தர்வராஜ புத்திரியும் மனம் வருந்தி, 'நமது மகாசுவேதை ஏன் இன்னும் வரவில்லை? போய்ப் பார்ப்போம்' என்று ஒரு வியாஜத்தை முன்னிட்டுக்கொண்டு, தானிருந்த அம் மேன்மாடத்திற்கும் மேலுள்ள நிலாமுற்றத்தின் மேலே யேறிநின்று, பூர்ண சந்திரமண்டலமென்று யாரும் ஐயுறும்படி அழகியதோர் வெண்கவிகை நிழற்ற, இரண்டிரண்டாக இருமருங்கிலும் நான்கு வெண்கவரிகளைத் தழைந்து பணிமாற, பாவையர்கள் பத்திருபதுபேர் அருகேவரப், பெரிய கயிலையங்கிரியின் சிகரத்திலே யேறிநின்று உலாவருகின்ற உமையவள் இவளே யென்னும்படி விளங்கினாள். மாதர்களுக்கு நடுநடுவே மறைந்துள்ள தனது ஜோதிமிக்க எழிலானது இடை யிடையே சிறிது தோன்றும்படி ஒசிந்தொசிந்து நின்றும், பிரியஸகியான மதலேகையினது கழுத்தைத் தழுவிக்கொண்டு நின்றும், மனமொத்த பாங்கியான தமாலிகையின் அழகிய தோள்களை ஊன்றிப் பிடித்துக்கொண்டு நின்றும், நெடுநேரம் இப்படி நின்றுநின்று, பன்முறையும் போய்ப்போய்த்தடுமாறுகின்ற மனத்தினாலும், தாவியோடாநின்ற கடை விழியினாலும் வடிவேற்குமாரனை அச் சந்திராபீடனது அழகையெல்லாம் ஆசைதீர வாரிப் வாரிப் பருகி, 'இதோ மகாசுவேதை வந்துவிட்டாள்' என்று கீழே இறங்கி, நீராடல் அருந்தல் முதலியவற்றில் விருப்பமில்லாதிருப்பினும் மகாசுவேதையின்பொருட்டாக அவற்றை யொருவாறு முடித்துக்கொண்டு மன

வேதனையோடிருந்தாள். சிறந்த போர்வீரனாகிய அச் சந்திராபீடனும் பொற்றொடியாளான காதம்பரி நிலாமுற்றத்தைவிட்டுக் கீழே யிறங்கிய வுடனே தீராத பெருங்காதலை யுடையோனாய்த் தானும் அச் செய்குன்றை விட்டிறங்கி, நேரிழையாராகிய சேடிமார்கள் நீராட்ட நீராடி, நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்து, அமுது செய்து, அந்தச் செய் குன்றின் தாழ்வரையின்மீது பசுமயில்கள் தந் தோகையை விரித்தாடுகின்ற அழகினைக் கண்டு களித்து, லதாமண்டபங்களும் பூஞ்சோலைகளும் புடை சூழ்ந்து பொலிகின்றதொரு மரகதப்பாறையிலே வீற்றிருந்தான்.

அங்ஙனம் இருக்கும்போது, க்ஷீராப்தியானது நிலைவிட்டெழுந்து அந் தரமேற் பரந்துவருந் தகைமைபோல ஒரு பேரொளியானது முன்னே வரக் கண்டு, 'நல்ல பட்டப்பகலிற் பூர்ணிமைச் சந்திரன்தான் உதித்திட்டதோ, அன்றி, ஆகாசகங்கைதான் புவியின்மீது அலையெறிந்து வருகின்றதோ' என்று வியப்புடனே அப்பேரொளியை உற்றுநோக்கிக்கொண்டிருந்தான். அப்போது, திருமகளையொத்த வனப்பினையுடைய கோடிக்கணக்கான மங் கையர் பலர் புடைசூழ்ந்து தன்னைச் சேவித்துவர, இருமருங்குஞ் சாமரை யிரட்ட, வட்டமான பெரிய் வெண்கொற்றக் குடைநிழற்ற, சுரர்தருவினு லளிக்கப்பட்டனவும், அரவுரிபோல் விளங்குவனவுமாகிய இரண்டு வெண் பட்டாடைகளைக் கையிலே யேந்திக்கொண்டு, பெருமித முடையோனாகிய கேயூரகன் முன்னே செல்ல, அழகியதோர் சிறு சண்பகப் பூமாலையைக் கையிலெடுத்துக்கொண்டு யாவராலுங்கொண்டாடத்தக்க தமாலிகையென் னும் சுந்தரி பின்னே வர, களப மப்பிய ஈரவஸ்திரத்தினாலே மறைக்கப்பட்ட தீர்த்த பாத்திரத்தோடு, நீங்காத தனது சின்னமாகிய பிரம்பினையும் இடது கையிலே சேரப்பிடித்துக்கொண்டு, ஒரு தெரிவைநல்லாள் வலக்கையைக் கொடுத்துக் கூடவே செல்லாநிற்க, ராஜவரிசையுடனே வருகின்ற மதலே கையையும், அவளருகாக வருகின்ற தரளிகையென்னும் அணங்கனையாளை யும், அவளது கரத்தின்மேலொளிர்கின்றதோர் பொற்றட்டின்மிசை அழ காக மடித்துப்போட்டிருக்கும் விலையுயர்ந்ததொரு சீனம்பரத்தின்மீது ஏற்றகை மாறுமலளிக்கின்ற வள்ளன்மை பூண்டாரது புகழ்போல, மாசற் றொளிரும் வெண்மதிக்கும் சிறந்த திருப்பாற்கடற்கும் அதிகமான வெண் மையுடனே தண்மையுமுடையதென மதிக்கத்தக்க பெரிய காந்தியோடு கூடிய ஒரு விலையில்லா முத்தாரத்தையுங் கண்டான். கண்டு, 'இதுதான் இப்பேரொளிக்குக் காரணமாகும்' என்று நிச்சயித்து, அந்த ஒண்டொடி மடந்தையை யெழுந்துசென் றெதிர்கொண்டான். சிறப்புமிக்க அம்மதலே கையும் மன்மதன்போன்ற வடிவழகையுடைய அப் பெருந்திறற்கோமகன் வீற்றிருந்த பாறையருகே சென்று, சிறிதுபோது அமர்ந்திருந்து, பின்னர் எழுந்து, அழகிய வளையல்களை யணிந்துள்ள தனது செங்கரம் வருந்துமாறு அச் சந்திராபீடன்மேற் பரிமளங் கமழ்கின்ற கலவைச்சந்தனத்தைப் பூசி, மாலதி மலர்மாலையையுஞ் சென்னியிலே சூட்டி, ஒளிவீசுகின்ற அம் முத்த மாலையைக் கையிலே யெடுத்துக்கொண்டு அக்காளையை நோக்கி, "அரசே!

எம்போன்றவர்களெல்லாருஞ் சிறிதும் ஐயுறுமல் உம்மை யணுகுவதற்கு இடந்தருவதெல்லாம் நுமது சிறந்தபேரருளேயன்றி வேறில்லை. இத்தகைய கருணைப்பிரவாகத்தைக் கண்டால் யார்தாம் நும்மை யணுகமாட்டார்கள்? இந்தத் தண்ணளியினுலும் ஒப்பற்ற இந்த ரூபாதிசயத்தினுலும் ஈடுபட்டு நுமக்கு ஆட்படாதவர்களும் இவ்வுலகிலுண்டோ? உத்தமமான இந்த ஸௌலப்பியத்தினுலும், விழுமிய இந்தச் சீலத்தினுலும் யாருடைய மனத்தைத்தான் நீர் கொள்ளைகொள்ளமாட்டீர்? கொழுந்தோடிப்படர்கின்ற பெரிய கீர்த்தியினுலே உலகினையெல்லாம் அளந்துயர்ந்த மகாத்துமாவாகிய நுமக்கு இப்போது நாங்கள் செய்கின்ற உபசாரங்களெல்லாங் கேவலம் உன்மத்தவியாபாரமும் மதியீனமும்போலக் காணப்படுகின்றன. அப்படியிருந்தபோதிலும், இவையெல்லாம் அமிழ்தம்போற் சிறந்தவளாகிய காதம்பரி நும்மிடத்திலே யுற்ற பெரியதோர் ஈடுபாட்டினுலே ஏந்தலாராகிய நும் விஷயத்திலே தனக்குள்ள விசுவாசத்தை யறிவிக்கின்ற மாத்திரமாகவே யுள்ளவென்று கொள்ளவேண்டும். உயர்ந்தவராயுள்ளோர்கள் பிராணனைக் கேட்டாலும், 'ஐயோ! வீணே பறிபடுகின்றதே' என்று கருதாமல் அவர்களுக்குக் கொடுப்பதன்றே ஆதரத்திற் கடுத்தது. நிற்க. இந்த முத்தாரமானது கடல்கடைந்து அமுதங்கொண்டகாலத்தில், அப்பாற்கடலிலுள்ள சிறந்த ரத்னங்களையெல்லாம் விண்ணவர்களான தேவர்கள் கைக்கொண்டபோது, அவர்கள் கைக்கு அகப்படாமல் அச் சிந்துவிலே நிக்ஷேபமாகப் புதைந்துகிடந்தது. அதனுலிது சேடனென்று பெயர்பெறலாயிற்று. இது இப்படியே நமது சமுத்திரராஜனிடத்தில் அநேககாலமாய் இருந்தபின், இதனை அவ் வாரிதியரசன் வருணனுக்குக் கொடுத்தான். அவ் வருணனும் இந்திரனுக்கு நல்கினுன். சிறந்த அணிகளையுடையோனுகிய அம் மகவான் எங்கள் கந்தர்வராஜனுக்கு அளித்தனன். எங்கள் இறைவனுங் காரிகையாளான காதம்பரிக்குத் தந்தான். அக் காரிகையும், 'நும்முடைய சீரணியுந் திருமேனியினழகே இதன் அழகுக்கு ஏற்றது' என்று யோஜித்து இவ்விடம் ஸமர்ப்பித்தாள். குற்றமற்றுயர்ந்த குணக்கடலாகிய நும்போன்ற பெரியோர்கள் புகழ் என்னும் ஆபரணத்தைத்தவிர மற்றோர் அணிகலன்களையும் விரும்பமாட்டார்களாயினும் எங்கள் அருமைக்கண்ணுட்டியாகிய காதம்பரியினது கரைகடந்த பிரீதியின் பொருட்டாக இதனை அங்கீகரிக்க வேண்டும். மற்றொரு விஷயமுங் கேட்டருள்வீராக. மாயோனுகிய திருமால் தான் தழுவிய மலர்மடந்தையான லக்ஷ்மியுடன் பிறந்ததென்ற காரணத்தினுலல்லவா குணுகுணவிசாரம் பண்ணுமலே தனது சிறந்த மணிமார்பினிற் கௌத்துவமென்னும் சிலாசகலத்தைச் சுமந்து வருந்துகின்றுன். அந்தமாயவன் நும்மை ஒப்பனே? அந்தக்கவுத்துவமணியும் இந்தப் பெருங்கதிர்வீசுகின்ற சேஷனுடைய குணங்களிலே ஏகதேசங் குணமுடையதோ? அத் திருமாமகளும் எங்கள் பெண்ணமுதாகிய காதம்பரியினுடைய அழகைச் சிறிதேனும் அநுஸரிக்க வல்லளோ? தையல் நாயகமாகிய எங்கள் ராஜபுத்திரி நீர் விசேஷமாக ஆதரஞ்செய்யத் தகாதவளொருத்தியுமல்லள்.

செய்யக்கூடிய எல்லா உவகைச்சிறப்பையும் இவள் விஷயத்திற் செய்திடினுங் குற்றமில்லை. பொய்யில்லாத எங்கள் சிநேகத்தை நீர் அனுதாஞ்செய்தாற்பூங்கொடியாளாகிய மகாசுவேதையையும் எங்கள் காதம்பரி நம்பாமல், அடியோடு சந்தேகங்கொண்டு வெறுத்து, லஜ்ஜையினால் தனது ஆருயிர் துறக்கவுங்கூடும். இதுநிமித்தமாகத்தான், மகாசுவேதையுந் தனது பிராண ஸகியான தரளிகையின் கையிலே மிக்க வெண்ணிறமுடைய இம்முத்தாரத்தைக் கொடுத்து, 'இது சேயிழையாளான எனது தோழி காதம்பரி முதன் முதலாகத் தெரிவித்துக்கொள்ளுகிற பெரிய சிநேககாரியமாயிருக்கிறபடியினாலே, இதற்கு நெஞ்சிலே யேதேனும் விகற்பமானதொன்றைக் கருதித் திகைத்திராமல் ஏற்றுக்கொள்ளவே வேண்டும். எந்த முகாந்தரத்தை முன்னிட்டாவது இதனை அங்கீகரியாமலிருக்கக் கூடாது' என்று சொல்லியனுப்பினாள். ஆகையால், இது நிக்கிரகிக்கத் தக்கதன்று" என்றுரைத்து, மேருவிலே நக்ஷத்திர மண்டலங்களைத் தொடுத்து அணிந்திட்டதுபோல, அச்சந்திராபீடனது திருமார்பிலே அம்முத்தாரத்தினை யணிந்தாள். மன்னவர்கோனும் அம்மதலேகையினது முகத்தைநோக்கி நகைசெய்து, "ஆயிழாய்! நான் ஒருவிதமாகவும் உத்தரஞ் சொல்லமாட்டாதபடி நீ சாதுர்யமாக வார்த்தை சொன்னதற்கு நான் என்னசொல்லப்போகிறேன்? மங்கையே! கேட்பாயாக. இப்போது நான் எனக்கு உரியனல்லேன் என்ற விஷயத்தை நீங்கள் அறியீர்களோ? அப்படியிருக்க, வாங்குவதற்கும் மறுப்பதற்கும் நான் யார்? இவ்விஷயத்தில் எனக்கு அதிகாரம் ஏது? உங்களது பெரிய ஆதரத்தினாலும் பண்பினாலும் உத்தமமான விழுமியகுணங்களினாலும் என் உள்ளம் இறுகக்கட்டுண்டுவிட்டது. ஆதலால், இனி நீங்கள் உங்களுக்கிஷ்டமான பணிவிடைகளிலே நியமித்து இவ்வடிமையை ரக்ஷித்தருளப் பிரார்த்திக்கின்றேன். சிறிதுங் கல்மஷமின்றி, 'நான் அடிமை' என்று கைங்கரியத்துறையிலே இழிகின்றவர்களுக்கு அங்ஙனம் அடிமையாதற்கு ஒரு சாதனமும் வேண்டுமோ? உயர்ந்த சன்மார்க்கத்தினாலும் பெருந்தகைமையினாலும் நிறைந்து விளங்குஞ் செல்வியாகிய காதம்பரியினுடைய தூய்மையான நற்குணங்களினாற் கருங்கல்லினும் வலிதாகிய வஞ்சகம்பொருந்திய எப்படிப்பட்ட நெஞ்சமுங் கசிந்துநின்றுருகும் என்பதற்கையமுண்டோ?" என்று பற்பலவிதமாக அருந்ததிக் கற்பினளாகிய அக்காதம்பரிவிஷயமான வார்த்தைகளையே நெடுநேரம்வரையிற் பிரஸ்தாபித்துக்கொண்டிருந்தபின், அம்மதலேகையைச் செல்லவிடுத்தான். அவ்விலங்கிழையாளும் விடைபெற்றுச் சென்றனள். அதன்பின்னர், யாவராலுங் கொண்டாடப்படுகின்ற அக் கந்தர்வராஜகன்னிகையும் சிறந்த வெண்பட்டினாலும், ஒளிவீசும் முத்தாரத்தினாலும், நறுமணங்கமழும் கலவைச்சந்தனத்தினாலுந் தன்னை யலங்காரஞ்செய்துகொண்டு, உதயகிரியிற் றோன்றிய சந்திரனே யென்னும்படி அக் கிரீடாபர்வதத்தின்மேல் விளங்குகின்ற மன்னவகுமாரனைப் பார்த்திடுவதற்காக, ராஜசின்னங்களானவற்றையும் மற்றுள்ள பரிஜன ஸமூகங்களையும் நிறுத்திவிட்டு, மின்னிடையாளான தமாலிகையுடனே மேன்மாடத்தின்

கட்சென்று, 'அம் மன்னவனது இதயத்தை நீர் கொள்ளைகொண்டோடி வாரும்' என்று தனது வேல்போன்ற நெடிய கடைக்கண்ணையும் முறுவலாகிய நிலவையு மேன்மேலுந் தாவுமாறு ஏவிவிடுத்து, 'இவள் அணங்குகொல் ஆயிழை கொல்லோ' என்றையுறுமாறு அங்ஙனே நின்றுகொண்டு செய்தனவற்றையெல்லாம் நாம் எங்ஙனம் இயம்புவது? அவ்வாறு நின்றுகொண்டிருந்தகாலையில், தன்னடைவேயெழுந்த பெரிய நாணத்தினாலே இதழ்கள் சற்று அரும்பும்படியாக நகைசெய்தும், இப்படியே செப்புதற்கரிய மற்றும் பற்பல சிங்கார சேஷ்டைகளையெல்லாஞ் செய்துகொண்டும் அந்த வடிவேற்காளையினது உயிரையும் உள்ளத்தையுந் வசமழியுமாறு அறவே கொள்ளை கொண்டு, வீரனான மன்மதன் கையிலேயகப்படுத்து மாலைக்காலம் நெருங்குமளவுங் கருத்தோடு நோக்கிக்கொண்டே நின்றாள். அப்போது, அக் கந்தர்வராஜ புத்திரியானவள் இவ்வாறு விரகமுற்றழிகின்ற வியாகுலத்தைக் காணமாட்டாமல் நீரிற் குதித்தாற்போலச் சூரியனும் மேல்கடலிலே வீழ்ந்து மறைந்தான். அப் பைந்தொடியாளது மனத்திலேயுள்ள பெரிய அநுராகமானது எங்கணுந் தோய்ந்ததோ என்னும்படி வானுந் திசையும் நிலனுமாகிய எவ்விடத்துஞ் செவ்வானம் பரந்து தோன்றிற்று. துணைபிரிந்த சக்கரவாக பக்ஷிகளின் நெஞ்சகத்திலே பொருந்திய காமத்தீயினது புகையேபோல அந்தகாரத்தினது கொழுந்துகள் எம்மருங்குஞ் சென்றுபடர்ந்தன. வலிமிக்க திக்கஜங்க ணிமிர்ந்து நின்று மேனோக்கி விடுகின்ற கரசீகரமென்னுமாறுவிசாலமான ஆகாயப்பரப்பிலெல்லாம் நக்ஷத்திரகணங்கள் நெருங்கியடர்ந்தன. அப்போது, மைதீட்டிய தனது கயல்விழிக்கு உருவந் தெரிவுறாததனால் அம் மடமங்கையும் மேன்மாடத்தைவிட்டுக் கீழே யிறங்கினாள். அவனிபதியாகிய அச் சந்திராபீடனும் மான்போன்ற அழகிய மங்கைமார்கள் விளையாடுகின்ற அச்செய்குன்றினின்று மிழிந்தான். அப்போது சந்திரனானவன் ஊடலுற்ற தனது பத்தினியாகிய ரோகிணியினது செம்பஞ்சுக் குழம்புதோய்ந்த சரணதாடனங்களினாலே செந்நிறம்பெற்று வந்தவனைப் போல உதயராகத்தைப் பொருந்தி ஒளிர்வுற்று மேலே யெழுந்து, சிறந்த காமராஜனது எல்லையில்லாத ஏகராஜ்யத்திற் கமைந்ததோர் தனிப்பெருங் குடையாய், இந்தமூன்றுலோகத்தையுந் தனதுநிலவினால் நிரப்பிக்கொண்டு விளங்கினான். அவ்வாறு அவன் இலங்கியகாலையில், நிலவிடையே நிலவு விரிந்தாற்போல மலர்ந்துவிளங்கியதொரு குமுதவாவியினது, அலைமோதுகின்ற தரங்கமாகிய ஆலவட்டங்களினின்று மெழுந்த சீகரமாருதமானது மந்தமாக அசைய, அதனால் அன்னங்களெல்லாம் இன்பத்தோடு கண்டுயில் கொள்ள, புணர்ச்சி நீங்கிய சக்கரவாகப் புட்களெல்லாமிரங்கிக்கதறுகின்ற கரையினருகே, சந்தனத்தினாலே மெழுகப்பட்டு அழகிதாக விளங்காநின்றதொரு தாளப்பாறைப் இறைமகளது சேடிமார்கள் காட்ட, அழகுக் கழகு தருபவனான அச் சந்திராபீடன் அதன்மீது வீற்றிருந்தான்.

அவ்வாறு அவன் வீற்றிருந்த காலையில், அவ் வள்ளலை வழிபடுவோனாகிய கேயூரகன் என்னும் வீரன் விரைவாக ஓடி வந்து, அவனது பாத

பங்கயங்களைப் பணிந்து மிகவும் ஸாவதானமாய், 'அரசே! நின்னைக் காண வேண்டுமென்னும் வேணவாவினாலே காதம்பரி வந்தருளினாள்' என்று தெரிவிக்க, அவ் வார்த்தையைக் கேட்டுக் களித்துச் சரேலென் எழுந்திருந்து சந்திராபீடன் அவளை எதிர்கொண்டு சென்றான். அப்போது, எல்லாவித வரிசைகளேயும் வாய்த்துள்ள அக் கந்தர்வராஜ கன்னிகையும் சிறந்ததோர் ஏகாவலியை* மாத்திரமணிந்து, வெண்ணிறம் பொருந்தியதோர் தோட்டை ஒற்றைக் குழையின்மேற்றரித்து, வெள்ளிய குமுததளமொன்றைச் செவித்தாராக வைத்து, வெண்சாந்து பூசி, சுரர்தருவிலே பிறந்ததும், புகழ்தற்கரியதுமான இரண்டு வெண்பட்டுக்களை உடுத்துக்கொண்டு, ராஜசின்னங்களெல்லாவற்றையும் நிறுத்திவிட்டு, மிதமாகப் பத்திருபது பாங்கிமார்களே தன்னைச் சூழ்ந்து வர, மதலேகை செங்கை கொடுத்துச் செல்ல, சிறந்த திங்கட்செல்வனது திருமுன்பே செல்லும் உரோகிணியைப்போலப் போய், அச் சந்திராபீடன் வீற்றிருந்த பாறையின்கீழே, தாழ்ந்த பதவியிலுள்ளவரைப் போல இருந்தாள். அதுகண்ட அவ்வரசர் பெருமானும், 'தூய இப் பாறையின் மீதேயே இரும் இரும்' என்று அத் தோகைநல்லாள் பன்முறைசொல்லவுங் கேளாமல் நிலத்திலேயிருந்தான். மற்றுள்ள பரிஜனங்களெல்லாரும் இவர்களைச் சூழ வந்து உட்கார்ந்திருந்தார்கள். கொற்றவேலரசனான சந்திராபீடன் சிறிதுநேரம் மவுனமாயிருந்து, பின்னர்ப் பின்வருமாறு கூறுவானாயினான்: "எங்கள் கோமகளாருடைய கிருபாநோக்கமொன்றையே பெற்று, அதனாலேயே பரிபூர்ணமான வாழ்வினை யுடையவர்களாய்க் களிக்கின்ற அடியார்கள் திறத்திலே ஒரு வார்த்தை சொல்லக் கேட்பதும் பெரியதோர் ஏற்றமேயன்றோ? அற்பனாகிய எனக்கு இவ்விதமான கவுரவங்களை யெல்லாம் அளித்தருளுந் தண்ணளிக்கு அடியேன் யாது செய்யவல்லேன்? அற்பனென்று என்னை உதாஸீனஞ் செய்யாமல், இவர் இவ்விதமான உபசாரங்களெல்லாஞ் செய்வதற்குத் தக்கபடி ஒரு சிறிது குணமேனும் என்பாலுள்ளதோவென்று ஆலோசித்துப் பார்த்த அளவில், நான் அவ்விதம் ஒரு குணமும் என்பா லிருப்பதாகக் காணேன். வள்ளியோர்களான பெரியோர்கள் ஒன்றை உள்ளியோ உபசரிப்பார்கள்? அருளே அவர்களுக்கு ஸ்பாவமன்றோ? பெரியோர்களுடைய உபசாரத்தினாலல்லாமற் சிறியவர்கள் வசப்படமாட்டார்களென்பதும் வாய்மையே. ஏவிய பணிவிடைகளைச் செய்து உய்யும் இவ் வடிமைக்கு இந்த ஆதரமெல்லா மெதற்காக? கருணைகூர்ந்து தேவி இன்று இங்கே எழுந்தருளியதற்கு நான் என்ன சிறப்பைச் செய்யப்போகின்றேன்? சிறிதாகிய இந்த ஆவியையும், அற்பமாகிய இந்த உடலையுமே நான் பாதகாணிக்கையாக வைத்தேன். அன்போடு வழங்கிய இந்த இரண்டையும் அங்கீகரித்து, இவற்றிற்கோர் கவுரவத்தைச் செய்யின் அடியேன் உஜ்ஜீவித்தவனாவேன்" என, இவனது வார்த்தையைத் தடுத்துக், கோமகளுக்கு அந்தரங்க ஸகியான மதலேகையென்பவள் புன்முறுவல் செய்து, 'நாயகமே! நீர் இவ்வாறு

* ஏகாவலி-ஒற்றை வடத்தாலாகிய முத்தமாலை.

நயந்து மொழியவேண்டிய அவசியமொன்றுமேயில்லை இதன் முன்னேயே புனையிழையாளான எம் காதம்பரி நம்முடைய உடல் பொருள் ஆவியை யெல்லாந் தனதேயாகப் புகுந்து கைக்கொண்டுவிட்டனள். இப்போது, நீர் மொழிந்த உபசாரங்களெல்லாம் நிஷ்பிரயோஜனங்களாகவே யுள்ளன. ஆகையால், நீர் இவ்வித உபசாரமான வார்த்தைகளொன்றையும் மொழிய வேண்டாம்' என்று சொல்லிப், பின்னர்த் தாராபீடனது இயல்பையும், இவனைப்பெற்ற வயிறுடையாளான பெருந்தேவியாகிய விலாஸவதியினது கற்பையும், மனமொத்த தோழனுகிய சுகநாதனது பெருங்குணத்தையும், இவன் இனிது வீற்றிருக்கும் ராஜதானியாகிய உச்சயினிமா நகரத்தினது சிறப்பையும், லக்ஷ்மிவிலாஸத்தையுடைய அப்பட்டணம் எத்தனை நாட் பயணம் என்பதையும், மானிடலோகத்தினது நலத்தையு மிவைமுதலாகிய பிறவற்றையும் உவந்து கேட்டுக்கொண்டபடியே விருப்பத்தோடு சிறிது போது அங்கேயிருந்தாள். அன்னமும் மயிலும் அமுதமு மனையாளாகிய காதம்பரியும் மன்னனிடம் விடைபெற்றுக்கொண்டெழுந்து, அவ்வேந்தனருகே கேயூரகன் துயிலுமாறும், வேண்டிய சேடியர்கள் பணிவிடைகள் செய்துநிற்குமாறுங் கற்பித்துவிட்டு, அங்குநின்றுமகன்று உயிர்போற் சிறந்தவர்களான பாங்கிமார்கள் சிலருடனே தான் நித்திரைபுரியும் மேன்மாடத்திலே பிரவேசித்தாள். காரணகாரியங்களை நன்றாக விசாரித்து அறியவல்ல குசலபுத்தியையுடையோனுகிய அச் சந்திராபீடனும் அக் காதம்பரியினது பெருங்குணத்தையும், மாதவத்தாலுயர்ந்த மகாசுவேதையினது நிர்ஹேதுகமான ஸ்நேகத்தையும், உயிர்ப் பாங்கியாய்ச்சிறந்த மதலேகையினது வினயத்தோடுகூடிய உத்தம ஸ்வபாவத்தையும், சேடியர்குழாங்களின் நன்றியையும், அவர்களது பெருந்தகைமைகளையும், மிகுந்த பிரதாபத்தையுடையனுன கந்தர்வபூபதியினது அளவுபடாததோர் பெரிய செல்வத்தையும், வானுலகத்தாரும் புகழ்ந்து பாராட்டுகின்ற அக் கிம்புருஷ லோகத்தினது வளப்பத்தையும் மனத்திலே சிந்தித்துப், பெரிதும் வியந்து சிலாகித்து, அந்த வெள்ளிய தாளப்பாறையின்மீது, மனத்திற்கிசைந்தவனை கேயூரகன் அடிவருட அருள்விழிதுயின்று கங்குற்போதைக் கழித்தான். ஊனமின்றி யொளிர்கின்ற கதிர்மதியோனுங் குடகடலின் கரையிலேயுள்ள தால விருக்ஷங்களடர்ந்த வனத்திலேயிழிந்து மறைந்திட்டான். சந்திராபீடனும் அருணோதயகாலத்திலே யெழுந்து நீராடிச் சிறந்த நித்தியகர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்துவிட்டு, 'நமது செல்வியாகிய காதம்பரி திருப்பள்ளி யுணர்ந்தனளோ? கேயூரகா! நீ போய்ப் பார்த்துவா' என, அவன் போய்ப் பார்த்துவந்து, 'உயர்ந்தமேன்மாடத்தின் கீழேயுள்ள அழகிய நிலாமுற்றத்திலே யொரு ஸ்படிகமேடையின்மீது, நமது மகாசுவேதையுடனே வீற்றிருக்கின்றனள்' என்று சொன்னுன். அதுகேட்டு, அம்மன்னவர்பெருமானுமெழுந்துசென்று, ஷண்மதங்களிலுமுள்ள பெரிய தவக்கோலத்தைப் பூண்ட நரைத்த கூந்தலையுடைய நல்ல ஔவைமார்களெல்லாந் தத்தம் மார்க்கங்களுக்குரிய நல்ல ஸ்தோத்திரங்களைச் செய்துகொண்டிருக்க,

கின்னர மிதுனங்கள் வங்கியம் பிடித்தூத, கீதநாதனாகிய நாரதனது புத்திரியும் மகாசுவேதையும் பின்னேயிருந்து வேதமெனப்புகழ்ந்து போற்றப்படுகின்ற மகாபாரதத்தை இனிய பற்பல இசைகளிலும் அமைத்துப்பாட, கன்னியர்கள் மணிக்கண்ணாடிகாட்ட இனிதாகக் கண்டுகொண்டிருக்கின்ற காதம்பரியைக்கண்டு, அச்சேடிமார்கள் அந்த வேதிகையிலேயிட்ட ஆசனத்திலே யமர்ந்திருந்தபின்னர், இனிய அருளோடுகூடிய தவமங்கையாகிய மகாசுவேதையினது முகத்தைநோக்கிப் புன்முறுவல் செய்தான். அதனால், அம் மன்னவனது மனக்கருத்தை யின்னதென அறிந்தவளான அம் மகாசுவேதையுங் காதம்பரியினது முகத்தைப்பார்த்து, 'சந்திரனது கிரணத்தினாலே யழகிய சந்திரகாந்தச்சிலையானது எப்படி யுருகிவிடுமோ அப்படியே அம்மா, காதம்பரி! நினது குணங்களினாலே சந்திராபீடன் மனமுருகிச் சொல்லமாட்டாமல் இருக்கின்றான். சிந்தையிலே திரும்பிப்போகவேண்டுமென் றபிப்பிராயமுடையவன்போலும். நியாயந்தான்; சீக்கிரமாக இவன் செல்லாதிருப்பின், செய்தியென்றையுமறியாமல் தியங்கி, இவனது ராஜ சமூகங்களெல்லா மிவனை எதிர்நோக்கி வருத்தமுற்று வாடாநிற்கும். இனி இவன் அதிதூரத்திலே யிருப்பினும், நீங்கள் இருவரும் பரஸ்பரம் இனிய காதலர்களாய், மதியமுங் குமுதமும் போலவும், பரிதியுங் கமலமும் போலவும் மனங்கலந்து பல்லாண்டு பல்லாண்டாக வாழ்க. என் கண்ணே! இப்போது போய்வரச்சொல்லு' என்று சொல்ல, அம் மாதரசியும் மிடறு தழுதழுத்தேற மகாசுவேதையை நோக்கி, 'பள்ளத்திலே யோடிப்பாயும் நன்னீர்போல, நானும் எனது பாங்கிமார்களும் ஆயவெள்ளத்தார்களும் இவ்வள்ளலார்வசமே யாயினோம். இனி, இதனினும் அதிகமாகச் சொல்லத்தக்கதோர் வாசகமில்லை' என்று சொல்லி, கந்தர்வகுமாரர்கள் பலரையழைத்து, 'இந்த மன்னவகுமாரரை யழைத்துக்கொண்டுபோய், இவருடைய சேனைவெள்ளங்கள் தங்கியுள்ள இடத்திலே இவரை விட்டுவிட்டு விடைபெற்று மீளுக' என்று நியமித்தனுப்பினாள். சந்திராபீடனும் எழுந்திருந்து மகாசுவேதையை முற்படப் பணிந்து, பின்னர்க் காதம்பரியையும் வணங்கி நின்று, 'நான் இனி என்னசொல்லப்போகிறேன்? மிகைபடச்சொன்னால் உலகம் யாரையும் நம்பாதே. நெருங்கிச் சூழ்ந்துள்ள தாஸவர்க்கத்தவர்களது பிரஸ்தாபம் வரும்போதெல்லாம் நானும் நினைக்கத்தக்கவன். இங்ஙனம் பிரார்த்திப்பதற்கு நான் உரியனென்றே யெண்ணுகின்றேன்' என்று சொல்லிக்கொண்டு புறப்பட்டான். அப்போது, இறைவியாகிய காதம்பரி நீங்கலாக மற்று அங்குள்ளவர்களெல்லாரும் புரவலனாகிய சந்திராபீடனது குணங்களினாலே கட்டுண்டவர்களாய் அவனைப்பின்றொடர்ந்து, மதிற்புறமளவுஞ் சிறப்போடு சென்று வழியனுப்பினார்கள். சந்திராபீடனும் அங்ஙனம் பின்றொடர்ந்து வந்த அவர்களை யங்கேயே நிற்கச்சொல்லி, முன்னாடியே கேயூரகனாற் கொண்டுவரப்பட்டு நின்ற இந்திராயுதமென்னும் புரவியின்மீது ஏறிக்கொண்டு, வலிமிக்க படைவீரர்கள் சூழ்ந்துநின்று தனது பொற்பதங்களைப் போற்றி வழிபட்டொழுக வழிப்பட்டான்.

அம் மன்னவ குமாரனது மனக்கருத்தை நன்கறிந்தவள்போல இறைவியாகிய காதம்பரியும் அவனது நேசபாசந்தான் பிணித்திழுத்திட்டதோ என்னும்படி அவன் பின்புபோய் நின்றும், 'போகவேண்டாம்' என்றுஎதிர் சென்று வழிமறிப்பாள்போலக் கலைநிறைந்த பனிமதி யனைய அவ் வள்ளலின் முன்புபோய் நின்றும், அவனைப் பற்றிப் பிடிப்பாள்போலப் பல பல வடிவுகொண்டு அவனை எம்மருங்குஞ் சூழ்ந்து நின்றும், அவன் நாடிப் பார்க்கும்போது, அவனது மனத்திலே யொளித்து நின்றும், இங்ஙனமாக அவனைச் சிறிதும் இடைவிடாது பின்றொடர்ந்துசெல்லச், சந்திராபீடனும் அச்சோதப் பொய்கையினது கரையை யடைந்தவளவில், எவ்வளவுதூரஞ் செல்லினும்நடைதளராதசிறந்த வயப்புரவியாகிய அவ்விந்திராயுதத்தினது அடிச்சுவட்டையே யடையாளமாகக்கொண்டுசென்று, அங்கிருந்த தனது படையை யெல்லாங் கண்டு களித்து, வழிவிட வந்தவர்களான அக்கந்தர்வ குமாரர்களையெல்லாந் தமது பதிக்குத் திரும்பிச் செல்லுமாறு விடைகொடுத்தனுப்பிவிட்டு, வீரர்களான அரசர்களெல்லாரும் முறைமே எதிர்கொண்டு ஆர்த்தெழத் தனது பாசறைக் கோயிலாகிய கூடாரத்தையடைந்தான். பின்னர்த், தன்னை வழிபடவந்தவர்களான அரசர்களையெல்லாம் விடைகொடுத்தனுப்பித் தனியே யிருந்து, அன்புடைத் தோழனான வைசம்பாயனனுக்கும், இணைபிரியா தருகேயிருந்த குலூதராஜ புத்திரியான பத்திரலேகைக்கும் சிறந்தவர்களான மகாசுவேதை, கேயூரகன், கந்தர்வராஜ புத்திரியான காதம்பரி, அவளின்னுயிர்த்தோழியான மதலேகை தமாலிகை என்னும் இவர்களுடைய உயர்ந்த ஸ்வபாவங்களையும், சிநேகத்தையும், மற்றைக் குணங்களையும்பற்றிக் கூறிக்கொண்டே பகற்போதை யெல்லாம் போக்கினன். அந்திக்கால மணுகவும், நித்திரைமடந்தையானவள் சந்திராபீடனது சிந்தையெல்லாஞ் சேயிழையாளாகிய காதம்பரியிடத்திலேயே சென்றிருப்பதை யறிந்து அவனை விட்டுப் புலந்துபோய்விட்டாள்.* அப்படியே, அம் மன்னவ குமாரனும் அந் நித்திரைமடந்தையிடத்தில் விரஸத்தையடைந்து, மனம் வருந்தி, மாசற்ற பெண்ணமுதாகிய காதம்பரியை நினைத்துக்கொண்டே விழித்திருக்குங்காலையிற் கங்குற்போதுங் கழிந்தது.

சந்திராபீடனும் அதிகாலையில்எழுந்திருந்து, பிராதக்கால நியமங்களையெல்லாஞ்செய்து முடித்துக்கொண்டு, அரசர்கள் அடிபணிய இனிது வீற்றிருந்தகாலையில், ஆருயிர்க்காதலியாகிய காதம்பரியின் இடத்தில் முன்புபோலவே அன்புமாறாதிருந்துள்ள மனத்தையுங் கூட்டிக் கொண்டு தன்னருகே வந்தாற்போல, வாயில்காப்பவளான ஒரு பிரதீஹாரியுடன் அன்புமிக்க கேயூரகனாகிய தூதன் தூரத்திற்றோன்றித் தொழுதுகொண்ட வண்ணமாகவே சமீபத்தில் வந்தடைந்தான். அவனைக் கண்டதும், 'வருக வருக,

---

* "இந்நித் திரைமடந்தை யெய்தலுமா யிற்றோவென்
றன்னித் திரைமடந்தை யூடினளாய்."
என்று திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார் அருளிச்செய்திருத்தல் காண்க. திருநறையூர் நம்பி மேகவிடுதூது. அடி, எசு.

இங்கே வருக' என்று பெரிதும் மகிழ்வுற்று அவனை மார்புறத்தழுவச் சென்றதும், அவன், தான் அத்தகைய பெரிய மரியாதைக்கு அருகனல்லனெனப் பெருகக்கூறிப்பின்செல்லவும், விடாமல் வலியப்பிடித்துத்தழுவிக்கொண்டு, ஒளிவீசுந் தனது ரத்னஸிம்மாஸனத்தின் கீழாக இருக்கச்செய்து, அன்பாலகமுருக, அகலம் புளகமெழ, அழகாகப் புன்முறுவல் செய்துகொண்டிருந்தான். அக் கேயூரகனும் இவனது வெள்ளிய நகையொளியாகிய அமுத வெள்ளத்திலே மூழ்கி, வந்த சிரமமெல்லாந் தீர்ந்து, ஸுகமாக உட்கார்ந்திருந்தான். அப்போது, சந்திராபீடன் அவனை நோக்கி, 'மகிழ்ச்சி மிக்க பெரிய ஆயவெள்ளத்தார்களுடனே செல்வியாகிய காதம்பரி சுகமேயிருக்கின்றனளா? தவள நிறம் பொருந்திய திவ்ய திருமேனியையுடைய நமது மகாசுவேதையுஞ் சுகந்தானே?' என, அவனும், 'தேவரீருடைய திருவுள்ளச் செயல் இங்ஙன மிருக்கும்போது, அரசே! அவர்கள் ஸுகமாக இருக்கின்றார்க ளென்பதைச் சொல்லவும்வேண்டுமோ?' என்று சொல்லி, தாமரையிலையிலே வைத்து, அதன் தந்துவினாலேயே நன்றாகக் கட்டி, மேலேயப்பியுள்ள களபத்திலே யாரும் அவிழ்க்கமுடியாதபடி யத்தாமரை வளையங்களினாலே நன்றாக முத்திரையிட்டு, ஈர வஸ்திரத்தினாலே மூடப்பட்டிருந்த இப்படிப்பட்டதொன்றை வீரக்கழலோனாகிய அச் சந்திராபீடனிடங் காட்டி, விரைவாக அவிழ்த்து, அதற்குள்ளேயிருந்த பரிமளம் பொருந்திய கலவைச் சந்தனம், பாக்கு, வெற்றிலை, கற்பூரமாகிய இவற்றை யெல்லா மெடுத்துத் திருமுன்பே வைத்து வணங்கிப், பின்வருமாறு ஒரு வார்த்தை சொல்வானாயினன்: "வேந்தே! நான் இங்கே வருவதாகப் புறப்பட்டபோது சின்னஞ்சிறிய சிவந்த பாதங்களையுடைய எமது பெருமாட்டியாகிய காதம்பரி யங்கே யிருந்தபடியே தனது செங்கையை முடியின்மேற் சேர்த்து நம்மைத் திசைநோக்கித் தொழுதாள். அரிய பெருந்தவத்தினளாகிய மகாசுவேதை குளிர்ந்த மனத்தோடு பற்பல ஆசி மொழிகளை வழங்கி, நம்மை யிறுகத் தழுவிக்கொண்டாள். சூளாமணியினொளியும் நீண்ட கருங்குழலும் நுதலின்மேற் பொருந்துமாறு மதலேகையுந் தன் தலைவணங்கி வழிபட்டாள். மின்னற்கொடிபோல நுடங்கும் இடையினை யுடையாளாகிய தமாலிகையும், பலவிதமான புஷ்ப கதம்பங்களை முடித்த அழகிய அளகபாரத்தினையுடைய மதரிகை முதலான பாங்கிமார்களும் படிமேல் முடிபொருந்துமாறு படிந்து நுமது திருவடியைப் பணிந்தார்கள். பின்னும், மாதவ மடந்தையாகிய மகாசுவேதை, 'தம்மை யனுகாம விருந்தவர்கள் எவர்களோ அவர்களே மிகுந்த பாக்கியசாலிகள். ஏனெனில், சிறந்த தமது நற்குணங்களாகிய சீதளமான சந்திர கிரணங்கள் விச்லேஷ காலத்தில் மிகுந்த தாபத்தைச் செய்கின்ற சூரிய கிரணங்களாக மாறிவிடுகின்றன. தமது பிரிவானது பற்றொன்றும் இல்லாத எம்மை முதலாக இடருறும்படி செய்துவிட்டது. இனி, இதைவிட வேறு என்ன சொல்லவேண்டியிருக்கின்றது? இங்குள்ளவர்களெல்லாரும் அமுதம் பிறந்த திருநாளைப்போலப் பெரிய குதூகலத்தை யளிக்கு முன்னாளை

அகநிறைந்த அன்போடு அபேக்ஷித்து நிற்கின்றோம். எங்களுடைய அழகிய இந்த நகரமுந் தாம் ஏகியபின் சோபையற்றிருக்கின்றது. எனது நெஞ்சமும் முன்புதனிலுந் தம்மைக் காண்பதற்கு ஆதரத்தோடு முயல்கின்றது. அதுவுமன்றி எங்கள் அருமைக் கண்ணாட்டியாகிய காதம்பரியுந் தன் அரிய ஸௌகுமாரமான திருமேனி மிகவும் மெலிவுற்று, மன்மதனைப் போன்ற தம்மையே ஸதா நினைந்துவருந்துகின்றாள். ஆகையால், எம் நகரத்திற்குத் திரும்பவும் ஒருமுறை விஜயஞ்செய்து, இக் காதம்பரிக்கு ஒரு பண்புந் தாமுந் தரவேண்டும். இதுவே கருணைக்கடையாளம். இறைவனே! இன்னமும் ஒன்றுண்டு. நும்மை அடுத்தவர்கள் விஷயத்திலே அதிஸௌலபமாகச் செய்யப்படுகின்ற நுந் திருவருளே யாங்கள் நுமது பெருமையையும் எமது சிறுமையையும் மதியாமல் இப்படிப் பற்பல விஷயங்களை எல்லாந் தொடுத்துச் சொல்லும்படியாக ஒரு புத்தியைக் கொடுத்திட்டது. அதனால், எம்போல்வார்கள் நும்விஷயத்தி லபசாரப்பட்டனவற்றை யெல்லாம் க்ஷமித்தருள்வது, கடலை ஆடையாக உடுத்திட்ட புவனியையெல்லாம் அன்போடு ரக்ஷித்தருளுந் தம்மைப்போன்ற வீரர்களாகிய அரசர்களுக்குக் கடமையாகும்' என்று மொழிந்து, தேவரீர் அங்கு விஜயஞ்செய்திருந்தபோது சயனித்துக்கொண்டிருந்த கட்டிலின் கீழே, வரும்போது மறந்து வைத்துவிட்டு வந்த சேஷனென்னும் அழகிய இந்த முத்தாரத்தையுங் கொடுத்தனுப்பினாள்'' என்று சொல்லி, உத்தரீயத்தில் முடிந்திருந்த சிறந்த அம் முத்தாரத்தைச் சாமரைவீசிக்கொண்டிருந்த ஒரு சேடியின் கையிலே கொடுத்தான். அவனீபதியாகிய அச் சந்திராபீடனும், 'தவமடந்தையாகிய மகாசுவேதையின் பாதசேவைப் பயனானது இம் முத்தாரமாகவந்து பலித்தது. இதனது உத்கர்ஷ மிப்படிப்பட்டதென்று நம்மாற் சொல்லக்கூடியதோ? நல்லது, இத்தத்துவத்தை யுள்ளபடி யறிந்தன்றோ இறைவியாகிய காதம்பரியும் இதனை யிங்கே வரவிடுத்தாள். இதனால் அம் மொய்பூங்குழலாளுக்கு என்மீதுள்ள பூரணமான விசுவாசம் வெளியாகின்றது. இனி இதைவிடச் செய்யத்தக்கது மொன்றுண்டோ?' என்றுகூறி, அம் முத்தமாலையை வாங்கியணிந்து, பானிலாப்போன்ற வெற்றிலையிலுஞ் சிறிது எடுத்துக்கொண்டு, ஸிம்மாஸனத்தை விட்டெழுந்திருந்து, சிறந்த அக் கேயூரகனது தோளிலே தனது இடது கையைப் போட்டுக்கொண்டு, பெருமிதந்தோற்ற நின்று, அங்குள்ள வேந்தர்களுக்கெல்லாந் தக்கவாறு விடைகொடுத்தனுப்பிவிட்டு, அக் கேயூரகனுடனே யானைக்கூடத்தின்கட் சென்று, அங்கே தறுகண்மையோ டசைந்து கொண்டிருந்த வலிமிக்க கந்தமாதனமென்னும் அரசயானையையும், அதன்மீது கடல்போலப் பெருகிக்கொண்டிருக்கின்ற மதவெள்ளத்தையுங் கண்டு, சிறிதுபோது அவ்விடத்திலே நின்று, அக் களிற்றின்மீது மொய்த்துக்கொண்டிருக்கின்ற வண்டினங்களை யோட்டி, ஒரு புற்கவளத்தையும் அதன் வாயிலே கொடுத்து, அங்குநின்று மகன்று, சிறந்த குதிரைகளெல்லாங் கட்டப்பட்டிருக்கும் மந்துரையை நோக்கிச் சென்றான். அப்போது, முருகனைப்போன்ற திவ்ய ஸௌந்தரியத்தையுடைய அம்மன்னவகுமாரன்

இருமருங்குந் திரும்பிப்பார்த்த குறிப்பினையறிந்து, அங்கே நின்ற வேலைக்காரர்கள், ஒருவரும் உள்ளே பிரவேசியாவண்ணம் எல்லா வாயில்களையும் மூடிவிட்டார்கள். பின்னர், சந்தோஷசமாசாரத்தைக் கொண்டுவந்தவனை கேயூரகனுந் தானும் அம் மந்துரைக்குட் பிரவேசித்தவளவில், அரசனது முகக்குறிப்பை யறிந்த அக் குதிரைச்சாலையி லுள்ளவர்களெல்லோரும் அச்சமுற்று அரசனைத் தொழுதுகொண்டிருந்தபடியே கொஞ்சங்கொஞ்சமாகப் பிற்காலித்து அக் குதிரைப்பந்தியினின்று மேகிவிட்டார்கள். அதன் பின்னர்க் காண்பதற்கு யோக்கியமான சிறந்த இந்திராயுதமென்னும் வயமாவைக் கண்டு, அதன் முகத்தைத் தடவிக்கொடுத்து, மிகுந்த ஒளியையுடைய கேசரத்தைத் திருத்தி, விலகிப்போயிருந்த முதுகிற் றுணியை நன்ருக இழுத்துமூடி, அதன் பின்னலேயுள்ள ஒரு மூலையிலே ஒரு தாளையுதைந்து, ஒரு ஸ்தம்பத்திலே சாய்ந்துகொண்டு, கேயூரகனது முகத்தைப் பரிவோடு பார்த்து, 'நாம் இங்கே வந்தபின்னர் நேற்று நடந்த விசேடங்களென்ன? என்னை நினைத்தவர்களுண்டோ?' என்று கேட்க, அன்புடைய அக் கேயூரகனும் அப் பூபதியைநோக்கி, "அங்குநின்று நீர் புறப்பட்டவளவில், அளவில்லாத ஆயவெள்ளத்தார்களுடனே எமது பெருமாட்டியாகிய காதம்பரி மேன்மாடத்தின் மீது ஏறி, வழியைப் பார்த்துக் கொண்டே நின்று, நீர் கண்ணுக்கு மறைந்தபின்னும் மதலேகையினது தோளின்மீது சாய்ந்துகொண்டு, இந்தத் திசையிலேயே தனது விழியைச்செலுத்தி, நெடுநேரம் வரையில் திகைத்து நின்ருள். பின்னர்க் கீழேயிறங்கி ஆஸ்தானமண்டபத்தையடைந்து, சிறிதுபொழுதொன்றுஞ் செய்யாமற் றிகைத்துநின்று, மிக்க ஸ்நேகத்தோடு கூடிய நுமது தண்ணளியையே பற்றுக்கோடாகக் கொண்டெழுந்திருந்து, மனோகரமான அக்கிரீடாபர்வதத்தின்கட் சென்று, செல்வா! நீர் வீற்றிருந்த அழகிய மயில்சூழ்ந்த குளிர்ந்த அம் மரகதப் பாறையிலே அன்போடு வந்திருந்து, 'இது எனது வீரன் வீற்றிருந்த இடம்; இது என் செல்வன் நீராடிய இடம்; அப் புண்ணிய புருஷன் பூஜைசெய்த இடமிது; இது என் அண்ணலமுதுசெய்த இடம்; என் இறைவன் பள்ளிகொண்டருளிய இடம் இது' என்று இவற்றையே சூரியன் மலைவாயிலே விழுமளவும் வேந்தே! பலபடி பார்த்துக்கொண்டிருந்தாள். மகாசுவேதையினது நிர்ப்பந்தத்தினலே மாலைப்பொழுதிலெழுந்திருந்து, அந்த அழகிய மண்டபத்திலே யமுதுசெய்து, சந்திரன் உதித்தெழுந்த காலத்திலே மனங்கரைந்து, ஒரு சந்திரகாந்தப்பாவைபோல உருகி, மிகவுந் திகைத்துத்திகைத்துக் கன்னத்தின்மேற் கையை யூன்றிக்கொண்டு சாய்ந்திருந்தாள். சிறிது நேரம் அவ்வாறிருந்த பின்னர், பாங்கிமார்கள் கைகொடுத்துத் தாங்க, அவர்களைப் பிடித்துக்கொண்டெழுந்து மெதுவாக நடந்து சென்று, பள்ளியறையிலே பிரவேசித்துப் பஞ்சணைமேற் படுத்துத் துவண்டுவிழுந்து அயர்வுற்று, ஒருசிறிதும் இமைகொட்டாமல் அன்னவடிவமுங் குமுதவடிவமுங் கொண்ட சுடர்விளக்குக்களையும், துணைபிரிந்த சக்கரவாகப் புட்களையுமே துணையாகக்கொண்டு இராப்போதைக் கழித்தாள். பொழுதுபுலருங் காலத்

தில் என்னைப்பார்த்து, 'எம்பெருமானது விசேடங்களை யறிந்துவா' என்று விடுக்க, அடியேன் இங்கே வந்திட்டேன்'' என்று சொன்னான். அதுகேட்ட அவ் வரசர்பெருமானும் அந்தக்ஷணமே இந்திராயுதத்தின்மேலேறி, மடப் பிடியை யொத்த வனப்பினையுடையளான பத்திரலேகையையும் பின்னே உட்காரவைத்துக்கொண்டு, தனது சொல்லைத் தட்டாமற் கேயூரகனும் மற்றொரு குதிரையின்மே லேறிக்கொண்டு பின்வர, தன் சேனைகளையெல்லாம் அங்கே வைசம்பாயனனிடமாக நிறுத்திவிட்டு, அதிதுரிதமாகச்சென்று, ஹேமகூடத்தைச்சார்ந்து, கந்தர்வராஜபுத்திரியான காதம்பரியென்னும் அம் மடநல்லாள்வைகும் அந்தப்புரவாயிலை யடைந்து, அங்குள்ள வாயில் காப்பவர் வசத்திலே தனது துரகதத்தை விட்டுப், பத்திரலேகையுடனே இறங்கி யுள்ளே சென்றகாலத்தில், எதிரே வந்துகொண்டிருந்த ஆடல் பாடல்களில் வல்லவளாகிச் சிறந்தவொரு விறலியைக் கண்டு, 'மின்னரசு எங்கே?' என, அவள் வணங்கி, 'மத்தகமயூரம் என்னும் பெயர்கொண்ட மரகதச்செய்குன்றின்கீழே சித்திரத் தாமரைப் பொய்கையின் பக்கத்திலே யுள்ள ஹிமகிருகத்திலே யிருக்கின்றாள்' என்று சொல்ல, அதுகேட்டு அங்கே செல்லும் வழியைக் காட்டிக்கொண்டே கேயூரகன் முன்னே வணங்கிச் செல்ல, அப் பூம்பொழிலினிடைச் சிறிது தூரஞ்சென்றவுடன், செவ்விய சூரியமண்டலமும் பசந்து காணப்படுகின்ற கதலீவனத்தின் மத்தியில் தாமரைத்திரளைக் கண்டாற்போல மனோஹரமாய்க் குளிர்ந்து தோன்றுகின்ற ஒரு ஹிமகிருகந் தோன்றிற்று.

சந்திராபீடன் அப் பணிமனையினின்று கூட்டங் கூட்டமாக எழுந்து, மூண்டெரிகின்ற அக்னியையுஞ் சந்திரன்போலச் சீதளகுணமுடையதாகச் செய்யத்தக்க தொழில்களில் சமர்த்தர்களாய், காதம்பரியினுடைய திருமேனியைத் தீண்டுதற்குரிய போக்கியதையைப் பெற்றவர்களாய், சந்தனநீரிலே தோய்த்துடுத்த அழகிய பூந்துகில்களும், ஜோதிமிக்க சந்திர கிரணங்களைப்போல ஒளிவீசுமாறு தமது சுந்தரமான நெற்றியி லணிந்துள்ள களபங்களும், மணங்கமழ்கின்ற சிறிய முதுகிலே படிந்து தாழும்படியாக முடிந்து போட்டிருக்கும் அடர்ந்த குழல்களும், செந்தாமரையினது வெள்ளிய நாளங்களினாலே செய்தணிந்தனவாகிய பல ஆபரணங்களும், இரண்டு கொங்கைத் தடங்களிலுஞ் சந்தனங்களினால் அழகுறும்படியாக எழுதப்பட்ட தொய்யில்களுமுடையவர்களாயுள்ள மடந்தைமார்கள் எதிர்கொண்டுவந்து தாள்பணிந்து தன்னைப்புடை சூழ்ந்து செல்ல, குமுதமலர்மாலைகளாலாகிய த்வஜபட ஸமூகங்களும், மணங்கமழுஞ் சந்தனத்தினாலே கரைத்து மெழுகப்பட்ட வேதிகை வரிசைகளும், அம் மேடைகளின்மேல் வரிசை வரிசையாகக் கட்டப்பட்டுள்ள அழகிய வாழைத்தோரணங்களின் தொகுதிகளும், அம்புயங்களினுடைய வெள்ளிய தண்டுகளாகிய பிரம்பினாலே யடித்து விலக்கும் வாயில் காப்பவர்களும் பொருந்தி ஹிமகரனென சந்திரனது ஆலயம்போலப் பொலிந்திலங்கும் அம் மாளிகையினது வாயில்களைக் கடந்து உள்ளே சென்றான்.

இரண்டு கரைகளினுந் தமாலமரத்தினது இளங்கொம்புகளினாலே அமைக்கப்பட்டனவாகிய காட்டொழுங்குகளும், எங்கே பார்த்தாலும் அழகுமிக்க குமுதமலர்களினுடைய மகரந்தப் பொடிகளினாலே செய்யப்பட்டு விளங்கும் மணற் குன்றுகளும், செல்லவும் மீளவும் ஸாதனமாகப் பசிய தாழைகளினுடைய வெள்ளிய மடல்களினாலே நிர்மிதமாகிய தோணிகளும் பொலிவுற்றுத் தோன்றாநிற்க, மிக்க பரிமளத்தையுடைய சந்தனத்தினது குளிர்ந்த ஜலத்தினாலே வகுக்கப்பட்டனவாகிய பற்பல சிற்றாறுகள் ஓர் பக்கத்தில் விளங்கிக்கொண்டிருக்கும். மற்றொரு புறத்திலே, தேமாவினது புஷ்ப ரஸத்தினாலே நனைக்கப்பெற்ற செவ்விய நாவற் றளிரினாலே வேய்ந்து, நிலந்தெரியாதபடி அந்த அழகிய தேமாவினது நறிய தளிர்களினாலே புதையப் போர்த்திட்ட அதிரமணீயமான பற்பல பர்ணசாலைகளும், நிஜமாகிய யானைகள் தாமாகச் சென்று யந்திரத்தாலாகிய கரிகளபஜாலங்களின் மத்தியிலே புகுந்து, வேற்றுமைதெரியாமற் கலந்து விளையாடிக்கொண்டிருக்கும் மஹாமாயையான யந்திரங்களாலியன்ற பசிய பொற்றாமரை வாவிகளுங் கணக்கின்றி வயங்காநிற்கும். பிறிதொரு மருங்கில், பொழிகின்ற மழைத்தாரைகளும், அவற்றிடையே வீழ்கின்ற இந்திரகோபங்களும், அழகாகப் பளீரெனத் தோன்றிமறையும் மின்னல்களும், பொய்யிடிகளும், நிலத்திற் புரண்டோடும் ஆலங்கட்டிகளும், பன்னிறம்படைத்த இந்திரசாபமும் ஆகிய இவைகளோடு இயக்கப்படுகின்ற மாயப்புயல்கள் சஞ்சரித்துக்கொண்டிருக்கும். ஓர்பால், அழகிய தாமரைவளையங்களினாற் செய்யப்பட்ட திரைச்சீலைகள் அசைந்துகொண்டிருக்கும். ஓரிடத்தில், திரண்ட பொய்ப்பறவைகளெல்லாம் நீரிற் சென்று குளித்து மெய்சிலிர்த்துதறிய பனித்திவலைகள் நிறைந்து குலவாநிற்கும். இவைமுதலாகச் சேடியர் குழாங்கள் பல்வேறு வகையாகச் செய்தமைத்த சைத்தியோபசாரங்களையெல்லாந் திருக்கண்சார்த்தி, நாயகனது எரிவிழியினாலே எரிந்த மன்மதன் வெம்மை தீர்ந்து உய்யும் பொருட்டுத் திருவுள்ளமிரங்கி மலைமகள் அமைத்தருளிய இடம் போலவும், புனலரமகளிரது உற்பத்தி ஸ்தானமும், சந்திரனது வாசஸ்தானமும் போலவும், சமுத்திரராஜன் மருவிவிளையாடும் நீராவிமண்டபம் போலவும், தாமரைத்தண்டுகளினாற் செய்யப்பட்டொளிர்கின்றதொரு மண்டபத்தின் மத்தியில், குளிர்ச்சிமிக்க கோலங்கொண்டுள்ள பாங்கியர்குழாம் புடைசூழ, பற்பல உபநதிகளினாலே சூழப்பெற்று விளங்கும் பாகீரதியென்னும்படி விளங்கி, மெல்லிய மலரணையின்மேற் சாய்ந்து வீழ்ந்து, அழகிய அம்புஜவளையங்களினாலே செய்தணிந்துள்ள முத்தாரம் கைவளை தோள்வளை முதலிய சிறந்த ஆபரணங்களும், குளிர்மதிவந்து குடிகொண்டனனோ என்னும்படி நிலவெழுகின்ற சந்தன நிறைந்த நெற்றியும், மழை குடிகொண்டதுபோல ஓயாமற் கண்ணீர்த் தாரையை வருவிக்கும் மதர்விழியும், வாயு வந்து தழுவியிடங்கொண்டதுபோலப் பெருமூச்சாகிய வதை யுலவும் வாண்முகமும், அக்னிபகவான் விரும்பி யமர்ந்ததுபோலத் தபிக்கின்ற மெய்யின்மேற் சமுத்திரங் குடிகொண்டதுபோல வெயர்த்து

எழுந்தோடும் வேர்வை வெள்ளமும், அழல் குடிகொண்டாற்போல வெவ்விய காமத்தீயினாலே யெரிந்து சிறிது அவியாமலிருக்கின்ற நெஞ்சமும், நெஞ்சுடனே கலந்து காதலன்பாற்சென்று மெய்யிடத்தே தங்கியிராத வலியும், காமாக்கினியினாலே நன்றாக வெந்து மிகுதியாக நீறுபூத்தாற்போல வெள்ளிய சந்தனப்பூச்சினாலேவெளுத்து, மேலேபொருந்திய மயிர்ப்புளகங்களும், கண்ணீர்வெள்ளம் போகவைத்த பாழியோ என்னும்படி அலங்காரமாக அணிந்திட்ட செந்தாமரைமலரின் சிறுமடலாகிய செவித்தாரின்மீது மொய்த்துள்ள வண்டுகளினது தீயிசையினாலே அகமழிந்துருகுஞ் செயலுமுடையளாய், சந்தனம் பளிங்கு கற்பூரமாகிய இவற்றினாலே செய்யப்பட்ட பாவைகளைத் தழுவியணைத்துக் கொண்டும், வந்து வந்து மன்மதனைப் போன்ற அச் சந்திராபீடனது வருகையைச் சொல்லவரும் மாதர்களை நோக்கி, 'எங்கே வந்தான்? எந்த இடத்திலே கண்டீர்கள்? இந்நேரம் எங்கே வந்திருப்பான்? வந்தது உண்மைதானோ?' என்றென்று தனது கண் ஜாடையினாலே கேளாநிற்கும் ஒண்டொடியாளான அக்காதம்பரியை வெற்றித்தார்க் குரிசிலான அச் சந்திராபீடன் கண்டான். உடனே, அப் பொற்றொடி மடந்தையும், மலரணையிலே மொய்த்துக் கிடந்த வண்டினங்கள், 'மன்னவன் வந்துவிட்டான்' என்று எழுப்புவனபோல எழுந்து சப்திக்க, சீதளமான அத் தரளப்பாறையிலே யூன்றிய செங்கையானது தன்னைத் தனது பிரதிபிம்பமே தாங்கிநிற்குந் தன்மையைக் காட்டாநிற்க, மிகுந்த புஷ்பபராகங்களினாலே புழுதிபடிந்துள்ள தனது மதிமுகத்தைப் பெருகியெழுகின்ற ஆனந்தவெள்ளத்தினாலே கழுவி, நழுவிய உத்தரீயமாக அழகிய நித்திலகாந்தியை ஸ்தனதடங்களிலே சேரப் பண்ணிக்கொண்டு, பிறைபோன்ற நுதலின்மீது அணிந்துள்ள சந்தனத்தினது கனத்தினாலே சற்றே வணங்கிய வாண்முகத்தையுடையளாய், வாராநின்ற அச் சந்திராபீடனது கதிர்முகம் பற்றிய நெடுங்கண்களினது கடையிலே சென்ற கருவிழியினது காந்தியாகிய கயிற்றினாலே பூட்டி யிழுக்கப்பட்டவளைப்போல அணையினின்று மெழுந்திருந்தாள். ஏந்தலாகிய சந்திராபீடனும் மகாசுவேதையினருகிற் சென்று, அவளது மலர்ப்பதங்களைப் பணிந்து, காதம்பரியையுங் கைகூப்பித்தொழுதான். காதம்பரியும் இவனை நமஸ்கரித்து, அம் மலரணையின்மீது உட்கார்ந்தாள். சேயிழையாளது சேடிமார்கள் கொண்டுவந்திட்ட பொற்பீடத்தைத் தூரத்திலே தள்ளிச் செங்கோல் வேந்தனாகிய சந்திராபீடனும் பூமியிலே யுட்கார்ந்தான். அப்போது, கேயூரகன் அணங்கனையாளாகிய அக் காதம்பரியை நோக்கி, 'தேவி! இப் பெருமாட்டி நமது ராஜகுமாரருக்கு இதயம் போன்றவள். முருகனனைய இம் மூரிவேற் கோமானுக்குப் பரிவோடு தாம்பூல மளிப்பவளு மிவளே' என்று பத்திரலேகையைக் காட்ட, அப் பாவைநல்லாள் பார்த்து, 'மகிமைதருகின்ற மானிடர்கள் விஷயத்தில் மலரோனாகிய பிரமதேவனுக்கிருக்கும் பக்ஷபாதந்தான் என்னே!' என்று வியந்து, மன்னவனருகாக இறைஞ்சி நிற்கின்ற அவளை, 'இங்கே வருக, இங்கே வருக' என்று மலர்க்கரத்தைப்பற்றிப் பிடித்தழைத்துத்

தன்பின் உட்காரவைத்துக்கொண்டு, தன்னடைவே யுண்டாகித் தழைத்தெழுந்த நேசத்தையுடையளாய், இன்னருள்கூர்ந்து, உபசாரத்துடனே அவளது பசிய வேயிளந்தோள்களையும் அழகிய முதுகையுங் கறுத்தடர்ந்த கூந்தலையும் ஒளிமிக்க நன்னுதலையும் பலகாலுந் தடவித் தடவிக்கொடுத்து, ஆறுதல் வரச்செய்து, விடாமற் றழுவியணைத்துக்கொண்டிருந்தாள்.

அப்போது, சந்திராபீடன் சோர்வுற்றுத் தளரும் அக் காதம்பரி படுகின்ற மன்மதாவஸ்தைகளையெல்லாம் நன்றாக உற்றுநோக்கி, 'நமது தனி நெஞ்சம் இவளது நிலைமையைப் பிரத்யக்ஷமாகத் தெரிந்தும் இப்போதுங் கூட நம்புகின்றதில்லை. இவளது மெலிவைக்கண்டு வெந்துருகும் நாம் இப்போது நினைத்துள்ளதொன்றை மீளவும் மற்றொருகால் நினையாது, ஸந்தேகந்தீர, இம் மின்னனையாளது மனக்கருத்தை யுள்ளவா றறிந்திடுவோம்' என்று கருதி, அவளை நோக்கி இருபொருள் பயக்கத்தக்க கவடாகிய சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான்:

"காரிகையே! இந்தப் பெரியதுயரத்துக்கெல்லாம் காரணம் எவனோ?[1] இந்தக் கொடிய அவஸ்தையானது கண்டவர்களது மனத்தைப் பிளந்து வருத்துகின்ற அந்த அளவுக்கு, உண்மையாக, உன்விஷயத்தில் வருத்தஞ் செய்யவில்லையென்பது நிச்சயம். ஆகையால், இப்போதே அன்போடு என்னுடைய சரீரத்தையெல்லாம் வழங்கியாவது இந் நோயைப் பரிகரிக்கும் எண்ணமுடையேன். இதனை யாரோ அறியப்போகிறார்கள்? ஐயோ! அழகிய நினது செங்கையும் அனங்கதமாய்,[2] அந்தோ! அறவும் மெலிந்துவிட்டதே. அதிகமுந் தாபத்தைச்சேர்ந் தவசமாகுங் கண்கள்* அனுராகம்[3]உற்றன போற் காணப்படுகின்றன. இதனாலும், மிகுதியாகச் சிந்துகின்ற கண்ணீர்கள்[4] கொங்கையின்மீது முத்தமாகிய[5] பணிகளை யுதவுகின்ற இதனாலும், இது, படுக்கும் பைம்பூ வம்பு[6] செய்ததுவே யன்றி வேறில்லை. இக் கொடுமையை, கண்ட எனது கண்கள் பொறுத்திருந்தாலும், எனது பிராணன் ஸகிக்கமாட்டாமல் நழுவியோட வழிதேடுகின்ற மாதிரியாகவே இருக்கின்றது. இனி, ஒருவாறு தேறுதற்கு மிடமுண்டு. அழகியதோர் கன்னியிளம் பூங்கொடியானது மணஞ்செறிபோ திசைந்தபோதோ அன்றித் தனியே நின்றொசிகின்றபோதோ விளக்கஞ்செய்யுந் தன்மையதாகும்? தையலார்க்கும் அப்படியேதான். ஆகையால், மங்கலமுதவும் வரானுகூலமான அலங்

* தாபத்தைச்சேர்ந்த யாரும் வசமாகக்கூடிய அழகிய கண்களென்று மற்றொரு பொருளுந் தந்துநிற்றல்காண்க.

1. எவனோ—எதுவோ, யாரோ.
2. அனங்கதமாய்—தோள்வளையற்றதாய், மன்மதனால் பீடிக்கப்பட்டதாய், காமத்தைத் தரத்தக்கதாய்.
3. அனுராகம்—செம்மை, காதல்.
4. கண்ணீர்—கள்-நீர் = மதுவெள்ளம், கண்ஜலம்.
5. முத்தமாகிய—முத்துக்களாலாகிய, விடப்பட்டனவாகிய.
6. படுக்கும் பைம்பூ வம்பு—படுத்துக்கொண்டிருக்கும் பசிய மலர்களினது மகரந்தம், வருத்துகின்ற பசிய மலர்க்கணை. பூ-அம்பு எனப்பிரிக்க.

காரங்களையெல்லாஞ் செய்துகொள்ளாய்"[1] என, அந் நன்னுதலாளும் சந்திராபீடன் சொன்ன இவற்றின் பொருளையெல்லாம் பண்டிறந்த பாலதையினாலே[2] பகுத்துப் பார்த்து, 'ஒப்பற்ற இந்தப் பெரிய பாக்கியமும் எமக்கு உண்டாகப்போகின்றதோ?' என்று நினைந்து, உத்தரமொன்றுஞ் சொல்லாமற் சிறிதுநேரம் நாணமுற்றிருந்து, பின்னர் ஏதோ ஒன்றை வியாஜீகரித்துப் புன்முறுவல்செய்து ஓர் புறமாகத் திரும்பிப்பார்க்க, அக் குறிப்பினையறிந்த, அவள் கருணைக்குப் பாத்திரமாகிய மதலேகையென்பவள் சந்திராபீடன் முகத்தைப் பார்த்து, 'வாரீர், அரசர் பெருமானே! மனமுருகும் இப்பெரிய பரிதாபமானது[3] இப்படிப்பட்டதெனச் சொல்லுந் தரத்ததோ? இதற்கு நான் என்ன உத்தரஞ் சொல்லப்போகிறேன்? ஆயினும், சொல்லொன்றைக் கேட்டருளவேண்டும்: எப்பொழுதும் இனிதான குமாரபாவம் எய்தியிருப்பவட்கு[4] எதுதான் வெய்தாகாது? அழகிய தாமரைக்குச் சீதளமான பனிநீர்கூடத் தீயாவதில்லையோ? இந்தப் புதிய மலரணையினாலே, வேந்தே! மேலே யெழுந்த மனோபவ தாபம்[5] அற்ப சொற்பமோ? எமது கருங்குழற் கண்ணாட்டியாகிய இம் மயிலுக்கு இந் நோயை மாற்றத்தக்க நல்ல மருந்து சலியா மனனே;[6] இதைத்தவிர வேறொன்றுமில்லை' என்று சொன்னாள். என்ற அளவில், 'உத்தரஞ்சொன்னபடியோ?' என்று இறைவியாகிய காதம்பரியும் மகிழ்ந்திருந்தாள்.

மன்னவனாகிய அச் சந்திராபீடன் இரண்டுவகையான அர்த்தத்தோடு கூடிய அந்த வார்த்தையை ஒருதலையாகவுந் துணியமாட்டாமற் சஞ்சலம் அடைந்தவனாய், மகாசுவேதையோடு நல்ல பற்பல சமாசாரங்களைப் பற்றிப்

1. 'அழகுமிக்க ஒரு புதிய பூங்கொடியானது பரிமளம் மிக்க புஷ்பங்களால் நிறைந்தபோதோ அன்றித்தனியேநின்று ஒசிகின்றபோதோ மனோரம்யமாகத் தோன்றும்? தையலார்க்கும் அப்படியேதான். ஆகையால், மங்கலமான சிறந்த அநுகூலமான ஆபரணங்களையெல்லாம் அணிந்துகொள்ளாய்' என்பது வெளிப்படைப்பொருள். 'அழகுமிக்க கன்னிகையாகிய ஒரு பூங்கொடியானவள் விவாககாலத்தை அடைந்தபோதோ அன்றி விவாகமின்றித் தனியேயிருக்கும் போதோ விளங்குவாள்? தையல்நாயகமாகிய நினக்கும் அப்படியேதான். ஆகையால், மங்கலத்தைச் செய்கின்ற சுயம்வரத்துக்கு அநுகூலமான ஆபரணங்களை அணிந்துகொள்ளாய்' என்பது உள்ளுறைபொருள்.

2. பண்டிறந்த பாலதையால்-போயிருக்கிற அறியாமையினாலே, [அதாவது, சிறந்த அறிவினாலே என்றபடி] பாலதை-அறியாமை. 'பாலதை தவிர்நீ ஜய' என்றார் கல்வியிற் பெரியாரும். கிஷ். வாலி. கருங. பேதைப் பருவத்தைக்கடந்து யௌவனத்தையடைந்திருக்கிறபடியினாலே. புத்தியடைந்தாள், பெரியவளானாள், தெருண்டாள் என்ற சொற்பொருள்களும் இங்கே அறியத்தக்கன.

3. மனமுருகியுரைக்கும் உமது பெரிய பரிதாபத்துக்கு என்றும், மனமுருகிநிற்கும் அல்லது கண்டோர் மனமுருகத் தக்க இவளது பரிதாப நிலைக்குஎன்றும் இருபொருள் காண்க.

4. இனிதான குமார பாவம்-ஸௌகுமார்யம். குமார பாவம்-கௌமாரம். இனி குமாரனை உன்னிடத்தில் இனிதான பாவம், [பாவம்=எண்ணம்] எய்தியிருப்பவட்கு என்றும், குமார! உன் விஷயத்தில் காதலெண்ண முற்றிருப்பவட்கு என்றும் உரைக்க இடமுண்டு.

5. மனோ பவ தாபம்-மனத்திலுண்டாகிய தாபம். மன்மத தாபம்-என்பது பிறிது பொருள். மனோபவன்-மன்மதன்.

6. சலியாமனன்-சஞ்சலமில்லாத மனம். சஞ்சலமில்லாத மன்னன் என்பது மற்றோர் பொருள்.

பேசிக்கொண்டே நெடுநேரம்வரையில் விருப்பத்தோடு அங்கே உட்கார்ந்திருந்து, பின்னர்ப் போகவேண்டாமென்று அவள் தடுக்கவுங் கேளாமல், அங்குநின்று விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு வெளியேவந்து, சிறப்பு வாய்ந்த தனது இந்திராயுதமென்னும் புரவியின்மீது ஏறப்போனான். அப்போது, வீரனை கேயூரகன் ஓடிவந்து, "அரசே! 'இம்மாது பத்ரலேகையை எமது பெருமாட்டி இன்றைக்குத் தன் பக்கத்திலே வைத்துக்கொண்டிருக்கவேண்டுமென்று இச்சிக்கின்றாள். அநேகமாக இனி நாளைக்கே இவளை அனுப்பிவிடலாம்' என்று இவளது ரூபகுணங்களை வெகுவாகச் சிலாகித்துரைத்தவளான மதலேகை வாயிற்படியருகே வந்துநின்று விண்ணப்பஞ் செய்கின்றாள்" என, 'தேவி இங்ஙனஞ் சொல்லி நயந்தருள்வதற்கு இவள் செய்த பாக்கியந்தான் என்னே!' என்று சொல்லி, நன்னுதலாளாகிய அப் பத்திரலேகையை உள்ளே அனுப்பிவிட்டு, நாமவேற்காளையாகிய சந்திராபீடன் அதிவேகமாகக் குதிரையைச் செலுத்திக்கொண்டு தனது சேனை வெள்ளங்கள் தங்கியிருக்குமிடத்திற்கு வந்தவுடன், தங்களிடத்தில் நெடுநாளாக இருந்துகொண்டிருக்கும் பழைய தூதனொருவன் பெரிய பதற்றத்தோடு தன்பாலோடிவரக்கண்டு, அடன்மிக்க தனது பரியைநிறுத்தி, அத் தூதனைநோக்கி, "ஐயரும், என் அன்னையும், நமது அமைச்சர்பெருமானை சுகநாதனுந் திருமேனிக்கு யாதொரு அவத்யமுமின்றிப் பாங்காக இருக்கின்றார்களல்லவா?" என்று கேட்க, 'யார்க்கும் ஒரு குறைவில்லை. க்ஷேமந்தான்' என்றுசொல்லி வணங்கி, அத் தூதனிரண்டு திருமுகங்களை எடுத்துக் கொடுக்க, அதை மரியாதையுடன் ஏற்று முடியின்மேற்கொண்டு போற்றிப் பின்னரவிழ்த்து, மிகப் பிரீதியுடனே படித்துப் பார்த்தான். அதிலே எழுதியிருந்ததாவது :—

"எல்லா வாசக நன்மைகளும் எளிதில் எய்துக. புவிவேந்தரது மணிமுடிகள் அனவரதமுந் தோய்தலினாலே தழும்பேறியிருக்கின்ற உபய பாத பங்கயங்களையுடையோனும், ராஜாதிராஜனும், அழகுமிக்கபரமேசுவரனும், பார்வதீரமணனது வேதப் பிரதிபாத்யமான திருவடிகளை ஒருபோதும் மறவாத தனிநாயகனும் வீற்றிருக்குந் தாராபீடனென்னும் புகழ்வேந்தன் வரவிட்ட இந்த ஸ்ரீமுகத்தை, உத்தரோத்தரம் அபிவிர்த்தியாகிற எல்லாவித ஸம்பத்துக்களுக்கும் பிறப்பிடமாகிய சந்திராபீடன் காண்க. இங்குள்ள அகில பிரஜைகளும் யாதோரிடையூறுமின்றி இனிதாக வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். தம்மை மகிழ்வோடு எடுத்தணைத்துத் தழுவி, சிறந்தோங்கும் அழகிய உச்சியை மோந்து, பெருமையுற்று வாழவேண்டுமெனப் பெரிதும் மனவேட்கையோடிருக்கின்றார்கள். தாம் ஊரினின்று புறப்பட்டு நெடுநாட்களாயின. அன்னைமார்களுந் தம்மையே நினைந்து இரங்காநின்றார்கள். அன்போடு நிகழ்ந்த இத் திருமுகத்தைக் கண்ட அந்த க்ஷணமே நமது செல்வநம்பி புறப்படுதற்கான சுபமுகூர்த்தமாகக் கொள்க" என்பதாம்.

என்ற இந்த வாசகமே அமைச்சனை சுகநாதன் வரவிட்ட இரண்டாவதாகிய ஸ்ரீமுகத்திலும் எழுதியிருக்கக்கண்டான். உடனே மனமொத்த

மந்திரிகுமாரனான வைசம்பாயனனுக்கும் இந்த வாசகத்தைக்கொண்டுள்ள இந்த் இரண்டு திருமுகத்தையுங் கொண்டுபோய்க் காட்டுங்கள் என்று அங்கே நின்றுகொண்டிருந்தவர்களிடஞ் சொல்லிவிட்டு,'வேந்தர் பிரானான எந்தையாரியம்பியதே நமக்குச் சுபமுகூர்த்தம்' என்று குதிரையினின்று மிறங்காமல், அதிலிருந்தபடியே யேகுங் கருத்தினனாய்த் தான் பிரயாணப் படும் விஷயத்தை யாரும் அறியுமாறு பயணமுரசறையும்படி கட்டளை யிட்டான்.

அம் முரசொலிகேட்டதுங் கணக்கற்ற பற்பல குதிரைப்படைகளினாற் சூழப்பட்டு அங்கே வந்துநின்ற வலாககன் மைந்தனாகிய மேகநாதனது முகத்தை நோக்கி, "பத்திரலேகையானவள் ஹேமகூடத்திலிருந்து இனி வரப்போகிற கேயூரகனோடு இங்கே வந்தால், உடனே அச் சிலைநுதலாளை அழைத்துக்கொண்டு வா. மனிதர்கள் சொல்வது ஒருவிதம். எண்ணியிருப் பது ஒருவிதம். ஸ்திரமான நெறியையுடையவர்களல்லர். நன்றாக வார்த்தை சொல்லுவார்கள். தங்கள் அனுஷ்டானமோ அதற்கு முற்றிலும் மாறான தொன்றாயிருக்கும். சித்திரப் பாவைபோன்ற அழகிய அக்காதம்பரி விஷ யத்தில் நான் செய்த பரிவும், கொண்ட பெரியகாதலும், பண்பும், மற்றவை களும், வஞ்சகமாயுரைத்த நயமொழிகளுமாகிய எல்லாமுங் கேவலம் ஔப சாரிகமாகவே முடிந்தன. அந்த ஆவியனையாளும், 'பாத்திரமறியாமல் அவ னிடம் அன்புவைத்தாள் என்று உலகமொருபுறம் என்னை நிந்திக்க வீணாக நான் அவன்பால் உறுதியான பேரன்பை வைத்தேனே. இதுவும் நம் விதி வலியோ?' என்று தன்னைத்தானே வெறுத்துக்கொள்வாள். மேலும், அக் காதம்பரி என்னுடைய துர்க்குணங்களை யெல்லாம் நற்குணங்களாகச் சிலாகித்துரைத்த மகாசுவேதையைப் பற்றி என்னென்ன சொல்வாளோ? அதைநினைக்க என்மனம் வருந்துகின்றது. நிற்க, பிதாவின் அதிகாரங்க ளெல்லாம் எப்போதும் என் சரீரவிஷயத்தில் மட்டுமே செல்லற்குரியன. அவ் வாணைக்குக் கட்டுப்படவேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லாத என் நெஞ் சமானது, பகவானுடைய நிவாஸ ஸ்தானமாகிய குளிர்ச்சிமிக்க ஹேம கூடத்திலேயே தங்கி, அங்குள்ள எனது அழகிய பங்கஜவல்லிக்கே மெய் யடிமை பூண்டு, என் பிராணனை எப்படியாவது போகாமற் போற்றிப் புர க்குமென்ற நம்பிக்கை எனக்குப் பூரணமாக உண்டு. மேகநாத! வந்த கேயூரக னுக்கு என் மனத்திலே கிடந்த இவ் வாய்மைகளையெல்லாம் விளங்கக்கூறி, பிதாவினுடைய நியமனத்தினாலே உச்சயினிக்கு மனத்தை அங்கே வைத்து விட்டு நான்மாத்திரம் தனியாகச் செல்கின்றேனென்றும், இப் பூமியிலே யுள்ள கயவர்களோடு சேர்த்து எண்ணத்தக்க யான் இப்போது போய் வருகிறேன்; பிராணன் மாத்திரம் போகாமலிருக்கும்பக்ஷத்தில் எனக்கு அப் பைந்தொடியாளது பாதமலரையன்றி வேறு கதியில்லையென்றும், இது பிரமாணமாகச் சொல்லுகின்ற வார்த்தையென்றுஞ் சொல்லிப், பின்னும் நான் அக்குணவதியான மகாசுவேதையைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து வழிபட்டேனென்பதையும், என்றும் எனது மனத்தைவிட்டு நீங்காத மத

லேகையை நான் தொழுது, மீண்டும் மீண்டும் நன்ருகத் தழுவிக்கொண்டே னென்பதையும், பிராணபதமான தமாலிகையை யான் ஆலிங்கனஞ் செய்து கொண்டேனென்பதையும், பரிஜனங்களையெல்லாம் அவர்கள் என் விஷயத்திற் காட்டிய பிரீதிவிசுவாசங்களை நான் எப்போதும் மறவாமல் நினைத்துக் கொண்டே யிருக்கின்றேனென்பதையுஞ் சொல்லி, மற்றும் மனத்திற்கினிய அப் பெரும்பதியை ஒருநாளும் மறக்கமாட்டேனென்பதையும், அழகிய அந்த ஹேமகூடத்திலேயுள்ள இறைவனது பாதமலர்களை நான் வந்தனஞ் செய்து எந்தையார் வீற்றிருக்கின்ற நகரத்திற்குப் போய்வருகின்றேனென்பதையும் நீ மறவாமல் அழகாகச் சொல்லியனுப்பு'' என்று உற்ற செய்திகளையெல்லாம் அவனிடஞ் சொல்லி, கடல்போற் பெரிய சேனைவெள்ளங்களெல்லாஞ் சோர்வுற்றுத் தளராவண்ணங் கொண்டுவரும்படியாக வைசம்பாயனனுக்குங் கூறிவிட்டுக் குதிரையினின்று கீழ் இறங்காமலே பிரயாணகதியை நோக்கி, இந்திராயுதமென்னும் அக் கடுவிசைக் குதிரையானது கனைத்து இம் மகிதலத்தைத் தன் காலாலே புரட்டிக் கடலிடைத் தள்ளுவதுபோலப் பதறி நிற்கவும், எங்கே பார்த்தாலுஞ் செறிந்திலங்குகின்ற சட்டிநிரைகள் குவலயக்காடுபோலவிளங்கவும், அதிவேகமாகச் செல்லவல்ல சிறந்த குதிரைப்படைகள் எம்மருங்குஞ் சூழநதுவரவும் அச் சந்திராபீடன் மயிலூர்தியான கந்தனைப்போல அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, அப்போது அப் படையின் முன்னே கொம்புபிடித் தூதிக்கொண்டே அதிவேகமாக ஓடிச்செல்கின்ற ஒட்டனை நோக்கி, 'அயர்வு காட்டாமல் எங்கள் வளப்பம் பொருந்திய நகரத்தினது புதுமையையெல்லாஞ் சொல்' என்று வினவ, அவன அவ்வாறே கூறக்கேட்டுச் சங்கையற்ற மனத்தினனாய்த் தழைத்து அடர்ந்த பெரிய வனத்தின் மார்க்கமாகச் செல்லத்தொடங்கினான். அக் காட்டுவழிகளெல்லாங் கருகுற்பொதுபோல இருண்டு, யானைகளா லொடிக்கப்பட்ட கிளைகள் கவிந்து தாழத் தொங்கிக்கொண் டிருப்பதனால் நெறியறியப் படாதனவாய், பெருவலிபடைத்த ஆயுதபாணிகளான வீரர்கள் தம்முள் மாறுபட்டு மடிந்த யுத்தகளத்திலே கிடக்கும் வில் வேல் கணை கண்டகம் முதலியவைகளும், தலைமலையும் கல்லும், புல்லும், கட்டைகளும், சருகும், காட்டாறுகளும், கூட்டங் கூட்டமாக வருகின்ற பெருங்களிறுகளும், அவற்றின் மதத்தினாலே சாய்ந்து வீழ்ந்த பெரிய மரங்களும், பட்டுப்போன செடிகொடிகளும் பார்க்குமிடமெல்லாம் நிறைந்து ஜனசஞ்சாரமின்றி வெறும்பாழாய்க் கால்வைத்தற் கரியவைகளாய் இருந்தன. சந்திராபீடன் இத்தகைய பயங்கரமான வழிகளையுடைய அவ் வனப்பிரதேசத்தைக்கடந்து, சூரியமண்டலமானது மேற்றிசையிலே கொவ்வைக் கனிபோலச்சிவந்து தோன்றும் மாலைப்போதிலே, வெட்டிச் சுட்ட பழம் புனத்திலே அரிந்துபோட்டிருக்குந் தினைக்கதிர்களுக்குக் காவலாகப்போர்வீரர்களான சிலவேடர்கள் புல்லாற் செய்து வைத்திருக்கும் ஆட்களையும், அப் புனங்களின் புறத்தே சூழ்ந்து நிற்கின்ற கலைமான்களையும், பெரிய பரண்களையும் மார்க்கத்தில் ஆங்காங்குக் கண்டுகொண்டே செல்லும்போது, தூரத்திலே

ஒரு செவ்விய த்வஜபடமானது பிறங்கி யசைந்தாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

பார்த்து அதற்கபிமுகமாகச் சிறிதுதூரஞ் சென்றளவில், வேடர்களரிந்திட்ட யானைத் தந்தங்களாலாகிய கதவுகளும், மிக்க உன்னதமான இருப்புத்தோரணங்களும், கண்டோர்கள் வியக்கத்தக்க பெரிய வெண்கலக் கண்ணடிகளும், மதுவொழுகுஞ் செவ்விய மலர்மாலைகளும், தருப்பைகளாற் றொடுக்கப்பட்ட தட்டிகளும் விளங்கிக்கொண்டிருக்கும் வாசற்படிக்கெதிராக, அற்புதமான கருங்கல்லின்மேல் இரும்பாற் செய்து நிறுத்திய மகிஷமொன்று நிகரில்லாத நல்ல பரிமளத்தையுடைய செவ்விய சந்தனத்தினாலே அலங்காரஞ் செய்யப்பட்டிருந்தது. அதற்கு அருகாகக், கண்வரம் வேண்டினோர்கள் தோண்டிவைத்த பற்பல கண்களும், நாவை விரும்பினோர்கள் அரிந்து வைத்த பற்பல நாவும், இஷ்டசித்தியை யடைந்தவர்கள் அறுத்து வைத்த பற்பல தலைகளும் முறையே பூவுந் தளிருங் காயும்போல விளங்கிக்கொண்டிருந்தன. நல்ல அசோக மரத்தின்மீது நெருக்கக் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த பலிகொடுக்கப்பட்ட சேவற்கோழிகளின் செவ்விய சூடுகளெல்லாம் நாளில்லா நாளிலேபூத்த நாண் மலர்போலக் காணப்பட்டன. இங்ஙனம், காலமின்றியும் பூக்குந் தருக்கள் நிறைந்துள்ளன போலக் காணப்படும் அச் சந்நிதியின் பக்கத்திலே, சூழ வளர்ந்துள்ளபனைமரங்களெல்லாம் வரம்வேண்டிக்கிடப்பார் குனிந்துநின்று தங்கள் தலையைத் தாங்களே துணிந்து துணித்துப் பலிகொடுக்குந் தன்மைபோல ஓயாமற் கனிகளை யுதிர்த்துக்கொண்டே யிருந்தன. வயிரம் பற்றாத பேரீந்துகளெல்லாம் விரிந்துகிடக்குங் கூந்தலைப்போலக் குலைகொண்டு நின்றன. இரத்தத்தோடு கலந்துகிடக்கும் யானைத் தந்தங்களும் முத்துக்களும் உதிரத்துடன் கலந்த சோற்றுப்பலிபோல எதிர்ப்பட்ட இடங்கடோறுங் காணப்பட்டன. அங்கே பெருகியோடுஞ் சிவந்த குருதிவெள்ளத்திலே காணப்படுஞ் சூர்யபிம்பமானது, அச் செஞ்சோரியைக்கண்டு பயந்து சூரியனே அதில் தலை குப்புறவீழ்ந்து வாடுவதுபோலக் காணப்பட்டது. மற்றும், அம் மணிமுன்றிலிலே சங்கம் முரஜம்முதலிய வாத்தியங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. மிக்க அகிற்புகையேறி, அதனாலே சிவந்து காணப்படும் பற்பல கூரிய வாள்களும் நெடிய பற்பலவேல்களும், மேன்மை பெறுவான்வேண்டி யாவருந் துதிசெய்து அருச்சித்த நானாவித மலர்களினுடைய பரிமளத்தையுங் கொண்டு அங்கே விளங்காநின்றன. ஆலயத்தினுள்ளே மின்போல ஒளிவீசுகின்ற சூலாயுதமொன்றைக் கையிலே யேந்திக்கொண்டிருக்குஞ் சண்டிகாதேவி எழுந்தருளியிருந்தாள். இத் தகைய பெருஞ் சிறப்பினதாய் விளங்கும் அக் காளிகோயிலைக் கண்டு, வயப்புரவியினின்றுங் கீழே யிறங்கி, மணங்கமழும் அவ் வாலயத்தை வலமாகவந்து, மழைபோலச் சுவர்ணபுஷ்பங்களை மிகுதியாகச் சொரிந்து தொழுது, அத் தேவியினது சிறந்த சேவடிகளைச் சேவித் திறைஞ்சி, 'கொடிய பராக்கிரமசாலியான தாருகாசுரனை வதஞ்செய்து வாகைமாலை சூடியருளிய தேவீ! நினதுபெரிய

திருவருளினாலே அடியேன் எல்லா மனோரதங்களும் எளிதிற் கைகூடப் பெற்றுத் தழைக்கும் வண்ணம் உன்னுடைய இந்தப் பாதாரவிந்தங்களைப் பணிகின்றேன்' என்று புகழ்ந்து, அப் பகவதியினுடைய அனுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு திரும்பிப் பின்னர்க் குதிரைகளையெல்லாம் உள்ளே வரிசையாக்க் கட்டி, சேனைகளையெல்லாம் மரத்தடிதோறுஞ் சூழும்படிவிட்டு, யானைகளை மரங்கடோறுஞ் சங்கிலி பூட்டிப் பிணித்து, ஜயபேரி முழக்கத்தினாலே தான் விஜயஞ்செய்திருப்பதை யறிவித்து, அந்தக் கூரிலே வேற் கோமகனான சந்திராபீடன் அவர்கள் படகடிக்கும் விதத்தையும், விரைந்தோடிச்சென்று முன்னதாக அவர்கள் இடம்பிடித்துக்கொள்ளும் புதுமை முதலியவற்றையும் பலரோடும் நகைத்துரைத்துப் பார்த்துக்கொண்டே நின்றான்.

அப்போது, வழிப்போக்கர்கள் கல்லெறிந்து முறிந்த கையும், மருந்திட்டுக் கெட்டதொரு கண்ணும், எங்குங் குழியான புண்ணும், நெளிகின்ற முதுகிலேயுள்ள கூனும், குரங்கு கடித்துத்துளைத்த மூக்கும், ஓந்தி பாம்பு உடும்பு பல்லி யிவற்றை யொப்பாக மேலே புடைத்தெழுந்த பற்பல நரம்பும், ஒடிந்த பல்லும், கரிக்கட்டைபோன்ற நிறமும், பீற்றைக் கந்தைகளைத் தைத்துத்தைத்து ஊசிக்காயம் பொருந்தியுள்ள விரல்களோடு கூடிய கையுமுடையனாய், யந்திரம் மந்திரம் ரஸவாதம் முதலியவைகளை யெழுதிக் கற்று, அந்த இடத்தை நாடி வருகின்ற யோகினிகளுடைய மோக வசீகர வித்தைகளை யெல்லாம் வில்லவன்போல மாயஞ்செய்து, கின்னர வாத்தியத்தை ஓயாமல் மீட்டிக்கொண்டு கொசுகோசைபோலத் தனக்குள்ளேயே மெதுவாகப் பாடிக் களிகூர்ந்து, நெற்றிபுண்ணாகும்படி அச் சண்டிகாதேவியினுடைய பாதங்களில் வீழ்ந்து பணிந்து, தேவியை யாகுலப் படுத்தித் தீயோனாய்ப் பக்கத்திலிருந்துவந்து தன் சேனையுடனே கலந்து, வீணாகக் கோபித்துச் சண்டையிட்டு, அவர்களின் மத்தியிலே யகப்பட்டுவருந்தும் ஒரு ஆண்டியாகிய பாவியைக் கண்டு, அவனை யழைத்து, 'நீர் இங்கே வந்தவாறு என்ன? சொல்லும்' என வினவ, அவன் பற்பல விதமாகப் பிதற்றுகின்றதையெல்லாங் கேட்டு, 'நீர் இவ்வளவு தானா?' என்று பரிஹஸித்து, அதனாலே கிளிமொழியாளாகிய காதம்பரியைப் பிரிந்த கிலேசம் ஒருவாறு தீர்ந்து, உயர்ந்தோங்குகின்ற தனது படங்கிற்குட் புகுந்து, தூங்குவதுபோல அவ் விராப்போதைக் கழித்து, சூரியமண்டலமானது உலைமுழுவைப் போலச் சிவந்து தோன்றியதும் எழுந்து, தன் பின்னே ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு வருகின்ற அந்த ஆண்டிக்கு வேண்டியவற்றையெல்லாங் கொடுத்து, சிறந்த தனது பஞ்சதாரையாகிய இந்திராயுதத்தின்மேலேறிக் கொண்டு, தாரை சங்கம் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, உருவிப்பிடித்த வல்லயத்துடனே சேனைவெள்ளம் புடைசூழ வழியை நோக்கிப் புறப்பட்டு, புலித்தோல் மான்தோல், யானைத் தந்தம், அவ் யானைகளிடத்துண்டாகிய வெள்ளிய முத்துக்கள், நக்ஷத்திர ராசிகளைப்போல ஒளிவீசுகின்ற நெடிய மூங்கில்களிடத்துண்டாகிய முத்துக்கள், கஸ்தூரி முதலிய சிறந்த பொருள்

களையும், மான் முயல் சேவல் முதலியவற்றையுந் திருமுன் காணிக்கையாகக்கொண்டு வேடர்கள் தொழுதிறைஞ்சிநிற்க, அவற்றைக்கடாக்ஷித்துக் கொண்டே அவ் வேடர்கள் வாழ்கின்ற எல்லையைக் கடந்து சென்றான். அங்ஙனம் அவ் வேடர்கள் வாழ்கின்ற எல்லையைக் கடந்து, வந்துவந்து அரசர்களெல்லாம் அடிபணிகின்ற வேந்தர்வேந்தனை அச் சந்திராபீடன் சிறந்தோர்கள் தங்கியிருக்கப்பெற்ற மதுப்பெரிட்டொழுகும் பூங்காவனங் களையும், மணங்கமழும் மலர்ப்பொய்கைகளையும், செங்கரும்புவளரும் புன் செய் நிலங்களையும், நெல்விளையும் நன்செய் நிலங்களையும், இவை முதலாகிய பிறவற்றையுங்கொண்டு பற்பல போகங்களினாற் செறிந்து விளங்கும் பேரூர்கள் பலவற்றைக்கண்டு, அம் மருதநில மாக்களாகிய உழவர்கள் கையுறையாகச் சுமந்துவரும் பச்சையையும் பார்த்து மகிழ்ந்து, அன்று அவர்களிடத்திலேயே தங்கிப், பின்னரும் அத்தகைய மற்றைப் பேரூரின் வளங்களையெல்லாம் விடாமற் பார்த்துக்கொண்டும் அங்கங்கே தங்கியுஞ் சென்று, இப்படியாகச், சிந்தைசெல்லுந் திசைகடோறும் பகலெல்லாம் போய், மாலைப்போதில் மனத்திற்கு இஷ்டமான இடங்களி லமர்ந்தமர்ந்து தன் தந்தையின் வளநகரத்தைக் கிட்டச் சென்றான்.

அப்போது, அந் நகரத்தில் வாழ்பவர்க ளெல்லாரும் இவன் சமீபத்தில் வந்துவிட்டான் என்ற செய்திகேட்டதும் விரைவாக எதிர்கொண்டு நடந்து, முடியின்மேற் குவித்த கையினராய் வணங்கிக்கொண்டே அம் மன்னவ குமாரன் மன மகிழுமாறு, அவன்முன் முகமலர்ச்சியுடனே வந்து வரவேற்றார்கள். சந்திராபீடன் அதிவிரைவாக அரமனைவாயிலை யடைந்து, தான் வந்தசெய்தியைத் தந்தைக்கு அறிவித்துக் குதிரையைவிட்டிறங்கி யுள்ளே சென்று, அப் பிதாவினுடைய சரணகமலங்களை வீழ்ந்து பணிந்து கொண்டே போந்தான். அங்ஙனம் வணங்கிவந்த அம் மைந்தனைத் தந்தையாகிய தாராபீடனுஞ் சரேலெனச் சென்றெடுத்து நெடுங்காலம் பிரிந்திருந்தவனுகையினாலே விடாமல் அப்படியே தழுவியணைத்துக்கொண்டிருந்தான். வீரனை அம் மூரிவேற் குமாரனும் பயபக்தியோடு வணங்கித் தாழ்ந்தனன். அதுகண்ட அகில ஜனங்களுடைய கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தன. பின்னர், அத் தாராபீடன் மைந்தனுடைய வடிவழகையே நோக்கிக்கொண்டிருக்கச் சந்திராபீடனும் அப் பிதாவினுடைய பாதாரவிந்தங்களையே பார்த்துப் பணிந்துகொண்டிருக்க, அம் மன்னவர்களுடைய புத்ரவாத்ஸல்யத்தையும் பித்ரு பக்தியையும் முறையே கண்டு, அங்குள்ள மன்னவர்களெல்லாரும் நாற்புறமுந் தொழுது சூழ்ந்து மன முருகி நின்றார்கள். அப்போது, அன்னையைக் காணவேண்டுமென மன்னவன் தன் மைந்தனைக் கூடவே அழைத்துக்கொண்டு அந்தப்புரஞ் சார்ந்தான். பின்னர், வந்த அம் மைந்தனும் அன்னையை வணங்கி, அன்போடு வந்தெடுத்துத் தழுவிக் கொண்ட அத் தாயினுடைய கொங்கை சுரந்த பாலிலே மூழ்கி மகிழ்ந்திருந்தான். அதுகண்ட, அங்கே சுற்றிலு மிருந்த அந்தப்புர மங்கைமார்க ளெல்லாரும் மனமகிழ்வுற்றவர்களாய், 'பெற்ற

வளுடைய மாதவந்தான் என்னே! அம்ம, மிகவும் பெரிது' என்று வாழ்த்தி, நெருங்கி நின்று சிறப்பாக நீராஞ்சனஞ் செய்தார்கள். காவலனை அச் சந்திராபீடன் அங்ஙனஞ் சூழ்ந்துநின்ற அப் பாவைமார்களையெல்லாம் மகிழ்வுறப் பார்த்து, பின்னர்ப் பிதாவினுடைய கட்டளையின்படி ஆரிய சிரேஷ்டனை சுகநாதனும் அவனது தேவியாகிய மனோரமையும் பெரிதும் மனங்களித்து வாழ்வுறுமாறு அன்னோர்களைக்கண்டு வணங்கி, 'படையுடனே வைசம்பாயனனும் க்ஷேமமாக வருவான்' என்று உரைசெய்து, மீளவும் அன்னையின் பவனத்திற்குட் பிரவேசித்து, முறைப்படி நீராடியமுதுசெய்தபின், மாலையில் தன்னுடைய சிறந்தபவனத்திற்குச் சென்றான். அங்கு அவன் சிந்தியாநின்றதுஞ் செய்யாநின்றதும் வேறெதுவும் இல்லை. "அன்பிற் சிறந்த காதம்பரி அழகாக வார்த்தை சொல்ல, அந்த மதுர மொழிகள் என் காதிலே வந்து வீழ்வதுதான் நிஜமானவாழ்வாவது. அவளது இனியமொழிகளோடு கலவாத இவ் வாழ்வும் ஒரு வாழ்வாமோ? இனிப் பாங்காக இங்கே வரப்போகிற நமது பத்ரலேகை, அப் பூங்கொடியாளாகிய காதம்பரி தன்னோடு சொன்னவைகளெல்லாவற்றையும் ஒன்று விடாமல் இங்கே வந்து சொல்வாளாயின், அதுவே யான் இனிய அமிர்தத்தைப் பானம் பண்ணியதற்குச் சமானம்; அதுவே எல்லாத் தெய்வ மங்கலமு மாகும்" என்றெண்ணி, நாளும் பத்திரலேகையினது வருகையை எதிர்பார்த்துக்கொண்டே யிருந்தான். இங்ஙனமாகச் சிற்சில தினங்கள் சென்றபின், சீரிய அப் பத்திரலேகையை வெற்றிவேல்வீரனை மேகநாதனென்பவன் சந்திராபீடனிடமாக அழைத்துக் கொண்டுவந்து விட்டான். அங்ஙனம் வணங்கிநின்ற அம் மங்கையைச் சமீபத்திலழைத்து, 'இயற்கையிலேயே நல்ல அழகோடு கூடிய, இவள், காதம்பரியினுடைய அனுக்கிரகத்தா லடையப்பட்ட அபார சௌபாக்கியாதிசயத்தையு முடையவளாயினாள்' என்று வியந்து, இறுகத் தழுவிக்கொண்டு, அங்கே ஒதுங்கி வணக்கத்தோடு நின்ற மேகநாதனது முதுகையுந் தனது கரகிஸலயங்களால் தடவிக்கொடுத்து, அவனது குணத்தையும் பாராட்டியுரைத்துப் பின், பத்ரலேகையை நோக்கி, "குற்றமற்ற சிறந்த உத்தம குணங்களை யுடையவளாகிய மகாசுவேதையுடனே நமது அழகிய காதம்பரியும், அவளது அந்தரங்க ஸகியான மதலேகையும், மேன்மைபொருந்திய தமாலிகையுமாகிய இன்னோர்களெல்லாரும் சுகமாக இருக்கின்றார்களா?" என்று கேட்க, 'தேவரீருடைய இனிய அருளைப் பெற்றவர்களான அவர்களனைவரும் க்ஷேமமாகவே இருக்கின்றார்கள்' என்று சொல்லிப் பின்னரும், 'வேந்தே! தமது க்ஷேமத்தையும் அவர்கள் வெகுவாக விசாரித்தார்கள். மன்னவர் தீபமே! அவர்கள் மொழிந்தனவற்றையெல்லாம் முற்றிலும் எடுத்து மொழிவதென்றால் அது அசாத்தியமான காரியம். நிற்க. மங்கையர்க்கரசியாகிய அக்காதம்பரி இயற்கைமணங் கமழ்கின்ற தனது கூந்தலில் முடித்த அழகிய பூமாலைகளெல்லாம் நினது திருவடிக்கே யாகவேண்டுமெனத் தாழ்ந்து வணங்கினாள்' என்று சொன்னாள்.

சந்திராபீடன் அவ் வார்த்தையைக் கேட்டு அடங்காத மனமகிழ்ச்சியை யுடையனாய், அங்கே புடைசூழ நின்ற மன்னவர்களையெல்லாம் விடைகொடுத்தனுப்பிவிட்டு, அப் பத்திரலேகையை, 'இங்கே வா' என்றழைத்துக்கொண்டு, பெரியதோர் நீராவியின்கண்ணுள்ள பசியதோர் தாமரையிலையிலே ஒரு ராஜஹம்ஸமானது தனது பெடையுடனே வந்து தங்கினாற்போல, அழகிய அப் பொன்னணிவாயிலின் புறத்தே யுள்ளதொரு பத்ர மண்டபத்திலே யேகாந்தமாக நின்றுகொண்டு, 'நீ அவர்களிடத்திலே தங்கிநின்ற பிரகாரத்தை யெல்லாங் கூறுவாயாக' என, அவளுஞ் சொல்லத் தொடங்கினாள்:—

"ஸ்வாமி. நான் அங்கே எவ்வாறிருந்தேன், எத்தனைநாள் இருந்தேன், தேவியாகிய காதம்பரியின் பிரஸாத மெப்படியிருந்தது, அங்கே கூடியிருந்த கோஷ்டிகள் எத்தன்மையன, எவ்வெவ் விதமான ஸம்பாஷணைகள் நடந்தன என்பனவற்றை அடைவே கூறுகின்றேன். அவைகளை ஸாவதானமாய்த் திருவுள்ளம்பற்றிக் கேட்டருளவேண்டும். தேவி என்னைப் பன்முறை இறுகக் கட்டித் தழுவிக்கொண்டாள்; நான், 'வேண்டாம், வேண்டாம்' என்று தாள்பணிந்து பிரார்த்திக்கவும் அவள் என்னைத் தழுவிக்கொண்டு விடவில்லை. அந் நன்னுதலாள் என்னைத் தன் இன்னுயிர்ப் பாங்கியாகவே நயந்தாள்; பன்முறை வியந்தாள். உடனே மெலிவு தோற்ற அயர்ந்து வீழ்ந்தாள். அதுகண்டு நான், 'தேவீ! இவ்வாறு உனக்குச் சோகமுண்டாவதற்கு என்ன காரணம்? அதை எனக்குச் சொல்லியருளவேண்டும்' என்று அவளை ஆறுதல்சொல்லித் தேற்றியும், அஞ்சலி செய்தும், அங்ஙனமே பலவாறு போற்றியுங் கேட்டேன். ஒன்றுக்கும் அவள் உத்தரஞ்சொல்லவில்லை. புனிதனே! நின் விஷயமாகப் புகழ்ச்சியாகவோ நிஷ்டூரமாகவோ ஒன்றையும் அவள் சொல்ல இஷ்டப்படவில்லை. பின்னர், அத் தையல் நல்லாள் அந்த ஹிமகிருகத்தினின்றும் என்னை ஒரு இளமரப் பூஞ்சோலைக்குத் தனியே யழைத்துக்கொண்டு போய், அங்குள்ள மரகதசோபானத்தின் வழியாக மெதுவாக ஏறி மிகப் பரிசுத்தமானதொரு மெல்லணையின்மீது இருந்துகொண்டு, மனந்தளர்ந்து, 'தோகாய், பத்திரலேகை! நான் உயிர்பெற்றிருக்கவேண்டின், இந்த ஒரு வார்த்தையைமட்டும் நீ சொல்லக்கேள்' என்று ஏதோ ஒன்றைச் சொல்ல வந்தவள், கிளிகளுஞ் சாரிகைகளும் கேட்குமே, பெரிய அச் சிங்கார வனத்துள்ள நல்ல வனதேவதையும் இதை யறிந்துவிடுமே என்று கருதி அவ்விஷயத்தை இன்னதென வாய்திறந்து சொல்லவுமாட்டாமல் வருந்தினாள். கண்களினின்று அஞ்சனங்கலந்திட்ட சோகநீர்க் கலுழியானது ஓயாமல் வந்துகொண்டேயிருக்க வெயர்வை நீர்ப் பிரவாகத்திலே முழுகினவளாயிருந்தாள். வேந்தே! நாணம் முதலிய தர்மங்களும், எவற்றையும் நன்றாகப் பேணுதல் என்னும் பெருந்தன்மையும், பெண்களின் உத்தம லக்ஷணங்களும், ஆதரமும், மாண்புடைமை ஒடுக்கம், குடியோம்பல் முதலிய குணங்களுமாகிய இவையெல்லாம் அவ் வாணுதலாளிடத்தில்

வந்துதங்கியே தங்களின் திருந்திய இலக்ஷணங்களைக் கற்றுக்கொண்டன என்பது நிச்சயம். 'பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோல்-நாணம்நோற் றுயர்ந்ததிந் நங்கை தோன்றலால்' என்று பிராட்டி திறத்திலே ஈடுபட்டுரைத்த திருவடியின் வாக்கியம் இவளுக்கு மிகப் பொருத்தமான தென்னலாம். ஒலிக்கின்ற அழகிய வீரக்கழலையுடையோய்! கண்ணுங் கண்ணீருமாய்ச் சோர்ந்துநின்ற அத் தாழ்குழலாள் பின்னர்க் குழலினும் யாழினும் இனியனவாகிய சில வார்த்தைகளைச் சொல்ல நினைந்தாள்; சொல்ல நாவெழவில்லை. தழுதழுத்த வார்த்தைகள் இரண்டொன்றைச் சொன்னாள். மந்த ஸ்வரமான வேணுநாதம்போல மெலிந்த அவ் வின்குரலை இன்னதென்று நான் கேட்டறியக் கூடவில்லை. அதன்பின்னர், அத் தேவியானவள் என்னை நோக்கி, 'அம்மா! அன்புடையவர்களான தாய் தந்தை உறவினர் முதலான எவருக்குமே இது தெரியாது. எனது பரிஜனங்களும் இதனை அறிந்திலர். ஐயோ! துன்பமானது இங்ஙனே தொடர்ந்து நின்றதே! இதற்கு நான் என் செய்வேன்? சந்திரனுக்கும், தாவியெழுகின்ற மந்த மாருதத்திற்கும், மணஞ்செறிந்த மலர்க்கணைகளுக்கும், கொடிய கருங்குயிலுக்கும், சீறி யெழுகின்ற கங்குற்போதுக்கும் எழுதுளைகளோடுகூடிய குழலுக்கும் யான் என்ன அபராதத்தைச் செய்தேன்? வீணாக ஏன் அவைகள் என்னைத் தகிக்கின்றன? இவ் வேதனைகளையெல்லாஞ் செய்பவராகிய புருஷோத்தமரோ என்னை ஏனென்று கூட ஏறிட்டுப் பாராமல் தாம் மாத்திரம் ஸுகமாகத் தம் அரமனையிலே வாழ்ந்துகொண்டிருக்கின்றனர். இப்படியிருக்கிறபோது, தாயே! நான் என்ன சொல்லக் கிடக்கின்றது? எனக்கு இவ்வளவு போதும். மாதே! நீ இங்கே வந்திருந்து எல்லாவற்றையும் நேருக்கு நேராகக் கண்டறிந்தாயல்லவா? இதுவே போதுமானது' என்று வெகுவாகச் சொல்லிப் புலந்திருந்தனள். அது கண்டு நான் அத் தேவியை நோக்கி, 'அன்னமே! நீ இவ்வாறு சலிப்பும் வெறுப்புமாக நிஷ்டூரப்பட்டுச் சொல்லும்படியாக மன்னவர் பெருமான் நினக்கு என் செய்தான்?' என்று வருந்திக் கேட்டபின் அவ் வேல்விழியாள் என்னைநோக்கி, 'பத்ரலேகாய்! ஆதரத்தோடு கேட்டுக்கொண்டுவா. இன்னமும் அநேக விஷயங்கள் சொல்லவேண்டியிருக்கின்றன' என்று சொல்லத் தொடங்கினாள்:—'எனக்கு இனிதாக வாய்த்த அநேகங் கனவுகளிலே அம் மன்னவர்பெருமான் இங்கே வந்து வந்து என்னைப் பணிந்து என் சிவந்த பாதங்களுக்குச் செம்பஞ்சு தீட்டவும், இணையொத்து நெருங்கிய அழகிய முலைத்தடங்களிலே தொய்யிலெழுதவும், நன்றாகத் தெரிந்தாய்ந்து தேடித் தொடுத்த பூமாலைகளை என் குழலிலே யணிந்து பேணவும், மணங்கமழும் பூஞ்சோலையினிடத்தேவந்து அங்கே அழகிய மணியூசல்போல ஆடிடம் நாடி யுழன்று நிற்கவும், என் கலையைப் பற்றியிழுத்து விளையாடித் தொடர்ந்து பின்னேவர நான் கூசுதல்கண்டு என்னைத் தழுவிக்கொண்டலைக்கவும் நான் மேற்கூறியவற்றில் ஒன்றையுஞ் செய்ய வேண்டாது மறுப்பதையெல்லாம் இன்பமாகக் கொண்டும், வாய்விட்டுக் கோபித்துச் சொல்வன

வற்றை யெல்லாம் விளையாட்டாகக் கொண்டும், ஒன்றிலும் மனஞ்செல்லாது நிறுத்தி மௌனமாய் நிற்றலை யன்பின் மிகுதியினாலே அவ்வாறு நின்றதாகக் கொண்டும் வெறுப்பென்பது சிறிதுமின்றித் தலைநாள் விருப்பம் போன்ற விருப்பத்தையுடையனாய் நாடோறும் வருவான்' என்று இவை முதலியவற்றை அவ் வேந்திழையாள் உரைப்பக் கேட்டு நான், 'பொருந்திய இவளது மனோபாவங்களெல்லாம் உண்மையே யாகுமாயின், இது தென்றலுக்கும் அழகிய அந்த உவாமதிக்கும் ஏற்றதோர் நலமாகும். மேலும், இது சணைதொடுத் தெய்கின்ற அம் மன்மதனுக்கும் அனுகூலமானதாக ஏற்படும். கண்ட இக் கனவு மிகவும் நன்றாயிருந்தது' என்று கருதி மிகவும் ஆதரத்தோடு மனத்திற்குள்ளேயே நகைசெய்து, காதம்பரியைநோக்கி, 'கண்ணே, கருங்குழலாய்! இக் கனாத்திறத்தினாலே யுண்டாகிய தீமை என்கொல்? இது, மகா பராக்கிரமசாலியான சக்கரவர்த்தி குமாரனும், சிறந்த வேலாயுதத்தையுடையவனுமான அவனீபதியான சந்திராபீடனால் வந்ததன்று. நீயேன் இதை யோஜிக்கவில்லை? இவையெல்லாம் மகரத்வஜனான மன்மதனது பூசலால் வருகின்ற பிரகாரங்களென்று தெரிந்துகொள்' என்று சொன்னேன்.

சொன்னதும் அவ் வேல்விழியாள் என்னை நோக்கி, 'பிரிய ஸகி! வஸந்தன் என்று இங்கு எல்லாராலுஞ் சொல்லப்படுகின்ற அவன் யாவன்? எப்படிப்பட்டவன்? வண்ணம் எவ்வண்ணமாயிருக்கும்? அவன் படையாகக் கொண்டவை எவை? யாரோடு போர் செய்வான்? நீ மொழிக' என்று கேட்க; நான், 'மங்கையே! அவன் ரூபமில்லாதவன்; அவனுக்கு வண்ணமில்லை; புஷ்பங்களே அவனுக்குப் பாணங்கள்; தென்றலே அவனுக்குக் கடுவிசையாய்ச் செல்கின்ற தேராம்; சங்கரனையும் அவன் எதிர்த்துக் கணை தொடுத்தான்; இத் தகைய வைபவத்தை யுடைய அவ் வஸந்தன் நெடிய சக்கரபாணியாகிய திருமாலின் மைந்தன். அவனுடைய பாணத்துக்கு யாருந் தப்பியொளிக்க முடியாது; அப் பாணங்கள் ஸ்திரீபுமான்களுடைய ஹிருதயத்தையே லக்ஷ்யமாகக்கொண்டு ஊடுருவிப் பாயுஞ் சக்தியை யுடையன. அம் மகரகேதுவோ சரீரமில்லாக் கொடிய நெருப்பு; கொழுந்தில்லாமலே யெரிக்கின்ற கனல்; தூமபடலங்களைக் காட்டாமலே கண்களினின்று நீரைப் பெருகச்செய்கின்ற அக்னி; நீறு பூத்தலில்லாமலே தன் வசப்பட்டாரை நீறுபோல வெண்ணிறமாக்கவல்ல ஹுதாசனன்; முரசாக முழங்குகின்ற கடலிலே யெழுந்த முச்சுடருளொன்றாகிய சந்திரனே இவனுக்குக் கவிகை; காற்றே இவனுக்குத் தேர்; எனின், அக் காற்றோடு கூடிய வெங்கனலாகிய இவனுக்கு நிகராகச் சொல்லத்தக்கவரும் இவ்வுலகிலுளரோ? மன்மதனால் அதிஷ்டிக்கப்பட்ட காமினிகளுடைய குணங்களைக் கூறத் தொடங்கில் அவற்றிற்கு எல்லையே யில்லை. அன்னோர்களுக்கு மனங் காதலிக்கின்ற நெறியைப் புகல்வோமெனின் அவர்களுடைய காதலும் கரையற்றதாயிருக்கும். உலகத்தில் இத்தகைய காமினிகள் தாங்கள் காதலித்த புருஷர்களோடு கூடி முயங்கப் பெறும்போது அவர்களுக்கு ஊழியுங் கண

மாகக் கழியும். இது நிற்க. காதலுற்ற மாதர்களுடைய நெறிகளையும் ஆட வர்களுடைய நெறிகளையும் சொல்வதென்றால் அவை அநேக பிரகாரங்க ளாக இருக்கின்றன. இத் தலத்தில் இது முறைமை. உயர் குலத்தவர் களும், ராஜகன்னிகைகளும் எங்குந் தங்கள் சித்தமொத்த நாயகர்களுக்கே மாலையிடுவதென்கிற ஸ்வயம்வரத்துக் குரியவர்கள். இவர்களோ தத்தம் இஷ்ட பிரகாரந் தங்கள் மக்களை மணம்புரிவிக்கின்ற தாய்தந்தையர்கள் அல்லர். நீயும் மாண்பினிற் சிறந்த தெய்வகன்னிகையாய் இராநின்றாய். இப்படி யிருக்க நீ எதற்காக விசாரப்படுகின்றாய்? இனிச் சிறிதும் மனக் கவலை வேண்டாம். நானே சீக்கிரமாகப் போய் மன்னவ குமாரனை அழைத் துக்கொண்டு வரவேண்டும் என்ற எண்ணம் எனக்குப் பூரணமாகவுண்டு. ஆதலால், கவலை யொழிந்து தைரியமாய் இரு' என்று சொல்ல, தெரிவை யர்க் கரசாகிய காதம்பரி முகமலர்ச்சி கொண்டு, உயிர் பெற்றெழுந்த சித் திரப் பாவைபோல உவகையுற்றுச் சொன்ன வார்த்தைகளுக்குக் கணக் கில்லை. 'வெற்றிமிக்க அம்மன்னவனைச் சந்தேசத்தினாலே இங்கே அழைப் போமென்றாலோ அது பெரிய ஸாகஸ கிருத்தியம். அவன் மீதுள்ள காத லினாலே இப்போதே உன்னுடன் புறப்பட்டு அங்கேயே செல்வோமென்று நினைக்கின் அது மிக்க இழிவோடு இளந்தலையுமாகும். மன்மதாவஸ்தை களையெல்லாம் பொறுத்துக்கொண்டு இங்கேயே இருந்துவிடுவோமெனில், அதில் மேன்மையொன்று மில்லை. அவனை உத்தேசித்து நான் என் பிரா ணனை யிழந்துவிடுவேனாயின் அது புகழுக்கேற்ற காரியமன்றாம். எனக்கு அம் மன்னவனிடத்தில் கரைகடந்த பெரிய காதலுண்டென்பதைத் தெரி விப்போமெனில், அது எம்போலியர் தாமே சொல்லிக்கொள்ளத் தக்க தொன்றன்று. அம் மன்னவனுடைய மனத்தில் என் விஷயமான காதல் தங்கியுள்ளதோ வென்பதை யறிந்துவரச் செய்வோமென்னில், அது கேவ லந் தாழ்வைக் கூறுவது மாத்திரமாகவே முடியுமன்றோ. மாலை முதலிய கையுறை கொண்டு சென்று வசப்படுத்திக் கொள்வோமென்னில், அது குல ஸ்திரீகள் செய்யுங் காரிய மன்று. இவைகளை யுத்தேசித்து ஒன்றையுமே வாய்திறந்து சொல்லாமல் வாளா இருந்துவிடுவோமென்னில், அது பெரிய தோர் தீங்கிற்கும் அபசாரத்திற்கும் ஹேதுவாகும்; காதலை அறவே ஒழித்து அன்பில்லாதவராய் அதி சீக்கிரத்திற் சீலமாயினா ரெனில், அது நிஷ்டூரஞ் சொல்கின்ற பிரகாரமாகும்; 'என் கோலம் இம்மாதிரி யாய்விட்டது' என்று சொல்லின், அது பரத்தையர்க்குரிய குணமாகக் கருதப்படும். மிகுந்த அன்புடையேன் என்று கூறில், அது இறையும் அன்பில்லார் சொல்லும் வார்த்தையாகும். நின்னையல்லாத எவையும் எனக்குத் துச் சம் என்று சொல்லின், அது மிகைபடச்சொல்லும் விதமாகும். பரிஜன ஸகிதமாகச் செல்வோமென்னில், அது நமது வீறுடைமையைக் காட்டிய தாக ஏற்படும். ஆகையால், இந்த நிலையில் எனக்கு ஏதுவுஞ் செய்யத் தோற்றவில்லை. மேல் ஆவிபோன பிறகாயினும் அம் மன்னவர்பெருமான் என் நிலைமையை யுணராமற் போகமாட்டான். அதுவோ நமக்கு இன்ன மும் அரிதாயிருக்கின்றது' என்று சொன்னாள்

ஸ்ரீ:

# உத்தர காதம்பரி வசனம்.

'அழகிய சந்திர காந்தச் சிலையின்மேல் பரிமளமிக்க திவ்ய கலவைச் சந்தனத்தினாலே மெழுகப்பட்டு, அதிக சீதளமுடையதாய் விளங்கிய குஸுமமாலையமுந் தழல்போல என்னை வெதுப்பியகாலத்தில் அங்கே வந்தது யார்? அப்போது நாம் சிறிதும் ஆலோசனையின்றி அவனைக் கண்ணெடுத்துப் பாராமல் உபேக்ஷையாக இருந்துவிடவில்லையா? அந்தக் கதிர்வேற் காவலனான சந்திராபீடன்தானே இவன்? நானும் அந்தக் காதம்பரியல்லவோ? என்மீதுமட்டும் பாணங்களைத் தொடுத்து, அச் சந்திராபீடன்மேலொன்றுமே யெய்யாத தறுகண்மையை யுடைய அப் பஞ்சசரன்தானே இப்போதுமிருந்து நம்மை வருத்துகின்றான்' என்று பின்னரும் இவ்விதமான வார்த்தைகளை ஆதரவோடு என்னிடஞ்சொல்லி, அயர்வுற்று, அறிவு குன்றி, உரையற்றனளாய், அழகியதோர் சித்திரப் பாவைபோல நல்லதோர் மரகதத் தூணோடு பரவசையாய் மோகித்துச் சாய்ந்திருந்தாள்.

அப்போது, நற்குணமுடைய சுந்தரியாகிய காதம்பரியின் பொருட்டுப் பரப்பப்பட்டிருக்கிற அழகிய பல்லவசயனம் விளங்குவதுபோல, ஒளிவீசுகின்ற தினகரமண்டலமானது மேல் கடலில் வீழ்ந்து மறைந்ததும், கரிய மேகராசிகளினாலே விளங்கிக்கொண்டிருந்த சந்தியாகாலமானது செந்நிறமுற்று விளங்கிற்று. மன்மத பாணங்களைக் கொடுங்கனலிலிட்டுக் காய்ச்சி ஆயிரக்கணக்காகச் செலுத்தினாற்போல, மங்கலமாக மங்கையர்களெடுத்த அடுக்குத்தீபமாகிய நீராஞ்சனத்தின் வெவ்விய சுடரினது பிரதிபிம்பங்களெல்லாம் அழகிய அக் காதம்பரியின் மேனிமுழுதுஞ் சென்று பாய்ந்தன. அப்போது, நூற்றுக்கணக்கான பாவைமார் பலர் அத் தேவியினுடைய அழகிய நூபுரமணிந்த பாதத்தைச் சூழவந்து நின்றார்கள். பின்னர், அம் மங்கை நல்லாள் என்னை நோக்கி, 'அம்மா, பத்திரலேகை! உன்னிடம் இன்னமும் ஒரு செய்தி சொல்லவேண்டும்' என்று சொல்லி, அச் சிற்றிடை மடந்தையர்களின் சூழலினின்றும் என்னைத் தனியே யோரிடம் அழைத்துக்கொண்டுபோய் அழகியதோர் சிலாவேதிகையின்மேலேறியுட்கார்ந்து வெகுவாகச் சோகித்து, 'பெண்மணீ! துஞ்சுதல்போல அடிக்கடி மோகித்து வீழ்கின்ற எனது மையல் நோய்களையெல்லாம் அம் மன்னவர் பெருமானிடஞ் சொல்லி, நீ என் பிராணனையிருந்து, அவனுடைய ஸ்நேகத்தை யெப்படியாவது எனக்குச் செய்துவைக்க வேண்டும்' என்று இவ்விதமெல்லாங்கூறி, எனக்கு மலையினும் பெரிய பல

ஆடையாபரணங்களைச் சன்மானமாகக் கொடுத்ததோடுகூட, என் உடம்பையுந் தடவிக்கொடுத்து, மணங்கமழுந் தாம்பூலத்தை யளித்து, 'பிரிய ஸகி! நீ போய் எப்படியாவது என் துயரத்தைப் போக்கவேண்டும். இது உன் கடமை' என்று பின்னரும் இனிதாக இவ் வார்த்தைகளையுஞ்சொல்லி, அப் பூங்கொடியாள் என்னை விடைகொடுத்தனுப்பினாள். மலைபோலகன்ற மார்பினையுடைய மன்னவர் பெருமானே! விண்ணப்பஞ்செய்த இவ்விஷயங்களை யெல்லாம் மறந்துவிடாமல் திருவுள்ளத்திலே கொண்டருளவேண்டும்" என்று சொன்னாள்.

அழகிய மயில்போன்ற அப் பத்திரலேகை சொன்ன மொழிகளெல்லாம் அச் சந்திராபீடனுக்குத் தேவாமிர்தமாகவும், செந்தழலாகவும் பரிணமித்த பிரகாரத்தைச் சொல்வதென்றால், அது அஸாத்யமான காரியம். நொந்தான்; சஞ்சலமுற்றான்; பலவாறு வார்த்தை சொன்னான்; மயில் போன்ற அக் காதம்பரியின வாய்மொழியைக் கேட்டமாத்திரத்திலே அவன் எந்த இடரைத்தான் எய்தவில்லை? எல்லாவித இன்னல்களையு முற்றான். அவற்றை இன்னபடி யென்று சொல்லுதல் இங்கே யாருக்கும் இயலாது. அம் மன்னவகுமாரன் முன் நாள் செய்திட்ட நல்வினைப்பயனால் இந்தப் பிராணனானது என் சரீரத்தைவிட்டகலாமல், மணங்கமழும் பூங்கோதையாகிய அக் காதம்பரியினது இவ் வின்னுரைகளே பெரிதாதாரமாகக்கொண்டு தங்கியிருக்குமாயின், நான் இனிய சிந்தையோடு அங்கே செல்வேன். இது நிச்சிதமான காரியம்' என்று சிந்தித்துக்கொண்டிருக்குங் காலையில், முருகவேளை யொத்த அம் மூரிவேற்குமாரனை ஒரு கஞ்சுகி யோடிவந்து வணங்கி, ராஜகுலதீபமே! எமது பெருமாட்டியாகிய தேவி விலாஸவதி மிகுந்த கிருபையையுடையவளாய், இப்போது வீரனை மேகநாதனுடனே இங்கே வந்த பத்ரலேகையையும் அழைத்துக்கொண்டு ஆசிரவோடு வருமாறு உம்மை அழைத்தருளினாள். அங்கே செல்வீராக' என்று தெரிவிக்க, உடனே அந்தப்புரஞ்சென்று அன்னையை வணங்கலும், தேவி மனமகிழ்ந்து, 'ஐயனே! எதை யுத்தேசித்து இவ்விதமாக எங்களை யெல்லாம் நீ மறந்திருந்தாயோ?' என்று சொல்லிக் கட்டி யணைத்துத் தழுவிக்கொண்டிருக்கையில், பத்ரலேகையும் வந்து வணங்க, 'அணங்கே! நீ எந்த ராஜ்யத்திற்குப் போய்வந்தாய்? மிகுந்த இளைப்புடனிருக்கின்றாயே' என்று அவளை விசாரித்துவிட்டு மீளவும் மைந்தனை நோக்கி, 'குழந்தாய்! ஏன் முகம் வாடியிருக்கிறது? கண்மணி! தேகமெல்லாம் இளைத்திருக்கிறதே, ஏன்?' என்று கேட்க, அதற்குச் சந்திராபீடன், 'தாயே! ஏன் இம்மாதிரி வினவுகின்றாய்? ஒரு மெலிவுமில்லையே' என்று சொல்லிக்கொண்டிருந்தான். அப்போது, சேடிமார்கள் பலர் அங்கே வந்து, 'ஸ்வாமி! போஜனம் வந்திருக்கிறது' என்று தெரிவிக்க, உடனே சந்திராபீடனெழுந்திருந்து, உணவிற் சிறிதும் விருப்பமின்றி யிருக்கவும் வேண்டாவெறுப்பாய்க் கொஞ்ச மருந்தி வாய்பூசியபின், பூசுவதற்கு போக்யமான பரிமளமிக்க திவ்ய கலவைச் சந்தனங்களை ரத்னகசிதமான தங்கக் கிண்ணங்களிலே

மாதர் சிலர் கலந்துகொண்டு வந்தார்கள். மற்றுஞ் சில சுந்தரிகள் மணங்கமழுந் தாம்பூலங்களைப் பொற்றட்டிலே யேந்திக்கொண்டு வந்து தந்தார்கள். சந்திராபீடன் அவற்றிலேயெல்லாம் விருப்பில்லாதவனாய்ச் சிறிது நேரம் அங்கேயேயிருந்து, பின்னர் அழகிய அந்த அந்தப்புர மாளிகையை விட்டகன்று, ஸ்வபவனத்தையடைந்து, அற்றைப் பகற்போது ஒருவாறு கழிந்தபின், மன்மதபாணங்களெல்லாம் சரீரத்திற்புகுந்து வருத்த, அவ்வேதனையை ஸகிக்கமாட்டாதவனாய், பஞ்சணையிலே விழுந்து, ஐம்புலனும் மறவே கைவிட்டகல, வெற்றுடலைச் சுமந்து பெரிய துயருக்கெல்லாம் லக்ஷ்யமாய் வருந்திப் பின்னர், மானம் விவேகம் வண்மை விறல் வண்மை கல்வி அறிவு தைரியம் நன்றி முதலாகிய பூரணமாக அமைந்துள்ள நல்லனவாகிய மற்றும் பலவும் முன்னம் போயிருந்தவைகள் மீளவுந் தன்னிடத்திற்கு வரப்பெற்றவன்போலச் சிறிது ஸ்வாதீனமான தன்மையையடைந்து எழுந்திருந்து மன்மதனைக் குறித்து, 'ஏ, பஞ்சசர! நாயகப் பெண்பிள்ளையாகிய அக் காதம்பரி தனக்கு ஒரு ரக்ஷகஸ்தானமென்று நாடித் தெரிந்து என் மனத்திலே வந்து தங்கியிருக்கின்றாள், இவளோ அனிச்சமலரினும் மென்மையான தன்மையை யுடையவள். வேறு எதுவும் இவளது ஸௌகுமார்யத்துக்குச் சேராதுகாண். ஆகையால், உனது பைங்கணைகளுக்கு இவள் லக்ஷ்யமில்லையென்று கருதிக், கொடிய அச் சரமாரிகளை என்மீது வருஷிப்பதே யுத்தமுறைமைக்கு அழகு' என்று கூறி அலபரலுற்று வருந்தியிராநின்றான். மணங்கமழ்கின்ற கொடிய மலர்க்கணைகள் சரீர மாத்திரந்தம் புகுந்துதைக்க, போதாக்குறைக்கு ஓதங்கொண்ட சமுத்திரகோஷமும் மற்றொருபுறஞ் செவியிலே புகுந்து நித்திரை வரவொட்டாமல் தபிக்கச், சந்திராபீடன் இங்ஙனம் இடர்ப்படுதலைக் கண்டு பயந்து, கிருபையையுடையோனாகிய சூரியன் இராத்திரியாகிய அப் பெரிய ஆழியைக்கடந்து கரையேறினான். கதிரவன் இங்ஙனம் கங்குற் கடலைக் கடந்து உதயகிரியிற் றோன்றிய செய்தியைச் சிலம்பின புள்ளினங்கள் அறிவிக்கச் சந்திராபீடன் படுக்கையைவிட் டெழுந்திருந்து, கால்நடையாகவே வாஸனையோடு கூடிய நானாவித மலரினங்களினாற் சிறப்புற்று விளங்கும் அழகிய அந்தச் சிப்பிரா நதிக்கரையை யடைந்து, அங்கே திரளான அன்னங்கள் விருப்பத்துடன் தங்கள் துணையொடு புணர்வதைக்கண்டு செயலழிந்து, அந்நதியின் கரையிலே பூதேவியின் மணிமுடிபோல வானுறவோங்கி விளங்குவதொரு சேவலங்கொடியோனான குமாரக்கடவுளின் ஆலயத்தின் அருகே சென்று, 'நன்னடைய அன்னங்கள் செருக்கி நடப்பதனாலும், தாமரைப் போதுகளில் மதுகரங்கள் மொய்த்துக்கொண்டிருக்கும் பாங்கினாலும், அழகிய கயல்மீன்கள் குலாவி மிளிர்ந்து வள்ளையை யலைக்குந் தன்மையினாலும், இராத்திரியிலே இணை பிரிந்து வருந்தி இப்போது சேர்ந்திருக்கின்ற சக்கரவாக மிதுன ஸமூகங்களினுடைய பொலிவினாலும் மங்கையாகிய காதம்பரியைப்போல இச் சிப்பராநதி விளங்காநின்றது' என்று கருதி, அந்நதியை அப்படியே யுற்றுநோக்கிக் கொண்டிருந்தான். அப்

போது, தூரத்திலே சிலர் குதிரையின் மீது ஏறிவரக்கண்ட சந்திரா பீடன் பக்கத்திலே யிருந்த பத்ரலேகையை நோக்கி, 'நங்காய்! அதோ தூரத்திலே சிறந்த பெரிய குதிரைகளின் மீது சிலர் வருகின்றார்கள் பார்; இவர்கள் யாராக இருக்கலாம்? கேயூரகனாக விருக்குமோ? அநேகமாய் அவன்தான் இங்கே வரவேண்டும்; அடியிலே நான் கண்ட சகுனங்களுக்கும் இது ஒத்திருக்கின்றது' என்று சொல்லிப், 'பாருங்கள்' என்று பொதுவாகக் கட்டளையிட, அதுகேட்டு, அங்கே சூழநின்றவர்களெல்லாரும் அதிவேகமாகப் பதறிக்கொண்டு அக் குதிரைப்படையை யெதிர்நோக்கிச் செல்லலும், அவர்களை நோக்கி, வந்து கொண்டிருந்த அக் குதிரை வீரர்கள், 'அங்கே வீற்றிருக்கின்றவர்கள் யார்?' என்று வினவ, 'ராஜகுமாரன்' என்று இவர்கள் விடையளித்தார்களாக, உடனே கேயூரகன் குதிரையை விட்டுக் கீழே யிறங்கினான். 'வந்தவர்கள் ஹேமகூடமென்னும் அந்தப் பெரிய பர்வதவாஸிகளான கந்தர்வர்கள். கஷ்டப்பட்டு வந்திருக்கின்றனர். தம்முடைய குறைகளைச் சொல்லிக்கொள்ள வந்ததாகத் தெரிகின்றது' என்ற செய்தியை எதிர்சென்று விசாரித்து வந்தவளான ஒருத்தி அரசனுக்கு அறிவித்தாள். உடனே, அங்கே வந்தவர்களான வீரர்களும் மன்னவகுமாரனை வணங்கி நின்றார்கள். அப்போது சந்திராபீடன் கேயூரகனை மகிழ்ந்து மார்போடு இறுகத் தழுவிக்கொண்டு, 'இந்தக் கொடிய வனாந்தர வழிகளில் எப்படி நடந்துவந்தீர்களோ? தேகம் மிகவும் இளைத்து விட்டதே!' என்று சொல்லிப், பின்னர் அக் கேயூரகன் தூரத்திலே வணங்கிக் கொண்டு நிற்க, மற்றும் அங்கு வந்தவர்களை விசாரித்துவிட்டு, மீண்டும் அக் கேயூரகனை நோக்கி, 'உன்னுடைய சோபையே இயற்கைமணங்கமழ்கின்ற அக் கருங்குழற் காரிகையாகிய காதம்பரியினுடைய சோபையும், மற்றும் அங்குள்ள பரிஜனங்களுடைய சோபையும் இப்படிப்பட்டதென்பதை விசதமாக விளம்பாநின்றது; ஆகையால், நீ இந்தப்பெரிய சிரமங்களெல்லாமாறிச் சுகமாக இருக்கும்போது மற்றைய விர்த்தாந்தங்களையெல்லாஞ் சொல்லலாம்' என்று சொல்லி யானையின்மே லேறிக்கொண்டு, 'அழகிய பத்திரலேகையுடனே நீயும் வந்து ஏறிக்கொள்' எனக் கேயூரகனும் அரசனிருந்த அம் மடப்பிடியின்மேலேறிக்கொண்டான். மன்னவ குமாரன் அக் கரிணியை விரைவாக ஊர்ந்து சென்று தன்னுடைய மாளிகையையடைந்து, அங்கு நின்ற விறன்மிக்க வேந்தர்களுக்கெல்லாம் விடைகொடுத்தருளி, அம் மாளிகையின் முன்றிலில் அங்குமிங்குமாகச் சிறிதுநேரம் நின்று நின்று, பின்னர் நித்திய நியமங்களைச் செய்யவேண்டும் என்கிற முயற்சியினாலே மணங்கமழும் பூஞ்சோலைக்கு வந்து, வந்தவர்களான ஹேமகூட வாஸிகளோடு கூட அற்பமுந் தனக்கோர் மனமகிழ்ச்சியில்லாமலே ஸ்நானம் முதலிய வெல்லாவற்றையுஞ் செய்து போஜனமுமான பின், கூடவே இருப்பவளான அன்புமிக்க பத்திரலேகையுடன் தனியே யோரிடத்தி லிருந்துகொண்டு கேயூரகனை அழைத்துவரச் செய்து, 'கேயூரகா! காதம்பரி ஏதாவது சொல்லியனுப்பினளா? அதைத் தவிர, அமுததுல்ய

மான அம் மஹாசுவேதையும் மதலேகை முதலிய மற்றுள்ளவர்களும் என்ன சொன்னார்கள்? ஏ, வீர! ஒன்று தப்பாமற் சொல்' என, 'ஒன்றும அவர்கள் சொல்லியனுப்பவில்லை' என்று சொல்லி வணங்கிப் பின்னரும் அக் கேயூரகன் சொல்வானாயினான்:—"வேந்தே! இப் பூங்குழற் கோதையாகிய பத்திரலேகையை மேகநாதனுடனே அனுப்பிவிட்டு, நும்முடைய சிறந்த அமிர்தமயமான வார்த்தைகளை அவன் சொல்ல, அவற்றைக் கருத்தாகக் கேட்டுக் கொண்டுபோய்த் தேவியினிடஞ் சொல்லி, மற்றுந் தேவரீர் நும்முடைய வெற்றித் திருத்தந்தையார் அனுப்பியருளிய தூது கண்டு விரைவாகச் சென்றருளினீர் என்ற செய்தியையுஞ் செப்பினேன். அவற்றைக் கேட்டவுடனே அவ்வாரணங்கிற்கு அறிவெல்லா மழிந்தொழியா நிற்க ஐம்புலன்களும் அறவே அடங்கிப் போயின. அது கண்டு அங்கேயிருந்த மகாசுவேதை பெரிதுந் திடுக்கிட்டஞ்சினள். 'ஐயோ! இக் கொடிய சோகந்தான் என்னே! சாமானியமானதோர் காலகூட விஷமாயிற்றே. அந்தோ! இதற்கென் செய்வேன்?' என்று மனம் நொந்து கொடுந்தவம்புரியக் கருதி அவ்விடம் விட்டுப் போய்விட்டாள். மகாசுவேதை அங்கே வந்திருந்ததும், மிகுந்த துக்கத்தோடு தவத்தொழில் புரிவான் பிரிந்து போனதுமாகிய எல்லாவற்றையும் அடியோடு மறந்து அம் மைவிழியாள், 'நீ இவ்விடத்து நிலைமைகளை எல்லாம் மகாசுவேதையிடம் போய்ச் சொல்' என்று சொல்லி மதலேகையினிடம், 'இவன் என்ன காரியஞ் செய்தான்!' என்று சொல்லி நகைத்துத் திகைத்து நின்று, 'அம் மன்னவனிடம் இவ் வார்த்தைகளை விண்ணப்பஞ் செய்' என்றுசொல்ல வாயெடுத்தவள் அதனை மறந்து, உத்தரீயத்தினாலே அழகிய தனது முகத்தை மூடிக்கொண்டு, மணமிக்க மலரணையிலே சாய்ந்து, வாள் விழிகளினின்று பெருகிய கலுழி நீராற் சுடப்பட்ட கொங்கைகளையுடையளாய், இருள்செறிந்த அவ் விரவெல்லாம் அப்படியே கிடந்து வருந்தினாள். மற்றைநாட் காலையில் மைவிழி திறந்து இமைத்தமதொரு தன்மையையன்றி அம் மங்கைநல்லாள் மலர்வாய்திறந்து உற்ற செய்தியொன்றையும் ஒருவரோடும் உரைக்கவில்லை. அங்ஙனம் வாய் திறந்து ஒன்றைச் சொல்லாமற்போனாலும் அந் நிலையிலும் அநேக விஷயங்கள் கூறாமலே கூறப்பட்டன. அவ் வார்குழலாளது அவயவங்கள் பிறர் எளிதி லுணரக்கூடாதவண்ணமாய் ரகஸ்யமாக மொழிந்த வாக்கியங்களைப் பெற்றுக்கொண்டு அடியோங்கள் இங்கே வந்திருக்கின்றோம். பெருமானே! பேதையேன் இதைவிட இன்னும் அதிகமாக என்ன சொல்லக்கிடக்கின்றது? பூமகள் தலைவனே! ராஜேந்திரா! தேவரீர் அடியேன்மீது வைத்துள்ள பிரீதியினாலே ஒருவித சுவாதீனத்தை முன்னிட்டுக் கொண்டு அடியேன் நும்முடைய ஸந்நிதியிலே இன்னு மொருவிஷயம் விண்ணப்பஞ் செய்ய விரும்புகின்றேன். அதையுந் திருச்செவி சார்த்திக் கேட்டருளவேண்டும். 'அன்னையல்ல எனக்குத் துணை; அயலார்களும் எனக்குத் துணையல்ல; என் ஆருயிர்த்துணையும் அன்பின்மிக்க நல்ல துணைதானும் இப் பெரிய தோன்றலேயாவான். இவனைத் தவிர எனக்கு உற்ற துணை வேறேயெவருமில்லை'

யென்பாள். 'அந்தோ! இக் கங்குல் ஊழியினும் பெரிதாயிருக்கின்றதே. இதற்கு முடிவில்லையோ?' என்பாள். 'கண்ட கனவானது என் கண்ணெதிரேயே நிற்கிறதே' என்பாள். 'சீதகிரணன் என்று பிரஸித்தமாக யாருமே சொல்லிக் கொள்கின்ற இச் சந்திரனுக்கு ஸகிக்கப் போகாத உக்கிரமான இவ் வெயிலைக் காலகூடவிஷந்தான் இடையிலே உண்டாக்கிவிட்டதோ?' என்பாள். 'அந்தப் பசிய முகிற்கூட்டங்களுக்கு வடவா முகாக்கினியைச் செவியைத்துளைக்கின்ற பேரோசையோடு கூடிய கொடிய ஸமுத்திரந்தான் அள்ளித் தந்திட்டதோ?' என்பாள். இப்படியுஞ் சில பதார்த்தங்களை மங்கையர்களை வதைப்பதன்பொருட்டுவேணுமென்றே சிருஷ்டித்துவிட்ட அப் பிரமதேவன், ஐயோ! எப்படிப்பட்ட மகாபாபி!' என்று சொல்லி நடுங்குவாள். நும்மை எப்படியாவது அடையவேண்டுமென்னும் ஆசையினாலே கொடிய தனது நெஞ்சத்தையும், அக் கொடிய நெஞ்சத்தின மத்தியிலே நும்மையும் நிறுத்தி, வெளிப்படப் பார்க்கின்ற தனது பிராணனையுந் தனதடங்களிலே நிறுத்தி வருந்துவாள். வெற்றிக் கழல்புனைந்த வீர! 'அம் மன்னவகுமாரன் வெளிப்படும்படி விடாததற்கு இன்னமும் என்னோடு என் நெஞ்சமானது ஒன்றிப் பொருந்தி யிருக்கின்றதே. இது மிகவும் வலிது!' என்று சொல்லித் துக்கிப்பாள். சந்திரோதயமானதும் அந்த காரத்தோடு அவ் வணங்கனையாளுடைய நாணமும் நிறையும் கூடவே யகலும். அப்போது, வண்டுகளொடுங்க ஒடுங்குகின்ற ஓடைகளிலேயுள்ள தாமரை மலர்களைப்போலத் தேவரீரை யுட்கொண்டுள்ள அத் தேவியினது இதயதாமரையும் அடங்கி யொடுங்கிவிடும். அப் பொய்கையிலே யுள்ள சக்கரவாக மிதுனங்களைப்போல அம் மெல்லியலாளது ஐம்புலன்களும் வெம்பி யகலும். மணங்கமழும் அக் குமுதமலர்ப்பொய்கையேபோல மதன சேனையும் அம் மங்கைநல்லாளிடத்தில் விளங்காநிற்கும். இது இங்ஙனமாக, அக் கிருசாங்கியின் மெய்யின்மேல் ஓயாமல் எய்து எய்து, மன்மதனுடைய முல்லைமுதலிய எல்லாவித மலர்வாளிகளும் அடியோடு தொலைந்துவிட்டன. இப்படியே குளிர்ந்த அல்லித்தண்டு தாமரைத்தண்டு சந்திரகாந்தச்சிலை முதலிய அதிசீதளமான பதார்த்தங்களும் அச் சிற்றிடையாள் மேனியிலே யொற்றியொற்றிப் பெரிதும் அரிதாகி விட்டன. உபசாரமான இனிய வார்த்தைகளைச் சொல்லிச் சொல்லி எல்லையின்றிச் சூழ்ந்திருந்த பாங்கிமார்களான மெல்லியலார்களுடைய தொண்டைகளும் அறவே அடைத்துப் போயின. தையலான காதம்பரிக்கோ மையல்நோய் பையத் தொலைந்துபோய்ப் பின்பு மேன் மேலும் வந்து வந்து மிகவும் அதிகமாக வளர்ந்திட்டது. இதுவும் இப்படியாக; மற்று அங்குள்ள மங்கைமார்களெல்லாருங் குவிந்திருந்து மொழிகின்றதெல்லாம் உம்முடைய செயலைத் தவிர வேறில்லை. சூழநிற்குந் தோழிமார்கள் மொழியாநிற்பதுந் தேவரீருடைய திருநாமங்களே. கண் துயிலும்போது காண்கின்ற கனவுகளிலும் மற்றும் அத் தோகைமார்களுடைய நெஞ்சகங்களிலும் ஸதா தெரியவரக் காண்பதெல்லாம் நும்முடைய அழகிய வடிவமே. சிற்ப சாஸ்திரத் தேர்ச்சி

யையுடைய அவ் வனிதைமார்கள் முற்றும் சித்திரமாக எழுதிக்களிக்க முயல்வதுவும் உம்மையே.'' என்று சொல்ல, மன்னவனும், 'இனி என் செயக் கடவது!' என்று தன்னையும் வெறுத்துக்கொண்டு, 'கேயூரகா! நீ சொன்ன ஒவ்வொரு வார்த்தையு முறையே கேட்ட என் செவித்துளை களைச் சுடாதொழிவனவல்ல. இனி இத்தகைய வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம்' என்று சொல்லிப் பெரியதோர் இன்னலை யடைந்து மலரணை யின்மீது அப்படியே மூர்ச்சித்துவிழ, அதுகண்ட அருகிலிருந்தவர்களெல் லாரும் எடுத்தணைத்து, என்ன ஸம்பவிக்குமோ என்று மனம்வெருவிக் குளிர்ச்சிபொருந்திய பனிநீரைத் தெளித்துச் சிறிது அம் மயக்கந் தீர்ந்து உணர்வுவந்தவுடன் அவ் வரசர்பெருமானை வணங்கினார்கள்.

வீரனான சந்திராபீடனுந் தழுதழுத்து இமைப்புடன் சிறிது கண் விழித்து, 'கேயூரகா! நீ என் சமீபத்தில்வா' என அவனைக் கிட்ட அழைத்து, அவன் சாமரை வீசிக்கொண்டேயிருக்க, அவனை நோக்கிச் சில வார்த்தை கள் சொல்லலானான்:—''தூரதேச வாஸிகளாக இருப்பவர்களோடு உறவு மில்லை பகையுமில்லை' என்று லோகத்தார் சொல்லுவார்கள். கந்தர்வராஜ தனையையான அச் சுந்தரி நின்மூலமாக எனக்கு யாதொரு வார்த்தையை யுஞ் சொல்லியனுப்பாததனாலேயே இப் பழமொழி யுண்மையென்பதை நீ அறிந்துகொள். காதம்பரி சொல்லியனுப்பாவிட்டாலும் மகாப் பிரீதி வைத்திருந்த மதலேகைதான் எனக்குச் சொல்லியனுப்பினாளோ? அவளுஞ் சொல்லியனுப்பவில்லை; தவச்சிரேஷ்டையான மகா சுவேதையுஞ் சொல்லி யனுப்பவில்லை; உன்னோடு பரிஜனங்களுஞ் சொல்லியனுப்பவில்லையே. இதைப் பார்க்கும்போது அவர்கள் என்னைக் காட்டிலுங் கொடியர்களல்ல ரோ?'' என்று சொல்லிப் பின்னரும், 'அது போகட்டும். உன்னை இன்று தரிசித்தமாத்திரத்தில் என் மனம் மிக்க மகிழ்ச்சியை யடைந்துவிட்டது. போன பிராணனுந் திரும்பி வந்தது. நிற்க. அவர்கள் பேரிலுங் குற்றஞ் சொல்வதற்கிடமில்லை. ஏனெனில், தவமடந்தையான மகாசுவேதையும், உயிர்போற் சிறந்த மதலேகையும், அன்புடையவர்களான பரிஜனங்களும், மற்றும் அங்கே ஆதரித்து நின்றவர்களான பலரும் அவ் வாணுதலா ளுடைய சோகத்தைக் கண்டு பெரிதும் வருத்தத்தோடிருக்கும்போது, நீ அவ்வாறு அவர்கள் வேதனைப்படுவதைப் பார்த்து விரைவாக இங்கே வந்துவிட்டாய். வரும்போதும் சொல்லிக்கொண்டு வரவில்லை. சொல்லிக் கொண்டு வந்திருந்தால், என்ன இருந்தாலும் அவர்கள் ஏதாவதொன்றைச் சொல்லாமல் உன்னை இங்கே யனுப்பியிருக்கமாட்டார்கள். நான் என்ன வென்று சொல்வேன்? இவையெல்லாம் நான் பூர்வம் எண்ணியேயிராத விஷயங்கள். கின்னரமிதுனமொன்று ஆகாயமார்க்கத்தில் சஞ்சரிக்கக் கண்டு அதனைப் பின்றொடர்ந்து சென்றதும், அது காரணமாக விரைவில் அச்சோதப் பொய்கையைக் கண்டதும், அங்கே வீணாநாதத்தின் வழி யாகச் சென்று மஹாசுவேதையைக் கண்டதும், அம் மகாசுவேதையின் தோழமையினாலே ஹேமகூடத்தைச் சார்ந்து ஒப்பற்ற திவ்ய ஸௌந்தரி

யத்தையுடைய காதம்பரியைக் கண்டு அவளுடைய ஸ்நேகத்தைப் பெற்றதும், அதன் பின்னர் அவள் விஷயத்திலே மிதமிஞ்சிய அநுராகத்தினலே மனம் ஊசலாடிக்கொண்டிருக்கும்போது எனது மாட்சிமை தங்கிய திருத்தந்தையார் அனுப்பியருளிய தூதருடனே நின்று, அக்காதம்பரியிடத்தே தங்குமாறு மனத்தை அந்தரங்கமாக அனுப்பிவிட்டுச் சூன்யமான மனத்தையுடையனய் நான் மாத்திரந் தன்னந் தனியனய்த் தானையுடனே வந்ததும், இங்கு வந்தபின்னும் நின் மூலமாக இவற்றைக்கேட்டதுமாகிய இவையெல்லாம் விதியின் வசமேயன்றி வேறில்லை' என்று கூறிச் சிந்தையழிந்து கலங்கினன்.

இவன் இவ்வாறு துயரமுற்றுக் கவலுதல் கண்ட கதிரோன், 'தடாகத்திலுள்ள தாமரைகளெல்லாங் குவிந்து துயிலும்போது இவனுடைய தாமரைக்கண்களுந் துயிலுமன்றோ' என இரங்கி விரைந்துபோய்க் குடதிசைக்கண்ணுள்ள மலையின்வாயிலே விழுந்து மறைந்தான். மறைதலும் உலகெல்லாம் இருட்படாஞ் சென்று மூடிற்று. ஒன்றையும் வாய்திறந்து சொல்லாமல் மௌனமாய்ச் செயலற்றிருந்த அச் சந்திராபீடனது உள்ளமேபோல எங்கும் நள்ளிருள் மூண்டு பரவிற்று. அப்போது தன்னுடைய அமுத தாரைகளினலே அச் சந்திராபீடனைத் தேற்றக் கருதி யெழுந்தவன் போலச் சந்திரனும் குமுதவனங்களையெல்லாம் மலரச்செய்துகொண்டு மிக்க பிரகாசத்துடன் உதயகிரியிற் றோன்றினன். சக்கரவர்த்தி குமாரனை சந்திராபீடனும் மெதுவாக எழுந்து அங்கமெல்லா முருகிப் பரவசனய்ச் சிந்தையழிந்து அப்பொழிலிடத் துள்ளதோர் சந்திரகாந்தப் பாறையிலே படுத்துக்கொண்டிருந்தான். சிறிதுநேரஞ் சென்றபின் உணர்வுவந்து, உயிர்ப் பாங்கனை கேயூரகன் அடிவருடிக் கொண்டிருப்பதை யறிந்து அவனை யுற்றுநோக்கி, 'கேயூரகா! காதம்பரியின் பக்கத்திலிருந்து மதலேகை அவ் வொண்டொடிக்குத் தேறுதல் சொல்லி ஆற்றுவளோ? நிற்க. தவம்புரியச் சென்ற மகாசுவேதை திரும்பவும் ஹேமகூடத்திற்கு வந்து, தன் உயிர்த்தோழியான அக் கந்தர்வராஜபுத்திரியைத் தேற்றி, மன்மதனல் உண்டாகிய அவளுடைய கேதங்களையெல்லாம் மாற்றுவளோ? அந் நறுமலர்க் குழலாளுடைய முகமதியை, அப்பனே! நாம் சென்று காண்போமா? உள்ளதைச் சொல்' என்று சொல்ல, கேயூரகன் வணங்கி, 'கோவே! இப்படியும் ஒரு கோழை மனமுண்டோ? இதெல்லாம் என்ன வார்த்தை? தம்மைப்போன்ற தீரர்களும் இவ்வாறு கலங்கலாமோ? தைரியமாய் எழுந்திரும்' என்று மொழிய, அவனை நோக்கி, 'நல்லது, நாழிகையாய் விட்டது. நீ போய் நித்திரை செய். சூரியன் மலைவாயிற் றோன்றியவுடன் இங்கே எழுந்துவா' என்று திரும்பிவருவதற்கு ஒரு காலவரையறையையும் ஏற்படுத்தி அவனை யனுப்பிவிட்டு, 'இப்போதே அங்கு விரைந்துசெல்வோமென்னில் அது கிரமமன்று. தந்தையாரும் எனக்கு அனுமதி தந்து அனுப்பப்போகிறதில்லை. நயந்து விண்ணப்பஞ் செய்யவோ மனம் நாணுகின்றது. பெற்றவளுக்கும் நான் எப்படி சமாதானஞ் செய்ய முடியும்?

படையெடுத்துச் செல்வோமென்னிற் பகையில்லையே. இவ் விஷயத்தைப் பலரோடுஞ் சொல்லுதல் அழகன்று. தெரியாமல் மறைந்து செல்லுதல் தகாது. இவையெல்லாம் அந்தர்யாமியான அந்தக் கடவுளுக்குத்தான் தெரியும். விஷயமோ பெற்றவர்களோடும் மற்றவர்களோடும் வெளியிட்டுரைக்கத் தகாததாயிருக்கின்றது. உள்ளதுள்ளபடியாக மனத்திற் கிடப்பதை யெல்லாந் தோழனொருவனுக்குத்தான் வெளியிட்டுச் சொல்லலாம். அவனும் சமீபத்திலில்லை. இதற்கெல்லாம் நான் என் செய்வது?' என்று இவ்விதமாக வெல்லாம் அவ் விராமுழுதுஞ் சிந்தித்துக்கொண்டேயிருக்கையிற் பொழுதுபுலர்ந்துவிட்டதென அளியினங்க ளெல்லாம் ஆடிப் பாடிக் களிக்கத் தொடங்கின.

அடர்ந்த அந்நள்ளிருள்கழிந்து சூரியனுதித்ததுங் கேயூரகனும் வந்து வணங்கிநின்றான். மன்னவர் பெருமான் மிக்க மகிழ்ச்சியுடன் அவனை நோக்கி, 'குதிரைப் படைகளோடு வைசம்பாயனனும் தசபுரத்துக்கு வந்துவிட்டதாகச் சமாசாரம் எட்டி யிருக்கின்றது. அவன் வந்தால் நாம் எண்ணிய காரியங்களையெல்லாம் அவனுடனே கலந்து செவ்வையாக விசாரித்துச் செய்யலாம்' என்று சொல்ல, கேயூரகன் அவ் வார்த்தையைக் கேட்டு மன்னனுக்கு இவ்விதமான யோஜனையிருக்கிறபடியினால் நாம் விரைந்துபோதற்கு முடியாதென்று கருதி, அங்ஙனம் விரைந்துசெல்லுதற்கான உபாயமொன்றைத் தன்னுள்ளே சிந்தித்துச் சந்திராபீடனைநோக்கி, 'வேந்தே! சந்தோஷகரமான வசந்த காலத்தினுடைய வருகையை மலர் மணங்கமழுஞ் செழிய இளந்தென்றல் முன்னதாக அறிவிக்கும். வருஷா காலத்தினுடைய வருகையை எழுந்த கரிய முகிற்படலங்கள் முன்னதாக அறிவிக்கும். அதுபோல, அடியேன் மெல்லிய அப் பூங்குழற்கோதை வருந்தாவண்ணம் தேவரீருடைய வருகையை அறிவிக்கும் பொருட்டு முன்னதாகச் செல்ல விரும்புகின்றேன்' என்று உரைத்தான். அவனீபதியான சந்திராபீடன் அவ் வார்த்தையைக்கேட்டு மனமகிழ்ச்சிகூர்ந்து, அவனோடு கூடவே அனுப்பவேண்டுமென்ற எண்ணத்தினாலே பக்கத்திலேயிருந்த பத்ரலேகையினுடைய அழகிய நகை முகத்தைப்பார்க்க, அவளும் அப் பூபதியினுடைய குறிப்பையுணர்ந்து சிறக்கத் தலையசைத்து, 'நல்லது, அப்படியே செய்கிறேன்' என்றாள். அங்ஙனம் பத்திரலேகையும் கேயூரகனுடன் செல்ல உடம்பட்டதும் அரசர்கோமான் மேகநாதனை யழைத்து, 'நீயும் இவர்களுடன் சென்று, முன்னம் இவளை இக் கேயூரகன் உன்னிடங் கொண்டுவந்துவிட்ட இடம் வரையிலும் இவர்களைக் கொண்டுபோய் விட்டுவிட்டு, அங்கே தங்கியிருக்கிற வைசம்பாயனனைத் தரிசித்தபின் நீயும் அங்கேயே யிரு' என்று கட்டளையிட, மேகநாதன் அந் நியமனத்தைப் பெற்றுக்கொண்டு அப்புறம் பெயர்ந்தான். அவன் பெயர்ந்ததும், 'விடை தந்தருளவேண்டும்' என்று சொல்லிப் பணிந்துநின்ற கேயூரகனைச் சந்திராபீடன் அருகிலழைத்துக் கண்களினின்று மாலைமாலையாக நீர்பெருகி வழிந்து சோர அவனை மார்புறத்தழுவிக்கொண்டு, தன் கழுத்தி லணிந்து

கொண்டிருந்த ஒரு சிறந்த முத்தாரத்தை அவனுக்குப் பூட்டி, அவனைப் பற்பலவிதமாகப் புகழ்ந்து, கொஞ்சங் கொஞ்சமாகத் தடைப்பட்டு வருகின்ற தழுதழுத்த சொற்களினாலே அவனிடஞ் சில வார்த்தைகளைச் சொன்னான்:—'கேயூரகா! நான் என்ன வார்த்தையைச் சொல்லப்போகிறேன். அணங்கனைய அக் காதம்பரி தனக்கு என் உயிர்போற் சிறந்தவளான மதலேகையைக் காட்டிலும் இவளை அதிகமும் அந்தரங்கமுள்ளவளாக மதித்து, இவளைப் புகழ்ந்து கொண்டாடிக் களிக்கின்றாள். ஆகையால், இப் பத்திரலேகை நான் சொல்லியிருக்கிற வார்த்தைகளையெல்லாம் நிர்ப்பயமாய் அவளிடஞ் சொல்லுவள். நீயுந் துணிந்து சொல்லச்சொல்' என்று சொல்ல, அது கேட்டு நினைவொன்றுமில்லாமல், 'இப்படி நான் பிரியும்படி நேரிட்டதே' என்று கருதி, இரண்டு கன்னங்களின் வழியாகவும் நிறைய வழிந்தோடி வருகின்ற கண்ணீரானது தேக முழுவதும் நனைக்க வருந்தி நின்ற அப் பத்திரலேகையை மன்னவகுமாரன் அருகிலழைத்து, 'பத்திரலேகாய்! நீ அக் கற்பகவல்லியைப் பிரதமம் என் வணக்கமாக வணங்கி, அவளுடைய சேவடிகளைச் சென்னிமேற் கொண்டு போற்றுகின்ற என் செயல்களையும் விண்ணப்பஞ் செய். அதன் பின்னர், முன்னம் இங்கு வரும்போது என் ஆவியனையாளுடைய அனுமதியைப் பெற்றுக் கிரமப்படி வாராமல், என் பிரயாணத்தை அங்கு நின்றவர்களோடு சொல்லிவிட்டுவந்த முறையறியாத என்னுடைய கொடிய வாக்கினாலே மீளவும் ஒன்று மொழிகின்றேன். தமியேன் வரவு ஸபலமாகும்படி என் பிராணனைப் பிராணனோடிருக்கும்படியாக இரந்து கொண்டு சொல். இன்னமும் ஒன்று சொல்லுகிறேன்; பத்திரலேகாய்! இதனையுங் கருத்தாகக் கேள். இனிமேல் நீ உன்னை மிகவும் பத்திரமாய்க் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். நீ எங்கள் இரண்டு சரீரத்துக்கும் ஒரு பிராணனாக இருக்கிறாய்' என்று சொல்லிக் கேயூரகனை நோக்கி, 'மாதவம்புரியும் மகாசுவேதையினுடைய ஆச்ரமத்துக்கு நாம் வந்தால், கேயூரகா! நீயும் அங்கேவா' என்று மொழிந்து அவர்களுக்கெல்லாம் விடைகொடுத்தனுப்பினான்.

பின்னர், சிறந்த வீரக்கழலையுடையோனாகிய அச் சந்திராபீடன், கேயூரகன் பத்திரலேகை முதலிய எல்லாருந் தன்னைப் பிரிந்து சென்றதற்காகப் பெருக வருந்தி, 'இவ்வளவில் அவர்கள் செல்லற்கரிய பெரிய கானகத்திலே நெடுந்தூரம் மெய் துவளச் செல்வார்கள்' என்று அதையே சூன்யஹிருதயனாய்ச் சிறிது நேரஞ் சிந்தித்துக்கொண்டிருந்து, தசபுரத்தினின்று ஸ்கந்தாவாரங்களெல்லாந் திரும்பிவிட்ட செய்தியை யறிந்து வருதற்காகக் கடுவிசையிற் செல்லக்கூடிய வேவுகாரர்கள் சிலரை முன்னதாக விரைவில் அனுப்பிவிட்டுத் தானும் வைசம்பாயனன்பாற் செல்ல நினைந்து, விடைவாங்கும் பொருட்டாகச் சென்று தந்தையின் திருவடிகளைப் புல்லிவணங்கிச் சற்றுவிலகி நின்ற காலையில், தாதையாகிய தாராபீடனும், 'வருக, வருக' என்று மைந்தனைத் தழுவிக் கொண்டு, சிறந்த தனது பாதபீடத்திலிருக்கும்படி மொழிய, சந்திராபீடனும் அங்ஙனமே

பிதாவினது பக்கத்திலே வீற்றிருந்த ஆரியனான சுகநாதனையுந் தொழுது விட்டு உட்கார்ந்தான். அப்போது குலவேந்தனான தாராபீடன் நற்குணங் களமைந்த மந்திரியாகிய சுகநாதனைநோக்கி, 'வணங்கியிருந்த செல்வப் புதல்வனது பிராப்தமான யௌவனத்தின் அழகிருந்தபடியைப் பாராய்; இவனுடைய அழகிய திருமுகத்தில் அரும்பித் திகழ்கின்ற மீசையின் ஒழுங்கினாலே இவனுடைய வதனமானது வண்டினங்களினாற் சூழப்பெற்ற அழகிய செந்தாமரைமலரைப்போல விளங்காநின்றது. ஆகையால், இப் போதே இவனுக்கு விவாகஞ் செய்விக்கவேண்டும். இவ்விஷயத்தை விலாஸவதியுடனே நாம் தனியாக ஆலோசித்து, இச் சந்திராபீடனுடைய ரூபத்துக்குஞ் சிறந்த நமது சந்திரகுலத்துக்கும் யோக்யமான ஒரு ராஜ கன்னிகையைச் சீக்கிரத்தில் நாம் விசாரிப்பது நலம். நாம் இவனுடைய முகாரவிந்தத்தைக் காணப்பெற்று இவனால் எவ்வளவோ ஸுகிர்தத்தை யடைந்து களிக்கவில்லையா? இதைப்போலவே யுவாவான இவனுடைய ரூபகுணத்துக்கு அனுரூபமான ஓர் அழகிய கன்னிகையினுடைய புதிய மணக்கோலத்தையும் நாம் கண்குளிரக்கண்டு வாழும்படியான பாக்கிய மும் நமக்கு ஜன்மாந்தர ஸுகிர்தத்தினாலே உண்டாகக் கூடும்' என்று சொல்ல, சுகநாதன் அவ் வார்த்தையைக் கேட்டு மன்னனுடைய ஆதராதி சயத்துக்கு அனுகுணமாக, 'மிகவும் நல்ல காரியம்' என்று மொழிந்து மீள வும், 'அறுபத்து நான்கு கலைகளையுந் தனக்கு உரிமையாக்கி, அஷ்டதிக் குக்களென்று சொல்லப்படுகின்ற மடமாதர்களையும் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டு, பூமடந்தையுஞ் சிறந்த கலைமடந்தையும் பெரிய புகழ்மடந் தையும் அழகிய திருமடந்தையும் மனமகிழ்ந்து வாழுமாறு உலகெல்லாம் புகழத் தனியரசு புரிகின்ற இவ் வள்ளலுக்கு விவாகமாகவில்லை யென்கிற இந்த ஒருகுறையைத் தவிர வேறு என்ன குறையிருக்கின்றது?' என்று சொன்னான். இதைச் சந்திராபீடன் நாணத்தினாற் றலைகுனிந்தவனாக இருந்து சிந்தித்து, 'இருந்த நிமித்தத்தின் வழியைப் பார்க்கும்போது, பிறைநுதலாளாகிய அக் காதம்பரிக்கும் நமக்கும் ஸமாகமம் ஏற்பட்டு விட்டதோ என்னவோ? இதைத்தவிர வேறு என்ன சொல்லக்கூடும்? காதம்பரி ஸமாகம உபாயம் என்னவென்று சிந்தித்துக்கொண்டிருக்கின்ற இதே காலத்திலே உண்டான நமது விவாக மங்கலத்தைப்பற்றிய இந்த வார்த்தையானது, நடுக்கடலில் வீழ்ந்து தத்தளிக்கின்றவர்களுக்கு மரக் கலமொன்று கிட்டினாற்போலவும், இருண்ட காட்டகத்திலே நெறிதப்பித் திகைக்கின்றவர்களுக்கு அவ் வனப்பிரதேச வாஸியான மனிதனொருவன் வழிகாட்ட வந்தாற் போலவும் வாராநின்றது' என்று தெளிந்து, துணை வனான வைசம்பாயனனுடைய வருகையைப்பற்றித் திரும்பவுஞ் சிந்தித்துக் கொண்டிருக்கையில், க்ஷிதிபதியான தாராபீடன் எழுந்திருந்து தேவியான விலாஸவதியினது அந்தப்புரத்துக்குச் சென்றான்.

மன்னன் வருவதைக்கண்டு விலாஸவதி மிக்க மகிழ்ச்சியோடு எழுந்து சென்று வணங்கினாள். வணங்கலும் அத் தேவியை நோக்கி, 'தேவீ!

மைந்தனுன சந்திராபீடனுடைய யௌவன ஸௌந்தர்யத்தைப் பாராய். முன்னமேயே இவனுடைய விவாகத்தைக் குறித்து நீ முயலாதிருந்ததற்கு என்ன காரணம்? என்ன அபிப்பிராயத்தினுலே நீ இதுவரையிற் பேசாம லிருந்துவிட்டது? இவ்விஷயத்திற்குங் கூட நாணியிருக்கலாமா? நறுமலர்க் குழலாய்? நீ எண்ணியிருப்பதைச் சொல்' என்று வினவித் தாராபீடன் தேவியான விலாஸவதியுடனே விவாக வார்த்தையைக் குறித்துப் பரிஹா ஸமாகச் சிறிதுநேரம் விளையாடிக்கொண்டிருந்துவிட்டுப் போஜனஞ் செய் வதற்காகத் தனது அரமனைக்குப் புறப்பட்டுச் சென்றுன்.

மன்னவன் சென்றவுடன், மைந்தனுன சந்திராபீடன் சென்று வணங் கினுன். அப்போது, அவனது அபீஷ்டத்தின்படியே, 'நெடுநாளாகப் போயிருந்த சேனைகளெல்லாந் திரும்பிவிட்டன. இவனும் எதிரே செல்ல வேண்டும். ஆகையால், இம் மைந்தனுக்கு விடைதந்தருள்வீராக' என்று சுகநாதன் விலாஸவதியினிடஞ் சொல்ல அவளும் விடையளித்தாள்.

சந்திராபீடன் அன்னையினது நியமனத்தைப் பெற்றுக்கொண்டு, அன்று அம் மாளிகையிலேயே தங்கி யினிது நுகர்ந்து, சூரியன் அஸ்தமிக் குஞ் சமயத்தில், படைகள் திரும்பிவந்துவிட்ட செய்தியை யறியச்சென் றவர்கள் அவ் விஷயத்தை அறிந்துவந்து உரைத்தவுடன், தன் படையில் நின்றவர்களுக்கெல்லாம் அன்றிரவு பயணம் என்பதைத் தெரிவித்துத் தான் தடையின்றிப் பிரயாணப் படுவதற்கு அறிகுறியாகச் சங்கத்தைப் பெரிதாக முழக்கும்படி கட்டளையிட்டான். அவ்வாறே சங்கமும் முழக் கப்பட்டது.

கமன ஸூசிதமான அவ்வொற்றைச் சங்கத்தினுடைய பேரொலியைக் கேட்ட அளவில், பெரிய அத் தனிநகரத்திலுள்ளவர்களெல்லாரும் ஒருங்கே திரண்டெழுந்து தன்னைச் சூழவர, அக் கங்குற்போதின் கண்ணே கண்விழித்தெழுந்து தம்மை அலங்கரித்துக்கொண்டு அணியணியாக ஆப ரணங்களைக் கையிலேந்தியவண்ணமாய் மாதர் பலர் அருகேவர, கவரி காளாஞ்சி கதிர்வாள் கவிகை முதலியவற்றை யெடுத்துக்கொண்டு சிலர் பக்கத்தேவர, சிலம்பு மேகலை முதலிய ஆபரணங்களும், முரசு துடி முத லிய வாத்தியங்களும் இடைவிடாமல் எப்போதும் முழங்கிக்கொண்டேவர, துப்பைத் துப்பென்று இகழவல்ல சிறந்த இதழ்களையுடைய மடவார்கள் சிலர் சூழவே பாடிவர, மாகதர்களெல்லாருந் தங்கள் கைக்கமலங்களை யுயர வெடுத்துப் புகழ்ந்துகொண்டேவர, சூரியனைப்போலப் பந்தங்க ளொளி வீசுதலினுற் பட்டப் பகல்போல விளங்கும் அக் கங்குற்போதிலே மன்ம தனை யொத்த வடிவழகையுடையோனுகிய சந்திராபீடன் இந்திராயுதமெ ன்னுந் தனது குதிரையின்மேலேறிக்கொண்டு, அருணோதயத்திற்குமுன் புறப்பட்டு இரண்டாவது சந்திரனே என்னும்படி ஒளிர்கின்றதொரு வெண்கொற்றக் குடைநிழலின் கீழமர்ந்து, அமர்கடந்த வைவேலும் வடி வாளும் வரிவெஞ்சிலையுமாகிய ஆயுதங்களையுடைய வீரர்களும் மதத்தைப் பொழிந்துகொண்டேயிருக்கின்ற வலிமிக்க நீண்ட துதிக்கையினையுடைய

கஜங்களும், பெரிய மகாரதங்களும், அதிவேகமாகச் செல்லவல்ல துரகங்களுமாகிய கடல்போலெழுந்த நாற்படைகளும் அப்போதுதவுங் கார்காலம் போல, 'இப்போது அரசன் சென்றவிடம் எங்கே எங்கே?' என்று எழுந்து பின்றொடர, இலனென்னும் எவ்வ முறையாமல் அளிக்கின்ற பெருங் கொடைவள்ளலார்களுடைய திசைமுட்டும் பெரும்புகழ்போலவும் அமுத வர்ஷம்போலவும் விளங்காநின்ற வெள்ளிய மதிநிலவிலே, வண்டானம் அன்னம் முதலிய புள்ளினங்கள் இரிந்தோட, மோதியடிக்கின்ற பெரிய அலைகளையுடைய நிலவொடு வேற்றுமை தெரியாது நிர்மலமாய்த் தெளிந்த பெரிய சிப்பிராநதியைக் கடந்து, தசபுரமார்க்கத்தை நோக்கி, மிகுந்த வெள்ளிய நிலவினாலே சந்த்ரகாந்தச் சிலையானது உருகியொழுகுந் தன்மையைப் போல ஓயாமல் ஒழுகிக்கொண்டேயிருக்கும் பனியினாலும், குளிர்ந்து மெல்ல அசைந்துவருகின்ற காற்றினாலும், மலர்ந்த குமுதம் முதலிய புஷ்பங்களினது இனிய பரிமளத்தினாலும் விளங்காநின்ற அம் மார்க்கத்திலே அதிக சிரமமின்றிச், சிறந்த அவ் விந்திராயுதத்தின் விசையினாலே பன்னிரண்டுகாத தூரஞ் சென்றான்.

அப்போது, கங்குலின் கடையாமம் வந்துவிட்டபடியாற் சந்திர மண்டலமானது ஒளிகுன்றி வெளுத்துத் தோன்றிற்று. எல்லா வெளிகளிலும் பரந்துள்ள நிலவுவெள்ளமானது மேல்கடலிலே விழ, அவ் வெள்ளத்திற் றோன்றிய தாரகைகளாகிற மொக்குளும் அழிந்து மறைந்தன. ஒளியிற் சிறந்த உதயகிரியாகிய யானையினுடைய புகரொளிபோலவும் நன்றாகச் சிவந்து விளங்குந் தினகரனுடைய அழகிய தேரிலே கட்டியுள்ள சிவந்த கொடியினுடைய பேரொளி போலவும் அளியிற்சிறந்த கமலங்களெல்லாம் முகையவிழ்ந்து மலருமாறு சந்த்யாராகமானது எங்கும் பரவி யெழுந்தது. கன்னற் சிலையோனான மன்மதனது பாணங்களாகிய நீலமலர்களினாலும், கலைநிறைந்த உடவாமதியினுடைய கிரணங்களினாலும், மணஞ்செறிந்த வெள்ளிய ஆம்பற்போதுகளின் நகையாலும் இரவெல்லாம் வருந்தி, அளியினங்களையுந் தாதுகளையுமே துணையாகக்கொண்டிருந்த பதுமினியைத் தனது கரத்தினாலே தழுவி யணைத்துச், செவ்விய மலரிதழிலே யமர்ந்த மதுவை விரும்பிப் பானம்பண்ணுவதற்காக நாயகனான சூரியனும் விரைந்து தோன்றினான்.

சந்திராபீடன் சூரியனுதித்துவிட்டதுகண்டு பின்னும் அதிவேகமாகச் சிறிது தூரஞ் சென்றவளவில், 'கடல் ஏழல்ல எட்டு' என்று சொல்லும்படியாகப் பொங்கிப்பரந்த பெரிய சேனைவெள்ளமானது எதிரே மீண்டுவருவதைக்கண்டு மகிழ்ந்து, 'நாம் நமது மித்திரரத்னமான வைசம்பாயனனை எப்போதும்போல அல்லாமல், நமது வருகையைப்பற்றிய எண்ணம் இல்லாமலிருக்கத் திடீரெனச் சென்றுகண்டு பற்பலகால் நன்றாகத் தழுவியணைத்து அழைத்துக்கொண்டுபோகவேண்டும்' என்று சிந்தித்துப் புதிதாக ஒரு கோலத்தைச் செய்துகொண்டு, படைவிட்டிருந்த இடம் முதலாகவுற்றவிடத்திலும் பதறிச் சென்று பெயர்கூறித் தேடித்திரிந்துங் காணா

மையினாலே மனந்தளர்ந்து நொந்து தடுமாற்ற முறுநிற்க, அப்போது இந்திராயுதத்தினுடைய அடையாளத்தினாலே மண்டலாதிபதியான சந்திராபீடன் இவனே யென்பதை யறிந்துகொண்டு அங்கிருந்தவர்களான ராஜபுத்திரர்களெல்லாரும் உத்தரீயம் நழுவி விழுமாறு அவனிடம் ஓடிச் சென்று பணிந்தார்கள். அவர்களைப் பார்த்து, 'வைசம்பாயனன் எங்கே?' என்று கேட்க, 'குதிரையை விட்டிறங்கி இந்த நிழலில் எழுந்தருளியிருந்தாற் சொல்லுகின்றோம்' என, சந்திராபீடன் அவ் வார்த்தையைப் பெரிதும் அதிசங்கைபண்ணி மனந்தளர்ந்து அவசமாய்ச் சோகித்துவிழக் கண்டு, தந்தையைப்போன்ற அன்புடையவர்களான அரசர்களெல்லாஞ் சரேலென்த் தாங்கி யெடுத்துச் சித்திராசனத்தின்மீது வீற்றிருக்கச் செய்து, 'எந்தாய்! இது என்ன காரியம்?' என்று உரைக்க, அதற்கு உத்தரமொன்றுஞ் சொல்லாமல் இமைத்தபடியாகச் சித்திரம்போல இருந்து,

"இங்கே வைசம் பாயனனை யான்கண் டிலன்மற் றெவ்விடத்தே
எங்கே காண்பேன் ? அவனைப்போல் எனக்கிங் குற்ற துணையார்தான் ?
அங்கே நின்று போந்தேனே, அதிபா தகனே யன்றோதான் ?
எங்கே போவேன் ? எதுசெய்வேன் ? இருந்தேன் இன்னும் இருந்தேனே !

என்னு ருயிரே ! என்மனமே ! என்றேன் ஈதோர் அறியாமை ;
என்னு ருயிரும் என்மனமும் எனக்கென் செய்த திவனைப்போல்?
என்னு ருயிர்கொண் டிருப்பதினி யென்னும் ? எந்தை சுகநாதன்
என்னோர் வஞ்சேர் அன்னையர்முன் இவனை யொழிந்தோ யான்செல்வேன் ?

சென்றால் அவர்க்கத் திசைதன்னிற் சேரா வேந்தைத் திறைகொள்ள
நின்றா னென்று மொழிவேமோ ? சிலமொன் றுண்டு செல்லாத
தொன்றா லதனை வென்றுவர நின்றா னங்கென் றுரைப்பேமோ?"

என்று வைசம்பாயனனிடத்திலுள்ள ஆதராதிசயத்தினாலே இப்படியெல்லாந் தன் மனத்திலே நினைந்து புலம்பியபின், அந்த ராஜகுமாரர்களை நோக்கி, 'வேந்தர்கள் எதிர்வந்து கண்டுகொண்டு திறைசெலுத்திவிட்டால் உடனே திரும்பிவராமல் அவனை அங்கே விட்டுவிட்டு நீங்கள்மாத்திரம் இங்கே வந்ததற்கு என்ன காரணம்? அவவாறு தங்கும்படியாக என்ன அவசிய காரியம் ஏற்பட்டது? யுத்தம் உண்டானதோ? அன்றி, அவனது அழகமைந்த சரீரத்தில் தீராநோய் ஏதாவது வந்ததுண்டோ?' என்று கேட்டான். அவ் வார்த்தையைக் கேட்டதும் நரபாலர்களெல்லாம் அச்சமுற்றுப், 'பாவம், பாவம்!' என்று தங்கள் காதைப் பொத்திக்கொண்டு, 'வேந்தர் கோவே! நண்பனான வைசம்பாயனன் எப்போதும்போலவே திருமேனிக்கு யாதொரு அனுக்கமும் இன்றித் தேவசரீரம்போல எழில் கூர்ந்து விளங்கிக்கொண்டிருக்கின்றான். க்ஷேமத்துக்கு ஒரு குறைவுமில்லை' என, சந்திராபீடன் ஒருங்கே மாய்ந்துபோன தன் உயிரும் மனமுந் திரும்பிவரப் பெற்றான்போல அவர்களைக் கண்டத்தோடு கண்டமாகச் சேரத் தழுவிக்கொண்டு களிகூர்ந்து, 'இனி நடந்த செய்தியைச் செப்புங்கள்' என, அவர்களுஞ் சொல்லத் தொடங்கினார்கள் :—

"வேந்தே! எல்லா விஷயங்களையும் நன்றாகக் கேட்டருள்வீராக. வைசம்பாயனனைச் சேனாபதியாக நியோகித்து அவனைச் சேனையுடனே வருமாறு உரைக்கும்படி முன்னம் மேகநாதனுடன் சொல்லிவிட்டுத் தாம் மீண்டுசென்றபிறகு, வைசம்பாயனன் அன்று முழுதும் அங்கேயே தங்கியிருந்து, மறுநாள் சூரியோதயத்தில் பிரயாணபேரி அறைந்தவுடன், 'இங்கே அச்சோதப் பொய்கையும், பவானீபதியான மஹேசுவரனுடைய ஆலயமும் உண்டென்று சொல்லுவார்கள். நாம் அங்கே சென்று அப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அச் சந்திரசேகரனுடைய திருவடித்தாமரைகளை வணங்காமல், இனி எங்கே சென்று நமது முன்னைப் பழவினைகளை யொழிக்கப்போகின்றோம்?' என்று கூறி, எங்களையும் அழைத்துக்கொண்டு அப் பொய்கைத் தீரத்திற்குக் கால்நடையாகவே நடந்து சென்றவளவில், 'தேவர்களினாலே பூஜிக்கப்படுகின்ற இந்தப் புண்யபூமியானது யாரும் அடைதற் கரிது' என்று அப் பூமியைப் பெரிதும் புகழ்ந்து, வனமயிலும் வரிக்குயிலும் பைங்கிளியும் பொறிவண்டும் இடைமிடைந்து களித்து விளையாடுகின்ற அங்குள்ள கொடிமண்டபங்களைப் பார்த்தான்; சூழல்களைப் பார்த்தான்; நெடுநாளாகப் பிரிந்திருந்த ஒரு சகோதரனையோ புதல்வனையோ சிநேகிதனையோ திடீரெனக்கண்டவன்போல மிகுந்த துயரத்தை யெய்தி, ஒன்றையும் வாய்திறந்து சொல்லாமல், அம் மண்டபத்திலுஞ் சூழலிலுமே தனது மனத்தையெல்லாஞ் செலுத்திப், பிறிதொன்றையும் நோக்காமல் மெய்ம்மறந்து சித்திரம்போ லசைவற்று நின்று தளர்ந்தும், நெட்டுயிர்ப்பெறிந்தும், நெறிபோ யயர்ந்து நிலையற்றும் அங்கேயே யுழன்றுகொண்டிருந்தான். அங்ஙனம் அவன் அங்கேயே மனம்பற்றி யாழ்ந்திருக்கும் தன்மையைப் பார்த்ததும் மிகுந்த அச்சமுற்றவர்களாய் நாங்க ளெல்லோரும் ஏங்கித் துயருற்று, இதற்கு 'ஹேது ஏது?' என்று எண்ணி மனம்வருந்தி, 'மாலை மார்ப, வைசம்பாயனா! இங்கேவந்து இப் புதுமைகளையெல்லாங் கண்டது போதும். எங்களுக்கு மிகவுந் துக்கமாயிருக்கின்றது. சீக்கிரம் இவ்விடம் விட்டு எழுக எழுக' என்றும், 'உன்னோடு விஷயங்களையெல்லாஞ் சொல்லிச் சடிதியில் வருமாறு சேனைகளையெல்லாம் உன்னிடம் விட்டுவிட்டு மன்னவர் பெருமானான சந்திராபீடன் உஜ்ஜயினிக்குத் திரும்பிப்போய்விட்டான். நீயும் இங்ஙனம் இங்கே தனியே நின்று வருந்துகின்றது ஏனோ? இது நமக்குத் தகுதியோ? நீ சந்திராபீடனுக்குப் பின்னோனென்றும் உயிரென்றும் புகழ்ந்து பாராட்டிப் பேசத் தக்கவனல்லையோ? அந்தந்தோ! அத்தகைய நீ இங்ஙனம் நிலைகலங்கிக் குலைதல் நீர்மையோ? நாங்கள் பெரிதும் மனம்நொந்து தியங்குகின்றோம். பார்த்ததும் பட்டதும் போதும். எழுந்து போதராய்' என்றும் நயந்துரைத்து வருந்தியழைக்க, அதற்கு வைசம்பாயனன், 'என்னை அழைக்கவேண்டாம். நான் இந்த இடத்தைவிட்டு வரமாட்டேன். ஆகையால், இனி நீங்கள் விரைந்து செல்லலாம்' என்று சொல்ல, 'உன்னை யழைத்துப் போகாமல் இங்கே விட்டுவிட்டு நாங்கள் மாத்திரந் திரும்பிப்

போக எங்களுக்கு ஒருவித சுதந்தரமுமில்லை. அப்படியே போவதாக வைத்துக்கொண்டாலும் அன்னையான மனோரமைக்கும் பிதாவான சுகநாதனுக்கும் மித்திரசிகாமணியான சந்திராபீடனுக்கும் அவர்கள், 'வைசம்பாயனன் எங்கே?' என்று கேட்டால் நாங்கள் என்ன உத்தரத்தைச் சொல்வோம்?' என்று கேட்க, 'நீங்கள் என்ன சொல்லியும் என்ன? என்மனம் இதைவிட்டுப் பெயரவே பெயராது' என்று சொன்னான். பின்னும் நாங்கள் பலாத்காரமாகப் பேசத் துணிந்த அப்போதும் வைசம்பாயனன் எங்களை நோக்கி ஒருவிதமாகப் புன்னகைசெய்து, 'நீங்கள் என்னையும் கூடவே அழைத்துப்போகவேண்டுமென்று கருதியல்லவா இவ்விதமான வார்த்தைகளையெல்லாம் உரைக்கின்றீர். நான் இந்த இடத்தைவிட்டு அப்புறம் பெயர்வேனானால் அப்போதே என் பிராணன்போய்விடும். போனால், அவ் வுயிரை மீளவும் வரப்பெற்றாலன்றிக் கேவலம் சரீரம் மாத்திரம் எப்படி உங்களைப் பின்றொடர்ந்து வரக்கூடும்? மேலும் இச் சரீரங்கூட. இவ்விடம்விட்டு அசையவொண்ணாதபடி நன்றாகக் கட்டுண்டுவிட்டது. உங்களோடு பின்றொடர்ந்து வராமல் இன்னும் நான் இங்கேயே உயிரோடிருப்பேனேயாயின், எதனால் நான் இவ்விதம் இன்னதென்று எனக்கேயறியமுடியாதபடி தைரியத்தை யிழந்து வருந்துகின்றேனோ அந்த இக்காரணத்தினாலேயே நான் உயிரை வருத்தாமல் உஜ்ஜீவிப்பதற்கேற்ற சில நன்மைகளும் விளையக்கூடுமென்று எண்ணுகிறேன்' என்று சொன்னான். அதுகேட்டு நாங்கள் சற்றேறக்குறைய இரண்டு யாமநேரம் வரையில் அங்கேயே யிருந்தோம். பின்னர் வைசம்பாயனன் எழுந்திருந்து சென்று அங்குள்ள சோலைகளிலும், பாறைகளிலும், சிறந்த அப் பொய்கையின் கரைகளிலும், கைலையங்கிரியோனான சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற அழகிய ஆலயத்திலும் கூடிப் பிரிந்தவர்களைக் காணாதவர் போல நின்றான். பிறகு தனியே அங்குள்ளதொரு லதாமண்டபத்திலே யுட்கார்ந்திருந்தான். நாங்கள் அங்கே சென்று அவனுடைய அடிகளை வருடி, 'ஸ்நாந போஜனத்துக்கு எழுந்தருளீர்' என்று பிரார்த்திக்க, அவன் எழுந்திருந்து, 'சந்திராபீடன் என் ஆருயிர்; இவ் வுயிர் நும் பங்கேயாம்' என்றுரைத்துப் புனலாடிப் பலமூலங்களை யருந்தியபின், செங்கோல் வேந்தே! நாங்கள் அவனைப் பலவாறு தேற்றி மூன்றுதினம் வரையில் அங்கிருந்து, பிறகு அவன் வரமாட்டானென்பதை நிச்சயமாய்த் தெரிந்துகொண்டு, அவனுக்குச் சகாயமாகச் சிலரை அங்கேயே யிருக்கும்படியாக ஏற்பாடுசெய்துவிட்டு இங்கே திரும்பிவந்தோம். அன்றைக்கே செய்தியையெல்லாம் அறிவிக்கும்பொருட்டு ஒரு ஆளை அனுப்புவதாக உத்தேசித்தோம். எவ்வளவு சீக்கிரத்தில் தாம் இங்கே யெழுந்தருள வேண்டும் என்று எதிர்பார்த்தோமோ அதற்குத் தக்கபடியாக அவர்கள் அங்கே வந்து சேரமாட்டார்கள் என்பதை யோஜித்தும், இச் செய்தியையறிவித்தால், 'இப்போதுதானே திரும்பினோம்' என்பது முதலான ஒன்றையும் நினையாமல் தேவரீர் எழுந்தருளும்படியாயிருக்குமே என்பதை

உட்கொண்டும் உத்தேசித்தபடி ஆள் அனுப்பாமல் ஆலஸ்யமாக இருந்து விட்டோம்'' என்று மொழிய, அவ் வேந்தர்களுடைய வார்த்தையைச் சந்திராபீடன் கேட்டு, துக்கமாகிய கரையிலாப் பெருங்கடலிலே மூழ்கி,

''அந்த வினைப்பய னென்றன் வினைப்பய னைவ னைவ னவனுக்கும்
இந்த நிலத்தவ ரஞ்சலி வேறல, யாவையும் வேறல, ஒருநாளுந்
தந்தை வெறுத்தது தாயர் வெறுத்தது தானிலே ; வைசம் பாயன்றன்
சிந்தை வெறுத்தது செப்பும தெப்படி? செய்வதென்? இப்படி செய்தானே''

என்று புலம்பி, விருக்ஷங்களினுடைய நிழலிலே நின்றும் எழுந்தும் பட்ட வருத்தம் சொல்லக்கூடிய தொன்றோ! 'நல்லது, மன்னவர்களெல் லாம் போய்வரலாம்' என்று திரும்பி மொழிந்துவிட்டு ஆருயிர்நின்றாசலா டக் குன்றிய மனத்தினையுடையனாய் மங்கலராசிகளினால் விளங்குகின்ற கூடாரத்தை நோக்கிச் சென்று, ஒன்றையும் உரையாமலும் ஒன்றையும் பாராமலும் ஒன்றையும்பற்றி நினையாமலும் அதனுள்ளே பிரவேசித்தான். பிரவேசித்தவன் உள்ளேயிருந்த ஆசனத்தின்மீது வீற்றிருக்க நினைக்கவி ல்லை; பொன்னாற்செய்த நெற்றிப்பட்டத்தோடு விளங்கிக்கொண்டிருந்த கந் தமாதனம் என்னும் பட்டத்துயானை நின்றுகொண்டிருப்பதைச் சூன்ய மான திருஷ்டியுடனே பார்த்தான்; மாதனம் வந்திருப்பதைக் கண்டிலன்; மிகுந்த மனவேதனைகொண்டு அணையின்மீது விழுந்தான்; மெல்லியலார்க ளான மாதர்கள்பலர் அடிதொழுது பிரார்த்திக்கவும், உணவிற் சிறிதும் விருப்பமில்லாதவனாய் முதனாளிரவெல்லாம் விழித்துக்கொண்டிருந்தவனா யிருந்தும் அன்றிரவும் சிறிதுநேரமாயினுந் தூங்காமல், திரும்பவும் மற் றோர் துக்கத்துக்கு ஹேதுவான சில விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டே யிருந்தான்.

கங்குற்போது கழிந்ததும், சந்திராபீடன் எழுந்திருந்து, முன்னதாகத் தன் மலரடியைத் தொழவருகின்ற மன்னவர்களுடைய முகத்தை நோக்கி, 'உள்ளதுள்ளபடியாக நடந்த செய்தியை யெல்லாம் ஒளியாமற் சொல்லி, நீங்கள் விரைவாக அப்போதே ஒரு ஆளை அனுப்பியிருக்கவேண்டும். நானும்சொன்ன அந்த க்ஷணமே அப்போது போய்த்திரும்பினவன்போல உடனே வந்திருப்பேன். அது செய்யாமையினாலே காரியம் இப்படி யாய் விட்டது. போகட்டும், இனிமேல் என்ன செய்யவேண்டுமென்பதைச் சொல்லுங்கள்' என்று கேட்க, அந்த ராஜகுலமைந்தர்களெல்லாருஞ் சந் திராபீடனைநோக்கி, 'மகாராஜர் எப்படி நியமிக்கின்றீர்களோ அப்படியே நடக்கின்றோம். அதற்கு என்ன எதிர்மாற்றமிருக்கப்போகிறது? சொன்ன வார்த்தையைச் சிரசாவகித்துச் செய்வது எங்கள் கடமை. நன்றாக ஆலோசனை செய்யுங்கள். இப்பொழுதே ஊருக்குத் திரும்பிச் சென்று இவ்விஷயத்தை அன்னைக்குந் தந்தைக்கு மறிவித்து அவர்களனுமதியைப் பெற்றுத் திரும்புவதே கிரமமாகும் என்று எண்ணுகிறோம்' என்று சொல்ல, 'நல்லது, அப்படியே செய்க; சேனைகளும் புறப்படட்டும். அதற்காக முரச றையச் செய்யுங்கள்' என்றான். உடனே சமுத்திரம் பொங்கியெழுந்தது

போலப் படை வெள்ளங்களெழுந்தன. மதிக்குடை வேந்தனாகிய சந்திரா பீடனும் ராஜலோகங்களெல்லாந் தன்னைப் புடைசூழ்ந்துவர, உத்தமவாரணமாகிய கந்தமாதனத்தின்மீது ஏறிக்கொண்டு, சூரியன் ஆகாயத்தின் உச்சியிலே வந்து நெருப்பைவாரிச் சிந்திய கடுமையான நடுப்பகலின் தன்மையைச் சிறிதும் அறியாதவனாய் இரவெல்லாம் வழிநடந்து, விடியுந்தருணத்திலே உச்சயினியிலேயுள்ள தனது படைவீட்டினுட் புகுந்தான்.

காலையில், அந் நகரத்திலுள்ளவர்களெல்லாரும் எழுந்திருந்து தங்களுக்குள்ளே கூடிக்கூடிக்கலந்து, 'வைசம்பாயனனுடைய சீலமானது சாமான்யமான தன்று. அப்படிக்கிருந்தும் அவனும் இவ்விதஞ் செய்தானே! இதற்கு நாம் என்ன செய்வது? செய்தது மாத்திரம் மிகவுந் தவறான காரியந்தான்' என்பதாக அங்கங்கே பேசிக்கொண்டு தளர்ந்து நிற்குந் தன்மையைக்கண்டு, முன்னிலும் அதிகமான மனத்தளர்ச்சியை யெய்தி, விசையாக நடந்து சென்று கூரிய வேலாயுதத்தை யுடையவனான சந்திராபீடன் தனது தந்தையாகிய ராஜராஜனான தாராபீடனிருக்கும் அரமனையை யடைந்தான். உடனே, அங்கிருந்த வாயில் காப்பவர்கள் அச்சமுற்றுக் கடிதாக ஓடிவந்து வணங்கி, 'தேவா! முன்னம் இங்கேவந்த சிலர் கூறிய வார்த்தையினாலே புத்திரசிகாமணியான வைசம்பாயனன் இங்கே வாராமல் அச்சோத தீரத்தில் நின்றுவிட்ட செய்தியைக் கேட்டு, மனோரமையும் ஆரியனான சுகநாதனும் மன வருத்தமடையாதிருக்கும்படி ஆறுதல் சொல்லித் தேற்றுவதன் பொருட்டாக உத்தமகுண ஸம்பூர்ணர்களாய்த் திகழ்கின்ற தமது தந்தையாரும் தாயாரும் அமைச்சர்பெருமானது மாளிகைக்குச் சென்றிருக்கின்றார்கள்' என்று தெரிவிக்கச் சரேலென அங்கே சென்று, அங்கிருந்த அவர்கள் வருந்துமாறு கீழே விழுந்து புலம்பி, பின்னர்த் தன்னைத் தூக்கியெடுத்தவருடன் போய், பெரிய மந்தர பர்வதமும் அம் மால்வரையினாற் சுழல்வுற்று வருந்திய பெரிய பாற்கடலும் போலத் தனது தந்தையாருடனே சுகநாதனும் வருந்திநிற்குந் தன்மையைக்கண்டு, மனம் நொந்து, அவர்களுடைய திருவடிகளைப் பேணிவந்து வணங்கவேண்டுமென்பதை மறந்துபோய் வசமழிந்து நின்றான். பிறகு மன்னர் மன்னனாகிய தாராபீடன், 'இங்கே வா' என்றழைக்க, சந்திராபீடன் அவனருகில் வந்து வணங்கித் தானாக முன்னம் ஒன்றையும் வாய்திறந்து சொல்லாமல் நிற்க, அவனுடைய முகத்தை நோக்கி மனவாட்டமுற்ற அம்மன்னவன் பின் வருமாறு, 'வைசம்பாயனன் இன்னும் வந்துசேரவில்லை. இவனே பெரியதோர் பிழையைச் செய்துவிட்டு இங்கே என் கண்முன்னே வந்து நிற்கின்றான். இவனினுங் கொடிய மதிகேடருண்டோ?' என்று மிக்ககோபத்தோடு சிலகடுஞ்சொற்களைச் சொல்லச் சுகநாதன்கேட்டு ஸகியாமல், "இவன்மீது யாதொரு தோஷமுமில்லை. வைசம்பாயனன் சிந்தைகெட்டலைந்தால், அதற்கு இவன் என் செய்வான்? பின்னாற்சேனைகளோடு திரும்பிவருமாறு சொல்லிவிட்டு முன்னதாகவே இவன் வந்துவிட்டான். அப்படி வியக்தமாகச் சொல்லியிருக்கும்போது அதன்படி நடவாமல், என்ன காரியத்தினிமித்தம் அவன் அங்கே

நின்றான்? இது விதியின் பயனேயன்றி வேறில்லை. இரண்டுகண்களுமில்லாத அந்தன்போல இப்படி நெறியறியாமல் நின்றுவிட்டானே! விஷயத்தையறியாமல் நிஷ்காரணமாய் நாம் இவனை முனிந்துரைப்பது தகுமோ?

இரவியை இருளெதிர் விரவினும், வெண்மதி இனிமை தருங்கதி ரினைவிட்டுப்
பரவிய வெம்மை படைப்பினும், நல்லவர் பழுதுரை மொழியினும், வரைமேவுந்
தரைமிகு பொறையது தவிரினும், முதுதிரை தருகடல் தரவம ரர்க்காகும்
விரைதரு மமுதது கைப்பினும், இங்கிவன் மேலொரு குறையுள தெனலாமோ?

இவனிலை மைக்கிவன் அறிவு தனக்கிவன் இயல்பு தனக்கொரு குறையுண்டோ?
அவனறி வற்றவன், அவன்நிலை யற்றவன், அவனியல் பற்றவன் அன்றோதான்?
இவனை வெறுப்பதும் இவனை யொறுப்பதும் இவனை மறுப்பதும் இயல்போதான்?
அவனை வெறுப்பதும் அவனை ஒறுப்பதும் அவனை மறுப்பதும் ஆமன்றே.

இங்கிவன் அன்னை பிதாவெனும் இந்நெறி எதும் நினைந்திலன், ஈதன்றிப்
பைங்கழல் மன்னவன் முனிவ தறிந்தொரு பண்புடன் வந்திலன், ஈதன்றி
அங்குயி ராகிய நண்பு மறந்தனன், அன்பு மறந்தனன், ஈதன்றிச்
சங்கைய தற்றனன் அங்க ணிலத்திசை தன்னை யறிந்தில னவனன்றோ?

கானன மேவிய பைங்கிளி யுஞ்சில கற்பது முண்டு, அவன் அதுபோலுந்
தானும் அருங்கலை கற்றனன், அதிலொரு தன்மை யுணர்ந்திலன், அக்கானத்
தேனை அருங்கிளி தன்னை வளர்த்தவர் என்று நினைந்து வனத்தேகா
தான தெவர்க்கும் விளங்குறும்; இப்படி அல்லல் உழன்றிடு மோசொல்லாய்?"

என்று அறிவிழந்தவனும் வைசம்பாயனன் செய்த காரியத்தைப் பற்றிப் பலவிதமாக நிந்தித்துரைத்து, அடிக்கடி சோகித்துக் கொண்டிருந்த துணைவனான சுகநாதனுடைய கோபமான வார்த்தைகளைத் தடுத்து, 'நீ இப்படிப்பட்டவைகளைச் சொல்வது நியாயமன்று; குழந்தைகளுக்கு ஆகாதென்றுஞ் சொல்வார்கள். கோபத்தாற் சொல்லும் இத்தகைய தீய வார்த்தைகள் சிலவேளை சொன்னபடியே பலித்துவிடுவது முண்டு; மேலும் அவன் எதற்காக நின்றான் என்பதையும் நாம் செவ்வையாக விசாரித்துத் தெரிந்துகொள்ளவுமில்லை' என்று சமாதானத்தைச் சொல்லி, 'இனி இவ்வாறு கோபமாய் வெறுத்துச் சொல்லும் வார்த்தைகளை விடு' எனத் தராதிபனை தாராபீடன் உரைத்த பின்னர், அம் மன்னன் மைந்தனை சந்திராபீடன் கசையடிபெற்றவன்போல வருந்தி உட்கார்ந்தபடியே மெதுவாகக் கொஞ்சங் கொஞ்சமாக நகர்ந்து சுகநாதனை நோக்கி, 'வைசம்பாயனன் இங்கே திரும்பிவாராமலிருப்பதற்கு நான் செய்ய நினைத்ததும் செய்ததுமாகிய ஒரு தீங்கும் என்னிடத்திலில்லையென்பதை நான் நிச்சயமாய் அறிவேன். எனினும், இது பெரிய அபராதந்தான்; ஏனெனில், உலகத்தாராலும் விசேஷமாக குருஜனங்களாலும் எது கிரகிக்கப்படுகின்றதோ அது உண்மையிற் பொய்யாயிருந்தபோதிலும் கிரகிக்கப்பட்டபடியேயாய்விடுகின்றது. நிற்க: இக் காரியம் என்னுடைய தோஷத்தினாலேயே யேற்பட்டுவிட்டது என்று நினைத்து என் தந்தையார் கடிந்துரைத்த வார்த்தையானது என்னைப் பெரிதுஞ் சங்கடமுறச் செய்துவிட்டது.

சக்கரவர்த்தியான என் அருமைப் பிதாவே என்னை இவ்வாறு சொல்லும் போது, இனி உலகத்தவர்கள் எதைத்தான் சொல்லமாட்டார்கள்? பொய் யான தோஷமோ குணமோ முறையே இவற்றைச் சார்ந்துவரும் வசையும் புகழுந் தத்தம் பலன்களை யளித்தே தீர்கின்றன. நிஜமான இவற்றின் லோகாந்தர பலன் இம்மைக்கு என்னபயனைத்தரும்? எப்படியோ, இத் துக்கஸம்பவமானது என் தோஷத்தாலானது என்று இப்படியே தீர்மான மாய்விட்டது!' என்று சொல்லிப் பின்னரும் அவ் விளவரசனை சந்திரா பீடன் சுகநாதனை வணங்கி, 'மெய்யருள் பூண்டுவிளங்கும் என் தந்தை யாருக்கு இச் செய்தியை யறிவித்துவிட்டு, அந்த இடத்திலிருந்தபடியே தளர்ச்சியையடைந்த அப் பெரியசேனையை அப்படியே திருப்பிக்கொண்டு வைசம்பாயனன் தங்கியிருக்கும் அந்த இடத்திற்குச் செல்லவேண்டு மென்றே முதலில் எனக்கு யோஜனை தோன்றிற்று. பிறகு, இது முறை யன்று; நேரிற்போய் நிகழ்ந்த எல்லாவிஷயங்களையுந் தெரிவித்து அனுமதி பெற்றுக்கொண்டு திரும்புவதுதான் நியாயம் என்று நிச்சயித்து இங்கே வந்தேன். வீரர்களான வேந்தர் குழாங்களோடு திரும்பிவராதவன் இனித் தனியே இங்கே ஒருபோதுந் திரும்பிவரமாட்டான். நான் எந்தவிட மாயினும் அவன் இருக்குமிடந் தேடிச்சென்று, அவனை அழைத்து வருகின்றேன்; அருள்செய்து இதற்கு அனுமதிவாங்கி யளிக்கப் பிரார்த் திக்கின்றேன்' என்றான்.

'இனி என்னையல்லாது வைசம்பாயனனை அழைத்துவருபவர் ஒருவரு மில்லை' என்று சொல்லி வருந்தி, மிகவும் அதிகமாகத் தனியே அழுத வண்ணமாய், 'எனக்கு விடை நல்குமாறு தந்தையார்பாற் சொல்லப் பிரார்த்திக்கின்றேன்' என்று இரந்துகொண்டு, அனுமதி யளித்தலை எதிர் பார்த்து நின்று யுவராஜனான சந்திராபீடன் சாலவும் வருந்தாநிற்க, சுக நாதன் அதுகண்டு, அவ் விஷயத்தை நரபாலனுக்கு அறிவிக்க, குளிர்ந்த சந்திரனைப்போன்ற வெள்ளிய கொற்றக் குடையை யுடையோனாகிய அவ் வரசர் பெருமானும் மனத்தினுற் சிந்தித்துப் பின்வருமாறு ஒன்றை உரைப் பானாயினன்:—'கலையெல்லாம் நிரம்பி விளங்கும் பூரணசந்திரனானவன் எப்படி உரோகிணியைத் தழுவிச் சந்தோஷத்தோடு வீற்றிருக்கின்றனனோ அப்படி யாகாமல், கண்கவர் வனப்போடு தனியே விளங்குகின்ற நமது சந்திராபீடனுடைய விவாக விஷயமாக மொழிந்த காரியங்கள் பிறகுதான் ஆகவேண்டும். இப்படிப்பட்ட விஷயம் இடையே நிகழுமென்பதை ஸ்வப் பனத்திலும் நாம் எதிர்பார்க்கவில்லை. வைசம்பாயனனோ இங்கில்லாமல் அகன்றுபோயினன். அவனைவிட்டு இக் காரியம் செய்தல் கூடாது. மேலும் சந்திராபீடனும் வைசம்பாயனனைத்தேடிச் செல்லுங் கருத்துடைய வனாக இருக்கின்றான். இவன் போனாலல்லது அவன் வருவது கஷ்டம். நல்லது இவன் போய்வரட்டும்' என்று சொல்லிவிட்டு, விழியில் நீர்ததும்ப நெடுநேரம் வரையில் சந்திராபீடனை யுற்றுநோக்கி, அவனை அருகில் அழைத்து, மெய்யெல்லாந் தடவிக்கொடுத்து, 'இவ்விஷயத்தைத் தாயான

விலாஸவதிக்கு அறிவிக்கவேண்டும். மனோரமைக்கும் அப்படியே யறிவிக்க வேண்டுவது அவசியம். உன் பிரயாண விஷயமான இவ்விருத்தாந்தத்தை நீ போய் அறிவிக்கில் அவர்கள் பெரிதும் வருந்துவார்களே. எவ்வாறு புகல்வது! எப்படியாலும், வியாதியினது கூறுபாட்டை நன்குணர்ந்தவர்களான வயித்தியர்கள் சரீரத்தை வருத்தியாவது எப்படி அவ் வியாதியைப் பரிகரிக்கின்றார்களோ, அப்படியே நாமும் நமக்குண்டாயிருக்கின்ற இவ் வருத்தத்தைப் போக்கிக்கொள்ளவேண்டும். ஆகையாற் சொல்லிக் கொண்டு புறப்படு' என்று சுகநாதனுடைய பவனத்திலிருந்து இவற்றைச் சொல்லிவிட்டு, மதியிற் சிறந்த அம் மந்திரியோடுந் தனது அரமனைக்குட் பிரவேசித்தான்.

அதன் பின்னர், யுவராஜனான சந்திராபீடன், 'இன்று இப் பேரருள் பெற்றனம்' என்று மகிழ்ந்து அவ்விடம்விட்டுப் பெயர்ந்து சென்று மனோரமையோடு, கண்ணீர் சோர வியசனித்துக்கொண்டிருந்த தனது அன்னையையுங்கண்டு தொழுது, பிதா நியமித்தபடியே யுரைசெய்தான். அப்போது அத் தாய்மார்கள் இருவரும், 'எங்கள் வருத்தம் சொல்லக் கூடிய தொன்றாக இருக்கவில்லையே' என்று மனமுடைந்து கண்களினின்று தாரை தாரையாக நீரைச் சொரிந்துகொண்டே யிருந்தார்கள். மைந்தனான சந்திராபீடனும் நெடுநேரம் வரையில் அவர்களோடுகூடத் தானுங் கண்ணீர் சோர் வருந்திநின்று அலமரலுற்று, 'அவர்கள் சொன்னது மெய்யன்று. இனி நானே நேரிற் சென்று அவனை அழைத்துக்கொண்டு வருகின்றேன். அன்னைமீர்! நீங்கள் அது வரையில் வருந்தாமல் தேறியிருத்தலே தகுதி' என்று சொன்னான். அதுகேட்ட மனோரமை, 'இனி உன்னையும் ஏகுமாறு அனுப்பிவிட்டு இன்னமும் நாங்கள் வருந்தியிருப்பது நியாயமோ? நான் சொன்னது தவறு. அவன் நின்று விட்டது கூட எனக்குத் துயரமாகத் தோற்றவில்லை. நீ இப்போது அவனைத் தேடிக்கொண்டு புறப்படப் போவதாகச் சொன்ன இதுதான் பெரிய துயரமாக இருக்கின்றது. குழந்தாய்! நீ போகவேண்டாம். பிரயாணத்தை நிறுத்து' என்று சொல்லலும், அன்னையான விலாஸவதி பார்த்து, 'அது எப்படி யிவனை நிறுத்துவது? வைசம்பாயனனை விட்டுப் பிரிந்து க்ஷணமும் இவன் இங்கே தரித்து நில்லான் என்பதை அறிந்தேதான் மன்னவன் இவனுக்கு அநுமதி அளித்திருக்கின்றான். அப்படி யிருக்க, நாம் போகவேண்டாம் என்று சொல்லித் தடுப்பது எப்படி? நீயே யோஜித்துச் சொல்' என்று சொல்லி, 'போவோம், வா' என்று தன் புதல்வனையும் அழைத்துக்கொண்டு, அவ்விடம்விட்டகன்று, அழகிய தனது அந்தப்புர மாளிகையை யடைந்தாள். பின்னர்ச் சந்திராபீடன் சிறிது பொழுது அங்கே யிருந்து, தன் பிரயாணகாரியத்தைச் சிந்தித்து, அன்னையான விலாஸவதிக்கு அவ் விஷயத்தை விளம்பிச் சென்று, சோதிடர்களை வரவழைத்து, "என் இஷ்டத்திற்கிணங்க 'இன்றே நல்ல சுபமுகூர்த்தம்' என்று அஞ்சாதே சொல்லுங்கள். அவ்வாறு சொல்வதால் உங்களுக்கு யாதொரு தீங்கும் விளையாது" என்று சொல்ல,

'நியமித்ததற்கு எதிர்மாற்றமில்லை' என்று சொல்லி உடம்பட்டு அவர்களும் போய்விட்டார்கள். சந்திராபீடனும் அறுசுவையுண்டி நுகர்ந்து இனிதின் வீற்றிருந்தான்.

பின்னர், அக் கணிதநூல் வல்லவர்கள் சென்று, 'கட்டளைப்படியே சொல்லிவிட்டோம். முகூர்த்தமுஞ் சிலாக்கியமானதாக இருக்கிறதென்று உரைசெய்தார்கள். நாளை ஒருதினம் போக மறு நாள் உதயத்திற் கவலையொழிந்து களிப்புற்ற மனத்தோடு பிரயாணப்படுதல் உத்தமம்' என்று சொல்ல, சந்திராபீடன் அவர்களுக்கெல்லாந் தக்கவாறு சன்மானஞ் செய்து அவர்களை யனுப்பிவிட்டுத் தன்னுடனே வரவேண்டியவர்களெல்லாரும் வர அவர்களுடனே யிருந்து அற்றையிராப்போதையும் மறு நாட்பகற்போதையும் ஒருவாறு கழித்தான். பின், சந்தியாகாலஞ் சமீபித்ததும், சந்திராபீடன் அன்னையான விலாஸவதியை வணங்கி, அவளுக்குத்தன் பிரயாணத்தை அறிவிக்கச்சென்றான். செல்லலுந் தேவி மைந்தனெதிரே வந்து நின்று மனமுளைந்து பெருகவும் வருந்தி, 'குழந்தாய்! நான் என்னென்று சொல்லுவேன்! சிந்தை மருண்டது. கண்களும் மாலை மாலையாக நீரைச் சொரிகின்றன. இப்போது எனக்கு ஒன்றையும் வாய்திறந்து சொல்லத் தெரியவில்லை. உடம்பும் நடுங்குகின்றது. இப்படி இதற்குமுன் நான் ஒரு போதுங் கண்டதே யில்லை. இப்போது என் சரீரம் என்ன காரணத்தினாலோ இவ்வாறு ஆய்விட்டது. என் கண்ணே! இந்த ஸ்திதியில் நான் எப்படி உன்னைப் போகும்படி துணிந்து சொல்வேன்? அப்போது நீ போகுங்காலத்திலும் எனக்கு இப்படிப்பட்டவைகளொன்றுமேயில்லை. மிகவும் பயமாயிருக்கின்றது. வைசம்பாயனனுக்கு இத்தகைய தீமை விளைந்ததைக் கண்டிருந்தும் நான் உன்னைப் போகவேண்டாமென்று விலக்குவதற்கில்லை' என்று சொல்லிக் கொங்கையின் முத்தோடு கண்புனல் சிந்த மைந்தனை யிறுக அணைத்து அவனது முகத்தை நோக்கி, 'அப்பா! அன்னை யுரைப்ப தத்தனையும் உனக்கு உபதேசமென்று எண்ணிக்கொள்; இதைவிட் டகன்றபின் முன்போல நெடுநாள் நில்லாதே' எனச் சந்திராபீடன், 'அம்மா! விரைந்து போவதுதான் தாமதம். உடனே என் மித்திரத்னமான வைசம்பாயனன் என்னுடனே திரும்பிவிடுவான்' என்று சொல்லித்தேற்றி வணங்கி விடைபெற்றுக்கொண்டு அவ்விடம்விட்டகன்று மனோரமையின் மாளிகையின்கட் சென்று, 'தாயே! இதற்காக நீ சிறிதும் வருந்தாதே' என்று சமாதானத்தைச் செய்து அவளது பாதங்களைப்பணிந்து அவளது பூர்ண ஆசீர்வாதத்தையும்பெற்றுக்கொண்டு திரும்பித்தாதையின் திருக்கோயிலை யணுகி, அங்கே நின்றுகொண்டிருந்த வாயில் காப்பவர்க்குத் தனது வருகையை யறிவிக்குமாறு சொல்ல, அவர்களும் போய்த்தெரிவித்து மன்னவன் ஏவலின்படியே, 'உள்ளே வருக' என, உள்ளே பிரவேசித்துத் தந்தையைக்கண்டு தொழுது, அவ்வேந்தர் பிரானது உபயபாதபத்மங்களையுந் தனது திருமுடியின்மேற் சூட்டிக்கொள்ளப் பிதாவும் வாரியெடுத்து மார்புறத் தழுவிக்கொண்டு பற்பல வித ஹிதோபதேசங்களைச்

சொல்லச் சொல்ல, அவற்றை யெல்லாங் கிரகித்துக்கொண்டு, 'இப்போது நாம் நிச்சயித்த பிரயாண முகூர்த்தம் வந்து விட்டது' என்று சொல்லும் பொருட்டாக அப்போது அங்கே வந்த மதியிற் சிறந்த சுகநாதனையுந் தொழுது, அவ்விருவர்களுடைய அருளையும் பெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டு விடைகொண்டு திரும்பி, வீரத்தன்மை பொருந்திய சிறந்த வெம்பரி யாகிய தனது இந்திராயுதத்தின் மீது ஏறவந்தான். அப்போது அந்தத் துரகதமானது மேலே துள்ளி யெழுந்து எறிந்துபோய்த் தூர நின்றது. அவ்வாறு துன்னிமித்தமாகத் தன் குதிரை துள்ளி யெறிந்து தூரத்திலே போய் நிற்பதைக் கண்டும் சிறிதும் லக்ஷியஞ் செய்யாமல் தோழனொரு வன் நெடுந்தூரத்தே நின்று விட்டதைக் கருதியும், குளிர்ந்த பிறைமதி போன்ற நெற்றியையுடைய மடந்தையாகிய காதம்பரியை அடையவேண்டு மென்பதைக் கருதியும் ஒப்புயர் வற்ற சிறந்த போர்வீரனை அக் கொற்ற வேற் சந்திராபீடன் கிளர்ந்தெழுந்த அந்தப் புரவியின்மீது ஏறிக்கொண்டு அதி விரைவாகப் புறப்பட்டான். அப்போது, சிப்பிராநதிக் கரையிலே பற்பலவிதமான மங்கலராசிகளை யுடையதாய், மிக அழகாக அலங்கரிக் கப்பட்டிருந்த படங்குகளிலும் இராத்திரி தங்கவில்லை. அதிவேகமாகத் தனது குதிரையைச் செலுத்திக்கொண்டு சென்றான். அரசனான சந்திரா பீடன் அவ்வாறு மற்றொரு மார்க்கமாக ஏகிவிட்டானென்பதை யறிந்த அப்படங்கின் புறத்தே நின்ற ராஜகுமாரர்களனைவரும் மடைதிறந்த குளம் போல அதிவிரைவாகப் பின்னே பரவிச்சென்றார்கள். நெடுந்தூரஞ் சென்ற பின்னர் வழியி லோரிடத்திலே சந்திராபீடன் தன்னைப் பின்றொடர்ந்து வந்தவர்களான அம் மன்னர்குல மைந்தர்களோடும் பெரிய சேனையோடுந் தங்கியிருந்து, பொழுது புலர்வதற்குமுன் எழுந்திருந்து இந்திராயுதத் தின்மே லேறிக்கொண்டு அதிவிசையாக ஏகினான். சிரமம் என்பதைச் சிறிதுஞ் சிந்திக்கவில்லை. இரவு பகல் என்பதாக ஒன்றையும் அவன் அறிந்திலன். உணவில் விருப்ப மொழிந்தான். உறக்கமென்பதே கிடை யாது. இங்ஙனம் இன்றியமையாத ஊண் உறக்க முதலியவற்றையுந் துறந்து அதிவேகமாக எழுந்து செல்கின்ற அவனது கடுவிசையைக்கண்டு பயந்து விடிந்ததோ என்னும்படி கரிய கங்குற்போதும் விடிந்திட்டது. ஓர் இந்திர ஜாலமோ என்னும்படி பாரிடத்தில் அதிவிசையாகத் தாவி வருகின்ற அவ்விந்திராயுத மென்னும் பரிமாவினது துரிதகதியினாலே தான் சென்றானே யல்லது, சந்திராபீடன் தான் செல்லவேண்டிய மார்க்கத்தை யின்னதெனத் தானாக அறிந்து செல்லவில்லை. இடையிலே சிரமபரிகாரார்த் தமாகச் சிறிது தங்கவேண்டுமென அவன் நினைந்திலன். தன்னிடத்திலும் மற்றையோரிடத்திலும் உண்டாயிருக்கும் இளைப்பையும் இவ்வளவின தென அவன் தன் மனத்திற் சிறிதும் உணரவில்லை. "நான் விரைவாகச் சென்று அவனுக்கு எதிரிலே போய் நிற்பேன். என்னைக்கண்டதும் அவன் நாணமுற்று எனது கண்முன்னே நிற்கமாட்டாமல் அப்புறஞ் செல்வான். அங்ஙனம் லஜ்ஜையினால் விரைந்து செல்லும் அந்த என் நண்பனை நான்

பின்றொடர்ந்து பிடித்து, 'நீ யொரு பேதை; என்ன காரியஞ் செய்திட்டாய்?' என இடித்துக்கூறி முன்னின்று, 'நீ நெஞ்சமழிந்து வருந்தாதே. திடமாக இரு' என்பதாகச் சன்மார்க்கோபதேசங்களைச் செய்து, அவனையுங் கூட அழைத்துக்கொண்டு நாம் மகாசுவேதை யிருக்கும் ஆச்ரமாலயத்திற்கு மிகுந்த குதூகலத்தோடுஞ் செல்வோம். அன்றுகண்ட நம் குதிரையைக் கண்டதும் அவள் பெரிதும் மனமகிழ்ந்து நம்மை எதிர்கொள்வாள். நாம் நம்முடைய படைவகுப்பை அன்று அங்கேயே விட்டுவிட்டு, அம் மாதவ மடந்தையுடனே அப்போதே புறப்பட்டுக் காதம்பரியின் வாசஸ்தானமாகிய ஹேமகூட நகரத்திற்குச் சென்று, நமது வருகையைச் சொல்லிவிடுக்க, உடனே அங்கே வந்துபணிந்து முன்னே வழிகாட்டி நிற்பவனுடனே அவளுடைய அந்தப்புரத்துக்குச் செல்வோம். அப்போது எங்களுடைய வருகையைக்கண்டு மனமகிழ்ந்து, அக் கந்தர்வ ராஜபுத்திரியின்பால் ஓடிச்சென்ற சேடியர் சிலர் அவளை நோக்கி, 'வாழி; மங்கலம் மங்கலம்; இந்த வாழ்பதி வாழ்வு பெற்றது; மன்னன் எய்தினன்; இங்கு மன்னன் எய்தினன்' என்று சொல்லக், கர்ணாமிர்தமான அவ்வார்த்தையைக்கேட்டுச் சிந்தைமகிழ்ந்து, சரேலென எழுந்து எதிர் சென்று, அந்தச் சோபனசமாசாரத்தைச் சொல்லிக்கொண்டுவந்த அச் சேயிழை மாதர்களைத் தழுவியணைத்து அன்னோர்களுக்குப் பெருநிதி முகந்து கொடுத்து மற்றும் அவ்வாணுதலார்களை நோக்கி, 'நம் மன்னவர்கோமான் எங்கே? வந்ததாகச் சொன்னது யார்? எவ்வளவு தூரத்திலே வந்துகொண்டிருக்கிறார்?' என்று என் வருகையைப்பற்றி வினவியும், முன்னந் தான் அடைந்திருந்த அந்தக் கொடிய காம தாபமானது சிறிது உபசமனமான தன்மையினாலும், அதல்லாமல் அப்போதுண்டான பெரிய நாணத்தினாலும் மார்பின்மீது குளிர்ச்சியின் பொருட்டு அணைத்துவைத்திருந்த கமல பத்திரங்களோடு, அக் கமல வளையங்களையுந் தூர ஒதுக்கித் தள்ளிப் பூர்வந் தாப சமனார்த்தமாக அணிந்துள்ள முத்தார மொன்று மட்டுங் கிடந்து புரள, அதனாலே நிரம்பப் பேரழகை யெய்தியும், சிறப்புவாய்ந்த குளிர்ந்த பல்லவ சயனத்தின்மேலே மெத்தென்று மிகுதியாகப் பரப்பப்பட்ட கமலம் குமுதம் குவலயம் முதலிய நானாவித நாண் மலர்களின் றுதிர்ந்த நுண்ணிய மகரந்தப் பொடிகள் மெய்யெல்லாம் படிந்திருப்பனவற்றைப் புதிதாகப் புளகம் உண்டாவது கொண்டு போக்கியும், மாரவேள் மூட்டிய கொடிய வேதனைக் கனலிலே யிடப்பட்ட இந்தனமானது அவிந்தொழிய, அதன்மீது நீறெழுந்த தன்மைபோலக் காணப்படும் சீதளமான வெண்சந்தனப்பூச்சைக் கையினாலே தடவி யழித்து, அந்தச் சந்தனப்பூச்சிலே முன்னம் மறைந்து கிடந்த தனது திருமேனியின் சௌந்தர்யத்தைத் திருத்தமுறக் காண்பித்தும், மணங்கமழும் வனமுலைப் பொறையைச் சுமந்து வருந்துகின்ற கொடியிடை கொண்டு வருந்தி நடந்துவருகின்ற அக் காதம்பரிக்கு எதிரே சென்று, நாம் நமது கண்களுக்கு வாழ்வு கொடுப்போம். கண்பெற்றதனாலாகிய பூரண பலனையும் அடையப்பெறு

வோம். அப்போது, அம்பரத்தில் வாழும் அரம்பையைப் போன்ற பேர ழகுடையளான மதலேகை நம்மை அஞ்சலியோடு பிரணாமஞ் செய்வாள். நாம் அவளை ஆகமுறத் தழுவிக்கொள்வோம். உடனே பத்திரலேகையும் அங்கே வந்து நமது பாதத்திலே வீழ்ந்து பணிவாள். அவளைத் தூக்கி யெடுத்துப் பக்கத்திலே யிருத்தி அணைத்துக்கொள்வோம். அதன் பின்னர், உலகந் துதிக்கும் பெரிய மாதவத்தையுடையளான அம் மஹாசுவேதை மனமுவந்து உத்வாக மங்கல விஷயத்தில் மிகவும் உத்யுக்தையாயிருந்து எல்லாக்காரியங்களையுந் திருத்தமுறச் செய்வள். தோழியர்களும் விரைந்து விரைந்து, 'சொல்லவேண்டியது என்ன? செய்யவேண்டியது என்ன?' என்று ஒவ்வொன்றையும் விடாமல் விசாரித்துச் செய்து முடிப்பர்கள். போ, போ என்று சொல்லிக்கொண்டே போவாரோடு போவார் பலர். பேரிகை, முரசு, சங்கம் முதலிய வாத்தியங்கள் இடைவிடாமல் ஓசைப் பெருங்கடல்போல எப்போதும் முழங்கிக்கொண்டேயிருக்கும். அப்போது நாம் சிறந்த அத் திருவனையாளோடு ஏகாசனத்தில் வீற்றிருந்து நெடுநா ளாகவிரும்பியிருந்த விவாகமங்கலத்தைச் செய்துகொள்ளப் பெறுவோம். விவாகமானதும், அம் மாதரசி சிறந்த தன் இன்னுயிர்த் தோழியாகிய மதலேகையுடனே வந்து மணவறைக்குட் பிரவேசிப்பாள். பிரவேசித்த பின், கூடவந்த அம் மதலேகை சில இனிய வார்த்தைகளைச் சொல்லி விட்டுத் திரும்பிப் போய்விடுவள். போகவும், அக் காதம்பரி அங்ஙனே காத லோடு நாணமுற்றவளாய்த் தலைகுனிந்து நிற்பள். அது கண்டு நாம் தண்க ளித்து உளமகிழ்ந்து பூரிப்போம். பின்னர் அப் பூங்கொடியைப் பலாத்கார மாய்க் கையைப் பிடித்தழைத்து அருகிலிருத்தி அப்படி மடியில் வைத்துக் கொள்வோம். மார்பிலே சேர்த்து இறுகத் தழுவி யணைத்துக்கொள்வோம். அதுகண்டு இயற்கைப் பெருநாணினளாதலின், அவள் தனது நீவியை இர ண்டு கையினாலும் இறுகப்பிடித்துக்கொண்டு கண்களையும் மூடிக்கொள்வள். நாம் அக் கண்களிரண்டையும் மாறி மாறி முத்தமிட்டுக் களிப்போம். பின்னர், குழையளவோடிய அவளது காவி மலர்க் கண்களிரண்டும் இமைப் புற்று இரு கடையிலும் ஓடி ஓடித் திரும்பவும், எனது ஆவியைத் தரவல்ல அவளது அதரபானமானது அமிர்தபானம் போலத் தெவிட்டாது தித்தித் திருக்கவும், ஆனனத்தில் வெயர்வரும்பவும், அறிவழிந்து உரையாடவும், நானங் கமழுங் கரிய மென்குழல் அலைந்து சரியவும், அப்போது ஓர் புதிய இள நகை யரும்பவும், புளகம் பொருந்திய மென்முலை யிரண்டுந் தளர்ந்து வாடுஞ் சிற்றிடையைப் பெரிதும் வருத்தவும் நாம் அப் பைங்கிளி யோடு கொஞ்சி விளையாடிக் கூடிக் கலந்து மகரத்வஜனான மன்மதனது பெரிய மகோத்ஸவத்தைக் கொண்டாடிக் குதுகலித்து உள்ளங் குழைந்து உருகுவோம். சிறந்த இப்படிப்பட்ட மனோரதத்தினால் விளையும் இன்ப நுகர்ச்சியினாலே நமது ஆவி வேறு, துணைவியாவி வேறு என்ற வேற்றுமை யின்றி ஒரு நீரதாகக் கலந்து நல்ல நிலாமுற்றத்திலும் இளமரப் பூஞ்சோலை யிலும் ஏகாந்தமாகச் சென்று சென்று மனங்கலந்து கைகோத்து உலாவி

வரும்போது, நாம்நமது பிராணநாயகியை நோக்கி, 'நின் அந்தரங்க பணி விடைக்குரியளான தோழி மதலேகையை என் நண்பனுக்கு விவாகஞ் செய்விக்கவேண்டும்' என்று கூறுவோம்" என்று இவ்விவ் விஷயங்களையே நெஞ்சினில் நினைந்துகொண்டு இராப்பகல் இடைவிடாது சென்றுகொண் டேயிருக்க வழியும் பாதி தொலைந்தது.

அப்பால், தபிக்கின்ற கொடிய தழற்கிரணனை சூரியனுக்கு நிசியை யும், அமிர்த கிரணனை சந்திரனுக்குச் சீறி யெழுகின்ற கரிய இராகு வையும், அந் நெறியிலே செல்பவர்க்கு விலங்கையும் போன்ற தன்மையை யுடையனவாய், உலகெல்லாம் மங்கி யழியும்படி வில்லைக்குனித்து, மிருகங் களெல்லாம் அயர்வுற்று வருந்துமாறு கணைமாரி தொடுத்து, ஒன்றோடொ ன்று நெருங்கி மோதி, மின்னுடனே இடி நெருப்பையும் முகந்து சிந்திப் பெரிதாக முழங்கி, வெயில் நிலவு என்பதொன்றுமே தலைகாட்டாதபடி யகற்றியும், அந்தகாரத்தை அழைத்தும் புயல்களெல்லாம் பூதலத்திடையே போர்செய்யக் கருதிப் புறப்பட்டன. அதைக் கண்டு கிரீஷ்மருதுவானது இருந்த இடந் தெரியாமல் ஓடி யொளித்திட்டது. அவ் வருஷாகாலத் திலே மேகங்களெல்லாம் இடைவிடாமல் சள சள வென்று மழையைப் பெய்துகொண்டே யிருந்ததனால் விருக்ஷங்கள் பல வேர்பறிந்து கீழே வீழ்ந்தன. சில மலர்களை யுதிர்த்து நின்றன. பசிய மலர்த்தடங்களெல் லாம் உடைந்து சேத முற்றன. மயிலினங்களெல்லாஞ் சிறைவிரித்தா டிக் களித்தன. திசைகளெல்லாங் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போயின. அம் மாரிநீர்த் துளிகளை விழைவுடனருந்திச் சாதகபக்ஷிகளெல் லாம் விடாய் தணிந்து தளிர்த்தன. சக்கரவாக மிதுனங்கள் துணைகளை யிழந்து வாடியலைந்தன. களிறுகளுடன் மடப்பிடிகளெல்லாம் ஏதமுற்று நைந்தன. பன்றிகளெல்லாம் இன்பமுற்றனவாய்ச் செருக்கித் திரிந்தன.

சந்திராபீடன் இத்தகைய பயங்கரமான மாரிக்காலம் எதிர்ப்பட்ட தைக் கண்டு மயங்கி, இடையே தன் பிரயாணத்தை நிறுத்தாமல், அம் மழை நீர் வெள்ளத்தினாலே பெருக்கெடுத்துக் கரைபுரண் டோடும் பற்பல ஆறுகளிலே யிழிந்தும், அமிழ்ந்தியும், துறையறிய மாட்டாமல் திகைத்தும், இடி வீழ்ந்ததனாலே பட்டுப்போய் முரிந்துள்ள பெரிய மரங்கள் மார்க்கத் தின் மத்தியிலே கிடக்கக் கண்டு விலகி நடந்தும், சேற்றிலே வீழ்ந்து புரண்டு கன்னங்கரேலென மயிர் சிலிர்த் தெழுந்து வருகின்ற வனமகிஷங் கள் கூட்டங் கூட்டமாக வக்ரமான பார்வையுடனே வழியெதிரே செறு த்து நிற்க, அவற்றை அடித்து விலக்கியும், உருவம் வேறுபட்டு மிகப் பயங் கரமான தோற்றத்துடனே கொடுஞ்சினங்கொண்டு வருகின்ற வலிமிக்க சிங்கக்கூட்டங்களையெல்லாம் வதைத்துத் தள்ளியும், கமனத்திலேயே திருஷ்டியைச் செலுத்தி, மதுரமான குதலைச் சொற்களைப் பேசுகின்ற வளும் மடமயில் போன்ற சாயலை யுடையவளுமாகிய காதம்பரியையுந் தோழனை வைசம்பாயனனையுமே தன் சிந்தையிற்கொண்டு, பேரோசை யோடு வீழ்கின்ற மழைத் தாரைகளெல்லாம், அம் மழையினிடத்திலேயே

பணைத்தெழுகின்ற இடிநெருப்பைப்போல மேலுக்கு மேலாக முதிர்ந்து வளர்கின்ற இவனது காமக் கொடுங்கனலானது பின்னும் அதிதீவிரமாகப் பற்றியெரிவதற்காகச் சொரியப்படுகின்ற நெய்யைப்போலப் பரிணமிக்க, மேலே எதிர வருகின்ற இடையூறொன்றையும் எண்ணுதவனுய்ச் சலிப்பின்றி முன்னிலும் அதிவேகமாக ஏகினான். இங்ஙனம் இவன் அச்சோதப் பொய்கையைக் குறியாகக்கொண்டு, அவ்விடத்திலேயேவைத்த மனமுடையவனாக ஏறு செல்வதுபோலச் சென்று, சற்றேறக்குறைய முக்கால்வழித் தூரஞ் சென்றதும், அங்கே வழியெதிரே மேகநாதன் வந்து கண்டு வணங்கி நிற்பது கொண்டு மனந்தேறி, 'நண்பன் எப்படி யிருக்கின்றான்? உரைப்பாயாக' என்று வினவ, அம் மேகநாதன், 'நான் அவனைக் காணவில்லை' என்று சொல்லிப் பின்னரும் அத் தார்வேந்தனை நோக்கி, "தேவா! 'இப் பத்திரலேகையை முன்னம் இக் கேயூரகன் உன்னிடங் கொண்டு வந்து விட்ட இடம் வரையிலும் இவர்களைக் கொண்டுபோய் விட்டுவிட்டு, வைசம்பாயனனைக் கண்டு அவனிடத்திலேயே இரு. நானும் இதோ உனது பின்னே வருகின்றேன்' என்ற தங்கள் கட்டளையைப் பெற்றுக்கொண்டு பெயர்ந்த நான், இங்கே வந்ததும் வைசம்பாயனன் அச்சோத தீரத்தின் பக்கத்திலே யிருக்கின்றானென்று கேள்விப்பட்டு அங்கே செல்லவிரும்பிய போது, பத்திரலேகையுங் கேயூரகனும் என்னை நோக்கிப், 'போவதானல் நாலைந்து தினங்களுக்கு அதிகமாகவே செல்லும். அச்சோதவாவி சமீபத்தி லுள்ளதன்று. இங்கிருந்து நெடுந்தூரத்திலே இருக்கின்றது. நீ அங்கே போகவேண்டாம். மேலும் இப் பிரதேசத்தில் நீ தனியாக இருப்பதுங் கூடாது. மேகராசிகள் கடல் நீரை முகந்து வருஷிக்கும் கார்காலமுஞ் சமீபித்துவிட்டது. நேரே ஊருக்குச் செல்' என்று ஆதரத்தோடு பலாத்காரமாகவுஞ் சொல்லி என்னைத்திருப்பி அனுப்பிவிட்டார்கள்" என்று சொன்னான். அதுகேட்ட சந்திராபீடன் மறுபடியும் அம் மேகநாதனை நோக்கி, 'களங்கமற்ற மனமுடையளான நம் பத்திரலேகை இதற்குள்ளாக ஹேமகூடஞ் சென்றிருப்பாளோ?' என, 'ஸ்வாமி! வேறே இடையூறொன்றும் இல்லையானால் இத்தனைக்குள் போய்ச் சேர்ந்திருக்கக்கூடும்' என்று சொல்ல, அவ் வார்த்தையைக் கேட்டு, 'நல்லது, போவோம் வா' என்று சொல்லி, அம் மேகநாதனும் பின்னேவர, அவனுடனே நிலைகலங்கிய தன் மனத்துயரத்தை யெல்லாம் சொல்லிக்கொண்டே சென்றான்.

சென்று, நானாவிதமலர்களைப் பொருந்தி அழகுற்றுத் திகழ்கின்றதும், பெரிதாய் அலை மோதிக்கொண்டிருக்கின்றதுமான அச்சோதப் பொய்கையைக் கிட்டித் தனது பெரிய படைத்திரளைநோக்கி, 'இனிநீங்களெல்லாரும் இம் மலர் வாவியைச் சூழ ஓடி வளையுங்கள்' என்று சஞ்சலமுற்ற மனமுடையவனாய் நின்று நியமித்துத், தானும் வந்த சிரமத்தைப்பாராட்டாமல் தனியே யெங்கணுஞ் சென்று தேடிப்பார்க்கக் காதல் நண்பனான வைசம்பாயனன் நின்றதைக் காணுதவனாய், அதனாற் பெரியதோர் துயரத்தை யெய்தி, 'எனது வருகையை யெதிர்பார்த்து ஒருவேளை இங்கே வந்திருக்கக்

கூடிய அன்பிற் சிறந்த நமது பத்திரலேகையானவள் நான் இங்கு வருவேனென்பதைச் சொல்லக்கேட்டு, அதனால் என் கண்ணெதிர்ப்பட நிற்க நாணி எங்கேனும் மறைந்திருக்கின்றனளோ' என்று யோஜித்து, நடுக்கமுற்றுத் தைரியமிழந்து, அதிகமாக மனக்கலக்கத்தை யெய்தி, 'எப்படியிருப்பினும் மிகுந்த நற்குண நற்செய்கைகளையுடையளான மஹாசுவேதைக்கு இவ்விஷயந் தெரியாமலிராது; ஆகையால், நற்றவச்சிரேட்டையான அவளிடஞ் சென்று எல்லாவற்றையும் வினவியறிவோம்' என்று தீர்மானித்து, மாசில்லாமணியான அச் சுவேதையிருக்குமிடஞ் செல்லக்கருதி, அருகே தனது விறல்மிக்க சேனைகளை யெல்லாம் நிறுத்திவிட்டு, ஒளிவிளங்குஞ் சிறந்த இரண்டு வெண்பட்டாடைகளை அந்தரீயமும் உத்தரீயமுமாகத் தரித்து, உத்தமமான தனது பரியின்மேலேறிக்கொண்டு சென்று அத்தவ மங்கையினது ஆச்ரமாலயத்தின் வாயிலை நணுகி இவுளியைவிட்டுக் கீழே யிறங்கி, காலாலே நடந்து சென்று அப் புண்ணியமிக்க ஆலயத்தினுள்ளே பிரவேசித்தான். அப்போது அங்கே அம் மகாசுவேதை புனிதமாகிய ஒரு பாறையிலே கண்ணீர் வார மிகுந்த ஆகுலத்தோடு, அளவிடற்கரியதோர் துயர்க்கடலிலே மூழ்கினவளாய் நடுநடுங்கித் தத்தளித்துக்கொண்டிருக்கிற தனது தோழியாகிய தரளிகையுடனே உட்கார்ந்திருந்தாள். இவ்விதம் ஆகுலமுற்று வாடாநின்ற அழகிய அம் மகாசுவேதையினது இயல்பை யெல்லாம் முடிவுறநோக்கி, 'எதனால் இவள் இங்ஙனந் துயருற்று நைகின்றனளோ?' என்று சிந்தித்து மனம் நொந்து அலக்கணுற்றவனாய்ச் சிறிது நேரம் வரையில் அப்படியே திகைத்து நின்று செயலற்றுத் தரளிகையை நோக்கி, 'இது யாரால் உண்டாகிய ஆகுலம்?' என்று வினவினான். வினவவே அத் தரளிகையும் மிகுந்த சோகத்தோடு தன் யஜமானியாகிய மகாசுவேதையினது முகத்தை நோக்க, அக் குறிப்பையுணர்ந்தவளான மகாசுவேதை, 'அம்மா, தரளிகாய்! நீ ஏன் இதற்காக வருந்துகின்றாய்? நானே விடையளிக்கின்றேன். நீ யொன்றையுஞ் சொல்லவேண்டாம்' என்று சொல்லிச் சந்திராபீடனை நோக்கி, 'வேந்தே! மகாபாவியான யான் பூர்வம் நீ இங்கே வந்திருந்தகாலத்தில் கேட்டற்கரிய எனது பெரிய துக்கவிருத்தாந்தங்களை யெல்லாம் உன்னிடத்தே சொல்லி இன்று வரையினும் உன்னையே பேணியிருந்தேன். இப்போது நீ இங்கே வரவும் நான் உன்னுடைய வருகையை மகிழ்ச்சியோடும் ஏற்று மனங்களித்து வாழப்பெறாமல், அந்தோ! முன்னையினும் பன்மடங்கு அதிகமான துக்கசமாசாரத்தை இன்னமும் உனக்குச் சொல்லத்தகுமோ? பாவியான யான் இவ்வாறு சொல்லிச் சொல்லிப் பெரிய மனவலியைப் படைத்துள்ளேனாதலால் சொல்லுகிறேன்; மன்னவா! நீயுங் கேட்டுக்கொண்டுவா' என்று சொல்லத் தொடங்கினாள்:—

"கொற்றவா! நீ மொழிந்த பிரகாரங்களையும், தந்தையார் அனுப்பியருளிய தூதருடனே நீ உஜ்ஜயினிமா நகர்க்குத் திரும்பிச் சென்றதையும், நினது துணிவையும், மற்றும் அங்கேயுள்ள எல்லாவிஷயங்களையும்

கேயூரகன் அங்கு வந்து சொல்லக் கேட்டேன்; மிகவும் மனந்தளர்ந்தேன். அவ் வார்த்தையைக் கேட்டதும் காதம்பரி அவசமாய் மெலிவுற்று வருந்துவதுகண்டு நொந்தேன்; புத்திரியினது சோகத்தைக் கண்ட கந்தர்வராஜசேகரனை சித்திராதன் தேவியான மதிரையுடன் வருத்தமுற்றான்; மதலேகையும் மற்றுள்ள பாங்கிமார்களும் இன்னலுற்றார்கள். இவ்வாறு அனைவரும் துயருற்று வருந்துதல் கண்டு நான் மனம்நொந்து அங்கிருக்க விருப்பமில்லாமல், இருந்தவத்தில் முயல்வோம் என்று புறப்பட்டு இங்கே வந்து முன்புபோலத் தவம்புரிந்துகொண்டிருந்தேன். அப்போது, ஒரு அந்தண குமாரன் நான் இவ்வாறு தவமுயன்றிருப்பதைக் கண்ணாரக் கண்டிருந்தும், லேசமும் அறிவில்லாமல் என் சமீபத்தில் வந்து என்னை நோக்கி, 'மேகம்போன்ற கரிய நறுங்குழலீர்!' என்று விளித்து, 'ஐயோ! துய்ய இச் செவ்வி வனப்பெல்லாம் வீணே அழிந்தொழியுமாறு கொடிய தவத்தினாலே மலர்போன்ற அதிஸுகுமாரமான இச் சரீரத்தை யுலர்த்தி மனம் புண்ணாக வருந்துகின்றது எதற்காக? அம்ம! பாதகம், பாதகம்!!' என்றும், 'அச்சோ! இனிமேல் அக் காமன்தான் என் செய்வான்?' என்றும் இவ்வாறு இரங்கிக் கூறிப், பின்னரும் அப் பூசாகுலத்தோன்றலானோன்

'தேராய பரிமளப்பூந் தென்றலாலும்,
செழுங்கவிகை யாகிவருந் திங்களாலும்,
ஆராம மலராய கணைகளாலும்,
அனங்கவே ளுக்கரசு நிலையுண் டாமோ?
காராரும் குழலாலும், கண்களாலும்,
கருப்பெழுதுந் தோளாலும், கனிவா யாலும்,
வாராரும் முலையாலும் அன்றி, என்றும்
மாதவத்தா லுண்டாமோ? மயிலே சொல்வாய்.'

என்றும், மற்றும் இப்படியே பற்பல விதமான வார்த்தைகளையே சொன்னான். பின்னர், முன்னம் வந்தறிந்து கண்டு பழகினவரைப்போல என் அருகே வந்து என்னைக் கண்டு, உற்றதுணை:தகலாமல் எதிரே நின்றும், உள்ளமறிந்தவரைப்போல மனமகிழ்ச்சிபெற்றும், 'உலகத்தவர்தம் இன்னுயிரை வாங்குதற்காகவோ நற்றவம் முயல்வது? இது மிகவும் நன்றாயிருக்கின்றது!' என்றும், 'நினது கண்களிரண்டும் கொடிய கொலைத்தொழில் ஒன்றைத்தான் கற்றனவோ?' என்றும் வெளிப்படையாகக் கலவிநயப்பு உரைத்ததற்பின், நான் அவனைச் சுளிந்துநோக்கி, 'தகாத வார்த்தைகளைச் சொல்லி வீணே கெட்டுப்போகாதே. ஐம்பெரும் பூதங்களில் ஒவ்வொன்றுந் தனித்தனி நின்னை யழித்துவிடக்கூடிய ஆற்றலுடையது. அக்னிபகவான் நினது தீய சிந்தையை யறிந்தால் உடனே உன்னைத் தகித்துச் சாம்பராக்கிவிடுவான். பூமி உன்னைப் பாதாளத்தில் கொண்டுபோய்ப் புதைத்துவிடும்; வாயு நின் பிராணனை யபகரித்துக்கொண்டுபோகும்; ஸமுத்திரம் நின்னைப் பெரிய தன் சுழியிலே யமுக்கி யழித்துவிடும்; ஆகாசம் நின்னை யந்தரத்திற் கொண்டுபோய் விட்டுவிடும்; சந்திரசூரியர்களாகிய இருசுடரும் க்ஷணமும்

இந்தத் தீச்செய்கையைக் கண்டு சகிக்கமாட்டா' என்றேன். அப்படியும் அவன் கேளாமல் அறிவில்லாப் பைங்கிளிபோல உரைத்ததையே மீண்டும் மீண்டும் உரைசெய்தான். நான் அவ் வார்த்தையைச் செவிசுடக்கேட்டு எரியெழ உயிர்த்து, அருகினின்ற தரளிகையை விளித்து, 'அம்மா, தரளிகாய்! இங்கே வருக. என்னசொல்லிவிலக்கியும் அப்பாற்போகாமல் பலாத்காரமாகத் திரும்பவும் திரும்பவும் இங்கே வந்து உலாவிக்கொண்டிருக்கின்ற இம்மறையோன் இனி இங்கே என் அருகில் வரத்தக்கவனல்லன். அவனது.மனக்கருத்தும் நேரானதாகவில்லாமல் வித்யாசமானதாக இருக்கிறது. ஆகையால் உள்ளேவிடாமற் பார்த்துக்கொள்' என்றேன். அதையும் அவன் கேளாமல், நெகிழ்ந்து உருகும் மனத்தை யுடையவனாகி மீளவும் இங்கே வந்து, மெல்ல உள்ளே புகுந்து, நான் இப் பாறையின்மீது தனியே உட்கார்ந்து சுரிகுழலாளான என் தோழி தரளிகையுந் தூங்கிவிட்டபிறகு சிறிதுந் தூக்கம்வாராமல், சந்திரனோடு என் குறைகளையெல்லாஞ் சொல்லிக் கொண்டு, புண்டரீகமுனிவனை நினைந்து, 'அன்று அம்முனிவர்கோமானைத் தூக்கிக்கொண்டுபோன மகாபுருடன், 'இச் சரீரம் அழிந்துவிடாது. இம் முனிவனோடு உனக்குப் பின்னும் ஸமாகமம் உண்டாகும்' என்று சொல்ல, அவ் வார்த்தையை யுறுதியாகக்கொண்டு நான் எனது பிராணனை விடாமல் தரித்துக்கொண்டிருந்தேன். இன்னும் வந்துசேர்ந்த பாடில்லை. அதுவும் என்றன் தவக்குறைவுதான்' என்றும், 'முனிவனை யெடுத்துப்போகக்கண்டு, 'என் துணைவனை எடுத்துக்கொண்டுபோகிறகொடியோன் யாரடா, யாரடா?' என்று சொல்லிக்கொண்டே பின்றொடர்ந்து சென்ற தோழனான கபிஞ்சல முனிவனிடத்தில் சிறிதேனும் அன்பிருப்பதாக நாம் காணவில்லை' என்றும் இவ்விதமாக இவைபோன்றவைகளையே எண்ணமிட்டுக் கொண்டிருக்குங் காலத்தில், தன் துடைகளிரண்டும் நடுங்கப் பாவியாகிய என்னைத் தழுவ நினைந்தான். அங்ஙனம் அவன் என் மெய்யைத் தீண்டுவானாயின் கற்புக்குப் பங்கம் நேரிடுமே யென்று பயந்து, நான் அப்போது பிரகாசித்துக்கொண்டிருந்த அச் சந்திரனை யஞ்சலித்து வணங்கி, 'அரனார் சென்னிக்கு அணிமணியே! எல்லாவற்றையும்நீயே சாக்ஷியாக இருந்து அறிகின்றாய். எல்லாருடைய நினைவும் உனக்கு நன்றாகத் தெரியும்' என்று சொல்லி, முன்னம் இங்கே வந்தருளிய அப் புண்டரீகன் காரணமாகச் செய்த மாதவத்தின் பெருவலியினாலே, வரவர அதிகமாக மிதமிஞ்சி மொழிகின்ற முகராகத்தை யுடையவனா யிருத்தலினால் அவனை முகராகத்தையுடைய ஒரு ஜீவனாகப் பிறக்கும்படி சபித்திட்டேனாக, என்னுடைய தவ மகிமையினாலும் பூர்வ ஜன்மத்திற் செய்த என் கொடிய தீவினையினாலும் உடனே அவ் வேதியன் வேர்பறிந்த மரம்போலக்கீழே விழுந்துவிட்டான். விழுந்ததும் அவனுக்குப் பிராணனும் போய்விட்டது. அப்போது, விசுவாசத்துடன் பக்கத்திலே நின்ற மெய்காப்பாளரான பரிஜனங்களெல்லாரும் வாய்விட்டழுது முறையிட்டதைக்கொண்டு, இறந்த அவன் நினக்குப் பிராணபதமான நண்பன் என்பதை நான் அறிந்தேன்'' என்றாள்.

கொற்றக் குடையோனாகிய சந்திராபீடன் கேட்கத் தகாத அந்த வின்னாத வார்த்தையையெல்லாங்கேட்டு, இவ்விபத்துக்களெல்லாம் வைசம்பாயனன் செய்த தீச்செயலினாலேயே விளைந்தன என்று எண்ணி, அவன் விஷயமான வார்த்தை யொன்றையுஞ் சொல்லாமல், 'புண்ணிய மென்பதனைப் புரிந்தறியாத தீவினையேனாகிய நான் இப் பிறப்பிற் காதம்பரியினுடைய சரணபரிசர்யம்செய்வதனாலாய அந்தஸுகத்தை அனுபவிப்பதற்குப் பிராப்தமில்லாதவனாய்விட்டேன். ஆயினும், முத்துக்களை நிகர்த்த அழகான வெள்ளிய தந்தபந்திகளையுடைய அம் மங்கைக் கரசியை மறுபிறப்பிலாவது நான் சேரும்படி, பகவதீ! நீருங் கூடவே யிருந்து உதவிபுரிய வேண்டும்' என்று அம் மஹாசுவேதையினிடத்தில் தன் குறையைச் சொல்லிக்கொண்டே அறிவு குன்றி யாவிதளர்ந்து கீழே சாய்ந்துவீழ்ந்தான். அதுகண்டு தரளிகை திடுக்கிட்டோடிவந்து அம் மன்னனைத் தன் மடியின் மீதுவைத்துத் தாங்கிக்கொண்டு, 'அம்மா! மரணாபாயம் வந்துவிட்டது போலிருக்கிறது, வந்து பார்' என்று சொல்லச், சுவேதையும் அவனுடைய அவஸ்தைகளையெல்லாம் வந்து பார்த்துப் பின்னர் அவன் மோகித்துத் துஞ்சிவீழ்ந்தான் என்பதை யறிந்து, 'சென்ற பெரும்படையும் மன்னவரும் பிதாவான தாராபீடனும் விலாஸவதி முதலான தாய்மார்களும் இனி என்ன செய்வார்கள்? கதறிக்கொண்டு வரும் அவர்களுக்கு, ஐயோ! பாவி நான் என்ன ஆறுதலைச் சொல்வேன்? அனைவரும் உன் அடியைப் பின்றொடர்ந்து வருவதைத்தவிர வேறு மார்க்கமொன்றுமில்லை' என்று சொல்லி அலறிக்கொண்டு கீழே வீழ்ந்து பெரிதாக ஓலமிட்டு, 'வேந்தர் பிரானே! விண்ணுலகை யாள்வதற்காக எம்மைத் துறந்து நீ சென்றுவிட்டனையே. இனி இம் மண்ணுலகைக் காப்பார்யார்? எல்லாப் பெருமையும் நின்னோடே போய்விட்டதே! ஆ, என் செய்வேன்? இனி இங்கு அறமென்பதுண்டோ? செங்கோலுண்டோ? திருந்திய பேரருள் உண்டோ? சீர்தான் உண்டோ? நன்றியறிவாருண்டோ? நன்றியுண்டோ? நடுவுநிலைமையுண்டோ? பொறையுண்டோ? நல்லோருண்டோ? திறலுண்டோ? உலகமுண்டோ? மன்னனே! உன்னையொழிந்து எதுதான் இனிச் சோபிக்கப் போகின்றது?, என்று அழுது வாடினாள். அப்போது, மன்னனாகிய அச் சந்திராபீடனுடைய முகாரவிந்தத்தை யுற்றுநோக்கிச் சிந்தை மறுகி வாடித் தளர்ந்து, ஒருவிதமாகக் கனைத்து, வலிபொருந்திய தனது முன்னங்கால்களினாலே பூமியை வெட்டி, விண்மீது தாவி, பெரியதோர் பரிதாபத்தை யெய்தி, பதறிச் சப்தித்துக்கொண்டு, பின்னங்கால்களிலே பிணித்திருந்த அழகு பொருந்திய பொற்சங்கிலியை அறுத்துதறித் தானும் தன் யஜமானனைத் தொடர்ந்து கூடவே செல்லத்துணிந்ததுபோல அவ் விந்திராயுதமென்னும் சிறந்த வயப்புரவியும் தன் நிலைகலங்கித் தத்தளித்துக்கொண்டிருந்தது.

இங்கே இப்படி யிருக்க, முன்பு கேயூரகனோடு ஹேமகூடஞ் சென்ற அன்ன நடையாளான பத்ரலேகை சந்திராபீடன் பின்னே வருகின்றான் என்ற நற்செய்தியை முன்னதாகச் சென்று அறிவிக்க, அவ்வார்த்தையைக்

கேட்டு உள் அடங்காத மனமகிழ்ச்சி கூர்ந்த ஆரணங்கனையாளாகிய அக் காதம்பரி தனது அன்னையான மதிரைக்கும் ஐயனான அருள்மிக்க சித்ரரதனுக்கும் மற்றுள்ளவர்களுக்கும், 'நான் பெரிய அருந்தவம் புரியும் என் தோழியாகிய மஹாசுவேதை யிருக்குமிடஞ் சென்று அவளோடு சிலகாலம் அளவளாவியிருந்து, அங்கேயுள்ள லோகநாதனான சிவபெருமானுடைய அழகிய திருக்கோயிலையும் வலஞ்செய்து வணங்கி அருள் பெற்றுக்கொண்டு வருகின்றேன்' என, அவர்களும், 'போய்வாருங்கள்' என்று அனுப்ப, அவர்களது அனுமதியைப் பெற்றுக்கொண்டு, மின்னிவரும் முகிலோசையைக் கேட்டதும் மகிழ்வெய்தும் மயில்போல அச் சொல்லைக் கேட்டு மகிழ்வெய்தி, விரைவாக அவ்விடம்விட்டுப் போந்து, மணங்கமழும் மலர்மாலையைக் குழலுக்கணிந்து, பரிமளமிக்க குங்குமத்தை மெல்லிய முலைத்தடங்களிலே கொட்டித்திமிர்ந்து, சுடர்வீசும் ரத்னாபரணங்களைப் பூண்டு, பட்டுடுத்து, உத்தரீயமொன்றை மேலே போட்டு, மற்றும் மங்கலகரமான அலங்காரங்களையுஞ் செய்துகொண்டு பத்ரலேகை பாங்குடனே கைகொடுக்க, கேயூரகன் வழிகாட்டிக்கொண்டு சிறப்புடனே முன்னே செல்ல, அடி பெயர்க்குந்தோறும் அழகிய மணிமேகலையும் நூபுரமும் கலீர் கலீர் என்று கலந்து சப்திக்க, மனத்திற்கினிய தன் இன்னுயிர்த் தோழியாகிய மதலேகையுடன் வருபவள் வழி நெடுக அம் மதலேகையுடனே, 'மதலேகாய்! பத்திரலேகை தினம்பிரதி சொல்லிக்கொண்டேதான் இருக்கிறாள். அவள் அன்ன சொன்னபோதிலும் நான் மாத்திரம் ஏகாந்தமான நிஷ்டுர ஹிருதயத்தை யுடையவனும், இரக்கமற்ற மனத்தைப் பெற்றிருப்பவனுமான அம் மன்னன் என் இடர்நீங்க இங்கே வருவான் என்பதைச் சிறிதும் நம்புகின்றேயில்லை. முன்னம் நான் ஹிமகிருகத்திலே மன்மதபாணங்களினால் அவஸ்தைப்படுங்காலத்தில் எனது மெய்ப்பாட்டைக் கண்ணாரக் கண்டும் காணாதவன்போலும், கண்டு எனக்கு ஹிதத்தைத் தேடுபவன் போலவும் அவன் என்னை நோக்கிச் சொன்ன வக்ரமான பல வார்த்தைகள் உனக்கு ஞாபகம் இல்லையா, என்ன? அந்த ஸமயத்தில் மந்தஹாஸத்தோடு பார்த்துக் கொண்டிருந்த நீதானே அவனுக்கு ஸந்தேகத்துக்கு இடமில்லாதபடி தக்கவாறு விடையளித்தாய். அதுவும் மறந்துவிட்டதோ? ஆகையால், அவ் வேந்தன் என்னுடைய இப்படிப்பட்ட காமாவஸ்தைகளை மரணாவஸானத்திலுங்கூட அறியமாட்டான். தவிரவும், அச் சந்திராபீடன் 'நம் விஷயமாகவல்லவா இவள் இவ்வாறு அவஸ்தைப்படுகிறாள்' என்று சிறிதேனும் மனத்தில் எண்ணியிருப்பானாயின் அவன் அப்போது அவ்வாறு திரும்பிப்போயிருக்க மாட்டானன்றோ? ஒருஸமயம் அப்படிப்பட்ட எண்ணத்தைக்கொண்டே இப்போது வந்திருந்தாலும் அவனோடு ஏதாவது இரண்டொன்று பேசவேண்டுவதையுங்கூட, அம்மா! நீதான் பேசவேண்டும்; திரும்பவும் நான் அம் மஹானைப் பார்த்தாலும் நானாக ஒன்றையும் பேசமாட்டேன்; நிந்திக்கவுமாட்டேன்; சரணங்களில் வீழ்ந்து பணிந்து அவன் என்னை விநயத்தோடு பிரார்த்தித்தாலும் நான் அவனைக் கிரகிக்கவு மாட்

டேன்; என்பொருட்டாப் பிரியஸகி! நீயும் சிரமமெடுத்துக் கொள்ளவேண்டாம்' என்று இவ்விதம் பேசிக்கொண்டே, அதனால் நடையிலுண்டாகிய கேதங்களை யறியாதவளாய்ச் சந்திராபீடனை யெப்போது காண்போம் என்ற பெரிய ஆவலோடு அவ்விடம் வந்து சேர்ந்தாள்.

அப்போது அங்கே ஒரு பெரிய அழுகைக்குரல் உண்டாகக் கேட்டு, 'இது எம் மன்னவர் கோமானாகிய சந்திராபீடனது மரணத்தைக் குறித்து முறையிடுவதோர் முழக்கமாகத்தான் இருக்கவேண்டும்' என்று கருதித் தாங்கமுடியாத பெரிய வருத்தத்தோடும் ஓடிவந்து பார்க்கையில், அவ்விடத்தே கடல்போல்விரிந்த படைவெள்ளமும் உடன்வந்தவர்களான காவலர்களும் ஒரு புறத்தே கதறிக்கொண்டு நிற்க, மற்றொரு புறத்திலே தரளிகையும் அன்பின் மிக்க மஹாசுவேதையும் மனம் இருபிளவாகப் பிளந்து புண்ணாகத் தங்கள் விழிகளிலிருந்து இடையறாது பெருகிஓடிவருகின்ற அருவிப் புனலிலே மூழ்கினவர்களாய்ச் செய்வ தறியாமற் சித்திரம்போல அசையாமற் றிகைத்துநிற்க, இவர்களின் மத்தியிலே வண்டோசை யில்லாத மலர்ச் சோலைபோலவும், மதியுதய மில்லாத வானம்போலவும், குளிர்ச்சிதரும் முத்துக்களில்லாத ஆரம் போலவும்; தாமரைப்போதில்லாத தடாகம்போலவும் பொலிவிழந்து கண்ணுறக்கங் கொள்பவனைப்போல உயிர்போய் வீழ்ந்துகிடக்கின்ற சந்திராபீடனைக் கண்டாள். கண்டதும் அக் காதம்பரி, 'ஐயோ! இது என்ன அநியாயமோ? என்ன கைதவமோ? தெரியவில்லையே' என்று அலறிக்கொண்டு கருத்தழிந்தவளாய் மூர்ச்சித்து வீழக் கண்டதும் மதலேகை ஓடிச்சென்று அவளது ஆகத்தைத் தாங்கினாள். பத்ரலேகையுங் காதம்பரியைக் கைவிட்டு மனங்கரைந்து உருகியுருகி யாவியழிந்தாள். நெடுநேரஞ் சென்றபின்பு காதம்பரி கனவுகண்டுணர்ந்தவர்போலச் சிறிது கண்விழித்து, மிகுந்த வாட்டத்தை யடைந்து, கழற்கால் வீரனை அச் சந்திராபீடனுடைய பரிபூர்ணமான அழகைப் பருகுவதுபோலப் பார்த்து, அவனது முகத்தின்மேல் தனது விழியைச் சேர்த்துத் துடிக்கின்ற பல்லவம்போன்ற இதழும், சிறிது கருகித் தோன்றுஞ் சிவந்த முகமுமுடையளாய் வேரறுப்புண்ட பூங்கொடிபோலத் துவண்டு, ஸ்திரீகளின் ஸ்வபாவத்திற்குச் சேராத ஒரு துணிவை யுட்கொண்டு சலியாத கண்களுடன் சித்திரம்போல அசைவற்று நிற்க, பாங்கியான மதலேகை அவளது உள்ளக்கிடை இன்னதென்பதைத் தெரிந்துகொண்டு அவளது காலில் வீழ்ந்து, 'பைந்தொடீ! இப் பெரிய மனத்துயரமெல்லாம் வாய்விட்டழுதால்தானே தீரும்' என்று சொல்ல, அவளை நோக்கி, 'அம்மா! உன்னுடைய கருத்தை நான் அறிந்துகொண்டேன். அடி! அது நாம் செய்யத்தக்க காரியமா?' என்று நகைத்து, 'சந்திராபீடன் புரிந்திட்ட இக் காரியத்தைக் கண்ணாரக் கண்டும் என் உயிரானது வெளிப்பட்டுப் போகாமல் இன்னமும் என் சரீரத்திலேயே புகுந்துகொண்டிருக்கின்றது. கஷ்டம்! கஷ்டம்! இப்போதே மஹா பாவியான இவளைப் புகையோடு மூண்டெரியும் அக்கினி குண்டத்திலே யிடுவேன். இம் மன்னனை யில்லாமல் இனி என்ன அன்னை! என்ன

பிதா! ஒருவரையும் நான் வேண்டேன்' என்று சொல்லிப்பின்னரும் அம் மதலேகையை நோக்கி, 'அடி, மதலேகாய்! இம்மகானுபாவனே பொன்னுலகம் போய்விட்டான். இனி க்ஷணமும் நான் இங்கே தனியாக இருப்பது தகுதியன்று அவனுடைய சரணாரவிந்தங்களை ஸ்மரித்துக்கொண்டே நானும் அப்பொன்னுலகம் போய்ச்சேர்வேன். இம்மங்கலத்துக்கு ஒருநாளும் ஹானியில்லை. அப்படியிருக்க, பேதாய்! இதற்காக வருந்துவாருமுண்டோ? இதுநிற்க. நான் மிக்க பிரீதியோடு வளர்த்திட்ட தேமாங்கன்றுக்கு அம்மா, மதலேகாய்! நீ அங்குள்ள மாதவிச் சிறுகொடியை விவாகஞ் செய்துகொடு. குழந்தையைப்போல நான் அன்பாக வளர்த்த அச் சிறிய மான்குட்டியைத் தபோவனத்திலே கொண்டுபோய் விட்டுவிடு. தலைமாட்டிலே தொங்கவிட்டிருந்த காமதேவபடத்தைக்கூசாமற் கிழித்தெறிந்துவிடு. பரிஹாஸன் என்னுங் கிளியையும் காளிந்தி என்னும் அழகிய அந்தப் பூவையையும் பின்னரும் நீ கூட்டிலடைத்து வையாதே; போனதுங் கூட்டைத்திறந்து அவற்றை வெளியே விட்டுவிடு. நமது கிரீடாபர்வதத்தைத் தபோதனர்களான சிறந்த முனிவர்களுக்கே உரிமையாகக் கொடு. அங்குள்ள நமது நிதிச்சாலையைத் திறந்து மலைபோற் குவிந்து கிடக்கும் எல்லாத் திரவியங்களையும் பிராமணர்களுக்குப் பேரன்போடு முகந்து முகந்து வழங்கு. நீயும் வேண்டியதை யெடுத்துக்கொள். நந்தவனத்திலுள்ள நறுமலர்களையெல்லாம் தேவார்ச்சனைக்கே வினியோகஞ்செய். அம்மா! இன்னும் ஒன்று சொல்லக்கேள். என்னைப் பிரிந்து எனது மாதாபிதாக்கள் ஆற்றியிருக்கமாட்டார்கள். நீ அவர்களைச் சமாதானப்படுத்தி என்னுடைய ஸ்தானத்தில் நீயே அவர்களுக்கு அரிய புத்திரியாயிருந்து அவர்களை மகிழ்வுறச் செய். இவ்வளவு உபகாரமும் எனக்கு நீ கிருபையோடு செய்யவேண்டும்' என்று சொல்ல, அவற்றைக் கேட்ட மதலேகை பின்னும் பற்பலவிதமான தேறுதல் வார்த்தைகளை மொழிந்தாள். காதம்பரி அவைகளையெல்லாஞ் செவிகொடுத்துக் கேட்டும் அம் மதலேகையுடன் முகங்கொடுத்துப் பேசாமல், மஹாசுவேதையின் பக்கத்திற் சென்று அவளை யீருடலும் ஒருடலாம்படி யிறுகத் தழுவிக்கொண்டு சிறிதும் மனக்கலக்கமின்றி, 'வாராய், மகாசுவேதாய்! நீ செய்யும் இத் தவங்களெல்லாம் அவமாகப் போகமாட்டா. நீ எண்ணியுள்ள எல்லாக் காரியங்களும் நிச்சயமாய் உன்னுடைய இப் பெரிய தபோமகிமையினாலே எண்ணியபடியே வந்து கைகூடுமென்பதிற் றடையில்லை. ஆகையால், நீ இங்கே தனியேயிருந்து மெய்வருந்தத் தவம் புரிவதைக்கண்டு யாரும் நகைக்கமாட்டார்கள். உனக்கு இதனால் ஒரு விதமான தாழ்வுமில்லை' என்று தெளிவாகக் கூறிப் பின்னரும், 'அம்மா, மகாசுவேதாய்! எனக்கு இம்மையில் உன்னைப்போலச் சிறந்த உயிர்த்தோழியர் வேறு எவருமே யில்லை. ஸதா உன்னையே நினைத்துக் கொண்டிருக்கின்ற எனக்கு நீயே இனி யென்றென்றைக்கும் உற்ற உயிர்த்தோழியாக இருக்குமாறு பிரார்த்திக்கின்றேன். நீ வேறொன்றையுஞ் சொல்ல வேண்டாம்' என்று சொல்லிவிட்டுத் தோளிரண்டுந் துணைமுலையும் புள

கங் காட்டக் கொவ்வைவா யிதழ்துடிக்கச் சந்திராபீடனது சரீரத்தைத் தொழுதுநோக்கி, அவனது இரண்டு சரணாரவிந்தங்களையும் தலைக்கணிந்த மலர்போல வைத்து வணங்கித் திரும்பவும் அச் சேவடிகளைக் காதம்பரி தன் மடியின்மீதே வைத்துக்கொண்டாள். உடனே அச் சந்திராபீட னுடைய திவ்யமான திருமேனியிலே ஒரு பேரொளியானது வெள்ளிய நிலவைப்போலப் பரந்துவரத் தொடங்கிற்று. அப்போது சுடருலவும் ககனதலத்திலே ஒரு இனிய அசரீரி வார்த்தையானது பின்வருமாறு மகா சுவேதையை நோக்கி யெழுந்தது: 'வாராய், என் அருமை மகளே! நீ ஒரு சிறிதும் அஞ்சவேண்டாம். பூர்வம் உன்னை யிங்கே வாடாமலிருக்கும்படி யாகச் சொல்லி ஒப்பற்ற அப் புண்டரீகமுனிவனுடைய சரீரத்தை, உன் னுடனே கூடுதற்கு யோக்யமாகும்படி, அமிர்தத்தினிடையே அழியாமல் வைத்திட்டது நாமே. இச் சரீரமும் அவ்வண்ணமே யாகும். உண்மையை நாடின் இச் சரீரம் என்னுடைய சரீரத்தைத் தவிரப் பிறிதன்று. நாமே தாம் இச் சந்திராபீடன் என்பவனும். இவ் விஷயத்தில் ஐயுறவு வேண் டாம். இது காதம்பரியினுடைய கரமலர்களிடத்துண்டாகும் அமிர் தத்தினாலே யழிவை யடையாமல் இப்படியே நாளுக்குநாள் அதிகமாக ஒளிவீசிக்கொண்டிருக்கும். ஆகையாற் சாபவிமோசனமாகும் பர்யந்தம் இச் சரீரத்தை இங்கு இப்படியே வைக்கக் கடவீர்கள்' என்று இவ் விதமெழுந்த அவ் வசரீரி வார்த்தையைக் கேட்டுப் பத்திரலேகையை யொழிந்த எல்லோரும் விண்ணின்மீது செலுத்திய விழியினையுடையவர் களாய் அதிசயித்துநின்று உளமகிழ்ச்சி பெற்றார்கள். பத்திரலேகை மாத் திரம் அந்த ஒளியின்மேற் சென்று பெற்ற உணர்வினை யுடையளாய்ப் பிறிதொரு திசையையுங் கண்ணெடுத்துப் பாராமல், மனத்தை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு, ஆத்ம பரித்யாகஞ் செய்வதற்கே யாவேசங்கொண் டவரைப் போல, 'நாம் இப்புரவியுடனே புரவலன்பின் போவோம்' என்று துணிந்து, போரிற் சிறந்த அக் கடுவிசைப் பரியாகிய இந்திராயுதத்தைக் கிட்டி யதனை நோக்கி, 'நாம் போவோம் வா' என்று சொல்லி அக் குதிரைக் காசாரியினிடம், 'குதிரையை இங்கே தா' என்று கேட்டுப் பெற்று அதன் மீது ஏறிக்கொண்டு அதிவிரைவாக அந்த அச்சோத தடாகத்தினுள்ளே பிரவேசித்தாள்.

உடனே, அப் பூம்பொய்கையிலிருந்து, அரையிற் றரித்த வற்கலையும் பாசிக் கொத்தோடு கூடிய நீண்ட ஜடையும் வெள்ளிய முப்புரி நூலும் பெரிதும் விளங்காநிற்கச் சாபவிடைபெற்றோனாகிய முனிகுமாரனொருவன், மஹாசுவேதை அம்முனிவனையே யுற்றுநோக்கிக் கொண்டேயிருக்க, அவ் விடமாகச் சென்று அவளை நோக்கி, 'நீ என்னை யறிந்திலையோ?' என்று மிக்க இளைப்புடனே சொல்ல, உடனே அம் மஹாசுவேதையும் எழுந் திருந்து, 'தபோநிதியாய்ச் சிறந்த என் அப்பன் கபிஞ்சலமா முனிவ னன்றோ?' என்று சொல்லிச் சரேலென எழுந்திருந்து அவனது பாதபங்க யங்களை வணங்கி விழிவழி நீர்வார ஓர் வார்த்தை சொல்லத்தொடங்கினாள்.

"பெருந்தவக்கடலாகிய எனது புண்டரீகமாமுனிவன் அந்தரதலத்திலே செல்ல, அங்கே அழியாத அவனது ஆருயிரானது இன்னமும் சுகமே யிருக்குமாயின் இந்த இனிய க்ஷேமவிருத்தாந்தத்தினாலே சில வார்த்தைகள் முதலிற் சொல்லத்தக்கன. இது நிற்க. அப்போது அம் முனிபுங்கவனைத் தூக்கிக் கொண்டு சென்ற மாமுனிவன் யாவன்? எவ்விடத்துக்குச் சென்றான்? கொண்டுபோவதற்குள்ள காரணம் யாது? பின்றொடர்ந்து கூடவேசென்ற உம்முடனேகூட அம்மகாபுருஷன் திரும்பிவரக்காணேனே. ஸ்வாமி! கொடியேனுடைய காதல் நாயகனாகிய புண்டரீகமுனி எங்கே? அவனைவிட்டுத் தனியேவரக் காரணம் என்ன? எல்லாவற்றையும் செவ்வனே அருளிச் செய்யவேண்டும்" என்று சொல்ல, அதற்கு அக்கபிஞ்சல மாமுனிவன் அங்கு அவ்விடத்தே சூழநிற்கும் பெரிய படைத்தொகுதியும் சந்திராபீடனது மரணத்தைக்குறித்துச் சாலவுந் தளர்ந்து இரங்கியுருகும் ராஜகுல ஸமூகங்களும், சரணகமலங்களை மடியின்மீது வைத்துக் கொண்டு உபசரிக்கின்ற ஒண்டொடி மடவாலாகிய காதம்பரியும் மற்றும் அங்கே வந்துள்ள பரிஜனங்களும் அதிசயித்துநின்று பேருவப்புடனே கேட்கும்படியாக, "வாராய், மஹாசுவேதையே! முன்னம் அவன் என் இன்னுயிர்த் தோழனாகிய மாதவப் புண்டரீகனுடைய சரீரத்தை எடுத்துக் கொண்டு செல்ல நானும் அவன் பிறகே சென்றேன். ஆகாயத்தில் நெடுந்தூரஞ் சென்றதும் அவன் அங்குள்ள அரம்பை மாதர்களும் சுரர் குழாங்களும் இறும்பூது கொண்டு பார்த்துக் கொண்டேயிருக்கவும், உடுக்கணங்கள் கைகூப்பி வணங்கவுஞ் சந்திரமண்டலத்தினுள்ளேசென்று, அங்குள்ள மகோதயம் என்னுஞ் சபையிற் பிரவேசித்து அழகிய சந்திரகாந்த சிலாபீடத்திலே நலம்பெற அப் புண்டரீகனுடைய உடலைவைத்து, நடுக்கமுற்று நின்ற என் முகத்தை நோக்கி, 'நினது மிதமிஞ்சிய பயத்தை இனி நீ விட்டுவிடு. கபிஞ்சல! இனித் தைரியமாய் இரு. என்னை இன்னானென்று நீ அறியமாட்டாயாகையாற் சொல்லுகின்றேன் கேள். நான் சந்திரன். முன்னொரு காலத்திலே நான் நினது வாசஸ்தானமாகிய ஹேமகூடத்தினிடத்திலே சென்று விளங்கிக்கொண்டிருந்தேன். அப்போது உன் இணைபிரியாத் தோழனாகிய இப் புண்டரீக முனிவன் சிறிதுந் தயையில்லாதவனும் அளிகளை நாணாகப் பூட்டப்பெற்ற கருப்புவில்லையுடையவனுமான கொடிய மன்மதனது பஞ்ச பாணங்களினாலே வசமழிந்து, கொஞ்சமும் அறிவில்லாதவனாய் என்னுடைய காந்தியைக்கண்டு வெறுப்புற்று என்னை நோக்கி, 'உன்னாலேயன்றோ என் ஆருயிர் அழியாநின்றது. ஆகையால், வினையேனாகிய என்னைப்போலவே இப்போது சிறப்புற்றொளிர்கின்ற நீயும் இவ்வுலகத்திலே வந்து பிறந்து, அதிகமான அநுராகத்தினாலே பீடிக்கப்பட்டு முடிவில் ஸமாகமம் நிகழாமலே அவ் வேதனையுடனேயே விளியக் கடவாய்' என்று சபித்தனன். இவ்வாறு இவன் என்னைச் சபிக்கவும் நான், 'இவ்வாறு இவன் நம்மைச் சபித்தற்கான தவறு ஏதாவது நம்மிடத்திலுண்டோ?' என்று பார்க்க, அப்படிப்பட்ட

குற்றமொன்றும் என்னிடத்தில் இல்லாதிருப்பதை யுணர்ந்து அதிகமான கொடிய கோபத்தையடைந்து 'அவ்வாறாயின் நீயும் என்னுடன் கூடவே யிருந்து ஸுகதுக்கங்களைக் கலந்து அனுபவிக்கக் கடவை. இது ஸத்யம்' என்று அதிவிரைவாக நானும் எதிர்நின்று பிரதிசாபங் கொடுத்தேன். திரும்பவும் நான் நினைத்துப் பார்க்கும்போது, 'அந்தோ! என்ன காரியஞ் செய்திட்டோம்! நமது அமிர்த கிரணத்தின் வழியிலே தோன்றிய அழகிய வாச நறுங் குழற்கோதையாளான கௌரியின் மகளாகிய மஹாசுவேதையின் மணவாளனாகிய இப் புண்டரீகன் நமக்கு மருமகனல்லனோ? ஆகையால் இவன் வாழ்வதற்கே யுரியனன்றோ?' என்று கருதிக் கழிவிரக்கங் கொண்டேன். இவனோ நானிட்ட பிரதிசாபத்தினாலே இரண்டு பிறப்பு என்னுடனே பிறக்கவேண்டியவனாவான். அங்ஙனமில்லாவிடின், 'ஜன்ம ஜன்மம்' என்று இருமுறை மனமழன்று சொன்ன வார்த்தையானது என் வாயினிடமாகத் தோன்றியிராது. ஆகையால் நான் தவத்தையே தனமாகக் கொள்ளும் மகாசுவேதையைத் தேற்றிவிட்டு, வேறோர் தவறும் அங்குண்டாகாதபடி இந்தக் களேபரத்தைச் சாபதீமை கடப்பளவுங் காக்கக் கருதி இவ்விடம் எடுத்துப் போந்தேன். நீ இவற்றையெல்லாம் இவனது பிதாவாகிய சுவேதகேதுவினிடஞ் சொல்லி யிதற்குமேல் என்ன செய்வது என்பதைக் கேட்டுக்கொண்டுவா' என, உடனே நான் அதி விரைவாகச் சுவேதகேதுவை நோக்கிச் செல்லும்போது மார்க்கத்திலே, விண்ணின்மேற் சென்றுகொண்டிருந்த தேவனொருவன் என்னை நோக்கி, 'நீ யொரு சிறந்த ஆண் குதிரையைப் போல என்னைத் தாவிக் கடந்து சென்றாயாகையால் நீயும் இன்னே ஒரு பரிமாவாகக் கடவாய்' என்று சபிக்க, நான் பெரிதும் அச்சமுற்று அத் தேவனது திருவடிகளிலே விழுந்து, 'அறிந்து செய்ததன்று; ஆகையால், சாபவிடையைப் பகர்ந்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ் விண்ணவன் என்னைக் குளிர நோக்கி, 'உன்னை வாகனமாக வுடைய கோமகனுக்கு இறுதியுண்டாகிய அன்று, உதகத்திலே பிரவேசித்துப் படிந்தெழுந்த பின்னர் உனக்கு இச் சாபம் போம்' என்று பேசிவிடுஞ் சாபவவியைப் பெற்றுக் கொண்டு மீளவும் அந்த அமரனை நோக்கி, 'நான் பிறக்கும் அந் நிலத்திலேயே முன்னதாகச் சந்திரனும் என் தோழனை புண்டரீகனும் அவதரிக்க, நான் அவர்களை அகலாதிருக்கும்வண்ணமாய் இன்னமுந் திருவுள்ளம்பற்றி யருளவேண்டும்' என்று குறையிரந்து நிற்க அந்த இமையவன், 'அவ்வண்ணமே யாகும். மற்றும் இதனையுங் கேட்பாயாக. தன்னிகரில்லாத் தனிப்புகழ்த் தாரதிபனான தாராபீட னென்போன் மகப்பேறு கருதி யருந்தவம் புரிகின்றான். சோமன் அவ் வேந்தனது விருப்பத்தின்படி அவனுக்கு அரியமகவாய் அவதரிப்பன். அம் மன்னர்பிரானது அமைச்சனாகிய சுகநாதன் என்பவனுக்குப் புண்டரீகன் மைந்தனாகப் பிறக்கப் போகின்றான். அப்புண்டரீக முனிவனது இன்னுயிர்த் தோழனே! நீயும் அம் மன்னன் மைந்தனாகிய சந்திரனுக்கு வாகனமாவாய்' என்று சொல்ல

நான் அப்பொழுதே அலைகடலில் வீழ்ந்து அழகிய வோர் குதிரையாகப் பிறந்தேன். புண்டரீகன் பிறப்பும் இஃதே'' என்று சொன்னான்.

கபிஞ்சல முனிவனது இவ் வார்த்தையைக் கேட்டதும் மகாசுவேதை பொறிகலங்கிப் புலம்பி, 'நுன்னல் கொண்டு நீர் பிறந்துவரும் பிறப்புக் கெல்லாம் நானே கூற்றாகி யும்மைக் கொன்றுவிட்டேன்! மண்டலத்தில் எனைக்காணத் தக்கதோ தான்? மாபாவி நானேயன்றோ! என்னைப்போன்ற தெளர்ப்பாக்கியத்தை யுடையவர்களும் இந்த மண்டலத்திலுண்டோ? அண்டர்குழாத்திடை யமர்ந்த மகானுபாவ! நீர் அடியேன் செய்த அபராங்தகளை யெல்லாம் பொறுத்துக்கொண்டு கிருபைசெய்தருளவேண்டும்' என்று சொல்லி அவசரமாய்க் கீழே வீழ்ந்தாள். அதுகண்ட கபிஞ்சலமா முனிவன், ''மின்னே! நீ இவ்விதம் வேதனை கொண்டு உயிரிழக்க வேண்டாம். மேலோ ரெல்லாந் தொழும்படியான திவ்ய வடிவத்துடனே புண்டரீகன் இங்கே தோன்றுவான். இனி வருவதெல்லாஞ் சுகமேயாம்; துக்கமில்லை. நானுரைத்ததை யெல்லாம் மெய்யென்றே நம்பு. தவமே செய்த நீ இனியும் அத் தவத்தையே விடாமற் செய்து கொண்டிருப்பது நலம். 'நீங்கள் வாடவழக்கன்று. நீர் வருந்தவேண்டாம்' என்று சொன்ன ஆகாயவாணியானது சோமனது வார்த்தையாகும். செய்தவத்தா லாகாத காரியம் ஒன்றுமே யில்லை. திருந்திழையாளான உமையவள் சிவபெருமானுடைய திருமேனியிலே ஒரு பாகத்தைக் கைக்கொண்டதெல்லாம் இத் தவத்தின் மகிமையினாலல்லவா? அதுபோலவே உனக்கும் இம் முதுதவத்தின் வலிமையினாலே என் தோழனது ஸமாகமம் கிடைக்கும். இதை விடுத்தாற் கைதவத்தாலாகுங் காரியம் எதுவுமில்லை'' என்று சொல்ல, அவற்றைக்கேட்ட மஹாசுவேதை கவலையெல்லாம் ஒழிந்திருந்தாள். அப்போது காதம்பரி அக் கபிஞ்சலனை நோக்கி, 'முனிவர் பெருமானே! பத்ரலேகையும் கூடவே தடாகத்தினுள்ளே பிரவேசித்தாளே. அவள் இப்போது எங்கே சென்றிருக்கின்றாள்?' என்று கேட்க, 'பெண்ணரசே! நான் இப் பொய்கைக்குட் புக்கேன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும். அவள் சென்றவிடம் யான் அறியேன். இவ்விஷயத்தை மாத்திர மன்றிப் பின்னரும் அச் சுவேதகேதுவென்னும் மாமுனிவன் அமிர்தகிரணனாகிய வாண்மதியின் அவதாரமாகிய சந்திராபீடனுடைய பிறப்பையும் புண்டரீக முனிவனுடைய அவதாரமாகிய வைசம்பாயனனுடைய பிறப்பையும் மற்றும் இவைபோன்ற எல்லாவிஷயங்களையும் நன்றாக அறிந்திருப்பான். நான் அவனிடஞ் சென்று எல்லா விருத்தாந்தங்களையுங் கேட்டறிந்து வருகிறேன்' என்று சொல்லிவிட்டு அக் கபிஞ்சலமாமுனிவன் ககனமார்க்கத்திலே யேகிவிட்டான்.

பின்னர், இவ்வாறு அக் கபிஞ்சல முனிவன் மொழிந்த பிரகாரங்களனைத்தையுஞ் சேனைவெள்ளத்தோடு அங்கே சூழநின்ற முடிமன்னவர் குழாங்களெல்லாங் கேட்டு மகிழ்வெய்திப் பின்னருஞ் சோகாக்கிராந்தர்களாய்க் கண்ணீர்மல்க அழுதுகொண்டுமெல்ல விலகிப் போயிருந்தார்கள்.

அப்போது பைந்தொடியாளான காதம்பரி மஹாசுவேதையைப் பார்த்து, 'பிரியஸகி! நமக்கு இப்படிப்பட்ட ஸமான ஸுகதுக்கங்களை எழுமையிலும் ஒருங்கனுபவிக்கும்படி முன்னமேயே அப் பிரமதேவன் கற்பித்துள்ளான்போலும். ஆகையால் நான் இனி இதைக்குறித்துச் சிறிதேனும் நாணமுறேன். எதைவேண்டுமானாலுங் கூசாது சொல்வேன். மாசற்ற நினது மதிவதனத்தைப் பார்ப்பேன். சொல்லப்புகின் இன்றுதான் நான் உனக்கு நிஜமான உயிர்த்தோழியானேன். இனி இறப்பதைப்பற்றியும் இருப்பதைப்பற்றியும் எனக்குக் கவலையில்லை. ஏனென்று என்னைக்கேட்பவர்களுமில்லை. நானும் ஒருவரை ஒன்று கேட்கப்போவதுமில்லை. காரியமிப்படி யிருக்கின்றபடியால், இதற்குமேல் நீ கற்பித்தவாறொழிய நானுகை ஒன்றைச் செய்வதறியேன்' என்றாள். மகாசுவேதை இவ்வாறுரைத்த அந் நேரிழையாளான காதம்பரியை நோக்கி, 'அம்மா! இவ்விஷயத்தில் நீ என்னைக் கேட்கவும் நான் உனக்குச் சொல்லவும் என்ன கிடக்கின்றது? பிரியதமனுடைய வருகையைப் பற்றிய ஆசையோ அளவு கடந்ததாய் அதிக்கிரமிக்கக் கூடாததாய் இருக்கின்றது. ஆகையால் அதற்கான காரியத்தைத்தான் இனிமேற் செய்யவேண்டும். நீ பிறிதொன்றையும் நினையாதவளாய் இங்கேயே யிருந்து இச் சந்திராபீடனுடைய சரீரத்தைப் பேணிக்கொண்டிரு. நீ செய்யவேண்டிய காரியம் இதுதான். நானோ பூர்வம் அவ் விண்ணவன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு என் ஆருயிரை யழியாமற் போற்றி வீணே இங்கிருந்து கெட்டுவிட்டேன். அப் புண்டரீகனுடைய விருத்தாந்தமோ கபிஞ்சலமுனிவன் சொல்ல நீ கேட்டாயன்றோ. நிற்க. உலகத்தவர்கள் கல்லாலும் மரத்தாலும் உலோகத்தாலுங் கற்பிக்கப்பட்ட விக்கிரகங்களையெல்லாஞ் சிந்தையிற்கொண்டு தியானித்து, சொல்லாலும் மலராலும் பூஜை செய்து அப்பிரத்தியக்ஷமான தங்கள் இஷ்டதெய்வங்களை அப் படிவங்களினிடத்தே யாவாகனஞ் செய்து வழிபட்டுத் தங்கள் எண்ணங்களையெல்லாம் வெளியிட்டுச் சொல்லிக் குறைதீர்ந்து மகிழ்வார்கள். அவ்வாறு முறைப்படி யாராதிக்கவும் பலர்க்குத் தெரியாது. பாக்யவதியான நீ எதுகொண்டு ஆராதித்தாயோ, சந்திராபீடனென்ற திருநாமத்தையுடைய இச் சந்திரன் உனக்குப் பிரத்தியக்ஷமானான். நல்லாய்! இம் மூர்த்தியே உனக்குச் சர்வாபீஷ்டங்களையுங்கொடுக்க இருக்கும்போது நான் சொல்லவேண்டுவதென்ன விருக்கின்றது?' என்று சொன்னாள்.

மஹாசுவேதையினது இவ் வார்த்தைகளைப் பணிவோடுங் கேட்டுத் தரளிகையும் மதலேகையும் மின்னற்கொடிபோன்ற காதம்பரியும் அவனுடைய சரீரத்தைப் பிரீதியுடனே யெடுத்துக் கொண்டுபோய்த் தழைத் தடர்ந்த மரங்கள் புடைசூழ்ந்த ஒரு மலை முழைஞ்சினுள்ளே சீதவாதாதபவர்ஷாதி ஸர்வதோஷரகிதமான ஒரு சிலாதலத்திலே அழகியதோர் மலரணையின்மீது வளர்த்தினார்கள். காதம்பரியும் உடனே தானணிந்திருந்த சிறந்த விபூஷணங்களில் கழஞ்சு நிறையுள்ள ஒரு மோதிரத்தை

மாத்திரம் மங்கலார்த்தமாக அணிந்துகொண்டு மற்றவைகளை யெல்லாம் களைந்து வாங்கிவைத்து, அம் மலையின் பக்கத்தே யோடுவதோர் வனச் சுனையிலே யிறங்கிக் காவிபோகப் பல்லை நன்றாகத் துலக்கி நீராடி யிரண்டு மரவுரிகளை யுடுத்துக்கொண்டு, நாளமில்லாப் பங்கயமலர்போல இளைத்து வாடி, வரும்போது தன்னுடனே கொண்டுவந்த அகிலின் தூபத்தைக் கொண்டும், திவ்யமான பரிமளத்தையுடைய கலவைச் சந்தன முதலாய வற்றைக்கொண்டும், சிறந்த பற்பலவிதமான நறுமலர்களைக்கொண்டும், ஓயாமற் சொரிந்துகொண்டே யிருக்கின்ற விழிமாரியைக் கொண்டும் வாட்டமுற்ற அச் சந்திராபீடனுடைய பாதபங்கயங்களை யுபசரித்துப் பின்னும் அத் திருவடிகளைத் தன் மடியின்மீது வைத்துக்கொண்டு அவ னுடைய முகாரவிந்தத்தை யுற்று நோக்கிச் சாலவும் வருத்தமுற்று ஆகார மொன்றுமில்லாமல் அற்றைநாட் பகற்போதையெல்லாம், நெடுந்தூரத்தி னின்று வந்த சிரமத்தினாலும் ஸ்நாநபான போஜன முதலியவைகளில்லா மையினாலும் மிகவும் சோர்வடைந்துள்ள ராஜபுத்திரர்களோடுஞ் சேனைக் கூட்டத்தோடும் மேன்மேல்வந்த பரிஜனங்களோடு மிருந்து போக்கினாள். அற்றைநாட் கங்குற்போதிலே சப்த மேகங்களும் ஒருங்கே திரண்டெழுந் தாற்போலக் காளமேகங்களெல்லாந் திடீரென எம்மருங்கு மெழுந்து கவிந்திட்டன. உவமை சொல்லுதற் கொண்ணாத கரியதோர் அந்தகாரம் உலகெங்கும் மூண்டுபரந்தது. அவ்வாறு பரந்த அந்தப் பேரிருளானது அதிர்கின்ற அசனியாகிய பேரனலாலும் மின்னல்களாலும் சற்றும் உலகிலில்லாதபடி விலகி யோடியொளிக்கத் திசையெல்லாம் வெளிச்ச முற்றுத் திகழ்ந்தன. பயங்கரமான அந்த நள்ளிரவிலே குழிந்தாழ்ந்த விழிகளையுடைய பிசாசங்களெல்லாம் ஆர்ப்பரித்தெழுந்து கூத்தாடின. உலகெல்லாம் நடுங்கி யொடுங்கிற்று. காதம்பரியோவெனில் இதற்குச் சிறிதும் உளந்திடுக்கிட்டு அஞ்சாமலுங் கண்ணுறக்கங்கொள்ளாமலும் இருந்துகொண்டு அச் சந்திராபீடனுடைய உபய பாத பங்கயங்களையும் உவகையோடு கைகளினாற் பற்றிக்கொண்டே அதைவிட்டுச் சிறிதும் அப்புறத்தே போகாமல் அங்கேயே யிருந்து அப்பேரிரவைப் போக் கினாள். விடிந்து பார்த்ததும், சந்திராபீடனுடைய திருமேனியானது சிறிதும் வாட்டமுறாது தொளிர்கின்ற பண்பினைக் கண்டு ஆச்சரியமுற்று, 'இது எங்குமில்லாப் புதுமையாக இருக்கின்றது. மதலேகாய்! வந்து பாராய்' என, அவளும் உற்றுநோக்கி, 'மிகவும் மனோகரமாய் ஒளிர் கின்றது. இனி இந்த அழகுக்கு ஒரு நாளும் அழிவில்லை. அருள்பெருகா நின்ற இவனது திருநயனங்களோ மதுவோடு கூடிய அழகிய புண்டரீக தளங்களே யென்னும்படி விளங்குகின்றன. பவளம்போற்சிறந்த செவ்வா யானது புதிய செந்தளிரைப்போலத் திகழ்கின்றது. வதனவிம்பமோ சந்திரமண்டலத்துக்குச் சதிர்சமாகத் தயங்குகின்றது. திண்ணிய இவ னது புஜங்களை மேருபர்வத மென்றுரைக்கில் இழுக்காது. வியர்வைநீர் தோற்றவில்லை யென்கின்ற அந்த வொன்றைத்தவிர, அம்மா! வேறு

என்ன குறையிருக்கின்றது சொல்லாய். கபிஞ்சல முனியுஞ் சொல்லி யிருக்கின்றான். ஆகாயவாணி மொழிந்ததில் இனி என்ன ஸந்தேகம்?' என்று சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்டு மிக்க மகிழ்ச்சியை யடைந்து, 'மஹா சுவேதாய்! இச் சந்திராபீடனுடைய அவயவசோபை யிருக்கும் படி பாராய். சீதகிரணனென அந்தப் பூரணசந்திரன்தா னாகட்டும், இப் பெருமானுடைய அழகிய திருமுகத்தினுக்கு ஈடாகுமோ?' 'மன்னவர் களே! நீங்களும் வந்து பாருங்கள்' என, அம் முடிவேந்தர்களும் வந்து பார்த்து ஆனந்தாதிசய முற்று, 'இது நமது மன்னவர் பெருமான் இனி தாகக் கண்வளர்கின்ற பிரகாரத்தைத் தவிரப் பிறிதொன்றோ? மங்கைக் கரசே! நுமது திருக்கரத்தை யமுதமா மென்று ஆகாயவாணி சொன்னது முற்றிலும் உண்மை. இதைத்தவிர வேறு நாங்கள் என்ன சொல்லட்டும்?' என்றுசொல்லிச்சந்திராபீடனுடைய திருவடியைத்தொழுது உபசரித்துக் கொண்டேநிற்க, காதம்பரியுந் தன்னுடைய பெரிய பரிஜனங்களுடனே சென்று ஓடிவருகின்ற அருவிப் புனலிலே படிந்து மலர் கொய்து போந்து எப்போதும்போலவே அம் மன்னவர்கோமானாகிய சந்திராபீடனுடைய அடிமலர்களை யருச்சித்து வணங்கி, அங்கே சூழநின்ற அம் மன்னவர்களை நோக்கி, 'வாடி வருந்திய நீங்கள் இனி ஒரு சிறிது இளைப்பாறி வருக' என்று சொல்ல, அவர்களும் அவ் வார்த்தையை யங்கீகரித்து அவ்வண்ணமே ஸ்நானஞ் செய்து போஜனமும் அருந்தினார்கள். பைந்தொடி மடவ ளாகிய அக் காதம்பரியும் மஹாசுவேதையினது நியமனத்தைத் தட்ட மாட்டாதவளாய் மிக்க மனவருத்தத்துடனே கொஞ்சஞ் சாகமூலங்களைத் தன் பரிஜனங்களுடனே யிருந்து நுகர்ந்துவிட்டுத் திரும்பவும் அச் சந் திராபீடனுடைய சரணகமலங்களைத் தன் மடியின்மீது வைத்துக்கொண்டு அப் பகற்போதையும் போக்கினாள். அதன் மற்றைநாளும் சந்திராபீட னுடைய திருமேனியானது சிறிதும் வாட்டமிலா தொளிர்கின்ற தன்மை யைக் கண்டு மெத்தவும் மனமகிழ்ந்து, 'பிரிய ஸகி! இனி நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம். சாபவிமோசன பர்யந்தம் நாம் அழகிய இச்சரீரத்தை மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டு இங்கேயே வைத்திருக்க வேண்டுவது அவசியம். ஆகையால், நமது மாதாபிதாக்கள் நான் திரும்பி வாராததைக் குறித்து வருந்தாதிருக்கும் வண்ணம் நீ போய் அவர்களுக்கு இந்த அற்புத விருத்தாந்தத்தைச் சொல்லி, அவர்கள் இங்கே வாராம லிருக்கும்படியான உபாயத்தையுஞ் செய்துவிட்டு இங்கே வாராய்' என்று சொல்லிக்காதம்பரி தன் அந்தரங்க ஸகியான மதலலேகையை ஹேமகூடத் திற்கு அனுப்பினாள். அவளும் அன்னவாறே சென்று தாய்தந்தையரான இருவர்களுக்கும் நடந்த விஷயங்க ளனைத்தையும் ஒன்றுவிடாமல் அடை வாகச் சொல்லலும், அவர்கள் அச் செய்தியைத் திடுக்கிடக் கேட்டுப் பின் னர்த் தெளிந்து, 'நிரம்பவும் ஸந்தோஷகரமான காரியம். கற்பிது, நன்றா யிருக்கின்றது' என்று சொல்லிப் பின்னரும் அம் மதலேகையை நோக்கி, 'என்றைக்கோ நாம் நமது மகளை மணவாளனுடன் கண்குளிரக் காணப்

போகின்றோம்?' என்று நாங்கள் நெடுநாளாக வருந்தியிருந்தோம். ஜன்மாந்தர ஸுகிர்த விசேஷத்தினாலே நேரே உடுபதியான சந்திரனே எமக்கு மருமகனாக வந்து வாய்த்தான். இதனினும் வேறுளென்னபேறிருக்கின்றது? இனிமேல் நாங்கள் சிறப்பாக விவாக நடக்கும் மங்களதினத்தின்போது அங்கே வருகின்றோம்'' என்று மகிழ்வுடனே சொல்லியனுப்ப, அவ் வொண்ணுதற் பாவையும் அவ் வார்த்தையைக் கேட்டுப் பெரிதும் உவகையுற்றனளாய் விடைபெற்றுத் திரும்பிவந்து தன் தலைவியாகிய காதம்பரியினிடத்தில் பெரியோர்களான அம் மாதாபிதாக்கள் உரைத்தவற்றையெல்லாம் அடைவாகக் கூறினள். காதம்பரி அவ்வினிய வார்த்தைகளைக் கேட்டுப் பொங்கிய பெருமகிழ்ச்சியை யுடையளாய் அச் சந்திராபீடனுடைய திருவடிகளை யாராதித்துக்கொண்டிருந்தாள்.

பின்னர், பெரிய அக் கார்காலம் நீங்கிற்றாகத் திசைகளெல்லாஞ் சூரிய கிரணங்களால் வியாபிக்கப்பட்டு நன்றாக விளக்கமுற்றன. வயல்களெல்லாம் முற்றிப்பழுத்துள்ள கதிர்களின் பொறையை யாற்றமாட்டாது தலைவணங்கியுள்ள நெற்பயிர்களினாற் பொன்னிறங்கொண்டு திகழ்ந்தன. வனப்பிரதேசங்களெல்லாம் மிக்குள்ள நாணற் பூக்களினால் வெளேலென விளங்கின. ஆகாயத்தையளாவ உயர்ந்துள்ள அழகிய மேன்மாடங்களெல்லாம் ஸுகசுரமான காற்றையுத்தேசித்து யாவராலும் விரும்பப்பட்டன. கங்குற் போதெல்லாம் பசிய குமுதமலர்களினுடைய இனிய பரிமளத்தினாலே அதிக சீதளமுடையவைகளாய் இருந்தன. வைகறைப் போதிலே ஸேபாலிகா குஸுமத்தினுடைய இனிய பரிமளத்தோடு கூடிய காற்றானது மந்தமந்தாக வீசத் தலைப்பட்டது. பிரதோஷகாலமானது அழகிய சந்திரகாந்தியினாலே நிரம்பவும் மனோக்யமாக விளங்கிற்று. பகற்போதெல்லாம் மணற்குவைபோலப் பரந்த இந்தீவர மலர்களின் பராகங்களினாற் சுகந்த முடையவைகளாய்த் துலங்கின. நீர்வற்றியுள்ள நதிதீரங்களிலே படிந்துள்ள தெள்ளிய அறல்களிடத்துண்டாகிய ரேகைகளெல்லாம் மெதுவாக ஓடுகின்ற அந் நீரோட்டத்தின் வரிசையினாலே யேற்படும் சிறிய தரங்கங்களைப்போலக் காணப்பட்டன. உலர்ந்த சேறுகளையுடைய பூமிகளெல்லாம் பிராணிகளினாற் சேதப்படுத்தப்படாத பசிய புற்களினாலேமூடப்பட்டிருந்தன. மார்க்கங்களெல்லாஞ் சேறில்லாதபடி உலர்ந்திருந்ததனால் அவ் விடங்களிலே குதிரையினது வலிய குளப்படிச் சுவடுகள் நன்றாகப் பதிந்துகிடந்தன. திங்களும் பகல்போலத் தனது வெள்ளிய தண்ணிலவைப் பரப்பி விளங்கிற்று. மந்தப்பிரவாகத்தின் மேடுபள்ளத்தினால் வேறுபடுத்தப்பட்டுள்ள புதிய மார்க்கத்திலே திரும்பவும் மன்னவர் பலருஞ் சென்றார்கள்.

இவ்வாறான அக் காலத்திலே யொருநாள், அங்கே சந்திராபீடனுடைய பாதசைங்கரியஞ் செய்துகொண்டிருந்த காதம்பரியினிடத்திலே சேனைத் தலைவனாகிய மேகநாதன் என்பவன் வந்து, "கருங்குழலாய்! உச்சயினி வேந்தனா லனுப்பப்பட்ட தூதர்கள் இவ்விடத்துச் செய்தியையறிந்து

போவதற்காக அதிவேகமாக வந்திருக்கிறார்கள். லோகபாலகனான சந்திரகுலத் தோன்றலாகிய நமது சந்திராபீடன் இங்கே வந்ததும் அதன்பின்னர் இங்கே சம்பவித்ததும், மற்றும் இங்கே நிகழ்ந்ததுமாகிய எல்லாச் செய்திகளையும் நான் அவர்களிடஞ் சொல்லி, 'நீங்கள் போய்வாருங்கள்' என, அவர்கள் 'நேரிற் பார்த்துவிட்டுத்தான் போகவேண்டும்' என்று சொல்லுகிறார்கள்" என்று மிக்க பணிவோடு விண்ணப்பஞ்செய்ய, அவ்வார்த்தையைக்கேட்ட காதம்பரி சந்திராபீடனுடைய பெற்றோர்களுக்குற்ற துன்பத்தை நினைந்து துக்கித்து மாலைமாலையாகக் கண்ணீர் பெருகத் தங்கித்தங்கிவருகின்ற கண்டத்தையுடையவளாய், "தேவதேவனான சந்திராபீடனைக் கண்ணாரக்காணாமல் அவர்கள் எப்படிப் போவார்கள்? போய் என்னவென்று சொல்வார்கள்? இதுவோ எங்குங் காணாத புதுமையாக இருக்கின்றது. லோகாதீதமான இந்த அற்புத விருத்தாந்தமானது நேரிற் பார்த்தாலுங்கூட நம்பிக்கைக்கு இடந்தராது. அப்படியிருக்க, அவர்கள் பாராமல் எப்படி மீண்டுசெல்லச் சம்மதிப்பார்கள்? கைதவ மாத்திரமான சிறிது பிரேமையையுடைய நாங்களுமல்லவா வல்லபதமனான இம் மன்னவனிடத்தில் எங்கள் பிராணனை யெல்லாம் வைத்து, எங்கள் உயிரின்மீதும் ஆசையில்லாதவர்களாய் இவன்றனையே பார்த்துக்கொண்டிருக்கின்றோம். ஆகிறபோது, நிஜமான நல்ல சிநேகத்தை யுடையவர்களாய் மெய்யடிமை பூண்டுள்ளவர்களுமாகிய இந்தத் தூதர்கள் பாராமற்கூடப் போய்விடுவதென்பது எப்படி ஸாத்தியம்? ஆகையால் தாமதமின்றி அவர்களை யிங்கே வரச்சொல். இவ்வளவுதூரம் அவர்கள் வந்த பரிசிரமமானது பயனற்றதாய்ப் போகாமல் கண்கள் ஸபலமாம்படி பார்த்துவிட்டுப்போகட்டும். வந்து, நாங்கள் இங்கே அனவரதமும் ஜாகரூகர்களாய்ப் பாதுகாத்துக் கொண்டு இம் மன்னனது திருவடிகளை யாராதித்துக் கொண்டிருக்கின்ற பிரகாரத்தைப் பார்த்தும், இச்சந்திராபீடனுடைய சரீரத்தை நோக்கியும், முகத்தை அவலோகனஞ் செய்தும், விசாலமான லோசனங்களைத் தரிசித்தும், தோள்களைக்கண்டும் ஒருவாறு நம்பிக்கையுற்றவர்களாய்ச் சென்று ராஜராஜனான தாராபீடனும் தேவியான விலாஸவதியும் ஆரியசிரேஷ்டனான சுகநாதனும் ஆருயிர் சோர வருந்தாமல் தைரியத்துடனிருக்கும்படி, இப் பெருமானுடைய தேககாந்தியைக் கண்டதனால் தமக்குள்ள ஐயந் தீர்ந்தவர்களான இவர்கள் சொல்லவேண்டும். ஆகையால் இங்கேவரட்டும்" என, அவ்வாறே மேகநாதனால் ஆஞ்ஞாபிக்கப்பட்டவர்களான அத் தூதர்களும் வந்துகண்டு, மகிதலத்தில் வீழ்ந்து பஞ்சாங்க நமஸ்காரத்தினாலே அரசர்பெருமானான அச்சந்திராபீடனுடைய பாதபங்கயங்களைத்தொழுது இமையாத கண்களையுடையவர்களாய் அப் பாதபத்மங்களையே நோக்கிக் கொண்டு அளவிடற்கரியதோர் சோகத்தை யடைந்து பெரிதாக அழத் தொடங்கினார்கள்.

அதுகண்டு தேவியான காதம்பரி பிறிதொன்றிலுந் தன் கண்களைச் செலுத்தாமல், அந்தத்தூதர்களையே முழுநோக்குடன் பார்த்து "நீங்கள்

இவ்வாறு அழுவது தகுதியன்று. இச் சஞ்சலத்தை இனி அறவே ஒழித்து விடுங்கள். அசரீரிவார்த்தை ஒருபோதுந்தப்பாது மேலும் கபிஞ்சலமாமுனிவனும் இவ்விஷயத்தின் ஆதிவரலாற்று உண்மைகளையெல்லாஞ் சொல்லிப் போயிருக்கின்றான். அதற்கேற்பவே அழகிய இத் திவ்விய சரீரமும் வாட்டமுறாமலொளிர்கின்றது. விறன் மிக்க கொடிய வாட்படைகளோடு கூடிய இம் மன்னவர் குழாங்கள், இவ்வாறானது கண்டும் இன்னுந் தைரியத்துடனிருப்பதும் இதனாலேதான். நீங்களுங் கண்கூடாகக் கண்டறிந்தீர்கள் அல்லவா? ஆகையால் இதுவரை எங்கும் நேர்ந்திடாததான இவ் வதிசயத்தை நீர் உள்ளதுள்ளபடியாகக் கண்டவண்ணமே கூறாமல், 'அவர்கள் அச் சோததீரத்திலேயிருக்கிறார்கள், அவர்களுக்கு ஒருவிதமான குறைவும் இல்லை' என்று ஒருவாறாக விஷயத்தைத் தெரிவியுங்கள். தூரதேசவாஸிகளான அவர்களுக்கு இந்த வரலாறுகளையெல்லாஞ் சொல்லி, 'புதல்வன் மீளவும் உயிர்பெற்றெழுவானோ, மாட்டானோ?' என்ற பெரிய ஒரு கலக்கத்தை விளைவிப்பதனால் யாதொரு பயனுமில்லை ஆகையால், பிராணவல்லபனான சந்திராபீடன் உயிர்த்தெழுந்து தானே இந்த அற்புத விருத்தாந்தத்தை யாரும் நம்பும்படியாகச் செய்கிறவரையில் நீங்கள் இவ்விஷயத்தை இதனினும் அதிகமாகக் குரு ஜனங்களான அப் பெரியோர்களிடத்திலே சொல்லவேண்டாம்'' என்று சொல்ல, அத்தூதர்கள் காதம்பரியை நோக்கி வணங்கி, 'தேவீ! நாங்கள் என்னென்று சொல்வது? போகாமல் நாங்கள் இங்கேயே இருப்பதனாலுந் திரும்பிப்போயும் ஒன்றையுமே சொல்லாமலிருப்பதினாலும் இருவர்காரணமாக ஏற்பட்ட நமது மகாராஜர் கவலையானது எவ்வாறு தீரப்போகிறது? ஐயோ! மகாபாபிகளான நாங்கள் யுவராஜனுடையவும் வைசம்பாயனனுடையவும் விருத்தாந்தத்தைச் சொல்லக்கூடாதவர்களாய் வறிதே கையைவீசிக்கொண்டு அங்கே போவதனாற்றான் பயனென்ன? நாயகசிரேஷ்டர்களான இப் புத்திரசிகாமணிகளினுடைய க்ஷேம விருத்தாந்தத்தைத் தவிர வேறொன்றையுமே செவிகொடுத்துக் கேட்க விரும்பாத மன்னவர் கோமானாகிய தாராபீடனுக்கும் தேவி விலாஸவதிக்கும் ஆரிய சுகநாதனுக்கும் நாங்கள் இவ்விஷயத்தை எவ்வாறு சென்று செப்புவோம்? ஒருவாறு தேவியாரது நியமனப்படி நாங்கள் மறைத்துச் சொன்னாலும் வாடிய எங்கள் வதனமும் கலங்கிய எங்கள் கண்களும் சகிக்க முடியாத துக்கத்தைக் காட்டிவிடும் என்பது நிச்சயம்' என்று வணக்கமாய்த் தெரிவித்தார்கள். காதம்பரி அவர்கள் வார்த்தையைக் கேட்டு மேகநாதனை யழைத்து, 'மேகநாத! பூஜ்யர்களான பெரியோர்களிடத்தில் விஷயங்களை உள்ளது உள்ளபடியாக ஒளியாமல் உரைப்பதுதான் உசிதமானது. ஆனாலும் முதுமக்களாகிய அவர்களுக்குத் துக்கம் ஏற்படுமே என்பதைக் கருதி நான் இவ்வாறு சொல்லும்படியாகச் சொன்னேன். ஏற்கவே வைசம்பாயனனைக் குறித்துத் துக்கித்துக்கொண்டிருக்கின்ற அவர்களுக்கு இவர்கள் இந்தச் சந்திராபீடனுடைய விருத்தாந்தத்தையும் சென்று அறிவிக்கின் திடீரெனக் கோடையிடி விழுந்ததுபோலிருக்கும். ஆகையால், நிகழ்ந்த

விருத்தாந்தங்களை அரசன் தாராபீடன் முதலிய அவர்களுக்குத் தெரிவித்து அவர்களைச் சமாதானப்படுத்துமாறு இங்கு நிகழ்ந்த சம்பவங்களனைத்தையும் கூடவேயிருந்து பார்த்து அனுபவித்தவனும், சமயோசிதமாய்ப் பேசுந் திறமையுடையவனும், நம்மிடத்தும் யுவராஜாவாகிய சந்திராபீடன் முதலியோரிடத்தும் மிகுந்த அன்புள்ளவனும், கல்வி கேள்விகளிற் சிறந்தவனுமாகிய புத்திமானொருவனை உச்சயினிக்குத் தூது அனுப்பக்கடவாய்' என்று சொல்ல, அவன் தூதலக்ஷணமுழுதும் அமைந்த அன்புள்ளவனாகிய துவரிதகன் என்பவனைப் போகும்படி கட்டளையிட அவனும் அங்ஙனமே புறப்பட்டுச் சென்றனன்.

அஃது அவ்வாறாக, இங்கு உச்சயினி நகரத்தில் விலாசவதியானவள் தன் புத்திரன் சென்று நாட்கள் பலவாகியும் இன்னும் வரவில்லையேயென்ற வியாகுலத்தால் அந்த அவந்திதேசத்தில் உள்ள சகல ஜனங்களுக்கும் அவரவர் குறைகளைப் போக்கி மனோபீஷ்டத்தை நிறைவேற்றி வைக்கத்தக்க புகலிடமாய்ச் சேமதனம்போல் அங்கு அமைந்துள்ள பிராம்ஹீ முதலிய சப்தமாதாக்கள் வாழும் திருக்கோயிலையடைந்து, அவர்களுடைய பாதங்களிற் பணிந்து "அன்னைமீர்! தமியேனுடைய புத்திரன் சந்திராபீடன் முதலியோர் க்ஷேமமாக எப்பொழுது இங்கே வந்து சேருவார்கள். விரைவில் அவர்கள் வரும்படியனுக்கிரகிக்க வேண்டு" மென்று பிரார்த்தித்து வரங்கிடந்தனள். இங்ஙனம் விலாசவதி அக்கோயிலில் வரங்கிடக்கையில் அங்குச் சிலர் ஓடிவந்து அவளை நமஸ்கரித்து எழுந்து அஞ்சலி ஹஸ்தர்களாய் முன்னே நின்றுகொண்டு "அம்மணி! நம்மால் அச்சோத தீரத்துக்கனுப்பப்பட்ட தூதர்கள் விரைவில் வந்துவிட்டனர்; அவர்களை நாங்கள் பார்த்தோம் என்று சிலர் வந்து சொல்லக் கேட்டோம். ஆதலால் தேவி! உம்முடைய வேண்டுகோள் தவறாமற் பயன்படும்; இனி மனக்கலக்கம் ஒழிக" வென்று வணக்கமாய் விண்ணப்பம் செய்ய, அவ்வார்த்தையைக் கேட்டு விலாசவதி "ஆனால் தூதர்கள் மட்டுமோ விரைந்துவந்தனர்; என் புத்திரன் முதலியோர் இன்னும் வரவில்லையோ" வெனத் தனக்குள் ளுண்டாகிய மனக்குறையாற் கவற்சிகொண்டிருந்தனள்.

இஃது இப்படியிருக்க அங்கு அச்சோதக்கரையிலிருந்து காதம்பரியாலனுப்பப்பட்டுச் சந்த்ராபீடன் வைசம்பாயனன் என்ற இவர்களுக்கு நேர்ந்த துக்ககரமான சம்பவங்களைக் கண்டு சகிக்கக்கூடாமை முதலிய பல காரணங்களால் மனவருத்தத்தோடு சரீர வருத்தமுங்கொண்டு வருகிற துவரிதகன் முதலிய தூதர்களை உச்சயினி நகரத்திற் கண்டோர் பலர்களும் அவர்களுக்கு எதிரிற் போய் "நண்பர்களே! நமது ராஜகுமாரன் எங்கே? மந்திரி குமாரனாகிய வைசம்பாயனன் எங்கே? தசவர்த்தனன், வீரசேனன், மிக்க பராக்கிரமத்தையுடைய சமரசேனன், அச்வபத்ரசேனன் என்ற இவர்கள் க்ஷேமமாக இருக்கின்றனரா? வாலவன்மாவுங் குமாரவன்மாவும் என்ன செய்கின்றனர்? என்ன சொன்னார்கள்? பலவழி

யாற் சென்ற இவர்களனைவரும் ஒன்றாகக்கூடினார்களா? இத்தனை நாள் தாமசத்திற்குக் காரணம் யாது? நீங்கள் அங்கிருந்து புறப்பட்டு எத்தனை நாட்களாயின? இவையெல்லாவற்றையுஞ் சவிஸ்தாரமாகச் சொல்லுங்கள்''எனக் கேட்டார்கள். அங்ஙனங்கேட்ட அவர்களுக்குத் துவரிதகன் முதலியோர் மறுமொழியொன்றுங் கூறாமல் மிகத் தளர்ச்சியுற்ற மனமுடையவர்களாய் வந்து கொண்டிருக்க, அப்பொழுது பெண்களுட் சிறந்த விலாசவதி தானிருந்த திருக்கோயில் முன்றிலின்கண் நின்றுகொண்டு, வருகின்ற துவரிதகன் முதலியோர்களுடைய முகக்குறி முதலிய துக்கத்தைத் தெரிவிக்கும் பல தன்மைகளைக் கண்டு, தன் புத்திரன் சந்த்ராபீடன் முதலியோர்க்கு என்ன விபத்து நேர்ந்ததோவென்று தன் மனத்துத் தோன்றிய துக்கத்தைச் சகிக்கக் கூடாமையால் தன்னுடைய சிவந்த கெண்டை மீன் போன்ற கண்களில் தண்ணீர் தளும்பவும், மனம் சோர்வடையவும், சிவந்த கால்கள் தடுமாறவும், சிறிது தூரம் நடந்து சென்று வாயைத்திறந்து கதறி, 'யெங்கள் வழியரசு எங்கே? எங்கே? சொல்லுங்கள்' என்று மிகப் பரிதபித்தனள். அதைக் கேட்டு அங்கு வந்துகொண்டிருந்த துவரிதகன் முதலியோர் சகிக்கக் கூடாமையால் தோன்றிய மனக்கிலேசத்தால் மிகவும் இளைத்து வாட்டமுற்று தத்தங்கண்களில் நீர் பெருக அதனைத் தேவி விலாசவதி காண்பாளாயின் அவளுக்கு அது அதிக துக்கத்துக்கு ஏதுவாமென்று நினைத்துக், கண்ணீரை மறைக்கத்தொடங்கித் தந்திரமாய்த் தரையின் மேல் தலையை வைத்து நமஸ்காரஞ் செய்தனர். அப்பொழுது விலாசவதி அவர்களை நோக்கி, "முன்னர் நீவிர் எழுந்து சந்த்ராபீடன் விருத்தாந்தத்தை விவரமாய்த் தெரிவியுங்கள்''எனத் துரிதப்படுத்த அதற்கு அவர்கள் அங்ஙனமே சொல்லத்தொடங்கி "அச்சோதக்கரையில் இளவரசாகிய சந்த்ராபீடன்'' என்றுரைத்துப் பிறகு நடந்த விர்த்தாந்தத்தை முழுதுஞ்சொல்ல நாவெழாமல் நிறுத்திவிட்டுத் துவரிதகனை நோக்கி, "துவரிதக! நீ முழுதுஞ் சொல்லு'' என்றுரைத்து அம்மட்டோடு மௌனமாய் நின்றுவிட்டனர். பின்னர்த் துவரிதகன் நடந்த விர்த்தாந்தத்தைச் சொல்லத்தொடங்குகையில்தேவி விலாசவதி அவர்களை நோக்கித் "தூதர்காள்! உங்களுடைய தன்மையை முழுதும் தெரிந்து கொண்டேன்; இனி நீங்கள் சொல்வதற்கும் நான் கேட்பதற்கும் என்னவிருக்கின்றது? ஒன்றுமில்லை''எனச் சொல்லிவிட்டு சந்த்ராபீடன் இறந்ததாகவே நிச்சயித்துக்கொண்டு,

"மின்னுமிடி யிடித்த தென்னே யென்னே
வேந்தர்குல மணிவிளக்கே வேந்த ரேறே
யென்னுயிர்க் கொருதுணையே யென்றன் வாழ்வே
யென்னுயிரே யென்னரசே யெதிர்ந்த போரிற்
பின்னுனி முன்னனுகு மவனே சந்த்ரா
பீடனெனுந் திருநாமம் பெற்ற கோவே

அந்நாளே துன்னிமித்தஞ் சொல்லக் கேட்டு
மறிந்திலையே'' யென்று

இவ்விதமாகப்ரலாபித்து வாய்விட்டுக்கதறியழுதனள். இங்ஙனம் அழுத அவ் வழுகுரல் ராஜகாரியங்களைக் கவனித்துக்கொண்டு தனக்குரியவிடத் தில் இருந்த அரசன் தாராபீடன் செவிகளிற்சென்று தாக்கலும அதனை அவன் புத்ரசோகத்தால் ஆற்றாத் தன் பட்டமகிஷியினுடைய அழுகுர லெனத் தெரிந்து திடுக்கிட்டு, உடனே புத்தி சாதுர்யத்தையுடைய தன் மந்திரி ஆரிய சுகநாதனுடன் இளமை பொருந்திய ஒரு பெண் யானையின் மேலேறிக்கொண்டு தேவி விலாசவதி யிருக்குஞ் சப்தமாதாக்களுடைய திருக்கோயிலுக்குச் சென்றனன். அப்பொழுது அந்நகரத்தவரனைவரும் அவ்வழுகுரலைக்கேட்டு இஃதென்ன விபரீதமோவெனத் தத்த மனத்துட் கொண்ட கலக்கத்தால் மெய்ந் நடுங்கிக் கடல்முழக்கம்போல் பெருங் கூச்சலிட் டழுதுகொண்டு அந்த வுச்சயினி நகரமே புறப்பட்டுப் பின் றொடர்ந்ததுபோல அரசனைப் பின்றொடர்ந்து செல்ல அதைக்கண்டு அத் தாராபீடன் முன்னையினு மதிக மனக்கலக்க முடையனாகி மிகத்துரித மாய் யானையை நடத்தி வழிச்சென்று மிக்க சிறப்புடைய அத்திருக் கோயிலை யடைந்து யானையினின்று மிறங்கி யுள்ளேசென்று அங்கு விலாச வதி படுந்துயரத்தைக் கண்டு சகிக்கலாற்றாது வருந்தி, அவளைத் தன் னிரண்டு கரங்களாலு மெடுத்தணைத்துக்கொண்டு பல நயமொழிகளாற் சிறிது தேற்றி, மேலுங் கலக்கங்கொண்டிருந்த அவளை நோக்கிச் சிற்சில வார்த்தைகள் சொல்லத் தொடங்கினான்.

"பிரகாசிக்கின்ற ஆபரணங்களை யணிந்த பெண்மணீ! நீ கேள். நமது குமார ரத்னமாகிய சந்திராபீடன் உயிருடனிருந்தால் நாமும் உயிருடன் இருப்போம் இல்லையாயின் இறந்து படுவோம். இது திண்ணம். இதற்காக நீ கலங்குவது எற்றிற்கு? ஆதலால் இனி நீ உன்னுடைய மனக் கலக்கத்தையொழி. எல்லாம் விதிவசத்தால் வருவனவாம்; விதியை வெல்ல எவராலும் இயலாது. மேலும் சந்திராபீடன் நமக்குப் புத்திர னாய்ப் பிறந்ததனல் அனுபவிக்கவேண்டிய சுகானுபவங்களையெல்லாம் ஏற்கெனவே நாம் அனுபவிக்கவில்லையா? நாம் கண்டனுபவியாத சுகம் யாது? அவன் பிறந்து குழந்தைப்பருவமாக விருக்கும்போது அக்குழந்தை யினுடைய முகத்தைக்கண்டு மகிழ்ந்தோம்; சிரிப்பைக் கண்டோம்; பிறகு தவழ்ந்து விளையாடப் பார்த்தோம்; ஒவ்வொருநாளும் புல்லாங் குழல் யாழ் என்ற இவ்விரண்டினுடைய தொனியிலும் இனிய அவனு டைய மழலைச்சொல்லையுங்கேட்டு மகிழ்ந்தோம். பின்னர் அவன் யௌவ ன பருவமடைந்து இளவரசாகி, யிவ்வுலகத்தைப் பரிபாலித்த தன் மையையுங் கண்டு களித்தோம். இம்மட்டோ? அவனுடைய இக் விஜய வைபவத்தையும் கண்குளிரக் கண்டோம். உலகமுழுதும் அவ னைப் பெருமைப்படுத்திய பற்பல கலைகளையும் அவன் கற்றுத் தேர்ச்சி பெறவுங் கண்டோம். இன்னும் நாம் அவனைப் பெற்ற சுகம் கொஞ்சமா?

ஆனால் நாம் கண்டு களிக்காதது ஒன்றுண்டு. அதாவது, விவாகமாகிய நற் காரியம். அதனைக் காண்டற்குரிய தவம் நாம் முற்பிறப்பில் செய்திலேம் போலும். அங்ஙனம் கல்யாணஞ் செய்து அக்கல்யாணக் கோலத்தைக் கண்டு மகிழ்வதற்கும் வயோதிகத்தால் எனக்குச் சுமையாகவிருக்கிற கடல்சூழ்ந்த விந்தப் பூபாரத்தைப் பராக்கிரமத்தால் ஒரு ஆபரணத்தை யேற்றல்போல் சுலபமாய் ஏற்றுத் தாங்கவல்ல அவனுடைய தோள்களிற் சுமத்திவிட்டு பிறகு யாதொரு மாறுபாடுமின்றி வானப்பிரஸ்தாச்சிரமம் பூண்டு நாம் பிறவிப்பெரும்பயன் அடைவதற்குரிய தவத்தைச் செய்வதற் குப் புகலிடமாகிய சிறந்த காட்டுக்குப் போவதற்கு நினைத்திருந்ததுண்டு. 'ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்' என்ற ஆன்றோர் கூற்றுக் கிணங்க இப்பொழுது இவ்வண்ணம் வந்து சம்பவித்தது. நல்ல திருக்கட்டும்; மேலும் ஊழ்வினை கூட்டிவைக்கின்றபடி சுக துக்கங்களைக் கண்டு அனுபவிப்போமாக"என்று இவ்வண்ணமாக அரசன் சந்திராபீடன் தன் சரீரத்தைச் சிறிதும் பொருள் செய்யாமல் விரக்தனாய், பற்பல வார்த்தைகளைச் சொல்லித் தேவி விலாசவதியைத் தேற்றினான். அப் பொழுது அவைகளைக் கேட்டுக்கொண்டு பக்கத்திலிருந்தவர்கள் அங் குள்ள துவரிதகனைப் பார்த்து "துவரிதகா! நீ நடந்த விருத்தாந்தத்தை விவரமாய்ச் சொல்லக்கடவாய்" என்றனர்.

பிறகு துவரிதகன் "சந்தராபீடன் அச்சோததீரத்துக்குப் போய். அங்கு மந்திரிகுமாரனாகிய வைசம்பாயனனைக் காணப்பெறாது, தவஞ் செய்துகொண்டிருந்த மகாசுவேதையைக்கண்டு கேட்க, அவள் வைசம்பா யனன் தன்னைக் கண்டு மோகங்கொண்டு பலவாறு பிதற்றியபடியால் தன்னாற் சபிக்கப்பட்டு இறந்தனன் என்ற வரலாற்றைத் தெரிவிக்க, அதைக் கேட்டு நண்ப னிறந்த விசனத்தைச் சகிக்கக் கூடாமையால் இளவரசாகிய அவனுக்கு மனம் வெடித்தது" என்று நடந்த விஷயங்களைச் சொல்லிக் கொண்டு வருகையில் விலாசவதியோடு தாராபீடன் திடுக்கிட்டுத் துவரித கனை நோக்கித் "துவரிதகா! நீ சந்திராபீடனுக்கு மனம் வெடித்தது என்ற இக்கடுமொழியை சொல்லக் கேட்டும் இன்னும் நாங்கள் சாகாமல் உயிரு டனிருக்கின்றோம்; ஆதலால் மிகுந்த வன் னெஞ்சினையுடையேம்; எங்கள் மைந்தனோவெனில் மிக விளநெஞ்சன்; தன்னுடைய சிநேகனுக்கு நேர்ந்த தைக் கேட்டதும் இறந்துவிட்டனன். அந்தோ! இனி என்ன செய்வோம்" எனக் கூறிப் பிறகு மந்திரியை நோக்கி "மதிவல்ல சுகநாச! இனியொரு நொடிப்பொழுதுகூட உயிருடனிருத்தல் கூடாது. ஆதலால் இப்பொழுதே அக்கினிப் பிரவேசம் செய்வதற்கு நமது மஹாகாலராகிய சிவபெருமானு டைய திருக்கோயிலுக்குச் சமீபத்தி லொரு அக்கினிகுண்டத்தை யுண்டா க்கி யதில் பலவிதமான சமித்துக்களைக் கூட்டி யக்கினியை வளர்க்கும்படி திட்டஞ்செய்; நமது பொக்கிஷத்திலுள்ள திரவியமெல்லா மெடுப்பித்துத் தருமஞ்செய்" என்று இங்ஙனஞ் சொல்லிவிட்டு மூர்ச்சித்தனன். அப்பொ ழுது துவரிதகன் மிகுந்த துயரத்துடன் விலாசவதியையும் தாராபீடனை

யும் பார்த்து மிகவும் பயந்தவனாய் "நான் சொல்லும் சமாசாரம் முழுமையுங் கேட்டபின்ன ரன்றோ நீங்கள் வருத்தப்படவேண்டும்; அதை யொழித்திடையில் இங்ஙனம் வருந்துவதும் பலவிதமாய்ச் சொல்வதும் தகுதியல்ல; அன்றியும் மகாராஜனே! உம்முடைய புத்திரன் மனம் பிளந்தும், அவனது சரீரம் சவசரீரம் போல வாட்டம் முதலிய யாதொரு விகாரமுமில்லாம லிருக்கிறது. அதைப்பார்த்துத் தெளிந்து அங்குள்ளாரனைவரும் கவலையற்றிருக்கின்றனர். இவ்வாறிருக்க இதற்காக நீர் ஏன் துன்பம் உறுகின்றீர்? அக் கவலையை யொழித்துவிடும்; இனி வைசம்பாயனனுடைய பூர்வஜன்ம விர்த்தாந்தம் முதலியவெல்லாவற்றையும்செவ்வனேயென்னிடத்திற் கேட்டருளும்" என்று கிரமமாக நடந்த விருத்தாந்தங்களெல்லாவற்றையுந் தெரிந்த துவரிதகன் விவரமாய்த் தெரிவித்தனன். அதைக் கேட்டு அரசன் தாராபீடன் வாயாலொன்றும்பேசாமல் மந்திரி சுகநாதனுடைய முகத்தைப் பார்த்த வளவில் புத்திரசோக முதலியவற்றால் அரசனைப் போலவே துக்கித்துக்கொண்டிருந்த அச் சுகநாதன் ராஜன் துன்பப்படும் பொழுது அவனை யத்துன்பத்தினின்று நீக்கிக் காக்கவேண்டியது மந்திரியான தன் கடமையாதலால் தன் துயரி லொரு சிறிதும் வெளிப்படாமல் மறைத்துக்கொண்டு "ஹே ராஜதிலகா! முக்குண வசத்தால் அடிக்கடி பிறந்திறக்கும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் அன்றித் தாவரஜங்கமமாகிய சகலத்திற்கும் உலகத்தோர்களா லாராயத்தக்க புண்ய பாவங்கள் என்ற பகுப்பையுடைய ஊழ்வினைக்காரணத்தால் அவத்தை எதுதானுண்டாகாது? வினைவசத்தால் இங்ஙனந் துன்புறுவ திந்தக் கலியுகத்தில் மட்டுமா? கிருதயுக முதலிய நான்கு யுகங்களிலு மொருதன்மையாகவே அமைந்திருக்கின்ற தென்பதிற் சிறிது மையமில்லை. இதைப்பற்றி நானினிச் சொல்லத்தக்கதென்னே? அன்றியும் உள்ளே பிரவேசிக்கும்பொழுதே குடல் முதலியவற்றை வேகச்செய்கிற விஷத்தாலுங் கூரிய வாளாலும் வேலினாலும் உயிரிழந்துவிட்டவர்கூட பணி மந்திர ஔஷதங்களால் அப்படிப் போன வுயிர் வரப்பெறுகின்றனர். ஆதலால் இனி இதற்காக நீர் வருந்துதல் ஒழிக. சாபத்தாலிறந்த நம் புத்திரன் சந்திராபீடனுக்கு நிச்சியமாய் உயிர் வருமென்றே துணியக்கடவீர். சாபம் எப்படிப்பட்டவரையும் விடாது. பூர்வம் அகத்தியருடைய சாபத்தால் தேவேந்திரனும் பெரிய ஒரு மலைப்பாம்பானான். இஃதொன்றோ? திரிசங்குவும் குருசாபத்தால் சண்டாளனாகவில்லையா? பலவாறாகச் சொல்வானேன்? சகல லோகத்துக்கும் ரக்ஷகராகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் பிருகுமஹரிஷியின் சாபத்தால் பூலோகத்தில் வந்து தசரத சக்ரவர்த்திக்கும் வசுதேவருக்கும் புத்திரர்களாய் அவதரித்தன ரன்றோ? ஆதலால் சாபகாரணத்தால் சந்திரன் வந்து உமக்குப் புத்திரனானானென்பது உண்மையே. அது நிற்க, தேவரீருடைய தேவி விலாசவதியின் முகத்தில் சந்திர பிம்பம் வந்து சேரப் பார்த்ததுண்டன்றோ? மஹா பாபியாகிய யானும் என் மனைவியின் மடியில் புண்டரீகம் வந்துதங்கக் கண்டதுண்டு. ஆதலால் இவ்வுலகத்தில்

அச்சந்திரனும் புண்டரீக முனியும் வந்தவதரித்தனரென்பதுக்குச் சந்தேகமே இல்லை. இவன் சொல்லுகிறபடி இறந்ததுபோற் கிடக்கின்ற சந்திராபீடனுடைய சரீரம் மீட்டும் உயிர் பெறுமோ பெறுதோவென்று சந்தேகிக்க வேண்டாம். சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்கள் போன உயிரை அமுதத்தாலே மறுபடியும் வரப்பெறுகின்றனர். அக்காலத்தில் விஷ்ணுமூர்த்தியால் துணியுண்ட பாம்பின் இரண்டு துண்டங்கள் ராகுகேதுக்கள் என்னும் பெயருடன் உயிர்த் தெழுந்ததும் அந்த அமுதத்தாலேயன்றோ? அன்றியும் சந்திராபீடனைச் சந்திரனுடைய அவதாரமெனச் சொல்வதற்கு அமுதமயமாயிருக்கிற பிரகாசத்தைத்தருகின்ற அவனுடைய முகத்தாலும் சரீரவளத்தாலும், அழகிய பெரிய தகுதியாலும் கலைகளாலுமே காரணங் கண்டு கொண்டோம். அவனுக்குச்சம்பவித்த சாபம் போகிறவரையில் அவன் அங்ஙனம் அவ்விடத்திருப்பன். சாபவிமோசனமானதும் உயிர்த்தெழுவன். பிறகு அவ்வண்ணமெழுந்த சந்தராபீடனுக்குக் கந்தருவ ராஜபுத்திரியாகிய காதம்பரியை விவாகஞ்செய்வித்து மகிழ்ச்சியுடன் வாழக்கடவீர். ஆதலால் மன்னவ! இனி நீர் இதற்காக வருந்தற்க" என்று சொல்லிச் சமாதானப்படுத்தினன். பிறகு அரசன் தாராபீடன் "என்னுடைய மனோதுக்கம் இப்படியிருந்தால் அன்னம்போல்வாளாகிய விலாசவதி படுந்துயர் எங்ஙனமிருக்குமோ! அஃது அளவற்றதாகுமன்றோ? அற்றேல் இன்னும் நாம் இந்தப் பூலோகத்தில் சிறிதுகாலம் ஜிவித்திருக்குமாறு குழந்தையிருக்கிற அச்சோததீரத்துக்கு விரைந்து செல்லக் கடவோம்" என்றனன். அவ்வார்த்தையைக் கேட்டு விலாசவதியும் அவர்களை நோக்கி "இன்னும் பலபலவிதமாய்ப் பேசிக்கொண்டு இங்குக் காலதாமசஞ் செய்யாமல் இப்பொழுதே பிரயாணப்படுங்கள்"எனப் பணிந்து கேட்டுக்கொண்டாள். உடனே அரசன் தாராபீடன் சில சேனைகளோடு பிரயாணப்பட்டான். அதைக்கண்டுஅவன் பக்கத்திருந்த அரசர் பலரும் அத்துக்க சமாசாரத்தைக் கேட்டு சகிக்கக்கூடாமையால் நேரிற்போய் ராஜகுமாரனைப் பார்க்கவேண்டுமென்ற ஆதரத்துடன் அரசனோடு தாங்களும் புறப்பட்டனர். அங்ஙனம் சென்றவர் போதற்குரிய வழிதெரியாமல் மனங்கலங்கி நிற்கையில் துவரிதகன் வழிகாட்டி அழைத்துக்கொண்டுபோக, அவர்களுடன் அரசன் சந்திராபீடன் நீர்வளத்தால் அனவரதமும் அன்னப்பறவைகள் குடிகொண்டிருக்கும் அச்சோதத் தடாகத்துக்குப்போய்ச் சேர்ந்தனன பிறகு அரசன் துவரிதகனை யழைத்து, 'நீ முன்னர்ச் சென்று சந்த்ராபீடனுடைய நிலைமையை யறிந்து வா' என்றனுப்ப அவனும் சில சேனைகளுடன் புறப்பட்டுப்போய் முன்போலவே காதம்பரியால் பாதுகாத்துவரப்பட்ட சந்த்ராபீடனுடைய சரீர ஸ்திதியைத் தெரிந்துகொண்டு அங்கு அச்சரீரத்தைவிட்டுப் பிரியாமல் துயரத்துடன் பக்கத்திலேயே யிருந்த அரசர் பலரோடும் திரும்பிவந்து, தாராபீடனது இரண்டு சரணங்களிலுஞ் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ராஜகுமாரனுக்கு யாதொரு தவறுமில்லையென்ற க்ஷேமஸமாசாரத்தைத் தெரிவிக்கையில், பெண்ணன்னம்போல்

வாளாகிய தேவி விலாசவதி துவரிதகன் முதலியோரை நோக்கி, 'எங்களரசு எங்கே! எங்கே!' 'யெனப் பலதடவை அலறி வருந்த, அதைக்கண்ட அரசன் அவளுக்குப் பல சமாதானமொழிகளை யன்புடன் சொல்லிவிட்டு முன் வந்து தன்னை வணங்குகின்ற மேகநாதனை நோக்கி 'மேகநாதா! நீ அவ்விடத்திய சங்கதிகளை விவரமாய்ச் சொல்' என்று சொன்னான். மேகநாதனும் 'சந்த்ராபீடனுடைய வுடலுக்கொருகுறையுமில்லை; அன்றியும் அவனுடைய வுயிருக்கும் அது ஒத்ததாம், ஆதலால் இதற்காகத்தேவரீர் துன்புற்றுக் கவலைகொள்ளாதிருக்கக்கடவீர்' என்றனன்; என்றதும், வீரனாகிய அத்தாராபீடன் அந்த மேகநாதனுடைய வார்த்தையாலேயே மனவுறுதிகொண்டு தன் தேவியை நோக்கி 'விஷயம் இங்ஙனமிருக்கின்றது ஆதலால் நீ மனக்கலக்கத்தையொழி' யென்று சமாதானம் சொல்லி அவளைக் கூட வழைத்துக்கொண்டு புறப்பட்டு எல்லாராலும் புகழ்ந்து சொல்லத்தக்க தவத்தையுடைய பாவைபோல்பவளாகிய மகாசுவேதை வசிக்குமிடம் எது வென்று விசாரித்துக்கொண்டு அங்குப்போய்ச் சேர்ந்தான். தேவியுடன் அரசன் வந்ததைக் கண்ணுற்ற மகாசுவேதை 'ஐயோ! இவர்கள் இங்ஙனம் புத்திர சோகத்தால் மனக்கலக்கங்கொண்டு பரிதபிப்பதற்கும் அத்தகைய துன்பத்தை நான் காண்டற்கும் போகூழ் இருந்தவாறென்னே!' யென மிக மனம் வருந்திப் பின்னர் அவர்களைப் பார்க்கச் சகிக்காத துன்பத்தாலும், வெட்கத்தாலும் எதிர் நிற்கமாட்டாதவளாய்த் தான் இருத்தற்குரிய குகையினுட் புகுந்து மறைந்துகொண்டாள். அங்குப் பக்கத்திலிருந்த காதம்பரியும் அவ்வாறே அவர்களைக் கண்டதும் உண்டாகிய துக்காதிசயத்தால் மயக்கங்கொண்டு அவசமாயக் கீழேவிழுந்து மூர்ச்சித்தாள். அவர்கள் நிலைமை அங்ஙனமாக, மந்திரி சுகநாதன் மனக்கவற்சியுறுகின்ற அரசனை இவ்வாறு கவலைகொள்வது தகுதியன்று எனப் பல நீதிமொழிகளால் தேற்றி அங்குப் பின்றொடர்ந்து வந்துகொண்டிருந்த மற்றையோரையெல்லாம் அவ்விடத்திற்றானே நிறுத்திவிட்டுத் தானும் அரசனுமாகத் தனித்து ராஜகுமாரனுடைய சரீரம் இருக்கின்ற உள்ளிடத்திற் பிரவேசித்தார்கள். அப்பொழுது ராஜபத்னியும் மந்திரிபத்தினியாகிய மனோரமையோடு கூடவே யுட்சென்றாள். சென்றவள் பின்பு படுத்துக்கிடக்கின்ற சந்த்ராபீடனைக்கண்டு 'ஆ! ஆ! என் புத்ரனாகிய விவன் நான் இங்குவரப் பார்த்தும் எழுந்து என்னை வணங்கி யென்னுடன் ஒரு வார்த்தையும் பேசாமல் சிறிதும் மதியின்றி படுத்த படுக்கையிலேயே யிருந்து விட்டானல்லவா? என்ன காரியஞ் செய்தான்' எனத் தனக்குத்தானே சொல்லிக்கொண்டு, பிறகு இளவரசை நோக்கி "மைந்தா! உன் தந்தை வருகின்றார்; அவருடைய திருவடித் துணையை வணங்குவதற்குச் சீக்கிரம் நித்திரையைவிட்டு எழுந்திரு; வார்த்தையொன்றும் பேசாமல்இங்ஙனம் படுத்துறங்குகின்றனையே; களங்கமற்ற சந்திரன் போலுமுகத்தால் ஒரு வார்த்தைசொல்; நின் தந்தையும் நானும் செயலற்று மயங்குகின்றோம்; நீ நின் வாயைத்திறந்து வார்த்தை சொல்லக்

கேட்டு எப்பொழுது நான் தெளிவடையப்போகிறேன்; நின் தந்தையும் மயங்குகின்றார்; இவ்வாருக இக்கொடுஞ்செய்கை யுனக்குத்தகுமா?'' என்று இப்படி வாய்விட்டலறிக்கொண்டு பின்னர் மலையினின்று சொரிகின்ற அருவிநீரைப்போல் நெருங்கிய தன்னுடைய கொங்கைகளினின்று பால் வழிவதாலும் மனவருத்தத்தாற் சொரிகின்ற கண்ணீராலும் தன் புத்திரனுடைய சரீரமுழுதும் நனைந்து அழகுறும்படி அவனுடைய இரண்டு பாதங்களிலும் தன் தலையைச்சேர்த்து ஒற்றிக்கொண்டு தலையில் தன்னுடைய முகத்தைச்சேர்த்து உச்சிமோந்தனள்.

அப்பொழுது அருகிலிருந்த அரசன் தாராபீடன் அங்ஙனம் வருந்துகின்ற தன் மனைவியை நோக்கி 'நங்காய்! இனி நீ இந்தச்சோகத்தையொழித்துவிடு' என்று தேறுதல் சொல்லிவிட்டுத் தன்னுடைய இரண்டு கைகளாலும் மிக்கமேன்மையை யுடைய தனது புத்திரன் சந்திரா பீடனைத்தழுவியணைத்துக் கொண்டு 'கண்மணீ! யாது இங்ஙனம் நீ தனித்து நித்திரைசெய்வது? நின் நண்பனும் மந்திரியுமாகிய அந்த வைசம்பாயனன் எங்கே? எனது கேள்விக்கு மறுமொழியொன்றும் கூறுகின்றிலையே. இது தருமமா! நினது கோபத்திற்குபபாத்திரர்களாகிய விரோதிகளோடாயின் உரையாடாதிருக்கலாம்; நான் நினக்கு அதிக பிரியகாரனுகிய உன்னுடைய தந்தையல்லனே? ஆதலால் நான் கேட்டு மகிழும்படி யுன் வாயைத்திறந்து இனிய ஒரு வார்த்தை சொல்லுவாய்;' என்பான். பின்னும் மனைவியைத் தேவீ! இறந்துகிடக்கின்ற நம்முடைய குமாரனுடைய சவசரீரத்தையுற்று நோக்கினல் சிறிதும் வாட்டமின்றி விளங்குகின்றது. கண் முகம் முதலிய அவயவங்களும் நித்திரைகாலத்திற்போலச் செந்தாமரை மலரின் அழகைக் காட்டுகின்றன. ஆதலால் இனி இவனுக்கு உயிர் வருமென்றதில் ஐயமில்லை. மந்திரி சுகநாதனும் தேவியும் புத்திரசோகத்தாற் சகிக்கக் கூடாத துக்கத்தைக்கொண்டிருக்கின்றனர். அங்ஙனம் அவர் துயருறுவது தகாது. இனி நங்காய்! அவர்கள் உன்னுடன் சம்பாஷித்துச்சோகந் தணியுமாறு கருணையால் அவர்கள்பால் உரையாடுவாய். அன்றியும் உன் மகன் மனைவியாகிய காதம்பரி அப்பொழுது புத்ரசோகத்தால் மிக்க மனவருத்தத்துடன் வந்த நம்மைக்காணச் சகிக்கக்கூடாத துக்கத்தால் அந்தோ! மிக வருந்திக் கீழேவிழுந்து அவசமாயினள். அவள் மூர்ச்சை தெளியும்படி அவளுக்கு இனியமொழி கூறி, அவள் மகிழ்ச்சியுறும்படி செய்து அவளைத் தழுவிக்கொள்வாய்' என்று கூறினன். இங்ஙனம் அரசன் சொல்லக்கேட்ட, பசிய மயில் போலுஞ் சாயலையுடைய தேவி விலாசவதி மின்போன்ற காதம்பரிமேல் மிகுந்த அன்போடு அவளையெடுத்து மடியில் வைததுக்கொண்டு, 'இலக்குமிபோன்ற பெண்மணீஇ! உன்னை நாயகியாக அடையும்படிசெய்த உயர்ந்த சிறந்த தவமுடையவனுகிய ஒரு மகாபுருஷனைத் துன்பம் பாதிக்குமோ? பாதிக்காதன்றே! ஆதலால் நின்கொழுநன் விரைந்து உயிர்பெற்று எழுவன். நீ வருந்தாதே. நீயே யெங்களுக்குப் புகலிடம், பூர்வ புண்ணியத்தாலன்றி முயற்சியால் உன்னையடைய வல்லவர்

எவர்? ஒருவருமிலர். இனிமயங்காது தெளிவாய்;' என்று சொல்லி அவளுடைய உடலிலுள்ள அழுக்கைத் துடைத்துச் சமாதானப்படுத்தினள். அப்பொழுது மாமி விலாசவதி தன்னை மடியில்வைத்துக்கொண்டதும் பல இன் சொற்களாற் றேற்றியதும் முதலிய வொன்றுந்தெரியாமல் தரையிற் சாய்கின்ற காதம்பரியை தோழி மதலேகை அணைத்து நிறுத்திக்கொண்டு 'பூங்கொடிபோல்வாய்! நின் மாமியாரை இங்ஙனம் நமஸ்கரிப்பாய்' என்று கூற அவளும் 'பணிதா' வெனச்சொல்லி விலாசவதியின் பாதங்களைத்தொட்டு வணங்கினள். பின்னர் அரசன் தாராபீடனுக்கருகில் மெல்ல நடத்திக் கொண்டுபோய் இப்படிக்கொற்றவனுடைய திருவடியைப் பணிவாய் என்று சொல்ல அவளும் அங்ஙனம் வந்து பணிந்தனள். அப்பொழுது அவ்விருவரும் தங்களைப் பணிந்த காதம்பரியை நோக்கி, 'கண்மணீஇ! நீ, இங்ஙனம் நடந்து வந்தது மிக்க வனப்புடைய மயில் ஒன்று காண்பவருடைய மனத்தைக் கவருமாறு நடந்து வந்ததை யொக்கும். அன்றியும் இளவரசன் சந்த்ராபீடனுடைய உயிரைத் தரத்தக்க பெரிய தேவாமிர்தம் இங்கு உன்னுடைய கரதலங்களில் ஒழுகும்பொழுது நின்னை நிகர்ப்பார் இவ்வுலகில் எவரேனுமுண்டோ? மேலும் மேலும் நினக்கும் நின்கணவனுக்கும் க்ஷேமத்தைத் தரத்தக்க தவத்தை முயற்சியோடு செய்யும் நங்காய்! நீயொருகுறையுமின்றி நீடூழி வாழி,' என்று சொல்லி யாசிகூறிப் பின்பு தங்களுடைய ஒப்பற்ற புத்ரனாகிய சந்த்ராபீடனிடத்திற் சென்று அங்கு அவனுடைய சரீரத்தை யழகுதிருந்தத் தழுவிக்கொண்டு, இனி இங்கு நாம் செய்யத்தக்க காரியம் யாது? எதுவுமில்லை, யெனத் தங்களுக்குட் சொல்லிக்கொண்டு ஒரு பக்கத்திற் சென்று அங்கு விளங்குகின்ற ஒரு லதாமண்டபத்தை யடைந்து அதில் வீற்றிருந்தனர். பிறகு அரசன் தாராபீடன் தன்னுடன் ஆங்கு வந்திருக்கிற அரசரனைவரையும் தானிருக்கும் அக்கொடி மண்டபத்தில் வரவழைத்து இருக்கச்செய்து அவரைநோக்கி, 'மன்னர்காள்! இனி இங்கேதானே நாங்களிருக்கின்றோம். புத்ர சோகத்தால் வருத்தமுற்று இன்னணஞ்செய்தோமென நீவிர் நினையன்மின்; ஏனெனின்? இதற்குமுன்பே அங்கு நகரத்தில் நமது இளவரசன் சந்த்ராபீடனுக்கு விவாகஞ்செய்வித்து ராஜ்யபட்டாபிஷேகஞ் செய்து, பின்பு குறிப்பின்படி வானப்பிரஸ்தாச்சிரமம் பூண்டு காட்டுக்குச்சென்று தவஞ்செய்யத் தகுமென நினைந்திருந்தோம். ஊழ்வினைவசத்தால் அங்ஙனம் முடியாவிடினும் நினைத்தபடி இங்கிருந்து தவமேனுஞ்செய்ய நினைந்தோம்; ஆதலால் நீவிரனைவரும் உம்முடைய நகரங்களுக்குச் சென்று பகைவர் கையிற்படாமல் ராஜ்யபாரத்தை வகிக்கக்கடவீர்; இனி என்னுடைய வார்த்தைக்குத் தகாத மறுமொழி கூறற்க' வெனச்சொல்லி யிசையைச் செய்து அவர்களையனுப்பிவிட்டு அங்கு விலாசவதியுந்தானுமாகக்குறித்தபடி தவஞ்செய்துகொண்டிருந்தனன். அப்பொழுது அவர்கள் தவத்தை வருத்தமின்றி யினிது செய்துமுடிக்கும்படி மிக்க அன்புள்ள மகாசுவேதையும் காதம்பரியும் கொணர்ந்துகொடுத்த தங்கள் தேசத்து ஸாத்மீக ஆகாரங்களுட் சிலவற்றைக் கைக்கொண்டு

இடைஇடையே மைந்தன் சந்த்ராபீடனுடைய சிறந்த அழகையே பற்றிப் பேசிக்கொண்டு செய்யுந் தவத்திற்குரிய கடவுளை தியானித்து அவரிட திரு அருளினின்றும் மனத்தைப் பெயர்க்காமல் தவஞ் செய்துகொண்டிருந்தான்.

இங்ஙனம் இந்தவரலாறு முழுமையும் சொல்லிக்கொண்டு வந்த ஜாபாலிமகரிஷி, "ஆ! கெட்டேன்! இது வெகு அழகு! வெகு நேர்த்தி!" என்று சொல்லிச் சிரித்து முனி குமாரர்களை நோக்கி, "முனியீர்! உங்கட்கு நான் ஒன்றை சொல்லப்புகுந்து, வேறொரு சங்கதியையும் பரக்கக்கூறி விட்டேன்; கதையினுடைய ஸ்வாரசியமானது என்னை யிவ்வளவு தூர மிழுத்து விட்டது, ஆகையால் முன் புண்டரீகமுனிவன் மன்மத விகாரத்தா லீடுபட்டு இவ்வுலகில் வந்துசேர்ந்து மந்திரி சுகநாதனுக்கு அக்காரணத்தால் புத்திரனாய் வைசம்பாயனனென்று நாமத்தோடு பிறந்து, சிறந்த தவத்தினளான மஹாசுவேதையின் சாபத்தால் கிளியானான்" என ஜாபாலிமுனி சொல்லி முடிக்க, ஹே! ராஜகுமார! நான் இன்னும சிறு கிளியாக விருக்கும்போதே இந்த விருத்தாந்தங்களைத் தெரிந்துகொண்டேன். அப்பொழுதே சுவப்பனத்தில் கண்டவைகளை யொருவன் பிறகு ஜாக்கிரத்தில் தெரிந்து கொள்வதுபோல நான் முற்பிறப்பில் கற்றிருந்த வித்தைகளெல்லாம் என்னுவில் தாமே உண்டாயின. பேசுந்திறமையும் பெற்றேன். இதுமட்டோ? அன்று. மானிடசரீரமொழிய மற்றெல்லாவற்றையும் அம் முனிவரால்பெற்றேன்; வைசம்பாயனனு மானேன். மேலும் என் அன்புள்ள சந்த்ராபீடனிடம் பிரீதியையும் முடையனானேன். நேரிய ஆபரணங்களையுடைய மகாசுவேதையினிடத்தில் விசேஷ காதலையுங் கொண்டேன். இறகெழாத காரணத்தால் பறந்து அவர்களிருக்குமிடம்போய் அவர்களைக்கண்டு ஆனந்திக்க முடியாதேனாய் இருந்த இடத்திலேயே இருக்கவேண்டியவனானேன். எனினும் என்னைப்பெற்ற தாய் தந்தையரும், அரசன் தாராபீடனும் தேவி விலாசவதியும், தவத்தினளாகிய அழகுள்ள மகாசுவேதையும் மற்றுள்ளாரும் முந்திய பிறப்பில் சிநேஹிதனான கபிஞ்சலமுனிவனும் என்மனத்தை விட்டு நீங்கினரில்லை. அவர்கள் அங்கே என்னசெய்தார்களென்றும் என் மரணத்தைக்கேட்டு அக்கணமே நெஞ்சுபடீரென வெடித்து இறந்த சற்றேனும் வித்தியாசமில்லாத நண்பன் சந்த்ராபீடனுடைய ஜநந பூமி எங்கே என்றும் நான் இப்போது பறவையே யாயினும் என் அன்பனான மேன்மை பொருந்திய அவனைக்கண்டால் என்னெஞ்சிலுள்ள கொடுந்துன்பம் நீங்குமென்றும் மிக்க வருத்தத்தோடு நான் ஜாபாலிமுனிவரை வணங்கிக்கேழ்க, அவர் என்னை நோக்கி "இன்னும் செவ்வையாய் இறகு முளைக்கப்பெறாத நீ ஆங்குப் போகவோ இங்ஙன மென்னைக்கேட்டாய்" என்று மிகுந்த கோபங்கொண்டவர்போற் சொல்லித் திரும்பவும்என்னைப்பார்த்து "ஏ! வைசம்பாயனா! இப்போது நான் சொல்லிவந்த வரலாற்றால் நீ மிக்க துன்பத்தில் மூழ்கிவிட்டாய். கொஞ்சகாலம் பொருத்திருந்து நீ இதைப்பற்றி என்னைக் கேழ்ப்பாயாக", என்று சொல்லியருளினர்.

இவ்விதம் ஜாபாலிமுனியும் சொல்லிவிட்டு இருக்க, புத்திரன் ஹாரீதமுனிவன் அவரைநோக்கி, 'இப்படியானால் இக் கிளிக்கு இத்தவறுவந்த விதமென்ன? உயிர் போனதுக்குக் காரணமென்ன? அவை எனக்குத் தெரியவில்லை; ஆகையால் இந்த ஆச்சரியகரமான சந்தேகத்தைத் தீர்க்கவேண்டுமென வணங்கிக் கேட்டான். உடனே தந்தையும் ஹாரீதனை நோக்கி, 'புதல்வனே! நான் சொல்லக்கேள். காமவிகாரமடைந்த ஸ்திரீகளின் வீரியத்தால் இவ்வுலகில் பிறப்பவர் அக்காரணத்தால்நேரில்லா புத்தியுடையராகி ஆயுளுங்குறைந்து சரீரவாட்டமும் அடைவர். இது உலகத்தில் எவருக்கும் ஒத்ததேயாகும். இவன் அவ்வண்ணம் ஜனித்தவனாகையால், காமவிகாரத்தால் கொடுந்துயரடைந்தான்; அல்பாயுசு மடைந்து, இடையே நேர்ந்த விபத்தினால் இறந்தான். இவனுக்கு நேரிட்ட சாபம் நிவர்த்தியானால், முந்திய ஜன்மபுண்ணிய விசேஷத்தால் வாழ்வும் உண்டாகும். நெடுங்காலம் ஜீவித்துமிருப்பான்.'' என்றுசொல்லக்கேட்டு, ஓ மஹாராஜனே, நான் எழுந்து வணங்கி நின்று, "ஸ்வாமி! தாம் இப்பொழுது சொல்லி வந்த விதம் வெகுசரியாயிருக்கிறது; மானிட ஜன்மமல்லாத திரியக் யோனியில் பிறந்து வாழ்வது பெருத்த தவறு, அதில் நீண்ட ஆயுளைப்பெறுவது அதிக கொடிது, ஆகையால் எனக்கு எவ்விதத்தில் நற்கெதி கிடைக்கும், எல்லாமறிந்த தாம் எனக்குச் சொல்லவேண்டு'' மென்று கேழ்க்க, அதற்கு அவர் "இதையும் பின்பு சொல்வோம்; இப்போது விடியல் நேரம். சந்திரபிம்பம் அழுக்கடை கண்ணாடிபோல் ஒளியற்று இருக்கிறது. கூடுகளில் பறவைகள் சத்தமிடுகின்றன. ஆதலால் நாம் போய் அனுஷ்டானம் செய்து வருவோம்'' என்று சொல்லி எழுந்து சென்றனர். இது கேட்டிருந்த முனிகுமாரரும் மன நொந்து, தங் கண்களிலிருந்து கண்ணீர் வரவும் கேட்ட இவ்வரலாற்றிலேயே மனமுடையராய் தாமும் நியமம் செய்ய எழுந்துவிட்டனர். அப்பொழுது என் பேரில் அன்புள்ள ஹாரீதமுனிவன் என்னைத் தன்னுடைய இருப்பிடத்தில் வைத்துவிட்டுத் தானு மம்முனிகுமாருடன் சென்றனன். எனக்கோ எவ்வித சந்தோஷமும் உண்டாகவில்லை, நற்கெதியடையக்கூடிய நல்ல ஜன்மத்தையும் ஒழித்தேன், பாபகிருத்தியத்தையே பிரயத்தனத்தோடு செய்தேன்; இப் பிறவியினால்யாதொரு குணமுமில்லையாகையால் உயிர்விடுவதே நலமெனத் துணியுங்காலையில் ஹாரீதமுனிவன் திரும்பவும் உள்ளே வந்து, என்னை நோக்கி. "உனக்கு க்ஷேமகாலம் வந்தது. முன்ஜன்மத்தில் உன் சிநேஹிதனை கபிஞ்சலமுனிவன் இதோ வந்து என் தந்தைதாள்பணிந்து அங்கே இருக்கிறான்'' என்று சொன்னான். அப்போது நான் அக்கபிஞ்சலனைக் காணவேணுமென்று நான் பறக்க எத்தனப்படுமுன் ஹாரீதமுனிவன் என்னை எடுத்துப்போய் அக்கபிஞ்சலன்முன் வைத்தான். அக்கபிஞ்சலன் ஆகாயத்தினின்றும் இறங்கிவருதலினால் அவனுடைய சடைகள் அவிழ்ந்திருந்தன. சரீரம் வெம்பியிருந்தது; உத்தரியம் நழுவவுற்றது; சரீரத்தில் வெயர்வு இருந்தது; இளைத்துமிருந்தான்; அவன் மனநடுக்கமுற்று மிகுந்த விசாரத்துடனு மிருந்தான். இங்கிலையி

விருந்த அக் கபிஞ்சலனைக் கண்டு நான் "இவ்வுலகில் பிறந்து உனக்கு என்னால் செய்யத்தக்கது ஒன்றுமில்லையே; நீவரும்போது உன்னை நான் எதிர்கொண்டு வந்து நம்மிருவருடைய துன்பமுந்தீர என்னிருகைகளாலும் உன்னைத் தழுவிக்கொள்ளப் பெற்றிலேன்; உனக்கு ஆஸனங் கொடுத்து இருக்கச் செய்து என்னுடைய பெரிய கைகளால் உனது இளைப்புற்ற சரீரத்தை நோவுதீரப்பிடிக்கப்பெற்றிலேன்; ஆதலால் பெருத்த பாபியானேன்" என்று சொல்லி நான் வருத்தப்பட இதுகேட்ட அக்கபிஞ்சலனும் மனமுருகினான். தன் தலைமேல் என்னை வைத்துக் கொண்டான்; மார்பிலும் அணைத்துக்கொண்டு விசனப்பட்டான். அப்பொழுது நான் கபிஞ்சலனைப்பார்த்து, "நண்பா! இந்நிலைமையில் இவ்வளவு துன்பம் உனக்கு ஏன்? உன் சிநேஹிதன் விஷயத்தில் உனக்கு இவ்வளவு விசாரம் போதும், நீ இப்படி தனியே இருத்தல் தகாது, உன் மனதிலுள்ள சோகத்தைக் கொஞ்சம் தணித்துக்கொள், என் தகப்பனாரான சுவேதகேது என்விஷயத்தில் என்ன சொன்னார்? நான் மறுபடி ருஷிஜந்மமடையத்தக்க நற்காரியங்கள் ஏதேனும் செய்தேனில்லையே" என்று சொன்னேன். அதற்கு கபிஞ்சலன் "இது விஷயம் எல்லாம் நன்றாய் தெரிந்துகொண்டு நம் ஐயர் சுவேதகேது இவைகளுக்கெல்லாம் தக்க சாந்திசெய்ய முன்னமே தொடங்கிவிட்டார். நான் அக்காலையில் சாபத்தால் அடைந்திருந்த குதிரை ஜன்மத்தைவிட்டு வணக்கத்துடன் அவரிடம் சென்று நமஸ்கரித்து நின்றேன். அவர் என்னைப் பார்த்து என்னை அழைத்து 'கபிஞ்சல! உன் சிநேஹிதன் கெடுதிகள் அடையாவண்ணம் முன்பே நான் சாந்திசெய்யாத குறை ஒன்றுண்டு; அதனால் அவன் பசியகிளியானான்; இப்போதய நிலைமையில் அவன் எதையும் அறியத்தக்கவனல்லன்; இங்கு நீ இரு; இனிமேல் நன்மைகள் உண்டாகும்' என்று சொல்லி என்னை சிலகாலம் தன்னிடம் வைத்திருந்து, 'இன்று விடியற்காலத்தில் ஜாபாலி ஆச்சிரமத்தில் அந்த மஹா புருஷனுடைய சொல்லைக்கேட்டு அவருடைய ஆச்சிரமத்தில் அவனுக்கு ஞானமுண்டாகியிருக்கிறது, நீ அங்கேபோய் அவனைக் கண்டு நாம் அவனுக்கு ஆசீர்வாதம் செய்தோமென்றும், அவனுக்குச் சாபவிமோசனமாகும் வரையில் அந்த மகானுபாவன் ஜாபாலியினுடைய ஆச்சிரமத்திலேயே இருக்கச்சொன்னோமென்றும், அவனுடைய அன்புள்ள தாயாரும் இவ்வண்ணமேசொல்லி, புத்திரன் விஷயமான வருத்தத்தால் துக்கமடைந்தாளென்றும், உன் உச்சியைமோந்தாள் என்றும் சொல்லு' என்று சொன்னார்" என கபிஞ்சலன் மொழிந்தான். இங்ஙனம், அந்த சுவேதகேது சொல்லி வெளியிட்ட சங்கதிகளை என்னிடம் தெரிவித்து கலக்கமுற்ற தன்மனத்தையும் சிறிது தேற்றிக்கொண்டு பரிதபித்துக் கொண்டிருந்த கபிஞ்சலனை நான்பார்த்து, "உனக்கு இது விஷயமாய் நான் என்ன சொல்லப்போகிறேன்; என்னொருவன் நிமித்தமாய் நீகுதிரையாய்ப்பிறந்து சரீரத்தை வருத்தி அலைந்தாயன்றோ' என்றேன். இப்படி நானும் கபிஞ்சலனும் பலபடியாய்ப் பேசிக்கொண்டு அன்று கிருபையால் ஹாரீதன் எங்களுக்குக் கொடுத்த உணவையு முண்டு

கூடி அங்கிருந்தகாலத்தில், அவன் என்னை நோக்கி "நண்பா! உனக்கொரு நல்வார்த்தை சொல்கிறேன் கேள், இந்த ஆச்சிரமம் உனக்கு நன்மை பயக்கக்கூடியது. ஆகையால் நீ இதுவிட்டகலாது இங்கேயே இருப்பாயாக" என்று சொல்லி அவன் என்னைவிட்டுப்போனான்.

பின்பு ஹாரீதன் என்னை அன்புடன் வளர்த்துவர அங்கேயே இருந்துவந்தேன். கொஞ்சநாட்சென்றபின்பு, சந்த்ராபீடனுடைய பிறப்புமுதலியவற்றை நான் அறியுமுன்னமேமஹாசுவேதையினிடத்திற்குப்போவதே உசிதமானதென்று நினைத்து, அவளிருக்கும் உத்தரதிசையை நோக்கி விரைந்து பறக்கலானேன். இதற்குமுன் பறந்து வழக்கமில்லையாகையால் தேகபலம் குறைந்துபோய் ஒரு நாவல் மரத்தில் விழுந்து, அதிகவருத்தத்தினல் தளர்ந்துபோய் சமீபத்திலிருந்த குளிர்ந்த நீரோடையிலிருந்த அன்றலர்ந்த புஷ்பங்களிலுள்ள தேனை நுகர்ந்தும், தெளிவான குளிர்ந்த ஜலத்தைக்குடித்தும் வாசனையுள்ள தாமரைக் காய்களைத் தின்றும், சிரம பரிகாரமுற்று அங்கு நின்று மகன்று, மாலைப்பொழுதில் ஒரு சோலையில் நான் தங்கினேன்

பின்பு என் விஷயத்தில் விரோதசித்தமும் தீப்போன்ற கண்ணும், தழும்பேறின உடலும் உடையவன் ஒருவன் கையில் நான் அகப்பட்டு, அவனிடத்திலிருந்து தப்பித்துக்கொள்ள எண்ணங்கொண்டு அவனைநோக்கி "என்னை விட்டு விடு; என்னால் உனக்கு என்ன பயனென்று நினைத்து நீ பிடித்தாய்" என்று அவனை இரந்து கேட்டேன். அதறகு அவன் "உன்னைத்தின்னும் பொருட்டுமன்று, விலைப்படுத்தி பொருள் சம்பாதிக்கவுமல்ல; உன்னுடைய உயிருக்கு ஒருசேதமு வராது; ஆகையால் உனக்கு மனவருத்தம் வேண்டாம்" என்றான். மறுபடியும் நானவனைப்பார்த்து "அப்படியானல் என்னைக்கொண்டுபோய் நீ அடைவதென்ன" வென்று கேட்டேன். அவன் அதற்கு "ஏற்றதாய் நலல ஞானமும் தெளிவான சொல்லும் உள்ள கிளி ஒன்றிருப்பதாகவும் அது ஒரு ரிஷியின் ஆச்சிரமத்திலுள்ளதென்றும் கண்டோர் சொல்லக்கேட்டு, என் எஜமானனுடைய குமாரத்தி தான் அக்கிளியை பார்க்கவேணுமென்று சொல்லி அங்குள்ள ஸேவகரை அக்கிளியைக்கொண்டுவரும்படி அந்த ஆச்சிரமத்துக்கு அனுப்பினள். நான் ஒருவன் நீங்க, மற்றோர் அவ்வாச்சிரமத்துக்குச் சென்றனர்; நான்மட்டும் அவர்களுடன் செல்லாமல் இந்த அழகான வனத்துக்கு வந்தேன். நீ என் கையில் அகப்படும் பாக்கியமும் பெற்றேன். கிளியே! நான் இனி உன்னை விட்டுப்போகத்தகாது. உன்னை விட்டுவிட என் எஜமானியே உரியள்" என்றான். அவனப்படிச் சொல்லக்கேட்டு, நான் "ஐயோ! நம் தாயோ தேவாசுரர் வந்து வணங்க வீற்றிருக்கும் தாமரையாள்; தந்தையோ, தபோநிதியான அந்த சுவேதகேது; நானோ கீர்த்திபெற்ற புண்டரீகன்; என் தலைவிதி நான் அந்த தேவலோகத்தைவிட்டு இந்த ஈனர்களின் இத்தலத்தில் வந்தடைந்து வசிக்கச் செய்தது," என்று நினைத்துக்கொண்டு, என்னுடைய தாய் தந்தையரையும் அன்பனை கபிஞ்சலனையும் தியாகித்து

அவர்கள் இன்னமும் என்னிடம் வந்து எனக்குகிருபைசெய்யாதது என்ன காரணமோ. இவன் சொன்ன வார்த்தைகள் விசித்திரமானவை, என்று எண்ணி என்வினையை நொந்து பின்னர் அந்த மூர்க்கனை நோக்கி 'நீ என்னை விட்டுவிடு, இதையார் அறிவார்' என்றேன். இப்படி யான் சொல்லக்கேட்டு அவன் என்னைப்பார்த்து "மூடா! நீ என்ன அறிந்தாய்? நாம் பேசுவதை பிறர் அறியாராகிலும் இந்திரன், வருணன், இயமன், குபேரன், சோமன், என்கிற பஞ்சலோக பாலகர் அறிவாரன்றோ? ஆகையால் நான் உன்னைப் பார்த்தும் பார்க்கவில்லையெனின் அது பொய்யாம். இனி யான் செய்யத் தக்கது வேறு என்ன விருக்கிறது" என்று சொன்னான். அதற்கு நான் அவனை நோக்கி "முனிகுமாரனை எனக்கு ஒரு விஷயத்தில் ஆசையுண்டு என்னை விட்டுவிடு" என்று இரந்து கேட்டேன். அப்போதும் அவனுக்கு சிறிதும் கருணையுண்டாகாமல் என்னை யெடுத்துக்கொண்டு போகையில், வலையை விரித்து, மான் முதலிய மிருகங்களை நிற்கவொட்டாமற்றுரத்து வாரும், அவைகளை அம்பாலெய்வாரும், வில்லை வளைத்தோடுவாரும், நாலா பக்கங்களிலுமோடித் திரியும் வேட்டை நாய்களைக் கூட்டி அந்த மிருகங் களின் மேல் ஏவிக்கொலைச்செய்யத் தொடங்குவாரும், சந்தோஷத்தால் கூச்சலிடுவாரும் நிறைந்துள்ள காட்டைக் கண்டுபயந்தேன். அப்பால் சிறி துதூரம் சென்றதும் அங்கு முன் வேட்டையிற் கொன்ற மிருகங்களின் மாமிசத்தை சுடுபவரும், சுட்டவற்றைத் தின்பவரும், அந்த மிருகங்களின் சரீரத்தை யழிக்காமல் சாவதானமாய் வைப்பாரும், எஞ்சியவைகளைக் கொண்டு போவாருமான நீசர் நிறைந்துள்ள இடங்கள் என்முன் தோன்ற நான் அவைகளையும் பார்க்கநேர்ந்தது. என்னை எடுத்துப்போன புலையன் இத்தகைய பறைச்சேரியில் புகுந்து முன்பு என்னைப்பற்றிக் கொணரும் படி தன்னை யேவிய நங்கையின் பாதத்தில் வணங்கி "அன்னமே! இது நான் முற்பிறப்பில் செய்திருந்த தவத்தால் எனக்கு வாய்த்தது, இது சாதாரணமான கிளியல்ல, ஆசைப்பட்டுச்சம்பாதித்துக் காப்பாற்றி வைத் துக்கொள்ளத்தக்க அரியபொருள்" என்று சொல்ல, அவள் அதைக்கே ட்டு, தன்கையால் என்னைவாங்கி, தன்மனத்தில் ஏதோ ஒன்றை உன்னி என் முகத்தைப் பார்த்து, "மகனே வந்து சேர்ந்தனையா? சந்தோஷம்; உன் மனக்கருத்தை யான் தொலைப்பேன்" என்று சொல்லி தூர்க்கந்தமா னதும் வன்மையுடையதும் இன்னும் உலராது பச்சையாயிருந்ததுமான தோல்வாரினுல் செய்திருந்த ஒரு கூட்டில் என்னை அடைத்து தான் தனி யாய் இருந்துகொண்டு என்னைப் பார்த்து "அடா! துஷ்டா! முன்னுள்ள அந்த நினைவை விட்டு விடு. இனி அதைநினையாதே" என்று ஒரு உபதேசவார்த்தை சொன்னாள்.

பிறகு அச்சேரியிலுள்ள சண்டாளர்கள் கள்ளைக் குடித்தும், புலா லைத்தின்றும், சரீரத்தைவருத்தி கீழேவிழுந்தும், எழுந்தும், அச்சேரியில் அடிக்கும் பறையொலிக்கொப்பக் கூத்தாடியும், ஒருவருடைய துணியை மற்றொருவர் பற்றியிழுத்தும், ஒருவர்மேலொருவர் கோபத்தோடு விழுந்

தும் உழல்கிற அவர்களது ஆபாசச் செய்கைகளைக் கண்டும் அக்கணமே உயிர் துறந்தேனுமில்லை, அவர்களை நோக்கி ஒன்றுசொல்லத்துணிந்தேனு மில்லை. அப்போது நான் "ஐயோ! ஆதியில் நான் தெய்வலோகத்தில் பிற ந்து, மேன்மையுடையோனாய் உத்தம தபோதனருக்குப் புத்திரனுமாகி, பிறகு இப்பூலோகத்திலும் பிறந்து அதன் பின் காட்டிலுள்ள கிளிஜன்ம முமெடுத்து, ஈனசாதியால் தீண்டப்பட்டு, நெருக்கிக்கட்டப்பட்ட தோல் வார்க்கூட்டிலுமடைபட நான் என்ன சங்கையில்லாப் பாவத்தைச்செய் தேனோ 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்'என ஆன்றோர் மொழிந்த படி உலகத்தில் பிறத்தலைவிடத் துன்பந்தரத்தக்கது வேறில்லை" என்று நினைத்து என்னுயிரை யன்றே மாய்த்திருப்பேன். ஆனாலது தருமமல்ல வென்பது ஆன்றோர் சொல்லாகையால் என் பிராணனைக் காக்கும் பொரு ட்டு, நீசர்கள் கொடுத்துவந்த காய் கனிகளை மாத்திரமே நுகர்ந்தும் பசு வின்பாலைக் குடித்து முயிருற்று இருந்தேன்.

இங்ஙனம் சில நாட்சென்ற பின் ஒரு நாள் கண்கட்டு வித்தைபோல் ஒரே நிமிஷத்தில் நான் இருந்த வார்க்கூடும் பொன்கூடாகி, நானிருந்த பிரதேசமும் பொன்னுலகாகி, என்னிடத்தில் அன்புவைத்த அப்பெண் ணும், ஏ! அரசனே! நீ இப்பொழுது கண்டபடி அத்யத்புதமான அழகிய ஓர் பெண்மணியுமாகி, என்னை இங்கு நின் சபைக்குக் கொண்டுவந்தாள். நானும் இவ்வாச்சரியத்தைக் கண்டேன்.

இவ்வண்ணமாக வைசம்பாயனன் சொல்லிய எல்லாவற்றையும் கேட்டு அரசனான சூத்திரகன், அந்தச் சண்டாள கன்னிகை இருக்குமிடம் போய் அவளை யழைத்துவரச்சொல்லி சேவகனை அனுப்பினான். அவ்வா றே அவளும் ஸேவகனுடன் இராஜ சமுகத்துக்கு வந்துசேர்ந்தாள். அவ் விடத்தில் அரசனை அவள் கொஞ்சமும் மதிக்காமல் தன்னுடைய சுயமான தேஜஸ்ஸுடன் அரசனுடைய முகத்தை நேரேபார்த்து "வாராய் சந்திரா! ஏ அரசே! ஏ காதம்பரி நாயகா; நான் சொல்வதைக்கேள், இப்போது சூத்திரகனான நீயே, சந்திராபீடன்; இவ் வைசம்பாயனனான கிளியே புண்டரீகமுனிவன்; உங்களிருவருக்கும் இவ்வுலகத்தில் இதுவரையிலும் நேர்ந்த துன்பங்களுக்கு அளவேயில்லை, இவ் வைசம்பாயனன் இப் பிறப்பி லும் பிதாவின் சொற்கேளாமல் காமுகனாய் தபசு செய்துகொண்டிருக்கிற அந்த மஹாச்சுவேதையிடத்துக்குப் போகநினைத்து இவ்வளவு துக்கம டைந்தான். இத் துன்பத்தை யவன் அனுபவிக்கச்செய்து பின்பு அவனை அதினின்றும் விடுத்து காப்பாற்றும் பொருட்டு இவனுடைய பிதாவான சுவேதகேதுமஹரிஷி, இவை யெல்லாம் முன்னமே யறிந்து என்னைநோக்கி 'நங்காய் அந்த உன்னிட புத்திரன் இன்னும் அடங்காமல் முன்போலவே காமுகனாய் மஹாச்சுவேதையிடம் ஏகுகின்றான். நீ முன்னர்ச் சென்று அவனுக்குச் சாபநிவாரணமாகும் வரையில் அவனைக்காப்பதற்கு நீபூலோ கத்திற்குசெல்'' லென வெனக்கு ஆஞ்ஞைசெய்ய நானும் அங்ஙனமே இங்கு வந்தேன். இவ் வைசம்பாயனனுடைய தாய் நானே. எல்லாரா

லும் தியானிக்கப்படுகிற திருமகளும் நானே. இவனை நான் ஒரு பறைச்சியாக இருந்து துன்பப் படச்செய்தேனும் நானே, இதுவே உங்களுக்குச் சாபவிமோசனகாலம்; மேலால் உங்களுக்கு மங்களம் நான் உண்டாக்குவேன்'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்தபடியே ஆகாயமார்க்கத்திற் சென்றாள்.

பிறகு அவ்வார்த்தைகளைக் கேட்டிருந்த சூத்திரகமஹாராஜனுக்குக் காதம்பரிபேரில் நினைவுண்டாக மன்மதன் அவனுடைய சரீரத்தை இலக்காகவும் காதம்பரியை அம்பாகவும் கொண்டு தன்னுடைய கையிலுள்ள கருப்புவில்லை வளைத்து பாணப்பிரயோகஞ்செய்ய அதனால் மேன் மேலும் விரகதாபமுண்டாகி சூத்திரகனை வருத்தியது. அவனிடத்தில் அன்புள்ள பலரும் அவனைச்சூழ்ந்து அவனது தாபத்தைக் கண்டு வருந்தி வாழைக் குருத்துகளாலும், தாமரை வளையங்களாலும், குளிர்ந்த நீர்த்துளிகளாலும், பச்சைக்கற்பூரப் பொடிகளாலும், மலர்ந்த குவளைமலர்களாலும், செங்கழுநீர் மலர்களாலும் சைத்யோபசாரங்கள் செயது முன்பே எரியு நெருப்பில் நெய்யிடுவாரைப்போல விரகதாபத்தை விருத்திசெய்தனர். காமாக்கினியால் அரசன் சரீரத்திலுண்டாகும் வெயர்வை யெல்லாம் ஒரு பச்சைமரம் நெருப்புப்பற்றி எரிகையில் அம்மரத்தினின்றும் வெளிப்படும் நுரையைப்போலிருந்தது. அவனுடைய மேனியில் தைத்த மன்மதபாணங்கள் வரிசையாக முளையறைந்ததுபோல் அவனைக்கிடத்த அதனால் அவன் அவயவங்கள் அசைவுறவில்லை. அப்பொழுது அவனுடையசரீரம் அசைவற்று அவசயமாய்க் கிடத்தலைக்கண்டு அங்குள்ளோர் பலரும் தத்தம் கண்களில் நீர் சொர அங்கிருந்த கிளியான வைசம்பாயனனை நோக்கி "இப்படி எங்கள் அரசனை நீயே கெடுத்தாய்'' என்று கடுந்து கூறினர். அந்நிலையில் மஹாக்சுவேதை காரணமாக அந்த வைசம்பாயனனுக்கும் அந்த அரசனைப்போலவே உண்டாயிற்று. அவன் மூர்ச்சித்தான். இவைகளைக்கண்ட அங்குள்ளோர் "ஓ! விதி கொடியது கொடியது'' எனப்பரிதபித்தனர். உள்ளடங்கிய காமாக்கினியால் அவ்விருவருடைய சரீரங்கள் சுட ஆரம்பித்த தன்மை இருவருக்கும் ஒரேவிதமாய்க் காணப்பட்டது. அப்பொழுது வசந்தகாலம் தோன்றி இளந்தென்றலால் அசோகமரங்களும் மாமரங்களும் முன் வாடியிருந்த தன்மை மாறி தளிர்த்தன. குராமரங்கள் புஷ்பித்தன. இத்தகைய வசந்தகாலத்தில் இவ்வுலகத்திலுள்ள ஆடவர் மகளிர்என்ற இருதிறத்தாருக்கும் மன்மதன் இன்பத்தை விளைக்க அவர்கள் அதிக காமுகராகி இது சிறந்த சுககாலமென்று மன்மதனுக்கு உயர்ந்த பொன்னாலாகிய மகுடஞ்சூட்டி சந்தோஷிக்கையில் ஒருநாள் காதம்பரி, சந்திராபீடனுடைய சரீரத்தின் பக்கத்திற் சென்று மாலைக் காலத்தில் அச்சோத சரசிலுள்ள இனிய நீரால் அவனுக்கு நீராட்டி அழகிய புஷ்பங்களையுஞ் சூட்டி புனுகு சந்தன முதலிய வாசனை திரவியங்களைப் பூசி பிறகு தானும் அவ்வாறே அலங்காரம் செய்துகொண்டு மன்மதனுக்கு உற்ற பூசைசெய்து சுற்றுநோக்கி இடம்பார்த்து மெல்ல மெல்ல ஒவ்

வோரடியாய்ச் சென்று நினைந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு சரீரத்தில் புளகமுண்டாகப்பெற்று இனிய நடுக்கத்தோடு மயங்கி நிற்க, அதை மன்மதன் அறிந்து தன் பாணங்களை அவள்மேல் அளவற ப்ரயோகிக்கச் சகிக்காதவளாய்ச் சந்திராபீடனுடைய சரீரத்தின்மேல் வீழ்ந்து அவனுடைய மலர் மாலையணிந்த மார்புடன் ஆலிங்கனம் செய்ய அந்நிலையில் அவனுடைய பிராணனும் தாமஸமின்றி வந்து அவன் மனத்துட்புகுந்து கிரமமாய் அவனுடைய அவயவங்கள் எல்லாவற்றுள்ளும் பரவிவர அவன் அறிவுடையனாகி அவளைத்தழுவ, அதனால் இருவரும் மிக்க ஆநந்தத்தையடைந்து பூரண சந்திரனும் அவனைக்கண்ட குமுத மலரும்போல ஆனந்தித்தனர். அப்பொழுது அவளுக்கு பெண்மைக் குணங்களான நாணம் முதலிய நாற்குணங்களும் தோன்ற, அதனால் அவள் நாணி நிற்க, அதனைச் சந்திராபீடன் கண்டு, அக் காதம்பரியை நோக்கி, "நங்காய்! நீ பயப்படாதே நான் உன்னாலே என்னுடைய போன பிராணனை மீட்டும் வரப்பெற்றுச் சிறப்புற்றேன். முன்பே நான் அசரீரியாய் இது நமது சரீரம் நின்னுடைய கரத்தினின்றும் வழிகின்ற அமிர்தத்தால் இன்னும் சில காலத்தில் மீட்டும் உயிர் பெற்றெழும் என்றேன். அங்ஙனமே யிப்பொழுது உயிர்த்தெழுந்தேன்; அன்றியும், உன்னால் இரண்டு பிறப்பிலும் மிக அலைந்து திரிந்தேன். இதுவே யென்னுடைய சாபவிமோசனம். இனி, இந்தச் சரீரத்துடன் நானிருத்தலும் நின் பொருட்டேயாம். சந்த்ரலோகம் என்னுடையது. இந்தக் கடல் சூழ்ந்த பூவுலகும் என்னுடையதாகும். மேலும் மகா சுவேதைக்கும் புண்டரீகமுனிக்கும் கொடியதான அந்தச் சாபமும் நிவர்த்தியாயிற்று" என்றுசொல்லி அச்சமாசாரத்தையும் சந்த்ராபீடனாகிய அந்தச் சந்திரன் வெளியிட்டான். அங்ஙனம் அவன் காதம்பரிக்குச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே சந்திர லோகத்திலிருந்து வருவதால் சந்திர காந்திநிறைந்த குளிர்ந்த சரீரத்தையுடைய புண்டரீக முனிவன் தன் புனித நண்பன் கபிஞ்சலனுடைய கரத்தைப் பற்றிக்கொண்டு ஆகாயத்தினின்றும் சந்திரன் இறங்கி வருவதுபோல வருவதைக் கண்ட காதம்பரி, அப்போதவளுக் குண்டாகிய ஆனந்தத்தால் அந்தச் சந்தோஷ சமாசாரத்தை மஹாசுவேதைக்கு விரைந்துபோய் மொழிந்தாள். அக்கணமே புண்டரீகனும் இழிந்தான். அங்ஙனம் வந்த புண்டரீகனைச் சந்திராபீடன் கண்டு அழகிய அவனுடைய சந்தனம் பூசப்பெற்ற இரண்டு தோள்களையும் மார்பையும் இறுகத் தழுவிக்கொண்டு அவனைநோக்கி "புண்டரீகா! நீ என் ஒப்பற்ற மருமகன். இது நிற்க; அப் பிறப்பிலும் எனக்குத் தக்க உயிர்ப் பாங்கன்; இனியும் அது போலவே எனக்கு நண்பனாகவே இருக்கக் கடவாய்" என்றனன். அப்பொழுது அங்குள்ள பெண்கள் சந்திராபீடனைப் பணிந்தெழுந்து 'அரசே! நம் பத்திரலேகை எங்கே' எனக்கேட்க, அவர்களை நோக்கிச் சந்திராபீடன் நகைத்து 'சந்திரலோகத்தில் என் பக்கத்துள்ள ரோஹிணியே தனக்கு என் பேரிலுள்ள அன்பால் என்னைவிட்டுப் பிரியாமல் இங்கே வந்து பத்திரலேகையாய்ப் பிறந்தனள்' என்றான். பிறகு

ஹம்ஸன் சித்திரரதன் என்னுமிருவரும் வாழ்கின்ற நகரத்திற்குக் கேயூரகன் என்பவன் இந்தச் சந்தோஷ சமாசாரத்தைச் சொல்ல முன்னதாகச் சென்றான். அவன்பின் சென்ற மதலேகை அரசன் முதலியோரைக் கண்டு வணங்கி "தாராபீட மஹாராஜன் இத்தனை காலமும் மிருத்யுஞ் செயமந்திர செபம் செய்து வந்ததினால் உங்களுக்கு மங்களமே உண்டாயிற்று. இளவரசன் சந்திராபீடன் பிழைத்தான். அவன் பிழைத்தவுடன் புண்டரீகனை வைசம்பாயனனும் சந்திரமண்டலத்தினின்றும் இறங்கி வரக்கண்டேன்" என்று தெரிவித்தாள். அதைக்கேட்டு அங்குள்ள யாவரும் மிகுந்த சந்தோஷத்துடன் சரீரம் புளகமெழ அம்மதலேகையைக் கட்டித் தழுவிக்கொண்டு, பிறகு அவளை முன்னிட்டு எல்லாரும் சந்திராபீடனிருக்குமிடத்துக்குப் புறப்பட்டு வந்தனர்.

அங்கு அப்படியாக இங்கு அச்சோதக் கரையில் அரசன் தாராபீடன் திரைந்து மிகத் தளர்ச்சியுற்ற தன் கைகளால் மேகம்போல் கொடையாளனான சுகநாதனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு ஆனந்தத்துடனடிவர, அவனுடைய சேனையும் சமுத்திரம்போ லவனைச் சூழ்ந்து ஆரவாரத்துடன் வந்துகொண்டிருக்க அந்நிலையில் அங்கிருந்த ராஜகுமாரன் சந்திராபீடன் விரைந் தெழுந்துசென்று பிதாவின் இரண்டு பாதங்களிலும் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனன். அதைக் கண்ட தாராபீடன் அவனை நோக்கி, "குழந்தாய்! நீ எவ்வுலகுக்கும் ஸ்வர்க்கத்துக்கும் எவ் வுயிருக்கும் மேலான கடவுளாவாய். ஆதலால் இங்ஙனம் நீ என்னை வணங்கல் தகாது. நாதா! அப்படிக்கிருந்தும் நீ வணங்கலாமா. உன்னை நான் வந்தனஞ் செய்கிறேன்" என்று சொல்லிப் பணிந்தான். தாயான விலாசவதியும் தன் குமாரனை உச்சிமோந்து தன்னையவன் நமஸ்கரிக்க இடங்கொடாமல் அவனை இறுகத் தழுவிக்கொண்டாள்.

பிறகு, தாராபீடனும் தேவி விலாசவதியும், தம் புத்திரன் சந்திராபீடனை நோக்கி, "ஓ! புத்திரசிகாமணியே! அருமையான காதம்பரியின் தன்மையாலும் உனது தேக காந்தியாலும், நீ பிழைத்தெழுவாயென்ற அசரீரியின் வாக்கினாலும் நாங்கள் இதுகாறும் ஜீவித்திருந்தோம்; அதன்படியே, நீங்கள் உயிர் பெற்றெழக் கண்டோம். நாங்கள் செய்திருந்த பெருந் தவத்தால் இவையெல்லாம் பெற்றோம்." என்று சொல்லி ஆசீர்வதிக்கச் சந்திராபீடன் அதனை ஏற்றுக்கொண்டு, பின் கருணையுடைய மந்திரி சுகநாதனோடு அவனுடைய தேவியையும் சென்று பணிந்தனன். அப்படித் தான் நமஸ்கரிக்கிறதை அவர்கள் தடுக்க, அவர்களை நோக்கிச் சந்திராபீடன் தன்னருகில் நின்ற புண்டரீக முனிவனையவர்களுக்குக் காட்டி "உங்கள் அரும்புதல்வனான வைசம்பாயன னிவன். இனி உங்கட்கு மனக்கலக்கம் வேண்டாம்" என்றான். அப்பொழுது கபிஞ்சலமுனி மந்திரி சுகநாதனைப் பார்த்து, இந்திரியங்களை ஜயித்தவரும் இப்புண்டரீகனுக்குப் பிதாவுமான சுவேதகேது முனிவர் இவன் உங்களுக்குப்புத்திரனாயிருந்த வைசம்பாயனனென்றும், உங்களைப் பார்க்க விரும்பி இவ்விடத்துக்கு வந்தானென்றும், தாம் செய்த

தபோ பலத்தை இப்புதல் வனுக்கு இனிதளித்து, தாம் மோக்ஷத்தைப் பெறத் துணிந்ததாகவும், இதுவும் தவிர இவன் சந்திரனைப்போல் நீண்ட காலம் ஜீவித்திருப்பானென்றும், என்னிடம் சொல்லி யனுப்பினர். அவர் என்னிடம் சொன்னபடியே நானும் உங்களுக்குத் தெரிவித்தேன்'' என் றான். இவ் வரலாற்றைக்கேட்ட மந்திரி சுகநாதன் தனக்கு அப்போதுண் டான மனமகிழ்ச்சியால் அப்புண்டரீகனைத் தழுவிக்கொண்டு, அப்பால் கபிஞ்சலனை நோக்கி, "ஏ! கபிஞ்சல! வருக. சுவேதகேது எம் மனம்உருகும் படி இவ்வண்ணம் சொல்லியது எல்லா விஷயங்களையும் நாம் தெரிந்து இவனை நம்புதல்வனாக ஏற்றுக்கொண்டு பெரு மகிழ்ச்சியடையும் பொருட் டன்றோ?'' என்று சொல்லி வைசம்பாயனனுடைய பிறப்பின் வரலாற்றைப் பேசிக்கொண்டு தமக்குள் ஆனந்தங்கொண்டிருந்தனர். அவர்கள் அங்கன மிருக்க அங்கு மதிரையும் அவள் கணவனான சித்திரரதனும் மற்றுள்ளோ ரும் மறுநாள் சூரியோதயத்துக்கு வந்தனர். இவர்கள் வந்தவுடன் தங் களுக்கு அருமையாய்க் கிடைத்த மருகர்களைக் கண்டு மனமகிழ்ச்சிகொண்டு சுகனாதனும் தாராபீடனும் சித்ரரதனும் கௌரிநாயகனான ஹம்ஸனும் முதலிய ஏனையோரும் ஒன்று சேர்ந்திருந்து இனி நடக்கவேண்டிய விவாக விஷயமாய்க் கலந்து பேசிக்கொண்டார்கள்.

அப்போது சித்ரரதன் தாராபீடனை நோக்கி, "வாரும் மஹாராஜனே! என்னுடைய பட்டணமும் பெருமை பெற்றுவிட்டது. நாம் அங்கே போய், இக் கல்யாண மகோத்ஸவத்தைச் செய்யத் தடை என்ன'' வென்று கேட்க அதற்குத் தாராபீடன், சித்ரரதனை நோக்கி "இந்த இடத்தைக்காட்டிலும் நம் பட்டணத்துக்கு என்ன பெருமை இருக்கிறது இதுவே கைலயங்கிரியின் சாரல்; இதுவே மஹா சிரேஷ்டமான அச்சோ ததீரம்; இதுவே பரமேசுவரனுடைய வாஸஸ்தானம்; மேலும் இதுவே சாபவிமோசன ஸ்தலம்; இதுவே சகலவித மங்களகரமான இடம்; ஆகையால் விவாஹத்தை நடத்துவதற்கு இதிலும் மேலான இடம் வே றெதுவுமில்லை. இதுவே தகுந்தது; விவாகத்துக்கு வதூவரர்களுடைய ஜாதகப் பொருத்தங்கள் பாராமலே மனப்பொருத்த மொன்றையே கொண்டு விவாகம் நடத்துவது எங்களுக்குப் போதும். இதுவே எம் முன் னோர் நடத்திவந்த சிஷ்டாசாரம்; இது விஷயமாய்ப் பலவிதம் பேசவேண் டாம்.'' என்று சொன்னான்.

பின்பு சித்ரரதனும் ஹம்ஸனும் இவர்களுடைய மனைவிமார் கூரிய அம்புபோன்ற கண்களையுடைய மதிரை கௌரி என்பவர்களும் அவர் களைச் சேர்ந்த கந்தருவக் குழாமும் மற்று மங்குள்ள எல்லாரும், வான் களைச் சேர்ந்தவர்களான அரசன் தாராபீடனும் மந்திரி சுகனாதனும் அவர் களின் மனைவிமாரான விலாஸவதியும் மனோரமையும் மற்றுமுள்ள அரசர்களும் அவர்களுடைய சகல பரிவாரங்களுமான இருதிறத்தாரும் ஒன்று சேர்ந்து, கல்யாணத்தின் பொருட்டு ஆலோசித்து அக்கணமே நல் முகூர்த்தமென்று பெரியோர் சொன்னவுடனே சந்திராபீடனுக்குக்

காதம்பரியையும், வைசம்பாயனனுன புண்டரீகனுக்கு மஹாசுவேதையை யும் முறையே விவாகஞ் செய்வதாக நிச்சயித்து அவர்கள் நால்வருக்கும் மங்கள ஸ்நானம் செய்வித்து, அநேக ரத்நாபரணங்களால் அலங்கரித்து மணிப்பீடங்களி லிருக்கச்செய்து மங்கள கரமாக மாலையணிவித்துப் பாணிக் கிரஹணம் செய்வித்து ஔபாஸநாக்நியை வலம் வரச்செய்து, பெரியோர் பலரும் ஆசீர்வாதம் செய்ய வந்துவரர்களை மணவறையில் இருக்கச்செய் தார்கள்.

அதன்பின்னர் அரசன் தாராபீடனும் மந்திரி சுகனுசனும் தங்கள் பத்நிமாருடன்கூடச் சந்திராபீடனை நோக்கி "மதிவித்தகனே! ராஜ்யம் முழுமையும் உனக்கு முன்னமே பட்டாபிஷேகம் செய்துகொடுத்துவிட் டோம். அந்த ராஜ்யத்தை நீ சுகமாய்ப் பரிபாலித்து நீடூழி வாழ்க" என்று ஆசிகூறி அவனை மார்போடு தழுவிக்கொண்டு பின் சம்பந்திகளான ஹம் ஸன் சித்ரரதன் முதலிய கந்தர்வர்களை நோக்கி "உங்களை எங்கள் சம் பந்தியாகச் செய்தது எங்களுடைய ஜந்மாந்தர ஸுக்ருதமாகும்" என்று புகழ்ந்து முகமன கூறி அவர்களைக் களிப்பித்துவிட்டு தாங்கள் முன் னினைந்திருந்தபடியே தம் மனைவிமாருடன் வானப்ரஸ்தாச்சிரமிகளாய்த் தவத்திலிருந்தனர். அப்பொழுதே சித்ரரதன் முதலிய கந்தருவரும் விசேஷமான செல்வத்தைத் தங்கள் பெண்களுக்கு ஸ்ரீதனமாகக் கொடுத் துத் தம் பதிக்குச் சென்றனர்.

மங்கை காதம்பரி, மஹாசுவேதை இவர்கள் தாம் நெடுநாளாய்க் கொண்டிருந்த காதற்கடலைக் கரைகண்டு தஙகளுக்குண்டாயிருந்த துக்க சாகர நிவர்த்தியடைந்து பூர்வ புண்ணிய வசத்தால் சுகானுபவம்பெற்றனர்.

சந்திராபீட மகாராஜனும் சகல லோகத்தாராலும் துதிக்கத்தக்க தங் களுடைய வுச்சயினி நகரத்துக்குத் தன் மனைவி முதலிய சகல பரிவாரங் களுடனும் சென்று, அங்குச் சிங்காசனத்தில் வீறறிருந்து தரும வழியா லீட்டிய பொருளை யீசுவரார்ப்பணஞ்செய்து அநேக தேவாலயங்கள் கட்டுவித்தல் முதலிய பல தருமங்களைச்செய்து, கருணையாலும் வீரத்தா லும் த்ருலோகாதிபதியாகிய தேவேந்திரனைப்போலக் கிரீடாதிபதியாய்ச் சகலருக்கும் அவர் அவர் புதைத்துவைத்த சேமதனம்போல வுபகரித்துக் கொண்டு பெரிய கடலாற் சூழப்பட்ட புவி முழுதும் ஒற்றை வெண் கொற்றக்குடையின்கீழ் மந்திரி புண்டரீகனுடன் மிகுந்த கருணையுடைய னாய் அரசாண்டுகொண்டு வாழ்ந்திருந்தனன்.

காதம்பரி வசனம் முற்றிற்று.

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

TRANSLATION SERIES

| | | |
|---|---|---|
| 1. | Tolkappiyam Phonology & Morphology | 25.00 |
| 2. | Tamil Verse in Translation | 40.00 |
| 3. | Selected Poems of Bharathidasan 'Tamil to English' | 60.00 |
| 4. | " Tamil to Malayalam | 60.00 |
| 5. | " Tamil to Kannada | 60.00 |
| 6. | " Tamil to Telugu | 60.00 |
| 7. | Kuruntogai | |
| 8. | Kurinci-p-pattu And Muttollayiram | |
| 9. | Six Long Poems from Sangam Tamil | |
| *10. | Tamil Heroic Poems | |
| 11. | Nala Venba | |
| 12. | Temple Chimes (Poems of St. Thayumanavar) | |
| 13. | Dedication (Poems of St. Pattanathu Pillai) | |
| 14. | Thani -p-pasurattogai | |
| 15. | Kadambari - Moolamum Vasanamum | |
| 16. | Cilappatikaram. | |